# நவநீத கிருஷ்ண பாரதியார்

இயற்றிய

# உலகியல் விளக்கம்.

# POEMS

BY


**Navaneetha Krishna Bharathi**

with a commentary by

S. POOPALAPILLAI,

Member of the Board of Examiners of the Madura Tamil Sangam,

EDITED BY

Pandit S. Mylvaganam B. Sc., (Lond.)


அறமுதனாற் பொருளையும் தொகைவிரியாக விளக்குஞ்
சிறப்புவாய்ந்த இந்நூலுக்கு
நல்லுரைகண்டார்
மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்துவான்

**ச. பூபாலபிள்ளை**

அவர்.

இதனைப் பதிப்பித்தார்
பௌதிக சாஸ்திர விற்பன்னர்

**பண்டித மயில்வாகனனார்**

அவர்.


Printed at the Clough Printing Works, Jaffna.

1922.

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே"

—பாண்டியன் அறிவுடை நம்பி பாட்டு.

# சங்கப்புலவர் திருவடிவாழ்க.

---

இந்நூலை **ஆக்கியோன்** யாரோவெனின் தண்டமிழ்ச் சோழவளநாட்டுத் திருக்கண்ணபுரம் என்னும் பேரூரிற் பரம்பரைத் தமிழறிஞர் மரபில்வந்த வேதியன் சுப்பிரமணியபாரதியினிடத்து அருந்தவப் புதல்வன் நவநீதகிருஷ்ண பாரதி யென்பது.

இந்நூல் எதன் **வழித்தோ**வெனின் சங்கமிருந்து தமிழாராய்ந்த அறிவின் மிக்கோர் அருளிச்செய்த எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் பதினெண்கீழ்க் கணக்கும் என்னுமித்தொடக்கத்தனவாய நன்காராய்ந்த புலமையினான் அவற்றுட் பொன்போற் பொதிந்து கிடந்த பொருள் சிலவற்றை இந்நாண்மாந்தரியற் கையொடொட்டி யெடுத்தோதுதலின் இந்நூல் சங்கத் தமிழ்நூலின் வழித்தா மென்பது.

இந்நூல் எவ் **எல்லையுள்** நடக்குமோவெனின் தமிழ் மொழியா னியன் றமையாற் றமிழ்வழங்கு நிலத்தினும் பிறவாய பாகத்தாரும் வேண்டுவனவாய உண்மைப்பொருளை யெடுத்துரைத்தலின் பிறவாய நிலங்களினும் ஏற்றமுற்றி நடக்கு மென்பது.

இந்நூல் என் **பெயர்த்தோ**வெனின் "உலகுவாழு மியல்பி னுழவர்ப் புரக்கு, மழைவளம் புரிந்து வான்சிறப்புரைத்தல்" முதலாக "மூட னுலகையுழுதொழி லாளர் வாழ மருந்தது வளமுமியம்புதல்" ஈறாக உபாத்தியாயர் வேண்டப்பட்ட ஒழுக்கவிலக்கணங்கள் பலவற்றையும் விளக்கக் கூறுதலின் "உவாத்தியல் **விளக்கம்**" என்னும் பெயரைத்தாம் என்பது. (உவாத்தி-உபாத்தியாயர், இயல்-இலக்கணம்.)

இந்நூல் **எவ்வியாப்பினா** லாக்கப்பட்டதோவெனின் ஒருசிலபொருள் களைத் தொகுத்தும் வேறுசிலவற்றை விரித்தும் கூறுதலின் தொகைவிரியாப்பினால் யாக்கப்பட்டதென்பது.

இந்நூல் **நுதலியபொருள்** யாவையோவெனின் அறம்பொருள் இன்பமும் அவற்றின்வழித்தாகிய வீடுமென்பது.

இந்நூல் **கேட்போர்** யாரோவெனின் தமிழ்மொழிமேல் நிறைந்த ஆர்வ முடையாரனைவோருமென்பது.

இந்நூற் **பயன்** யாதோவெனின் மேனுதலியபொருளின்கட் கூறிய நால்வகைப் பொருளையும் பெறுவதென்பது.

பதிப்பாசிரியன்.

"யாஅ மிரப்பவை
பொருளும் பொன்னும் போகமு மல்ல நின்பா
லருளு மன்பு மறனு மூன்று
முருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே"

—கடுவனிளவெயினனார் பாட்

19. துகள்வழி யுறுத்தி யுளமயக் கிழைக்கும்
வெகுளிவாய்ப் படுத றகுதியின் றென்றல்.

20. செய்வன மறந்து சிறுதொழில் புரிவோர்க்
குய்வழி யிதுவென வுற்ற துரைத்தல்.

21. பணிவழி புரைதந்த தண்மை மேம்படுத்தல்.

22. ஐந்தன் புலத்தை யகற்றிய தூய
சிந்தைய ராதல் செவ்வியோர் தொழிலெனல்.

23. பொறிவழிப் புகுத லறிவிற் கடாதெனல்.

24. அருட்டிறங் கூறி யகத்தற வுறுத்தல்.

25. அல்லன புரிந்து நல்லன மறப்போர்
சில்யாண்டு கழியாச் சிறுவரே யென்றல்.

26. வே[illegible] டகன்ற மெய்யுணர் வெய்தி
னூறுபா டின்றென வுளத்திற் குரைத்தல்.

27. அறிவனில னென்போர்க் குவகையில தென்றல்.

28. இன்பமுந் துன்பமு மெமக்கின் றென்றல்.

29. அன்பொடு டமையான் யாரையும் புரத்தலின்
வன்புசா தித்தன் மடமே யென்றல்.

30. உலகிய லறிதற் குறுமதி யிலம்யா
மறுவிலா யறிதல் யாங்ஙன மென்றல்.

31. ஆண்மகன் சிறந்தவ னவனிக் கென்றல்.

32. கலைநலங் காட்டி நிலையிது வென்றல்

33. எழுதா மறையின வாதலின் மறைகள்
வழுவா மெனநு மன்னின வென்றல்.

34. தமிழ்தழீஇ வாத தாழ்மதி யினர்பாற்
பொருள்வரு மென்னைப் போதறவு றென்றல்.

35. ஆலயந் தொழுதற்கு மறிவுவேண் டுவதாற்
சால்பமை பொற்பிற் றமிழ்க்கலைக் கழகமா
வாலிதி னமைத்தன் மாண்பா மென்றல்

36. நானுவன் மரபு நவமினிது வென்றல்.

37. பொருளோர் தூற்றலி னின்றமி ழாள
ரவர்பாற் செல்லா தமைதனன் றென்றல்.

38. மேனிலை புணர்ந்து விழுமிய நடை பயின்
றானமிலா மரபின துண்மைக் கவியெனல்.

39. தன்மொழி கல்லாத் தகவிலி வருந்தி
யெமமொழி சிறப்பினு மிகழ்வே யென்றல்.

40. வண்டமிழ் வாணர்ப் பிழைத்தோ ரிடருறி
னண்டரைத் தூற்ற லமையா தென்றல்.

41. தமிழுணத் தராதெனப் பிறமொழி பயிலுந
ரமிழ்தனை சோற்றை யயிலறவு றென்றல்.

42. கல்லா மாந்த ரல்லற் கிரங்கல்.

43. பல்வே றுலவிமொழிப் பான்மைய தீமெனல்.

44. அருந்தமிழ்ப் புலவ ராற்ற லுரைத்தல்.

45. திருந்துகலை பயில்வோர் சித்தமயல் கொண்டு
வருந்திக் கல்லா மாயுக் கிரங்கல்.

46. பேதைதுயர் கலைநல் பிழையா மென்றல்.

47. ஓதிய முறையி னுறுதுணை புரிந்து
தீதினை யகற்றல் செய்விதா மென்றல்.

48. பொருளெனு மொய்யா விளக்கினை யுடையோ
ரிருள்கடிந் தெண்ணியாங் கெய்துவ ரென்றல்.

49. விழைபொருள் பெறினதை வெறுப்பது மியல்பெனல்.

50. முந்தைநலை யறியா வந்தணன் மகன்போற்
செருநரிடை வாணர்தந் திறகெடுதி கிலரெனல்.

51. உயர்வு மிழிவு முண்மையி லின்றெனல்.

52. அருமைக் கேள்விய ராத லேனையர்க்
குரிமைய தெனினு மரியதோன் முதலின்
மூத்தோர்ப் பிழைபா மாயி னவர்பாற்
பற்றங் காட்டல் சிறப்பில தென்றல்.

53. இழிவுடல் கழிபொரு ளிவைகொண் டேமாப்
புறுபவ ரழியா வுடலமும் பொருளும்
பெறுகுவ ரென்னிலெப் பெற்றிய ரோவெனல்.

54. மக்க டாமே பல்வகைக் குணத்தர்
மிக்கோ மென்ன வியத்தலு மியல்பெனல்.

55. பேதைப் புரோகிதர் பெருமையுற் றருப்ப
வோதுதமிழ் வல்லோர் நோதற் கிரங்கல்.

56. தண்டமிழ்ப் புலவரைத் தாங்கற வென்றல்.

57. தொல்லோ ருணர்த்திய நன்னெறி தவாஅ
தயலவர் கலையையு மாராய்ந் தறிந்து
பெருமைகொடு வாழுதல் பெட்பா மென்றல்.

58. நாண்டகு மில்லக் கிழத்தி துயர்க் கிரங்கி
மீண்டு வந்தன னின்னதீர்ப் பாயெனப்
பண்புறு துணைபாற் பரிசில் கடாவுதல்.

59. உயிரினு மானஞ் சிறந்ததென் றுன்னிச்
செருவிற் கேருந் திறமிது வென்றல்.

60. உழுதொழில் புரிவோர் விழுமிய ரென்றல்.

61. கயவர்தம் மியல்பு காண்மி னென்றல்.

62. இதஞ்செயுந் தன்மைய ரெனினு மவர்க்குத்
தேடிவினை செய்த றீயோர்க் கியல்பெனல்.

63. ஆரணங் கேகொ லணியிழை யேகொலென்
றோர்கண் டையுற் றின்புறத் தெளிதல்.

64. பலர்செறி குழுவினு மொருமகள் பலவுடற்
கொருதனி யுயிர்போ லுலவிய துரைத்தல்.

65. இன்புறச் செய்தவ ளியலிடங் கூறல்.

66. பூத்தரு புணர்ச்சியா லறத்தொடு நிற்கு
மாற்றம துரைப்புழி மலைவளங் கூறல்.

67. ஆய்தொடி கணவனொ டருஞ்சுரம் புகுந்த
வாயிலிற் பாலை வனத்தியல் புரைத்தல்.

68. ஆயமகளி ராடிய குரவையு
மாயோன் மேய முல்லையு மதித்தல்.
69. மாலைவந் திறுக்க மகிழ்நனை நினைந்த
சீலமு நெய்தற் றிறமுமாய்ந் துரைத்தல்.
70. ஊட லுவகையு முழுதொழி லாளர்
வாழு மருதத்து வளமு மியம்புதல்.
எனவாங்கு,
பல்பொருள் தரூஉந் தொல்லிசைப் பனுவல்
வேறுவே றியல்பின் மேயின வெனினு
மாறைந் தெண்ணான் கெட்டென நிலைஇ
யறமும் பொருளு மின்பமுந் தருவ
இவற்றுள்,
இருபான் முப்பதொ டைந்நிலை சேர்ந்த
பதினொரு பனுவலுந் துறைவற முணர்ந்தி
வீட்டிற் கேதுக் காட்டிவ வாகும்
இவ்வழி,
நாற்பாற் பொருடரூஉ நூற்பாத் தந்த
குளங்கவர் வுறுத்தின வுரவோர் வாழுங்
கண்ண புரத்துக் கவுணியர் மரபி
னன்மறை முற்றிய நாவி னான்முறை
வழுவின் றுணர்ந்த மாண்பி னிசைகெழூஉம்
வெண்ணெய்க் கண்ணனென் றொருபெயர் நிறுவிய
புண்ணிய னிவனூற் பொருள்புலம் பிணித்த
காதலி னுரிமையொ டணிபெறத் தொகுத்து
மாயிரு ஞாலத்து வாழ்கவிந் நூலென
வாய்பொறா னரிச்சிலம் பாற்றுஞ் சேவடி
யாமளை சியாமக்கண் மாலைற் கிளைய
நங்கையைத் துதித்துச் செங்கதிர் வலம்வரூஉ
முலகுக் களிப்பனிந் நூலைப்
புலவர்த முளத்து நிலவுக வெனவே.



உ

சிவமயம்.

மட்டுநகர் வாசரும் மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகரும்
"விநாயக மான்மியம்", "மகாவனி புராணம்", "தமிழ் வரலாறு",
முதலாகிய பலப்பல நூலாசிரியரும் இந்நூல் உரையாசிரியருமாகிய

ஸ்ரீமத். வித்துவான் ச. பூபாலபிள்ளை

கூறிய

# உரைப் பாயிரம்.

திருவள னிறையிய விருநில மடந்தை
யுருவள ருதரத் துற்பவித் தீண்டி
விறெழுப் பொதுவிய வாறெ றிரட்டி
நாலு யிரத்துப் பேதமார் யோனிச
சீவரா சிகளுட் சிறந்துதலை நிற்பது
மேவரு மக்கட் பிறப்பென வின்னுவ
ரப்பிறப் பரிய வருங்கலை யடைதல்
செப்பரு மறிவின் சேர்க்கையா மென்ப
கல்விநல லறிவுங் கடவுட் பத்தியும
பலவுயி ரிரக்கமும் படிறிலா வொழுக்கமும்
பூணார் நிலைமை புல்லிய விலங்கினுங
கீழா மென்னக் கிளத்துவர் மேலோர்
கூறுடல் வறிதே குறைதகலாக தினிய
பேறுக ளல்கப் பெருந்துணை யாவ
தவ்விய லறிவை யாயுங் காலைப்
[1]பவ்விய மின்றிப் பாழ்படக் கிடந்து
செய்கையிற் சிறந்து திருந்திய பின்னர்
மெய்யியன் மருவி விளைநலம் போல்வது
பல்வகை மாசிற் படிந்தவப் [2]புலந்தனைக்
கல்வியென் றமைந்த கலப்பையைக் கொண்டுழு
சொல்லருங் கேள்விப் பரம்பையுந் தூவி
நல்வகைப் பொருளா நாற்றுக ணட்டு
விழைமனக் குரங்குழுந் தனுவன விலங்குக
ளுழையா வடக்க வேலியுங் கட்டிப்
பிறழா வாய்மைப் பெருவரம் பியற்றிக்
கறையாய் வளருங் களைபெலா மகற்றி
யைம்பொறி யா[3]மங் கணைவழி யனுபவப்
பைம்புனல் பாய்ச்சப் பயன்பல தருமா
லினனவை யாவு மியற்றுதற் கெளிதாப்
பின்னமி லொருவழி பெரிதும் நாடிப்
பற்பல விடங்களிற் பலவமை யங்களி
னற்றவச் சான்றோர் நவின்றநன் னூல்களிற்
கண்டுகேட் டுணர்ந்த கவின்பொருள் பலவுங்
கொண்டெழு பான்கவி கொழுஞ்சுவை பழுநிய

---

1 பவ்வியம்—பயன். 2 புலம்—அறிவு, வயல். 3 அங்கணம்—மதகு.

# கடவுள் வாழ்த்து.

***என்றது, இந்நூல் என்றும் நின்று நிலவவேண்டி வாழ்த்துவான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், இறைவியே இம்மை, மறுமை, வீடு என்னும் இவற்றுள் வேண்டியவற்றை வேண்டியவாறே நின்று அருள்பவள் என ஆன்றோர் கூறுவாராதலின் யாமும் அவ்விறைவியை வணங்குவோமென்று வாழ்த்துக் கூறுகிறபது.***

ஆயிரங் கதிரவ ரொருங்குதித் தனையெனப்
பாயிருள் சீக்கும் படிவமப் படிவத்
திலங்கொளி நிறைமதி யேய்ப்பத் துலங்கு
நுதற்கட் கூட்டிய நுண்சுடர்ச் சுட்டியொடு
கருமுகிற் கூந்த லிடைமிளிர் திருமுகம்
திருமுகத் தொளிர்வது சிறுபுன் முறுவல்
அதுவே,
அரியே யிவர்ந்து வாட்படை யேந்தி
யொருமைப் பேரா னூனமழித் திடுநாட்
சுரகுல முதல்வர்க் குவகையு மாவா
வெவுண மாக்கட் கச்சமுங் காட்டிய
நிலைய தாகலி னீள்கடல் வளைப்புவி
லருள்பெறு வாருக் கருளுங் காட்டி
மருள்பெறு பவர்க்கு மருசியுங் காட்டும்
அவ்வழி,
திருவிழை மாந்தர் திருமகட் கண்டனர்
கல்விழை மாந்தர் கலைமகட் கண்டன
ரறநெறிச் செல்வோ ரறத்துமுதல் கண்டனர்
தவநெறிச் செல்வோர் தவத்துமுதல் கண்டனர்
சுற்றமுந் தொடர்பு நீக்கிய கொள்கைப்
பற்றறு மாண்பினர் பரவெளி கண்டனர்
யாவெனக் கண்டனம் யாமு மாதலின்
வேத முதல்வியை மாதவப் பயனை
மலைக்கிறை பயந்த மழலையங் குழவியை
நீல மேனி நெடியோன் றங்கையை
யால முண்டவற் கரும்பெருந் துணைவியை
யோமெனு முருவனை யுவந்தரு ளன்னையைச்
சேயைப் பயந்த செல்வியை யாய்தமிழ்
வளம்பொலி தருகென வழுத்தி
யுளங்கொண் டேத்துக முண்மைதேர் பொருட்டே.

இ-ள்.—ஆயிரம் கதிரவர் ஒருங்கு உதித்தனர் என=பல சூரியர்கள் ஒன்றாக உதயம் செய்தார் என்று கூறும்வண்ணம்;

ஆயிரம் என்பது மங்கலச் சொல்; என்னை? பரிபாட்டுவாழ்த்தினும் அது முதற்கண் எடுத்தோதப் பெற்றமையி னென்க. ஆயிரம் என்பது பல என்பதைக்குறிக்கும்; என்னை? வேதத்துள்ளும் ஆயிரந்தலை, ஆயிரங்கால், ஆயிரங்கை என்று கூறியிருத்தலின். இனிக்கதிர் என்பது அடையடுத்துவந்த மங்கலமொழியுமாம். "சீர்மணி பரிதி", "இதிற்பரியாயப்பெரும்" என்பன நிகண்டு. இவ்வாறே "மூவாமுதலாவுலகம்" எனச் சிந்தாமணியுள்ளும் உலகு என்னும் மங்கலமொழி அடையடுத்து வந்தமையறிக. ஒளியின் பெருமையைக் கதிரவன் மூலமாகவே அமைந்து காட்டவேண்டும் என்பதனையும், ஒருகதிரவனே யன்றிப் பலகதிரவரும் ஒருங்கு கூடினும் இறைவியின் திருமேனிக் கொப்பாகார் என்பதனையும் உணர்த்த வேண்டி "ஆயிரங் கதிரவர்" என்றும், ஆயிரங் கதிரவர் தனித்தனியாக உதயமாகலாமே யன்றி ஒருங்குதிக்க முடியாதாகலின் "ஒருங்குதித்தனரென" என்றும் கூறினார். ஒருங்கு—ஒருசமயத்துமாம்.

பாய் இருள் சீக்கும் படிவம்=பரந்து செல்லும் இருளைப்போக்கின்ற தெய்வத் திருமேனி;

"மையறு படிவத்து வானவர்" என்பது மணிமேகலை. வணங்கல் வேண்டும் என்னும் உணர்வை முதற்கண் அளிக்கும் ஆற்றலுடையது படிவமாதலின் அஃதடையொடு முதற்கட் கூறப்பட்டது. இனிமுதற்கட் டிருவடியை வைக்கவெனில் அதன் பெருமை அறியாமையாற் றியானஞ் செய்வாருக்கு விருப்பஞ் செல்லாதென்க. நூலுக்குப் பாயிரம்போன்ற எம திறைவியின் ஞானமயமாகிய படிவத்தைக் கண்டார்க்கு அன்னவள் திருவருளினாலே ஞான முண்டாகி உள்ளிருளைச் சீக்கும் வல்லமை உண்டாகும்.

அப்படிவத்து இலங்கு ஒளி நிறை மதி ஒய்ப்ப=ஒளிமயமாகிய அத் தெய்வ வடிவத்திலே விளங்குகின்ற ஒளிநிறைந்த சந்திரனை ஒப்ப;

ஒளிநிறைமதி—பூரணசந்திரன்; "ஆயிரங்கதிரவ ரொருங்குதித்தனரென" விளங்கும் படிவத்திலே ஒரு மதியம் அதனினும் ஓர் பெருமை விளங்குகின்றதுவே என்பதனை வலியுறுத்த "நிறைமதி" என்னுமிதற்கு "இலங்கொளி" என்னுமடை புணர்த்தப்பட்டது. சூரியன் சந்திரனிடத்துக் கலையாகி ஒளிர்வது போலாது இம மதிக்கு இயல்பாகவே ஓரொளியுண்டென்பார் "இலங்கொளிநிறைமதி" என்றாருமாம்.

[துலங்கு நுதற்கட்டிட்டிய நுண்சுடர்ச் சுட்டியொடு] திட்டிய நுதற்கண் துலங்கும் நுண்சுடர் சுட்டியொடு=திலகம் தீட்டிய நெற்றியிலே விளங்கும் நுண்ணிய சுடரையுடைய சுட்டியுடனே;

தீட்டிய என்றமையாற் றிலகமும் கொள்ளப்பட்டது. நெற்றியிலே அச்சுட்டி கிடந்தமையால் விளக்க மெய்திற்று என்பது தோன்றத் "துலங்கும்" என்றார். "நுண்" என்பது சுட்டியின் வேலையருமை தோன்றநின்றது. நுண் சுட்டி, சுடர்ச்சுட்டி என்க.

கரும் முகில் கூந்தல் இடை மிளிர் திரு முகம்=கரிய மேகம்போன்ற கூந்தலுக்கு இடையிலே விளங்குகின்ற அழகிய முகம்,

சுட்டியொடுகூடிய நுதலையுடையமுகம, கரியமுகிலுக்கிடையிலே மிளிரும் முகம் என்க.

திருமுகத்து ஒளிர்வது சிறு புன்முறுவல் = அப்படிவத்திலே மேற்கூறியாங்கு நிலவப் பெற்ற அழகிய முகத்தின்கண்ணே விளங்குவது சிறிய புன்சிரிப்பு;

"புன்முறுவல்" என்மொழியாது "சிறுபுன்முறுவல்" என்றார், பெண்டன்மையி னுயர்ச்சி தோன்றற் பொருட் டென்க.

இனி அப்படிவத்தின் ஆற்றல் கூறப்படும்.

அரி ஏறு இவர்ந்து=அப்படிவந்தாள் ஆண்சிங்கத்தின் மீதேறி;

வாள் படை ஏந்தி=வாளாகிய படையைக் கைக்கொண்டு;

ஊர்தியில் ஏறுவதற்குமுன் வாட்படையை ஏந்துதல் இயற்கையாயினும் மகிடாசுரன் உரனையழித்தற்கு உபயோகப்படுவது அதுவாகலின் அது பிற்கூறப்பட்டது.

எருமை பேரோன் உரன் அழித்திடு நாள்=மகிடாசுரனது (உலகத்திற்குத் தீமை விளைவிக்கும்) வலிமையைக் கெடுத்த அந்த நாளிலே;

எருமை என்பது மகிடத்தை. கொன்றாள் என்னாது "உரனழித்திடுநாள்" என்றார்; வாழ்த்துப்பா வாகலினென்க.

அதுவே=அப்புன்முறுவல் தானே;

சுரகுலம் முதல்வர்க்கு உவகையும்=தேவகுலாதிபர்களுக்கு மகிழ்ச்சியையும்;

பாவா அவுண மாக்கட்கு அச்சமும்=தன்னைப்பணிந்து ஏத்தாத அசுரகுலத்தாருக்கு அச்சத்தினையும்;

பாவுதலாவது சுருதி, மிருதிகளிலே விதித்தவற்றைச் செய்து விலக்கியவற்றை ஒழிதல். அவுணர்தம் இழிபுதோன்ற "மாக்கள்" என்றார்.

காட்டிய நிலையது ஆகலின்=காட்டிய நிலைமையுடையதுவாகலின்;

நீள் கடல் வரைப்பினில்=நீண்ட கடல்சூழ்ந்த உலகத்தின்கண்ணே;

அருள் பெறுவாருக்கு அருளும் காட்டும்=அருளைப்பெறுகின்ற நற்குண நற்செய்கையுடைய ஆன்றோர்க்குத் திருவருளினையும் காட்டி ஆட்கொள்ளும்;

இதற்குச் "சுரகுல முதல்வர்க் குவகைய" மென்றது காரணமாயிற்று. இதனான் அநுக்கிரகச் சிறப்புக் கூறப்பட்டது.

மருள் பெறுபவர்க்கு மருட்சியும் காட்டும்=பகுத்தறிவில்லாது பாவங்களையே தமக்கு இதஞ்செய்வனவாகப் பேணிச்செய்துவருகின்றவர்களுக்கு மயக்கத்தையும் காட்டும்;

இதற்குப் "பாவா அவுண மாக்கட் கச்சமும்" என்றது காரணமாயிற்று. இதனா னிக்கிரகச் சிறப்புக் கூறப்பட்டது. நிக்கிரகாநுக்கிரகத்தாலே ஜீவான்மாக்களை நல்வழிப்படுத்தி ஆள்வது இறைவியினாற்றல் என்பது ஈண்டுக் குறிக்கப்பட்டதென்க. பெறுபவர் வினைத்தொகையுமாம்.

அவ்வழி=அப்படியத்தை அம்முறையாகவே;

இதுமுதலாக இறைவியின் அநுக்கிரக வழி கூறப்படும்.

திரு விழை மாந்தர் திருமகள் கண்டனர்=செல்வத்தை விரும்புகின்ற மக்களெல்லாரும் (அச்செல்வத்தை அருள்புரிதற்கு ஆதாரசத்தியாகிய) திருமகளின் தோற்றமாகக் கண்டனர்;

இதனாற் செல்வப் பேற்றி னளிப்புக் கூறப்பட்டது.

கலை விழை மாந்தர் கலைமகள் கண்டனர்=நூல்களை விரும்புகின்ற மக்களெல்லாரும் (அந்நூலை அருள்புரிதற்கு ஆதார சத்தியாகிய) நாமகளின் தோற்றமாகக் கண்டனர்;

செல்வமானது கல்வியில்லாவிடிற் சீர்பெறாதாதலின் அதனொடு சார்த்திக் கூறப்பட்டது. "அன்றியுங்கல்வியோடழகாக்கலும்" என்பது சிந்தாமணி.

அறம் நெறி செல்வோர் அறத்து முதல் கண்டனர்=தருமவழியிலே செல்லுகின்ற மக்களெல்லாரும் (அத்தருமத்தை அருள் புரிதற்கு ஆதார சத்தியாகிய) அம்பாலிகையின் தோற்றமாகக் கண்டனர்;

தவம் நெறி செல்வோர் தவத்துமுதல் கண்டனர்=தவவழியை அநுஸரித்து அவ்வழியிலே சேரப் பெற்ற மக்களெல்லாரும் (அத்தவத்தை அருள்புரிதற்கு ஆதார சத்தியாகிய) ஞானசத்தியின் தோற்றமாகக் கண்டனர்;

பற்று அறு மாண்பினர் பரம் வெளி கண்டனர்=இருவகைப் பற்றினையும் அறுத்த நற்குண நற்செய்கைகளிலே மாட்சிமைப்பட்ட பெரியோர் சிதாகாசமாகக் கண்டனர்;

இவற்றான் இம்மை, மறுமை, வீடு என்னும் இவற்றைப்பெறுதற்கு இறைவியின்கருணையே ஆதார மாதல் கூறப்பட்டது.

[யாயெனக் கண்டனம் யாமும்] யாமும் யாய் என கண்டனம்=யாமும் தாயென்று (அப்படிவத்தைக்) கண்டேம்;

குற்றம் பொறுத்தலும் ஊணும் மருந்தும் ஊட்டுதலும் அன்புசெய்தலும் அன்ன பிறவற்றைப் புரிதலும் அன்னையின் குணமாம். இவற்றை விரித்துரைத்துக் கொள்க.

ஆதலின்=அதுகாரணத்தானே;

வேதம் முதல்வியை=வேதத்திற்கு மூலமாய் இருப்பவளை;

இதுமுதலாக அப் படிவத்திற் குள்ள பெயர்களைக் கூறுகின்றார்.

மாதவம் பயனை=பெரிய தவத்தினைச் செய்கின்றவரது பயனாக இருப்பாளை;

இறைவியின் இணையடித் துணையை அடைவதுவே தவத்தின் பயனாதலின் "மாதவப் பயனை" என்றார்.

மலைக்கு இறை பயந்த (அம்) மழலை அம் குழவியை=மலைகளெல்லாவற்றிற்குந் தலைவனாகிய பருவதராஜன் பெற்றெடுத்த அழகிய மழலைச் சொல்லையுடைய அழகிய குழந்தையாகிய பார்வதியை;

நீலம் மேனி நெடியோன் தங்கையை=நீல நிறம் பொருந்திய வடிவினையுடைய நெடியோனாகிய திருமாலுக்குத் தங்கையாக அவதரித்த நாராயணியை;

ஆலம் உண்டவற்கு அரும் பெரும் துணைவியை=விஷத்தையுண்டருளிய சிவபிரானுக்கு அரியபெரிய துணைவியாகிய சங்கரியை;

ஓம் எனும் உருவனை உவந்து அருள் அன்னையை=பிரணவ வடிவத்தை உடைய விநாயகப் பெருமானை விரும்பிப் பெற்றருளிய தாயை;

பிள்ளைப்பேற்றின் அருமையும் பெருமையுந்தோன்ற "உவந்தருளன்னையை" என்றார்.

சேயை பயந்த செல்வியை=முருகவேளைப் பெற்றருளிய செல்வத்தினையுடையாளை;

சூர்முதலை வேரறுத்துத் தேவர்க்கெல்லாம் பெருஞ்செல்வ மளித்தலின் "சேயைப் பயந்த செல்வியை" என்றார்.

உண்மை தேர் பொருட்டு ஆய் தமிழ் வளம பொலிதருக என வழுத்தி=உண்மைப் பொருளை ஈதெனத் தெரிந்து கோடற் பொருட்டு (அத் தெளிதலுக்குக் காரணமாகிய அறிவைச் செம்மைப் படுத்த இறைவன் முதலியோர் சங்கத்திலே வீற்றிருந்து) ஆராய்ந்த தமிழின் வளப்பம் தழைப்பதாக என்று அவளைத் தியானஞ் செய்து;

உளம் கொண்டு ஏத்துகம்=அத்தியானப் பழக்கத்தாலே அவளது திருவடிகளை உள்ளத்திலே கொண்டு அக்கொண்டபடியே நில்லாது புறத்தும் வணங்குவேம்.

---

* பதிகமும் வாழ்த்துப்பாட்டும் இந்நூற் பதிப்பாசிரியராகிய மயில்வாகனனாரால் பாடப்பெற்றன.

---

சிறுபுன் முதலவுஞ் செறீஇ மகிழ்ந்து
மலர்ந்து கனிவாய் வளர்ந்து தழைப்ப
மாவும் பறவையு மன்னும் பிறவும்
வேட்டன பெற்று விழைஇ மகிழ்தரக்
காட்டுச் சிறந்து கனிந்துருகு நெஞ்சிற்
பாட்டுச் சுரந்து பல்செவி பயன்பெற
வெண்டுய்ப் பொதிதன் பிணிவிட் டுதிர்தலி
ஞெண்முகில் கரும்புகை யுறீஇவிண் பறந்து
செவிபுடைத் தென்னத் தெறுகுர லெழீஇ
விழிபறித் தென்ன விரைந்தொளி மின்னி
பொண்வீழ் வெள்ளி பற்பல வூன்றித்
திடலுங் கடலுந் தேர்வரி தாகக்
கொழும்புன லுலகங் குளிரப்
பொழிந்து வண்மையொடு புரந்தமை நன்றே

---

(இ-ள்.) தட்பம் நிறைஇ=குளிர்மையாகிய தன்மை நிறைந்து;

வெப்பு அழித்து அகற்ற=சூட்டினை (இல்லாதவண்ணம்) கெடுத்துத் தூரத்தவும்;

வெப்பத்தின் கொடுமைக் காற்றாது வருந்திய வருத்தங் காரணமாக அதனை வெறுத்தல் இயற்கை என்பது தோன்ற வெப்பகற்ற வென்றொழியாது "வெப்பழித்தகற்ற" என்றார். தண்மை நனிமலிந்து பரவுதல் வேண்டுமென்பது தோன்ற "நிறைஇ" என்றெடுத்தது.

கதிர் மெய் குளிர்ந்து கவின் ஆர்ந்து இலகுற=ஞாயிற்றின் உடலம் (இயற்கையாக அமைந்துள்ள வெப்பமானது நீங்கப் பெற்றமையானே) குளிர்ச்சி யடைந்து (நோக்குவார் கண்களுக்கு) அழகு நிறைந்து விளங்கவும்;

பூமியைச் சூழ்ந்த மழை மண்டலம் சிற்றளவுத்தூரத்திலும் சூரியமண்டலம் அதனிற் பல்லாயிர மடங்கு தூரத்திற்கப்பாலும் இருத்தலின் முன்னைய தற் பிறக்குங் குளிர் பின்னையதிற் செல்வ தெங்ஙன மெனில், கட்பொறி நிலைதிரிந்து குளிர் பெறுங்கால் காண்பன யாவுங் குளிர்ந்தனவாகத் தோன்றுமாதலின் அவ்வியல்புபற்றியும் குளிரின் மிகுதியினை நன்கு விளக்குமாறும் இன்மையை உண்மையாகக் காட்டல் ஒருவகை அணியாகலானும் இவ்வாறு கூறினார் எனக.

செய்ப்பு மனை நீட=(கொழுப்புப்போனற) நீர்நசிவு மனை முழுவதும் பெருகவும்;

நீள் நிலம் மருங்கு அடி வைக்க மனம் உட்க=நீண்ட நிலப்பரப்புகளில் வெற்றடி வைத்தற்கு மனஞ் சகியாது அஞ்சவும்;

[வகையுற வெங்கதிர்க் காய்ந்து வளங்கொள் பொருள் கடுக வுள் விரைய] வெம் கதிர் வகை உற காய்ந்து வளம் கொள் பொருள் உள் கடுக விரைய=வெம்மையாகிய சூரியனது வெய்யிலிலே (விதைத்தற்கும் உண்ணுதற்கும் இவைபோன்ற பிறவற்றிற்கும் இவையல்லாத வனையவற்றிற்கும் இன்றியமையாத) விதம் பொருத்தமுறக்காய்ந்து வளப்பத்தைக்கொண்ட (நென் முதலாய) பொருள்களெல்லாம் (அவற்றைச்சேமஞ் செய்யும்) இடங்களை நோக்கி மிகவிரைந்து செல்லவும்;

இவைபோன்ற பிறவாவன, எள்ளுணைய் முதலியன. வேவன, சுண்ணம் பசுமட் பண்டம் முதலியன.

உழவர் முதலோர் உளம் களி கூர=உழுதொழிலைச் செய்வோரை முதலாகவுடைய எல்லார்தம் மனத்தினும் களிப்பு மிகுதிப்படவும்;

முதலோ ரென்றமையானே ஆற்றிடை நாவாய் விடுவோரும், வெம்மையுற்றோரும், பிறரும் உட்படுவர்.

உமணர் முதலோர் உளம் நனி வாட=உப்புவிற்போரை முதலாகவுடைய எல்லார்தம் மனமும் மிகுதியாகச் சோரவும்;

முதலோர் என்றமையானே கூத்தர், மணமயர்வோர் என்பவரும் உட்படுவர்.

எளியோர் ஒழுக்குற்று=ஏழ்மையாளர்கள் (தங்கண் மனைக்கண் ஒழுகும்) ஒழுக்கிலே அகப்பட்டு;

நனைசுவர்க் கூரை மனையுடை வறியார் என்பது தோன்ற "எளியோ ரொழுக்குற்று" என்றார்.

இனைந்து=ஆற்றாமல் வருந்தி;

மெய் நடுங்கி=(நளிர் மிகுதலானே) உடலம் பதறி;

சிறு கூழ் பெறாது சிந்தை நொந்து அரற்ற=(கால அமைதியும், தேசவமைதியும், பிறவும் பொருந்தாமையானே) சிற்றளவினவாகிய உணவும் பெறற்கியலாதவராய் மனநொந்து புலம்பா நிற்கவும்;

சிறுமை என்பது ஈண்டு அளவின்மேலும் தன்மையின்மேலும் நிற்றற்குரியது.

பொழுது அறியாது=சென்ற பொழுதின் கணக்கை அறியாது;

போக்கிய மடவோர்=(நித்திரையினும், உசாவுதல், கதைபேசல் முதலிய பிறவற்றினும் மிகுதியாகப்) போகவிடுத்த மடப்பம் பொருந்திய பெண்கள்,

பொழுதினை அவமே போக்கினமை தோன்ற "மடவோர்" என்றார். நித்திரை முதலியவற்றிலே மிகுதியாகப் போக்கினமையாற் பொழுது கழிந்ததை அறியாராயினர் என்க.

கொழுநர் கண்டு=(பசிகடுத்தலின் நீரிடை விரைந்து தோய்ந்து ஆடையுடுத்துத் தெய்வம் பராய் உணவருந்தும் பொருட்டுத் தங்களை நோக்கி வந்த) நாயகரைக் கண்டு;

தம் கொள்கை அச்சுறுத்த=(நாழிகை இன்னும் ஆகவில்லையென்று அட்டிற்றொழிற்குச் செல்லாதிருந்த) தங்கள் கோட்பாடே தங்கட்கு அச்சத்தைச் செய்ய;

முழுகி வருக, உடுத்து வருக, தெய்வம் பராய வருக என்று போக்குச் சொல்லி உணவமைத்தற்கும் இடமின்மையின் அஞ்சினமையானே ஆணடிச்சைஎச்சங்கள் பலவும் விரிக்கப்பட்டன.

ஈரம் மலி விறகு இடை எரி பற்றி அகைய=(இயற்கையானும் செயற்கையானும் பொருந்திய) தண்மை நிறைந்த விறகினிடமாய் நெருப்புப்பற்றி எரியும்படி;

இயற்கையாற் றண்மையுற்றது புலராத பசிய விறகு. செயற்கையாற் றண்மையுற்றது புலர்ந்தபின் நனைந்த விறகு.

ஆர ஊதி கண் புகை அடைஇ=நிரம்ப ஊதுவதினானே கண்ணிற் புகை செறிந்து;

நிரம்பாத செல்வமுடையாராதலிற் றாமே அட்டிற்றொழிற்குச் சென்றாராதலின் அவர்க்கு இன்னோரன்னவை நிகழ்தல் இயற்கை என்க. பலகா லூதப் பெற்றும் நெருப்புப் பற்றியெரியாமை தோன்ற "ஆரவூதி" என்றார்.

நீர் பொழிந்து அறிவு சோர்ந்து ஆங்கு நின்று அசூஉ=கண்ணீரைச் சொரிந்து புத்தி மயங்கி அவ்விடத்தே நின்று துன்பப்படவும்;

"ஆங்குநின்று" என்றது தொழி லிடையறவுபட்டமை தோன்ற நின்றது.

ஒண் பொருள் இழந்தோர்=ஒண்மையாகிய பொருளை இழந்தவர்கள்;

தமக்கு வேண்டியவற்றை இனிது கோடற்குக் காரணமாகி மனக்கலக்கமும் மதிமயக்கமு மாகிய இருளை விலக்கி விளங்குதலின் "ஒண் பொருள்" என்றார். கிடைத்தற் கருமை குறித்து நின்றதூஉமாம். வேறுங் கூறுப.

[மண்ணிடைத் துரீஇக் குனிந்து நோக்குங் கொள்கையில்] குனிந்து மண் இடை துரீஇ நோக்கும் கொள்கையில்=குனிந்து மண்ணிடத்திலே தேடிப்பார்க்கும் கொள்கையைப் போல;

இல்—உவமவுருபு. பொருள் மறைந்த இடத்தை அறியாமல் நீடு தேடுவார் என்பது தோன்றத் "துரீஇ" என்றளபெடுத்தது. உட்கார்ந்து தேடுதலும் மரபாகலின் அதனை நீக்கி உவமையொடு பொருத்தக் "குனிந்து நோக்குங் கொள்கையில்" என்றார்.

கூன் கொள் முதுகு ஒடு தளர் மெய் முதியர்=கூனுதலைக்கொண்ட முதுகினோடு தளர்ந்த வுடம்பினையுடைய (வயதுமுதிர்ந்த) கிழவர்;

[இந்தளத்துக்கையுங் காலுங் காட்டி வெப்பாஅர] கையும் காலும் இந்தளத்து காட்டி வெப்பு ஆர=கையையும் காலையும் கனற் சட்டியிலே நீட்டி வெப்பத்தை நுகரவும்;

சிறார் மறைந்து சேறு ஆட்டு அயர=சிறுவர்கள் (பெற்றோர்க்குப் புலப்படின் ஒறுப்பாரென்றஞ்சி அவர்க்குப் புலனாகாவண்ணம்) மறைந்து (வெளியிலே சென்று) சேற்றினிடை நின்று விளையாடவும்;

[எங்கும் பைங்கய லினிதி னுலாவ] பைம் கயல் எங்கும் இனிதின் உலாவ=(நீர்நிலையின்றிப் பிறவயின் றங்கப்பெறாத) அழகிய கயன்மீன்கள் யாண்டும் (நீர் நிறைதலின்)மகிழ்ச்சியோடுலாவுதலைச் செய்யவும்;

"உலாவ" என்றார், நீர் நிலையே இருப்பு என்பது தோன்றற்கு.

[பைம்புற் கம்பலம் பாஅர் புதைப்ப] பார் பைம் புல் கம்பலம் புதைப்ப=பூமி தேவி யானவள் (குளிருக்காற்றாமல்) பசிய புல்லாகிய கம்பளியைப் போர்த்திக் கொள்ளவும்;

கற்பனை என்பது தோன்றப் "பாஅர்" என்றளபெடுத்தது.

நுணல் நா நவில=தவளைகள் நாவானே ஒலித்தலைச் செய்யவும்;

[இற்சுரிமுகவூர] சுரிமுகம் இல் ஊர=சுரிந்த முகத்தினை யுடைய நத்தைகள் (நீர்மிகுந்தி யாண்டும் தட்பம் பரவுதலினால் வளர்மரம் முதலிய விடத்தில் ஒட்டி யிருத்தலை விடுத்து) மனையகத்தெல்லாம் ஊர்ந்து வரவும்;

[கொம்பரிடைமந்தி குனிந்திருந்தடங்க] மந்தி கொம்பர் இடை குனிந்து இருந்து அடங்க = மந்திகள் கொம்புகளுக் கிடையே குனிந்திருந்து அடக்கமுற் றிருக்கவும்;

[முழை யிடைப்பன்மா முழக்கற் றொடுங்க] பல் மா முழக்கு அற்று முழை இடை ஒடுங்க = பல விலங்குகளும் (அச்சமிகுதியானே) ஒலி எழுப்பாமல் குகையகத்தே ஒடுங்கி யிருக்கவும்;

அம் சிறை பறவை குடம்பை புக்கு ஆர= அழகிய சிறகுகளை யுடைய பறவைகள் கூடுகளுட் புகுந்து ஆண்டுப் பொருந்தியிருக்கவும்;

குடம்பை குளிர் தாக்காத வண்ணம் சமைக்கப்பட்டமைதோன்றக் "குடம்பை புக்காஅர" என்றளபெடுத்தது.

ஆன் இனம் முதல மரன் அடி அணைய=பசுக்கூட்டங்களை முதலாகவுடையவைகளெல்லாம் மரத்தடியைப் பொருந்தவும்;

குகை முதலாயவற்றிலே வலிய விலங்குகள் இருத்தல்பற்றியும், பறவை முதலியனபோலக் கூடம்பை முதலியவற்றைச்செய்துகோடற் காற்ற லில்லாமைபற்றியும் "ஆனினமுதல மானடி யணைய" என்றார். "முதல" என்றமையால் எருமை முதலியவும் அடங்கும்.

[துருக்கங் கரைத் தென்னத் துலங்குறுஞ் செம்மைக் கொள்ளை வெள்ளம்] துருக்கம் கரைத்து என்ன செம்மை துலங்குறும் கொள்ளை வெள்ளம்=(பல்நிலங்களினின்றும் விரைந்து வருங்காரணத்தினால்) குங்குமத்தைக் கரைத்துவிட்டாற்போல (க்கலக்கமுற்று) ச்சிவப்பு நிறம் விளங்கப் பெற்ற மிக்க வெள்ளமானது:

குன்றவும் காட்டவும் எள் இல் வயலவும் எடீஇ=மலையிடத்தனவும் காட்டிடத்தனவும் இகழுதலில்லாத வயலிடத்தனவும் ஆகிய பல பொருள்களையும் கவர்ந்து எடுத்துக் கொண்டு;

மருதத்தின் சிறப்புத் தோன்ற "எள்ளில்வயலவும்" என்றார். "பொருவருமருதமாக்கி" என்பர் கம்பநும். எடுக்கும் விரைவுதோன்ற "எடீஇ" என்றளபெடுத்தது. "தலையுமாகமும்" என்னும் கம்பசூத்திரமும் இதற்கு ஆதாரமாகும்.

[கடலிடைப் பல்லாற்றானும் பாஅய்ந்தொளிக்க] பல் ஆற்றானும் பாய்ந்து கடல் இடை ஒளிக்க= பல ஆறுகளின் வழியானும் பாய்ந்து சென்று (எடுத்து வந்த அப்பொருள்களைக்) கடலினிடமாக (க்கடல்படு பொருளோடு) ஒளித்துவைக்கவும்;

வெள்ளமானது மலைபகத்தும், காட்டகத்தும், வயலகத்தும்மலிந்த பொருள்களைக்கவர்ந்து செல்லும் என்பதை "மணியும் பொன்னு மயிற்றழைப் பீலியு- மணியுமானைவெண் கோடு மகிலுஞ் சந்- தணியு லாமுமின்னகொண்டேகலான்— வணிகமாக்களை யொத்ததவ் வாரியே" என்று வரு மன்னபல செய்யுட்களானும் அறிக. கவர்ந்தனவற்றையும் எடுத்துச் செல்லற் கியலாமை தோன்ற "எடீஇ" என்றளபெடுத்ததூஉமாம்.

மலைபடு திரவியம் மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம்; காடுபடுதிரவியம் அரக்கு, தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி; நாடுபடுதிரவியம் செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர்.

பல்லாறு என்பது யாற்றினையும் வழியினையும் குறிக்கும். கவர்ந்து பலபொருள்களையும் கொண்டுகொண்டு சேர்க்கும் அருமையை நோக்கிப் "பாஅய்ந்து" என்றளபெடுத்தது. தடைத்தும், சுழித்தும், நுரைத்தும் மேற்சென்று பாய்தலின் அளபெடுத்த தென்பதூஉம் ஒன்று.

கடல்படுபொருள் உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலை. (ஒக்கோலை=அம்பர்; சந் தைக வாசனை.)

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து—நல்லியல் பழிந்து நடுங்குதுயருறுத்துப் பாலை யென்பதோர் படிவங்கொள்ளும்" என்றமை நோக்கிப் பாலையைக் கூறாது விடுத்தார்.

நீர் நிலை காவல் நிலை கொடு நிறுவ=(யாறு, குளம், ஏரி, கேணி, முதலாய) நீர் நிலைகளின் கரைகள் உடைந்துபோகாமற் காக்கும்) காவலானது நிலைகொள்ளும்படி நிறுத்தவும்;

நீர் நிலைக் காவலைப் பிறரும் "ஒழுகு நீம்புனற் சிறைசெயு மோதையும்" எனவும், "காத்த நன் மள்ளர்வெள்ளக் கலிப்பறை கறங்கக் கைபோய்" எனவும் கூறியவாற்றா னறியப்படும்.

கொடும் கோல் பட்டு அழி குடி மனம் களிப்ப=(நன்னெறி விட்டு வளைந்த) கொடிய கோலினுட் பட்டு வருந்திக் கெடுகின்ற குடிகளது மனஞ் சந்தோஷத்தை அடையுமாறு;

கோனிலை திரிதலே மாரி வறங்கூர்தற் கேதுவாகலின் மழையின்மையானேர்ந்த துயரக் கொடுங்கோன்மே லேற்றினார்.

செம் கோல் வேந்தன் சேர்ந்து அளி தேஎம் என=செங்கோல் நிறுத்தற்கு வந்த அரசன் இருந்து அரசு புரியும் தேசம் போல;

பற்றியனவும் உடலைப்பற்றியனவும் இயற்கையைப்பற்றியனவும் செயற்கையைப்பற்றியனவும் அழிவனவற்றைப்பற்றியனவும் வளர்வனவற்றைப்பற்றியனவும் உறுவனவற்றைப்பற்றியனவும் பெறுவனவற்றைப்பற்றியனவும் (ஆகிய பலவிஷயங்களையும் போதித்து) நன்மை செய்யும் பலவாகிய நூற்றொகுதியை நம்மனோர்க்குத் தந்துதவும் நன்மையுடையாரும்;

காற்றினைக் கூறாது விடுத்தார் உயிரெனப் பின்னர்க் கூறுவதை நோக்கிப் போலும் "நெல்லுமுயி ரன்றே நீருமுயி ரன்றே" என்ற பகுதியை ஆராய்ந்தறிக. உயிரால் பெறப்படும் உடல முதலாயின எல்லாம் நிலன் முதலாய பஞ்ச பூதங்களின் சேர்க்கையே ஆதலானும், அவற்றின் சேர்க்கை இல்லாவிடின் உயிரினது பிரதாபமே வரப்பெறாது ஆதலானும், உயிர்க்கு முதல் நிலன் முதலாயவற்றைக் கூறினார். உயிரானே தேடப்படுவது உடலாதலபற்றி அவ்வுடலைப் பிற் கூறினார். "இயல்" முதலாகப் "பெறுதல்" இறுதியாக வுள்ளன அவற்றின்முன் கூறப்பட்டனவற்றிற்கேயாதலின் அவற்றைப் பிற் கூறினார். செயற்கை முதலாயினவற்றிற்கு இயற்கையே காரணமாக நிற்றலினானும், செயற்கை இயற்கையினின்றே தோன்றுதலினானும் இயற்கையை முற் கூறினார். அழிவனவற்றின் உண்மை தோன்றுவதற்கு வளர்வனவற்றைப் பிற் கூறினார். ஒன்று நினைக்கப்பட்டவாறே வாராமற் பிறிதொன்று தானே வந்து பொருந்துதலின் உறுதலை முற்கூறினார். உறுவன என்பது தாமே வந்து அடைவனவற்றை. பெறுவன என்பது விரும்பித் தேடிப் பெறுவனவற்றை.

தங்கள் பரம்பரையைப் பெருக்குவது உலகோபகாரமே என்று கருதினவர் என்க. க்ஷத்திரியரை உள்ளிட்ட மூவரும் தத்தமக்குரிய பொருள்களைத் தத்தம பரம்பரைக்கு அளித்து வந்தமையேபோல இவரும் தங்கள் பொருளாகிய ஓத்து முதலாயவற்றைத் தங்கள் பரம்பரைக்கே அளித்து வந்தனர். தங்கள் பொருள்களை எல்லாம் ஏனை மூன்று வருணத்தார்க்கும் அளித்தவர் ஓத்து முதலாய பனுவல்களையும் ஏனை அம் மூன்று வருணத்தார்க்கும் அளித்து விடுவாராயின் அன்னவர் பரம்பரை நீடுவாழ்தற் கேற்ற வழிதான் யாதுளது?

செயற்கு அரிது உதவி சிறு அகடு நினைப்பவர்=(பிறரால்) செய்து கோடற்கரிய காரியங்களை (ஏனை அம் மூன்று வருணத்தார்க்குஞ் செய்து முடித்து அவற்றின் பலனை அவர்பெறுமாறு) உதவிய பின்னர் (அவரால் தரத்தக்க சிறிய அளவினதாகிய பொருள் கொண்டு தங்கள்) சிறிய வயிற்றுப் பசி வெப்பத்தை நினைத்துக் குளிர்விப்பாரும்,

சிறு அகடு என்றமைக்கேற்பச் சிறிய அளவினதாகிய பொருள் என்று விரித்தாம். ஆற்றன் முதலாயவற்றின் பெருமைதோன்றச் "சிற்றகடு" என்றார். பசிவெம்மையை நினைப்பவரே அன்றி வயிற்றை நிரப்பார் என்பது தோன்றச் "சிறு அகடு நினைப்பவர்" என்றார். நினைப்பவர் என்றமையால் பசி வெம்மையின் மிகுதியுங் காட்டியவாறாயிற்று. ஏனை மூன்று வருணத்தார்க்கு முரிய சுபாசுப கருமங்களைத் தாங்களே நின்று இருமைக்குங் காரணமாகிய செய்கைகளைத் திரிகரண சுத்தத்தோடு ஒரு குறையும் நிகழாவண்ணம் செவ்வியின் நிறையேற்றிக் கொடுத்து அவரானே மனமுவந்துதவிய சிறுபொருள் கொண்டு சீவித்து வருவர் என்பது ஈண்டுக் கூறிப் போந்த கருத்தென்க. "நினைப்பவர்" என்ற விசேஷணமே கொடுத்தது கொண்டு திருத்தியுறுவோரென்னும் அரிய நீதியும் பெறப்பட்டது. இனிச் செயற்கரிதென்பது ஐம்புலனடக்க முதலாயினவற்றைக் குறிக்குமென்று கூறுவாருமுளர். "செவிக்குணவில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப் படும்" என்ற திருப்பாசுரம் ஈண்டாராயத் தக்கது.

தாம் பெறல் அழிவு உறு தகை சிறிது அறிகிலர்=(உலகம உய்யும்வண்ணம் செய்கின்ற காரியங்களிலே) தமக்குண்டாகும நயநட்டங்கள அடைகின்ற தகுதியை ஒரு சிறிதும் அறியாதவரும்;

உலகம் பெறவேண்டிய ஊதியத்திலே கண்ணுங் கருத்துமாக இருப்பாரன்றித் தம் சுயநயங்கருதி இன்னது செய்யின் நல்லூதிய முண்டாகுமென்று அதனைச் செய்தும் இன்னது செய்யின் நட்டமுண்டாகுமென்று அதனைச் செய்யாது நீக்கவும் மாட்டார் என்க.

தேஎம் நலன் உறு செயல் ஒன்று அறிகுநர்=தேசத்தார் நன்மை பெறுகின்ற செய்கை ஒன்றனையே அறிந்தாற்றும் ஆற்றலினை உடையவரும்;

தந்நலங் கருதாராகிப் பிறர்க்குரியாராகும் அருமைபற்றித் "தேஎம்" என்றனபெடுத்தது. தேசத்திற்கு இடையூறு வாராமற்றடுத்து நலத்தை வளர்க்குங் காரியங்களையே ஓவாது செய்து வருவர் என்க.

சிறு குடில் வாழ்க்கையர்=(பொருளானும் அளவானும் சிறுமையுடைய) சிறுவீடுகளிலே வாழும் வாழ்க்கையையுடையவரும்;

பலவற்றிற்கும் உபயோகமாகும் இடமும், பலர்க்குப் பயன்படும் பொருளும், பலவேலைக் குரியவர்களாகிய பணியாளரின் தொழிலும் தம்பொருட்டு வாளா அழியாதிருத்தற்குச் சிறுகுடில் வாழ்க்கையை விரும்பினோர் என்க. இவற்றானே அவரது நுண்ணறிவும், சிரத்தையும், கருணையும், பிறவும் விளங்கிக் கிடத்தல் காண்க.

வசிட்டர் முதலாயினோர்க்குத் தசரதன் முதலாயினோர் இல்லம் முதலாயவற்றை வேண்டியவாறே மிகப் பெரிதாகச் செய்து கொடுத்தற்கு அமைந்திருந்தும் அன்னோர் அவற்றையெல்லாம விரும்பாமற் சிறு குடில் வாழ்க்கையையே பேணிவந்தமை ஈண்டுச் சிந்திக்கற்பாற்று.

சீரை தைஇய உடுக்கையர்=சேலையாகும் வண்ணம் தைத்த உடுக்கையை உடையவரும்;

தைத்தசேலை என்பது பொருள். தைத்தாலன்றிச் சேலையாகும் பான்மைத்தன்று என்பது போதரச் "சீரை தைஇய" என்றார். அவரதுடை வேற்றிழை நுழைந்த துன்னற் சிதரேயினும் தூய்மையுடைத்தென்பது குறிக்கப்பட்டது. அநாவசியகமாகப் பொருளை வீண்படுத்தாதவர் என்க. திருமுருகாற்றுப்படையில் "சீரைதைஇய உடுக்கையர்" என்பதற்கு மரவுரியை உடையாகச்செய்த உடையினையுடையவர் என்றுரைக்கப்பட்டவாறு ஈண்டுரைக்கினும் அமையும்.

கல்வி செந்நீர் ஊறறினர்=கல்வியாகிய இரத்தமே ஊற்றெடுத்துப்பெருகும் மேனியை உடையவரும்;

உடலுக்கு இரத்தம் ஆதாரமாகுதல் போல இவர்க்குக் கல்வியே ஆதாரமாகும் என்க. இவ்வுவமையை வேண்டியவாறே விரித்துரைத்துக்கொள்க. இன்னோர் உடலத்தை அறுத்தால் வருவது இரத்தமன்று கல்வியே என ஓர் அலங்காரம் தொனிப்பது காண்க. "நற்றவாவுனை நான்மறப்பினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே" எனவும் "பொய்ம்மைமொழி புகன்றறியேம் புகலமன மெண்ணுகினு மெய்ம்மையன்றி நாவுரையா வேதநவில் பயிற்சியால்" எனவும் வருவனவற்றிலே மனப்பழக்கம் நாவின்மேலேற்றப்பட்டது போலவும், "உடுக்கையிழந்தவன் கைபோல" என்பதில் மனத்தின் றொழில் கைமேலேற்றப்பட்டது போலவும் கல்வியும் இரத்தத்தின் மேல் ஏற்றப்பட்டது என்றலும் ஒருவாறு பொருந்தும்.

அழிவன தேறு ஆண்மையர்=கெடுவனவாகிய செயல்களை ஆராயாத ஆண்டன்மையை யுடையவரும்;

தந்நலங் கருதியாவது தமர்நலங் கருதியாவது பிறர்க்கஞ்சத்தகும் அச்சங்கருதியாவது கெடுவனவற்றைச் சூழார் என்க. நடுவுநிலை இடையூறுற்றுக் கெடத்தக்க செயல்களைச் சூழார் என்றலும் அமையும்.

[என்றுந் தொழுதுலகேத்துந் துரிசில் வினையினர்] உலகு என்றும் தொழுது ஏத்தும் துரிசு இல் வினையினர்=உலகத்தார் (தங்கள் காலத்திலும் தங்கட்குப் பிந்திய காலத்திலும் தங்களை) வணங்கித் துதிக்கும்படியான குற்றமற்ற செய்கைகளைச் செய்துவருபவரும்;

ஒரு காரியத்தை ஒருவன் செய்தகாலத்திலே அது சிலர்க்கு நலமாகவும் சிலர்க்குத் தீமையாகவும் இருத்தலும் அவன் இருக்குங் காலத்திலே தீமையாகத் தோற்றப்பட்டுப் பின்னர் நலமாக இருத்தலும் போலாது.எப்பொழுதும் எல்லார்க்கும் நல்லனவற்றையே சூழ்வர் என்பது

போதர "என்றும் தொழுதலகேத்தும்" என்றார். சிலர் தங்கள் வஞ்சத்தால் எவரையும் மயக்க வல்ல போலிச் செயல்களை இயற்றல் போலாது நன்மையமைந்த வினைகளையே செய்துவருவர் என்பது போதரத் "துரிசில் வினையினர்" என்றார்.

மனசின்றொழிலைக் கூறாமல் தொழுதேத்தும் என்று சென்றார்; மனசின்றொழில் பெரும்பான்மையும் வாய்வழிப்பட்டுச் செய்கைக்கு வந்து தீருதலின் என்க.

அவாஅமுதல அறுத்து நிலை ஆற்றலர் = ஆசைமுதலாயினவற்றை வேர்அறுத்து நிலை..த வலிமையையுடையவரும்;

அவாஎன்பது தம்மிடத்துள்ளன பிரியாதிருத்தற்கும், தம்மிடத்தில்லாதனவற்றுள் தமக்கு வேண்டியவற்றைப் பெறுதற்கும், மனம் விரும்பி விரும்பிக் கசிந்திருக்கும் பற்று. இப்பற்றை இழிந்தனவற்றை விரும்பல், மேம்பாடுற்றனவற்றை விரும்பல், கழிந்தனவற்றை விரும்பல், அடையப்பெறாதனவற்றை விரும்பல் என நான்கு பிரிவுகளாகவும் பிறவாறும் பிரிவுபடுத்துவர் இழிந்தனவற்றை விரும்புதலாவது உயர்ந்தோன் கள் களவு முதலாயினவற்றை விரும்புதல் போல்வன. மேம்பாடுற்றனவற்றை விரும்புதலாவது வறிஞன் செல்வனைப்போல் நடக்க எண்ணுதல்போல்வன. கழிந்தனவற்றை விரும்புதலாவது முதியோன் காளைப்பருவத்தே தன்னை மாதர்கள் விரும்பியவண்ணம் இதுபொழுதும் விரும்புதல் வேண்டும் என்றெண்ணுதல் போல்வன. அடையப்பெறாதனவற்றை விரும்புதலாவது முதுக்குறைவில்லாதான் பெண்டன்மை கொள்ளக் கருதுதல் போல்வன. இவ்வெல்லாப் பகுப்புக்களையும் முன்னர்க்கூறிய இரண்டனுள்ளே அறிவுடையோரடக்குவர்.

எல்லா இழிகுணங்கட்கும் காரணமாகி நிற்பது அவா என்பது தோன்ற அஃதைமுதற்பெ..த்தது. அழுக்காறு வெகுளி இன்னாச்சொல் என்றற்றொடக்கத்தனவும் அடங்குதற்பொருட்டு "முதல" என்றார்.

தாழ்புலை குடிலினும் கேழ் நிலா வீசும் மதியத்து அன்ன = (ஆவுரித்துண்ணலாதிய) இழிந்த குணங்களையுடைய சண்டாளருடைய குடிசையின்கண்ணும் (மாடமாளிகையாகிய வியன் பெரும் இடங்களிலே வீசுகின்ற தனது ஒப்பற்ற) ஒளிமிகுந்த கிரணங்களைப் பரப்புகின்ற திங்களைப்போல;

மாசு அறு மாண்பினர் = குற்றமற்ற (நற்குணநற்செய்கைகளானே) மேம்பட்டவரும்;

இதனுனே அவரது சமத்துவ புத்தியை விளக்கினாராயிற்று. சந்திரனது கிரணங்கள் ஒரேபடித்தாக அரண்மனைமீதும், சிறுகுடிசைகளின்மீதும் எறித்தாலும் அக்கிரணங்களெல்லாம் தாம்படிகின்ற இடத்துக்கும் நிலைமைக்கு மேற்ப விளங்கும். இறைவனது கருணையாகிய பாலைத் தத்தம் வினைப்பாத்திரத்திற் பெற்று ஏற்றபடி பயன்பெறுவர் என்க.

தலைசென்று எனினும் தக்க ஒன்று ஆற்றுநர் = (நற்செய்கை ஒன்றைச் செய்யுங்கால் தமது) தலையானது வெட்டுண்டழிய வேண்டி நேரிடினும் தகுதியுடைய அச்செய்கை ஒன்றை (விட்டொழியாமல்) இயற்றி முடிக்கும் மனோவலிமையுடையவரும்;

"மலர்மிசையேகினான்" என்றாங்குத் "தலைசென்றெனினும்" என்பது நின்றது. தலை சென்றெனினும் என்பது உயிர்க்கிறுதி நேர்ந்த வழியும் என்றபடி.

உலகுமுறை நடாத்தற்கு உரியவை சூழ = உலகினை நன்னெறியிலே செலுத்தற்பொருட்டுச் செய்யப்படும் உரிமையாகிய காரியங்களைச் சூழ்ந்து ஆராய்தற்கு;

பற்று அற நல் திறன் படர்ந்து நடுவெஃகும் = (தமர் முதலாய) பற்றுக்களையெல்லாம் அறுத்து நன்மை அமையும் வகையிலே சென்று நடுவுநிலையை விரும்புகின்ற;

பற்றறுதல் நற்றிறன் படர்தலுக்கும் நற்றிறன்படர்தல் நடுவுநிலைவெஃகுதற்கும் காரணங்களாகி நின்றன.

குற்றம் அறுகாட்சி=(தீயன நீக்கி நல்லன கொள்ளுமியலானே) குற்றமற்ற அறிவினையும்;

கூர்த்து அறி குழூஉ இல் மற்றையர் சூழ்ச்சி மறந்தும் சூழ்கிலர்=(ஒவ்வொரு செயலின் தன்மையையும்) நுனித்தறிகின்ற (நுட்பத்தினையுடைய) கூட்டத்தார் அல்லாத ஏனையோரின் சூழ்ச்சிகளை மறந்தேனும் ஆராயாதவர்களும்;

நுட்பமில்லாவிடின் பற்றறுதல் முதலாயினவற்றாற் பயன் சிறிதும் இன்மைபற்றிக் "கூர்த்தறி குழூஉ" என்னப் பின்னரும் புணர்த்தினர். அவா முதலியன உடையராய் இடம் பம்பூண்டு வீற்றிருப்பவர் நல்லறிவுபடைத்தவராய் இருந்திடினும் அவர் சூழ்ச்சியெல்லாம் நடுவு நிலைவிட்டு உலகத்தைக் கெடுக்குமாதலிற் "கூர்த்தறி குழூஉவின் மற்றையர் சூழ்ச்சி மறந்தும் சூழ்கிலர்" என்றார். இதுகருதியன்றே முற்காலத்துத் தசரதன் முதலாய வேந்தர்கள் உலகு முறை நடாத்தற்குரியனவற்றை வசிட்டரையுள்ளிட்ட மகான்களிடம் வினவிவந்தனர் என்க. மற்றையர் சூழ்ச்சியாவது தமக்கும் தமர்க்கும் நன்மைபயப்பனவற்றை எவர்க்கும் ஒத்த நலன் பயப்பனவாக நடித்துக் காட்டுதல் போல்வன. பற்றறுதல் முதலியனவும் கூர்த்தறிவும் உடையாரின அருமையும் ஆற்றலும் பிறவும் தோன்றக் "குழூஉ" எனஒருமைப்படுத்தது.

இழிசனர் பகைஞர் என்னார்=(ஒரு மேம்பட்ட காரியத்தை நிறைவேற்றுவோர்) இழிவுடையாரென்றும் சத்துருக்களென்றும் நினைத்து அவரை நீக்காராகி;

ஏற்றக்கு உண்மை ஒடு பழிச்சும் உரை சால் சிறப்பினர்=அவர்செய்த மேம்பாடுபொருந்திய காரியத்தை உண்மையாகத் துதிக்கும் புகழ்மிக்க சிறப்பினை உடையவரும்;

மகிழ்தல் உலகு ஈத்து துயர் தமது ஆககுநர்=மகிழ்தலுக்குக் காரணமாகிய செய்கைகளையெல்லாம் உலகத்தாருக்குக் கொடுத்துத் துன்பத்திற்குக் காரணமாகிய செய்கைகளெல்லாம் தம்முடையனவாகக்கொண்டும் வருகின்ற வலிமையுடையவரும்

உலகஞ் செய்துவருங் குற்றங்களையெல்லாம் தம்முடையனவாகக்கொண்டு அவற்றானிகழுந் துன்பங்களைத் தாமனுபவித்தும் தம்முடைய முயற்சியால் அடையப்பெற்ற இன்பங்களை எல்லாம் உலகத்திற்களித்தலும் இவ்வைபோன்ற பிறவும் உடையார் என்க. இதனை "விலைமை வாழ்நலமா நீரத்-தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்-காலுணவாகச் சுடரொடு கொட்கு-மவிர் சடை முனிவரும்" என்ற புறநானூற்றுச் செய்யுட்கண் ஆராய்ந்தறிக. இன்னும் இதனை "விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை" என்ற திருமுருகாற்றுப்படை யடிக்கெழுதப்பட்ட உரையும் வலியுறுத்தும்.

அவரினது இத்தகைச் செய்கை உலகுக்குப் பயன்படுமாறெங்ஙனமெனில் "தொழுதெழுவார்-வினைவளந் நீறு நீறணி" என்றதற்குப் "புதல்வனது பிணிக்குத் தாய மருந்துண்டாற்போலத் தொழுதெழுவார் வினைக்குத் தானீறணிந்தான்" என்று கூறப்பட்ட விசேடவுரையை ஈண்டைக்கேற்பப் பொருத்தியுணர்க.

எனையர் ஆயினும் நல்வழிக்கு ஏற்றுவர்=எத்தகைய இழிதகவுடையராயினும் அவரையெல்லாம் (நற்குண நற்செய்கைகளுக்கு ஏடுபட்டவராய்ப்புரியவல்ல) நல்லநெறியின்கண்ணே நடக்கும்வண்ணம் செய்வாரும்;

சருக்கரைக்குள்ளே மருந்தை மறைத்துவைத்துண்ணச்செய்து தம்மக்களைப் பாதுகாத்து வருந் தாயர்போல இழிசனர்க்கு மாறாகிய அறச் செயல்களை இன்சொற்களின் வழியானும் பிற வழியானும் அளித்து அவரை வெறுக்காமற் பாதுகாத்து வருவர் என்பது ஈண்டுக் குறிக்கப்பட்டது. அவர்களது நிலைமை இழிந்திருத்தலின் "ஏற்றுவர்" என்றார்.

உடல் துன்பு அறியார்=(எப்பொழுதும் உலகத்துக்கே உழைத்துவருதலினால், உடலந் துன்புற்றாலும் அத்துன்பத்தை அறியாதவரும்;

உளம் துன்பு இல்லோர்=(அவரது அறிவு எப்பொழுதும் ஒரே படித்தாகத் திருத்தியுற்று மலர்ந்திருத்தலின்) உள்ளத்தின்கண்ணே துன்பம் இல்லாதவரும்;

"இடும்பை யாவது மறியா வியல்பினர்" என்ற திருமுருகாற்றுப்படை அடிக்கு "தவத்தான் மெய்வருத்தம் உளவேனும் மனத்தான் வருத்தம் சிறிது மறியப்படாத இயல்பினையுடையர்" என்றெழுதப்பட்ட வுரையை ஈண்டைக் கேற்குமாறு பொருத்தி விரித்துக்கொள்க.

"உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங் கூம்பலு மில்ல தறிவு" ஆதலின் அவர் அங்ஙனம் அமைந்து எல்லாரையும் நட்டு நன்மை யுறுத்திவந்தனர் என்க.

மாண் பொழுது அன்றி வீண்பொழுது கழியார்=தமது வாணாளை நற்செய்கைகளினே மாட்சிமைப்படக் கழிப்பாரே யன்றி மாறாத வீண்பொழுதாகப் போக்குதலைச் செய்யாதவரும்;

நனம் தலை உலகு நல் வழி படூஉம் கனவு குறுகு இல்லா உறக்கம் காண்கிலர்=பரந்த இடத்தையுடைய உலகத்துச் சீவராசிகள் நல்வழியை அடைந்து உய்தற்கேதுவாகிய கனு அடையப்பெறாத வெற்று உறக்கத்தைக் காணாதவரும்;

தம் வாணாளை உறக்கம் முதலியவற்றில் செலவிடுதல் கண்டாமாதலின் வீண்பொழுது கழியார் என்றல் பொருந்தாதெனில், "தென்புலத்தார்" என்ற குறளில் தன்னை ஓம்புதலும் அறமெனக் கூறப்படலின் அவர் செய்யும் நித்திரையும் மாண்பொழுதினதேயன்றி வாளா கழிவ தன்றென்க. அவர் புரியும் நித்திரை அறிதுயிலாகும். நல்வழிப்படுதலின் ஆராய்ச்சி நீண்டு கனவிடையினும் வந்து முற்படுதலின் "நல்வழிப்படூஉம்" என்றனெடுத்தது.

தாக்கு வளர்வு இலா வனம்=(எல்லாவற்றையும் கொல்லவல்ல ஆற்றல் சான்ற) புலியினது மரபு அருகிவளர்கின்ற காட்டின்கண்ணே;

தழைஇ வளர் மான் இன்=மரபு முழுவதும் தழைத்து வளர்கின்ற மான்கூட்டங் களைப்போல;

முருக்குநர் வழி கெட முகிழ்ந்து வழி செழிக்குநர்=தங்கள் செய்கைக்கு மாறாகி விரோதிப்பவரும் அவர்தம் பரம்பரையும் வேரற்றுப்போகத்தாமும் தம்மரபும் நீடுதலுற்றுச் செழித்து வருபவரும்;

சாந்தகுணத்திற்கும் புலாலுண்ணாமைக்கும் பிறவற்றிற்கும் மான் அந்தணர்க் குவமையாயிற்று. 'புலியில்லாத காட்டில் மான் வளரும் என்று உரைகூறுவாருமுளர். அவர் தாக்கு இல்லாவனம் என்றிருத்தல் வேண்டும் என்பதனையும், முருக்குநர் வழிகெட என்றசொற் போக்கின் உண்மைப்பொருளினையும் உணராதாராவர். மான்கூட்டம் புலியினால் ஒழுக்கப்பட்டும் அழியாமல் விருத்தியடைந்தும் புலிக்கூட்டம் விருத்திபுறாமல் அருகியும் வருதல்போல அந்தணர்தம் மரபு ஒன்று பலவாகியும் அன்னவரை ஒறுப்பவரும் அவர்தம்மரபும் அறவே அருகியும் வரும் என்க. களங்கமற்ற மான்கூட்டங்கள் வளர்ந்துவரும் வியப்புத்தோன்றத் "தழைஇ" என்றனெடுத்தது.

இவரே=(கூறப்பட்ட இந்நற்குண நற்செய்கைகளையுடைய) இத்தன்மையரே;

எல்லா உயிரும் ஏமம்பூண=எல்லாவகையான் சீவராசிகளும் இன்பத்தைத் தமக்கு ஆபரணமாகப் பூண்டுகொள்வதற்கு ஏதுவாய;

செம் தன்மை பூண்ட செல்வத்து=செம்மையாகிய சத்துவகுணம்பூண்ட செல்வத்தினையுடைய;

அந்தணர் எனும் நல் அறம் திறத்தினர்=வேதத்தின் முடிவுநிலையை அடைபவர் இவரேயென்று எவரானும் போற்றப்படுகின்ற நல்ல துறவற வழியை உடையோராவர்;

அந்தணர்=அந்தத்தையணுவுவார், எனவே, வேதாந்தத்தை நோக்குபவர் என்க. "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்-செந்தண்மை பூண்டொழுகலான்" என்ற திருவர்க்கை இவ்வடிகள் செவ்வியாக ஞாபகப்படுத்துகின்றன.

செந்தண்மை என்று முன்னர்க்கூறப்பட்டமையானே ஈண்டந்தணர் என்பதற்கு இவ்வாறு பொருள் கூறினும்.

“அந்தண்மை பூண்ட வந்தத்துச் சிந்தைசெப் அந்தணர்” என வருதல் கொண்டு இவ்விரண்டு பொருள்களும் புலப்படும்.

அறம் என்பதின் ஆற்றலைப பலரும விரித்துளார். இங்ஙனங்கூறிற் பெருகும். பொய்யாமொழியாரும் அறமானது வீடுபேற்றினையும் சுவர்க்கம் முதலாய செல்வங்களையும் நல்லின்பங்களையும் புகழையும் தரும் எனவும் அதனைச் செல்லும்வாயெல்லாம் ஒல்லும் வகையானோவாது செய்தல்வேண்டும் எனவும் பிறவாறும் கூறிப் போந்தமை காண்க.

---

(3) ஆசா னுணையி னரும்பொரு ளனைத்து
மீசன் றுசர்க் கீவோ ரப்பொருள்
குறையாது வாழு முறையின ரென்றல்.

அருண்முறை நாடிய வாற்றல்சா லடிகா
ளிருண்முறை தபுத்தின் னுடைமை யோனைத்
தெருண்முறை சேர்த்திய சீர்சால் புலவ
தாய்மருந் தருந்திக் தனுஅது குழவி
நோய்தீர்த் தாங்கு தவறரு மெம்மனோர்
மறந்தப வறஞ்செய் மாண்பினை காண்டகு
சிறந்த வொழுக்கஞ் செறிந்தனை சிறியேன்
வறுமை யானே யறிவெலா மாழ்கித்
துறையறி விலனாய்த் துன்புற் றுழிதருந
றொருநாள் போக்குமு னுயிரலைக் கின்றேன்
மனைகுறை மாசுடை நினைந்தே யன்றே
ணெய்யற் றீரும பேனு நெருங்கி
யெய்வுற் றழுக்குட னிமைகுழ னினைந்தே
தனிசுகொளக் கடுகினர் தனுசொ னினைந்தே
பசிதின வாடிய பைதற் குழவிகள்
வாயரற் றென்றுளைச் செவிவர னினைந்தே
பன்னூ லாயாப் பான்மையை நினைந்தே
யென்னுறு துயரி னேற்றநனி நினைந்தே
யுருகுமென் கண்டா யொன்றல பலவே
யொருமற மறியே னோவா திறைவன்
றிருவடி யறிவேன் செப்புதோர் கில்லேன்
காத்தருள் கென்றவெற் பார்த்தருள் பெரியோன்
பிற்றைஞான்று வருதி பெருமான் றனைவினவு
யிற்றென நிற்குநன் கியம்புவ லென்றன
னீற்றுறை பெற்றே னென்னவடி யேனுஞ்

சென்றனெ னிராவினை யரிதிற் செலுத்தியந்
நன்றிதரும பெரியோன் றன்னடி நணுகுபு
வொன்றிய வுரையோ டுள்குபு வணங்கி
வாய்மை பொத்தி வாளா விருக்குமேற்
றூய்நிக ரன்பொடு தன்னிக ரில்லோ
னையநிற் கமைபொரு ளுறையிற் சிறிதே
வாணா ளேயோ நீட்சித் தாதலி
னன்னண மளித்தன னென்றறைந் திசினோன்
மன்பதை யுயிர்க்குயி ராய மாட்சிய
னனல்செவி போற்றனெ னெந்தா யெற்கமை
யனைத்துப் பொருளையு மருள்செய் தக்கா
லொருநாண் மகிழ்கொடு கழிப்பிச் செல்குவல்
பெருமநன் றதுவே பேணியருள் கென்றே
னிதனையு மிறையடிக் கிரம்புவல் செல்கெனச்
சென்று நெருநலிற் சேர்படி தொழுதனென்
றொழுதவெளி யேனைத் துணைநோக் கருளி
யெழுகென வெழுப்பி யின்னமுது தெளீஇ
நாற்றுப்பத் தடுக்கிய வேற்றமிகு பொன்னளித்
தேகென விடுத்தா னேகிய யானும்
பெரியோர் வம்மின் பீடுதமி ழாய்தற்
குரியோர் வம்மி னூழ்பசி யுழத்த
வறியோர் வம்மின் வம்மி னெனக்கூஉ
யெல்லார் தம்மையு மினிதி னருத்தி
நல்லா டன்னொடு நற்றுணைச் சேயர்
தமபொடு நன்மகிழ் தலைத்தலை சிறப்ப
வெம்மி லிருந்தாங் ககட்டுக்குறை வகற்றிய
பின்னரென் மனையைப் பேணுபு நோக்கி
யின்றொடென் வாழ்வு நிறைவே றிற்றென்
றாய்தொடி நல்லா யென்னுமுன் னிருவேங்
கண்ணீர் மறைத்தலி னொருவர்க் கொருவரைக்
காணே மாகினங் காட்சிச் சிறார்தமை
யுச்சிமோப் புணர்ந்தாங் குள்ளங் குளிர்ப்ப
முத்தமிட் டொருவியூழ் முறையெனத் தெளிந்து
நாளைக் கிறைவ னற்றிரு வடிநிழ
லென்னுறு துணையென் றெண்ணியாங் கெவற்றையும்
பொருள்செய் கிலனைப் பொருவி லோனடி
தெருள்கொள வுளத்திற் சேர்த்திருந் தேனே
காலையும் வந்தன் றுயிர்செலக் காண்கிலென்
றுயிலெழுந்து நோக்குழி முன்னா டொலைச்சிய
பொன்னுங் காண்குபு புதுமை பெறீஇ
யென்னுயி ரன்ன வினியோற் கியம்பினென்

னன்றே றென்று மறைகில ருகி
யென்னைப் பின்றாட் காலைவாற் கேவினன்
யானுஞ் சென்றாங் கவனடி மீடா
யென்னைமன் பெரியோ னினிதுமுக நோக்கி
நெருந் னீயே நின்னுறு பொருளை
யொருங்குண் கலையே யுவன்றெழி லாற்றி
வருங்கடன் பூண்டனை நீயழித் ததூஉ
நிற்பொறுப பாகா தென்றனன் யானு
நென்னற் போல நிகழ்த்திப் பலரையு
நன்கருத்தி வருதலை நண்ணினே
னென்றிய வறஞ்செ யுணர்வுடை யோரே.

---

(இ—ள்.) அருள் முறை நாடிய ஆற்றல் சால் அடிகாள்=(அன்புகாரணமாகப் பிறந்த அருளினுடைய (இருமைக்கும் ஏதுவாகிய) முறைமையை ஆராய்ந்தடைந்த வல்லமை நிறைந்த பெரியோனே;

"அருளென்னு மன்பீன் குழவி" என்பவாகலின் அன்புகாரணமாகப் பிறந்த அருள் என்னப்பட்டது. அருளாவது ஒரு தொடர்பும் பற்றாது இயல்பாகவே எல்லாவுயிர்கள்மாட்டும் செல்வதாகிய கருணை என்ப. அதன் முறையை நாடுதலாவது அகப்புறப் பற்றுக்களைக் களைந்து எல்லாவுயிர்களையுந் தன்னுயிர்போற் பேணிவருதல். "நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்—றேரினுமஃதே துணை" என்பவாகலின் "அருண்முறைநாடிய" என்றும், ஊழ்வலியால் வறியராயினார் அது நீங்கிப் பின் ஒரு காலத்துச் செல்வத்தாற் பொலிதலுமுண்டு. அவர் போலாது அருளற்றார் செவ்வியுறல் மிகவரிதாகலின் அவ்வருளைக் கைவிடாது பற்றிப்பற்றி ஒழுகியொருவர் என்பது போதர "ஆற்றல் சால்" என்றும், அத்தகையோரே பெரியாராதலின் "அடிகாள்" என்றுங் கூறினார். ஆற்றல் என்பது நிக்கிரகாநுக்கிரகங்களை. "ஐந்தவித்தான்" என்புழியும் அப்பொருட்டாதலை நுணுகியறிந்துகொள்க.

[இருண்முறை தபுத்தீண்டெம்மனோரை] ஈண்டு எம்மனோரை இருள்முறை தபுத்து= இவ்வுலகத்திலேயுள்ள எம்போன்ற அறிவிலிகளை (நல்லனவற்றை அனுசரிப்பதற்கும் அல்லனவற்றை விலக்குவதற்கும் தக்க சாதனங்கள் எத்துணையோ ஈண்டிருந்தும் அவற்றைக் கைக்கொண்டு ஒருபயனையும் அடையாது) மயக்குற்றிருக்கும் எங்கள் முறைமையை நீக்கி;

குருடர்க்குக் கதிர் முதலிய ஒளிகளாற் பயனில்லாதவாறுபோல இருண்டவர்க்கு நூல் முதலியவற்றால் பயனில்லை என்க. "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந்தாலன்றிக்—கருதுநிலப் பல்பொருளுங் காண்டலரிதாம்" என்னும் திரிகூட ராஜப்ப கவிராயர் கொள்கைக் கேற்குமாறும் விரித்துப் பெரியார்தம் இன்றியமையாமையை நன்குரைத்துக் கொள்க.

தெருள் முறை சேர்த்திய சீர் சால் புலவ=தெருட்சி பொருந்திய நல்ல முறையிலே கூட்டிய புகழ் நிறைந்த புலமையை யுடையவனே;

"இருண் முறை" என்றது கலக்கஞ் சான்றது வாதலின் அதற்கேற்ப ஈண்டுத் "தெருண் முறை" என்றார், பிறரால் நீக்கற்கரியது என்பது போதரச் "சீர்சால் புலவ" என்றார். புலம் என்பது அறிவு. இவ்விழிசனரை நீக்கற்குப் பேரறிவு வேண்டுமாதலிற் "சீர் சால் புலவ" என்றாருமாம். "கற்றவர் கடவுட் டானஞ் சேர்ந்தவர் கணக்கணில்லா—ரற்றவர்தம்முள ரன்றியு

மனைய நீரார்க்—குற்றதோ ரிடுக்கண் வந்தா லுதவுதற் குரித்தன் றுயிற்—பெற்றவிவ் வுடம்பு தன்னுற் பெறும்பய னில்லை மன்னோ" என்பது சூளாமணி. "தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்—வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்" என்பது நன்னெறி. "அறமுமருளுடையான் கண்ணதே யாகும்" என்பது சிறுபஞ்சமூலம். இன்னபலவுங்கருதிப் பெரியாரை இங்ஙனங் கூறினர்.

[தாய்மருந் தருந்தித் தனூஅது குழவி நோய்தீர்த் தாங்கு] தனூஅது குழவிநோய் தாய் மருந்து அருந்தி தீர்த்தாங்கு = தன்னுடைய குழந்தையின் பிணியைத் தாயானவள் மருந்துண்டு தீர்த்தவாறேபோல;

தாய்மருந்தருந்தல் குழவியின் பொருட்டெனப் பிறர்க்குப் புலனுகாதாதலின் "குழவி நோய் தீரத் தாய் மருந்தருந் தியாங்கு" என்னது "தாய் மருந் தருந்தி" என்றார். தனக்குற்ற நோய்க்குத் தானே மருந்துண்பது முறையாகவும் குழந்தையின் பொருட்டுத் தாய் மருந்தருந்து கின்றனளே என்னும் வியப்புத் தோன்றக் "தனூஅது" என்றனெடுத்தது. தனக்குச் சுக மிருந்தும் குழவியின்பொருட்டுத் தாய் மருந்தருந்துவதுபோலப் பெரியோரும் தம்முயிரஞ் சாமை, அல்லலில்லாமை முதலிய பலவும் தமக்கியல்பாயிருந்தும் உலகத்தார்பொருட்டுத் தம் மெய் வருந்துவர் என்க. இதனைச் "சுடரொடு திரிதரு முனிவரு மமரரும்" என்னும் இளங் கோவடிகள் கூற்றும், "விண்செலன் மரபி னையர்க் கேந்திய தொருகை" என்னும் நக்கீரர் கூற்றும், "நிலமிசை வாழ்ந ரலமரறீரத்—தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்—காலுண வாகச் சுடரொடு கொட்கு—மவிர்சடை முனிவரு மருள" என்னும் தாமப்பல் கண்ணனார் கூற்றும், "தொழு தெழுவார்—வினைவள நீறெழ நீறணியம்பலவன்" என்னும் மணிவாசகப்பெருமான் கூற்றும், "புதல்வனது பிணிக்குத் தாய் மருந்துண்டாற்போல" என்னும் பேராசிரியர் மேற்கோளும், அன்னபிறவும் வலியுறுத்தாநிற்கும்.

நுவல் தரும் எம்மனோர் மறம் தப அறம் செய் மாண்பினை = (அக்குழந்தைக் கொப்பாகச்) சொல்லுகின்ற எம் போன்றார் செய்துவரும் பாவங்களெல்லாம் (எங்கள் முயற்சியின்றித் தாமாகவே) நீங்கும்வண்ணம் அறத்தினைச் செய்துவருகின்ற நற்குண நற்செய்கைகளை யுடையவனே;

அறிவு முதிராச் சிறுகுழந்தைக்கு நோயுற்றவிடத்துத் தாயானவள் அந்நோயைக் களைய வல்ல மருந்தை (அதின் சாரம் தன் முலைப்பால்வழிச் செல்லுமாறு) தானுகவே உண்டுவருதல் இயல்பு. மக்கட்பிறப்பினர்க்குப் பகுத்தறிவுண்மையின் அவர்தமக்கெல்லாம் இதுதீது இது நன்மை என்று பொதுவாகத் தோன்றப் பெறும். அவரெல்லாம் மலவசப்பட்டுத் தீவினைகளையே விழைந்து பலபடி செய்து வருகின்றனர். அத்தகையராகவும் அவர்தம்மையெல்லாம் வெறுத் தொதுக்காமல் கருணைகாட்டி ஆண்டுவருவர் என்க. அறிந்திருந்தும குற்றஞ்செய்வார் இவ்வுல கத்தார் என்பது போதர "நுவறரும்" என ஒருசொல் மிகுத்துக் கூறினர். பலரும் நுவறரும் மற மென்றுங் கூறுப. உலகத்தார் மறந்தப அறஞ்செய்வர் பெரியார் என்பது முன்னர் விளக் கப்பட்டது. உலகத்தவரெல்லாம் எவற்றையுந் தத்தம் பயன்கருதியே முயன்றுவருவர். பெரி யரோ பிறர்பொருட்டுத் தம்முடலைப் பெரிதும் வருத்திவருவராதலின் "எம்மனோர் மறந்தப வறஞ்செய்" என்றனர். இதனை நிஷ்காமிய தருமமென்ப. அத்தருமமே காமிய தருமத்தினும் சிறப்புடைத்தாகலின் "அறஞ்செய்வோய்" என்றொழியாது "அறஞ்செய் மாண்பினை" என்றனர். "மறந்தபவறஞ்செய்" என்னும் வைப்புமுறை காரணகாரியப் பொருட்டு. "எம்மனோர்" என்பது தம்பொருட்டல்லவென்பதனை விளக்கவந்தது. "மாண்பினை" என்றது நிஷ்காமியமாகச் செய்யப்படும் செயலையும் அச்செயலுடைப் பெரியோனையும் சிறப்பிக்கவந்தது;

காண் தகு சிறந்த ஒழுக்கஞ் செறிந்தனை = (நூல்களிலே கூறப்பட்ட ஒழுக்கங்கள் எல்லாவற்றையும் எல்லாரும்) காண்டலளவையானும் அறிந்து இருந்துமாறு சிறப்புற்ற ஒழுக்கம் நிறைந் திருக்கப்பெற்றவனே;

எத்தகைப் பெரியவர்க்கும் மேம்பாடு தருவது இஃதொன்றே என்பதூஉம் பிறவும் விளக்குதற்பொருட்டுக் "காண்டகு" என்றருமாம். காண்டகு ஒழுக்கம், சிறந்த ஒழுக்கம் என்க. செறிதலாவது உயிர், மனமுதலியவை, உடல் என்னு மிவற்றினுள் எல்லாம் பூரணம் பெற்றிருத்தல். "உடுக்கையிழந்தவன்கை" என்பதுகொண்டு இவ்வுண்மையை அறிந்துகொள்க. அன்றியும் இவ்வாறு கூறுவதூஉம் ஓர் அணியாம். இனி ஒவ்வொருவரிடத்திலும் ஒவ்வோர் ஒழுக்கமே தலைசிறந்துவருதல் பெரும் பான்மை வழக்கமாகவும், இவரிடத்தில் எல்லா ஒழுக்கங்களும் செறியப் பெற்றன என்பாருமுளர்;

சிறியேன் வறுமையானே=(அறிவாற்றல்களில் சிறுமையுடையேனாகிய) எளியேன் வறுமையுற்ற காரணத்தானே;

வறுமையை ஒரு பொருளாக மதியாமற் செம்மைகொடு வீற்றிருத்தலே ஒருவற்குப் பெருமையாதலின் அவ்வாற்றலில்லாமைபற்றி "எளியேன்" என்றார்.

வறுமையானது சீரைக்கெடுத்து அழுகினையொடுக்கி மேனியைவாட்டிச் சோம்பலையெழுப்பி உலோபததை மிகச்செய்து இல்லுள்ளும் கலாம்பல விளைத்து அவமானம் அவா முதலியவற்றைக் கொடுத்து மகிழ்ச்சியை எரித்துக் கெட்ட எண்ணங்களை உண்டாக்கித் துன்பத்துட்படுத்தி ஒழுக்கத்தை யோறுத்து எவரையும் பகைப்படுத்தி அன்பினைச் சுருக்கி ஆருயிரின் பெரும்பயனைக் கெடுக்குமென்ப. "குடிப்பிறப்பழிக்கும் விழுப்பங்கொல்லும்-பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ-நாணணிகளையு மாணெழில் சிதைக்கும்-பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்", "துனிச்சித ருடுத்தி-வயிறுகாய பெரும்பசி யலைத்தற் கிரங்கி-வெயிலென முனியாது புயலென மடியாது-புறங்கடை நின்று புன்கண் கூர்ந்து" என்பன மணிமேகலை; "நல்கூர்ந்தார்க்கில்லைச்சுற்றம்" என்பது சிந்தாமணி; "இலம்பாடு நாணுத்தருமென" என்பது ஆன்றோர் கூற்று.

அறிவு எலாம் மாழ்கி=அறிவுமுற்றும் மயங்கப்பெற்று;

"பொறிப்புணா ருடம்பிற் றோன்றியென் னறிவுகெட - நின்ற நல்கூர் மையே" என்பது பெருங்குன்றூர்க்கிழார் பாட்டு, "நீர்மையே யன்றி நிரம்ப வெழுந்ததங் - கூர்மையு மெல்லா மொருங்கிழப்பர்—கூர்மையின்-முல்லை யலைக்கு மெயிற்றாய் நிரப்பென்னு - மல்லல் லடையப் பட்டார்" என்பது நாலடி;

துறை அறிவு இலனாய் துன்பு உற்று ஒழிகுநன்=(அவ்வறுமையை நீக்குதற்கேற்ற ஒரு) வழியை அறிதல் இல்லாதவனாய்த் துயரம் பொருந்திக் கெடுகின்றேன்;

வறுமையும் ஒரு பெருங்கடலைப் பொருவுமென்பது போதரத் "துறை" என்றார். தான் செய்யவேண்டிய தொழில் பலவற்றுள் ஒன்றேனுஞ் செய்யப் பெறாமையுந் தோன்ற "ஒழிகுநன்" என்றார்;

ஒருநாள் போக்குமுன் உயிர் அலைக்கின்றேன்=(எனது குடும்பத்தைக் காப்பாற்றுந் தொழிலிலே) ஒரு நாளைச் செலுத்துவதற்கு முன்னே எனது உயிரை மிகவும் வருத்துகின்றேன்;

இதனு லீட்டுந் துன்பம் கூறப்பட்டது.

மனை குறை மாசு உடை நினைந்தே=எனது இல்லாளின் குறையும் அழுக்கும் படைத்த உடையின் றன்மையை நினைந்தோ;

கால நீடிப்பு, துய்ப்பு மிகுதி, உடுக்கப் போதாமை, அவமான வுண்மை முதலிய பலவுந் தோன்றக "குறை" என்றும், மாற்றுத்துணியும் பிறவு மில்லாமை தோன்ற "மாசு" என்றும் கூறினர். "மாசொடு குறைந்த வுடுக்கையன்" என்றார் மோசுகீரனாரும்.

அன்னோள் நெய்யற்று ஈரும் பேனும் நெருங்கி எய்வுற்று அழுக்குடன் இயைகுழல் நினைந்தே=அன்னவளின் நெய் பூசுதலிலாமையானே ஈரும் பேனும் அடர்ந்து அழுக்கொடு பொருந்தி யிருக்கும் கூந்தலின் நிலைமையை நினைந்தோ;

ரும் பேணு மிருந்திறை கோடற்கும் அழுக்கு மலிதற்கும் காரணம் செய்பவூச்சில்லாமை யென்க;

தனிசு கொள கடுகினர் தம் சொல் நினைந்தே = கடனைப் பெறும்பொருட்டு விரைந்து வந்தவர் (இடித்துரைத்துக் கேட்கும்) கொடுஞ் சொற்களை நினைந்தோ;

பலதரமும் வந்து வீட்டிற் காணுமையால் அவன் இருக்குஞ் சமையம் பார்த்துத் தம் வருகையை அவன் உணராத அத்துணை மந்தணமாக விரைந்துவந்தமை தோன்றக் "கடுகினர்" என்றார். இனித் தமது பொருள் வருங்கொல்லோ என்னு மையமேலீட்டால் அங்ஙனங்கடுகினர் என்றலுமாம். அவர் வெகுண்டு கூறிய இழிவுரைகளை வாயாற் சொல்லுதலுங் கூடாதென்பார் "நினைந்தே" என்று கூறினர். கைமாற்றுக்கடனுதலின் அங்ஙனமெல்லாம் இடித்துரைத்துக் கூறினர் என்க.

பசி தின வாடிய பைதல் குழவிகள் = (உணவுகிடைக்கப் பெறுமையினுனே ஒறுக்கும்) பசி வருத்த வாட்டமடைந்த துன்பத்தையுடைய குழந்தைகள்;

உண்ணுவிடில் இரத்தத்தைப் பசியுண்டொழிக்கு மென்பவாகலின் "பசிதின" என்றார். இக்குழந்தைகளின் அழுகையை குசேலோபாக்கியானம் முதலியவற்றுட் காண்க;

வாய் அரற்று என் துளை செவி வரல் நினைந்தே = வாயினுலே (தங்கள் குறைகளைக் கூறிக் கொண்டு) அழுகின்ற ஒலியானது எனது துளைபொருந்திய செவியினிடத்து வந்து வருத்துதலை நினைந்தோ;

மகிழ்ந்து கூறுதலே கிடையாது என்பதுதோன்ற அரற்றென்றொழியாது "வாயரற்று" என்றும், இனியமழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்தற்கில்லையே என்பார், "என்றுளைச்செவி" என்றும், அவர்தம் துன்பத்தை மாற்றற் கியலவில்லையே என்றுருகுகின்றான் என்பார் "வரனினைந்தே" என்றும் கூறினர். வாயரற்று வினைத்தொகையுமாம்;

பல் நூல் ஆயா பான்மையை நினைந்தே = பல நூல்களையும் (அவகாசமின்மையால்) ஆராய்ந்துபார்க்காத தன்மையை நினைந்தோ;

"பன்னூலாயா" என்றமையாற் சின்னூலாய்ந்தமைபெற்றாம். கல்விச் சுவையறிந்தவர் வறுமையுற்றிருந்த போழ்தினும் அவர்தம் உள்ளத்து நிலைமை இதுவாகுமென்று ஈண்டுக்கூறப் பட்டது.

என் உறு துயரின் ஏற்றம் நனி நினைந்தே = எனக்கு உண்டாகும் துக்கத்தின் அதிகரிப்பை மிகவும் நினைந்தோ;

உருகுவென் கண்டாய் = நெஞ்சமுருகுவேன்;

கண்டாய்—முன்னிலையசை.

ஒன்று அல பலவே = (யான்படும்பாடு) ஒன்றன்று பலவேயாகும்;

முன்னர்ப் பலபடியான துன்பங்களை எடுத்துக்கூறினவன் "இவ்வளவோ இன்னும் பலவுள" என்று கூறாமல் "ஒன்றல" என்றது சிறப்பிலதெனின் அற்றன்று, என்னை? மேற்கூறிய ஒவ்வொன்றினுள்ளும் பலப்பல துன்பங்களும் உண்டென்பது பயத்தலின் என்க. மேலே ஒவ்வொன்றாகக் கூறியவற்றிற்கு உள்ளவகைகளை ஏற்ப விரித்துக்கொள்க.

ஒரு மறம் அறியேன் = ஒரு பாவத்தையுஞ் செய்தறியேன்;

மனத்தானும் ஒருபாவத்தையும் கருதாதவன் என்பது தோன்ற "ஒரு மறமறியேன்" என்றார்;

"இம்மைச் செய்தன யானறிநல்வினை—யும்மைப்பயன் கொலொருதனி யுழந்தித்—திருத் தகுமாமணிக் கொழுந்துடன் போந்தது" என்பது கோவலன் கூற்று, "அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்—கேடு நினைக்கப்படும்" என்பது குறள். இவற்றை ஏற்ப விரித்துக் கொள்க.

ஓவாது இறைவன் திருவடி அறிவேன் = நீக்கமில்லாது (ஓய்வில்லாது) இறைவன்றன் மேலான செல்வத்தைத் தருகின்ற அடித்துணையையே அறிவேன்;

என்றது சதாகாலமும் தியானித்தலை. ஓவாது என்றமையால் ஓவுதலும் பெற்றாம். அவ் ஓவுதலை அடிக்கொருமுறை நீக்கிவருகின்றான் என்றற்கன்றே ஓவாது என்று கூறப்பட்டது. இனி நோவாது எனக்கண்ணழித்து மேற்கூறியவற்றால் மன நோவப் பெறாது இறைவனடியை யுள்ளிவருகின்றேன் எனப்பொருள் கொடின் அவ்வுரை மேற்கூறிய கூற்றுக்களோடு முரணுமென விடுக்க. "தாதிமன நீர்க்குடத்தே தான்" என்பது போலக் கடவுட் பத்தியினழுவாதிருந்து வந்தனன் என்க. இதனான் மனத்தூய்மை கூறப்பட்டது.

இறைவனடித்தாட் கென்றும் பத்திமை குறைவின்றிக் கொடுவரு மாதணன் வறுமை நிறையொடு நலிதரு நேர்மைகண்டம்மை பிறைமுடிப்பிரானைப் பெரியோயியற்குச் சிறுபொருளேனும் திருவுளங்கொடு கொடுத்துறு துயர்களைதலும்முறையன்றோவெனும் கூற்றிற் கிணங்கிய கோனு மருள் கொடு மாற்றுயர் பொன் பல மதிலகத்து வலம் வரூஉம் அந்தணன் முன்பு பரப்பிவைத்தனனே வலம் வரூஉம் அந்தணனண்டு வருமுழ்நி மூடுகண்ணோடு முன்னி நடித் தவ்வழி யோடியகன்றன னென்பவாகலின இப்பிறவியிலே நாம் நன்மை புரிந்து வரினும் முற்பிறப்பிற் செய்த பாவத்திற் கேற்ற பயனே நுகர்தற்கமைந்து வருமென்க.

செய்பு தேர் கில்லேன் = (இம் மிடியைப் போக்குதற்குரிய) செயல் யாதொன்றுமறிகிலேன்;

நீயே அதனைச் சொல்லி என்னை ஆட்கோடல் வேண்டுமென்பது குறிப்பு.

காத்து அருள்க என்ற என் பார்த்து அருள் பெரியோன் = (எனது மிடியைக் களைந்து) காப்பாற்றி அருள்க என்று குறையிரந்த என்னைத் திருநோக்கருளிய பெருமையுடையோன்;

[பிறைஞான்று வருதி பெருமான்றனை வினாஅயிற்றென விற்கு நன்கியம்புவ லென்றனன்] பெருமான் த(ன்)னை வினாஅய் இற்று என விற்கு நன்கு பிறைஞான்று இயம்புவல் வருதி என்றனன் = நமது பெருமை வாய்ந்த இறைவனை (நற்குண நற்செய்கைகளையுடைய நினக்கு இவ்வகைத்தாகிய துன்பங்கள் வருதற்குக் காரணமென்னவென்று) வினவி (அவ்வினாவுக்கு அவன் கூறும் விடையை) இதுவென்று நினக்கு ஏற்குமாறு நன்றாக அடுத்தநாளைக்குரைப்பேன்) நீ நின் இல்லத்திற்குச் சென்று) வருவாயாக என்றனன்;

[நற்றுறை பெற்றோ னென்ன வடியேனுஞ் சென்றனன்] அடியேனும் நல்துறை பெற்றோன் என்ன சென்றனன் = அப்பெரியோனுக்கு அடிமைத்தொழில் பூண்ட யானும் (காற்று மழை இருள் முதலியவற்றால் கலம் கலக்கப்பட்டவன் இறங்குதற்கேற்ற ஒரு) நல்ல துறையைக் கண்டாற்போல (மகிழ்ந்து எனது இல்லத்திற்குச் சென்றேனாகி;

இராவினை அரிதில் செலுத்தி = இராப்பொழுதினை மிக்க அரிதாகக் கழித்து;

"மன்றலந்தோளான் வாய்ப்பிறப்பைக் கேட்டுவப்ப—என்று விடியுங் கொலிவ் விரவு" என்றாற் போலப் பெரியோனருளிச் செய்யும் விடை கேட்பானுற்ற வேட்கையானது மீதூர்தலின் "இரவினை அரிதில்" என்றும், அவ்விரவு நீடித்திருந்ததேயன்றித் தானாகப் போகவில்லை என்பது தோன்றச் "செலுத்தி" என்றும் கூறினார். இவ்வுண்மையை மெய்ப்பாட்டியலானும் அனுபவத்தாலும் கண்டு கொள்க.

அ நன்றி தரும் பெரியோன் தன் அடி நணுகுபு = இதுகாறும் இதுதான்றுறை யென்று எவருங் கூறாத அதனை நாளைக்குத் தாம் கூறுவதாகச் சொல்லியனுப்பிய) அந்த நன்மையைத் தருகின்ற பெரியோனுடைய திருவடிகளை அடைந்து;

பெரியோனது பெருமையும் தனது சிறுமையும் தோன்றப் பெரியோனை நணுகுப என்னுது "பெரியோன் றன்னடி நணுகுப" என்றார். பெரியோனுடைய தகைமைக்குரித்தாகிய அடியென்றும் பொருள்பண்ணலாம்.

ஒன்றிய உரையொடு உள்குபு வணங்கி=பொருந்திய துதியோடு மனத்தானினைந்து வணங்கி;

உள்ளியது வேறன்று உரைக்கப்பட்ட அதுவே என்று தோன்ற "ஒன்றிய உரையோடுள்குபு" என்றார். உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று கூறிலன் என்றபடி; உரையே முதற்கண் பிறர்க்குப் புலப்பட அவ்வழியானே உள்ளத்தையும் பிறவற்றையும் அறிதல் கூடுமாதலின் அங்ஙனங் கூறினுரென்பாருமுளர்.

வாய் கை பொத்தி=(அவ்வாறு வணங்கிய யான் எனது) வாயைக் கையினுல் மூடி;

வாளா இருக்கும் என்=சும்மா இருக்கின்ற என்னை;

அப்பெரியோன் கூறப்போகின்ற விடையை எதிர்நோக்கிக்கொண்டே இந்த மனமானது சிறிது அடங்கியிருந்தது என்க.

[தாய்நிகரன்பொடு தன்னிகரில்லோன்] தன் நிகர் இல்லோன் தாய் நிகர் அன்பொடு=தனக்கு ஒப்பாரில்லாத அப்பெரியோன் தாயை ஒத்த அன்புடனே;

"பெற்றதாயினுமாயின செய்யும்" என்பவாகலின் "தாய்நிகரன்பொடு" என்றார். இவ்வன்பு அருள்காரணமாகப் பிறந்தமை காண்க. அன்பே அருளைப் பிறப்பிக்கும் பின்னர் அவ்வருளும அன்பினைத் தோற்றுவிக்கும். பேரன் என்னும் உலகவழக்கம் இக்கருத்துப்பற்றியதே என்ப.

ஐய=(என்னை) அப்பனே என்று விளித்து;

நிற்கு அமை பொருள் அறையில சிறிதே=நினக்கு (முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனுலே) அமைந்து சேரற்பாலதாகிய பொருள் (இவ்வளவிற்றென்று கூறவேண்டில் மிகச்) சிறுமையளவுடைத்தாகும்;

அறிவுடையோன் கைப்பட்ட சிறுபொருளும் மிகப்பெரும்பொருளாகும் என்பது குறிப்பு. "அறையின்" என்றது அதனை வலியுறுத்திநிற்று. சிறுபொருள் என்று கூறக்கேட்கின் அவன் வருந்துவன்கொல்லோ என்று கருதி "அறையின்" என்றார் என்றுங் கூறுப. இக்குறிப்பை வெளிப்படையாகக்காட்டி முதறகூறிய எண்ணத்தைப் புலப்படுத்தினுன் எனின் முற்கூறிய உரைக்குப் பொருந்துதலின் அவ்வுரை சிறப்புடைத்தென்க.

[வாணுளோ] வாழ் நாள் ஓ நீட்சித்து=உனது ஆயுளோ நீண்டிருக்கின்றது;

ஆதலின்=அது காரணத்தானே;

மன்பதை உயிர்க்குயிர் ஆய மாட்சியன்=மக்கட்பரப்பினர்தம் உயிர்க்குயிராய மாட்சிமையுடைய இறைவன்;

மன்பதை என்றாரேனும் எல்லாச் சீவராசிகளையும் கொள்க. மற்றையவுயிர்களினும் இருக்கின்றான் எனினும் அவற்றிற்கெல்லாம் மனமென்னும் அறிவு இல்லையாதலின் அவ்வறிவுடைய மன்பதையுயிர்மாட்டு மாட்சிமைகொண்டு வீற்றிருக்கின்றான் என்க. ஒவ்வொருவகைப் பொருள்களினும் உயர்ச்சிவாய்ந்தவற்றுள்ளே இறைவனது சைதன்யம் உண்டென்பதை ஸ்ரீருத்திரம் கீதை முதலியன நன்கு புலப்படுத்தாநிற்கும்.

அன்னணம் அளித்தனன் என்றனைந்திசினேன்=(நீ கூறிய) அவ்வகையாகக் காப்பாற்றி வருகின்றான் என்று கூறினேன்;

சிறு பொருளை உயிர்வாழ்தற்குரிமையாக்கி நீண்டகாலத்திற்கேற்பப் பகுத்துதவி வருகின்றான், இறைவன் என்க. அளித்தல் கொடுத்தற்கும் போற்றுவதற்கும் பொருத்தப்படுதலும்

கூடும். முற்பவத்திற்செய்த நல்வினைக்குரிய பயனை எல்லாம் ஆயுட்காலத்திலே ஒரு சிறிது காலத்துட்டுய்ப்பவர் பிந்திவருகாலமெல்லாம் ஏதர்களாகி யுழல்வர் என்பது மறைபொதியுண்மை.

எனல் செவி ஏற்றனென் = என்று அப்பெரியோன் கூறியதைச் செவியினிடமாக ஏற்றுக் கொண்டேன்; (கொண்ட யான்;)

“என்றனனென்றலும்” என்பர் கம்ப நாடரும்.

எந்தாய் = எந்தையே;

[எற்கமை யனைத்துப் பொருளையுமருள்செய்தக்கால்] அமை அனைத்து பொருளையும் எற்கு அருள் செய்தக்கால் = (எனது முற்பிறப்பின் நல்வினைப்படியே) அமைந்துள்ள சிறு பொருள் முழுவதையும் (ஒருங்கே) எனக்குத் தந்துவிட்டால்;

ஒரு நாள மகிழ் கொடு கழிப்பி செல்குவல் = ஒருநாளையாவது சந்தோஷத்துடன் செலுத்தி உயிரை விடுவேன்;

வருத்தமுற்றுப் பலநாள் வாழ்தலினும் மகிழ்ச்சியோ டொருநாளைக்கிருந்து இறத்தல் நன்றென்றனன் என்க.

[பெரும நன்றதுவே] பெரும அது நன்று = பெருமானே அவ்வாறு அருளிச் செய்வதுவே நல்லதொருகாரியமாகும்;

பேணி அருள்க என்றேன் = விருப்பங்கொண்டு (யான் கூறியபடி) அருளிச்செய்வாயாக என்று கூறினேன்;

இதனையும் இறை அடிக்கு இயம்புவல் செல்கென = நீ கூறிய இம்மாற்றத்தையும் இறைவன் திருவடித்துணைக்கு விண்ணப்பஞ் செய்வேன் (நீ நினது இல்லத்திற்குச்) சென்று (நாளைக்கு இங்கே வருவாயாக) என்று அப்பெரியோன் கூற;

[சென்று நெருநலிற் சேர்படி தொழுதேன்] நெருநலில் சென்று அடி சேர்பு தொழுதேன் = நேற்றைத் தினத்தைப்போலச் சென்றணுகி அப்பெரியோனது திருவடியைப் பொருந்தி வணங்கினேன்.

இராவினை அரிதிற் கழித்து என்றற்றொடக்கத்தனவற்றை அடக்குவதற்கு நெருநலில் என்றார். இல் ஒப்புக்குறித்து நின்றது. செல்லுதலே முக்கியமாயிருத்தலின் இராவினைக் கழித்தற்கும் பிறவற்றிற்கும் பெரிதும் வருந்தினன் என்பது தோன்ற நெருநலிற் சென்று என்னாது “சென்று நெருநலில்” என்றும், பழக்கமிகுதியானும் பயன் மிகுதியானும் நெருநலினும் பத்திமிகுதி கொண்டான் எனபார் “சேர்படி” என்றுங் கூறினார். அடிசேர்தல இன்றைக்கும் ஒக்குமாயினும் ஒன்றியதன்மை நேற்றையினும் அதிகப்பட்டமை தோன்ற அடிசேர் என்னாது சேர்படி என்றார். இதனை வலியுறுத்த “தொழுத வெளியனை” என்று பின்னரும் வழிமொழிவர்.

தொழுத எளியனை துணைநோக்கு அருளி = அவ்வாறு வணங்கிய எளிமைத்தன்மையுடைய என்னை இரண்டு விழிகளானும் (கருணைகூர்ந்து) பார்த்தருளி;

எழுக என எழுப்பி = எழுக என்று எழுப்பி;

எளிமைத்தன்மை தொழுதலினானே பெறப்பட்டமையின் “தொழுத வெளியனை” என்றும், எழுக என்றது அவன் செவிக்கு உணர்ச்சியுண்டாக்கவில்லை என்பதுபற்றி “எழுகென வெழுப்பி” என்றும் கூறினார். துணை நோக்கு என்பது அவன்றன் எளிமை நீங்குவதற்குத் துணையாகி நின்ற நோக்கமுமாம். வெளியன் எனப் பிரித்து அகத்துட் செல்லற்கு உரிமையில்லாத என்னை என்றும் கூறுப. இவ்வாறே இரு பொருள் படுமாறு “வணங்கவெளிவந்தவிது” எனக் கம்பநாடரும் கூறுவர்.

இன் அமுது தெளீஇ = இனிய அமுது போன்ற வார்த்தைகளைக் கூறி;

அவனுக்கு உணர்ச்சியையும் காரிய பலத்தையும் அன்ன பிறவற்றையும் தருதலின் "இன்னமுது" என்று கூறினர்.

நூறு பத்து அடுக்கிய எற்றம் மிகும் பொன் அளித்து = நூற்றைப் பத்தாக அடுக்கிய தலைசிறந்த பொன் நாணயங்களை எனக்குத் தந்தருளி;

"நூற்றுப்பத்து" என்றது ஆயிரத்தை. "நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து" என்பது பாட்டு. பொன் நாணயங்களிலே பலவகை இருத்தலின் "எற்றமிகும் பொன்" என்று பிரித்துக் காட்டினர். எற்றமிகும் பொன் நூற்றுப்பத்து எனினும் நூற்றுப்பத்து எற்றமிகும் பொன் என்பதற்கு ஆயிரமாற்றுப் பொன்னெனப் பொருள்கொள்ளினும் இவ்வளவளிக்கப்பெற்றன என்று தெரிதற்கிடமின்மையின் அவையெல்லாம் போலியுரை யாகுமென்க.

எகு என விடுத்தான் = செல்வாயாக என்று என்னை அனுப்பினன்;

அப் பெரியோன் தனது வறுமையை நீக்கியதையும் அவன்றன் கருணைப் பெருக்கினையும் நினைந்துருகி ஒன்றுஞ் செய்யா திருந்தமை தோன்ற "ஏகென விடுத்தான்" என்றார்.

எகிய யானும் = (செல்கென அப்பெரியோன் பணித்தவாறே எனது இல்லத்திற்குச்) சென்ற யானும்;

அப்பெரியோனைப் பிரிதற்கு மனமில்லாதிருந்தமை தோன்றப் பின்னரும் "எகிய யானும்" என்றார். இனி வேற்றுத் தொழிலைக் காட்டுதற்குச் செல்லுதலுமாம்.

பெரியோர் வம்மின் = (செயற்கரிய இயம நியமங்களாதிய எண்வகை யோக வுறுப்புக்களைச் செய்து கைவரப்பெற்றமையானே பெருமை எய்திய) துறவிகளே வருவீர்களாக;

"செயற்கரிய செய்வர் பெரியோர்" என்பது குறள். ஈண்டும் பெருமை என்பது பகுதி யாக நின்றமை கண்டுகொள்க "உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி—யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனும்—தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்—க்கால்—வான்சிறிதாய்ப் போர்த்து விடும்" என்பது நாலடி; பார்த்தெதிர்—வியந்தவர் வெருகலொளா விசும்பி னேங்கின—னுயர்ந் தவர்க்குக விய யுதவி யொப்பவே" என்பதிராமாவதாரம்; தெள்ளிய வாலின் சிறுபழத் தொரு விதை—தெண்ணீர்க்கயத்துச் ..............நிழலா கும்மே" என்பது நறுந்தொகை. "இனைத் துணைத் தென்ப தொன்றில்லை விருந்தின்—றுணைத்துணை வேள்விப் பயன்" என்பது குறள். இவற்றையெல்லாம் கருதிப் "பெரியோர் வம்மின்" என முதற்கண் கூறப்பட்டது.

பீடுதமிழ் ஆய்தற்கு உரியோர் வம்மின் = பெருமை பொருந்திய தமிழ்ப்பனுவல்களை ஆராய்ச்சி செய்தற் குரிமையுடையோராகிய புலவர்களே வருவீர்களாக;

ஞானத்தைப் பெறுதற்குக் காரணமாகி நிற்கும் அறிவு கல்வியினாற் சிறக்க எய்தப் பெறு தலின், அக் கலவியுடைப் புலவரைப் பெரியோர்க்கடுப்பக் கூறினர். பிற மொழிகளைப் பிறர் எல்லாம் கண்ணை இமைகாத்தல போலக் காத்து வரவும் தமிழ் மொழியோ ஒருவரானும் ஒரு வாற்றானும் உதவிபுரியப்படாதிருந்தும் பிறமொழிகளுக் கெல்லாம் தலைசிறந்து அழியாச் சிறப் புற்றுக் கன்னித் தமிழ் எனப் பலரும் புகழ்தற் கேதுவாய் நிற்றலின் "பீடுதமிழ்" எனப்பட்டது. இச் செயல் நிகழ்ந்தது தமிழ்நாடென்பதூஉம், இது பிற நாட்டிற்கு வாய்ந்தில தென்பதூஉம் அறிவித்தற்குப் "பீடுதமிழ்" என்று கூறினர் என்பாருமுளர். ஆயின் பீடுதமிழ்ப் பெரியோர் என வேண்டாவோ வெனில் வேண்டா. என்னை? அவர் பாஷாபாசத்தினையும் விலக்கியவ ராதலின் என்க. இதனைக் "கல்வியென்னு மல்லலிற் பிழைத்தும்" என்னும் சான்றோர் வாக்கு வலியுறுத்தல் காண்க.

ஊழ் பசி உழந்த வறியோர் வம்மின் = முரணுற்ற பசியானது வருத்துதலினானே வறுமை யுற்றவர்களே வருவீர்களாக;

செல்வர் தமக்குப் போதிய பசி உண்டாக்கவில்லையே என்று அதனை வளர்க்க விரும்புவர் என்பதும், வறிஞரோ அதனை நனி வெறுப்பர் என்பதும் போதர "ஊழ்பசி" என்றும், அப்பசி

யான் உறுவிக்கப்பட்ட வறுமை என்பார் "உறுத்தவறியோர்" என்றுங் கூறினார். உள்ள பொருளெல்லாம் நட்டத்திற்கு விற்றுத் தொலைத்தல் பசி காரணமாதலின் "வாழ்பசி யுறுத்த வறியோர்" எனப்பட்டது. உறுத்தலுக்குள்ள பொருள்களாகிய உண்டாக்கல், உறுவித்தல், எற்படுத்தல், ஒற்றுதல், சேர்த்தல், தாக்கல், நாட்டல், நினைப்பித்தல், பயத்தல், வருத்தல் என்றற் றொடக்கத்தனவற்றை ஏண்டேற்குமாறு புணர்த்தினமை ஆராயற்பாற்றே. இனி வாழ் நீயூழுமாம்.

வம்மின் என கூஉய்=வருவீர்கள் என்று கூப்பிட்டு;

தனித்தனியே ஒருதரம் அழைக்கப்பட்ட மேற்கூறிய வகையினரைப் பொதுப்படப் பின்னுமொருமுறை ஈண்டு விளித்தமையால் இவ்விரு முறை அழைத்தனனாயிற்று. அடுக்குக் குறிப்பித்த வழியாக அவனது வேட்கையையும் மரணத்தின் சமீபத்தையும் உணர்த்தினாராயிற்று. இவனை நம்பி ஒருவரும் வாராமைகருதி வெறுக்காமல் அழைத்தனன் என்பதை யுணர்த்தற்குக் "கூஉய்" என்றளபெடுத்தது.

எல்லார்தம்மையும் இனிதின் அருத்தி=வந்த எல்லார் தங்களையும் இனிதாக உண்ணும்படி உபசரித்து உண்பித்து;

இனிதின் அருத்தல் என்றது இனிய முகனாய் இனியன கூறி இன்சுவை உணவினை எற்குமாறு அவர்களையெல்லாம் உண்பித்ததை. "வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி-மிச்சின் மிசைவான் புலம்" என்பவாகலின் அவரை உண்பித்தான் என்க.

நல்லாள் தன்னொடு சேயரொடு=நன்மையமைந்தவளாகிய என் மனைவியோடும் குழந்தைகளோடும்,

இவவரிசை காரண காரியப்பொருட்டு. "நல்லாடன்னொடு" என்றமைக் கேற்ப நற்சேயர் தம்மொடும எனக் கூட்டிப் பொருளுரைத்துக்கொள்க. "தக்கார் தகவில ரென்ப தவரவ-ரெச்சத்தாற் காணப்படும்" ஆதலின் என்க.

[நன் மகிழ் தலைத்தலை சிறப்ப] தலைத்தலை நல் மகிழ் சிறப்ப=ஒவ்வொருவரிடத்தும் நல்ல மகிழ்ச்சி சிறந்து விளங்க;

தன் மரணத்தையும் மறந்து விட்டான், பிறர்க்கும் இம்மறையைக் கூறிலன் என்பது குறிப்பு. இப்பொருள் எவ்வாறு கிடைத்ததென்று மனைவி வினாவியதாகக் கூறப்படாமையின் அவளது கற்பு மேம்பாட்டையும் கூறினாராயிற்று.

எம் இல் இருந்து ஆங்கு அசடு குறைவு அகற்றிய பின்னர்=எம்முடைய இல்லத்தின் கண்ணே யிருந்து வயிற்றுக்குறைவுபாட்டை நீக்கிய பின்னர்;

எல்லாரும் ஒருங்கே வீட்டிலிருந்து உண்டற்கு இதுகாறும் சமயம் வாய்க்கவில்லை என்பதுஉம் குறிப்பு. "எம்மில்" என்றதனால் மனைவி மக்களையும் ஒருப்படுத்தி அவர்களுக்கும் அது பங்குடைத்தெனக் காட்டினான்.

என் மனையை பேணுபு நோக்கி=எனது மனைவியை விருப்பத்தோடு பார்த்து;

[இன்றொடென் வாழ்வு நிறைவே றிற்றென் றாய்தொடி நல்லா யென்னுமுன்] என் ஆய்தொடி நல்லாய் என் வாழ்வு இன்றொடு நிறைவேறிற்று என்னுமுன்=எனது ஆராய்ந்த வளையல்களை அணிந்த நன்மையமைந்தவளே என்னுடைய உயிர் வாழ்க்கை இன்றையோடு முற்றுப்பெற்றது என்று கூறிய அவ்வளவிலே;

தனக்குரிமை யுண்டென்பது தோன்ற "என்" என்றும், பாணிக்கிரகணஞ்செய்தமை தோன்ற "ஆய் தொடி" என்றும், அழகும் குணமும் நிறைந்து நிலைபெற்றமை தோன்ற "நல்லாய்" என்றுங் கூறினார்.

இருவேம் கண்ணீர் மறைத்தலின்=இருவருமாகிய எங்கள் கண்களினின்றும் துன்பத்தால்வந்த நீரானது கண்ணொளியை மறைத்த காரணத்தானே;

ஒருவர்க்கொருவரை காணேம் ஆயினம்=ஒருவர் தமக்கு மற்றொருவரைக் காணற்கியலாது போயினேம்;

என்றது கண்ணீர் மறைத்தபொழுது இருவரும் துன்ப மிகுதியால் முகந் திருப்பினர் அன்றேல் வெவ்வேறிடஞ் சென்றனர் என்றவாறு.

காட்சி சிறார் தமை=அழகும் அறிவும் சான்ற சிறுவர் தங்களை;

உச்சி மோப்பு உணர்ந்து=உச்சியை மோந்து (அதனால் நிகழப்பெறும் இன்பத்தை) அறிந்து;

குழந்தைகளைக் கண்டவுடனே எல்லாத் துன்பங்களும் பெற்றார்க்கு நீங்குதல் இயல்பாயிருந்தும் இவன் படும் துன்பமோ இதனானும் நீங்கப்பெறாத அத்துணைக் கொடுமை வாய்ந்தது என்று குறிப்பித்தார் என்க.

உள்ளம் குளிர்ப்ப முத்தம் இட்டு=மனங்குளிரும்படி (அக்குழந்தைகளை) முத்தமிட்டு;

[ஒருவி யூழ் முறை யெனத் தெளிந்து] ஊழ் முறை என தெளிந்து ஒருவி=பழைய ஊழின் முறைமை இது என அறிந்த காரணத்தானே (அச் சிறார்களை) நீக்கி;

ஊழ் முறை எனத் தெளிதல் அகத்திலாதலின் "ஒருவி" என முற்கூறப்பட்டது. முத்தத்தாலுண்டாகும் மகிழ்ச்சியைப் பிறந்தநாண்முதலாகக் கண்டறியாச் சிறார்க்கு இன்பந் தலைசிறத்தலின் அவர்கள் இவனிடம் மேன்மேலும் இனிமையுற வரவும் அவ்வருகையை ஊழ் முறை என ஒதுக்கினான் என்பது தோன்ற "ஒருவி" என்றும், ஒருவுதலுக்கும் தெளிதலுக்கும் காரணமாக இருப்பது ஊழ் முறை என்று தெளிதலேயாதலின் அவற்றினிடையிலே கூறப்பட்டது.

[நாளைக் கிறைவ னற்றிரு வடிநிழ லென்னுறு துணையென் றெண்ணி] இறைவன் திரு அடி நிழல் நாளைக்கு என் உறு துணை என்று எண்ணி=இறைவனது நன்மை அமைந்த திருவடி நிழலே நாளைக்கு எனக்கு உற்ற துணையாகுமென்று கருதி;

தனக்கு உறுதி பயக்குந்தினம் நாளைக்கென்பது அவன் மனசிற் கிடத்தலின் "நாளைக்கு" என்றும், அவ் விறுதிக்குத் துணையாயிருப்பவன் இறைவனாதலின் "இறைவன்" என்றும், அவ் விறைவன் திருவடியே தனக்கு ஒப்பற்ற நன்மை செய்தலின் "நல்" என்றும், அந்நன்மைதரும் செல்வம், பிற செல்வங்களாற் பெறப்படும் நன்மை போலாது அழியாவின்பத்தைத் தருவதொன்றாகலின் "திரு" என்றும், அது திருவடியிடத்ததாகலின் "அடி" என்றும், அவ்வடியே உலக வெப்பத்திலுழன்று வெதும்பினார் தமக்கெல்லாம் தண்ணிய நிழலைத் தந்தாளுதலின் "நிழல்" என்றும், அது தனக்கு உற்றதுணையாதலின் "என்னுறு துணை" என்றும், இவ்வாறு கருதுதலே பெரிய ஞானமாகுமாதலின் "என்று" எனுஞ் சொற்றனைக் கூறினார்.

ஆங்கு எவற்றையும் பொருள் செய்கிலனாய்=அவ்விடத்திலேயுள்ள எவற்றையும் ஒரு பொருளென மதித்தலைச் செய்யேனாகி;

எவற்றையும் என்பது கல்வி, செல்வம், முதலிய பலவற்றையும் அடக்கும்.

[பொருவி லோனடி தெருள் கொள வுளத்திற். சேர்த்திருந்தேனே] உளத்தில் தெருள் கொள பொருவு இ(ல்)லோன் அடி சேர்த்து இருந்தேன்=எனது உள்ளத்தின்கண்ணே தெளிவு உண்டாக ஒப்பில்லாத இறைவனது திருவடியைப் பொருத்தி வைத்திருந்தேனே;

உலக மாயை அடிக்கடி யச்சுறுத்துதலின் அவற்றையெல்லாம் அவ்வப் பொழுதே நீக்கிக் கொண்டு இறைவனடித்துணை ஒன்றனையே சேர்த்து வைத்திருந்தேன் என்றனன். பொருள் கோளுக்குள்ள முறைமை வெளிப்படையாக இருத்தலின் விரித்திலம்.

காலையும் வந்தன்று=மறுநாட் காலையும் வந்தது;

சூரியனாலே அக்காலை வரப்பெறுதலின் "வந்தன்று" என்றும், தன்னால் இனி அறிய முடியாதென்றிருந்த காலையாதலின் "காலையும்" என்றுங் கூறினார்.

உயிர் செல காண்கிலென் = என் உயிரானது உடலைவிட்டு நீங்குதலைக் காணேனாகி;

உயிர்த்திருக்குமையின் அங்ஙனங் கூறினான் என்க.

துயில் எழாது நோக்குழி = படுக்கையினின்றுமெழுந்து பார்த்தபொழுது;

இவன் துயின்றனனாகப் பிறர் நினைப்பார் என்னும் இயல்பு கருதித் "துயிலெழுந்து" என்றார். இவன் துயிலவில்லை என்பதற்கும் "பொருவிலோனடி தெருள்கொளா வுளத்திற் சேர்த்திருந்தேனே" என்பது போதிய சான்றாம். "துயில்" ஆகுபெயராய்ப் படுக்கையை உணர்த்தி நின்றது.

முன்னாள் தொலைச்சிய பொன்னும் காண்குபு புதுமை பெறீஇ = முதல் நாளிலே செல விடப்பட்ட பொன்னையும் கண்டு வியப்புற்று;

உயிரும் போகவில்லை பொருளும் அழியவில்லை எனவரும் வியப்பு மீட்சி தோன்றப் "பெறீஇ" என்றளபெடுத்தது.

என் உயிர் அன்ன இனியோர்க்கு இயம்பினென் = எனது உயிரை யொத்த இனிமையை யுடைய அப்பெரியோர்க்கு (ச்சென்று ஆயவாற்றை) ச்சொன்னேனாக;

அருமையும் இனிமையும் ஆதரிப்பும் என்ற பதமும் அன்னபிறவும் தோன்றப் பெரி யோனை இங்ஙனம் கூறினான் என்க.

அன்னோன் ஒன்றும் அறைகிலனாகி = நிகழ்ந்த செய்தியைக்கேட்ட அப்பெரியோன் விடை ஒன்றுங் கூறாதவனாகி,

ஆழ்ந்த பெரறிவு மாராயச்சியு முடைபோனாதலின் விரைந்து விடையிறுத்திலனென்க.

[என்னைப் பின்னாட் காலைவாற் கேவினன] பின்னாள் காலை வாற்கு என்னை ஏவினன் = அடுத்தநாட் காலையிலே யென்னைவந்து காணுமாறு பணித்தனன்;

[யானுஞ் சென்றங் கவனடி மீடா] யானும் ஆங்கு சென்று அவன் அடி மீள் தர = எளி யேனும் இல்லத்திற்குச் சென்று பின்னர் அப்பெரியோன் திருவடியிலே மீண்டும் வந்து பொருந்த;

வீட்டிலே இராவினைக் கழிக்க வருந்திய செயலை "ஆங்கு" என்பது உணர்த்திற்று.

சென்றங்கு—முன்னர்ச் சென்றாற்போல என்பாருமுளர்.

[என்னை மன் பெரியோ னினிதின் முகநோக்கி] பெரியோன் மன் இனிதின் என்னை முகம் நோக்கி = அப்பெரியோன் மிக்க இனிமையுடன் எளியேனைப் பார்த்து;

நன்னர் செய்தநலன் பெறுநனாதலின் "என்னைமன் பெரியோ னினிதின்முக நோக்கி" என்றார்.

பிறவற்றையும் ஏற்ற பெற்றி விரித்துரைத்துக்கொள்க. மேலனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

[நெருநலினீயே நின்னுறு பொருளை பொருங்குண் கலையே] நெருநல் நின்னுறு பொருளை ஒருங்கு நீயே உணகலை = நேற்றைத்தினம் நினக்குற்றதென்று கொடுக்கப்பட்ட பொருளை முற்றி லும் நீயே உண்டாயல்

பலரும் உண்டாரென்க.

உவன் தொழில் ஆற்றிவரும் கடன் பூண்டனை = இறைவனது தொழிலாகிய உலகக் காப்பைச் செய்துவரும கடமையை விரதமாகப் பூண்டுகொண்டாய்;

ஆற்றிவருங்கடமை என்றார், மேன்மேலும் அவ்வாறே செய்யும்படி வலியுறுத்தற் கென்க.

நீ அழித்ததூஉம் நின் பொறுப்பு ஆகாது என்றனன் = (நேற்றைத் தினத்திலே) செல வழித்த பொருளும் நின்னுடைய பொறுப்பாகமாட்டாது என்று கூறி என்னை அனுப்பினான்

இறைவன்றொழிலாற்றினமையின் அங்ஙனங் கூறினானென்க.

யானும் றென்னல் போல நிகழ்த்தி=யானும் நேற்றுச் செய்ததுபோலவே செய்து;

பலரையும் நன்கு அருத்திவருதலை நண்ணினேன்=பல்லோரையும் நன்றாக உண்பித்து வருந்தொழிலிலே பொருந்தினேன்;

ஒன்றிய அறம் செய் உணர்வு உடையோரே=பொருந்திய தருமத்தைச் செய்தலிலே உணர்ச்சியுடைய பெரியோரே;

உணர்வுடையோரே—நண்ணினேன் எனக.

---

(4) ஆவிற் களித்த சிறுநெல் பெருகிய
வாறது காட்டி மாயனைக் கிழத்தியொ
டுரையாடு மரபி னறன்வலி யுறுத்தல்.

இற்கை றப் பகற்கே யியலா நெல்லைக்
குற்றிபுண வாக்கற்குக் கூடுவெயி லுணங்குவான்
புற்பாய்ப் பரப்பிய போந்தது வேயென்
கற்புக்கடன் பூண்ட பொற்புடைத் தெய்வம்
யானே,
அதன்பாங்கு தூய்தா வமைமட் டெற்றிமிசை
யிருந்துபன் னூலாய்ந் தினித்தனெ னவ்வழி
வருந்துபசிக காரன் வந்துவிம்மரந் தகனைத்
தன்வயி னூரத் தழுந்துண் டனனே
யதுகண் டியாறு மாங்கடைந் தமைதியி
னெல்லெலாஞ் சேர நேர்மைகொண் டேகுவித்
துண்ணவிட் டமமா வுவகையோ டிருப்புழி
யெய்யெனக் கூட்டேபன் னுயிர்வந் தாற்றிச்
சிறுநெல் லெடுத்துக் கூழ்செய் தளித்தன
னற்றைநாண் மாலையி னைம்மூன்று மூடை
நற்றால் வேண்டு பரிந்தன னவற்றைக்
கொடுவரு நெறியிற் குறுகிய யாற்று
வெள்ளத் திடையொன்று மெள்ளச்சென் றதுமன்
னெளியேனை பொறுக்கா தின்னருள் பொழிகென
யானே,
என்மனை தன்னை யெழுந்துவிளித் தழைத்தாங்
காவுண் ணுமை லகற்றொரு கொத்து
நெற்கொரு மூடை நேர்ந்ததிழ வறிதியெனக்
கூறுயறம் புரியக் குறித்தனென்
பேறுபெற முயலகுவிர் பெரிதறம் புரிமினே.

---

(இ-ள்.) இற்றைப் பகற்கே யியலா நெல்லைக் குற்றியுண வாக்கற்குக் கூடுவெயி லுணங்குவான் புற்பாய்ப் பரப்பிப் போர்ந்ததுவே யென் கற்புக்கடன் பூண்ட பொற்புடைத் தெய்வம்]

என் கற்பு கடன் பூண்ட பொற்புடை தெய்வம்=(முன்னர்ப் பெற்றோரும் ஆசிரியரும் கற்பித்தவற்றைக் கற்று நடந்து என்னை வேட்டடைந்தபின்னர் எனது) கற்பனைப்படியே நடந்து வருதலைக் கடமையாகப்பூண்ட பொலிவுடைய தெய்வம் போன்றவளாகிய எனது மனைவி;

இவ்வடியை முற்கூறாது "இற்றைப் * * * * போர்ந்ததுவே" என்பதனை முற்கூறினார், இச்செய்யுள் நெல்லைக்குறித்து விளக்கவந்தமையாலென்க.

"என் கற்புக்கடன்" என்றமையால் சொல்லெச்சங்கள் விரிக்கப் பெற்றன.

"பெற்றாற் பெறிற் பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்-புத்தேளிர் வாழு முலகு". "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்-பெய்யெனப் பெய்யு மழை" என்பன குறள். "வேண்டலுமக் கற்பினர்த மெய்யனையி னிற்கு-மீண்டடையுள தெய்வதமு மாமுகிலு மென்றால்" என்பது கந்தபுராணம்; "கணவற்கை தொழுது வாழ்வார் தேமலர்த் திருவோ டொப்பார்" என்பது சிந்தாமணி; "கற்புக்கடன் பூண்டவித் தெய்வ மல்லது-பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்" என்பது சிலப்பதிகாரம். இவற்றானும் பிறவற்றானும் "கற்புக்கடன் பூண்ட பொற்புடைத் தெய்வம்" என்றார். பொற்பு, அழகுமாம்.

இற்றை பகற்கே இயலா நெல்லை=இன்றைப் பகற்பொழுதைக்குதானும் கழிப்பதற்குப் போதாத நெல்லை;

ஒரு நாளைக்கும் போதாத நெல்லுடைய வாழ்க்கையர் என்றதனானும், நாற் பொருள் பயக்கும் தெய்வப் பெருநூல்களை ஆராய்ந்துவருபவர் எனப் பிறகூறுதலினானும், "அயலாகாது என்னை நினைத்து வருபவர்கள் எவர்தாமோ அவர்தமக்குரிய பேறுகளை யான் காப்பேன் [அத. கூ, சுலோகம் 22.] என்னும் கீதாவாக்கியத்தைக் கவனித்தற் கிடனாகின்றது.

குற்றி உணவு ஆக்கற்கு=(உரலிலிட் டுலக்கையாலே) இடித்து (உமிமுதலியவற்றைப் போக்கி) உணவுக்குபயோகமாகும் வண்ணம் செய்து கோடற் பொருட்டு;

பின்னர் வெய்யிலிற் காயவைத்தல் கூறப்பட்டமையின், அக்காயவைத்தலும் உமி தவிடு முதலியவற்றை நீக்கற் பொருட்டாதலின் அங்ஙனஞ் சொல்லெச்சங்கள் விரிக்கப்பட்டன.

குற்றுதல், குத்துதல் ஒருபொருட் கிளவி.

கூடு வெயில் உணங்குவான்=பொருந்திய வெய்யிலிலே காயும்படி;

சூடு குறையினும் மிகினும் பதனழியப்பெற்றுக் கெடுமாதலின் "கூடு வெயில்" என்றார். கூடுதல்-பொருந்துதல.

புல் பாய் பரப்பி போர்ந்தது=புற்பாயின்மீது பரப்பிவைத்துச் சென்றாள்;

கோரைப்புன் முதலிய உலர்ந்த புற்களால் இழைக்கப்படுவது புற்பாய். அவற்றினும் விலைதாழ்ந்த பனை ஓலை முதலியவற்றால் இழைக்கப்படும் பாய்களே பெரும்பான்மையும் நெல் லுணக்கற்கு உபயோகிக்கப்படுவனவாதலின் இங்கே புற்பாய் என்றது அற்பவிலைப் பனையோலைப் பாயை என்க. புல் என்ற சொல் பனைக்கும் உண்டு. தெய்வம் என்றதற் கியையப் போர்ந்தது என்றார்.

யானே=யானும்;

அதன் பாங்கு=நெல்லுணங்குமிடத்திற்குப் பக்கமாக;

தூய்தா அமை மண் தெற்றி மிசை இருந்து=பரிசுத்தமாக அமைந்த மண்ணாலாகிய திண்ணையின்மேலிருந்துகொண்டு;

தூய்தா வமைமண், தூய்தாவமை தெற்றி என்க.

பல் நூல் ஆய்ந்து இனித்தனென்=பலவாகிய நூல்களையும் ஆராய்ந்து இனிமையுற்றேன்

ஒரே விஷயத்தைப் பலரும் பலபடி கூறுவாராதலின் பலவிஷயங்களையும், பலநூல் களோடு ஆராய்ந்து வருதலே பெரும்பயனெனக் கொண்டு "பன்னூலாய்ந்தினித்தனென்" என்றார்.

அ வழி = இனித்திருந்த அப்பொழுதிலே;

வழி காலத்தின்கண் வந்தது.

வருந்து பசி காரான் = வருத்துகின்ற பசியினையுடைய காராவானது;

வருத்து, முன்னடி எதுகை நோக்கி வருந்து எனமாறிற்று. காரா, காரான் = எருமை. கார் + ஆ எனப்பிரித்து அழகிய பசுவெனக் கொள்ளினும் அமையும்.

[வந்து விரைந்ததனைத் தன் வயிறாரத் தழைந் துண்டன்றே] விரைந்து வந்து அதனை தன் வயிறு ஆர தழைந்து உண்டன்று = விரைவாக (நெல்லைப் பரப்பி வைத்திருந்த இடத்திற்கு) வந்து அந்நெல்லைத் தன்வயிறு நிரம்பும்படி விரும்பி விரைந்துண்டது;

பசியின் கொடுமையையும் ஓறப்பரோ என்னும் அச்சத்தையும் புலப்படுத்த வேண்டு தலின் விரைதல் வருகைக்கும் உண்டற்கும் ஏற்றப்பட்டது. விரைந்துண்டமையான் அதன் வயிறு நிரம்பிற்றென்க. அக்காரா நெல்லையுண்ணவும் அதனை ஒருபொருட்டாக மதிக்காமல் நூலாய்ந்தினிக்கின்றனே என்னும் வியப்புப் பிறக்க ஏகாரம் நின்றது. அவன் பராமுகமாயிருந்த வாறென்னையென் றிகழும்பொருட்டெனவும், மனையாட்குச் சினமும் அன்னபிறவும் பயத்தற் பொருட்டெனவும் பலவகையாகக் கூறுவாருமுளர்.

[அதுகண் டியானு மாங்கடைந் தமைதியி னெல்லெலாஞ் சேர நேர்மைகொண் டேகுவித் துண்ணவிட் டம்மா வவகையோ டிருப்புழி]

யானும் அது கண்டு = யானும் அக்காரா உண்ணுதலைப் பார்த்து;

அமைதியின் ஆங்கு அடைந்து = (காரான் அச்சங்கொண்டோடி விடாமைக் கேற்றதொரு) அமைதி கொண்டு அவ்விடத்தைச் சேர்ந்து;

நேர்மை கொண்டு எல்லா நெல்லும் சேர குவித்து = (அக்காராவின் அச்சத்தையும் நெல் லானது பரந்து கிடத்தலால் உண்ணற்குசிதப்படாதிருத்தலையும் நீக்குதற் கேற்றதொரு) நேர்மை யாகிய வழியை மனதிலே உட்கொண்டு எல்லா நெல்லையும் ஒருசேரக் குவித்து;

உண்ண விட்டு அம்மா உவகையோடு இருப்புழி = அதனை உண்ணும்படி விட்டு (அது பசிதீர உண்ணுதலானே கண்ட எனக்குண்டாகிய) மகிழ்ச்சியோடு இருந்த அமையத்திலே;

புழி காலத்தின்கண் வந்தது.

[எய் யெனக் கூஉ யென்னுயிர் வந்தரற்றி] என் உயிர் எய் என கூஉய் வந்து அரற்றி— (யான் நெல்லை ஒருசேரக் குவித்துவிட்டு வருதலையும் காரா உண்ணுதலையும் சேய்மையிலிருந்து கண்ட) எனது ஆவிபோல்பவளாகிய மனையாள் எய் என்றுரப்பிக்கொண்டே ஓடிவந்து (தன் குறைகளைக்கூறி) அழுது;

தென்புலத்தார் முதலாய பதினொருவருக்கும் உணவளித்தற் கமைந்த வழியாகிய நெல்லா னது காராவின் வாய்ப்பட்டற்றதே என்று கலுழ்வதே அவளின் குறை என்க. காராவை உடனே விலக்குக என்பாள் "எய்" என்றும், விலககாதிருந்தமையானும் சேய்மை யாதலினானும் "ஓடி வந்து" என்றும், கணவன் செயல் முதலியனவற்றைக் குறித்து வருந்தினளாதலின் "அரற்றி" என்றும் கூறினர்.

சிறு நெல் எடுத்து கூழ் செய்து அளித்தனள் = காராவுண் டெஞ்சிய சிற்றுணை நெல்லை எடுத்துக் (குத்தி அரிசியாக்கி அடிசிலா யட்டிடுவதற்குப் போதாமையின்)* கூழாகச் செய்து கொடுத்தனள்;

காரா ஓடிவிட்டமை தோன்ற "எடுத்து" என்றும், அவளுதவியால் அன்றைக்குக் கூழ் கொடுக்கப்பட்டமையின் "அளித்தனள்" என்றும் கூறினர். சொல்லளவிலே "உயிர்" அஃறிணை

யாயிருப்பினும் உயர்திணைப் பொருளைக்குறித்து நிற்றலின் "வந்தனன்" என்று முடித்தார். பால், திணை முதலியன திரிதல் இயல்பாகும்.

அற்றை நாள் மாலையில் = அன்றையத்தினத்தின் பிற்பகலிலே;

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற் றமக்கின்னா—பிற்பகற் றாமே வரும்" என்பதற்கெதிர்த் திணைகப் "பிறர்க்கினிமை முற்பகல் செய்யிற் றமக்கினிமை—பிற்பகற் றாமே வரும்" என மாற்றிக் கோடலும் உரைவழக்காதலின் இங்ஙனம் கூறினார் என்க. செய்த புண்ணியம் விரைவிற் பலித்த மதன்றதைக் காட்டலுக்குமாம்.

ஐம்மூன்று மூடை நுன் தரல் வேண்டி அளித்தனன் = (எனது தலைவன்) பதினைந்து மூட்டை நெல்லை எனக்குக் கொடுக்கும்படியாக (என்னிடம்) தந்தனுப்பினான்;

மூட்டையி லடங்கியது நெல்லெனச் சம்பவத்தொடரால் தானே போதரலின் விரித்துரைத்திலர்.

அவற்றை கொடுவரு நெறியில் = அந்நெல் மூட்டைகளைக் கொண்டுவருகின்ற வழியிடையிலே;

குறுகிய யாற்று வெள்ளத்து இடை = எதிர்ப்பட்ட யாற்றுப் பெருக்கத்தின் இடையே;

கடக்க விறங்கிய பொழுதிருந்த புனல் சிலதூரஞ் சென்றபின் இடையிலே பெருகிற்று என்பது தோன்றக் "குறுகிய யாற்று வெள்ளத்திடை" என்றார்.

ஒன்று மெள்ள சென்றது மன் = ஒரு மூட்டை மெதுவாக அமிழ்ந்திச் சென்றது;

தன்னையறியாமலும் புனலில் வீழ்ந்த அரவம் மக்கெழும்பாமலும் மந்தணமாய்ச் சென்றது என்பது தோன்ற "மெள்ள" என்றும். அடிக்கடி எண்ணி வருகாரணத்தானே குறைவுற்றமை அறிந்தது தோன்றச் "சென்றது" எனவும், தேடியும் காணவில்லை என்பது தோன்ற "மன்" என்றும் கூறினார்.

எளியெனை ஒறுக்காது இன் அருள் பொழிக என = எளிமைத்தன்மையுடைய என்னை நீ வருத்தாமல் (என் தலைவனுக்குஞ் சொல்லி வருத்தவைக்காமலும் செய்தற்குரிய) இனிய அருளைச் செய்வாயாக என்று அவன் வேண்டிக்கொண்ட அவ்வளவிலே;

தலைவனுக்குத் தெரிவித்தால் வேலையை இழப்பான் பிழைத்தற்கு வேறு வழியுமில்லான் என்பது போதர "எளியெனை" என்று கூறினர். நீயும் ஒறுக்காது விடல்வேண்டு மென்மொழியாது இன்னருள் பொழிக என்றமையின் அங்ஙனம் இசை யெச்சங்கள் விரிக்கப்பட்டன. இனித் தலைவன் என்குணத்தை அறியான் புலவனே அறியான். பொற்போயிற்றே என்று புலவன் கவற்சி யுறுவதா லெய்யும் பாவம் அவ்வெளியனைச்சாரும், சாரிற் கெடுவன் ஆதலின் அங்ஙனங் கூறப்பட்ட தெனபாருமுளர்.

யானே = (அவன் கூறியவற்றைக் கேட்டிருந்த) யான்;

என்மனை தன்னை எழுந்து விளித்து அழைத்து = என்னுடைய மனையாளை எழுந்து கூவி (யான் இருக்குமிடத்திற்கு) வரவழைத்து;

தான் கேள்வியுற்ற சம்பவத்தை மனையாளுக்கு விரைந்துரைக்க வேண்டினனாதலின் "எழுந்துவிளித் தழைத்து" என்றார்.

ஆங்கு ஆ உண்ணாமல் அகற்று ஒரு கொத்து நெற்கு = அப்பொழுது (முற்பகலில்) காராவை உண்ண விடாமல் அகற்றி (நீ எடுத்த) ஒருபடி நெல்லுக்காக;

ஆங்கு, அவ்விடமுமாம்.

[ஒரு மூடை நேர்ந்ததிழ வறிதியென] ஒரு மூடை இழவு நேர்ந்தது அறிதி என = ஒரு மூட்டை நெல்லை இழக்கநேரிட்டது (இச்சம்பவத்தினுண்மையைக்) அறிவாயாக என்று

கூறி அறம் புரிய குறித்தனென் = எடுத்துக் கூறித் தருமத்தைச் செய்துவரும்படி குறிப்பிட்டுச் சொன்னேன்;

பேறு பெற முயல்குவிர் = பலவகைச் செல்வங்களைப் பெறுவான்வேண்டிப் பலதுறைகளினும் முயன்றுவருபவர்களே;

[பெரிது மறம் புரிமின்] அறம் பெரிதும் புரிமின் = தருமத்தை மிகுதியாகச் செய்து வருவீர்களாக.

---

## (5) அறத்தா றின்பினை யளிப்பது மறத்தாறு துன்பினைத் தருவதென் றின்புற வுரைத்தல்.

அறமுறை கோடிய அன்பி லோனை
மறமுறை போந்த மன்னிடைக் காட்டிச்
சிறைகொளல் முதற்பல சோர்வறச் செய்து
பிறைநுதலிடைக் காட்டிப் பிறநெறி யிடையுய்த்தமை
வருதலி னறத்து மறவிப் போகத் தோன்று
மறமுறை கோடா அன்புடை யவனைத்
திறனுறு நலனொடு பெருமையு நோக்கி
வருதலி னறத்து வையப் போகத் தோன்று
எனச்சிறத் தியம்பினை மன்றே
மனக்கயக் கற்ற மதியுடை யவரே.

(இ-ள்.) மனம் கயக்கு அற மதி உடையவர் = மனத்தின்கண்ணே ஆன்றோர் வெறுக்கும் தீய குணங்களில்லாத நல்லறிவுடைய பெரியோர்;

மனக்கயக் கறப்பெற்றவரே நன்மதியுடையராதலின் "மனக்கயக்கற்ற மதி" என்றார்.

கயக்கு = கசப்பு, சோர்வு.

அறம் முறை கோடிய அன்பு இ(ல்)லோனை = அறநூல்களிலே கூறப்பட்ட முறைகளினின்றும் புறம்பே சென்ற அன்பில்லாதவனை,

கோடல் = வளைதல், மாறுதப்புதல். அறமுறை கோடுதலாவது மனுமுதலிய தருமநூல்களிலே விதிக்கப்பட்டவற்றைக் கைகொண்டு அநுசரிக்காமல் விலக்கப்பட்டவற்றைச்செய்து வருதலுமாம். முறை என்றது வருண சமய பேதங்கட்கேற்ப அமைந்துள்ள விதிவிலக்குகளை.

யாவரும் இனிது வாழ்தற்பொருட்டு இறைவனால் படைக்கப்பட்டிருத்தலின் இவ்விறைவன் மேலும் அவன் சிருட்டிகளாகிய உலகத்துச் சீவராசிகளின் மேலும் அன்புவைத்திருந்தால் அங்ஙனம் கோடற்கு ஒருப்படான். ஆதலின் "அன்பிலோனை" என்றார். இத்தொடரிலுள்ள அன்பி + லோனை என்னும் இரு சீர்களால் முன்னையதே விசேடபொருள் பயப்ப ஓசையழுத்திப் படிக்கப்பட வேண்டியதாதலின் நடுவர வேண்டிய லகர ஒற்றை வீழ்த்தினர். வழித்தாகிடின் அன்பில் + லோனை எனப்பிரிபட்டு "பில்" என்னுமசைக்கண் ஓசையமைக்கேறிப் பொருட்சுவை பிறழ்தல் காண்க. தற்காலப் புலவர்பலரும் இத்தகைய நுணுக்கங்களை நோக்காது கவிதைகளைத் தம் பாவினருமையைப் பகைப்படுத்துவர்.

"அறமும் பொருளு மின்பமு மூன்று—மாற்றும் பெருமநின் செல்வ—மாற்றா மையிற் போற்றா மையே" என்பது உறையூர் முதுகண்ணன் சாத்தனார்பாட்டு. "அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை—மறத்தலி னூங்கில்லைக் கேடு", "செயற்பால தோரு மறனே யொருவற்—குயற்பால தோரும் பழி" என்பன குறள். விரித்துக்கொள்க.

அறமுறை கோடாமைக்கு அன்பானது சேரடுத்து நிற்குமோர் துணைக்காரணமேயன்றி முதற்காரணமாகாது. அன்பும் தோன்றி வளர்ந்து நிலைத்தற்கு அறிவே முதற்காரணமாக வேண்டப்படும். அங்ஙனமாயின், அன்பை மறைத்து அறமுறைகோடிய வறிவிலோனை என்றல் பொருந்துமெனில், அதுவும் பின்வருமடிகளின் பொருளோடு முரணுமாதலிற் பொருந்தா தென்க. எங்ஙனமெனில் அறிவின்மை காரணமாக அறமுறை கோடுவானை அரசன் தண்டித்தல் முறையாகுமோ என்னுமே லாசங்கை நிகழ்தற் கிடனாதலினென்க. வேடன்செய்யும் உயிர்க்கொலை போல்வது அறிவிலான் செயல.

மறை முறை போந்த மன் இடை காட்டி = வேதநெறியிலே சென்ற வேந்தனிடத்திற் காண்பித்து;

"மறை முறை வழாத மன்னர்க்குக் காட்டி" என்றும் பாடமாம்.

தண்டம் சோர்வில்லாத அரசனாற் செயற்பாலதாகலானும், "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய் நின்ற" தலானும், "மறைமுறை போந்த மன்" என்றார். மறை என்பது ஈண்டு மனு முதலிய தருமநூல்களை.

சிறை கொலை முதல் பல சேர்வு உற செய்தும் = அவ்வக்குற்றங்கட்கேற்பச் சிறை, கொலை முதலிய பலதண்டங்களைச் சேரும்படி செய்வித்தும்;

"பல" என்றது அபராதம், ஆளைத்திப்பறித்தல முதலியவற்றை. சிறைப்படுத்திய பின்னரே கொலை செய்யப்படுதலின் சிறை என முற்கூறப்பட்டது. சிறையிலிடப்படுவோர் பலராதலின் அங்ஙனம் கூறினருமாம.

இறை இடை காட்டி இருள் இடை உய்த்தும் வருதலின் = இறைவனிடத்தில் அவனைக் காட்டி அவன் வருந்துமாறு நரகத்திலே புகுத்தியும் வருதலினானே;

அரசன் தண்டனைசெய்ய ஒருவேளை தவறினானேனும் அவ்வறம் இவனை இறையிடைக் காட்டி நரகிடை யுய்க்கும் என்க. காட்டுதலால் இவனே சேர்வன் என்க.

[அவற்கது மறலியொத்துத் தோன்றும்] அது அவற்கு மறலி ஒத்து தோன்றும் = தண்டனைபுரிதலாகிய அவ்வறமானது தன் முறைகோடிய அவனுக்குக் கூற்றத்தை நிகர்த்துத் தோன்றும்;

"அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" என்பது நான்மணிக்கடிகை. "அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும்—பல்லவையோர் சொல்லும் பழுதன்றே" என்பது சிலப்பதிகாரம். இவை இக்கொள்கையை நனிவிளக்கினவென்க. அறமுறை கோடுவானுக்கே கூற்றொத்துத் தோன்றுமன்றி நல்லவனுக்கு அங்ஙனந் தோன்றாதாதலின் அவற்கது தண்டித்தலிற் சிறிதுந் தவிராதென்பது போதர "மறலியொத்துத் தோன்றும்" என்றுங் கூறினார்.

அறம் முறை கோடா அன்பு உடை அவனை = தருமத்தின் முறையினின்றும் விலகிச் செல்லாத அன்புடையவனை;

அறமுறையை அனுட்டித்தல் இயற்கையிலே சிரமமுடைத் தொன்றாயினும் அதன் மேலுள்ள அன்பின் பெருக்கத்தால் அவ்வருத்தம் தோன்றப்பெறாமல் பயின்றுவரலின் அநுட்டித்துவருஞ் சிரமந்தோன்றக் "கோடா" என்றார். ஒரு வருணத்தாருக்கு விதிக்கப்பட்ட அறம் மற்றொருவருணத்தாருக்கு மறமாகித் தீமை பயக்கும் என்பது போதர "அறமுறை" என்றார். க்ஷத்திரியர்க்குரிய நாடுகாக்கும் அறம் அந்தணர் முதலியோர்க்கு மறமாகிப் பொருந்தாமை காண்க.

[திறனுற நலனெலா மிருமையுஞ் சேர்த்து வருதலின்] இருமையும் திறன் உற நலன் எல்(ல்)லாம் சேர்த்து வருதலின் = இம்மை மறுமை என்னும் கூறுபாடமைந்த நன்மை எல்லாவற்றையும் அவனை அடையும்படி சேர்ப்பித்து வருதலினுலே;

"திறன்" காரணமுமாம்; நலன் எய்துதற்குக் காரணமாகிய செயலை என்று பொருள் கொள்க; என்றது நல்வினையை. அஃது ஈண்டு ஆகுபெயர். இம்மை மறுமைக்கு வேண்டிய கூறுபாடுகள் என ஆண்டுப் பொருள் விரித்துக் கொள்க.

[அவற்கது வைப்பொத் துத் தோன்றும்] அது அவற்கு வைப்பு ஒத்து தோன்றும் = அவ்வறமானது அறமுறை கோடாத அவனுக்கு (த்தனக்கு வேண்டிய காலத்தி லுபயோகமாகும் வண்ணம்) ச்சேமித்துவைத்த பொருளை நிகர்த்துத் தோன்றும்;

கந்தபுராண முதலிய இருபத்துமூன்று நூல்களிலே அறத்தின் பெருமையை• வியந் தோதிப்போந்த மெய்யுட்களைப் பன்னூற்றிரட்டு 13—20 பக்கங்களிற் காண்க.

என குறித்து இயம்பினேனேர் = என்று குறிப்பிட்டுச் சொன்னார்;

மதியுடையவர் --சொன்னார் என்றுமுடிக்க.

---

(6) மனையறம் படுத்த மாண்பி னினையன
சேயிழை செல்வர்க் கேயுமென் றுரைத்தல்.

புலனெறி போகிய புலவோர் மாக்கடம்
முலக வாழ்க்கைக் கிருவகை யுளவே
அவைதாம்,
பொருள்பல போற்றலும் போற்றிய வாக்கலும்
பொருள்போற் றெருளாற் காக்கல பொருந்தா
தாங்கு மொழுகுவற நாபொருள் செய்தலும்
பொருந்தா தாற்றல பொருந்திசி னோரே
பொருள்செயல் வல்லோ ரல்லோ ரீதோரே
யாக்கல் வல்லோ ராற்றல ராடவ
ரெனையர் மடவோ ரென்பது கொண்டு
பொருள்செய லாடவர் புறத்தினூஉ மாக்கன்
மடவோர் புறத்தினூஉம் வைத்தனர் மாதோ
விவ்வகை யானே முன்னோர் தம்மு
ளாடவ ரெல்லா மரும்பொருட் பயிற்சியை
நாடினர் நூல்வழி நங்கைய ரெல்லாம்
வீட்டோ• டுடலம் விளக்குந் தூய்மையும்
பணிமொழி துளித்தலும் பண்ணுங் கிழவோ
னணிமொழி யுளத்தமைத் தத்தக நிற்றலும்
பிணிநின் றடாது மருந்துபல பேணலும்
விருந்துபுறந் தருதலும் வேட்டக வாழ்க்கை
வளத்தக் நிற்றலு மனைமாண் பூணலு

மென்றிவை யெல்லா மிணைத்தியைந் தனரே
யிவ்வழிப் போந்த வேந்திழை யாருட்
பாமன் றேற்றினர் பலரே மன்ற
இனியே,
அவ்வெலாங் கல்வியென் றறியா தோரே
யின்னோர் தம்மை யிழித்துரைத் தமமா
தம்முறு மகளிர்க் கந்நிலை தபுத்து
நம்முறு செயலி னலனழிக் குநரே
இவரே,
கருவி துரீஇக் காரிய மிழக்குநர்
நான்முறை யறீஇ வழக்குமுறை நுங்குநர்
மடையர் கைக்குட் டம்முயிர் வழங்குநர்

ஆடவா மடவோ ரவிரு வோருந
தத்தந் நெறியிற் றவாஅ ராகி
நிறத்தொடு நிலைதழீஇ நற்ற
லறத்திறத் துயருமா றதுவா குமமே

---

(இ-ள்.) புலன் நெறி போகிய புலவோர் = நூலின் வழியே சென்ற அறிவினையுடைய

மனத்தைப் பொறிகளின் வழியாகப் போகவிடாமல் அறிவின வழியே போகவிடுத்தவர் என்பது ஈண்டுக் கருத்து. அறிவிற்கு ஆதாரம் நூலாதலினா அதன்மே லேற்றிக் கூறினர், கற்பக ழிமட னகிங்குதலின.

மாககள் தம் உலகம் வாழ்க்கைக்கு இருவகை உள = மனிதர் தம்முடைய உலக சீவனத்துக்கு உரிமையாகிய இரண்டு வழிகள் உள்ளன.

அவைதாம் = அவ் விரண்டு வழிகள் தாம்;

[பொருள்பல போற்றலும்] பல பொருள் போற்றலும் = (உடலுக்கும் உயிர்க்கும் சாதனமாகிய) பலவகைப் பொருள்களை ஈட்டிக்கொள்ளுதலும்;

போறறிய ஆககலும் = அவ்வாறு ஈட்டப்பட்ட பொருள்களை யெல்லாம் உபயோகமாகும்படி செய்துகோடலுமாகும்;

பொருள் போற்ய ஒருவற்கு ஆககல பொருந்தாது = பொருளை ஈட்டும் ஒருவனுக்கு அப்பொருளை உபயோகமாகுமபடி செய்துகோடல அமையாது;

ஆக்கும் ஒருவற்கு அ பொருள் செய்தலும் பொருந்தாது = (பிறர் தேடிய பொருள்களை உபயோகமாகும்படி) செய்துதருகின்ற ஒருவனுக்கு அப்பொருளைச் சம்பாதித்தலும் இயையாது;

ஆற்றல் பொருந்தினோரே பொருள் செயல் வல்லோர் = வல்லபம் பொருந்தியவர்களே பொருளைத் தேடும் சத்தியுடையவ ராவர்;

அலலாதோரே ஆக்கல் வல்லோர் = (அப்பொருள் செய்தற்குரிய ஆற்றலையுடையவர்) அல்லாதவரே அப்பொருளை ஆக்குதலில் வல்லவராவர்;

ஆற்றலர் ஆடவர் = பொருள் செய்தற்குரிய திறமை சான்றவர் ஆடவராவர்;

வினையர் மடவோர்=பொருள்செய்யும் ஆற்றலில்லாமல் அச்செய்த பொருளை ஆக்குதலில் வல்லோர் மங்கையராவார்;

வினையதாய ஆக்குதற் குரியராய மங்கையர் வினையர் எனப்பட்டார். கரு முதலியவற்றையும் ஆடவர் கொடுக்க இவர் வளர்த்து அளிப்பதனையும் ஈண்டு ஒப்பு நோக்கிக் கொள்க.

என்பது கொண்டு=என்ற காரணத்தை உட்கொண்டு;

பொருள் செயல் ஆடவர் புறத்தினூஉம்=பொருள் ஈட்டி வருந் தொழிலை ஆடவர் மாட்டும்;

ஆக்கல் மடவோர் புறத்தினூஉம்=(ஈட்டிய அப்பொருளை உபயோகமாகும்படி) செய்துவருந் தொழிலை மங்கையர் மாட்டும்;

வைத்தனர்=(செய்துவரும்படி நியமித்து) வைத்தனர்;

ஆடவரும் மடவோருமாகிய இருவோரும் முறையே பொருள் போற்றுதலையும் ஆக்குதலையுஞ் செய்தல் வேண்டும் என்பது போதரப் "புறத்தினூஉம்" என்பது ஈரிடத்தும் அளபெடுத்தது.

மாதோ—அசைநிலை. புலவர்—வைத்தனர் என வினைமுடிக்க.

இவ் வகையானே=மேற்கூறிய முறைமைகளானே;

முறைமைகளாவன ஆற்றலுடைய ஆடவர் பொருளீட்டி வருதலும் அவ்வாற்றலில்லாத மடவோர் அப்பொருளை யேற்குமாறு ஆக்கிக் கோடலு மாம்.

முன்னோர் தம்முள்=நமது பூர்வீகருள்ளே;

[ஆடவ ரெல்லா மரும்பொருட் பயிற்சியை நாடினர் நூல்வழி] ஆடவர் எல்லாம் அரும்பொருள் பயிற்சியை நூல்வழி நாடினர்=ஆடவர்கள் எல்லாரும் (வினையோராற் பெறுதற்கு) அரிய பொருள்செய்தற் றொழிற்பயிற்சியை (ப்பொருள் நூலுட் கூறப்பட்ட முறையாக) ச்சம்பாதித்து வந்தார்கள்;

நங்கையர் எல்லாம்=மாதர் எல்லாரும்;

வீட்டோடு உடலம் விளக்கும் தூய்மையும்=(தாங்கள் வதியும்) வீட்டுடனே சரீரத்தினையும் (துலங்கும்படி மாசகற்றி) விளங்கிவருகின்ற பரிசுத்தமும்;

உடற்றூய்மை இருந்தும் வீட்டுத் தூய்மை இல்வழிப் போந்தபயன் ஒன்றுமில்லையாதலின் வீட்டுத் தூய்மையை முற்கூறினர். இனி வீட்டினைத் தூய்மையாக வைத்துக்கொள்வோர் தம் முடலையும் தூயதாக்கிக்கொள்வ ரென்பது தானே பெறப்படுதலின் வீட்டினை முற்கூறினர் என்றலும் ஒன்று. இனி நமது நாட்டார் வீட்டைத் தூய்தாகவும் உடையை மாசாகவும் வைத்துக் கொண்டுவரும் வழக்காறுண்மையின் வீட்டிற்கு ஒடுகொடுத்து அப்பிரதானமாக்கிக் கூறினர் என்றுங் கூறுப.

பணி மொழி துளித்தலும்=பணிந்த சொற்களைப் பேசுதலும்;

துளித்தல் என்றமையாற் செவிக் கினிமை பயக்கு மென்பது பெற்றாம்.

பண்ணும் கிழவோன் அணி மொழி உளத்து அமைத்து அத்தக நிற்றலும்=துதிக்கப்படுகின்ற தன்னுடைய நாயகன் நூல்வழக்கும் உலகவழக்கும் பொருந்துமாறு வரிசைப்படுத்தி அழகாகச் சொல்லுகின்ற வார்த்தைகளில் அடங்கிய விஷயத்தை மனத்தின்கண் நிலைபெற அமைத்துக்கொண்டு அதற் கேற்குமாறு நின்றொழுகுதலும்;

"அணி" என்பதற்கு அவ்விருபொருளுங் கொள்ளவேண்டியிருத்தலின் அங்ஙனம் கூறினும். பொருள்விளக்கங் கருதி "வரிசைப்படுத்தி" என வினையெச்சமாக்கினும். இங்ஙனம் கூறுதல் உரைமரபு. நூன்முறைக்கும் மடவோர்க்கும் ஏற்ப அணிந்து அழகாகக் கூறவேண்டும் என்பார் "அணிமொழி" என்றும், "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்"

ஆதலின் "டன்னும்" என்றும், உரிமைதோன்றக் "கிழவோன்" என்றும், பல நூலாராய்ச்சியை இவனுக் கேற்குமாறு அணிந்துகூறுவான் என்பது தோன்ற "அணிமொழி" என்றும், அவன் கூறும் சொற்களை மறப்பிற் கருத்தும் வேறுபடும் என்பது தோன்ற "உளத்தமைத்து" என்றும், உளத்தமைத்ததை மறவி முதலியவற்றானே நழுவவிடிற் பெரிதும் ஏதம் பயக்கும் என்பது தோன்ற "அத்தக நிற்றலும்" என்றும் கூறினர்.

[பிணிநின் றடாது மருந்துபல பேணலும்] பிணி நின்று அடாது பல மருந்து பேணலும் = உடலின்கண்ணே நோய் நிலைபெற்று வருத்தாமற் பல மருந்துகளை விரும்பிச் சேகரித்து வைத்தலும்;

தமக்கு மூத்தார்பாட்டு நோய்வகைகளையும், அவை வருதற் குளவாங் காரணங்களையும், அவற்றைத் தீர்த்தற் குரிய மருந்துகளையும், மருந்து செய்யும் முறைகளையும், உபயோகிக்கும் முறைகளையும், இவைபோன்ற பிறவற்றையும் விருமபிக்கோடல். பேணுதல் என்பது ஈண்டுச் சிரத்தை என்னும் பொருட்டு. நோயின் பன்மை தோன்ற "மருந்துபல" என்றார். ஒரு நோய்க்குப் பல மருநது வேண்டு மென்றுங் கூறுப.

விருந்து புறந்தருதலும் = விருந்தினரை உபசரித்துப் போற்றிவருதலும்;

வேட்டகம் வாழ்க்கை வளம் தக நிற்றலும் = கிழவோன் இல் வாழ்வின் செல்வத்திற்குத் தகுமாறு நிலைபெறுதலும்;

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்—வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்றார் திருக்குறளிலும். பிறந்தகத்தின் வளத்தக நிற்றல் கூடாது என்பது கூறப்பட்டது.

மனை மாண் பூணலும் = இல்லறத்திற்கு வேண்டிய இன்றியமையாத நற்குணங்களைச் செய் கைகளை விரதமாகப் பூண்டுகோடலும்;

மனை—ஆகுபெயர்.

என்று இவை எலலாம் = என்று கூறிய இப்பகுதிகளை எல்லாம்;

இணைதது இயைந்தனரே = (தம்மனத்தின்கண்ணே) பொருந்தி (ச்செய்துவருந தொழிற் கண்) அமைந்துவந்தார்கள்;

இ வழி போந்த வநதிழையாருள் = மேற்கூறிய ஆக்கல் வகைகளிலே நடந்துவந்த மடவோர் தம்முள்ளே;

"வந்திழையார்" என்றது ஈண்டுப் பெயர்மாத்திரையாய் நின்றது.

பா மன்று ஏற்றினர் பலர் மன்ற = (தாங்கள் இயற்றிய) பாக்களைச் சங்கத்தின்கண்ணே அரங்கேற்றினவர் பலராவர்;

மன்ற—அசைச்சொல்.

இவ்வேந்திழையார் உலகவியற்கையிலே பெரிதும் ஒன்றுபட்டு மனநெகிழ்ந்து வருதலின் இவர்க்குக் கவித்துவ சக்தி ஊற்றெடுத்துப் பெருகிற் றென்க.

இனியே = இனிமேற்படுவது;

அவ் எலாம் கல்வி என்று அறியாதோரே = மடவோர்க் குரிய தொழில்களாகக் கூறப் பட்டனவற்றை யெல்லாம் பயின்றுணர்தல் கல்வி என்று அறியாதவராகிய பிற்காலத்தாரே;

இவர், முன்னோரை மடவோர்க்குக் கல்வியை ஊட்டாது கெடுத்துவிட்டனர் என்று பறைசாற்றித் திரிந்துழலாநிற்பர்.

**இன்னோர் தம்மை இழித்து உரைத்து = (வீடே, உடலமே என்றற்றொடக்கத்தன வற்றைக் கல்வி என்று நயந்து மேற்கொண்டு கற்றுச் செய்துவருகின்ற) இத்தகுதியை உடைய வரை இழிவுபடுத்திக் கூறி;**

தம் கருத்திற்கு அணித்தாக நிற்பவரே வீட்டோடுடலம் முதலியவற்றைக் கைக்கொண்டவ ராதலின் அன்னோர் என்னாது "இன்னோர்" என்று கூறினார். இத்தகைய நுட்பங் குறிக்கொள்ளாப் புலவர் அன்னோர் என்று கூறிச் சுவையழித்துப் போவர். "வீட்டோ டுடலம் விளக்குந் தூய்மை" முதலாயவற்றை யெல்லாம் கல்வி யென்றறியாதார்க்கு அக்கூறிய வெல்லாம் சேயனவாகக் காணப்படுதலின் "அவ்வெலாம்" என்றார். இந் நுட்பங் கவனிக்கற்பாலது.

தம் உறு மகளிர்க்கு அ நிலை தபுத்து=தமக்குப் பொருந்திய பெண்களுக்கு அத்தொழில்களைக் கைபோதலாகிய தன்மையைக் கெடுத்து;

அததொழில்கள் நீங்கப்பெறிற் கேடுபயக்கும் என்பதுபோதரத் "தபுத்து" என்றார்.

நம் உறு செயலின் நலன் நலிக்குநர்=நமக்குப் பொருந்திய செயலினாலே அடையப்பெறும் நன்மையைக் கெடுக்கின்றனர்;

இதன் கருத்து, மேற்கூறிய வாம்பின்றிச் செய்தலாகிய பிறநாட்டுச் செயல்களைக் கைக்கொண் மடாமுகந் தமைம யுறுகவறாமை என்பதாம்.

இவரே=(பொருளீட்டலை ஆடவர்க்கும் ஆக்கலை மடவோர்க்கும் பகுத் துதவாத)இவரே;

கருவி துரீஇ காரியம் இழக்குநர்=ஆக்கலுக்குக் காரணமாகிய பொருளீட்டலை (ஆடவர் மடவோ ரென்னு மிருபாலாரும்) தேடி அதனைத் தமக் கேற்ப ஆக்கிக் கோடலை இழப்பவரும்;

குடும்ப காரியங்களை ஆக்கிக் கோடற்கு நூலாராய்ச்சி முதலியன காரணங்களாக நிற்றலின் "கருவி" என்றனர். துருவுதலாற் பயனின்மை தோன்றத் "துரீஇ" என்றளபெடுத்தது. பின் வரும் "அறீஇ" என்பதற்கும் இஃதொக்கும்.

நூல் முறை அறீஇ வழக்கு முறை நுங்குநர்=நூலிற் கூறிய முறைகளை மட்டும் அறிந்து அவற்றை வழங்கிவரும் வழக்கு முறைகளை அழிப்பவரும்;

நுங்குதல் என்பது உபசாரமாய் அழித்தற் பொருளில் வந்தது. இவ்வாறே தாயை விழுங்கினான் எனவரும் வழக்கு நோக்கி யறிக.

மடையர் கைக்குள் தம் உயிர் வழங்குநர்=மடைத்தொழில் செய்வா ரிடத்திலே தம் உயிரைக் கொடுப்பவரு மாவார்;

மடை=சோறு. ஆடவர் மடவோர் என்ற இருபாலாரும் நூலாராய்தல், பொருள் செய்தல் என்றற் றொடக்கத்தனவற்றை மேற்கொண்டு சோறாக்கற்கு மடையரை வைத்தலின் அம்மடையர் தாமுட்கொண்டன போக எஞ்சியவற்றைக் கொடுத்தலானும், வெகுளி எழுந்துழி நஞ்சுமுதலியவற்றை இட்டுக் கொலவல் ராதலினாலும் "மடையர் கைக்குள் தம்முயிர் வழங்குநர்" என்றார். நம்பிக்கையின் மிகுதி தோன்ற "வழங்குநர்" என்றாருமாம். இது கருதியன்றே நம்மவர் மடைத்தொழிலைத் தம் இன்னுயிர்த்துணைவராய மனைவியரிடத்து அமைத்து வந்தனர் என்க.

ஆதலின்=அது காரணத்தானே;

ஆடவர் மடவோர் அ இருவோரும்=ஆடவரும் மகளிரு மாகிய அவ்விரண்டு பாலாரும்;

தம் தம் நெறியில் தவாஅர் ஆகி=(ஆடவர் நூலாராய்ந்து பொருள்செய்து வருதல் மடவோர் அவற்றை நுகருமாறு ஆக்கிக்கோடல் என்ற இவற்றுள்) தங்கள் தங்களுக்கு வகுத்த வழியிலே பிறழாதவராகி;

அகன்றுழிப் பெரிதும் ஏதம் பயக்கும் என்பது தோன்றத் "தவாஅர்" என்றளபெடுத்தது.

நிறத்தொடு நிலை தழீஇ நிற்றல்=வருண தருமத்தோடு ஆச்சிரமதருமத்தையும் தழுவி அவற்றினின்றும் வழுவாராகி நிற்பதுவே;

வருணாச்சிரம தருமத்தினின்றும் வழுவாதவரே நலம் பெறுவர் என்பது தோன்றத் "தழீஇ" என்றளபெடுத்தது. மெய்யறிவான் மேம்பட்டு விளங்கினோரேனும் தம்க்குணர்ச்சி

இருக்குங்காலும் அவற்றை யெல்லாம் நழுவாமற் றழுவிக்கோடல் வேண்டு மென்பது போதரற் பொருட்டு அளபெடுத்தது என்றலும் ஒன்று.

அறம் திறத்து உயரும் ஆறு அது ஆகும்=இருவகையாய அறத்து வழியிலே நின்றும் உயர்ந்து செல்லுகின்ற பயனாகும்;

ஆறு பயன் எனப் பொருள் தருதலை "அறத்தா றிதுவென வேண்டா" என்னும் திருக்குறளானும் பிறவாற்றானும் கண்டு தெளிக.

இச் செய்யுளின்கண் ஆடவர் மடவோர் என்றமையாற் கருதப்பட்டவர் யாவரெனிற் பருவ மெய்தி இல்லறக் கிழமை பூண் டொழுகும் குடும்பத்தினரேயாம். ஆயின் மடவோர் எஞ்ஞான்றும் பேதைமையையே அணிகலனாகப் பூண்டவராதலின் கணவர் சம்பாதிக்கும் பொருள்களை நுகருமாறு ஆக்குந் திறமை அவர்கருச் சாலுங்கொல்லோ வெனின் நன்றே சாலும், என்னை? அத்தொழிலைத் தங் கடமையாகக் கருதிக் காட்சி, அநுமானம், உரை ஆதிய பல்லாற்றானும் கற்றுக்கோடலின் என்க.

கணவனுடைய வருவாய்க் கேற்ப உண்டி உடை முதலியவற்றை அமைத்துச் செலவைச் சுருக்குதல், தக்க பாத்திரங்களில் அளவறிந்து தருமஞ் செய்தல், மூப்பு, பிணி முதலியன நேருங்கால் உபயோகப்படும்படி பொருட்சேமஞ்செய்தல், ஆதிய நல்வாழ்க்கைக்குரிய பலவும் ஆக்குதல் என்பதன்கண் அடங்கும். இல்லத் திருந்து இத்தகைய உதவிகளைக் கணவற்குச் செய்துவருதல் பற்றியே மனைவியர் துணைவியர் எனப்படுவர்.

"தருமமெனும் பண்டம் நிறைந்த சகடமா மனைவாழ்க்கை-கருமநுகம் பிணித்துமனைக் காதலியுந் தானுமென-விருவராய முறைசெலுத்தி மலைதலைதரா வழிஞ்செல்லு-மொருவராய்ப் பூண்டிழுப்பி னேரிறையுஞ் செல்லாதால்" என்று திருக்குறளைப் புராணத்தினும், "மருவிய காதன் மனையாளுந் தானு-மிருவருமப் பூண்டேர்ப்பி னல்லா-லொருவரா-லில்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடஞ்-செல்லாது தெற்றிற்று நின்று" என்று அறநெறிச் சாரத்தினும், இவ்வாறு பிறண்டுங் கூறப்பட்டனவற்றைக் கொண்டு இல்லறப்பாரம் மனைக்கிழவன் கிழத்தியாகிய இருவர் தலையினும் பொறுத்ததென்று தெளிக.

---

## (7) கணவனை யிழந்த மணமலி கூந்த லணியெரி புகூஉ மன்பினைத் தென்றல்.

மணமகன் வாழ வாழ்வே வாழ்தன
மணமகன் றாழத் தாழ்வே தாழ்த
லுரிபணியினை விளக்கினை யொளியினன் பிணட்கே
பொருளெழின் முதலாப் பொலிவுழீஇ யன்பு
பொலிதர வளர்த்தவை போகுழீஇக் குறுக்கலு
முரிய பிறவேட் டன்புசெய் குநட்கே
யென்றற நூல்க ளியம்பா நிற்கும்
இவட்கே,
பிணியிடைப் பட்டுப் பேணெழில் கெட்ட
கணவனைக் காதல் செய்தன் முதல

வியைத்தல் கருதி யியைத்தன ரான்றோர்
கணவனை யிழந்த கற்புடைப் பெண்டு
மவனொ டெரியிடைப் போதன்மற் றம்மா
கைம்மை காத்தலென் றவ்விரு பாலே
யாதலிற் கைம்மையு மகற்றி மற்றொரு
காதலற் பேணல் கடன்மட வோர்க்கென
நீதுறா உ மென்று செப்பினர் மேலோ
ரெனினு மறம்பிற ழிற்றைநாட் கவ்வெலாம்
பொருந்தா வாயின் போற்றத்
தெரிந்துநெறி வருத்தல் சீரியர் கடனே.

---

(இ-ள்.) இணை விளக்கு இணை ஒளியின் அன்பினட்கு = இரட்டை விளக்குகளின் (திரிகளிற் பிறக்கும்) இரட்டை ஒளியைப் போல ஒன்றுபட்ட அன்பினையுடைய ஒருமகளுக்கு;

விளக்குகள் இரண்டு வெவ்வேறாகவே காட்சியில் தோற்றப்படினும் அவற்றுத் திரியிடைப் பிறக்கும் ஒளியான து வேறாகிப் பிரிவு காட்டாமல் ஒன்றுபட்டு விளங்குவது போலத் தலைமகனும் தலைமகளும் பார்ப்பவர்தமக்கு இருவராகத் தோற்றப்படினும் அவ்வாகத் தன்புடைமை பிரித்தற் பாலதன்று. ஒன்றுபட்டொளி விரிக்கும் இணை விளக்குகளைப் பிரித்து வேற்று விளக்குகளோடு பொருத்தி ஒளி விரிககச் செய்துவிடலாம். ஆயின், தலைமகன் தலைமகளை அங்ஙனம் பிரித்து வேற்றாரோடு பொருத்துதல் சாலாது. அச்சாலாமை தெரித்தற் கன்றே "மணமகன் வாழ வாழவே வாழ்தன் மணமகன் றாழத் தாழவே தாழ்தல் உரிய" எனக் குறிப்பித்தாராயிற்று. இவ்வாறே ஏகதேச உவமையாகக் கொள்ளப்படுவனவற்றிற்கு ஏற்றபெற்றி அடைமொழி முதலியன புணர்த்திக் கூறுதல் கல்வி வல்லார்க் கியற்கையாகும்.

தலைமகன் நிலைமைகளைத் தானும் இயற்கையாக எய்துபவளே தலைக்கற்புடையார் தம்முள்ளும் சிறந்தவளாவாள் என்க. இதனை இன்னும் அடுத்த அடிகளில் நன்கு விளக்கிக் காட்டுதும்.

இரண்டு விளக்குகளின் ஒளியும் ஒன்றி மிகுதிப்பட்டு உலகத்தை யிருளகற்றி விளக்குதல் போல அவ்விருவர்தம் ஒற்றுமைப்பட்ட அன்பினாலும் இயல்புடைய மூவரும், இயல்பல்லாத மூவரும் தென்புலத்தார் முதலாய ஐவரும் ஆகிய பதினொருவரும் துயராற்று விளங்குவார். "அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை-பண்பும் பயனு மது" என்றார் பெருநாவலரும். அவ்விருவரும் குலம், குடி, செல்வம், வனப்பு, ஒப்பு, ஒழுக்கம் முதலியவற்றால் ஒத்தவர் என்பது போதர "இணைவிளக்கு" எனவும், அவ்விருவரும் ஒரேபடித்தாக அறமுதலியவற்றினை விளக்கி வருகின்றனர் என்பது போதர "இணை யொளியி னன்பினட்கு" எனவும் கூறினார். அன்றியும் வெவ்வேறு குடிப் பிறந்தார் என்பதூஉம், அக்குடிப்பிறப்பு முதலாயவற்றுள் ஒப்புமையுடையார் என்பதூஉம் குறிப்பித்தற்கு "இணைவிளக்கு" என்றார் எனினும் அமையும். வேறு வேறு குடிப்பிறந்தனரேனும் இல்வாழ்க்கைக் குரிய அறமுதலியவற்றை ஏற்றபெற்றி வழுவாமல் இயற்றி உலகத்தை விளக்கித் தாமும் உய்தற்பொருட்டு ஒற்றுமைப்பட்டு ஒருவர்மேல் ஒருவர் அன்பு பூண்டார் என்பது போதர "இணை யொளியினன் பினட்கே" எனக்கூறினார் என்றலும் ஒன்று.

விளக்கானது நெய் முதலாயவற்றை உண்ணுதல இருளையகற்றி உலகினை விளக்குதற் பொருட்டாவது போல இவரும் தங்களைப் போற்றிவருதல் உலகின் பொருட்டே என்க. இவ்வுண்மையைத் "தென் புலத்தார் தெய்வம்" என்னும் குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையும் நன்கு விளக்கும். அன்பற்ற வாழ்க்கையானது ஒளியற்ற விளக்கே போலும். இணைந்து ஒளிபரப்பும் இருவிளக்கே போலத் தலைமகனும் தலைமகளும் தம்மில் இயைந்து இல்

தொறுத்து அவனது அழகு முதலாயின அழியப் பெறுமாயின் அவன்மேல் வைக்கும் அன்பும் அவளுக்குக் குறைவுற்றொழியும். இதனை வேண்டியவாறு விரித்துரைத்துக் கொள்க. அன்பினை உடனே ஒழித்தல் முடியாது என்பது போதரப் "போகுழீஇ" என்றளபெடுத்தது.

என்று அறம் நூல்கள் இயம்பாநிற்கும்=என்றின்னவாறு தருமசாத்திரங்கள் எடுத்துக் கூறுநிற்கும்;

இவட்கு=(நாயகனை விரும்பாது அவனது வனப்பு முதலாயவற்றை விரும்பி அவை பொருட்டு அவனிடத்திலே அன்புசெய்துவரும்) இவளுக்காக;

தலைக்கற்புக் குரியவளுக்குச் சொல்ல வேண்டிய நீதி ஒன்று மின்மையின் "இவட்கே" என்று கூறினர். அவளே நூலாசிரியர் கூறும் கூற்றுக் கணித்தாக நிற்றலின் என்க.

கணவனை இழந்த கற்பு உடை பெண்டு=தனது நாயகனை இழந்த கற்பென்னுங் கலங்கா நிலைமையுடைய பெண்ணானவள்;

கற்புடைமை இல்வழி எரியிடைப் புகுதல் முதலியன நிகழப்பெறா என்பார் "கற்புடைப் பெண்டு" என்றார். உம்—அசை.

அவனொடு எரி இடை புகுதல்=அக்கணவனோடு நெருப்பிடைப் புகுந்திறத்தலும்;

அவனது உயிர் இவளாற் காணப்படுதற் குரிய தொன்றன் றாகலின் காணப்பட்ட அவனது உடலோடு இவளுடலினையும் அழித்தல் வேண்டும் என்பது கருத்து. அங்ஙன மாயின் அவள் முன்னர் இறக்கச் சம்பவித்தால் அவளோடு இவனும் உடன்கட்டை ஏறவேண்டியது முறைமை யாகுமே யெனின், அற்றன்று. என்னை? அவ்வாறு செய்யும் வண்ணம் மறை விதித் திலாமை யானும், ஆடவர் ஆடவரையும் மடவோர் மடவோரையும் ஈனுது அவ்விரு பாலாரை யும் அடிச்சிய ரேய்ப்ப மடவோரே கருவுயிர்த்து வருதலானும், விழைவுக் காலத்திலும் ஆடவரே மேம்பாடுற்று வருதலானும், மடவோர் முதலாய பொருள்களை நுகர் பொருள் எனவும் மறை முத லியன விளக்கிச் செல்வதானும், போக்கியப் பொருளோடு போகியும் அழிதல் வேண்டும் என்னும் நியதி யாண்டும் இன்மையானும், பிறவாற்றானும் ஆடவர் உடன்கட்டை ஏறவேண்டு மென்ற நியதி இல்லை என்க.

இனித் தீயிடைப் புகுந்து உடன்கட்டை ஏறுதலை முன்னோர் பத்தினிப் பெண்டிர்க்கே உரிய ஒழுக்கமாக வகுத்தனா. நீரிடை அமிழ்ந்தியும் நஞ்சருந்தியும் நான்றும் உயிர் துறக்கப் பல்லா றிருந்தும் எரியிடைப் புகுதலை மாத்திரம் விதித்தனம என்னோவெனில், மணமுடிக்கும் பொழுது அக்கினி சான்றா யிருததல் பற்றியும், உடலை வருத்தாது தகிக்குந் தன்மை அக்கினிக் குளவாதல் பற்றியும் என்க. அக்கினியுட் பட்டவை எல்லாம் தூயனவாகவும் பிறவற்றுட் பட்டன வெல்லாம் அல்லனவாகவும் இருத்தலும் கண்கூடு. எரியிடைப் புகுதல் நீரிடைப் புகுதல் போலத் தண்ணென்று கற்புடையாருக் கிருக்கு மென்பதனை "பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற—வள்ளித ழவிழ்ந்த தாமரை—நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே" என்னும் புறநா னூற்றுச் செய்யுளானும், "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி—யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா—தின்னுயி ரீவ ரீயா ராயி—னன்னீர பொய்கையி னளியெரி புகுவர்" என்னும மணிமேகலைச செய்யுளானும், பிறவாற்றானுந் தெளிக. திரௌபதி அம்மன் முதலாய தெய் வங்கள் விளங்கும் ஆலயங்களிலே வருட மொருமுறை பெருங் குழிகளில் நெருப்பு வளர்த்து அவற்றிடைப் புனலாடுவார்போற் பல்லோர் குழுமிப் பாய்ந்து முழுகி ஆடுதலை இன்றுங் காண லாம். தீயின் விநோதங்களையும் ஈமதீ புகுதன் முதலியனவற்றையும் பற்றிச் "செந்தமிழ்" பத்தாந் தொகுதி 245-ம் பக்கத்தி லுள்ள எமது வியாசத்தை நோக்கி அறிக.

உடன்கட்டை ஏறுதலை விதித்தற் கிருந்த காரணந்தான் என்னை யெனில், ஆடவர் அரிதின் முயன்று தேடிய பொருள்களுள் சிறிதளவு மாத்திரம் தம்பொருட் டுப்யோகித்துக் கொண்டு எஞ்சியவற்றை யெல்லாம ததம் பெண்டிர்க்கே அளித்து வருதலினாலும், அவ்வா றளித்து

வராதார் கிரகத்தர் எனப்படார் ஆதலினானும், அப் பெண்டிர்க்குப் பிறந்த மக்களைத் தமக்குப் பிறந்தோராக நம்பி அவர்தங்களையும் போற்றி வருதலினானும், தத்துவ சாத்திர ஆராய்ச்சியிற் புகுந்து உண்மைப் பொருள்களைக் கண்டு உலகத்தை நன்றாகக் காத்துவருதல் ஆடவரே யன்றி மடவோ ரல்ல ராதலினானும், அவ்வாறே புகைரதம் கப்பல் முதலியன இயற்றல், பூகோள ககோள ஆராய்ச்சி செய்தல், உட லமைப் பறிதல், பிணி நிலை தெரிதல், மருந்துவகை யமைத்தல், ஆகிய பலவும் பிறவும் முதன் முதன் முயன்று கண்டுபிடித்தவர் ஆடவரே யன்றி மடவோ ரல்லர் என்பது எவர்க்கும் உடம்பா டாதலினானும், நாட்டிற்கு வரும் ஏதங்களைக் களைதற்பொருட்டுப் போர்முகத்துற்றுக் குருதி பாய்ந் தொழுகக் காயம் வாங்கியும் வருந்தியும் உயிர்கொடுத்தும் நன்மை புரிபவர் ஆடவ ராதலினானும், அவர் ஏனைய விலங்கு முதலியவற்றைப்போலக் காமந் துய்த்துவிட்டு நீங்காமல் பெண்டிரைத் தம்முயிர்போலப் பேணிக் காத்து வருதலினானும், அவ்வாறு செய்யாதானை ஆண்மகன் என்று மதித்துவரும் வழக்கா றின்மையினானும், பாரியொடு உயிர்நீத்த கபிலர்போல ஆடவர் பொருட்டு ஆடவர் உயிர்துறக்கும் வழக்கம் நனி கேட்கப்பட்டு வருதலினானும் நாயகனொடு நாயகி உயிர் நீக்கா திருத்தல் பெரும் வன்மையுடைத் தென்று பலரும் இகழ்தற்கு முறையாகு மாதலினானும், ஆடவர் பெண்டி ரென்று இருபாற்படுத்தி இருத்தலின் அவ்வப் பாலார்க் குள்ளனவற்றை அவ்வப் பாலாருள் எல்லார்க்கும் கூட்டி உரைத்தல ஔபசாரிகம் என்று கொள்ளும் வழக்கு நூன்முறை யாதலினானும், பல்வகை மிருகங்களையும் வாய்விட் டலற வதைத் துண்போர் மாதர் உடன்கட்டை ஏறுதலை மறுத்தற்குத் துணிந்துவிட் டனரே என்று இறும்பூ தெய்துதலினானும், உடன்கட்டை ஏறுவார்க்குச் சுவர்க்கம் முதலிய பதவிகள் கிடைக்குமென மறைகள் விதித்தலினானும் (இறந்துபடு முண்மையைக் கண்டவர் அல்லன செய்யார் என்பது மிருதி. இவ்வாறே "இறப்பெனும் மெய்ம்மையை யிம்மை யாவர்க்கு—மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ" எனக் கம்பநாடரும் கூறினர். உடன்கட்டை ஏறுதல் வேண்டுமென்ற எண்ணம் தோன்றப்பெறின் பெரும்பாலும் பாவஞ் செய்யார் என்க.) அப் பதவிகளை வேட்கும் மடவோர்க்கு ஆடவர்மேல் அச்சம் வெறுப்பு முதலாயின தோன்றப்பெறா ஆதலினானும், விதையை வளர்த்துக்கோடற் பொருட்டு நிலம் சிறப்பாவது போலச் சேயிழையா ரும் சிறப்படைகின்றன ராதலினானும், உலகங் காக்கும் ஆற்றல சான்ற அரும்பெறன் முயற்சி களில் ஈடுபட்டுப் பெருநலன் புரிந்துவரும் ஆடவர்தம் முன்னேற்றத்திற்குத் தடையாக நிற்கும் எவற்றையும் சிதைப்பது முறை ஆதலினானும், ஆடவருட் சில இழிசனர் தீய ஒழுக்கம் படைத்த மடவோரை ஒருவேளை கோறற் கொருப்படுவரேயன்றி அவரிடத்தில் அழகின்மை முதலாயின வற்றைக் கருதிக் கொல்லும் வழக்காறு பெரும்பாலும் பயின்று வாராமையினானும், கள்ளக் காத லரை வேட்டல் கருதி எத்துணையோ மடவோர் தங்கள் குற்றமற்ற நாயகரை அறம்பாரா வன் னெஞ்சினராய் நஞ்சூட்டியும் பிறவாறு செய்தும் கொன்று வருகின்ற செய்தி பலதிசைகளினும் கேட்கப்பெற்று வருதலினானும், ஆடவன் ஒருவனுக்குப் பல மனைவியர் இருப்பினும் ஒரு மாதுக் குப் பலநாயகர் இருத்தல் வேதவழக்கிற்கும் உலகவழக்கிற்கும் முரணு மாதலினானும், ஒருவன் பல மனைவியரை மணந்து கோடலினானே நோய் முதலியன எய்தப்பெறாமையானும், ஒருமகள் அங்ஙனம் புரியிற் பிணிக் கிருக்கையளாகித் தனக்கும் உலகத்திற்கும் கேடுபடைத்து வருதலினா னும், பாத்தைய ரியல்பை ஈண்டுச் சிந்தித்தலும் ஆவசியக மாதலினானும், பவ்வீ முதலாய இடக் கர்ப்பொருள் போக்கிடங்களின் இயல்பையும் ஈண்டுச் சீர்தூக்கி ஒப்பிடலும் முறைமையாகும் ஆதலினானும், தாம் இறந்துபடிற் றம் மனைவியர் பிறர்தம்மை வேட்டு விளங்குவரோ என்னும் ஆசங்கைக கிடனாய் ஆடவரெல்லாம் அவரை அறவே நம்பாதவராய் வெறுத்து வருவ ராதலினா னும், கணவனை யிழந்தவர் புனர்விவாகம் செய்துகொள்ளலாம் என்னும் விதிக்குடையார்தம் மண மானது வியாபார நிமித்தம் செய்துகொள்ளப்படும் ஒப்பந்தகாரர்தம் கூற்றொடு இகழப்படு மாத லினானும், உயிரை நம்பினர் உயிரொடு சேறலே பெருமையாகு மன்றிப் பொருள் முதலாயவற்றை நச்சிப் பின்னரும் இருத்தல் பெரும் வஞ்ச மாதலினானும், இன்னுயிர்க் காதலர் என்னும் பெயரை நீக்கி உடற் காதலர் வனப்புக் காதலர் என்றன்ன பல பெயர்களைப் பூண்டு கோடலே

முறைமையுடைத்தா மாதலினானும், உலக நன்மை கருதிப் பல்துறையுள்ளுஞ் சென்று திண்ணென்ற நெஞ்சினராய் உயிரையும் விட்டுப் பெரும்புகழ் பெறுவது ஆண்மக்களுக்குச் சிறப்பாவது போல உடன்கட்டை யேறுதலும் பெண்மக்களுக்குச் சிறப்பாதலினானும், இத்தகைய இடத்தன்றிப் புகழ் நிறுவுதற்கு வேறு சிறந்த இடம் மடவோர்க் கில்லை யாதலினானும், சுவர்க்க முதலிய வற்றையும் அவற்றை விதிக்கும் மறை முதலியவற்றையும் நம்பாதார் சாதிப் புரட்ட ராதலினானும், பிற மதத்தினர் ஒழுக்கமும் உபதேசமும் நமக்கு நலந்தருவனவாகா ஆதலினானும், ஒரு காலத்திலேயே இறத்தல் அவ்விருவருக்கும் நேரிடும் என்பதை அவ்விருவரும் கருதி வருதலினானே சுகாதாரம், ஒழுக்கம் அநுட்டானம், தெய்வ வழிபாடு, புத்தி, தருமம் என்றற் றொடக்கத்தனவற்றை யெல்லாம் வழுவாமல் நன்கு கடைப்பிடித்துச் சிறந்து வருவ ராதலினானும் எரியிடைப் புகுதல் கணவனை இழந்த கற்புடைப் பெண்டிர்க்குச் சிறப்பாயிற்று என்ப. நூலாசிரியர் கருத்தும் இவ்வாறே போலும். ஆயினும், தற்காலத் தரசினரும் பிறரும் உடன்கட்டை ஏறுதலைத் தடுத்தும், புனர் விவாகத்தைத் தூண்டியும் வருதல் நோக்கித் தாமாகத் தக்கமுறை இதுவெனக் கூறி ஆட்சேபங்களை வருவித்துக்கொள்ளாமல் செய்யுளின் ஈற்றடி மூன்றால் தம்மைக் காத்துக்கொண்டனர்.

கைமை காத்தல் இத்துணைச் சிறந்ததொன் றன்றாதலின் அது உடன்கட்டை யேறலின் பின் வைக்கப்பட்டது. இக்காலத்தார் காத்துவரும் கைம்மை விரதம் பெரும்பாலும் இழிவுடைத்தென்பதை உய்த்துணர்ந்து கொள்க.

மற்று கைம்மை காத்தல்=அல்லது (மறுபிறப்பிலே அக்கணவனைக் கூடி வாழவேண்டிக்) கைமை விரதம் காத்தல்;

"அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்-வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட-வேளை வெந்தை வல்சி யாகப்-பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு-முயவற் பெண்டிர்" எனப் பெருங்கோப்பெண்டும், "பெண்டிரும், பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்" எனக் கழாத்தலையாரும் கூறியவற்றானும் பிறவாற்றானும் கைமை நோன்பு ஈதெனப் புலப்படும். இதன் பகுப்புக்களை எல்லாம் மணிமேகலை ஊரல ருரைத்த காதையிற் காண்க. கைமை இழிவுடைத்தென்பதைத் துன்பமாலையிற் பரககக் காணலாம். தம்மொடு இன்புற்ற கணவர் எரியிடை மூழ்குதலைக் கண்டறிந்துவைத்தும் தாமும் அவ்வாறு செய்கிலராய் யாக்கை நிலையாமையையுந் தேறாராய்ப் பலதுறை மூழ்கித் தவநோற் றுடலை ஓம்பி வருதலின் அவரை இகழ்ந்து கூறினர் போலும்.

என்ற அவ் இரு பாலே=என்கின்ற அவ்விரண்டு பிரிவுகளையும்;

பிணி இடை பட்டு பேண் எழில் கெட்ட கணவனை=நோய்வாய்ப்பட்டு (அது காரணமாகத் தாம்) விரும்பிப் போற்றி வந்த அழகு அழிந்த நாயகனை;

"பிணி" என்றாரேனும் வறுமை, போர் என்றற் றொடக்கத்தனவற்றையுங்கொள்க. "எழில்" என்பதற்கும் அவ்வாறே இன்றியமையாதனவற்றையெல்லாம் பெய்துரைத்துக்கொள்க. தலைமைபற்றி அவ்விரண்டனையும் எடுத்துக்கூறினார். பொருளைவேட்டுப் புணரும் பரத்தையர்க்கும் இவர்க்கும் உள்ள வேற்றுமைதான் யாதென்க.

காதல் செய்தல் முதல இயைத்தல் கருதி=(நாயகியானவள்) விருப்பஞ் செய்து வருதலை முதலாகவுடைய (நல்லொழுக்கங்களை அவட்குப்) பொருத்த நினைந்து;

"முதல" என்றதனாற் கொலை முதலானவற்றைச் செய்யா திருத்தலையுந் தழீஇனார்.

[இயைத்தன ரான்றோர்] ஆன்றோர் இயைத்தனர்=சான்றோர்கள் (நம்மனோர்க்கு விதியாகக்) கற்பித்துக் கொடுத்தனர்;

விதித்தமட்டில் நில்லாது வழக்கத்திலும் அவ்விரு முறைகளையும் வழங்கிவரச் செய்தனர் என்பது போதர "இயைத்தனர்" என்றார்.

*ஆதலின்=அது காரணத்தானே;*

*கைம்மை அகற்றி=(கணவனை யிழந்தார்) கைம்மை நோன்பினையுஞ் செய்துவாராமல் நீக்கி;*

*மற்று ஒரு காதலன் பேணல்=வேறொருநாயகனை விரும்புதல்;*

*[கடன்மட வோர்க்கெனல்] மடவோர்க்கு கடன் எனல்=பெண்களுக்குக் கடமையாகும் என்று கூறுதல்;*

*ஆடவர் கற்பித்த ஆணைப்படி நின்று வருவாரே யன்றித் தமக்காக ஓராற்றலும் இலர் என்பது போதர "மடவோர்" என்றார்.*

*[தீதுறூஉ மென்று செப்பினர் மேலோர்] தீது உறூஉம் என்று மேலோர் செப்பினர்=கெடுதி பொருந்தும் என்று பெரியோர் கூறினர்;*

*கேடுறுவது நிச்சய மென்று குறிப்பித்தற்கு "உறூஉம்" என்று அளபெடுத்தது. கேடுறுவதை முன் காட்டியவற்றால் நன் காய்ந் துணர்ந்து கொள்க.*

*எனினும்=என்றாலும்;*

*அறம் பிறழ் இற்றை நாட்கு அவ் எலாம் பொருந்தாது ஆயின்=தருமந் தலைதடுமாறிப் பிறழ்ச்சி யுறுகின்ற இந்தக் கலியுகத்திலே கூறப்பட்ட அம்முறைக ளெல்லாம் இசையாவெனில்;*

*போற்ற=(மாதர் கைக்கொண்டு) அநுசரித்தற்கு;*

*[தெரிந்துநெறி வகுத்தல்] நெறி தெரிந்து வகுத்தல்=தகுதியான வழி யாதென் றாராய்ந்து கற்பித்தல்;*

*சீரியர் கடனே=சிறப்புடைப் பெரியோரின் கடமையே யாகும்.*

---

## (8) பதுமைநேர் மடவார் பலரொடு பழகுமுன் வதுவையிற் கொடுத்தன் மரபா மென்றல்.

மலர்ந்து வளனுற வளர்வன வளர்தல்
வாய்மட வோர்தம் மனன்பூந் தோரை
யாய்ந்து வதுவை யயர்ந்தன ராயி
னட்பிடை யறுகிலர் நாளிடைக் கொழுநர்த்
தட்டுநலி வினையிடைச் சாவுர்ந் தனர்கில
ரறிவுடைக் குழவி யாற்றலொடு பெறுகுவ
ரென்குநர் வதுவை யில்லுழி மலர்ந்த
மாதரார் தங்கண் மனன்பிறர் தம்மைக்
காதல் கூர்ந்து கருதா தேயோ
காதல் கூர்ந்த கணவரை யேயோ
மணப்பர் பிறர்தமை வதுவைபுரி யாரோ
முன்னுள்ளி னோரைப் பின்னே யெள்ளலு
முன்னெள்ளி னோரைப் பின்னே யுள்ளலு
நன்னெறி கொல்லோ நாள்சில பழகிக்
... கமிப்பிற்

கினியது கொல்லோ வின்றுணை யிழவழிந்.
தினைவுறு நங்கைய ரிற்றைஞான் றிலர்கொ
லினைய வதுவையொடு கைமைநோற் கில்லாப்
பெண்டிர் வதுவையும் பேணுநர் மாண்ட
பெரும்பொருள் பெறீஇயர் பேரியாண்டு படைத்த
வருநதுணை யிழந்த வாயிழை யவரை
வரைந்த வறனில் வன்னெஞ் சோரே
புயனேர் கூந்தற் பிறைநோ நறுநுதற்
கயனேர் பிறழ்கட் கனிநோ செவ்வாய்க்
குறுமக ளோரைக் கொதிக்கவைக் குநரே
யினிமற் றம்மா வெழிலிள மகாரை
யனையர்தங் நலனே தந்நல னுக்குஞ
சான்றோ ரறிவறீஇத் தக்காக கினிதளிக்
தான்றவன் பிருவரு மளாஅய்நல னெய்த
நன்று டோறு நயந்தழைத தளபயில்
வண்மையொ டொருவர்மற் றொருவர்க் குபிருட
னண்ணின ராக நட்பமர் காதலைத
தொட்டிற் பழக்கத் துறைபபாற் படுத்தி
வாய்வெறுப்பு முதல மாய்த்துவந தனரே
யாதலிற் சீரிள வாய்தொடி யவரை
யேதமில் காளையர்க் கீகென்
றோதினர் மூதுரை யொண்டவத் தோரே.

---

(இ—ள்). மலர்ந்து=(மகளிர்) பூத்த பின்னர்;

வளன் உற=(தாயும் குழந்தையும் இனிதாக வாழவேண்டிய) வளப்பத்தைப் பொருந்த;

வளர்வன வளர்தல்=வன்மை பெறுவான் வளரவேண்டிய உறுப்புக்கள் வளர்ந்துவருதலை;

வாய் மடவோர்=பொருந்திய மங்கையர்கள்;

கருத் தரித்தற்கும் நோயின்றி வருதற்கும் காரணமாகச் சில உறுப்புக்கள் வன்மை பெற வேண்டுமாதலின் மங்கையர்கள் பூத்த பின்னர்ச சிலகாலம் மணவா திருத்தல் வேண்டும் என்றபடி.

தம் மனன் பூத்தோரை=தங்களுடைய மனம் எவரை மணஞ் செய்யின் மலர்வுறுமோ அவர்தம்மை;

ஆய்ந்து வதுவை அயர்ந்தனர் ஆயின்=தாமே ஆராய்ந்து மணந்துகொண்டா ராயின்;

பலருடனும் பழகி வருதல் தோன்ற "ஆய்ந்து வதுவை" என்றார்.

நட்பு இடை அறுகிலர்=அம் மணந்த இருவரும் நேசப் பாங்கில் இடையில் அறுபட்டுப் பிரியார்;

அங்ஙனம் ஆராய்ந்து நட்பவர்தம் நட்பு,கலைவளர் இளமதியம்போல நாடோறும் இன்பம் வளர்ந்து நிறைவுற அன்பான் அகமலர்ந்து மகிழ்ச்சியுற்று அவையிடை ஆடை குலைந்தாற்குக் கைசென்றுதவுமாறு ஒருவர்க்கு நேரிடுந் துன்பத்தை ஒருவர்களைந்து அறமுதலியவற்றை ஒல்லும் வகையான் ஓவாது புரிந்து வருதற்குக் காரணமாகுமென்க. இத்துணை அருமை வாய்ந்த

நலனெலாம் குணம், குடி, ஒழுக்கம், செல்வம், கல்வி முதலியவற்றுள் தமக்கு ஏற்பன உடையாரைத் தெரிந்துநட்டு மணஞ்செய்வதாற் கைகூடும். அங்ஙனம் பொருந்துவகை கண்டு மணவாதார் நட்புங் கேட்டினையே விளைக்கும் என்க. இவற்றானே மடவோரும் ஆராய்ந்து மணமயர்தல் வேண்டு மென்பார் "மனன்பூத்தோரை" எனவும், அம்மனன்பூத்தோரும் பொருந்தாச் சில குணங்களை மறைவாக வைத்துளராயின் ஒருபயனும் எய்தப்பெறாராதலின் ஆராய்தல்வேண்டு மென்பார் "ஆய்ந்து" எனவும், தாமே ஆராய்ந்து தேடிய ஆடவர்க்குத் தம்மேல் விருப்பஞ் செல்லா தொழியிற் பயனில்லை யென்பார் "வதுவை யயர்ந்தன ராயின்" எனவும், இவ்வாறு மனன் ஆராய்தற்குக் காரணங்களாகிய பூத்தலும் வளர்வன வளர்தலும் இன்றியமையாதன என்பார் "மலர்ந்து வளர்வன வளர்தல்" எனவும், அவரே அங்ஙனம் எல்லாம் ஆய்ந்து மணத்தற்குரியார் என்பார் "வாய்மடவோர்" எனவும், அவ்வாறு அவற்றை யெல்லாம் வாய்ந்தனரேனும் சிற்றின்பத்தில் மனஞ் செல்லும் இயல்பிலரேற் பயன் இல்லை என்பார் "மனன் பூத்தோர்" எனவும் கூறினர். இப்பிறன்கோளை விதண்டை என்னும் அளவை முறையாகத் தாமே கூறுவான் எடுத்துக் கொண்டார். (விதண்டை—தன்மத நிறுத்திப் பேசல்.)

நாள் இடை கொழுநர் தட்டு நலி வினை சார்ந்து அனுர்கிலர்=(மணஞ்செய்து வாழ்ந்து வருகின்ற) நாளிடையே நாயகரை இழந்து அவ்விழவுகொண்டு வருந்துகின்ற செயலிற் பொருந்தித் துன்பப்படார்;

பூத்து நாட்கழித்து வருதலான் உடல்வன்மையும், விரும்பிய கொழுநரை மணத்தலான் மனமகிழ்ச்சியும் உடையராதலின் அவர்பிணியிடைப் பட்டு வருந்தார் என்க.

அறிவு உடை குழவி ஆற்றலொடு பெறுகுவர்=(இருமையையும் விளக்குதற்குக் காரணமாகிய நல்ல) அறிவினையுடைய குழந்தைகளைத் தேகவன்மையோடு பெறுவார்கள்;

தாயும் கருவீனுந்துயருறாள் குழந்தையும் வன்மையுற்று விளங்கு மென்பார் "ஆற்றலொடு பெறுகுவர்" என்றார். முற்கூறியவாறு நிகழப்பெறாவிடிற் றாயும் குழவியும் பிணியுற்று நலிவர் என்றுங் குறிப்பித்தாராயிற்று.

என்குநர்=என்று (நமது பண்டை வழக்கத்தை இகழ்ந்து ஒதுக்கிக்) கூறுபவர்கள்;

பண்டைய வழக்கங்களாவன பூக்குமுன் எட்டு வயதளவில் மணமுடித்தல், பூத்துச் சில நாளுக்குள் ருது சாந்தி செய்தல் முதலியனவாம்.

எட்டு வயதுடையவள் கௌரி என்றும், ஒன்பது வயதுடையவள் உரோகிணி என்றும், பத்து வயதுடையவள் கன்னி என்றும், பன்னிரண்டு வயதுடையவள் விடளி என்றும், பெயர் பெறுவர். கௌரியைத் தானஞ்செய்தோன் சுவர்க்கத்தையும், உரோகிணியைத் தானஞ்செய்தோன் வைகுண்டத்தையும், கன்னியைத் தானஞ்செய்தோன் பிரமபதத்தையும், விடளியைத் தானஞ் செய்தோன் ரௌரவ நரகத்தினையும்எய்துவர் என்றும், பன்னிரண்டு வயதிற்கு மேற்பட்டவளைத் தானஞ் செய்தோன்பெறுங்கதி சொல்லமுடியாத் துயரத்தினதாகுமென்றுங் கூறுப.

பூக்குமுன் விவாகஞ்செய்யவேண்டுமென்னும் இவ்விதி முதல் வருணத்தார்க்குள்ளன்றி க்ஷத்திரியர்க்குள்ளும் வழங்கியதாகத் தோற்றவில்லை. அக்கினியில் மூழ்கி எழுந்த சீதாபிராட்டியும், இறந்த கணவனை எமனிடமிருந்து மீட்டுக்கொடுவந்த சாவித்திரியும், வேடனை விழித்து நீறாக்கிய தமயந்தியும், ஏழுநாள் அளவும் பொழுது விடியாதிருக்கச்செய்த நாளாயினியும், தன் வஸ்திரத்தைப் பெருகச் செய்து மானத்தைக்காத்த திரௌபதியும், ராஜ சுகத்தைத் தள்ளிவிட்டுத் துறவியாகிய அகத்தியரை வேட்டுத் தொண்டு செய்துவந்த லோபாமுத்திரையும், அன்னபலபிறரும் பூத்த பின்னரே கல்யாணஞ் செய்யப்பட்டவர்களாகத் தெரியவருகின்றது.*

ஆதியில் எல்லோரும் பிராமணர்களா யிருந்ததாகவும், பிறகுதான் அவர்களுடைய குணத்துக்குத் தக்கவாறு வருணாச்சிரம தர்மம் ஏற்பட்டதாகவும் மகாபாரதம் சாந்திபர்வம்

* பிராமண வருணத்துப் பெண்மக்கள் இங்குக் கூறப்படாமை சிந்திக்கற்பாலது.

188வது அத்தியாயத்தில் பிருகுமகாரிஷி பாரத்துவாச முனிவர்க்குச் சொன்னதாகக் கூறப்பட்டிருக்கின்றது.

பண்டைய வழக்கமெனக் கூறப்பட்டாலும் அது மிகவும் பூர்வீகமுடைத்தாய்த் தொன்றுதொட்டுப் பயின்றுவந்த வழக்கமெனக் கோடற்குப் போதிய ஆதாரமில்லை. இந்தியாவின் பல பாகங்களையும் கைக்கொண்டு குடியேறிய மகமதியருள் துஷ்டரானோர் விவாகமான பெண்களைப் பலாத்காரஞ்செய்யின் பழியும் பாவமும் ஏற்படுமென்றஞ்சி விடுத்துத் தந்தைதாயர் வீட்டின் இளம்பெண்களை அபகரித்தும் சிறைப்பிடித்தும் வந்தார்கள் என்றும், அவர் கொடுமையினின்று பெண்களைக் காக்கும்பொருட்டே பாலிகா விவாகம் செய்யும்விதி ஏற்பட்டதென்றும், சாத்திர சம்மதமில்லாவிடில் இவ்விதி அநுட்டிக்கப்படாதென்றெண்ணி அதற்கு ஆதாரமாகிய சில சுலோகங்களைச் சில ஸ்மிருதிகளில் நுழைத்தனரென்றும் கூறுப. இவ்விடயத்தைப்பற்றி ஸ்மிருதிவாக்கியங்களும் பலதிறப் பட்டு முரணும். பிரௌடையாகி மூன்று வருடத்தின்பிறகு ருது சாந்தி செய்யப்படவேண்டுமென்னும் இதுபோன்ற பிற பல விதிகளும் சில ஸ்மிருதிகளுக்கு உடம்பாடாக மற்றவைக்கு மாறுபாடாகும்.

மகாபாரதம் ஆதிபர்வம் 122வது அத்தியாயத்தில் பாண்டு மகாராஜன் குந்தியை நோக்கி "ஆதிகாலத்தில் ஸ்திரீகள் வீட்டுக்குள் அடைக்கப்பட்டுப் புருஷர்கள் முதலிய பந்துக்களின் நிர்ப்பந்தத்துக்கு உட்பட்டிருக்கவில்லை. அவர்கள் மனம்போன பிரகாரம் அனுபவித்துக் கொண்டு சுகமாய் இருப்பது வழக்கம். அதனால் அவர்கள் பாபிகளாக மதிக்கப்படவில்லை. ஏனெனில் அதுவே அக்காலங்களில் ரிஷிகளால் அங்கீகரிக்கப்பட்ட வழக்கமாயிருந்தது. ஒரு ஸ்திரீயானவள் ஒரே புருஷனுக்குச் சீவ தெசைவரையிற் கட்டுப்பட்டிருத்தல் என்பது சமீப காலத்திற்றான் ஸ்தாபிக்கப்பட்டது" என்று கூறினதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இம்மாறுதல் உத்தாலரிஷியின் குமாரர் சுவேதகேது என்ற மகாரிஷியால் ஏற்படுத்தப் பட்டதாக மேற்படி சம்பவத்தின்பின் அதே அத்தியாயத்தில் விரித்துச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்தியாவின் வடபாகத்தில் வழங்கும் பாரதம் இராமாயணம் முதலாய நூல்களைத் தென் பாகத்தில் வழங்கும் அவ்வந் நூல்களோடு ஒப்பிட்டு நோக்கின் பலப்பல வேற்றுமைகளும் திரிபுகளும் காணப்படுமென்று அறிஞர் கூறுப.*

வதுவை இல் உழி மலர்ந்த மாதரார் தங்கள்=மணம் இல்லாத பொழுது பூப்படைந்த மகளிர்தங்களுடைய;

மனன் பிறர் தம்மை காதல் கூர்ந்து கருதாதேயோ=மணமானது பின்னர் மணக்கப் பெறாத ஆடவரை அன்புகூர்ந்து நினைக்கப்பெறாதேயோ; (நினைக்கு மென்றபடி.)

காதல் கூர்ந்த கணவரையேயோ மணப்பர்=அன்புகூர்ந்த கணவரையேயோ மணந்து கொள்வர்;

பிறர் தம்மை வதுவை புரியாரோ=முன்னர்க் காதலிக்கப்பெறாத ஆடவர் தம்மைப் பின்னர் மணம்புரிந்துகொள்ளாரோ;

முதற்கண் ஒருவரைக் காதலித்த மடவரல் அதுபொழுதுள்ள ஏனைய ஆடவரையெல்லாம் அவர்க்குப் பொருந்தாதார் என்றே எண்ணியவராவர். ஆதலின் பின்னர்க் காதலிக்கப்பட்டார் எள்ளினோரின் பாற்படுவர் என்க.

முன் உள்ளினோரை பின்னே எள்ளலும்=முன்னே காதலிக்கப்பட்டாரைப் பின்னே இகழ்ந்து ஒதுக்கிவருதலும்;

* இக்காட்டியவற்றின் உண்மையை இதுவென ஆராய்ந்தறிய வேண்டிற் "செந்தமிழ்த்" தொகுதி பதின்மூன்றிலே 357ம்பக்க முதலாகியவற்றையும், மேற்படி தொகுதி பதினொன்கிலே 18,22,89,97,209 என்னும் இவற்றை முதலாகக் கொண்ட பக்கங்களையும் நோக்குக.

முன் எள்ளினோரை பின்னே உள்ளலும்=முன்னே இகழ்ந்து வந்தவரைப் பின்னர் நினைந்து காதலித்துவருதலும்;

இக்காட்டியவற்றைக் கைக்கொள்வோர் மணந்த பின்னரும் தமக்கியைபில்லாதாரை அங்ஙனமே ஒதுக்கியும் பிறரை வேட்டும் வருவர் என்றபடி.

நல் நெறி கொல்லோ=சன்மார்க்க மாகுங் கொல்லோ;

முன்னுள்ளினோரைப் பின் எள்ளுதலும், முன் எள்ளினோரைப் பின் உள்ளுதலும் என இருபாற்படுத்தினாரேனும் அவ்விருபாலுள் அடங்காதாரை அறிஞர் அவ்விரண்டத்தொருபாலுள் ஏற்றபடி படுத்துவர் என்க. எத்துணையைப் பகுப்புப்படுத்தினும் உள்ளுதற்கண்ணும் எள்ளுதற்கண்ணும் அவையெல்லாம் அடங்குதலின் அங்ஙனம் கூறினார் என்க.

[நாள்சில பழகிக் கலத்த லன்பொடு பலநாட் கழிப்பிற் கினியது கொல்லோ] பல நாள் கழிப்பிற்கு சில நாள் பழகி கலத்தல் இனியது கொல்லோ=(அவ்விருவரும்) பலதினம் (இல்லற நடத்துவான் வேண்டி அன்பு பூண்டவராகிப்) போக்குங் காரியத்திற்குச் சிலநாள் தாமிருவரும் பழகி வருதல் காரணமாக மணஞ்செய்து கோடல் இனிமை தருவ தொன்றாகுங் கொல்லோ;

மணமகன் மணமகளாகிய இருவரையும் "ஆயிரங் காலத்துப் பயிர்" என்று கூறுதல் உலக வழக்கம்.

பூத்து வளப்பம் பெற்றாள் மனம் ஆடவர்தம் அழகு முதலியவற்றிற் சேறமே யன்றிக் குலமுதலியவற்றிற் சேறாது. மணந்தபின்னரே அவ்விருவர்தம் ஒற்றுமையும் பேதமும் நன்கு விளங்கு மன்றிச் சிறுகால வெறும் பழக்கத்தால் அறியப்பெறா. எங்ஙன மெனில், இருவரும் சம்பந்தப்பட்டு வயமாகியபின்னரே தத்தமக் கியற்கையாயுள்ள தீய சுபாவங்களையெல்லாம் படிப்படி வெளிவிடுவரன்றி முன்னர்க் காட்டாது மறைத்து வருதலினாலென்க. இதுபற்றியே அன்னார் தம்முள் மணந்த பின்னரும் பிரிவு நிகழ்தல் இயல்பாயிற்று. ஆதலின் மகளிரும் மைந்தரும் பெற்றோர்தம் உடம்பாடின்றி மணந்து கோடல் தீங்குபயத்தற் கேதுவாகும் என்க.

இன் துணை இழவு அழிந்து இனைவு உறும் நங்கையர் இற்றை ஞான்று இலர் கொல்= இனிய உயிர்த் துணைவராய நாயகரை இழத்தலினானே மனமழிவுற்று வருந்துகின்ற மங்கையர்கள் இக்காலத்தில் இல்லா திருக்கின்றனரோ;

பூத்து மணந்தார் தங்கணுபகரை இழந்து வருந்தும் வழக்காறில்லையோ என்றபடி.

இனைய வதுவையொடு=(பூத்து மலர்ந்து வளப்பம் பெற்ற பின்னரே மடவோர் மனன் பூத்தோரை மணந்து கொள்ளலாமென்ற) இத்தகைய மணத்தினோடு;

கைம்மை நோற்கில்லா பெண்டிர் வதுவையும் பேணுநர்=(கணவனை இழந்து எரியிடைப் படாது) கைமை நோன்பாற்றாமல் (காமமே கனிந்துருக) இருக்கின்ற பெண்களை மணந்து கொள்ளவும் விரும்புகின்றார்கள்;

உலகத்து முறைகள் பலவும் நடைபெறுதல் பெரும்பாலும் ஆடவர்தம்மா லாகலின் கைமைப் பெண்டிரை மணத்தலும் அவ்வாடவர்மே லேற்றப்பட்டது. பெண்ணாலேயே வாழ்வுந் தாழ்வும பெறப்படுதல் கண்கூடாதலின், கணவனை இழநதவள் ஆக்கங் கெட்டவ ளெனப் படுவள். "மேவு காதலன் வீயப் புனல்பொழி—காவி யங்கட் கலன்கழி மாதரை—ஆவி நீக்கிக் கிடந்திடும் யாக்கைபோல்—யாவ ருந்தொட நீதென் றியம்புவார்" என்று காசிகண்டம் கூறும்.

மாண்ட பெரும் பொருள் பெறீஇயர்=மாட்சிமைப்பட்ட பெரிய பொருளைப் பெறும் பொருட்டு;

ஒருவன் மாண்டகாரணத்தால் வந்த பொருள் எனவும், தனது முயற்சியான் வரப்பெறாமையின் அழியும் பொருள் எனவும்,நன்மைக்குப் பயனபடாமையால் உயிரற்ற பொருள் எனவும், முன்னோனைக் கொன்றது போலத் தன்னையுங் கொல்லும் பொருள் எனவும் பொருள்படுமாறு

"மாண்ட பொருள்" எனக் கூறினர். அவாவின் மிகுதி தோன்றப் "பெரீஇயர்" என்றளபெடுத்தது. இதனைத் தொழிற் பெயராக்கியுமுரைப்ப. பலபேரையும் மணந்து கொன்ற மாட்சி சான்ற பொருள் எனினும் ஒன்றும். தன் பொருளையும் அவள் பொருளோடு சேர்த்துவிட்டுத் தானும் மாண்டு போவான் என்று குறிப்பித்தாராயிற்று.

பேர் யாண்டு படைத்த அரும் துணை இழந்த ஆயிழை அவரை = தம்மினும் மூப்புற்ற அரிய உயிர்த் துணையாயிருந்த கணவரை இழந்த ஆராய்ந்த ஆபரணங்களை உடைய மடவோரை;

ஆடவர் தம்மினும் மூப்புடையார் என்று குறிப்பித்தற்குப் "பேரியாண்டு படைத்த" எனவும், மிக்க அன்பாயிருந்த கணவர் இறக்கவும் வன்னெஞ்சினராய்ப் பின்னரும் மணமுடிக்க நினைந்தனரே என்பார் "அருந்துணை யிழந்த" எனவும், அவர் இறந்த துயரும் இல்லை என்பதூஉம் தமது மூப்பினை மறைத்து அழகுபடுத்தற்குப் பலபணிகளையும் புனைந்து கொள்ளுகின்றனரே என்பதூஉம் போதர "ஆயிழையவர்" என்றுங் கூறினர். அருந்துணை யிழந்தவரொன்று இரக்கங் கொள்ளாதும் தம்மையும் இழந்த பின்னர் அங்ஙனமே பிறரையும் மணப்பர் என்று எண்ணாதும் மணக்கின்றனரே எனபார் "அருந்துணை யிழந்த" என்று கூறினர் எனினும் பொருந்தும்.

வரைந்த அறன் இல் வல் நெஞ்சோரே = மணமயர்ந்த அறம் பயிலாத வலிய நெஞ்சினையுடைய ஆடவரே;

அறத்தால் அடையப்பெறும் பயன் இன்மையால் "அறனில்" என்றும், மேற்கூறிய இடர்களுக்கெல்லாம் அஞ்சாது மணத்தலின் "வன்னெஞ்சோரே" என்றும் கூறினர். ஒருவற்கு உயிர்த்துணையாயிருந்தனளே யென்று உருகாத நெஞ்சுடையாரென்பது போதர அங்ஙனங் கூறினர் எனினும் ஒக்கும்.

புயல் நேர் கூந்தல் = மேகத்தை ஒத்த கரிய கூந்தலையும்;

பிறை நேர் நறு நுதல் = மூன்றாம் பிறையை ஒத்த நல்ல நெற்றியினையும்;

கயல் நேர் பிறழ் கண் = கெண்டை மீனை ஒத்த பிறழ்கின்ற கண்களையும்;

கனி நேர் செய் வாய் = கொவ்வைக் கனி போன்ற சிவந்த இதழினையுமுடைய;

குறு மகளோரை கொதிக்க வைக்குநர் = சிறிய மகளிர்தம்மையெல்லாம் மனங்கொதித்து வருந்துமாறு வைத்து வதைக்கின்றார்கள்;

கணவரை இழந்து கைம்மை நோற்காது பேரியாண்டு படைத்தவர்களை அவர்களின் செல்வத்தை வேட்டு மணம் அயர்வதால் கன்னியர் மனங்கொதிப்பர் என்றவாறு. இந் நிகழ்ச்சி மேனாட்டிற் பெருவழக்கம் பெறுகின்றது.

இனி (மற்று, அம்மா) = அப்பால்;

எழில் இளம் மகளிரை = அழகும் இளமையும் வாய்ந்த பெண்களை;

பூக்கப்பெறாத சிறு பெண்களை என்றபடி.

எழில் யாவர்க்கும் பொதுவாய தொன்றன் றேனும் கவிச்சுவை யூற்றெடுக்கும் வண்ணம் அங்ஙனம் அடை புணர்த்திக் கூறினர் என்க. இளமைக்கும் ஒப்பெழில் உண்டென்பது தோன்ற அங்ஙனங் கூறினர் என்றலும் ஒன்று.

அனையர் தம் நலனே தம் பயன் ஆக்குநர் = அம்மகளிர் பெறுகின்ற நன்மையையே தமக்குக் கிடைக்கின்ற நன்மையாகவாக்கிக்கொள்ளும்,

அவர்தமக்குப் பிறிதோர் நன்மை இல்லை என்றபடி.

சான்றோர் அறிவு அறீஇ = பெற்றோர் முதலிய பெரியோர்கள் (அவரது நிலைமையை) அறிவானே உணர்ந்து;

தாய் தந்தை சுற்றத்தார் என்றற்றொடக்கத்தினரெல்லாம் அம்மகளிர்க்கு வேண்டிய நலனை அறிதலின், "அறிவரீஇ" என்றனரெனப்படுத்தது. இத்துணையோரும் ஆராய்தல் வீண் எனவும், அவர் தாமே ஆராய்ந்து மணத்தல் நலன் எனவும் கூறுவோர் நுட்பமதிதான் இருந்தவாறென்னையென் றிகழ்ந்து விடுக. இனி அவர் விரும்புவது அழகு முதலியவற்றை என்பது பலர்க்கும் உடம்பாடாதலின அவற்றால நிகழப்பெறும் துன்பங்களுக்கு ஓர் அளவில்லை என்க.

தக்கார்க்கு இனிது அளித்து=(இம்மங்கையர்தம் குலம், குடி, செல்வம், ஒழுக்கம், வனப்பு முதலியவற்றிற் கிசைந்த) தகுதியுடையார்க்கு (அவ்விரு பாலாரும்) இனிமைபெறும்படி மணஞ்செய்துகொடுத்து;

ஆன்ற அன்பு இருவரும் அளாஅய் நலன் எய்த=நிறைந்த அன்பினால் (மணமகனும் மணமகளு மாகிய அவ்) இருவரும் (ஒருவரோடொருவர்) அளவளாவி வருதலினாலே நன்மையைப் பொருந்தும் வண்ணம்;

அன்புப்பெருக்காற் பொருளின் அமைதியைக் கருதாமல் நட்பு மேலிடும் என்பது தோன்ற "ஆன்றவன்பின்" என்றார். அவ்வன்பும் அளவளாவிவரும பழக்கத்தானே எய்தப்பெறும் என்பது தோன்ற "இருவரு மளாஅய" என்றார். எக்காலத்தும் அவ்வா றளவளாவிவரின் மனம் உவக்கும் என்பதும் அறவே அளவளாதுவிடின் மனத்திடை யன்புதோன்றப்பெறா தென்பதூஉம் கண்கூடாதலின், வெய்யிலைக் காட்டி நிழ லருமையை நாட்டுதல் போல நல்லன சில நாட்டி அவரை ஒன்று கூட்டி நன்குமதித்து வருவர் என்க. இவ்வாறு அளவளாவி வருதலே நற்பயன தரூஉம் என்பதும், அதுவே பின்னர் எய்தப்பெறு நன்மைகட்கெல்லாம தோற்றுவா யென்பதும தோற்றுவித்தற்கன்றே "அளாஅய்" என்றனரெனப்படுத்தது. அவ்விருவர்தம் அன்பும அழகுடைமை போகந்துய்த்தல் என்றகாரணங்களைக் கருதாமல் இயற்கையிற பிறந்து வளர்வதொன்றாதலின் அது எவை நேரினும் இடையறாது நலந்தரத்தக்கதாகும். வேறுவகையாகத்தோன்றும அன்பெல்லாம் தீமையுடைத்தெனக் கண்டு கொள்க.

நல் நாள் தோறும் நயந்து அழைத்து=விசேட தினங்கள்தோறும் விரும்பி அழைத்து வந்து;

சிலநாளில் மணமகள் வீட்டுக்காரரும் சிலநாளில் மணமகன் வீட்டுக்காரரும் தம்பதிகளைத் தத்தம இல்லத்திற்கு அழைத்துவந்து நன்குமதித்து வருவர் என்க. அந்நாட்கள் ஆடி ஆறாம் மாதம், ஆவணியவிட்டம், தைப்பொங்கல், சித்திரைவருடப்பிறப்பு, தீபாவளி முதலியனவாம்.

அளப்பு இல் வண்மையொடு=அளவில்லாத சீரோடு;

அணி ஆடை முதலியவற்றை அழைத்தவர் கொடுப்பார் என்றபடி. கொடுக்கும் அளவு அவ்வவர்தம் பொருணிலைக்கேற்ப அமைதலின் "அளப்பில்" எனக் கூறினர். இனிக் கொடுக்கப்படுவது அளவிற சிறியதேனும் அவர்தம் அன்புடைமை அளவிடுதற் கரியதாம் என்பது கருதி அவ்வாறு கூறினர் என்றலும் ஒன்று.

ஒருவர் மற்று ஒருவர்க்கு=(மணமகன் மணமகள் ஆகிய அவ்விருவருள்) ஒருவர் மற்றொருவர்க்கு;

உயிர் உடல் நண்ணினர் ஆக=தம்முயிரே அவர்க்கு உடலாகப் பொருந்தியவராக;

என்றது மணமகன் தன்னை உடலாகவும் மணமகள் தனக்கு உயிராகவும் அங்ஙனமே மணமகளும் மாறி நினைத்து வருதல். உயிர் பெறு நுகர்ச்சி யெல்லாம் உடல்வழியே எய்தலானும், உயிரில்வழி உடலாற் போந்தபயன் ஒன்றுமில்லை யாதலானும் அவ்விரண்டும் ஒன்றற்கொன்று இன்றியமையாதனவாகும். இவற்றை யெல்லாம் வேண்டியவாறே ஏற்றபெற்றி விரித்துரைத்துக்கொள்க. இவ்விருவரையும் அச்சிறந்த நாள்களிலே அவர்தம்பெரியார் பிறர் எவரினும்

நன்குமதித்து உபசரித்துவருதலின் அவ்விருவரும் தாங்களே சிறந்தவர் என்ற எண்ணந் தோன்றப்பெற்று முற்கூறிய வண்ணம் நினைத்துவந்து மேம்படுவர் என்க. உயிராக நண்ணினர் என்பதுவே சாலும் ஆகவும் உடலென மிகுத்துக் கூறிய தென்னையெனில், உடலை விடுத்துத் தம் முயிரை உடலாக நினைக்குந் தன்மைபற்றியென்க.

நட்பு அமர் காதலை = அவ்விருவர்க்கும் நட்பானது அங்ஙனம் நிலைத்து வருதலினால் உண்டாகும் விருப்பத்தை;

காமத்தை அறியாத அவர்க்கு வேறு சிறப்பு முதலியவற்றால் நட்புப் பல்கிக்கொண்டே வருதலின் அவர்க் குண்டாகும் விருப்பத்தை "நட்பமர்காதல்" என்று சிறப்பித்துக் கூறினார். அழகின்மை பிணி வறுமை முதலியவற்றானே கணவன் தாழ்வுறினும் அவர்க்கு அமைந்த காதல் நீங்கப்பெறாது என வற்புறுத்தற் பொருட்டே "நட்பமர் காதல்" என்றார் என்றலும் அக்கருத்தையே வலியுறுத்தும். பூத்தலுற்று வளப்பமபெற்ற மங்கையர் தங்கள் மணம் பூத்தோரை வதுவை யயரின் பிணி முதலியவற்றான் அழகு முதலியன கெடப்பெறின், அவரை வெறுத் தொதுக்குவரென்க.

தொட்டில் பழக்கம் ஒருபால் படுகி = இளமையிலே பழகிய பழக்கம் (எவ்வாறு மாறுபடாதோ அவ்வாறே இவர்தம் காதலும் வேறுபடாதிருக்கப் பெற்றது). வழியிலே பொருந்தி;

தொட்டில் என்பது ஆகுபெயராய் நின்று இளமையை உணர்த்துகிறது.

வாய் வெறுப்பு முதல மாய்த்து வந்தனர் = (நீண்ட வயதாலும் பிறவற்றாலும் எய்தும் வறுமை, பிணி, அழகின்மை, வன்மையின்மை, குணமின்மை முதலியவற்றால்) உண்டாகும் வெறுத்தல் முதலியவற்றை (அறிவாலும் அனுபவத்தாலும் மேம்பட்ட சான்றோர்கள்) நீக்கி வந்தனர்;

ஒரு புதியோன், புக்குண்ணும் இல்லத்தின் சோறுடைய குழலி யொன்றிருப்பின் அதனை முதற்கண் வெறுத்தும் பழக்கவயத்தால் வரவர விருப்பமுற்றுக் கொண்டுவருதல்போல இவ்விருவரும் பழக்கவயத்தால் எத்துணையிழிவு தோன்றப் பெறினும் அவற்றையெல்லாம் ஒரு பொருட் படுத்தாது விருப்பஞ் செய்துவருவரென்க. இழிசனர் தம வாழ்க்கையின் பொருட்டுக் கூலி நோக்கி மலமுதலிய அழுக்குகள்சுமந்து செல்லுதலும் இதனை நன்குவிளக்கும். மாய்த்து உவந்தனர் என்றும் பொருள்கொள்ளலாம்.

ஆதலின் = அதுகாரணத்தானே;

சீர் இளம் ஆய்தொடியவரை = சிறந்த இளமைவாய்ந்த ஆராய்ந்த வளையல் அணிந்த கன்னியரை;

மணத்திற்குச் சிறந்தது கன்னிப்பருவம் என்பது தோன்றச் "சீரிளம்" என்றும், பாணிக்கிரகணம் (கைப்பிடித்தல்) என்ற பெயர்க்காரணத்தால் கையே சிறந்ததென்பது தோன்ற "ஆய தொடியவரை" என்றும் கூறினார்.

ஏதம் இல் காளையர்க்கு ஈக என்று = குற்றமில்லாத காளைப்பருவத்தினர் தமக்குக் (கன்னிகாதானம் செய்து) கொடுக்க என்று;

குலம் குடி செல்வம் ஒழுக்கம் அழகு நற்குணம் நற்செய்கை ஒப்புமை ஆண்டன்மை அன்பு முதலியவற்றிற் குறைவிருத்தல் கூடாது. அவற்றைத் திரிகரண சுத்தியாக இயன்றவரையில் ஆராய்தல் அவர்தம் பெரியார்க்குக் கடனென்பது தோன்ற "ஏதமில் காளையர்க்கு" என்றும், அவ்விருவர் சார்பிலே மணத்தற்கு விடுதல்கூடாது தாமே அவற்றையெல்லாம் செவ்விதின் ஆய்ந்து கொடுத்தல்வேண்டும் என்பார் "ஈக" என்றும் கூறினார்.

மூது உரை = பழமையான (நன்மை செய்துவரும் அநுபவமுதிர்ந்த) சொல்லினையும்;

மூதுரையை மறையெனக் கோடலும் ஒன்று.

ஒண் தவத்தோர் = ஒண்மையைத் தருகின்ற தவத்தினையுடைய பெரியார்;

நித்தியாநித்தியப் பொருள்களை நன்கு விளக்கி மனவிருளை அறவே யகற்றி நன்மை செய்து தம்மை அழியவிடாது காத்துவருதலின் "ஒண்டவத்தோர்" என்றார். தம்முடலை வருத்தி உலகுக்கு நன்மைசெய்து வருவாராதலின் ஒண்டவம் என்றலும் ஒன்று. இவற்றின் விரிவைப் புறநானூறு, மணிமேகலை, சிலப்பதிகாரம், திருக்குறள், நாலடியார் முதலியவற்றுட் கண்டு தெளிக. விரிப்பிற் பெருகும்.

கூறினர் = உரைத்தருளினோர்;

ருதுமதி விவாகத்தை மறுத்துக் கண்டனஞ்செய்வோர் மணமுடித்தல் விசேடமாகச் சிற்றின்ப நுகர்தற் பொருட்டென்று மாறுபடக் கருதி வன்மையுறவேண்டிய உறுப்புகள் வளர்ந்து முற்றுமுன் மணந்து போகந் துய்த்தவரின் உடலம் பழுதடையுமென்று கூறுவர். மணத்தின் பரிசுத்தமாகிய நன்னோக்கத்தையும், இயல்பையும், செய்யும் முறைமையையும், போகந் துய்த்தற் குரிய விதிவிலக்குகளையும் உள்ளவா றுணர்வாராயின் அங்ஙனங் கூறமாட்டார். அறிவிற் குறைந்த விலங்கினங்களும் எத்துணைக் காமஞ் சான்றபோதிலும் எதிர்ப்பட்ட சோடுகளின் பருவமும் காலமும் நிலையும் பார்த்தன்றிக் கூடுமன்றி, மனம்போன வழியெல்லாம் புணர்வதில்லை. அங்ஙனமாகவும், அறிவிற்சிறந்த மனிதன் விதி வழுவியொழுகிப் பழிசுமக்கப் புக்கால் சாத்திரங்கள் என்செய்யும். மகளிர் பூப்படைய முன்னும், பூத்த மூவாண்டின்பின் ருதுசாந்தி செய்யப்படு முன்னும் புணர்ச்சிக் குரிய தல்லவென்றும், அவரவர் தேக நிலையுஞ் சாதி, குணம், தெய்வப பயிற்சி, சேட்டை, சுபாவம், இன்பம் முதலாயவற்றையுந் தேர்ந்தறியாது அவர்களைக் கூடுவோன் மயக்கு, குரங்கானது பிஞ்சு மாதுளங் கனியைப் புண்டு சாரங் குடிப்பதைப் போன்றதென்றும், கலவிக்கேற்ற காலமும் விதிவிலக்குகளும் இன்னின்னவையென்றும் முன்னோர் கூறிவைத்த நீதிகளைக் கைக்கொண் டொழுகின் நோய்க்கிடம் வருவதேயில்லை. "கற்றநூற் றுறைபோய்க் கடமனைக் கிழவ—னற்குண நிறைந்த கற்புடை மனைவியோ—டன்பு மருளுந் தாங்கி யினிதொழீஇ—விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி—யைவகை வேள்வியு மாற்றி யிவ்வகை—நல்லற நிரப்பும் பயபுகழ் நற்றாய்—பிறனமனை நயவான் றனமனை வாழ்க்கைக்கு—வரையா நாளின் மகப்பேறு குறித்துப்—பெருநலந் துய்த்தும் பெற்றித் தன்றே" எனவும் இல்லறவியல்பைச் சிதம்பர மும்மணிக் கோவை விரிப்பது நோக்குக.

---

## (9) அருமணி யனைய வரியவை டன்னைப் புறத்துக் காட்டுதல் புல்லியர் தொழிலெனல்.

பெறலரு மணியைப் பெற்றோன் பேணியு
ணிறைகாப் பிட்டு நேர்மையுறி கிலனுச்
செல்லுழி யெல்லாஞ் செல்லுவன் கொல்லோ
அஃதேய்ப்பப்,
பெண்டிரை நம்மனோர் பேணிவரு குநரே
பொன்னொடு பவளம் பொற்றொடி யான றுருற்றல்
கண்டவ ருளரோ நம்பவி னிம்மையொடு
மறுமைபெறு வினைக்கெலா மாதீர் வார்த்தே
யாறுமுத லாற்ற லறியா சேயோ
வுறமுயிர் வாழ்வுக் குரியவுட லோம்பற்

கன்னலர் துணைபே யுறுழந் லவற்றிற்
கின்றியமை கிலாத விருத்தலன் பன்றே
வேட்கை கருதிப் பிறர்வேட் பதுபோல
வேட்கில ருயிர்மை பாடொன் றுதந்தி
வெட்குநர் சான்றோர் வினைநலன் பலவெ
யில்லா துதவு பெண்டாட் டைந்த
மொய்வா னெருந வொழுகக் குறுகி
பொழுகலைக் கந்தேதா வொழிந்த
ரழுகலுறி வார்ந்த வறங்கடை போரே.

---

(இ-ள்.) பெறல் அரும் மணியை பெற்றோன் = பெறுதற் கருமையாகிய அரதன மணியை (தெய்வத்தன்மை பொருந்திய ரத்தினத்தை) ப்பெற்ற ஒருவன்;

கூறுதற்கெடுத்துக்கொண்ட பெண்பாலாரின் அருமை பெருமைகளை விளக்குதற்காகப் "பெறலருமணி" என்றார். உலகத்தார் மானிடர் பலவும் பெறற்பாலவாதலின் "பெறலரு மணி" என்பதற்குச் சொல்லெச்சம் அங்ஙனம் வருவித்துரைக்கப்பட்டது. சிந்தாமணி சூளாமணி போல்வது அம்மணி என்க.

பேழை உள் திறை காப்பு இட்டு = (பிறரால் எளிதிற் பெயர்த்தற்கும் உடைத்தற்கும் அரிதாகிய) பெட்டகத்துள் அதனை வைத்து நிறைந்த பூட்டினாலே பூட்டி;

நேர்மை புரிகிலனாய் = (இங்ஙனம் அகக்காப்புச் செய்தபின்னர் புறக்காப்புக்கேற்ற) முறைகளைச் செய்யாதவனாய்;

செல் உழி எல்லாம் செல்லுரன் கொல்லோ = தான் போகின்ற இடங்களுக் கெல்லாம் (அம்மணியைத் தன்னுடன்கொண்டு) செல்வானோ? (செல்லான் என்றபடி.)

"நிறைகாப்பு" என்றமையால் பேழைக்கு அங்ஙனம் சொல்லெச்சங்கள் வருவிக்கப்பட்டன. பேழையின் காப்புத் தன்மை நிலைபெறுதல் பூட்டினால் அமைதலின் "நிறை" என்னும் அடை புணர்த்திக் "காப்பு" என்றார். நேர்மை புரிகவாவது அறுக்கையான அறையுள் அப் பேழையை வைக்கலும், நம்பிக்கையுடைய காமரையேனும் காவலரையேனும் கொண்டும் காப்பாற்றதலும், அன்னபிறவும் செய்தலாம். இவை கருதிப் பேழையுள் வைத்தலை அகக்காப் பென்றும், நேர்மை புரிகலைப் புறக்காப் பென்றும் உரைக்காம். "செல்லுழி யெல்லாம்" என்றமையால் கொண்டு செல்லக்கூடிய இடங்களும் உண்டென்பது தானே பெறப்படும்.

அற்று எய்ப்ப = அவ்வாறே மான;

[பெண்டிரை நம்மனோர் பேணிவருகுநரே] நம்மனோர் பெண்டிரைப் பேணி வருகுநர் = நம்மவரும் தத்தம் பெண்மணிகளை விரும்பிப் போற்றி வருகினனர்;

மணிக்கு முன்னுரைத்தாங்கு பெண்டிருக்கும் ஏற்ப விரித்துரைத்துக் கொள்க.

ஒள் தொடி அவரை ஓரீஇ ஒன்று உறல் = ஒள்ளிய வளையல்களை அணிந்த அம்மங்கையரைப் புறம்பு படுத்தி ஒருகாரியத்தைச் செய்தலை;

பாணிக் கிரகணம் புரிந்த பெருமை தோன்ற "ஒண்டொடி" என்றும், எழுமையும் பழகி வரும் உழுவலன்பு தோன்ற "அவரை" என்றும் கூறினார். ஒருவுதலின் வழக்கின்மை காட்டு மாறு "ஓரீஇ" என்றளபெடுத்தது.

[கண்டவருளரோ நம்வயின்] நம் வயின் கண்டவர் உளரோ = நம்மவரிடத்திற் கண்டவரும் உண்டோ? (இல்லையென்றபடி.)

உயிர் மேம்பாடு ஒன்று கருதி வெட்குநர்=உயிரினது மேம்பாட்டுத் தன்மை ஒன்றினையே நினைந்து (நம்மவர்) மணமயர்கின்றனர்;

"பிறர்" என்ற இலேசானே நமர் என்றது வருவிக்கப் பட்டது. வெட்கிலர் என்றொழியாது "வெட்குநர்" என்றும் கூறினர், பிறரது இழிவும் நமரது உயர்வுந் தோன்றற்பொருட்டென்க.

சான்றோர் வினை நலன் பலவே=பெரியவர்களின் செய்கையாலுறும் நன்மைகள் பலப் பலவாகும்;

இவ்வாறாகவும்=(காரண காரியங்கள்) இத்தன்மைத்தாகவும்;

மேலை நாட்டவர் ஒவ்வா நெருநல் ஒழுக்குக்கு உருகி=மேனாட்டவர்தங்கள் பொருத்தமில்லாத நேற்றைய ஒழுக்கத்திற்கு மனநெகிழ்ந்து வசப்பட்டு;

ஒவ்வா ஒழுக்கம, நெருநல் ஒழுக்கம் எனக. புதுவொழுக்கம் என்பது போதர "நெருநலொழுக்கம்" என்றார். 'நேற்றைப்பையல்' என்பது உலகவழக்கு. ஒவ்வாவொழுக்கங்களாவன அரங்கங்களிற் பலரொடும அமர்ந்து பகரி போசனஞ் செய்தல், வேற்றாடவரோடு தனித்திருத்தல், உலாப்போதல், கைகொடுத்தல், கைகோத்தாடல், அரங்கி லாடன் முதலியனவாம்.

[ஒழுக்கவைத்த தந்தோ வொழிகுநர்] அந்தோ ஒழுக்கவைத்து ஒழிகுநர்=ஐயகோ (நமது நாட்டு நங்கையரை அவர்தமக்குடைய பழக்க வழக்க நடையினின்று பிறழ்ந்து) ஒழுகும்படி செய்து தாமும் கெடுகின்றனர்;

பெண்டிர்தம் பிறழ்ச்சியானே நேரும் இடையூறுகளுக்கு இரக்கமுற்று "அந்தோ" என்றும், அவரது நடைப் பிறழ்ச்சியே ஆடவரது கேட்டிற்குக் காரணமாதலின் "ஒழிகுநர்" என்றும், மடவோர் சுயாதீனமின்றி ஆடவர் சொற்படி ஒழுகுபவராதலின் "ஒழுக்கவைத்து" என்றும் கூறினார்.

அவர்தாம் யாவரோ வெனில்?

அழுக்கல் அறிவு ஆர்ந்த அறங்கடையோரே=அசுத்தமாகிய தீய மதிநிறைந்த பாவிகளே யாவர்;

அறங்கடையோர்—ஒழிகுநர் என்றுமுடிக்க.

அறங்கடை—பாவம். அழுக்கல் அறிவு—தனக்கும் பிறர்க்கும் கேடுறும் வண்ணம் பதன் கெட்ட அறிவுமாம்.

---

## (10) போற்றித் துன்பம் போக்குவ தன்றிச் சிற்றங் கொள்ளுதல் சிறப்பின் றென்றல்.

பொல்லா மன்னனை நிப் பொருநர் தம்முட
பல்லோர் செத்தும பல்லோர் பெரும்புண்
கொண்டு நலிதருந் துன்னுநர் குற்றங்
கண்டுபுரி திறலிலர் கருது சிறைகொலை
யண்டினர் தமக்காங் கஞ்சில ரளிக்குந
ரியம்புவ நெறிபோ டின்றியமை கில்லா
வயின வெனினு மன்முறைக் கயலெனிற்
றலையுங் களைகுவர் சாற்றுமித் தலையெலா
நிலையுநல் லன்பு நிகழ்த்தற் கயர்ந்தனர்

தீமை காணின் ஒப்ப நாடி யத்தக வொறுத்தி" என வன்பொதி பசுங்குடையாரும் கூறினமை கண்டு ஆராயற்பாற்று.

இனியே = அப்பால்;

கற்போன் கற்பினில் காண்டகு செயலில் = மாணாக்கன்றன் கல்வியினும் அவனது காணத்தக்க செயல்களினும்;

மாணாக்கன் "அழலின் னீங்கா னணுகான்" ஆதலின் அவன் செயல் ஆசிரியற்குக் கண்கூடாம். காணப்படும் குற்றங்கட்கே தண்டம் விதித்தல் முறையாதலின் அங்ஙனங் கூறினாருமாம். எல்லாக் குற்றங்களையும் அறிந்துவைத்தானேனும் சிலவற்றை அறியாதான் மறைந்துவிடுதலும், பின்னொரு காலத்தில் வேண்டின் அவற்றுள் ஒருசிலவற்றைக் கூறுதலும், அன்ன பிறவும் ஆசிரியற்கு வேண்டற்பாலன என்னும் அரிய நீதியை கண்டுக காட்டிப் போந்தார் இந்நூலாசிரியர் என்க.

குற்றம் காணுழி = குற்றத்தைக் (கண்கூடாகக்) காணும் பொழுதும்;

உழி — இடமுமாம.

குறிக்கொண்டு ஒறுக்கிலாது அன்பு காட்டின் = செய்த குற்றத்தைக் குறிப்பாயுணர்ந்து அதற்கேற்ற தண்டம விதிககாமல் அன்புசெய்து வந்தால்;

ஆசு உற்று அழிவுறூஉம் = அம்மாணாக்கன் பங்கமுற்றுக கெடுதியை அடைவான்;

ஆதலின் = அதுகாரணத்தானே;

நுவல்வோன் = கற்பித்துக் கொடுக்கும் ஆசிரியன்;

அன்பு ஆர் தண்மையும் = உள்ளன்புசான்ற தண்ணளியும்;

உள்ளத்தோடு அத்தண்மை வரப்பெறுதல் வேண்டுமென்பார் "அன்பார் தண்மையும்" என்றார். ஒறுக்கும்போது தண்மை உள்ளத்திருக்கவேண்டுமென்பதுமாம்.

தீது அற வெம்மையும் = குற்ற மற ஒறுக்கின்ற கோபமும்;

ஒறுக்கும்போதும் அகத்துத் தண்ணளி வேண்டுமென்பது உம்மையானும் வற்புறுத்தப் பட்டது, இச்செயல ஆசிரியர்க்கருமைத்தாதலின்.

"குலனருடைய்வங் கொள்கை மேன்மை ..... . . அமைபவ னூலுரை யாசிரி யன்னே" என்னும் நன்னூற் சூத்திரமும பிறவும நல்லாசிரிய னிலக்கணத்தை இதுமவன விரிக்கும.

அன்பினோத தணமை யென்றதற் கேற்ப அன்பிலாமையாகிய கோபத்தை வெம்மை என்றார்.

திறம் பட தெளிந்து போற்றுதல் = கூறு பொருந்தும்படி தெளிவுற்றுச் செய்துவருதல்; தெளிவடையாவிடின் இது பொருந்தா தென்க.

நலன் புகன்றனர் = நன்மையுடையதுவாகக் கூறினார்கள்;

அவர்தாம் யாவரோ வெனில்?

ஆற்றல் தவம் அறிவு உடை ஆன்றோர் பலர் = (நிக்கிரகாநுக்கிரகங்களைச் செய்யும்) வல்லமை வரப்பெற்ற அறிவினை யுடைய பெரியோர் பலராவார் என்க;

இவரது சிரமமின்றி ஆற்றல் தானே வந்தடையு மென்பது தோன்ற "ஆற்ற றவழ்' என்றும், ஒருவர் கருத்தன்றி, பலாக்கு முடம்பா டென்பது தோன்ற "ஆன்றோர் பலர்" என்றும் கூறினார்.

(11) ஓரறி வுயிர்க்கு முணர்ச்சியுண் டாகலி
னோருயிர்க் கெல்லா மன்புசெய் மின்னெனல்.

நகநே ரொத்த வொருசெந் நீர
தந்நேர் கிலவைத் தாங்கண்டு தளர்குந
வின்புந் துன்பு மியைகுந விவறறு
வீரறிவு முதல விவைநம பிறபின
வோரறி வுயிரே வேற்றுப்பிறப் புடைய
ததுவே,
வெட்டும் போழ்தும் வேரறக் கீண்டாங்
ககழும் போழ்து மன்ன பிறவா
வாற்றும போழ்து முன்னவை மான
நாங்காணு மாறு நலிந்தூறு பெற்றில
பிணிகொ ளகடு முதற்பிறங் குறுப்பினைத்
துணிசெய் துயரந தோன்று தமைவான்
மதிமருண் மருநதளீஇ மருத்துவ னுணர்ச்சி
மாற்றிவரும் வழக்கி னேற்றவோ ருயிர்தமக்
கிபற்கைபு மங்ங னிருக்கு மென்பரால்
இனியே,
உடலொடு வந்த வுயிரெலாந் தத்தமு
ளொன்றனைக் கொன்றுமற் றென்றுயிர்த்த லியல்பே
யெனினுங் கொல்லுழி யிடும்பைபால வெய்திடு
நப்போ லுயிரு நலிவுறு வோர
வுயிருமெனப் பகுத்த வுட்பாம யாதோ
ஆதலிற்,
பிறவுயி ரோரறிவு பேணுயிர் நமையுணன்
மறனன் றென்று வகுத்த தறநா
லூன்மிசை கிலரே லுறழ்வழி யொரீஇ
யின்பிறர்க் காட்பட் டினைகுவர் பெரிதெனிற்
பெரிதவ் வூனைப் பெட்டுண்டு வரூஉ
மரிமா புலிமுத லாகிய வெலாநமைப்
புரிமே யாட்சியிது பொற்பிற் றம்மா
புலவுணு,
பரூஉவுடல் வளர்க்கும் பண்பமை தண்மை
மருவுறு தலைக்கும் வாலறிவு குலைக்குந்
தெருமந்து நம்முயிர் சீர்த்தேறு கிலவா
யருமந்த வாழ்வா னடைபய னெய்தா
வின்னபிற வகையி னிவற்றையினி தாய்ந்து
தவற்றுவழிப் படுத்துந் தகைப்புல வொழித்துச்

"முதல" என்றெழுதியாது பின்னரும் "நவை" என்று கூறிய நோக்கம் இக் குணஞ் செய்கைகளையுடையன எனவுமொழிய முகத்தால் கேட்போர்க் கன்புபிறத்தற் பொருட்டு என்க. இவை எனச் சமீபிக்கவெய்த நோக்கமும் பாராட்டற்பாலது.

நம் பிறப்பின = நம்மோடொத்த பிறப்புடையனவாகும்;

ஆதலின் அவற்றை யெல்லாம் கொல்லலாகாதென்பது கருத்து.

ஓர் அறிவு உயிரே வேறு பிறப்பு உடையது = (புன்முதலாகிய) ஓரறிவுயிர்களே (நம்மோடொவ்வாத) வேற்றியற் பிறப்பினவாகும்;

மற்றைய உயிர்கட்கும் பெரும்பான்மையும் அமைந்த ஆக்கம், குணம், உணர்ச்சி முதலியன ஓரறிவுயிர்க் கின்மையால் "வேற்றுப்பிறப்புடையது" என்றார்.

அதுவே = அவ் ஓரறிவுயிரே;

அதுவே என்றார், சாதி யொருமை பற்றி.

வெட்டும் பொழுதும = (தன்னை கோடரி வாள் முதலிய கொண்டு) சிதைக்குங் காலத்தும்;

வேர் அற நின்று உங்க அகழும் பொழுதும் = (நிலைபெறுதற்குங் காரணமாகிய ஆணி) வேர் அறும்படி கல்லி அவ்விடத்திலேயே தோண்டுங் காலத்தும்;

அன்ன பிறவா ஆற்றும் பொழுதும் = அவைபோன்றவாகவும் பிறவாகவும் செய்யப் படுங் காலத்தும்;

அன்னபிறவாக என்பது "அன்னபிறவா" என மரீஇயது. மருந்திடப்பட்டும், நெருப்பிடப் பட்டும், இடியேறு வீழப்பட்டும் பலவாறாக அழிவெய்துதலும் அடங்குவதற்கு "அன்னபிறவா" என்றார்.

முன்னவை மான = முற்கூறிய ஈரறிவு முதலாகவுடைய உயிர்கள் (இடருற்ற காலத்தில் வருந்துவது) போல;

நாம் காணுமாறு நலிந்து ஊறு பெற்றில = நாம் கண்டு (முன்னவை படுந்துன்பத்தைக் காண்பதுபோல இவற்றின் வருத்தத்தையும்) காணும்வண்ணம் நலிவடைந்து துன்பத்தைப் பெறுகின்றில;

புல் பூண்டு முதலியன வளர்தல், மதர்த்தல், வாடுதல் முதலிய விகார குணங்கட் குட்பட் டிருத்தலின் நம்முணர்ச்சி போன்றதோர் உணர்ச்சி அவைகட்கு முண்டெனத் துணிந்து, ஊறுபடும் பொழுது நோக்கின் அவற்றிடை விகாரந் தோன்றக் காணவியலாமையின் "நாங்காணுமாறு நலிந்தூறு பெற்றில" என்றார். அவைக்குந் துன்பமுண்டெனக் காணவல்லார் அவற்றையுஞ் சிதைத்துண்ணுதலை விட்டொழிவர் என்பது குறிப்பு. வாழைப்பழம், பால், சருகு, புனல், காற்று என்பனவற்றைப் படிப்படி அருந்தி நீங்கு முடிவில் ஒன்றனையு முண்ணாது விடுவர் என்பது சான்றோர் கொள்கை. "ஈரவகான் பூழ்கு நிலத்தினைஇத் தோலுடையாச் — சோர்சடை தாழச் சுடரோம்பி — யூருடையார் — கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல் — வானகத் துய்க்கும் வழி" என்பது புறப்பொருள் வெண்பாமாலை; "பருந்தோடு பூகியும் வாயுவும் பிறங்கு — சருகும் வெங்கதிர் போனியையுந் துய்த்துமற்றதையும் — பருக லின்றிப் முப்பதி னாயிரம் பருவ — முருக காதலின் மன்னவ னருந்தவ முயன்றான்" என்பது இராமாவதாரம்; "தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூனுண்பா னெங்ஙன மாளு மருள்" என்பது குறள். மற்ப விரித்துக் கொள்க.

[பிணிகொளக்கடு முதற்பிறங் குறுப்பினைத் — துணிசெய் துயரந் தோன்றா தமைவான் — மதிமருண மருந்தளித்து, மருத்துவ னுணர்ச்சி — மாற்றிவரும் வழக்கி னேற்றவோ ருயிர்தமக் — கியற்கையு மங்ஙனிருக்கு மென்பரால்]

மருத்துவன் = வைத்தியனானவன்;

பிணிகொள் அகடு முதல் பிறங்கு உறுப்பினை = நோய்கொண்ட வயிறு முதலாக விளங்கும் அவயவங்களை;

உறுப்புக்களின் இன்றியமையாமை தோன்றப் "பிறங்குறுப்பினை" என்றார். இனி மருத்துவஞ் செய்யப்பெறின் நோய் நீங்கிப் பிறங்கும் தன்மைய உறுப்பு எனினும் அமையும்.

துணிசெய்து துயரம் தோன்றாது அமைவான = அவ்வுறுப்புக்களை வெட்டுவதினால் உண்டாகும் துன்பந் தோன்றாதிருக்கும் வண்ணம்;

யாதோருறுப்பினையாவது சீறுங்காலத்தும், கிழிக்குங்காலத்தும், அரியுங்காலத்தும், துமிக்குங்காலத்தும் அசைதல் முதலியன இல்லையப்படின் மருத்துவன் தொழில் செவ்விதின் நடைபெறமாட்டாது. துன்பத்தை நோயாளன் உணராவாறேயன்றி அச்சத்தால் இறந்துபடவும் கூடும். என்னும் இவற்றானே "துயரந் தோன்றாதமைவான" என்றார். துணித்தல் என்றாரேனும் இனமாய ஏனையவற்றையுங் கொள்க.

மதிமருள் மருந்து ஊட்டி = (துணித்தல் முதலானவற்றால் நிகழப்பெறுந் துன்பந் தோன்றாதிருக்க) அறிவினை மயக்கவல்ல மருந்தினைக் கொடுத்து,

உணர்ச்சி மாற்றி வரும் வழக்கின் = நோயுடையார்தம் உணர்ச்சியை மாற்றிப் பிணிதீர்த்து வரும் வழக்கத்தைப் போல,

தற்காலத்து ஐரோப்பிய பண்டிதர் மூர்ச்சையாக்குதற்கு உபயோகித்து வரும் மருந்து "க்ளோரபோம்" எனப்படும். இம்மருந்து குறித்த நேரத்துள் மூர்ச்சை தெளிவிக்காவிடின் அபாயஞ் செய்யும். பண்டைக்காலத்து ஆரியர் இங்ஙனம் சம்மோகினி எனனும் மருந்துப் பிரயோகத்தால் மூர்ச்சை யுண்டாக்கிச் சஞ்சீவினி என்னும் மருந்தால் தெளிவித்து வருவர். இவற்றின் விரிவும் பிறவும் எமது "தமிழ்வரலாறு" 327 – 328ம் பக்கங்களிற் காண்க.

ஓர் உயிர் ஏற்ற தமக்கு ஓர் பற்றையும் அங்ஙன் இருக்கும் என்பர் = ஓர் உணர்ச்சியை ஏற்றவையாகிய அவ்வுயிர்தங்களுக்குத்தம் இயல்பிலே (துணித்தல் முதலியன செய்யப்பெறும் பொழுது மதிமருள் மருந்தூட்டப்பட்டவர்க்குத் துன்பந் தோன்றாதிருக்கும்) அத்தன்மை போல (ஒருதன்மை இறைவனால் அமைக்கப்பட்டு) இருக்குமென்று சொல்வர்;

அங்ஙனம் கடைக்குறைந்து நின்றது. ஆல் — அசை.

உயிர்க்கு இதஞ்செய்தலே புண்ணியமும் அகிதஞ்செய்தலே பாவமுமென்பவாகலின் நாம் செய்யும் வினைகளாற் பிறவுயிர்கட்குத் துன்பம் மெய்தப்பெறாவிடிற் பாவமுமில்லையென்க. அறிவுடை ஒருவனை இழத்தலினும் அறிவிலாப்பேதை பலரையும் இழத்தலே முறைமை என்ப. ஓர் அரசற்குப் பலரும் உயிர்கொடுத்தல் வழக்கம். ஓர் எளியானுக்கு அங்ஙனம் செய்வாரில்லை. இறைவனே அறிவுமயமா யிருக்கின்றான். அறிவேற்ற முள்ளவற்றைக் கோறலால்வரும் பாவத்தையுணர்ந்து விலக்குக. இங்ஙனமெல்லாம் ஆராய்ந்தன்றே பொதுநூலாகிய திருக்குறளினும் இஃது அதிகாரப்பட்டது.

இனியே = அப்பால்;

உடலொடு வந்த உயிர் எலாம் = உடலோடு உறவுபூண்டு உண்டுற்பவித்த உயிர்களெல்லாம்;

கன்மபல னுகர்வான் இப்புவியிற் றனுகரணங்களை எடுத்த சீவராசிகளெனக.

தம் தம உள் = தங்கள் தங்களுக் குள்ளே,

ஒன்றனை கொன்று மற்று ஒன்று உயிர்த்தல் இயல்பே = ஒருயிரைப் பிறிதோருயிர் கொன்றருந்திச் சீவித்துவருதல் இயல்பாகிய வழக்கேயாம்;

உயிர்த்தற்பொருட்டு அறிவுகுறைந்த உயிர்களை அளவுக்களவாகக் கொன்றுண்டுவருதல் பெரும்பாவமாகாதென்பது கருத்து. ஆண்டு நேரும் சிறுபாவமும் பிராயச்சித்தம் முதலியவற்றைச் செய்யிற் பரிகரிப்பாகும். இலை, காய், கிழங்கு, மூலம் என்னும் இவற்றையுண்டு பலரும் உய்ந்துவருதல் கண்கூடா யிருத்தலின் புலாலூனை விரும்புதன் மிகையென்க. முன்னோற்றத்திற்

குச் சோபானமுறையாக அமைந்திருக்கும் இவ்விரண்டுணவுகளுள்ளே புலவுணவு மிக்கிழிந்ததாயிருத்தலை உணராத புல்லர் இரண்டும் பாவம்பயப்பனவென்று பறைசாற்றியழுவர். இவர் கூற்று, சிறுவகுப்பிற் கற்பானையும் அவனிற் பெரியதொரு வகுப்பிற் கற்பானையும் ஒரு தரத்தினராகக் கொள்ளமுயல்வோர் கூற்றொத் திகழப்படுமென்க.

எனினும் = என்றாலும்;

[கொல்லுழி யிடும்பையல வெய்திடு நம்போ லுயிரும்] கொல் உழி நம்போல் பல இடும்பை எய்திடும் உயிரும் = கோறல் செய்யும் பொழுது நம்மைப்போன்று பல துன்பங்களை அடைகின்ற உயிர்வர்க்கமும்;

நலிவு உறா ஓர் அறிவு உயிரும் என = (அவ்வாறே வருத்துமிடத்து நாம் காணுமாறு) துன்பத்தைப் பெறாத ஓரறிவுயிருமென்று;

பகுத்த உள் பயன் யாது = பிரிவுபடும்படி இறைவனாற் படைக்கப்பட்ட உட்பிரயோஜனந்தான் யாது?

ஓரறிவுயிரை உணவின்பொருட்டுக் கோறல் புரியலாமென்பது இறைவனுக்கு முடன்பாடென்பது குறிப்பு. உயிரைக்கொன்று தின்னுமல் (புலவுநசையற்று) இருக்கும்படி படைக்கப்பெறாக் காரணந்தான் எனையோவெனில், இயல்பிலே ஆணவமலத்தில் அழுந்திக்கிடக்கும் ஆன்மாவுக்கு நல்லுணர்ச்சி வருதற்கும் நாளடைவிலே சிவகாருண்ணியம் மேற்பட்டுப் பிறப்பிலே உயர்ப்புண்டாகி வீடுபெறுதற்குங் இவ்வாறமைத்தலே தகுதியென்று இறைவன் செய்தனன் என்க. இந்நுட்பமே உட்பயனாகும். ஓரறிவுயிரையுங் கொன்றருந்துவதாற் சிறுபாவமுண்டென்ப. அப்பாவமும் முற்சுட்டியபடி தென்புலத்தார் முதலியவர்களின் கடனிறுத்தலானும், "கடவுளை நினைந்து கறிதயிர் நெய்புட ளுவி—பகலிலை யெழுபதி யாகுதி செய்கை யாகமும் பதிற்றி ந கவளம்—பங்கமில் விதியா லுண்டுகை பூசி" என்னும் விதிகொடு ஈசுரப் பிரீதியாகப் புசித்தலானும் பரிகரிப்பாகுமென்க.

ஆதலின் = அது காரணத்தானே;

[பிறவுயி ரோரறிவு பேறுயிர் தமையுணன் மறனன் றென்று வகுத்த தறநூல்] அறம் நூல் பிற உயிர் ஓர் அறிவு பேண் உயிர் த(ம்)மை உ(ண்)ணல் மறன் அன்று என்று வகுத்தது = தருமத்தை வகுக்கும் மிருதிநூல்கள் ஓரறிவுயிரல்லாத ஈரறிவுயிர் முதலியவைகள் ஓரறிவினையே கொண்டு உயிர்த்துவரும் உயிர்கள்தம்மை உண்டுவருதல் பாவமாகாதென்று வகைசெய்தன;

"ஓரறிவுபேணுயிர்" என்று மிகைபடக் கூறினமையானே அவ்வுயிர்வருக்கமும் தமக்குரிய தனுக்களை ஒருவாறு பேணிவருவனவாகலின் அவற்றை ஈசுரப்பிரீதியாக்காமலும் வேண்டிய அளவை கடந்தும் அநாவசியமாகச் சிதைத்துவரிற் பாவம் பெரிதுமுண்டெனக் குறிப்பித்தாராயிற்று.

ஊன் மிசைகிலரேல் = (வன்மை தருகின்ற) மாமிசத்தை அருந்தாது விடுவாராயின்;

ஊழ் வலி ஒரீஇ = ஊனருந்துவார் தம்மோடு ஒப்ப அமைந்திருக்கும் வலிமை நீங்கி;

சமவலிமையேனும் பெற்றிருந்தாற்றான் ஊனருந்துவாரால் சூழ்த்தப்படா திருப்பர் என்பது குறிப்ப.

[ஊன்பிறர்க் காட்பட் டிளைகுவர் பெரிதெனில்] ஊன் பிறர்க்கு ஆட்பட்டு பெரிதும் இளைகுவர் எனில் = இவ்வுலகத்திலே ஊனருந்திவரும் அப்பிறர்தமக்கு அடிமைப்பட்டுப் பெரிதும் வருந்துவர் என்று கூறும் பக்ஷத்தில்;

ஊன்மிசைவோர் என அடிக்கொருமுறை கூறுவதற்கு நாணியோ அரோசிகப்பட்டே "பிறர்தமக்கு" என்றார்போலும்.

பெரிது அவ் ஊனை பெட்டு உண்டுவருஉம் = பெரிதாக அவ்வூனை விரும்பியுண்டு வருகின்ற;

சிலபகுதிகளிலே இன்னும் வழங்கிவருகின்றது. புலவுணா விழைவால் இவ்வழக்கம் மலிவுறுமாயின் உலகத்திலே துன்பம் அதிகரிக்குமென்க. இவைகளே இன்ன பிறவகைகள் எனப்படும்

இவற்றை இனிது ஆய்ந்து=கூறப்பட்ட இவற்றை விருப்பத்தோடு ஆராய்ந்து;

ஆராய்ச்சியிலே இனிமையில்லாவிடிற் பயன் ஒன்றுமில்லை என்பதுபோதர "இனிதாய்ந்து" என்றார். எவர்க்கு நன்பயப்ப என்றுமாம்.

தவறு வழி படுத்தும் தகைப் புலவு ஒழித்து=குற்றம்பொருந்திய முறையிலே அகப்படுத்தும் தகுதியையுடைய புலவுணவை நீக்கி;

செம் நெறி தழீஇ செழித்தல்=செவ்வையாகிய (முத்தி முதலியவற்றைப் பயக்கும்) நல்ல வழியைக் கைக்கொண்டு அநுசரித்துச் செழிப்புற்று வாழ்ந்துவருதல்,

தழுவுதலின் அருமையும் தழுவுவார்க்குறும் பெருமையுந் தோன்றச் "தழீஇ" என்றனர் எடுத்தது. "சென்னெறி" என்பதூஉம் பாடம். அங்ஙனமாயின் செல்லுதற்குரிய நெறி என்று பொருள்கொள்க. "ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீக்குமின் - செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்—மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென" என்பது சிலப்பதிகாரம்.

நல் நெறி போகிய ஞாலத்து கடன்=சுகமாகக வழியிலே தமது வாழ்நாளைப் போக்கும் பெரியோர் தங்களுக்கு மேலாம கடப்பாடாகும,

ஞாலத்துக்கடன் தழீஇச் செழித்தல் என்று முடிக்க. இஃதொன்றுமட்டும் அவர் தங்கட்குப் போதாது. ஏனை மனச்செம்மையும் அதனுக்கேற்ற குணஞ்செயல்களும் வேண்டும் என்பது போதரப் "புலவொழித்துச் செந்நெறி தழீஇச் செழித்தல்" என்றார்.

---

## (12) மறைநெறி வாணர்தம் மரபினர் சிறுதொழில் புரிகுவ ரெனினும் போற்றுக வென்றல்.

தமமொரு நுதலித் தண்கடல் சூழ்ந்த
விம்பர்வாழ் மன்பதைக் கியல்வன முறையுறத்
தம்முட னறிவெலாந் தழீஇப்பெறு சிறுபொருள்
கொடைமுறை யன்றிப் பெறுமுறை யன்றெனு
மன்னவர் கொடைநூல் மாண்மொழி லாள
ரென்றிவர் தமக்கெலா மீதலவ் வவர்செயல்
பொன்ற வறுக்கு மாதலிற் புரையெனு
நின்றநெஞ் சந்தணர் நீடுலக் காப்பில்
செயலில கல்லாது செயிர்றச் செய்யு
மாதலி னவர்க்கெலா மளித்தன் முறையெனு
வுலகந் தாங்கிய வுயர்குலத் தவர்தம்
மரபுவரு குநரெலா மாறை நேனுநு
செய்கடன்றி யறிதல் கிடந்ததொன் றாதலின்
மெய்யொடவ் வந்தணர் வியன்மர பளித்தல்
பழிமொழி பொண்ணலச் செம்பயன் றருமெனச்
சிறுமொரு ளோனுந் தமக்கெனச் சேமியார்

மறைநெறி வழுவா மாண்பினர் மறந்துஞ்
சிறுதொழி லொரோவழிச் செயிற்செயி னன்றெனப்
பிறர்தமக் கங்ஙனம் பேணல்சா லாதென
நலந்தெரிச் சான்றோர் நவின்றனர் நான்முறைச்
செம்பொரு டெரியார சிலரே
வெம்பியழிந் தொள்ளிய வினைதபுக் குநரே.

---

(இ-ள்.) தண் கடல் சூழ்ந்த இம்பர் வாழ் மன்பதைக்கு = குளிர்ந்த சமுத்திரஞ் சூழ்ந்த இந்நிலவுலகத்தில் வாழும் மக்களாக வெல்லாம்;

அந்தணர் பெருங்கொடையாளர் என்பது போதரத் "தண்கடல் சூழ்ந்த விம்பர்வாழ் மன்பதைக்கு" என்னுந்தொடர்முன் "தம்பொருளுதவி" என்னுந் தொடரை யாத்தனர். தோற்ற முறையைத் தோற்றுவித்தற்பொருட்டு "இம்பர்" என்றதற்குக் கடலை அடைபாக்கினர். உலகத்துச் சீவராசிகளின் வாழ்க்கைக் கின்றியமையாத நீர்முதலியவற்றை உபகரிக்கும் மழை முதலியவற்றிற்கும் கடலே முதற்காரணமென்பது தோன்றத் "தண்கடல்" என்றார்.

தம் பொருள் உதவி = தமக்குரிய செல்வத்தைக் கொடுத்து,

க்ஷத்திரியாதி ஏனைமூவரும் இவ்வந்தணரையொப்பப் பொருளுடையார் என்பார் "தம்பொருளுதவி" என்றும், தமது பரோபகாரந் தோன்ற "உதவி" என்றுங் கூறினர். உலகத்துப் பொருள்களெல்லாம் அந்தணராதி நால்வர்க்கு முரியனவா யிருந்தும் தம்முடைமையை ஏனை மூவரும் ஏற்றவாறு பகிர்ந்துகொள்ளும்வண்ணம் இவர் கொடுத்தருளினர் என்க. அந்தணராவார் தமது சீவனத்தின்பொருட்டு மூன்று மாசத்திற்கு வேண்டியவற்றிற்கு மேற்படச் சேமித்து வைத்துக்கோடல் ஆகாதென்று சிலம்ருதிகள் கூறும். வேறுங் கூறுப.

இயல்வினை முற்றற = அம்மூவர்தமக்கு நிகழப்பெறும் சுபாசுப கருமங்களை (வேதமுறைமைப்படி பிறழாது) நிறைவேற;

தம் உடல் அறிவு எலாம் தரீஇ = அவர் தமது உடலே அறிவே என்பன முதலாகிய எல்லாவற்றையும் அவர்க்கே ஒப்படைத்துத் தந்து;

பின்னர் அவரிடமிருந்து தக்கிணையாகப் பெறும்பொருள் இவரான் முன்னளிக்கப்பட்ட கொடைப்பொருளையன்றி ஏற்றிட்ட பொருளாகாது என்று நிரூபித்தற்கு நிலைக்களனாக இருப்பது இவர்தம் தருகையே ஆதலின் அதனைக் கற்பவர் சிந்தையிற் செவ்வனே நிறுத்துதற்பொருட்டுத் "தரீஇ" என்றெடுத்தது. சுபாசுப கருமங்களை நடத்துழி நிகழும் உடற்சிரமம், வேத மந்திரங்களை ஆய்ந்து ஏற்றவற்றைக் கோடும் அறிவுச்சிரமம், உதாத்த அநுதாத்த சுரிதங்களை ஏற்குமாறுச்சரிக்கும் வாய்ச்சிரமம், எடுத்த கருமத்திலன்றிப் பிறவற்றிற் செல்லவிடாமல் மனசினை நிறுத்திவருகின்ற மனச்சிரமம் என்னு மிவையெல்லாம் அந்தணர்க்குப் பிறர் பொருட்டு நிகழுஞ் சிரமங்களாம். தமக்குரிய பொருளையெல்லாம் பிறர்தமக்கு அளித்துவிட்டு அவர்தம் ஊழியக்காரர் போல் அவர்க்கமைந்த பணிகளையெல்லாம் நன்கு முடித்துக்கொடுத்து அவற்றின்பொருட்டு அவர் கொடுக்கும் சிறுபொருளைத் திருத்தியொடு கொள்ளும் இவ்வந்தணரைப் பூதேவரென்று நன்று போற்றிவருதலும் ஒருவியப்பாமோ? இவர்மரபினர் எத்துணைக் கேடுபுரியினும் அவரைக்கைவிடுதல் ஆகாது என்க.

பெறு சிறு பொருள் = (முடித்த கருமங்கள் பயன்பெறற்பொருட்டுப்) பெறுகின்ற சிற்றளவாகிய தக்கிணை;

இவரால் கேட்கப்படாதபொருள் என்பது தோன்றப் "பெறுபொருள்" என்றும், எவ்வளவுபொருள் கொடுக்கப்பட்டாலும் இவரது பெருந்தகைமைக்கு அவையெல்லாம் மிகச் சிறியன

வாகும் என்பது தோன்றச் "சிறுபொருள்" என்றும் கூறினர். அம்மூவர் செய்யுங்கருமங்கள் பயன்பெறுதல் வேண்டுமென்ற கருணைமேலீட்டானே பெறப்படும் பொருள் எனவும் கூறல் பொருந்தும். "போதும் என்னும் எண்ண முள்ளவனே தவிசனுவான்" என்பதோத்தாகலிற் "பெறுசிறுபொருள்" என்றார் என்றலும் ஒன்று. தக்கிணையாகக் கொடுக்கப்படும்பொருள் மிகச் சிறியதாக இருத்தல்வேண்டும் என்னும் விதியை இபற்றிக்கொண்டவ ராதலிற் "சிறுபொருள்" என்றார் என்றலும் நன்று.

கொடை முறை அன்றி பெறு முறை அன்று என=(இவ்வந்தணர் அம்மூவர்தமக்கும் கொடுத்த) கொடைவழித் தாகுமேயன்றி (இவர்தமக்கு அவர்களாற் கொடுக்கப்பட்டு) எற்கு முறைமையுடைய தாகாது எனவும்;

அந்தணராவோர் தமக்குரிய பொருளைத் தமது சந்ததியார்க்கு வேண்டுமென்று சேமித்து வைக்காமல் க்ஷத்திரியராதி மூவர்க்கும் அளித்துவிட்டும் அம்மட்டோடு நிற்காமல் அவர்தமக்கெலாம் நிகழப்பெறும் சுபாசுப கருமங்களையும் செவ்விதின நிறைவேற்றி வருகின்றனர். இவ்வாறு பலப்பல உதவிகளைப் புரிந்துவரும் இவர் அம்மூவரிடத்திருந்து அவர்தம உய்வுகருதித் தக்கிணையாக ஏற்றுவரும் சிறுபொருள் தாமாக முன்னரே அவர்தமக் களித்த கொடைப்பொருளன்றி அவர்க்குரிய தாகாது என்றபடி.

மன்னவர் நொடைஞர் மாண் தொழிலாளர் என்று இவர் தமக்கு எலாம்=அரசரே வணிகரே மாட்சிமைப்பட்ட வேளாண்டொழிலையுடைய சூத்திரரே என்கின்ற இம்மூவர்தமக்கெல்லாம்;

நொடை=விற்றல். சூத்திரர்தம் முயற்சியானே ஏனையோர் சுகஜீவனஞ் செய்துவருகின்றமையால் அச்சூத்திரர் "மாண்டொழிலாளர்" எனப்பட்டார். இனி இவர் செய்துகொடுத்த கூலமுதலாயவற்றைப் பிறரெல்லாம் பகிர்ந்து நுகர்ந்து வருதலின் அங்ஙனம் சிறப்பிக்கப்பட்டார் எனினும் அமையும்.

ஈதல் அவ் அவர் செயல் பொன்ற அறுக்கும் ஆதலின்=கொடுத்தல் அரசர்முதலிய மூவர் தொழில்களும் அழிந்துபோதுமாறு கெடுக்கும் ஆதலினனே;

அவர்தமக்கெல்லாம் தானம் கொடுக்கப்படிற் றங்கள் தங்கள் தொழில்களைச் செய்கிலராய்ச் சோம்பிக்கெடுவர் என்று குறிப்பித்தாராயிற்று.

புரை என=குற்றமுடைத்து எனவும்;

அந்தண ரல்லார்க்குத் தானமுதலியவற்றைக் கொடுப்பதனுன்வருங் குற்றம் இதுவெனக் கூறப்பட்டது.

நின்ற நெஞ்சு அந்தணர்=உலகக் காப்பிலே நிலைபெற்ற மனசினராகிய அந்தணர் தம்முடைய;

"நின்ற நெஞ்சு" என்பதற்கு "வேறேரா நெஞ்சத்துக் – குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை யந்தணிர்" என்றாங்கு உரைகோடலுந் தகும். தாமரையிலையின்கண்ணே ஒன்றா தொன்றியிருக்கும் புனலேய்ப்ப உலக காரியங்களை ஒன்றி நடத்திக்கொண்டும் சேய்மைக்கண்ணுள்ள செங்கதிரைக் கண்டலரும் அத்தாமரை மலரைப் போலப் பிரகிருதிக்குச் சேயோனுகிய இறைவனிடத்தி லுள்ளன்பு பூண்டிருத்தலும் பிறவும் ஈண்டுப் பொருத்தி நோக்கற்பாலன.

நீடு குலம் காப்பு இல் செயல்=இடையறாது நீடித்துவருகின்ற அவர்தம் குலத்தினைக் காத்தல்புரியாத செய்கை;

ஏவராலும் அழிக்கப்பெறாத குலம் என்பதுபோதர "நீடுகுலம்" என்றார். இனிப் பிறரெல்லாம் ஒருங்குசேர்ந்து தம்மை வருத்தும்போதும் தாம் அவருக்கு ஒருகேடுஞ் சூழாது நலமே புரிகின்ற குலம் எனவும் ஈண்டுக் குறிப்பித்தாராயிற்று.

உலகு எல்லாம் செயிர் உற செய்யும் ஆதலின்=உலகமுழுவதையும் குற்றத்திடத்தே பொருந்தும்படி செய்யும் ஆதலினனே;

அந்தணரே தமது அறிவாற்றல்களான் உலகினைக் கேடுறாமற் காத்துவருகின்றனர். இவர் அங்ஙனங் காவாவிடின் உலகந் தானே கெடும் என்க. இதனானே அந்தணரைத் தானம் முதலிய வற்றாற் காவாமையானே நிகழப்பெறும் ஏதம் குறிக்கப்பட்டது.

அவர்க்கு எலாம் அளித்தல் முறை எனா=அவர்தமக்கெல்லாம் (வேண்டியவற்றைக்) கொடுத்தல் முறைமையாகும் எனவும்;

உலகம் தாங்கிய உயர் குலத்து அவர் தம்=உலகினைக் காத்த உயர்ந்த ஒழுக்கத்தினையுடைய அவ்வந்தணர் தங்களுடைய;

இக்காலத்தார் அந்தணர்தம் சிறப்பினை அறவே மறந்திட்டன ராதலின் இந்நூலாசிரியர் அவரைப் பலவிடங்களினும் எடுத்துக்கூறி மேம்படுத்துகின்றார். ஆனாற் றற்பொழுதுள்ள அந்தணர்தம்முட் பெரும்பாலோர் தங்கள் ஒழுக்கத்தினின்றும் பெரிதுந் தாழ்ந்துவிட்டனர், அதுபற்றிப் பண்டைநாளினரைக் குறித்தற்பொருட்டுத் "தாங்கிய" என்று இறந்தகாலத்தாற் கூறினார். அவர் செய்துவந்த நன்றியை நினைப்பூட்டுதற்பொருட்டு "அவர்தம்" என்று சுட்டிக் கூறினார். மேற்கூறியவாறு பலநன்மைகளையுஞ் செய்துவந்தமைபற்றன்றே உயர் குலத்தினர் எனப்பட்டார் அவ்வந்தணரென்க. அவர் தமது குலாசாரக் கல்வியற்றவராயிருந்திடினும் அவர் தமக்குக் குலப்பெருமையில்லாப் பிறர் உபதேசஞ் செய்தல் முதலியவற்றைப் புரிவான் மேற்கோடல் கூடாது. "கற்றதொன் றின்றி விடினுங் குடிப்பிறந்தார்-மற்றொருன் றறிவாரின் மாண மிகநல்லர்-பொற்ப வுரைப்பான் புகவேண்டா கொற்சேரி-துன்னூசி விற்பவரில்" என்பது முன்றுறையனார் பாட்டு. (இம்மேற்கோளைக் கருதும்போழ்து மடவோரைக் கற்றறபகுதியிலே விடாது முன்னோர் அமைத்துவந்த காரணமும் அன்னபிறவும் நுணுகியாராய்வார்க்குப் புலப்படாமலிரா.)

மரபு வருகுநர் எலாம் மாணாரேனும்=பாரம்பரியமாக வருகின்ற பிராமணரெல்லாரும் (ஓதன் முதலாய அறுவகைத் தொழில்களைக் குறைவறச் செய்து வருதலிலே) மாட்சிமைப்படில ரேனும்;

செய்ந்நன்றி அறிதல் சிறந்தது ஒன்று ஆதலின்=(இவர்தம் முன்னோர் ஏனைய மூவர்க்குச் செய்த நன்மையை அறிவது சிறந்த ஒப்பற்ற தருமமாதலின;

இவ்வந்தணரின் முன்னோருடைய நற்குண நற்செய்கைகளா லன்றே நம்மவரெல்லாம் எவராலும் இன்றும் நன்குமதிக்கப்பட்டு வருகின்றனர் என்பதை மறவாமற் செவ்வனே மனதில் வைத்து இவர்தம்மையும் நாம்போற்றி மேம்படுத்த வேண்டியது ஆவசியகக் கடப்பாடாகும். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்-செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பது குறள். செய்ந்நன்றி கொன்றவர்தம்மை அந்நன்றியே கோறுமென்ப "புன்னெறியிலவர்க்குமுன் புரிந்த நன்றியே-கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ" என்பது கந்தபுராணம். முன் பொருநன்றிசெய்தோர் பின் பலகேடு சூழ்ந்தாரேனும் அக்கேடுகளை மறந்து நன்றியையே பாராட்டி அவரை நன்குமதித்தல் வேண்டு மென்ப. "கொன்றன்ன வின்னா செயினு மவர் செய்த-வொன்றுநன் றுள்ளக் கெடும்" என்றார் திருக்குறளினும்.

மெய்பொடு அவ் அந்தணர் வியன் மரபு அளித்தல்=உண்மை பொருந்த அன்போடு (நன்றி புரிந்தருளிய) அவ்வந்தணர்தம் பெருமை வாய்ந்த பரம்பரையினைக் காப்பாற்றுதல்;

இக்காலத் தந்தணரை ஆற்றலில்லாமையாற் போற்றுதல் சாலா தாதலின் வஞ்சகமாகப் பலரும் போற்றுவர். அங்ஙனஞ் செய்வார் செயல் அவர்க்கே கேடுபயக்கு மாதலிற் றிரிகரண சுத்தியாகப் போற்றுதல் வேண்டு மென்பார் "மெய்யொடு" என்றும், இக்காலத்தார்க்காகப் போற்றுதல் செய்யப்படவில்லை அக்காலத்தார் பொருட்டே செய்வது என்பார் "அவ்வந்தணர்" என்றும், அவர்தம் மரபு எத்துணைச் சீர்கேடு எய்தப்பெறினும் மலைமுடியி லேற்றிய விளக்கம் போன்று ஒளிபடைத்துப் பயன்கொண்டேவரும் என்பார் "வியன்மரபு" என்றுங் கூறினார்.

பழி ஒழி ஒள் நலம் செம் பயன் தரும் எனு=பாவம் நீங்கிய ஒள்ளிய நன்மைபொருந்திய நற்காரியங்களுக்குரிய பயனைத் தரும் எனவும்;

பழிக்கப்படுவதனைப் பழியென்றார். "உயற்பால தோரும் பழி" என்பது தமிழ்மறை. இக்காலத் தந்தணரையும் அன்பொடு போற்றி ஒழுகிவருவரேல் அம்மூவருந் தத்தமக்குரிய பாவங்கள் நீங்கப்பெற்றவராவர் என்பார் "பழியொழி" என்றும், ஒண்மையனவாக அவர்தஞ் சுப கருமங்கள் வாய்க்கப்பெறுங் காலத்துச் செவ்விபயனையும் பெறுப்வார் என்பார் "செம்பயன் றருஉம்" என்றுங்கூறினார். அவ்வந்தணர்தம் மரபினைப் போற்ற விடிற் பழி பொழியப்பெறாராய்ச் செய்துவருங்காரியங்களெல்லாம் இருளுற்றுத் தீப்பயன்பெற்று இடாப்படுவார் என்க.

சிறு பொருளேனும் தமக்கு என சேமியார்=(முறைப்படி குடும்பக் காப்பிற்கு வேண்டியதின்மேல் அதிகமாகச்) சிற்றளைப்பொருளேயேனுந் தம்பொருட்டுப் (பிற்காலத்திற்கு வேண்டுமெனக்கருதிச்) சேமித்து வைக்காதவரும்;

"சேமியார்" என்ற சொல்லாற்றலாற் "சிறுபொருள்" என்றதற்கு அடைபுணர்த்தப் பட்டது. பிறர்க்கெனப் பெரும்பொருளையுஞ் சேமித்துவைப்பார் என்று குறிப்பித்தாருமாம்.

மறை நெறி வழுவா மாண்பினர்=அந்தணர்க்கு வேதங்களிலே விதிக்கப்பட்ட வழியினின்றும் பிழைத்துப்போகாத நற்குண நற்செய்கைகளையுடையவரும் ஆகிய அவ்வந்தணர்;

முத்தி முதலாகிய பதவிகளுக்குச் செல்லும் வழியினை ஈதெனக் காட்டுதலின் "நெறி" என்றார். அந்நெறியில் வழுவினரேல் நரகமுதலாய தீப்பதவிகளை அடைவர் என்க. "மாண்பு" இப்பொருட்டாதலை "இல்லவண் மாண்பானால்" என்னுங் குறளுக் கெழுதப்பட்ட உரையிற் கண்டு கொள்க. "நெறி" – மிருதிமுதலியனவுமாம். "ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி – னேதம் படுபாக் கறிந்து" என்பவாகலின் "மறைநெறி வழுவா மாண்பினர்" என்றார்.

மறந்து சிறு தொழில் ஒரோ வழி செயின் செயிர் அன்று எனு=உணர்வழிந்து சிறுமை பயக்கின்ற பாவகாரியத்தை ஒரோவமையத்துச் செய்துவிடுவரேல் அச்செயல் குற்றமாகாது எனவும்;

பெரும்பான்மைச் சிறுதொழிலைச் செய்யவேமாட்டார் என்பது தோன்றச் "செயின்" என்றார். யானைக்கு மதம்பிடித்தாம் அதற்கதுவும் அலங்காரமாதல் போல அந்தணரும் மறந்துபுரி சிறுதொழிலும் அவர்க்கு நலனாகும். "குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்–மதிக்கண் மறுப்போ லுயர்ந்து" என்பது குறள். ஏனையோர்க்கது அச்செய்கை நாய்க்குப் பிடித்த மதம் போலாம் என்ப. ஆனால் ஒழுக்கம் முதலியன பிழைக்கப்பெற்ற அந்தணர்கள் செய்யுங் குற்றம் ஒருபோதும் நற்றமாகா தென்ப.

பிறர் தமக்கு அங்ஙனம் பேணுதல் சாலாது எனு=ஏனை மூவர்க்கும் (அவர்தம்மாற் செய்யப்பட்ட குற்றஞ் சிறிதேயாயினும் அந்தணர் செய்த குற்றத்தை நற்றமாகக் கொள்ளும்) அவ்வாறுபோலக் கொள்ளுதல் இயலாது எனவும்;

அந்தணர் ஒழிந்த மூவர் செய்யுங் குற்றம் குற்றமாகவே கொள்ளப்படும் என்றபடி. உலகந் தனது நிலையினின் றிலகுந்தன்மையின்றிப் பொன்றுமாதலின் "அங்ஙனம் பேணுதல் சாலாது" என்றார். பொருளை ஈட்டுவதற்கும் ஈட்டியவற்றைப் போற்றுவதற்கும் இன்னபிறவற்றிற்கும் உரியராதலின் அவர்க்கு அங்ஙனமெல்லாம் இடங்கொடுத்தால் உலகம் கெட்டொழியுமென்க.

நலம் செய் சான்றோர் நவில் நெறி நூல் முறை செம் பொருள்=(நம்மவர்க்கெல்லாம்) நன்மைபுரிந்த (மனு முதலாய) சான்றோர்கள் சொல்லிய வழியினையுடைய நூன்முறைக் குரிய சிறந்தவுட்பொருளை;

கைம்மாறு கருதாமல், நண்பு பகை நொதுமலின்றி நம்மவர்தம் உய்வுகருதி அறநெறிகளையெல்லாம் வகுத்தனர் என்பார் "நலஞ்செய்" என்றும், இத்தகைய சால்புகளை யுடையவரே உயர்ந்தோராவார் என்பார் "சான்றோர்" என்றுங் கூறினார். அரசும் அரிபும் அறமுறையைச்

செவ்வனே வகுத்துப் பிரமதேவர்க்கு உரைத்தருளினராகவும், அப்பிரமதேவர் திரிவர்க்கம் எனப்பெயரிய ஒரு பெரிய நூலைச் செய்து அதனை மனுமுதலியோர்க்கு உபதேசஞ் செய்தருளினராகவும், அம்மனுமுதலியோர் நம்மவர்தம் உய்வுகருதி ஸ்மிருதிகளை இயற்றிக் கொடுத்தருளினராகவுங் கூறுப. இங்ஙனம் வழிவழியாக அறமுறை வழங்கப்பட்டுவருதலை நோக்கி "நெறிநூல்" என்றார். வேறுங் கூறுப.

தெளியா சிலரே = தேர்ந்தறியாச் சிலமாக்கள்;

அழுக்காறு முதலியவற்றாற் கலக்கப்பெற்றவர் என்பார் "தெளியா" என்றும், அவ்வாறாயவர் பலரிருப்பினும் இங்ஙனமெல்லாம இகழ்தற்கு முற்படுவோர் மிகச்சிலரே என்பார் "சிலரே" என்றுங் கூறினார்.

வெகுளி அழிந்து = (அந்நான்முறைநகும் அந்தணர் பெருமைக்கும் மனஞ்சகியாது) கொதிப்புற்று அழிந்து;

ஒள்ளிய வினை தபுக்குநர் = (உலகத்தார் தம்முள்ளே ஒற்றுமைமேலிட்டினிற் செய்யப் பெற்றுத் தலைசிறந்து) விளங்குங் காரியங்களைக் கெடுத்தொழிகின்றனர்கள்;

அந்தணரில்லாவிடின் ஏனையோராற் பயனில்லையாகும். பயனில்லையேல் நம்மவரெல்லாம கெட்டொழிவர் என்றபடி. ஒரு குடும்பத்திற்குள் அமைந்த ஏற்றத்தாழ்வுகளான் அக்குடும்பத்தார் அழுக்காறுகொள்ளமாட்டார். நமது உடற்கண்ணமைந்த உயர்ந்தவுறுப்புக்களையும் இழிந்தவுறுப்புகளையும் எங்ஙனம் பாவித்து வருகின்றேமோ அங்ஙனமே பாவித்துவருதல் வேண்டுமென்றகூறுப. உயர்வுதாழ்வுகளானே அழுக்காறு முதலாயவற்றைக் கொள்வது சாதமெனில் அரசரும சிறந்தவுத்தியோகஸ்தரும் மேனிலையில் இருந்து வருதற்கும் பொறாமை கொள்வது சாதமென்க. தந்தை யீட்டிவைத்த ஒண்பொருளை அவன் மந்தமைந்தன் அநுபவித்து வருதற்கும் அழுக்காறுகோடல் சாதமாகுமென்க. வீணே அதிகக் கூர்மைகொண்டு முன்னோர்தம் முறைமைகளைக் கெடுத்தொழிவதாற் போந்த பயன்றான் யாதோவென்க.

அந்தணர்க்குரிய சிறப்புக்கள் பலவும் இரண்டாஞ் செய்யுளில் விரிக்கப்பட்டிருத்தல் காண்க. ஆண்டுக்கூறிய நல்லொழுக்கங்கள் அமையப்பெற்றிலார் அந்தணர்மரபிற் பிறந்தவராயிருப்பினும் அந்தணராகார். ஆகவே தற்காலம் அந்தணரென்று சொல்லப்படத்தக்கோர் அருமையில் அருமையாவர் என்க. போவாப் பண்டைத்து அறநெறி மறந்து மறநெறி தழுவி இன்னுஞ் சொலலணிந்து ஏற்றுவரும் அந்தணரைப் பண்டைய நெறியில் நின்றுவருமாறு புரிவதுவே நமது கடமையாகும். ஒழுக்கமுடையார்களே வேண்டுவன புரிதலை நாம் கைக்கோடல் ஆவசியகம் என்க. இங்ஙனம் புரிந்துவரின் அவரெல்லாம் நன்னிலையை விரைவின் எய்துவர்.

---

(13) தத்த நெறிச்செலுஞ் சால்பினை யுணராப்
பித்தர் தவறெனப் பேசுவ ரென்றல்.

ஒருசார் மங்கைய ரணன்முகிம் வேட்குந
ரொருசார் மங்கைய ரதுவெறுக் குநரே
யின்னண மொருசார் மாக்கட் கினிய
வுணவு முதல பிறிதுசார் பினர்தா
மறவெறுந் தம்மா பிறவிழை குநரே
யஃறிணை யனைவு மிவ்வே யமையு

மிவற்றுற் பழகிய வினியன பிறவே
யல்லன வாத லவணிக் கியற்கை
யினிமே,
ஒருடற் குரியவா மைம்மொழி யுள்ளு
மொருமொழி வேட்பன பிறவெறுப் பவ்வே
யெனினு மைம்மொழி வேட்பன வெல்லா
மவ்வவை வழிநின் றளாய்மன னின்புறூஉம
அறிவே,
மனன்வேட் டெல்லாம வண்மையொடு நோக்கிக்
கொள்ளுவ கொண்டு தள்ளுவ தள்ளி
யெள்ளறூஉ நன்னிலை பெய்துறூஉ மென்ப
வாதலி னுலகோரா தமக்கமை வனதா
நலலன வென்று மாகா தனதா
மலலன வென்று மமமதல
புல்லிய நெறிததாப புகன்றிசி னோரே.

---

(இ-ள்.) ஒரு சார் மங்கையர் அணல் முகம் வேட்குநர் = ஒரு பகுதியான பெண்கள் கன்னம் மோவாய் மேலவாய் முதலிய இடஙகளிலே கறுத்த மயிரையுடைய முகததாடவரை விரும்புகின்றார்கள்;

கன்னம் முதலாயினவற்றை இல்லாதாரை மங்கையர் விரும்பும் வழக்கா றின்மையின் ஈண்டு "அணல" என்பது ஆகுபெயராய் அவற்றின்மே லடர்ந்த கறுதத மயிர்த் தொகுதியை உணர்த்தி நின்றது. "மழிததலு நீட்டலும் வேண்டா" என்ற பகுதிககுப் பரிமேலழகா எழுதிப்போந்த உரைபோல ஈண்டைக் கியைநதவாறு விரித்துரைத்துக கொள்க.

"அணல்" கபோலத்தை யுணர்த்து மென்பதற்கு "மையணற் காளை" என்னும் பகுதிக்கு "மயிராற் கறுதத கபோலத்தினையும" என்றெழுதப்பட்ட உரை ஆதாரமாகும். இவ்வாறே ஐங்குறுநூற்றினும் "மையணற் காளை" எனவருதலுங்காண்க. இனி மோவாயை உணர்த்துவதை "மையணற் காளை", "புலிப்போத்தன்ன புல்லணற் காளை" எனவருகினற பகுதிகளுட் கண்டு தெளிக. மோவாய்—உயர்ந்தவாய். நற்றிணை 211-ம் பாட்டின் உரையை நோககுக. கழுததினை யுணர்த்துவதைச் "சுரியற் றாடி", "கறையணற் குறும்பூழ் கட்சி சேர்க்கும்" என்ற பகுதியுட் காண்க.

"அணல்" என்பது தாடிமயிரினை யுணர்த்து மென்பதனை நற்றிணை 179-ம் பாட்டில் "மையணற் காளை" என்ற பகுதிக்கு எழுதப்பட்ட உரையும், அணல் என்பதற்கு எழுதப்பட்ட விசேடவுரையும், நற்றிணை 198-ம் பாட்டில் "மையண லெருத்தின்" என்ற பகுதிக்கு எழுதப்பட்டவுரையும் "திகழ்நெடுந் தாடியி னழகும்" என்ற பிற்காலததார் கூற்றும் வலியுறுத்துவனவாகும்.

காமம் வேட்ட மகளிர் கறுத்த மயிருடையாரையே விரும்பல் இயற்கையாகலின் இங்ஙனஞ் சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன.

மேல்வாய் கபோலம் முதலாய இடங்களிலே மயிர்த்தொகுதியை வளர்ப்பவர் யவனர் போன்றார் என்க. இந்நூலாசிரியர் தமிழ்நாட்டினராதலின் மங்கையர் இந்நீண்ட தாடியினையுடையாரை எங்ஙனம் விரும்புகின்றனர் என்னும் வியப்புமேலீட்டினால் இவரை முதற்கண் எடுத்துக்கூறினர் போலும்.

ஒரு சார் மங்கையர் அது வெறுக்குநர் = மற்றொரு பகுதியான பெண்கள் (தாடி மேல் வாய் முதலிய இடங்களிலே மயிர்த்தொகுதியுடைய ஆடவரை விரும்பும் அம்மகளிர் போலாது) அத்தாடிமயிர் முதலியன உடையவரை வெறுக்கின்றனர்;

ஆகவே அவை இல்லாதாரை விரும்புகின்றனர் என்க. "அது" என்றது "மற்றத னன் கல னன்மக்கட் பேறு" என்றாங்குப் பொருள்பட நின்றது.

தாடிமயிரற்று மேல்வாப் மயிருடையாரையும் மேல்வாயினும் தாடியினும் மயிரில்லா தாரையும் அங்ஙனமே வேறுவேறு சாரான மங்கையர் விரும்புவர் என்பது இககூறியவற்றாற் போதரும். மேல்வாய்மேன் மயிருடையார் வேளாளர் போன்றார். மேல்வாயினுந் தாடியினும் மயிரில்லாதவர் சோணாட் டந்தணர் போல்வார்.

இன்னணம் ஒரு சார் மாககட்கு இனிய உணவு முதல = இவ்வாறேயான ஒருபகுதியான மாக்கட்கு இனிமைதருவனவாகிய உணவுப்பொருள் முதலாயினவற்றை;

"முதல" என்றா: உடுக்கை, பாடை, உச்சரிப்பு, பாஷாலங்காரம், அணிகலன், பழக்க வழக்கங்கள், ஒழுக்கம், தண்டம் என்றற்றொடக்கத்தனபலவும் அடங்குதற்பொருட்டு. இவ்வாறே "அறியாத் தேசத் தாசாரம் பழியார்" எனவும், "அறியாத தேயத்தான . . .வீடு பெற்றார்" எனவும், சான்றோர் கூறியவற்றானே உணரப்படும்.

பிறிது சார்பினர் தாம் அற வெறுதது (அம்மா) பிற விழைகுநர் = மற்றொரு பகுதியினர் முழுதும் வெறுத்து (அவராலே வெறுக்கப்பட்ட உணவுமுதலாய) பிறவற்றை விரும்புகின்றனர்;

அஃறிணை அனவும் இவவே அமையும் = அஃறிணைச் சீவராசிகளும் (ஒன்றன் வெறுககப் பட்ட உணவு முதலியனவற்றை மற்றொன்று விரும்பிவருதலாகிய) இவ்வாற்றினையே பொருந்துவனவாகும்;

உடுக்கை முதலியன அஃறிணைச் சீவராசிகட்கு இன்மையின் ஏற்பனவற்றைக் கொள்க.

இவற்றால் பழகிய இனியன = இக்கூறியவற்றால் (விரும்பிப்) பழகப்பட்டனவே இனியனவும்;

பிறவே அல்லன ஆதல் அவனிக்கு இயற்கை = (விரும்பிப் பழகாதனவாகிய) ஏனைப் பொருள்களே இனிமை அல்லாதனவுமாகக் கொள்ளுதல் உலகத்துச் சீவராசிகளுக்குரிய சுபாவமாகும்;

இனியே = முன்னர்க் கூறியனபோக இனிமேற் கூறுவதாவது;

அகத்துறைப்புள்ளும் வேற்றுமை காட்டப் புகுதலின் இனியெனப் பிரித்துக்கூறினர்.

ஓர் உடற்கு உரியவாம் ஐம் பொறி உள்ளும் = ஒரே உடலினது சௌகரியத்திற்கு உரியனவாகிய (மெய், வாய், கண, மூக்கு, செவி எனற) ஐந்து பொறிகடம்முள்ளும்;

ஒரு பொறி வேட்பன பிற வெறுப்ப = ஒரு பொறி விரும்பியவற்றை ஏனைப் பொறிகள் வெறுக்கின்றன;

மூக்கிற் கினிய புழுத முதலியவற்றை வாய்முதலியனவும், வாய்க்கினிய குழம்பு முதலியனவற்றைக் கண் முதலியனவும் வெறுக்குமென்று கூறினாராயிற்று. இரண்டு முதலிய பொறிகள் ஒருபொருளை விரும்புதல் செய்யுமாயினும் ஒருபொறி அப்பொருளை விரும்பும் முறைப்படியே மற்றைப் பொறியும் அதனை விரும்பாது என்பது போதர "பிறவெறுப் பவ்வே" என்றார்.

எனினும் ஐம் பொறி வேட்பன எல்லாம் = என்றாலும் ஐம்பொறிகளுக்குள்ளே (மேற் கூறியவாறு ஒற்றுமையில்லாதிருந்தாலும் அவ்வவற்றானே) விரும்பப்பட்ட எல்லா நுகர்ச்சிகளையும்;

[அவ்வவ் வழிநின் றளாய்மன னின்புறூஉம்] மனன் அவ் அவ் வழி நின்று அளாய் இன் புறூஉம் = மனசானது அவ்வப் பொறிகளின் வழியாக நிலைமைபெற்று (அவ்வவற்றானே விரும் பொருள்களைக்) கலந்து இன்பத்தை நுகரும்;

வேட்டன என்பதற் கேற்ப இன்புறூஉம் என்றார் ஆதலின் வெறுத்தனவற்றிற்கும் அவ்வாறே துன்புறூஉம என்றுணர்க. மனனும் பொறிகளும் இன்பத்தை நாடுதலின் அங்ஙனம கூறினார் என்பதும் மிகப்பொருந்தும். இது கருதி யன்றே "இன்புறூஉம்" என்றளபெடுத்தது. அல்லதூஉம் தாம் எடுத்துக்கொண்ட விஷயத்திற்கு இதுவே நிலைக்களன் ஆதலின் அளபெடுத்தது என்பாருமுளர்.

மனசிற்கு இன்பதுன்பங்கள் பொறிகளின் வழியே பிறக்கின்றன என்பதனையும் ஈண்டு ஆராய்ச்சியாற் பெய்துவைததனர்.

அறிவே = அறிவானது;

மனன் வேட்ட எல்லாம் = மனசினாலே விரும்பப்பட்டனவற்றையெல்லாம்;

அகரந் தொக்கது.

வண்மையொடு தூக்கி = நடுவு நிலைமையொடு ஆராய்ந்து;

நடுவுநிலைமையுள்ளவர் தம் ஆக்கஞ் சிதைவின்றி எச்சத்திற் கேமாப்புடைத்தாதலும் பிறவும் பெறுவாராதலின் அந்நடுவுநிலைமையை "வண்மை" என்றார். இவ்வாறே தேவரும் "தகுதி யெனவொன்று நன்றே" எனக் கூறினார். இதனைச் செம்மை என்றுங் கூறுப. "வண்மை" என்பது நடுவுநிலையே என்பது போதரத் துலாத்தின் றொழிலை யுணர்த்தினர்.

கொள்ளுவ கொண்டு = (நன்மைதருவனவாகிய) கொள்ளற்பாலனவற்றைக் கொண்டும்;

"அறிவுடையா ரவ தறிவார்" ஆதலிற் "கொள்ளுவ கொண்டு" என்றார்.

தள்ளுவ தள்ளி = (இருமைக்கும் உறுதி பயவாதனவாகிய) தள்ளவேண்டியவற்றை (மன விருப்பத்தைக் கவனியாமல்) அகற்றியும்;

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பா லுய்ப்ப தறிவு" ஆதலிற் "கொள்ளுவ கொண்டு தள்ளுவ தள்ளி" என்று கூறினார்.

எள் அறூஉம் நல் நிலை எய்துறூஉம் என்ப = இகழுதலற்ற நல்லநிலைமையை அடையும் என்று கூறுவர் பெரியோர்;

அறிவு அற்றங்காக்குங் கருவி பாகி நன்றின்பாலுய்த்து மெய்ப்பொருளைக்காட்டி உலகத்துச் சான்றோரொடு ஒக்கவைக்கும் என்பது ஈண்டுக் கூறப்பட்டது. அறிவான் ஆய்ந்துவருவார் தஞ் செயலை இகழ்தற்கு ஒருவன் எத்துணை முயன்றாலும் பயன்பெறாது கெடுவன் என்பது போதர "எள்ளறூஉம்" எனவும், மனன் முதலியவற்றானே வேட்கப்பட்டுக் கானற்புனல்போலத் தோன்றியழியும் இன்பம் போலாது இவ்வின்பம் நீடுநிலைக்கும் என்பது போதர "எய்துறூஉம்" எனவும் அளபெடுத்தன.

இவற்றானே புலன்வழியே மனசினையும் அம்மனசின் வழியே புலன்களையும் மனசினையும் போகவிடுப்பவர் இருமைச் சுகத்தையும் எளிதிற்பெறுவர் என்பதும் ஈண்டு விளங்கக் கிடந்தமை காண்க.

ஆகலின் = அது காரணத்தானே;

உலகோர் = உலகத்து மாந்தர்கள்;

தமக்கு அமைவனதாம் நல்லன் என்றும் = தங்களுக்கு அமைவனவாகிய உணவு முதலாகிய பொருள்களையே நன்மை பயத்தற் குரியன என்று கருதியும்;

ஆகாதனதாம் அல்லன என்றும் = (பிறர் நுகர்ந்துவருவனவாகிய பொருள்கள் தமக்கு வழக்கமும் பழக்கமும் இல்லாத காரணத்தானே) பொருந்தாதனவற்றை நன்மை பயவாதன என்று கருதியும்;

அமைதல் = (உபகாரபுலத்தி னுண்மையை அறியாமல் அமைவோடும்) பொருந்தி யிருத்தல்;

புல்லிய செறிந்து ஆ(த) நகனறிசினோர்=தாழ்ந்த மக்களுடைய முறைமை யென்று கூறினர் புலவோர்,

உலகத்தார் தத்தம் பழக்கவழக்கங்களைச் சிறந்தனவென்றும் பிறர்க்குரிய பழக்கவழக்கங்கள் தாழ்ந்தனவென்றும் தத்தமக்குட் பேசிக்கலாம் விளைத்தல் அறியாமையால் என்னவும், அவர்கள் அறிவுவழிச் செல்லாமல் தங்கள் வழியிலே அறிவினையும் இழுத்துச் சாசமாகத் தம் மனசினையும் பொறிகளையும் போக்கி வீணே முயன்று தீமைபடுவர் எனவும், பொறிகளையும் மனசையுந் தன்வழிப் படுத்திய நல்லறிவேபோல அவ்வவர் பழக்கவழக்கங்கள் அவ்வவர்க்கு இனியன வென்றும் நமக்கு இவ்வவை கோடற்பாலன இவ்விவை நீக்கற்பாலன வென்றுங் கருதுவோர்களே யாவராலும் நன்குமதிக்கப்பட்டு நீடூழிவாழ்வர் எனவும் பிறவாறும் இப்பாட்டுள் விளக்கப்பட்டன.

---

## (14) புதுவது கொண்டு பழையன கழிப்போர் மதிகொண் டாயின் வழுக்காண் கிலரெனல்.

பஃறலை யுடையை பலகை யுடையை
நீயென ஒருவனை நிகழ்த்தனைப்பட் டென்றுதம்
புதுமை கொண்டும் பழமையை யொழிந்தும்
நாற்கை மெய்யை மையை நல்லென மிக்கோர்
மேற்கொண் டிழுக்குந் நாமே விழைவுடன்
கல்வியும் பலவகைப் பொன்னினுங் கடவுளா
நல்லடி வமைத்து நன்றிகொடு பரவுதல்
பொல்லாங் கென்னப் புறம்பழித் தாற்றுந்
தம்முறு வேந்தன் றனற்கு நானி
லனவடி வமைந்த வெழுகோ வியத்தைப்
பட்டுடை யுடுத்திப் பைந்தார் சூட்டி
யூர்தியி னேற்றி யூர்வலம் வருகுந
ரிறைபுண் டென்னு மினைறிவு கொளுத்தி
முறைபட சாலை மங்கலம் முயல்குந
வரியெழுத்து நோக்குழி யவ்வெகா லொலிப்பொரு
டெரிகுவெ மன்றி யவ்வெழுத்து நிறனு
முருவமும் பிறவு முணர்கிலே மிறைவன
வரைவையு மங்ஙன் வாழ்ந்துவெ மன்றி
யெதனு னியற்றிய தெனக்காண் கிலமே
இனியே,
உயிரில் பொருள்களை யுருகிநெகு சொன்றுநீஇ
யவற்றி னலனும் பிறவுமாய்ந் தறைவோ
னியற்கைப் பாவல னென்றே யெவருங்
கிளத்துந ரன்றே கடவுட் படிவங்
கண்டுளங் கசிவுநீஇக் கண்ணீ ராட்டிப்
புலர்ந்த வாடை புனைஇ மலர்ந்து

நலந்தரு பூக்கொடு நற்பய னாற்றிப்
போற்றித் தாவைசி யூட்டவும் பந்தலு
மூலகுமுத லாகிய வுயர்நெறிய பிறவும்
பலவரும் பொருளெலாம் பண்ணிய பண்ணிக்
கல்வி லறிவுகொடு காமுற் றிதனு
மாகுபிற செயலா னற்பொரு ளுவன்கொ
லாற்ற லுடையோ னாற லுடையோ
னேற்ற முடையோ னீராழுத லிலலோன்
பற்றினர் தமைவிடாப் பற்றின னவனுடை
யீதெனப் பணித்த வினையுறும். வினையிற
சிறப்பளித் திலதுகொல் செருமைப் புகழ்ப்
பிறப்புடை னாக்குப் பேறுறு மெது செயமிலெலா
மாவிக் கினிய வாகில கொலலேலா
வினையெனப் பிற வற்றை யிகழ்ந்துயர்ந்த சாற்றுநர்
தமமுறு மறையைத் தந்நிக குறியைப்
பெசசி லாக்கிலை யிகழ்ந்துரைப் பறிவிலர்
பொய்ச்சூள் புகலவிலா புன்மைப புலவர்மன்
றன்றுறு வெளிநாக தன்மனை
தன்னுபதி முதலயுந தோன்றுமை நெறியே.

---

(இ-ள்.) [பஃறலை யுடைமை பலகை யுடைமை நீயென் றொருவனை யிகழ்த்தன்மட னென்று] ஒருவனை நீ பல தலை உடைமை பல கை உடைமை என்று இகழ்த்தல் மடமை என்று = ஒருவனை நோக்கி நீ பலதலைகளை உடையாய் பல கைகளை உடையாய் என்று கூறுதல் மடத்தன்மைத்தென்று;

பலதலையுடைமையை எண்டு இழித்துக்கூறக் கருதினமையாற் "பஃறலை" என்றார். பல தலைகையுடைமை என்றது "பஃறலை யுடைமை பலகையுடைமை" என வேறுவேறாகக் கூறினது வாணன்போன்றாரகுக் கைமட்டும் பலவாயிருந்த வுண்மை கருதியென்க. பல கை யுடைமையும் பலதலை யுடைமையும் தற்காலத் தில்லாமையின முன்னோர் அங்ஙனமெல்லாங் கூறியவற்றைப் பின்னோர் மடமெனக் கூறுவராயினர் என்க. அறியாமையான் முன்னோர் கூறினரேனும் அறிவு நிரம்பிய பின்னோர் அவர் கூற்றையெல்லாம் நமபியுழன்று வருகின்றனரே யென்று அவரது மடமைக்கிரங்குவர் எனறு குறிப்பிததா. முன்னோ பஃறலை யுடைமை என்றதை நீயும் இகழ்த்தன மடமேயாமென்று உம்மையை விரித்துப் பொருள்கோண்மாறறிக் கூறுவாருமுளர்.

தம் புதுமை கொண்டு நம் பழமையை எள்ளுநர் = தஙகளுடைய புதிய கொள்கையை (ஒரு பெரிய ஆதாரமாகக்) கொண்டு நமது (மரபு மரபாக உண்மையென் றறிந்து போற்றிவருகின்ற) பழைய கொள்கையை இகழ்ந்துவருகின்றனர்,

அன்னவரின் ஆற்றலின்மையும் மற்றவரின் ஆற்றலுண்மையும் நனிதோன்றத் "தம் புதுமை", "நம்பழமை" என்றனர். நம்பழமையை இகழ்வதுவே அவர்தம புதுமையாதலிற் "றம்புதுமை" என்பது முற்கூறப்பட்டது. பழமையாவது முக்காலமும் உணர்ந்த அருந்தவப் பெருமைச் சான்றோராற் கண்டுபிடிக்கப்பட்டது. புதுமையாவது தம்மகத்தில் அமைவனவற்றையே அறிந்துகோடும் ஆற்றலில்லாதவராற் றேடப்புட்டது.

[நாற்கை மெய்ப்பையை நலனென மிக்கோர் மேற்கொண்டு மினுக்குநர்] மிக்கோர் நால் கை மெய்ப்பையை நலன் என மேற்கொண்டு மினுக்குநர் = அம்மிகுதிப்பட்டோர் நான்கு கைகளையுடைய அங்கியைப் பூண்டுகொண்டும் தம்மை அறிவாளிகளாகப் பகட்டிவருகின்றனர்;

மிக்கோர் = முறைமைக்கு மீறி நடப்பவருமாம். மிக்கோர் கண்டு இகழ்ச்சி கருதி வந்தது இரண்டுகையுடைய இவர்தாம் நான்குகையுடைய அங்கியை மேற்கோடல் அறியாமைப்பாலதாயிருந்தும் அதனைக் குறிக்கொள்ளாமற் சான்றோரையும் அவர்தம் சார்பினோரையும் இகழ்ந்து வருகின்றனரே என்பது குறிப்பு. கலாவிநோதர்க்கே இவ்வங்கி உரியதுவாக இருந்துவருதலின் இதனையே முதற்கட் கூறினார்போலும்.

[நாமே விழைவுடன் கல்லினும் பல்வகைப் பொன்னினுங் கடவுளை நல்வடிவமைத்து நன்றிகொடு பரவுதல்] நாமே விழைவுடன் நல் வடிவு கல்லினும் பல வகை பொன்னினும் அமைத்து நன்றி கொடு கடவுளை பரவுதல் = நாம் அன்போடு இறைவனது நன்மையமைந்த வடிவத்தைக் கல்லினாலும் பலவகைப் பொன்னினாலும் அமையவைத்து நன்றியுடன் அக்கடவுளை (பூசை நைவேத்தியார்ச்சனை முதலியவைகளானே வழிபட்டுத்) துதித்து வருதலை;

பண்டைக் காலத்தில எல்லா மதத்தினரும் விக்கிரகாராதனை செய்து வந்தனர் என்பதும் தற்காலத்திற் பெரும்பான்மையும் நம்மவரேயன்றிப் பிறமதத்தினர் செய்கின்றாரில்லை என்பதும் தோன்ற "நாமே" என்றும், பிறரெல்லாம் நமமை எத்துணை யிகழ்ந்து தூற்றினும் நம்மவர்க்கு அவ்வாராதனையிலே வேட்கைகுன்றாம னிலைத்துவருகின்ற தென்பது போதர "விழைவுடன்" என்றும், விக்கிரகங்களைக் கல்லினால் அமைத்துக்கோடல் எவர்க்கு மெளிதாகலின் முதற்கட் "கல்லினும்" என்றும், அவ்வவர் தகுதிக் கேற்றவாறுஞ் செய்துகோடலா மென்பதுபோதரப் "பல்வகைப் பொன்னினும" என்றும், எவ்விடத் தமைக்கப்படினும் மூர்த்திகரங் குன்றித் தீமை பயவாவண்ணம் விதிப்படி செவ்விதின் அமையப்பெறவேண்டு மாதலிற் "கடவுளை நல்வடிவமைத்து" என்றும், உலகத்துப் பொருள்களெல்லாம் அவ்விறைவன் ஒருவனுக்கே உரியனவாதலின் அவற்றை நாம் நுகர்ந்துவரும் நன்மையைக் கோடற்கு அவனைப் பரவுதலே அதிகாரமும் முறையும் ஆகலின் "நன்றிகொடு பரவுதல்" என்றும் கூறினார். பொன்வகை—ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம் சாம்பூநதம் (சாம்புனதம) என நான்காகும். மஞ்சணிறம் பொருந்தியபொன் அரிதம் என்றும், கறுப்புக்கலந்த நிறப்பொன் கடார மென்றும், சிவப்புக் கலந்த நிறமுடையது பிங்கம் (பிசங்கம்) என்றுங் கூறுப.

"நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க .... . இணங்கி யிருப்பதுவு நன்று" என்றபடி நற்குண நற்செய்கைகளை யுடையவரோடு பழகிவருதலும், அன்னோ ரியற்றிய நூல்களைக் கற்றுவருதலும், அவர்தம் திருவுருவத்தைக் கண்டு போற்றிப் பரவிவருதலும் அகத்தின்கண்ணே நற்குணத்தை யுண்டாக்கு மென்பது கண்கூடாகிய உண்மையாதலின் எல்லா நலனும் ஒருங்கமைந்த இறைவன வடிவத்தைப் பரவிவருதல் பெரும்பயனுடைத்தென்க. இவற்றை யெல்லாம் இனிதுபுலப்படுத்துவான் வேண்டியன்றே "நல்வடிவு" என்று நுட்பமாகக் கூறினர் இந்நூலாசிரியர் என்க. துரோணாசாரியனுடைய உருவத்தைவைத்துப் பூசித்து விற்புலமை நிரம்பப்பெற்ற ஏகலைவனுற்றலையும கண்டுச் சிந்திக்கற்பாலது. படிவத்தினிடத்துச் சிரத்தை அதிகரித்து நன்மை பெறுதற்பொருட்டன்றே அபிடேக முதலாய பூசாமுறைகளை அநுசரித்து வரும்வண்ணம் ஆன்றோர் நியமித்திருக்கின்றனர். இதனையும் மேற்காட்டியமுறையே இனிது புலப்படுத்தும். வடிவமில்லா இறைவனுக்கு வடிவமமைத்தல் எங்ஙனமெனில் உருவமில்லா வொலிக்கு வரிவடிவம் ஏற்படுத்தியவாறு பழையபெரியோரால் விதிக்கப்பட்ட வடிவங்களை ஆய்ந்து கைக்கொள்ளலாமென்க. "கட்புல னல்லாக் கடவுளைக் காட்டுஞ்—சட்டகம் போலச் செவிப்புல வொலியை—யட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே" என்னும் ஆன்றோர் மேற்கோளை நன்காய்ந்தறிந்துகொள்க. எழுத்தா லமையப்பட்ட வரிவடிவத்தைக் கொண்டுடைய நூல் ஒருவாறு லோகங்களான் அமையப்பெறுங் கடவுளது வடிவத்தை ஒக்கும். நூலானது சகல பேற்றிற்குங் காரணமாதல்போலக் கடவுள் வடிவமும் எல்லா நன்மைக்குங் காரணமாகு மென்க.

பொல்லாங்கு என்ன புறம் பழித்து அரற்றுநர் = தீமையுடைத்தென்று சுற்றமுந் செல்லாஞ்சென்று இகழ்ந்து புலம்பியரும் இல்லாதாம்;

சருவ வியாபகராகி விளங்கும் இறைவனை இங்ஙனம் கல்லிடத்தும் லோகங்களினிடத்தும் அடங்கியிருப்பவனாக மதித்து வணங்கிவருதல எகதுணைப்பாவம் பயக்குமென்பார் "பொல் லாங்கு" என்றும், அவ்வாறு செய்பவரை இகழ்ந்துரைத்துத் தெருட்டினும் கேட்கின்றாரில்லை ஆதலான் அயன்மருங்கெல்லாம் போய்ப் பழிக்கத் தொடங்கிவிட்டார் எனபார் "புறம்பழித்து" என்றும், தமராயிற்றே இங்ஙனம் இவர் வழிபடிற் பாவம் மிக்கு நிரய மெய்துவரே என்செய்வது கொல்லென்று இரங்குவர் என்பார் "அரற்றுநர்" என்றுங் கூறினார்.

தம் உறு வேந்தன் தன் திரு நாளில் = தமக்குப் பொருந்திய அரசனது விழாக்காலத்தில்;

தங்களைப் புரத்தலுக்காயுற்ற வேந்தன் எனினும் இழுக்காது. திருநாள் என்பது பட்டாபிஷேகம், நாண்மங்கலம் என்னுமித்தொடக்கத்தனவற்றைக்குறிக்கும்.

அவன் வடிவு அமைந்த அழகு ஓவியத்தை = அவ்வேந்தனது வடிவம் பொருந்திய அழகு வாய்ந்த சித்திரத்தை;

வேந்தற்குப் பெரும்பாலும் பலவழகும் அமைந்திருத்தலின் "அழகோவியத்தை" என்றார். சிறப்புக்கருதி அவன்வடிவமைந்த காரணத்தானே எல்லாச்சித்திரங்களினும் இஃதோர் அழகு பெற்றது என்றுமாம். ஓவியம் என்றது கையாற் சித்திரிக்கும் படத்தையும், கண்ணாடிவழி யமைத்துப் பிறப்பிக்கும் பிரதிமைப் படத்தையும் லோகங்களான வார்க்கப்படும் பாவைகளையும் அன்னபிறவற்றையுங் குறிக்கும் என்ப.

பட்டு உடை உடுத்தி = பட்டுவஸ்திரத்தை உடுத்தி;

சிலமுதலியனவாகின் உடுத்துவர் சித்திரமாயின் உடுத்தியிருப்பதுபோற் பார்ப்பவர் கண்களுக்குத் தோற்றுமாறு தக்கவர்ணங்களாற்புனைவர் என்பதும் பிறவும் கருத்தாகும்.

பைம் தார் சூட்டி = பசிய (ஈரம் புலராத) மலர்மாலை சூட்டி;

பச்சைத்தண்ணீர் என்பது உலகவழக்கு. பச்சை விறகு என்பதுமது. பைம்புனல் என்பது நூல்வழக்கு.

ஊர்தியின் ஏற்றி = வாகனத்தி லேற்றி,

ஊர்வலம் வருகுநர் = நகரப் பிரதக்கணஞ்செய்வித்துவருகின்றார்கள்;

அவ்வரசனானவன் தனக்குரிய சிறப்புக்களை ஓர் ஓவியத்திற்குச் செய்கின்றனரே என்று ஒறுக்காது இன்னருள் புரிவதுபோல இறைவனும் ஒறுக்காது இன்னருள்புரிவான் என்க. இறைவன் எல்லார் மனத்தினுங் கோயில்கொண்டு இருப்பவனாதலின் அவ்வவர்வழிபாட்டை நன்குணர்ந்து நனிபுரப்பன் என்க.

தேசத்தில் வழங்கிவரும் நாணயத்தை அதிகாரப்படுத்துமாறு அரசன் தன் உருவத்தை அதிற் றீட்டுவிக்கின்றான். அதனைப்பங்கப்படுத்தினும் அழிக்கினும் இகழினும் குற்றவாளிகளாகித் தண்டனைக் குள்ளாகவேண்டும்

இறை உண்டு என்னும் இன் அறிவு கொளுத்திய முறை ஆசானையும் = இறைவன் உண்டு என்கின்ற இனிய அறிவைக் கற்பித்தழுத்தும் நூலையும் அந்நூலைச் செய்தவனும் உபதேசிப் பவனும் ஆகிய ஆசாரியனையும்;

முறை – நூல். நியாயத்தலங்களிலே கிருத்துவர்கள் சத்தியஞ் செய்யும்பொழுது அவர் தம் வேதமாகிய "பைபில்" என்னும் புத்தகத்தைப் பயபத்தியுடன் கையில் ஏந்தி முத்தமிட்டுக் கொள்கின்றார்கள். தலையினும் வைத்துவிடுகின்றனர். அப்புத்தகம் தேவவாக்கெனக் கொள்ளப் படினும் மெய்யளவில் வாக்கன்று என்றும், வாக்கின் ஒலியைக் காட்டும்வண்ணம் வரிவடிவத்தி லடைத்த சித்திரப்பட மென்றும் உணர்கின்றாரில்லை. இவர்செய்கை விக்கிரக வழிபாடுடையார்க் கன்றே சாதகமாகும். தேவவாக்கைக்குறிக்குஞ் சித்திரத்துக்கு இத்துணைப்பெருமையும் தேவ

வடிவத்தைக் குறிக்கும் விக்கிரகங்களுக்கு அத்துணைச் சிறுமையும் காட்டிவருதல் ஒருபெரும் வியப்பன்றோ. எண்டடக்கப்பட்டனவற்றையெல்லாம் விரிக்கின் மிகப்பெருகும். வல்லார்வாய்க் கேட்டுணர்க.

அவ்வாறாம் முயல்குநர் = அவ்வாசனுக்குச் செய்தவாறே செய்துவருகின்றனர்;

வரி எழுத்து நோக்கு உழி = நாம் வரியெழுத்தைக் காணுமிடத்து;

அவை கொள் ஒலி பொருள் தெரிகுவெம் அன்றி = அவ்வரிவடிவ எழுத்துக்கள் கொண்ட ஒலிவடிவத்தின் மூலமாக அவற்றிற்குரிய பொருள்களைத் தெரிந்துகொள்ளுவமேயன்றி;

அவ் எழுத்து நிறனும் உருவமும் பிறவும் உணர்கிலெம் = அவ்வெழுத்துக்கமைந்த நிறத்தினையும் வடிவத்தையும் இவைபோன்ற பிறவற்றையும் உணர்ந்துகொள்ளமாட்டோம்;

ஏட்டினையும் எழுதுகோலினையும் இன்னபிறவற்றையும் "பிறவும்" என்றது குறிக்கும். "மரத்தை மறைத்தது மாமத யானை — மரத்தின் மறைந்தது மாமத யானை", "கல்லைக் கண்டா னாயைக் காணோம்" என்பனவும் இதனையே வலியுறுத்தின. "எழுத்துநோக்குழி" இவையெல்லாந் தோன்றப்பெறா. நோக்காவிடத்து இவையெல்லாந் தோன்றப் பெறும் என்க.

[இறைவன் வடிவையு மங்ஙன் வாழ்த்துவெமன்றி பெதனு ளியற்றிய தெனக்காண கிலெமே] அங்ஙன் இறைவன் வடிவையும் வாழ்த்துவெம் அன்றி (இது) எதனை இயற்றியது எனக் காண்கிலெம் = அவ்வாறேமான, இறைவனது (கல்லினாலும் பொன்னினாலும் இயற்றிய) வடிவத்தையும் (அவ்வப்பொருள்களாலே செய்யப்பட்டது என்று ஆராயாமல இறைவனே யென்று கருதி) வாழ்த்திவருவோமே அல்லாது (இவ்வடிவம) எவ்வுலகத்தால் இயற்றப்பட்டது என்று காணமாட்டோம்;

வரிவடிவ எழுத்துக்குரைத்தாங்கு ஏற்பவிரித்துக்கொள்க.

இனியே = இனிமேற்படுவது;

[உயிரில் பொருளொடு முருகிநெஞ் சொன்றுறீஇ] உயிர் இல் பொருளொடு நெஞ்சு உருகி ஒன்றுறீஇ = உயிர் இல்லாத சடப்பொருளோடும் (அவற்றைக் கண்டுழி மயல்வாம) மனமுருகி அவற்றோடு ஒன்றுபட்டு;

ஒன்றுபடும் அருமை தோன்ற "ஒன்றுறீஇ" என்றளபெடுத்தது.

அவற்றின் நலனும் பிறவும் ஆய்ந்து அறைவோன் = அச்சடப்பொருள்களாலே நமக் குண்டாகும் நன்மையையும பிறவற்றையும் ஆராய்ந்து நமக்கு எடுத்துக் கூறுகின்றேன்;

தேகத்தை வருத்துவனவும் சுவைகெடுப்பனவும உளவாதல்பற்றிப் "பிறவும்" என்றார்; நலனுக்குப் புறமபாவன அவையாதலின் எனக. தம்மைக் காதலர்பொருட்டே அககுணஞ் செய்கைகளை உடைய என்று அவற்றின்மேலமைந்த வெறுப்பை அகற்றுகின்றான் என்பது போதர "ஆய்ந்தறைவோன்" என்றார்.

இயற்கை பாவலன் என்றே எவரும் கிளத்துநர் அன்றே = இயற்கையாக அன்புசுரக்கப் பெற்றுத் தானே பாடுகின்ற பாவலனுவனே என்று எத்தகையினரும் கூறுகின்றனரன்றே;

கடவுள் படிவம் கண்டு உளம கசிவு உறீஇ = (அவ்வாறேமானக) கடவுளது படிவத்தைபுங் கண்டு மனங்கசிதலுற்று;

அக்கசிவானுறுவது பேரின்பம் என்பதுதோன்ற "உறீஇ" என்றளபெடுத்தது.

கணம் நீர் ஆட்டி = கூட்டமாகிய நீரானே அபிஷேகஞ்செய்வித்து;

புலர்ந்த ஆடை புனைஇ = உலர்ந்த வஸ்திரத்தை அணிபொருந்தவுடுத்தி;

மலர்ந்து நலம் தரு பூ கொடு நல் பெயர் சாற்றி போற்றி = மலர்வுற்று நன்மை தருகின்ற பூக்களைக்கொண்டு அவ்விறைவனது ஆற்றலை விளக்குந் திருப்பெயர்களை உச்சரித்து அருச்சனை புரிந்து;

புட்பவிதியிலே விதித்தற்கிணங்கியகுணனமைந்த பூக்களை நலந்தரும் என்பது தோன்ற "மலர்ந்து நலந்தரு" என்றும், தாமே ஆய்ந்து கொடுவரல் வேண்டும் என்பது தோன்றப் "பூக்கொடு" என்றுங் கூறினர். அப்பெயர்களைச் சகச்சிரநாமத்திற் கண்டுகொள்க.

தூ வல்சி ஊட்டி வழிபடுதலும் = தூய்மையாகிய உணவை நைவேத்தியஞ்செய்து வழிபாடுசெய்துவருதலும்;

"தூ" என்றதை ஏனையவற்றிற்கும் ஏற்பப் பெய்துரைத்துக்கொள்க. அருமையும், பெருமையுஞ், சிரத்தையும், நம்பிக்கையுந் தோன்ற "ஊட்டி" என்றார் "ஊட்டி" முதலியவற்றிற்கும் இஃதொக்கும்.

உலகு முதல் ஆகிய உயர் நெருப்பிற்கு = உலக வாழ்விற்குப் பிரதானமாகிய உயர்ந் தோங்கிச் செல்லும் இயற்கையுடைய நெருப்பிற்கு;

"உயர்" என்பது பெருமையையுங் குறிக்கும். இப்பெருமையை இருக்கு வேதத்தின் முதற்கட் கண்டுதெளிக.

பல அரும் பொருள் எலாம் = பல அரிய திரவியங்களையெல்லாம்;

அவையாவன, அரதனம், பொன், வெள்ளி, செம்பு, கூலம் பால் நெய் என்னுமித்தொடக்கத்தன. புனல் முதலியவற்றிற்கும் இஃதொக்கும். ஏற்பப் பெய்துகொள்க.

[பன்னிப் பன்னிக் கவலையி லறிவுகொடு காமுற் றீதலும்] கவலை இல் அறிவு கொடு காமுற்று பன்னி பன்னி ஈதலும் = கவலையில்லாத அறிவாலே விருப்பமுற்றுத் துதித்துத்துதித்துக் கொடுத்துவருதலும்;

பொருட்செலவினும் சிரத்தையினும் கவலையில்லாதஅறிவென்க. உண்மையறிந்த காரணத்தானே காமுறுதலும் பன்னுதலும் ஈதலும் உளவாயின.

ஆகும் இ செயலான் அறி பொருள் எவன் = ஆகுகின்ற இக்கூறிய வினைகளானே அறிந்துகொள்ளக்கூடிய கருத்துத்தான் யாது?

கொல்—அசைநிலை. இயற்கைப் பாவலன் செயலினும் இவ்வினைகள் பெரிதுஞ் சிறப்புடையன என்பதுவே அக்கருத்து. ஏற்ப விரித்துரைத்துக் கொள்க.

ஆற்றல் உடையோன் = நிக்கிரகாநுக்கிரகம் புரியும் வல்லமையுடையவனும்;

ஆர் அருள் உடையோன் = அருமையாகிய அருளினை உடையவனும்;

ஆர் என்பது நிறைந்த எனவும் பொருள்படும். பிறர்க்கமையாத பெருஞ்சிறப்புத் தோன்ற "ஆரருள்" என்றார். "தம்மையே காக்கு நலத்துத் தனிப்பெரும் பதத்தை" யென்பர் கம்பரும்.

ஏற்றம் உடையோன் = எவற்றினுஞ் சிறந்த பெருமையுடையவனும்,

தனக்கு ஒன்றும் வேண்டாக் கலனுப உலகுய்வின்பொருட்டே அவதாரஞ்செய்தல் ஐந் தொழில்புரிந் தாளுதல் அனைய பிறவற்றையெல்லாம் அருளிச்செய்தலின் "ஏற்றமுடையோன்" என்றார்.

ஈறு முதல் இல்லோன் = முடிவும் முதலும் இல்லாதவனும்;

உள்பொருளெல்லாம் அழிவது நிச்சயமாதலின் அதனை நீக்குவான் கருதி "ஈற்றினை" முதற்கட் கூறினர்.

பற்றினர் த(ம்)மை விடா பற்றினன் = (அகம்புறம் என்னும் இருவகைப்பற்றுக்களையும் அகற்றித் தன்மேலுள்ள பற்றினைமட்டும் அகற்றாது) பற்றின பெரியோர் தங்களைக் கைவிடாத பற்றொன்றனையுமே உடையவனும் ஆகிய,

[அவன்வடி வீதெனப் பணிதல்] ஈது அவன் வடிவு என பணிதல் = இதுவே அவ்விறைவனது திருவுருவம் என்று கருதிப் பணிந்துவருதல்;

ஆற்றன் முதலியவற்றை யுடையோனாகிய அவனதுவடிவு இதுவெனப்பணிதல் என முடிக்க. "இது" என்பது நன்முதலியவற்றானாகிய இவ்வுருவம் என்று பொருள் படும்;

இயை குழூஉ இயையின் சிறப்பு அளித்திலது=சேர்ந்து வருகின்ற கூட்டத்தார்தம் கூட்டுறவானே அடையப்பெறும் சிறப்பினைப்போன்றதொரு சிறப்பினை அளித்திலதா;

இன் – உவமவுருபு. விரைவிற் சோகதுவிட—முடியாதென்பதுபோதர "இயை" என முன்னுங்கூட்டப்பட்டது. "சிறப்பு" என்னும் இமேலினானே மாட்சிசான்றகுழூஉ என்பது தானே பெறப்படும். கொல்–அசைநிலை. அக்கூட்டத்தார் விடுத்த முகத்தானும், உரைத்த வுரையானும், அவர்தம் உருவப்படத்தானும் நன்மை பெறுதல் கண்கூடு. அரசர்பெருமான திருவுருவப் படத்தால் அடையப்பெறும் நன்மையைக் கண்டுகொள்க.

[சேருமைம் பூதப்-பிறப்புடற் றனக்குப் பேணுறூஉஞ் செயலெலா—மாவிக் கினிய வாகில கொல்லோ] ஐம் பூதம் சேரும் பிறப்பு உடல் தனக்கு பேணுறூஉம் செயல் எலாம் ஆவிக்கு இனிய ஆகில=ஐம்பூதங்கள் சேர்வதனாலே தோன்றுதலையுடைய தேகந்தனக்கு விரும்பிச்செய்து வருகின்ற செய்கைகள் எல்லாம் அவ்வுடலின் கண்ணே வசித்துவரும் உயிர்க்கு இனிமையுடையன வாய் அமையவில்லையோ;

சடப்பொருளாகிய உடல்முழுதும் கலந்திருக்கும் ஆவி. உடலுக்குச்செய்யும் இனிமையெல்லாம் உயிர் நுகர்ந்து இன்புறும். சகலபொருள்களிலும் கலந்திருக்கும் இறைவனுக்கு விக்கிரகாராதனையாற் பெறும் இன்பம் உண்டாகும். மந்திர முதலாய பிரம்பாகத்தான விக்கிரகம் இறைவனது வடிவாகும். வரிவடிவவெழுத்துக் குரைத்தாங்கு கண்டுங் கூறிக்கொள்க. பிரேதக்குழிக்குப் பூவிட்டுப் பூசைசெய்யும் சிலர் இதனைப் பழித்து வருதலுங் கலிகாலக் கொடுமையே. இங்குக் கூறவேண்டியவற்றை முன்னரும் குறித்திருக்கின்றாம். "கொல்லோ" என்பது அசைநிலை.

இன்ன பிறவற்றை இகழ்ந்து பறை சாற்றுநர்=இன்னவற்றையும் இவைபோன்ற பிறவற்றையும் வீணென்றிகழ்ந்து குறைகூறி வருகின்றனர்,

அவர்தாம் யாவரோவெனில்?

தம் உறு மறையை=தமக்குப் பொருந்திய வேதத்தையும்;

பிறர்க்குறூஉ மறையையும் இகழ்வா ரென்பதுபோதரத் "தம்முறு மறையை" என்றார்.

தகுதி குறியை=தம்முடைய மதத்திற்கு இதுதான தகுதியுடைத்தென்று அணிந்துவரும் அடையாளத்தையும்,

குறி என்றது சிலுவைபோன்றவற்றை. இக்குறிகள் அவ்வம்மதத்திற்கு நடுவுநிலைச் சிவாதாரமாக விளங்குதல்பற்றித் "தகுதிக்குறியை" என்றார்.

எச்சில் ஆக்கிலர்=எச்சிலாக்ககில்லாரும்,

இகழ்ந்து உதைப்பு அறிபு இலா=இகழ்ந்து உதைத்தலை அறிதலும் செய்யாதாரும்;

பொய் சூள் புகல்வு இலா=அவற்றைச் சான்றாக வைத்துக்கொண்டு பொய்யாகச் சூளைச் சொல்லுதலும் இல்லாதவரும் ஆகிய;

புன்மை புலவர்=புல்லிய புலமையுடையோராவர்;

ஆராயாது கூறுகின்றமைபற்றிப் "புன்மைப் புலவர்" என்றார். புலவர்—பறைசாற்றுநர் என்க.

தன் உறு வெரிநும்=தனக்குற்ற முதுகும்;

வெரிந்–முதுகு.

தன் மனை துணை பழி முதலவும்=தனது மனைவியினிடத்திலே பொருந்திய பாவங்களை முதலாகவுடைய குறைகளும்;

தோன்றாமை நெறியே=ஒருவன்றனக்குத் தோன்றாதிருப்பது உலகவழக்கேயாம்;

"தன்முதுகுப் புண்ணும் தன்மனையாள் குற்றமுந் தனக்குத்தோன்றாவாம்" என்பது நந்நாட்டுப் பழமொழி.

---

"கற்பக மனையவக் கவிஞர் காட்டிய—சொற்பொருளாமெனத் தோன்று கின்றது" என்பது கருதி "ஆழ்ந்து" என்றுங் கூறினர்.

செப்பற்கு எளிதாம் வேட்கை தீஇ மேல் மேல் ஊக்கி = சொற்கெளிதாகும்வண்ணம் விருப்பத்தைத் தந்து (பிறவற்றை விரும்பாமற் றன்னையே ஆயுமாறு) மேன்மேலும் அன்னோரை ஊக்கப்படுத்தியும்;

"ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி" என்றதனை நோக்கிச் "செப்பற்கெளிதாம்" என்றும், "தாளார் மலர்ப்பொய்கை தாமடைவார் தண்ணீரை—வேளா தொழிதல் விடப் பன்று—வாளாதா—மப்பா லொருபாவை யாயபவோ வள்ளுவனார்—முப்பான் மொழிமூழ்கு வார்" எனவும் "பல்காற் பழகினுந் தெரியா வுளவேற்—றொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார் மூன்றினு முழங்கு மாண்டினு மிலையால்—வடமொழி வெளிபெறத் தோன்றும்" எனவும் வருவனவற்றை நோக்கி "வேட்கை தீஇ மேன்மே லூக்கி" என்றுங் கூறினர்.

மன்பதை தமக்கு எலாம் = மக்கட்பிறப்பினர் தங்களுக்கு எல்லாம்;

இன்றி அமையாத நன்றிபுரி = இருமைக்குந் தானின்றி ஒன்றும் அமையப்பெறாத (அறம் பொருள் இன்பம் வீடு என்பனவற்றை அடைதற் குரிய) நற்செயல்களை ஆற்றுதற்குரிய உபதேசத்தைச் செய்கின்ற,

முத்தை நல் தமிழ் பாட்டு இடை = பண்டை (முதலிடைகடைச் சங்கத்துச் சான்றோரும் பிறசான்றோரும் இயற்றியருளிய) நன்மைபயக்கின்ற தமிழ்ப்பாட்டுக்களின் இடையே;

கோங்கு முதல் ஆ(க) கொள உறுப்பு இடைதல் = (பெண்பாலரை வருணிக்குங்காலத்துக்) கோங்கரும்பிறகு ஒப்பாக உரைத்தலைக் கொண்ட தனமுதலாகியவற்றை உணர்த்துஞ் சொற்கள் கலந்துவருதல்;

கோங்கரும்பைமட்டும் உணர்த்தினர், அது புடைத்து வெளித்தோன்றுந் தன்மைத்தாதலிற் சித்திரத்திலே அது தோன்றுமாறு தீட்டிவரும இகழ்ச்சியை நோக்கி யென்க. இந்நூலாசிரியர்க்குத் தனமுதலியவற்றை வெளிப்படையாகக் கவிகளிலே பெய்துசேறல் உடம்பாடாகவும் "கோங்குமுத லொப்பாக் கொள்ளுறுப்பு" எனமறைத்துக் குறிப்பான் அவற்றைப் புலப்படுத்தினர், தன முதலாகியவற்றைக் கவிகளுக்கிடையே பெய்துரைத்தலை வெறுக்கும் போலிக் குணனமைந்த இக்காலத்தாரைத் தங்கோ ளுரைகளுங்காறும் நயந்து கேட்குமாறு புரிந்து அவரைத் தம்மதமாக்குதற் பொருட்டென்க.

பாங்கு அன்று என்ன பகர்நர் என்னே = தகுதி அன்றென்று கூறுகின்றனர் (அவர் அவ்வாறு கூறற்குரிய காரணந்தான்) என்னை?

கண் கவர் வனப்பு காட்டு ஓவியத்து இடை = (உயிர்ப்பொருளுக்கு ஒப்பாக இருக்கும் அமைதியானே பார்ப்பவர்தம்) கண்களைக் கவருகின்ற அழகுவாய்ந்த சித்திரத்தின்கண்ணே;

"இளங்கோன் கண்ட விளம்பொற் பூங்கொடி—விளங்கொளி மேனி விண்ணவர் வியப்பப்—பொருமுகப் பளிங்கி னெழிலி வீழ்த்துத—திருவின் செய்யோ ளாடிய பாவையின்—விரைமலர் கைகளை மீண விலோதனத்—துருவி லாளனொ டுருவம் பெயர்ப்ப—வேர்வீய னுள்ளத் துள்ளிய துணியப் போன்—காவியங் கண்ணி யாகுத றெளித்து" என உதயகுமாரன் பளிக்கறையின் கண்ணிருந்த மணிமேகலையைச் சித்திரப் பாவையாக நினைத்து மயங்கினமைக்குக் காரணம் அவ்வாறு சித்திரிப்போர் உண்மையின் என்பதுவே கருத்தாதலினானும் "ஓவியப் புனைவின்மா டிருக்க ஆடு பேடையே" என்பதனானும் "கண்கவர் வனப்புக் காட்டோவியத்து" எனக்கூறப் பட்டது.

அல் உறுப்பு இல் எனில் உவர்த்து ஆங்கு அகற்றியும் = தனமாகிய அந்த உறுப்பு எழுதப் பெறாதிருப்பின் (அப்படத்தினை) வெறுத்து நீக்கியும்;

ஆங்கு — அசைநிலை.

அவ் உறப்பு உறினே அவர் உற்று மகிழ்தும்=தனமாகிய அந்த உறப்புப் பொருந்தியிருந்தால் (அப்படத்தினைப்) பேராசையுறக்கண்டு மகிழ்ச்சியடைந்தும்;

எண் இலர்=ஆராய்ச்சியில்லாதவர்களாகி; (முன்னொருபின் முரணுமாறு)

பல பல இயம்புநர்=பலப்பலவாகிய விஷயங்களைக் கூறுகின்றனர், (ஆதலினானே)

மண் திணி ஞாலத்து=அணுக்கள் நெருங்கிய இப்பூவுலகத்திலே; (உள்ளமக்கள் தம்முடைய)

மாண்பு நனி நன்று=நற்குண நற்செய்கைகண் மிகவும் நன்றாயிருக்கின்றன;

ஒருபாஷையிலே தன்மாகிய உறப்பைக் குறிக்குஞ் சொற்களை அப்பாஷையைக் கற்றவரே அறிவாராதலிற் கல்லார் பெரும்பாலும் அறியார். சித்திரத்தினிடத்தே யமைந்த அவ்வுறப்பினைக் கண்ணுள்ளார் யாவருமறிவர். இவ்வாறாகவும் அவ்வுறப்பமைந்த சித்திரத்தை மட்டும் வெறுத்தொழிக்கத் துணியாராய் அவ்வுறப்பிற்குரிய சொற்கள் அமைத்தியற்றிய பாட்டுக்களை அழிக்கத் துணிகின்றனர். அவர் தன்மைதானிருந்தவாறு என்னை என்றபடி.

வரிவடிவ எழுத்துக்களானும் ஒலிவடிவ எழுத்துக்களானும் அமைந்திட்ட சொற்களினும் ஒருபொருளுக்குரிய படமே மிகத் தெளிவு என்பது சற்று ஆராயத்தகுந்தது.

பல்வி முதலியவற்றோடு படஞ்சித்திரிக்கப்படாமல் இருத்தலே இடக்கராகுமன்றிப் பிற அவயவிகள் மறைக்கப்படல இடக்கராகாது. பாட்டுக்கும் இஃதொக்குமெனக.

---

## (16) ஒப்ப நாடி யுளத்தறிந் தொழுக லெப்பா லார்க்கு மினிதென வுரைத்தல்.

கள்ளற் கஞ்சித் தண்ணடைப் புகுநரை
யுண்மைக் கடுகி யுறலவற் குரைப்பதூஉ
மெய்ப்பே பெறுஉ மேதினி நிறுவச்
செய்கொலை முதல தீய வெறுஉக
கொளாநம வறக்கோறு கொள்ளா தலகம்
வறிஞன் றுன்றி வகைபற வழங்கியுஞ்
சிறிதுமுத விலலான் பொருளொடு செப்பேவான்
சொற்றவை தழாஅந துன்னுசெல வாக்கத்த
தானே வந்து தருகுவன் மாதோ
முறைமைநரு கட்டளை முற்றியோன் மொழிந்தவை
நெறியின் றெனினு நிலமைகக கொள்ளு
நிழல்கட் டளையிலோ னிகலை நிலையறீஇப்
பொறைநட் டழுகிற் புகலகொளா தலகம்
பொருந்துயிர் போகதும புரிந்து செனினுநன்
மருந்தே யாகு மருந்தவன் கைப்படின்
வழூஉச்சொல லெனினும வழங்குவகை நேர்
குழூஉக்கடை குறுகிற் குலாஅய்நலன் பயக்கு
மின்னண முலகத தியலுந திறனெலா
நன்கறிந் தொப்ப நடத்தன்
மன்பதை தமக்கெலாம் வாய்ந்தநற் கடனே.

(இ-ள்.) கள்ளற்கு அஞ்சி தன் அடி புகுந்தாரை=(திருடனாலே அலைப்புண்டு தம் உயிர்க்கும் ஏதம் வருங்கொல்லோவென்று அஞ்சி) திருடனுக்குப் பயந்து தன் பாதத்தை அடைக்கலமாகச் சார்ந்தவரையும்,

உண்மைக்கு அஞ்சி உறல் அவற்கு உரைப்பதூஉம்=மெய் கூறாவிடின் வரும் ஏதத்திற்குப் பெரிதும் பயந்து அவர்கள் அடைந்திருத்தலை (வினவிய கள்வற்கு) உரைத்துக் காட்டிக் கொடுத்தல்;

கள்ளன் என்றார், அவனது ஆற்றல்சான்ற தலைமை தோன்றற்கு. தானாக அழைக்கவில்லை அவர் தாமே புகுந்தார் என்பது போதரப் "புகுந்தாரை" எனவும், அவ்வாறு புகுந்தவர் யாண்டுச் சென்றனரோ எனத் தோற்றும் ஐயத்தாற் றன்னை வருத்துங்கொல்லோ என்று அச்சுறுத்தலின் கண்டிருக்கின்றனர் என்பது போதர "உறலவற்குரைப்பதூஉம்" எனவுங் கூறினார். இது கருதியன்றே தன்னடிப் புக்கார் உறலை அவற்குரைப்பதூஉம் என்றாராயினர். இன்னும் உண்மை கூறுதற்கும் தன்னடிப் புகுந்தார் ஊறு பெறுதற்கும் தனக்கு நோக்கமே என்னும் மனக்கலக்கத்தானே புகுந்தவர் கண்டிருக்கின்றனர் என்று கூறலும் இயற்கையாதலிற் கூறினார் என்பதூஉம் ஒன்று. மேற்கூறிய இருபொருளும் புலப்படுத்தற்கன்றே "உரைப்பதூஉம்" என்றளபெடுத்தது.

தானழைக்காமல் அவர் தாமே வந்து புகுந்தனர், உண்மை கூறாவிடின் வரும் ஏதங்கருதி நினக்கும் பொய்க்காது கூறிவிட்டேன், அவர் கண்டிருக்கின்றார், உய்ந்துபோமாறு விடுதற்கும் விடாமல் வேறுவகை செய்தற்கும் உனக்கு அதிகாரம் உண்டு, உன்றன் திருவுளப்பாங்கெவ்வாறோ அறியேன்; என்னும் இக்கூறியவெல்லாவற்றையும் உட்கொண்டு கூறியபடி என்க. இனி யடைக்கலம் புகுந்தாரைக் காட்டிக்கொடுத்தலும் அவரைப் புறக்கணித்தலும் அறநெறியாகா. இத்தகைய இடங்களிலே செய்தலையுந் தவிர்தலையும் விளக்கிக் காட்டுவதற்கு ஈண்டுப் புகுந்தார்.

"பெரியோர் விரும்பியவற்றையெல்லாங் கொடு", "பயன்படாதவற்றைப் பெரியோர் தமக்குக் கொடுத்துவிடாதே" என்பன மிருதிவிதிகள். பெரியோர் பயன்படாதனவற்றை விரும்பினரேல் யாதுசெய்வது என்பது ஆசங்கை. அவராகக் கேட்டவற்றையெல்லாம் கொடுத்துவிடலாம். நாமாகக் கொடுக்கும்பொழுது அங்ஙனமெல்லாங் கவனித்தல் வேண்டும். என்னும் இவை ஆசங்கை நீக்குவன. இத்திட்பநுட்பங்கடோன்ற, அரக்கரையழிக்கும் ஆற்றலில்லாச் சிறுவனாகிய தாசரதியை யாகத்தைக் காக்கும்பொருட்டுத் தருகவென்று விசுவாமித்திரனார் தசரதனை வினவியபோழ்து அவ்வேந்தன் காகுத்தனைப் பிரிவிற்கு வருந்தாமற் "படையூற்றமிலன் சிறுவனிவன்" என வருந்தியதாகக் கம்பநாடருஞ் செய்யுட்செய்துபோந்தமை பாராட்டற்பாலது. தாடகையாகிய அரக்கியைக் கோறியென்று குருவாகிய விசுவாமித்திரனார் கூறுதலை இராமன் "கேட்டு அறனல்லவும்-எய்தினாலது செய்கவென றேவினால்-மெய்ய நின்னுரை வேதமெனக்கொடு-செய்கையன்றோ அறஞ்செயுமாறு" என்று அவளைக் கோறல் புரிந்தான். ஐவரும் பாஞ்சாலியை மணந்துகொண்மின் என்ற குந்திசொல்லை ஆதரித்தற்குத் தருமனார் மேற்கூறியதனைக் காட்டாகக்கொண்டனர் என்ப. இவற்றான் இதிகாசத்தின் இன்றியமையாமையும் இந்நூலாசிரியர் ஈண்டெடுத்துக் கூறிய விடயமும் நன்குவிளக்கப்பட்டனவென்க.

மெய்யே எனாஅ=உண்மையுடைத்தெனவும்;

இத்தகைய மெய்ம்மையானது தீமை பயக்கும் என்பது தோன்ற "எனாஅ" என்றளபெடுத்த.

மேதினி நிறுவ செய் கொலை முதல தீய எனாஅ=உலகினை ஒழுக்கமுறைக்கண்ணே நிறுத்தற்பொருட்டு (அரசரால்) செய்யப்படும் கொலைமுதலாய தண்டங்கள் தீமையுடையன எனவும்;

பகைஞரைக்கோறல் உலகினை நிறுவும்பொருட்டாதலின் அதுவுங் கொலை என்றதனுள் அடங்கும். சிறைச்சாலையில் வைத்தல், அடித்தல், அபராதம் விதித்தல், நாட்டைவிட்டகற்றல் ஆதியபலவும் அடங்குதற்கு "முதல" என்றார்.

[கொள்ளும் வழக்காறு கொள்ளா துலகம்] கொள்ளும் வழக்காறு உலகம் கொள்ளாது = கொள்ளுகின்ற வழக்கத்தை உலகத்தார் கொள்ளமாட்டார்;

• "வந்தது வந்தது கூற்று" என்றாங்கு ஈண்டுக் "கொள்ளா துலகம்" என்றார். எக்காரணம் பற்றியும் பொய்யுரைத்தல் முதலியவற்றை மேற்கோடல் தகாதென்பாரை ஈண்டு மறுத்துக் கூறினார். கள்ளற்கஞ்சித் தன்னடிப்புகுந்தாரை அக்கள்வற்குக் காட்டிக்கொடுத்தல் என்பதும், மேதினி நிறுவச் செய்கொலை முதல என்பதும் எடுத்துக்கொண்ட விஷயத்திற்குக் காட்டாகிய உலக வழக்கங்கள். இதுகருதியன்றே திருவள்ளுவனார் "வாய்மை யெனப்படுவதியாதெனின் யாதொன்றுந்—தீமை யிலாதசொலல்" எனவும், "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" எனவும் திண்மையொடு கூறிப்போந்தார். "தீங்குபயவாதாயின் மெய்ம்மையாம், பயப்பிற் பொய்ம்மையாம் என்பது கருத்து. குற்றந் தீர்ந்த நன்மை அறம்; அதனைப் பயத்தலாவது கேடாதல் சாக்காடாதல் எய்தினதோருயிர் அச்சொற்களின் பொய்ம்மையானே அதனினீங்கி இன்புறுதல். நிகழாதது கூறலும் நன்மை பயவாதாயிற் பொய்ம்மையாம், பயப்பின் மெய்ம்மையாம் என்பது கருத்து. இவையிரண்டுபாட்டானும் தீங்கு பயவாத நிகழ்ந்தது கூறலும், நன்மை பயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மை எனவும், நன்மை பயவாத நிகழாதது கூறலும், தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்ம்மை எனவும் அவற்றதிலக்கணங் கூறப்பட்டது" என அப்பாக்களுக்குப் பரிமேலழகியார் கூறிய விசேடமும் நோக்கற்பாலது. அன்றியும் மெய்ம்மையானது அறவிரோதமாகித் தீமை பயக்குமாயின் அதுவும் தீமைதரும் பொய்ம்மையின்பாற்படும் என்க.

வறிஞன் தான் அறி வகை அற வழங்கியும் = வறுமையுடையாரொருவன் (சிலபொருள்களைக் கடனாகப் பெறும்பொருட்டுத்) தான் கற்றுள்ள கல்வித்துறை எல்லாவற்றினையும் மேலீஞ்சாது அறப்போமாறு எடுத்துக் கூறினானெயினும்,

சிறிதும் உதவிலலான் பொருள் கொடை செய்வோன் = சிற்றளவினவாகிய பொருள்களையும் அவற்குதவுதலைச் செய்யாதாகிய பண்டமிறுதலைச் செய்யும் வாணிகனானவோன்;

சொல் சுவை தழாஅ துன்னு செலவர்க்கு தானே வந்து தருகுவன் = சொற்சுவை பொருந்தாத நெருங்கின செல்வர்க்கு (அவர் கேளாதிருந்தும்) தானே சென்று (உபசாரங் கூறி அப்பொருள்களைக்) கொடுப்பான்;

இதனானே ஆற்றலில்லாதவரின் சொற்சுவை முதலியவற்றிற்கு உலகம் மயங்காது என்பது கூறப்பட்டது. தெய்வத்தன்மை பொருந்திய பாவலரின் பாக்கள் சொற்சுவை முதலாயினவின்றி இலக்கணவழுக்கள் பொதிந்தன போலக் காணப்படினும் அவற்றையெல்லாம் பெரிதும் பேணிப் போற்றிவருதலும் அத்தன்மையில்லாப் பாவலர்கள் பாக்கள் எதனைச் சுவைமுதலியவற்றாற் பெருமையுற்றிருப்பினும் அவற்றையெல்லாம் மதியாமல் ஒதுக்கிவருதலும் எக்காரணத்தான் எனப்பிறக்கும் ஐயத்தை ஈண்டைக்கேற்றபடி காண்க. செல்வர்க்குப் பெருமைதருதல் அச்செல்வம் ஆதல்போலத் தெய்வத்தன்மையுடையார்க்கும் அவர்தன்மைக்கத் திருவருட்பெருக்காகு மென்க. கொடுத்துக் கொடுத்துப் பலவூதியம் பெறாமை தோன்றத் "துன்னு செல்வர்க்கு" என்றார். தானறிவகையற வழங்கலாவது நன்மையுடையேன சொல்லுறுதியுடையேன் குறிக்குங் காலத்திற் கடனையிறுப்பேன் என்றன்னபல திடமொழிகளைக்கூறி வாணிபனைத் தன்வயப்படுத்த முயறல்.

முறைமை தரு கட்டளை முற்றியோன் மொழி-தலை = (வழக்கிடைப்பட்டு வருந்துவார்க்கு) நெறியைக்கொடுக்கின்ற அதிகாரத்தைக் குறைவின்றிப் பெற்றவன் (அவ்வழக்கிடைப்பட்டு வருந்தினவர் வருத்தம் போக) உரைத்த உரைமுடிவுகள்;

நெறி அன்று எனினும் நிலம் கைக்கொள்ளும் = (உண்மையும் நன்மையும் பயக்கவல்ல) வழியல்லனவாக இருந்தாலும் அவற்றையெல்லாம் உலகத்தார் நயந்து கைக்கொள்வர்.

மிக்க நியாயம்பொதிந்த உரையாயிருக்குமென்று உலகத்தார் எண்ணுவது வழக்கம் என்பதுதோன்ற "நெறியன் றெனினும்" என்றார். எனவே விடையறுட்பமில்லாதவர் உலகத்திலே

மிருந்திருப்பர் என்க. அவர்க்கு ஒரோவழி இவனது உரைமுடிவு பிழைபட்டதாகக் காணப்படினும் அதனைக்கொள்ளாது விடவும் மாட்டார் என்க. கைக்கொள்வர் என்றதற்கு நயந்து என்னும் அடைசேர்த்து உரைகூறப்படினும் இந்நூலாசிரியர் அவ்வடையுங் கொடாமல் வாளா சென்றது வெறுத்துங் கைக்கோடல் அவர்தமக்கெல்லாம் கடனாகும் என்பது கருதிப்போலும். ஆற்றாயின் அங்ஙனமே பொருள் கூறாதது குற்றமோவெனின் அஃதன்று; என்னை? நயத்தற் கொவ்வாதனவாய் இருப்பினும் அவற்றை அநுபவிக்கும்வண்ணம் ஊழ் உறுத்தின் நயந்து கைக்கொண்டநுபவித்தலை நூன்முறையும் ஆன்றோர் வழக்கமும் ஆதலின் அங்ஙனம் பொருள் உரைக்கப்பட்டதென்க.

நிறவு கட்டளை இலோன் = உலகத்தார்மாட்டுத் தன்னெறியை நிறுத்தி நன்மையுறுதற்குக் காரணங்களாகிய கட்டளையைச் செலுத்துதற்கு ஏற்ற பதவி வாய்க்கப்பெறாதவன்;

நீள் கலை நிலை அறீஇ = (ஆய்வார் நுட்பத்திறத்திற்கேற்றவாறு) நீண்டு செல்லும் மிருதி முதலியவற்றின் உண்மைநிலையை அறிந்து;

மிருதி முதலியவைகள் சொல்லளவிற் சுருங்கிப் பொருளளவிற் பரந்து நீண்டு ஆழமுடையனவாயிருத்தலின் அவற்றையெல்லாம் ஆய்பவர் சிலவெழுத்துக்களாலும் ஒவ்வொரு விதிகளும் பலப்பல அரியபெரிய விடயங்களை உள்ளடக்கிநிற்கும் இயல்பைத் தத்தம அறிவு நீட்சியானே கண்டுகோடலின் "நீள்கலை" எனவும், அந்நீள்கலையின் உண்மையெல்லாம் ஒருங்கறிந்த பெருமை தோன்ற "நிலையறீஇ" எனவுங் கூறினர். இக்காரணங்கருதியே "அறீஇ" என்றளபெடுத்தது.

[பொறைநட் டமுதிற் புகல்கொளா துலகம்] பொறை நட்டு அமுதில் புகல் உலகம் கொளாது = (உரைமுடிவின்கண்ணே உளவாய குற்றங்களைப் பிறர்க்குக் கூறாமிடத்தே அவர் கொள்ளாமற் குறைகூறும் பகுதிகளைப்) பொறுத்து நேசம்பூண்டு அமுதைப்போலச் சொல்லும் சொல்லை இவ்வுலகங் கைக்கொள்ளாது,

கற்ற கல்வியை உலகம் மதிக்காவிடிற் பெரும்பாலார்க்கு வெகுளிபிறத்தல் இயற்கையாதலின் அவ்வெகுளியை அடக்குவது மிக்க அருமை என்பது போதரப் "பொறை" எனவும், பொறுமையாக அமைந்தாலும் தங்கூற்றுக்களை ஏலாதவரோடு நட்டல் சாலாதாதலின் அவரோடு நட்புச்செய்யும் பெருமை தோன்றப் "பொறைநட்டு" எனவும், அவ்வாறு நட்டனராயினும் இடித்துரைப்பதுவே உலகவியற்கை யாகவும இவர் அமுதம் துளிப்பதுபோன்று இன்சொல்வழி அவற்றையெல்லாம் அளித்தலின் "அமுதிற்புகல்" எனவுங் கூறினர். நுண்ணறிவுடையோர் ஊழ்வயத்தான் நன்குமதிப்பைச் செல்வர்பாற் பெறாதவிடத்து அன்னவரைக் கல்விகேள்வியாற்றலிற் சிறந்த பெரியாரும் மதித்துக்கூறும் வழக்கு இல்லையென்பதுபோதர உலகத்தின்மேலேற்றிக் கூறினர்.

ஞானத்திலும் நுட்பதிட்பங்களினும் ஆற்றலினும் ஒத்தவராயிருப்பினும் அவர்தம்முள் ஆங்கிலங் கல்லாது தமிழறிந்தார்க்கு வருவாயும் மதிப்பும் இயையாதிருத்தல், ஆங்கிலமட்டுமறிந்தார்க்கு அவையெல்லாம் உளவாயிருத்தல், அவ்வாங்கிலங்கற்றார் உரைக்கும் ஊத்தைத்தமிழ்க்கும் உயர்வும் நன்குமதிப்பும் இயைந்துவருதல், இங்ஙனமே மேனாட்டார் நந்நாட்டாரை அங்ஙனம் மதித்துவருதல் என்னும் இவற்றையெல்லாம் ஈண்டு ஏற்றபடி ஒப்புநோக்கிக்கொள்க.

பொருந்து உயிர் போக்கும் புரிநஞ்சு எனினும் = உடலோடு பொருந்தி வாழ்கின்ற உயிரை அவ்வுடலைவிட்டு நீக்குகின்ற செய்கையையுடைய நஞ்சுதான் என்றாலும்;

[நன் மருந்தே யாகு மருத்துவன் கைப்படின்] மருத்துவன் கைப்படின் நல் மருந்தே ஆகும் = வைத்தியனுடைய கையை அந்நஞ்சு பொருந்துமாயின் (அது பல பிணிகளை நீக்குதற்குரிய) நன்மை வாய்ந்த மருந்தேயாய் முடியும்;

உயிர் போக்குங் கொடுமை மாறி நன்மை பயத்தலின் "நன்மருந்தேயாகும்" என்றார். பொருளை உபயோகிக்குந் தன்மை அறியாதார் இட்டப்பட்ட அமுதம் நஞ்சாகும். மருந்து நன்மையுறுவது மருத்துவனின் உயர்குணத்தன்மையினாலே ஆதலின் நன்மருந்தாகும் என்று

மருத்துவனை விசேடிக்காது மருந்தினை விசேடித்தார்.* இனி நன்மருந்து என்றமையான் வைத்தியனுடைய வைத்தியப்பழக்கமும் நுண்ணறிவும் பிறவும் விளங்கக் கிடத்தல் போல நன் மருத்துவனை என்னின் இயையாதலையும் ஆய்ந்து கொள்க. நன்மருத்துவன், நன்மருந்து என்று கூறின மிகையாகும் எனவும், நன்மருத்துவன் என்று மாத்திரங் கூறிற் குறைவுபடக் கூறியதாகும் எனவும், நன்மருந்தேயாகும் என்றலே சுருங்கச் சொல்லன்முதலாய பலவழகுகள் பொலிந் துள்ளனவாகும் எனவுங் கண்டு கொள்க.

தீயார் நல்லாரைச் சாரின் நல்லவராவர் என்பது ஈண்டு விளக்கப்பட்டது. "தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்—மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே" எனுங் கம்ப சூத்திரத்தை ஏற்குமாறு விரித்துரைத்துக்கொள்க. "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றே மாந்தர்க்—கினத்தியல்ப தாகு மறிவு" எனவும், "தினலாமோ வககாரஞ் சேர்ந்த மணல்" எனவும் பிறவாறும் வருவனவற்றானே நல்லவர் சார்புபெற்றாலும் தீயவர் நன்மையுறார் என்பது போதரலின் மேற்கூறப்பட்டன குற்றமென்று ஐயுறற்க. திருமால் திருமங்கையாழ்வாரைத் திருத்தியாட்கொண்ட வுண்மை காண்க.

வழூஉ சொல் எனினும் = குற்றமுள்ள சொற்களாக இருந்தாலும்;

வழங்கு வகை தேர்ந்த குழூஉ கடை குறுகின் = (அவையெல்லாம் நலன்பெறும்படி) வழங்கிவருந் துறைமுற்றும் அறிந்த சான்றோர்தம கூட்டத்தை அடைந்தக்கால்;

வழுவாய சொற்கள் நல்லனவாகும் வியப்புத்தோன்ற "வழூஉ" என்றளபெடுத்தது. அவ்விதம் ஆக்கும் ஆற்றல்சான்ற பெரியோர் அரியராதலின் அவர்கூட்டத் தருமைநோக்கிக் "குழூஉ" என்றளபெடுத்தது. வழூஉச்சொற்களாவன திணை, பால், மரபு முதலியன பிறழ்ந் தனவைகளும், இடக்கர்க்கிளவிகளும, அமங்கலச்சொற்களும பிறவுமாம்.

குலாஅய் நலன் பயக்கும் = (படிப்பவர் வாய்க்கும் கண்களுக்கும் கேட்பவர் செவிக்கும் இருவோர்தம் நெஞ்சத்திறகும் இனிமைதருமாறு) விளங்கி (வழங்குவகை அறியாத வினையோ ரான் உபயோகிக்கப்பட்டபோழ்து விளைக்குந் துன்பம் போலாது) இன்பம் பயக்கும்;

வழங்குவகை அறியார்மாட்டுத் துன்பம் பயக்கும் அச்சொற்களே ஈண்டு இன்பம் பயக்கும் பெருமை தோன்றக் "குலாஅய்" என்றளபெடுத்தது.

இன்னணம் உலகத்து இயலும் திறன் எ(ல்)லாம் = இவ்விதமாகவே உலகத்தில் நடை பெறும் (பல்வகைச் செய்கைகளின் உண்மைத்) தன்மை முழுவதையும்;

நன்கு அறிந்து ஒப்ப நடத்தல் = செவ்விதாக (ப்பலப்பல முறையும் ஆராய்ந்து) அறிந்து அவ்வவற்றிற்கு ஒவ்வுமாறு நடததலே;

மன்பதை தமக்கு எ(ல்)லாம் வாய்ந்த நல் கடன் = உலகத்து மக்கட்கெல்லாம் பொருந்திய நல்ல கடப்பாடாகும்;

மன்பதை—உயிர்ப்பன்மை; என்றாலும் ஒப்ப நடத்தற்குரியார் மக்களே ஆதலின் மக கட்கு என்று பொருள் கூறினும். "மன்பதை காக்குநின் புரைமை" எனவும், "இன்பச் செவ்வி மன்பதை யடைய" எனவும், "மன்பதை காக்கு மன்னவன்" எனவும், "மன்பதைக் கெல்லா மன்மொழி யாரோ" எனவும், "மன்பதை காக்க வறன்வலி யுறுத்து" எனவும் வருவனவற்றா னும் பிறவாற்றானும் இதன்பொருள் நன்கு துணியப்படும்.

மெய்ம்மையினால் நன்மையும் பொய்ம்மையினாற் றீமையும் எஞ்ஞான்றும் பயத்தல் இல்லை யென்றும், முனைசத்தியில்லாத சொற்சாதுரியங்களான் மாத்திரம் பயன்பெறுதற் கியலாதென் றும், நஞ்சும் அமுதாகும் அமுதும் நஞ்சாகும் ,என்றும், வழூஉச் சொற்களும் நல்லசொற்களா தும் நல்லசொற்களும் வழூஉச்சொற்களாகும் என்றும், ஒருவனது பேற்றிற்கும் இழவிற்கும் காரணம் அவனது ஊழ்வழியே ஆதலின் அதுகொண்டு சீற்றம், பொறாமை முதலாயவற்றைக் கொடல் துன்பம் பயக்கும் என்றும், அப்பேறிழவுகளுக்குக் காரணம் நம்மினோர்க்கு ஊழ்வினைப்

புலப்படுதல் அறிதெனறும், எல்லாவற்றையும் இறைவன் செயலெனவுணர்ந்து அன்புபூண்டு அறமேற்கொண்டு அமைதல்வேண்டும் என்றும் இப்பாட்டில் விளக்கப்பட்டன.

---

## (17) தமக்கென வாழாத் தகைமைசால் பெற்றல்.

காற்றே,
உடலம் வளர விந்து முயிர்க்குயிர்ப் புதவிப்
மடக்காக கனலை யாற்றிப் மழைவள
மழைஇப் பொழிந்து மளிக்கின்ற தம்மா
நீரே,
வெம்மை யகற்றியும் வேண்டுஞ வாக்கிப்
முடலழுக் கோட்டியு முவந்துதவு கின்றதால்
எரியே,
யிருட்டறத் தெருட்டாப்புற் றுரிபவை யுணற்றியு
மயிலுஞ வாக்கியு மாந்தர்க் கமைய ளித்து
முறுதுபார் கலந்து முதவிவரு கின்றது
புவியே,
இருக்கை நல்கிப் பின்னிழற் பழமரன்
புலனுண வாதிய பொலைறக்கொண்டு நல்கிப்
நீர்முதல் லேற்றவை நேர்ந்தற் றுதவியும்
மலைபே நறுமலர் வனமே வயலே
நிலையாச் சராசர நெருங்கிய கடலே
யாறே குளமே யந்நீர்ச் சுனைபே
யின்னவும் பிறவு மீந்தளிக் கின்றது
சதிரே
இமைகொள் பொழுதினு மிளைப்பிலா தென்றும்
பொழுதுவரு கணக்கிலும் போற்றுற உம் வினையினு
மெட்டுணை யேனும் வழுவா வியல்பிற்
பெட்டாங் குயிர்களைப் பேணிவரு கின்ற
தின்னண மாக விளக்கிர் மதியமுந்
துனணிவரு நாளுந் துகளா கோளுந்
தந்த முதவியிற் றவாஅ வாகுந்
நண்பும் பகையு நோதுமலு நாடில
வுயாவுந் தாழ்வு மொன்றுங் கருதில
வின்பந் துன்பு மென்றுங் கருதில
வொன்றைமற் றொன்று நம்பல வாகி
நன்றிபற் பலவா நடிவிழைந் தளிக்குந
இவ்வெல்லாம்
தம்முறு செயல்கொல் பிறர்தம் மேவல்கொ
ணமமுதவி பெற்றில நாமு முதவிலோ

மெய்ப்பொருட் டம்மா இவ்வகை யியற்றுக
இவற்றான்,
தமபய னனப்பிறர் தழைப்ப
நமமனோ ராற்ற நயப்பது நலனே.

---

(இ—ள்.) காற்று = காற்றானது;

ஏகாரமும் பின்னர்வரும் நீர், எரி, புவி, கதிர் என்னும் மொழிகளின் ஈற்றேகாரங்களும் இசைநிறை அசைகள்.

உடலம் வளர்வித்தும் = (உயிர்பொருந்திய) சரீரத்தை வளரச்செய்தும்;

உயிர்க்கு உயிர்ப்பு உதவியும் = (உடலோடு உறவுபூண்ட) உயிர்களுக்கு உயிர்ப்பினை உபகரித்தும்;

• சுவாசத்தைக் குறிக்கும் உயிர்ப்பு என்பது உயிரினைப் பொன்றவிடாது பொலிதர விலியுறுத்தி நிறுத்துந் தததுவசததியை யுணர்த்துகின்றது.

அடு கதிர் கனலே ஆற்றியும் = சுடுகின்ற சூரியவெப்பத்தைத் தணிவிததும்;

• மழை வளம் அழைஇ பொழிவித்தும் = வளப்பம்வாய்ந்த முகிற் கூட்டங்களை அழைத்துப் பொழியும்படி செய்வித்தும்;

அளிக்கின்றது = (நம்மைக்) காத்துவருகின்றது;

அம்மா — அசைநிலை.

நீர் = நீரானது,

வெம்மை அகற்றியும் = வெப்பத்தை நீக்கியும்;

வேண்டு உணா ஆக்கியும் = விரும்புகின்ற உணவுப்பொருள்களை உண்டாக்கியும்;

உலகத்திலே தோன்றும் பொருள்களெல்லாம் பறபல அமையததும் பற்பல நிலையினும் பற்பல சீவராசிகளான் வேண்டப்படுதலின் "வேண்டுணா" என்று கூறினார்.

உடல் அழுக்கு ஓட்டியும் = உடலின் புறத்தழுக்கை நீககியும்,

"புறந்தூய்மை நீரானமையும்" ஆதலின் "உடலழுக் கோட்டியும்" என்றார்.

உவந்து உதவுகின்றது = விரும்பி நமக்கு உபகரித்துவருகின்றது;

ஆல் — அசைநிலை.

தண்மையோடு கூடிய வெம்மையானே உலகத்துச் சீவராசிகள் பிழைக்குமென்பது கருதி எரியைக கூறாது நீரை முற் கூறினார்.

எரி = நெருப்பானது;

உயிர் உடல் தொடர்பு உறற்கு உரியவை உஞற்றியும் = உயிரும் உடலும் தம்முள் வேற்று மையினறித் தொடர்ச்சியுற்று நிலைப்பதற்கு உரியனவாகிய செயல்களைச் செய்தும்;

வெம்மை அறவே ஒழிந்தவிடத்து உயிர் நிலைத்தல் இன்மையானும் கருக்கோடன் முதலிய நிகழ்ச்சி இன்மையானும் "உயிருடற் றொடர்புறற் குரியவை யுஞற்றியும்" என்றார்.

அயில் உணா ஆக்கியும் = உண்ணும் உணவுப்பொருள்களை உண்டாக்கியும்;

நோய்முதலியவற்றை அயிலும் உணவு எனவும், ஒவ்வோரமைபத்து ஒவ்வொன்று ஒவ்வொனறி அயிலும் உணவு எனவும் பிறவாறுங் கூறுவாருமுளர்.

சீவராசிகள் ஒன்றற்கொன்று உணவாதல்பற்றி "அயிலுணா" என்றும், உணவுப்பொருள் முளைத்தற்கும் வளர்தற்கும் பூத்தன்முதலாயவற்றிற்கும் அவற்றை யுண்ணுதற்காற்றும் அடு

பிறவற்றிற்கும் வேண்டப்படுவது வெம்மையாதலின் "அயிலுணு வாக்கியும்" கூறினர்.

ஆம் தூய்மை அளித்தும் = ஆகுகின்ற பரிசுத்தத்தைக் கொடுத்தும்;

சாணமுதலியவை பலநாள் வைக்கப்பட்டிருப்பின் பதனழிந்து நாற்கந்தந்தருதலும் எரியிடையிட்டுச் சாம்பராக்கியவழித் தூய்மை எய்தலும் பற்றி "ஆந் தூய்மை யளித்தும்" என்றார்.

உறு துயர் களைந்தும் = அடைகின்ற துயரங்களைப் போக்கியும்;

உறுதுயர் களைதலாவது பனி, மழை முதலியவற்றான் நேருந் துன்பங்களைப் போக்குதல்.

உதவி வருகின்றது = உபகரித்து வருகின்றது;

புவி = பூமியானது;

இருக்கை நல்கியும் = இருத்தற்கேற்ற இடத்தைக் கொடுத்தும்;

இன் நிழல் பழுமரன் புல் உணவு ஆதிய பொறைகொண்டு நல்கியும் = இனிய நிழலைத் தருகின்ற பெரிய மரங்களையும் புன்முதலாய உணவுப்பொருள்களையும தாங்கிக்கொண்டு (அவற்றானுளவாகிய நன்மைகளைக்) கொடுத்தும்;

பழுமரன—பழுத்த மரமுமாம்; ஆலமரமென்றல் ஈண்டைக்கேலாது.

நீர் முதல் ஏற்று அவை நேருற்று உதவியும் = நீர் முதலாகிய பொருள்களைத் தன்னகத் தின்கணணே ஏற்றுக்கொண்டு அவற்றை (ப்பயன்படுமாறு மீட்டும்) நேர்மையொடு உபகரித தும

நீர்முத லேற்றவை நேருற்றுதவுதலாவது மழைக்காலத்திலே நீரினையுட்கொணடு அதனைத் தூய்மையாக மீட்டும் வேனிற்காலததிலே உதவுதல், விதைகளை ஏற்று ஒன்றுபலவாகத தோன்றச் செய்தன் முதலியனவாம்.

மலையே = மலையையும்;

நறு மலா வனனே = நறிய பூக்களையுடைய வனத்தினையும்;

வயலே = விளைவயலினையும்;

நிலையா சுரனே = நிலைபெறுதலில்லாத பாலையினையும்;

நெய்தல் கடலே = நெய்தல் நிலமாகிய கடலினையும்;

நிலப்பகுதியிலே கடல் சூழ்ந்த காரணம்பற்றி அதுவும் நெய்தலாயிற்று. ஆதலின் "நெய்தற் கடலே" என்றார். "கடலும் கடல்சார்ந்த நிலனும் நெய்தல் எனப்படும்" என்னும் உரைப்போக்கையும் ஈண்டாய்க. மலை முதலியன, குறிஞ்சி முதலிய ஐந்திணைகளையும் உணர்த்தும். "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து—நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்தும் பாலை யென்பதொரு படிவங் கொள்ளும்" (சிலப்பதிகாரம்.) என்பது தோன்ற "நிலையாச் சுரனே" என்றார். பிறிதலையே தனக்கு ஒழுக்கமாகக் கொள்ளுதலினானும் பெரும்பிரிவு முதலியவற்றானே நிலையாமையை உணர்த்துதலினானும் அங்ஙனங் கூறினர் என்பாரு முளர்.

ஆறே குளனே அம் நீர் சுனையே = ஆற்றினையும் குளத்தினையும் அழகிய நீரையுடைய சுனையினையும்;

இன்னவும் பிறவும் ஈந்து இனிக்கின்றது = இவைபோன்றவற்றினையும் பிறவற்றினையுங் கொடுத்து மகிழ்ச்சி பெறுகின்றது;

இன்னவும் என்றது கருப்பொருளுள் அடங்காதவற்றை. பிறவும் என்றது உரிப்பொருளை ஆட்சி முதலியன என்றுங் கூறுப.

கதிர் = ஞாயிறானது;

இமை கொள் பொழுதினும் இளைப்பு இலாது = இமைத்தலினாற் கொள்ளப்படுஞ் சிற்று ளைப் பொழுதளவேனுந் தளர்ச்சி இல்லாமல்;

என்றும் = எக்காலமும்;

பொழுது வரு கணக்கினும்=(இவ்விம் மாசங்கட்கு இவ்விப்) பொழுது வருதல் வேண்டுமென்னுங் கணக்கினும்;

போற்றுறூஉம் வினையினும்=தான் செய்துவருகின்ற தொழிலினும்;

"போற்றுறூஉம் வினை" யாவது பூமி முதலியவற்றை நழுவி அகலவிடாமலும் அணுகி மோதவிடாமலும் காப்பது. வேறுங் கூறுப.

எள் துணையேனும் வழுவா இயல்பில்=எள்ளளவேனும் பிறழாத தன்மையினுனே;

பெட்டு=விரும்புதலைச்செய்து;

ஆங்கு- அசைநிலை; பெட்டாங்கு—விரும்பியபடி எனினுமமையும்.

உயிர்களை பேணிவருகின்றது=(உலகத்துச்) சீவராசிகளைக் காப்பாற்றிவருகின்றது;

இன்னணம் ஆக=இவ்வாறாகவே;

இளம் கதிர் மதியமும்=மெல்லிய கிரணங்களைப் பரப்புகின்ற சந்திரனும்;

துன்னி வரு நாளும்=அதனைச் சூழ்ந்துவருகின்ற நாண்மீன்களும்;

துகள் தீர் கோளும்=குற்றந் தீர்ந்த (ஞாயிறொழிந்த ஏனைக்) கிரகங்களும்;

தம் தம் உதவியில் தவாஅ ஆகுந=தங்கள் தஙகள உதவியினின்றும் தவறி விலகாமல் நிலைக்கின்றன;

நண்பும் பகையும் நொதுமலும் நாடில=(இவைகளெல்லாம் உலகத்தார் நண்பு முதலா யினவற்றிற்கேற்ப உதவி முதலாயினவற்றைச் செய்துவரும் முறையைத் தழுவி உதவிசெய் தலிலே) நண்பு, பகை, பற்றிகலின்மை என்னும் பண்புகளாக கருதி ஏற்றத்தாழ்வுகளை இயற்று தற்கும் நாடுகின்றில;

உயர்வும் தாழ்வும் ஒன்றும் கருதில=உயர்வு தாழ்வு என்பவற்றுள் ஒன்றையேனுங் கருது கின்றில;

இன்பும் துன்பும் என்றும் கருதில=இன்பத்தினையும் துன்பத்தினையும் எப்பொழுதா யினுங கருதுகின்றில;

ஒன்றை மற்றொன்று நம்பலவாகி=(உலகினைக்காக்கும் விடயத்திலே) ஒன்றனை மற் றொன்று நம்பலவாகி;

"ஒன்றை மற்றொன்று நம்பல" என்றது ஐம்பெரும் பூதங்களும் பிறவும் தங்களுள் ஒன் றனையே உலகததைக் காக்கும்வண்ணம் ஏவுதற்கு நம்பாது மாறிமாறி வந்துதவுதலாம்.

[நன்றிபற் பலவா நம்விழைந் தளிக்குந] பல் பல ஆ(க) நம்(மை) விழைந்து நன்றி அளிக் குந=பலவாறாக நம்மை விரும்பி நன்மை செய்துவருகினறன;

"இன்ன மாக நத்துறந்தோர் நட்பெவன்" என்றாங்கு" "நம்விழைந் தளிக்குந" என்னுந் தொகைவாக்கியமும் அமைந்தது.

அம்மா—அதிசயமுணர்த்தும் இடைச்சொல்.

இவ் எலாம்=(மேற்கூறியவைகள்) இவ்வாறு செய்துவருகின்ற உதவிகள் எலலாம்;

தம் உறு செயல் கொல்=தங்கள் செயலினுலேயோ;

பிறர் தம் செயல் கொல்=(அவற்றை யெல்லாம் ஆட்சிசெய்துவருகின்ற) பிறரின் ஆணை யினுலேயோ; (நடைபெற்றுவருகின்றன?)

நம் உதவி பெற்றில=நமது சகாயத்தினையும் அவைபெற்றில;

நாமும் உதவிலோம்=(அவைதமக்கு) நாமும் உதவிசெய்திலோம்;

எ பொருட்டு இவ் வகை இயற்றுந=(இவ்வாறாகவும் அவையெல்லாம்) எக்காரணங் கருதி இத்தன்மையாய உதவிகளைச் செய்துவருகின்றன;

அம்மா—அதிசய முணர்த்தும் இடைச்சொல்.

இவற்றால் = இக்கூறிய காரணங்களினுனே;

தம் பயன் என பிறர் தழைப்ப = பிறரெல்லாம் தமது பயன் எனக் கொண்டு செழிக்கும் வண்ணம்;

நம்மனோர் ஆற்ற நயப்பது நலனே = (வேண்டியவற்றையெல்லாம்) நம்மனோர் இயற்றித் தந்து (அவர்களையும்) விரும்புதல் கடப்பாடாகிய நன்மையாகும்;

பிறர் தழைப்ப ஆற்ற நயப்பது நலன் எனவும் கூறுப.

தம்மைப் புரப்பதினும் பிறரைப் புரப்பதுவே மிகச்சிறந்தது என்றும், அவ்வாறு புரக்கும் போது காலமே பொருளே முறைமையே முதலாகியவற்றுள் எட்டுணையேனும் பிறழாமலும் நண்பே பகையே நொதுமலே என்னும் இவைதம்மானும் உயர்வுதாழ்வுகளானும் இன்பதுன்பங்களானும் இவைபோன்ற பிறவற்றினுனும் ஒருசிறிதும் ஏற்றத் தாழ்வுகளை இயற்றாமலும் அமைதல் வேண்டும் என்றும், இவ்வாறு புரிபவரே நன்மைபுரிதற்கு அதிகாரிகளாவர் என்றும் இதனுட் கூறப்பட்டன.

---

## (18) புகழுக் குரியர் தமிழ்ப்புல வோரெனல்.

கூத்தர் தாமே போர்ப்பணி கூறை
யாத்து நடித்துக் கண்விழி நாகோ
தமமுறு புகழைத் தாமபெறு தநரே
போகியர் முதலோர் பலபொரு டீஇ
யாவி வருநதி நாள்பல வழிநதுக
தமமுறு புகழைத் தாம்பெறு குநரே
குரவர் தாமே கூடுமைம் மூலே
யாத்த வுடைகொடு குறிமேற் கொளிஇப்
பாடம் படித்துப் பரப்புநர் புகழை
யின்னணம பலரினை நீட்டுநர் புகழை
கநதைபா மிடிபசி யாள ரேனுந
தீட்டாணி கொண்டோ ரேட்டிடைத் தீட்டி
நாட்டித் தநநா னலம்பரப் புநரே
வாட்டமில் காட்சி வண்டமிழ்ப் புலமையர்
இனியே,
பிணியூ ரின்றெனின் மருத்துவன் பேணில
னணிகுடி தமமு ளமுக்கா றின்றெனிற்
றுணிமுறை நிறுத்துந தொழிலோன் வேட்டிலன்
மணமளி பொருள்பெறாஉம் வண்மைப் புரோகிதன
பிணமளி பொருளையும பெறுவான் விறைகுவன்
ஆதலின்,
யாவர்தா மொப்பர்மற் றிவர்க்குப்
பாவலை வாரி யுடுதபா ரிடத்தே.

(இ—ள்.) கூத்தர் தாமே=கூத்தினைத் தந்தொழிலாகக்கொண்டு நடித்துக்காட்டுஞ் சாதியார் தாம்;

கூத்தென்பது தேசிகம் மார்க்கம் என்னும் இருவகைத்தொன்றாய்க் கரணம், கடகம், குனிப்பு, கொந்தளமாதிய பதினேந்து விகற்பங்களில் வேண்டிய வேண்டிய தழுவி அவிநயித்துச் சிங்காரம் முதலிய நவரசங்களிற் பலப்பல ஏற்றபெற்றி தோன்றத் தாளவோத்தின் திறத்துக் கியையப் பரதநூன் முறைப்படி நடிப்பது. கூத்தின் இயன்முறைகளையும் கூத்தியர் இலக்கணங் களையும் பரதசேனுபதீயம் முதலிய நூல்களிற் காண்க. சிலப்பதிகாரத் தரங்கேற்றுகாதையினும் கூத்துவகைகண் முதலியன விரிக்கப்பட்டிருக்கின்றன.

போலி அணி கூறை யாத்து=போலித்தன்மை நிறைந்த ஆபரணங்களையும் ஆடையையும் கட்டிக்கொண்டு;

அணிந்து புனைந்து என்னுராய் "யாத்து" என்றனர், உண்மையிலே அணிசெய்தும் புனைந்தும் வருதலின்மையின் எனக. "போலி" என்பதனை அணிக்கும் கூறைக்கும் ஏற்றிக் கொள்க. பித்தளை முதலியவற்றைப் பொன்னிகாப்பவும, பனனிறப் பளிங்குத் துண்டுகளை மணிகளொப்பவும் பொருத்திச் செய்யப்படுவன போலியணிகளாகும். அணிகூறைகளைமட்டுமே கூறினுரேனும் அவற்றிற்கு வேண்டிய இடம் கருவி என்னுமிதொடக்கத்தனவற்றையுங் கூட்டிக் கொள்க.

நடித்து கண்விழித்து அந்தோ தம் உறு புகழை தாம் பெறுகுநர்=(கருதிய பிறரொரு வரைப்போல உடைநடை செயல்களால்) நடித்துக்காட்டிக் கண்விழித்து வருமுகத்தானே ஐயகோ தமக்குப் பொருந்திய புகழைப் பெறுகின்றார்கள்;

புகழாவது அரும்பெரும் முயற்சியா லடையும் இம்மைப்பயன்களில் ஒன்றாகத்தோன்றி இறவாது நிலைக்குங் கீர்த்தி என்ப. "கண்விழித்து" எனறமையால் நடித்தல் இராக்காலத்தில் என்றும், "நடித்து" என்றமையால் நாடகத்தி னியல்பு இன்னதன்மைத்து என்றும் பெற்றாம். புகழ்பெறுதற்கு அன்னார் படுந் துன்பத்திற் கிரங்கினமை தோன்ற "அந்தோ" என்றார். "அம்மா" என்பதூஉம் பாடம். அங்ஙனமாயின் அன்னார் புகழ்பெறும் வகையைக்காட்ட வந்த தென்றறிக. ஆடவர் மடவோராகவும், மடவோர் ஆடவராகவும், பிறவாகவும் புனைந்துகொண்டு தோற்றமாத்திரையில் உயர்ந்தனபோற் பகட்டும் போலியாடையாபரணுதிகளைப் பூண்டுகொண் டும் அசம்பாவிதமான இன்பதுன்பங்களை நுகர்வதுபோற் பாசாங்குகாட்டி வருதலினுனே புகழ் பெறுவர் என்க. கனவினுட் காணுங் கனவேபோல உலகநாடகத்திற்குள் இதுவுமொரு நாடக மென்ப. இக்கூத்தர் நாளடைவில் உண்மைபெற்றுய்தற் கியலாராய்க் கெடுவர் என்ப. இக காலத்திலே கற்றவரைச் சார்ந்தொழுகாமலுந் தாமும் கல்லாமலு ம நாடகத்தொழிலிற் பிரவே சித்துக் கெட்டொழிந்தார் பலராவர். புலமையாளர்தம் ஒழுககத்தினையும் ஏனை இசைக்காரர், நாடகக்காரர் முதலியோர்தம் இழுக்கத்தினையும் இவையென்று ஆய்ந்தறிக. புலவரைப் போற் றாது இன்னுரையே பெரிதும் பேணிவருகின்றனர் இக்காலத்தமிழர். இச்செய்கையா லடைந்த கேடும் பலவாகும.

ஓவியர் முதலோர்=சித்திரந்தீட்டுந் தொழிலை முதலாகக் கொண்டுடையோர் தாமும்;

"முதலோர்" என்றமையான் விச்சுவதருமம் முதல் மானபேத மீறாகவுள்ள முப்பத் திரண்டு சிற்பநூல் விதிகளைத் தழுவிக கல், உலோகம், செங்கல், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம், கண்டசருக்கரை, மெழுகாதியவற்றாற சிற்பத்தொழிலுஞற்றும் பலப்பல வகுப்பின ரும் கொள்ளப்பெறுவர்.

பல பொருள் துரீஇ=(அவ்வத் தொழிலைச் செய்துகோடற்குக் கருவியாகிய) பல பொருள்களையுந் தேடி;

அக்கருவிகளைக் கண்டடையும் அருமையைப் புலப்படுத்தத் "துரீஇ" என்றனபெடுத்தது.

ஆவி வருந்தி நாள் பல அழித்து=பிராணனை வருத்தி (அம்மட்டோடமையாமல்) நாள் பலவற்றையும் வாளா போக்கி;

சிற்பத்தொழிலைப் பெரும்பான்மையும் வறுமைதொடர்ந்து பின்றாமையின் அத்தொழிலாளர் படுஞ்சிரமந்தோன்ற "ஆவி வருந்தி" என்றும், சின்னாட்பல்பிணிச் சிற்றறிவினராகிய இவர்தாம் இத்தகைய தொழில்களிலே பலநாளைக் கழிப்பரேல் மறுமைக்காவனவற்றை எது பொழுது முயல்குவர் என்பது தோன்ற "நாள்பல வழித்து" என்றுங் கூறினர்.

தம் உறு புகழை தாமும் பெறுகுநர்=தமக்குப் பொருந்துவதாகிய புகழை (முன்கூறப்பட்டோர் பெறுமாறு) தாமும் பெறுகின்றனர்;

குரவர் தாமே=குருக்களாயிருப்பவர்தாமே;

கூடும் ஐந்து மூலை யாத்த உடைகொடு=கூடுகின்ற ஐந்து மூலையாகக் கட்டப்பட்ட உடையைக்கொண்டு;

இதனைப் பஞ்சகச்சமென்ப. நான்மூலையோடு மற்றொரு மூலையும் மிகுதிப்பட்டிருத்தலின் "கூடுமைம்மூலை" என்றார். ஆடைகளின் மூலைகளைக் கீழே நாலவிடாது கட்டிக்கோடல் வேண்டும் என்பது ஆற்றனூலார் கொள்கை.

குறி மேல் கொளீஇ=(மெய்யின்மேலே தத்தம் சமயம் புலப்படுமாறிடும்) அடையாளங்களை அணிந்துகொண்டு;

வீபூதி, கோபிசந்தனம், கரிக்கோடு, திருமண் என்னுமித்தொடக்கத்தனவும் துளசிமாலை உருத்திராக்கமாலை அன்னபிற மாலைகளும் சக்கரம் இடபம் சிலுவை முதலிய அடையாளங்களும் குறிகளாகும்.

[பாடம் படித்துப் பரப்புநர் புகழை] பாடம் படித்து புகழை பரப்புநர்=(அருத்தஞானம் பெரும்பான்மையும் இல்லாமையால் பலகாலும் பேதியா தொரேபடித்தாக ஓதிவந்த மந்திரமே துதியே என்றற்றொடக்கத்தனவற்றைப்) பாடமாக ஒப்புவித்துப் புகழை உலகத்திலே பரப்புகின்றார்கள்;

இவர்செய்கை மறுமைக்கும் ஒருவாறு நன்மை பயக்குங் காரணமாகவிருத்தலின் "பரப்புநர்புகழை" என்றும் பொருளறிவின்மையாற் "பாடம் படித்து" என்றுங் கூறினார். சுடுமென்றறியாமல் நெருப்பைத் தொடினும் அதுசுட்டே விடுமாறுபோல அருத்தஞானமின்றி மந்திரத்தைச் செபித்தாலும் பலன்கிட்டுமெனச் சிலர்கூறுவர். அவரை மறுத்து மற்றுஞ் சிலர் பயனறியா தோதிய மந்திரம் பலிப்பதேயில்லை யென்பர். போற்றியுரை யுரிபு மிசைக்கப்பட்ட கவிகள் பாட்டுடைத்தலைவனுமேல பொருள்விளங்கிக் கோடப்பெறவிடிற் பயன்றரமாட்டா எனப் புத்தமித்திரன் கூறுவன். ஆயினும் மந்தனாகன்னன் விளவினைக் குறிக்கொள்ளா தோச்சிய கோல கனியுதிர்த்தாங்கு, பயனறியாது ஓதிய மந்திரமும் ஒரோவழிப் பலித்தலுங்கூடும், என்ப.

முக்கால முணர்ந்து அம்மந்திரங்களைக் கூறிய இருடிகள் விதித்தமுறையிற் பிறழார் என்பது தோன்றப் "படித்து" என்றாருமாம்.

இன்னணம்=இவ்வகையாகவே;

[பலரிளைக ஈட்டுநர் புகழை] பலர் இளைந்து புகழை ஈட்டுநர்=பல்லோரும் மிகவருந்திக் கீர்த்தியைப் பெருக்கிவருகின்றார்கள்;

"பலர்" என்பது போர்வீரர், மல்லர் என்னுமித்தொடக்கத்தவரைக் குறிக்கும்.

[கந்தையர் மிடிபசி யாள ரேனுந் தீட்டாணி கொண்டோ ரேட்டிடைத் தீட்டி நாட்டித் தந்நா னலம்புரப் புநரோ வாட்டமில் காட்சி வண்டமிழ்ப் புலமையர்]

மிடி கந்தையர் பசியாளரேனும்=வறுமையாகிய காரணத்தானே புறத்தோற்றத்திற்குக் கந்தையுடையினராயும் அகத்தோற்றத்திற்கு மிகுபசியுடையராயும் இருந்தாரென்றாலும்;

வாட்டம் இல் காட்சி வண் தமிழ் புலமையர் = வாடுதலில்லாத அறிவாற்றல்களாலே சிறந்து தோன்றும் தோற்றத்தையும் வண்மை வாய்ந்த தமிழ்ப்புலமையையும் உடைய புலவோர்;

வாட்டத்திற் குரிய காரணம் படித்தற்கும், நூலிட்டுதற்கும், வீட்டுக்காப்பிற்கும் அன்ன பிறவற்றிற்கும் வேண்டிய சாதனங்கள் இன்மையேயாம். இவையின்மையானும் வாடுதலை யடையார் என்பது போதர "வாட்டமில் காட்சி" என்றும், வாடாதிருத்தற்குக் காரணம் தமிழ்ப் புலமையின் வளப்பமிகுதியே என்பதும் போதர "வண்டமிழ்ப்புலமையர்" என்றுங் கூறினார். "உறுங்கயலொன்றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வி" என்பது நீதிநெறிவிளக்கம்.

தம் நூல் தீட்டாணி கொண்டு ஏர் ஏடு இடை தீட்டி = தங்கள் நூல்களை எழுத்தாணியைத் துணையாகக்கொண்டு ஒப்பற்ற (பனையோலை) ஏட்டினிடமாக எழுதி,

தீட்டுதல்—எழுதுதல். ஓலையில் எழுதுவதற்கு உபயோகப்படும் கூராணி தீட்டுக்கோல், தீட்டாணி, எழுதுகோல், எழுத்தாணி என்னும் பலபெயர்களைப்பெறும். தீட்டுக்கவி எனப் பண்டு வழங்கியது இக்காலத்துச் சீட்டுக்கவியென மருவிய தென்பர். எழுதும் எண்மை தோன்ற "ஓரேட்டிடை" என்றார்.

நலம் பரப்பி நாட்டுநர் = (அந்நூல்களால் உலகம்பெறக்கிடந்த) நன்மையை (யாவரும் நுகருமாறு) பரவவைத்து நிலைபெறச் செய்கின்றார்கள்;

பிறதுறைகளிலே கைவந்து சிறந்துவிளங்குவோர் தத்தம் நாடுகளுக்குச் சிறப்புத் தருவோராயினும் அவர் புகழெல்லாம் புலவர் புகழுக்கு ஒக்குமொருபுகழாகாது. புலவர் தரும நூலைச் சாமானியரும் பெயர்த்தெழுதிவிடலாம். அந்நூற்பயன் எந்நான்றும் எவ்விடத்தும் எல்லாரும் நுகர்தல் கூடும். இதனுள் ஒருசிறிது சித்திரகாரருக்கும் ஒக்கும். ஏனையோர் தொழிலனைத்தும் காலகதியின் மாய்ந்துபோம். இவற்றை ஏற்ப விரித்துக்கொள்க. புலவரே உலகுக்குப் புகழளிப்பவராதலிற் பிறரைப்போலப் புகழ்பெறுவாராகக் கூறிற்றிலர். இவரது பாட்டின் அழியாமை தோன்ற "நாட்டுநர் தாநூ ணலம்பரப் புநரே" என்றார். பரப்பி நாட்டுநர் என விகுதி பிரித்துக்கூட்டுக. சித்திரச் செய்கையிலே காட்டப்பெறுவதை ஒருபாவலன் இரண்டோர் எழுத்தால் இரண்டொரு நிமிஷங்களுள் எளிதாகத் தெளியுபெறவிளக்கிடுவான். நாடகக் காட்சி [illegible] ற்றுயாத்தது சித்திரகாட்சியென்ப.

( •ர். —

[illegible] ஊர் இன்று எனின் மருத்துவன் பேணிலன = நோய் வரினக் கணனே இல்லாது போமே [illegible] இனி அவ்வூரை மருத்துவன் விரும்புதலுஞ் செய்யான்;

எனவே ஊரைப் பிணியின்று நலிந்துவருதலே மருத்துவற்குடம்பாடாகும் என்பது பெறப்பட்டது.

அணி குடி தம்முள் அழுக்காறு இன்று எனில் = முறைப்பட்ட குடிகள் தங்களுக்குள்ளே பொறாமை இல்லாதுபோமே எனில்;

துணி முறை நிறுத்தும் தொழிலோன் வேட்டிலன = (கற்றோரும் மற்றோரும் நன்மையுடைத்து என்று) துணிந்த நியாயங்களை எல்லாம் வாதித்து நிறுத்துகின்ற தொழிலையுடையோன் அக்குடிகளை விரும்புதலைச் செய்யான்;

அறங்கூறும் மன்றத்து உரைமுடிவு காண்போன் உளங்கொள மக்களது முறைகளை நிறுவுவான வாதிக்கும் நியாயவாதி உய்விற்குக் குடிகளின் ஒற்றுமையின்மையே காரணமாதலின் அங்ஙனங் கூறினார்.

மணம் அளி பொருள் பெறூஉம் வண்மை புரோகிதன் = மணச்சடங்கிற்கு ஆசாரியனாக இருந்தமைபற்றி அச்சடங்களித்த பொருளைப் பெற்றிட்ட காரணத்தானே பெரியதொரு வளப்பத்தை யடைந்த புரோகிதனானவன்.

பிணம் அளி பொருளையும் பெறுவான் விழைகுவன் =(அவா மிகுதியானே) அச்சடங்குக் குரியான பிணமாகவும் அப்பிணம் தனக்கமைந்த கிரியைகளான் அளிக்கப்பட்ட பொருளையும் அடையும்பொருட்டு விரும்புதலையுஞ் செய்வான்;

ஆதலின் = அதுகாரணத்தானே

ஏனையோரினும ஒப்பாரில்லாத அந்தக்காரணத்தானே என்றபடி.

[யாவர்தா மொப்பர்மற் றிவர்க்குப் பாவலை வாரி யுடுத்தபா ரிடத்தே] இவர்க்கு பா அலை வாரி உடுதத பாா இடததே யாவா தாம் ஒப்பர் = இப்புலவர்தமக்குப் பரவி ஓடும் அலைகளையுடைய கடலை ஆடையாகவுடுதத நிலவுலகததிலே எவர்தாம் ஒப்பாவார், (ஒருவரும் ஒப்பாகார் என்றபடி.)

ஒரு தேசத்திலே கூடிவாழ்பவருள் எத்துணைச் சிறந்த பல்லோர் இருப்பினும் அத்தேசத்தை ஆளும் மன்னவனே முதன்மைபெறுகின்றான. ஆயினும் "மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின் மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்" என்றனள் ஔவைப் பிராட்டி. கல்வி ஒன்றுமே புகழைத் தரமாட்டாது. பற்பல கலைகளைப் பன்னூற் கசடறப் பயின்றுதெளிந்துணர்ந்து அறிவினைப் பெருககித் தீயவொழுக்கங்களை நீக்கி கடவுட்பத்திமையோடு அன்பு, பொறை, ஜீவகாருண்ணியமாதிய நற்றவ வொழுககங்களைக கற்றுநகு நனனெறிச் சேறலே புகழைப் பொலிவுற ஈட்டும் என்க. "யாவனிங்குமெய் யுணர்ந்தவ னவனையே பிமையப்-பாவைதன்னையோர் பாகம் வைத்தவன் பரவுவது-நாவின் மங்கையை நயந்தவ னவில்வது மவனைப்-பூவின் மங்கையைப் புணர்ந்தவன புகல்வது மவனை" என்பது சிவப்பிரகாசப் பெருந்திரட்டுச் சமாதி.

---

## (19) துகள்வழி யுறுத்தி யுளமயக் கிழைக்கும் வெகுளிவாய்ப் படுத றகுதியின் றென்றல்.

தீம்பிற் பிறருந் தம்வெறுப் பறியார்
தம்வழித் தழுவல ரென்றுந் தங்குறை
தேரார் பிறர்குறை செய்தன ரென்று
முயர்வழித் தல்லன வுஞற்றின ரென்றும்
பழமை மறந்து புதுமை தழீஇக்
கிழமை யொரீஇக் கெடுத்தன ரென்று
நெருப்புப் பொறிபடு நேரினிலை யற்றுச்
சிவந்து புகைத்துத் தெறுங்கடுங் குரலராய்த்
தெளிந்து மலர்ந்து சொற்றேன் பிலிற்றி
மகிழ்வுபூத் தமர்ந்த மனனிலை கலக்கி
நல்லோ ரிளைந்து நாவடுப் படுத்தித்
தமைமை யழித்துத் தமர்சார் பகற்றிச்
செம்மை தருவோர் சேர்பொலா தாக்கி
யருமை சான்ற விருமை யழிப்பவர்
பார்ப்பன பிறவெலாம் படைஇக் காக்கு
மொருபொ ளன்றியொன் றமையா தாத
லல்லன நன்மை யல்லன தீமை
நல்குத லுள்ளன நண்ணுத லில்லன
நண்ணு தாதலொடு நம்மழித் தற்கே

வஞ்சப் புல்லர் வகுத்த சூழ்ச்சிக்
காளா யொருபொரு ளடிமைவடுப் படுத்த
லன்னவும் பிறவு மாதற்
றன்மையறிந் தாயுந தகுதியில் லவரே.

---

(இ-ள்.) பார்ப்பன பிற எல்லாம் படைஇ காக்கும்=காணப்படுவனவும் காணப்படாதனவுமாகிய எல்லாவற்றையும் படைத்துக் காப்பாற்றிவருகின்ற;

"பார்ப்பன" என்பது கட்புலனறிவு மாத்திரையினில்லாமல் ஐம்புலவறிவிற்கும் செல்லும். அநுமான முதலியவற்றான் அறியப்படுவனவற்றைப் "பிற" என்றதனாற் றழீஇக் கொண்டார். இயங்குதிணையும் நிலைத்திணையும் ஆகிய உயிருடைப் பொருள்களும் உயிரிலாப்பொருள்களும் அடங்குவதற்கு "எல்லாம்" என்றார். "படைஇ" என்றவிலேசினானே அழித்தலும் கொள்ளப்படும், அழிப்பில்லையேற் படைத்தலுங் காத்தலும் இல்லையாய்விடுதலின். இதனானே அழித்தற்றொழிற்கு இறைமை கூறினாராயிற்று. "படைஇ" என அளபெடுத்ததும் இக்காரணத்தாற் போலும். அழித்தல் முதலாயின அறியப்படாமையானும் அவற்றான் அடையப்பெறும் நன்மையை உலகம் அறியமாட்டாது தீமையாக்கொள்வது வழக்காறுதலானும் ஏனையவற்றைத் தொகுத்துக் கூறினார் என்றலும் ஒன்று.

ஒருவனது ஆடைமுதலியன சிதைவுறுமாயின் அவற்றை யறவேகளைந்து பிறவற்றைக் கைக்கொள்ளுதல்போல இறைவனும் நம்சிதைவுடல்களைக் களைந்து ஏற்றபெற்றியாகப் பிறவுடல்களை அளித்துவருதலாற் சாதலும் நன்மையேயாகும். இதனையும் ஒருவேள்வியென்று நூல்வல்லார் கூறுப.

ஒரு பொருள் அன்றி ஒன்று அமையாது ஆதல்=ஒப்பற்ற கடவுளது கட்டளையானே எல்லாச் செயல்களும் நடக்குமேயல்லாமற் பிறர்கட்டளையான் ஒருசெயலும் பொருந்தாதாதலானும்;

"அவனன்றி யோரணுவு மசையாது என்பது பெரியார் கூற்று.

நல்லன நன்மை அல்லன தீமை நல்குதல்=நல்லபயனைத் தாறபாலனவாய காரியங்கள் ஒருவர்க்கு நல்ல இன்பத்தினையும் அந்நல்லன அல்லாதனவாய கெட்டகாரியஙகள் தீயதுன்பத்தினையும கொடுத்துவருதலும்;

நல்லனவாவன "நற்காட்சி நல்லொழுக்க நல்வாய்மை நல்வாழ்க்கை நற்செய்கை யோடைந்து நாடு" என்பனவும் "நன்முயற்சி நன்காங் கடைப்பிடி நல்லோர்பாற் செல்கையுடனெட்டனைத தூந்தேறு" என்பனவுமாம்.

அல்லனவாவன கொலை, களவு, கள், காமம், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல், வெஃகல், வெகுளல் முதலாயின. இவை தீமை பயப்பனவாகும் என்றதைத் "தீயவை தீய பயத்தலாற தீயவை தீயினு மஞ்சப் படும்" என்ற குறளிற் கண்டு கொள்க.

உள்ளன நண்ணுதல் இல்லன நண்ணாது ஆதலொடு=உண்மையாக நிகழ்ந்தனவே அமைந்து பயனைத் தருதலும் நிகழ்தல் இல்லாதனவற்றின் பயன் வந்து பொருந்தாதாதலும் என்றஇவற்றினோடு;

இல்லன நண்ணாதாதல் என்றதனை "என்பரிவ—செய்யாத வெய்தா வெனின்" என்றதனாற் கண்டுகொள்க. தாம் ஒருகாரியத்தைச் செய்யாவிடத்துச் செய்ததாகப்பிறர்கூறிற் றமக்கென்னென்ன இருத்தல் பெரும்பாலும் எவர்க்குஞ் சாலாதென்பது தோன்ற உள்ளன நண்ணுதல் என்றொழியாது இல்லன நண்ணாதாதல் என்றுங் கூறினார்.

[தம்மழித் தற்கே வஞ்சப் புல்லர் வினைத்த சூழ்ச்சிக் காளாய்] வஞ்சம் புல்லர் தம் அழித் தற்கே வினைத்த சூழ்ச்சிக்கு ஆளாய் = வஞ்சனையைப் பிறர்க்குச் செய்யும் கீழ்மக்கள் தம்மைக் கெடுத்தற்காகவே அலங்கரித்துச் சொல்லும் உபாயச் செய்கைகளுக்கு ஆளாகி;

ஒருவனது மேம்பாடு முதலியவற்றைக் கண்டு பொறாமையுடைய மற்றொருவன் அவன் முன் வந்து நின்னை வேற்றொருவன் என்றும் மதியாது இன்னவின்ன வசைகூறினனென்று அவன் வேட்கும்படி அலங்கரித்துக் கூறுமுகத்தாற் பகைமூட்டிக் கெடுத்தல் போன்றது தம்மை அழித் தற்கு வினைத்த சூழ்ச்சியாகும். தம்மை அழித்தற்கே வினைத்த என்றசாரபால் வினைத்தது என்றது கேடு பயப்பனவற்றை நன்மை பயப்பனவாகக் காட்டியதைக் குறிக்கும். அவர்தம் இன்சொல் இழுக்குத்தருமென்ப.

ஒரு பொருள் அடிமை வடுப்படுத்தல் = (எல்லாவற்றையும் படைத்துக் காத்துவரும்) ஒப்பற்ற பதியாகிய கடவுளுக்கு நாம் அடிமை என்ற முறைமையைப் பாழ்படுத்தலும்;

அடிமை வடுப்படுத்தலாவது, கடவுள் செய்கைக்கு ஆளாகாமல் பிறர்செய்கைக்கு ஆளாகி அடிமைப்பட்டு நிற்றல்.

அன்னவும் பிறவும் = அவை போன்றனவும் அவையல்லாத ஏனையவும்;

அறிவு மயங்கல், அறந்தேய்தல், ஆயுட்குறைதல் என்றற் றொடக்கத்தனவற்றை அன்னவும் என்றதூஉம் பொருட்கேடு, செய்கைக்கேடு, தமர்கேடு என்றற் றொடக்கத்தனவற்றைப் பிறவும் என்றதூஉம் குறிக்கும்.

ஆதல் தன்மை அறிந்து ஆயுந் தகுதி இல்லவரே = ஆதலாகிய தன்மையை அறிந்து ஆராயுந் தகுதி இல்லாதவரே;

அறிவதென்றொழியாது ஆயும் என்று மிகுத்துக் கூறினமை தாம் சினப்பது அறிவின்மை என்பதை அறிந்துவைத்தும் மேன்மேலுஞ் சினந் தோன்றும் என்பது போதரற் பொருட்டு. ஆயாதவரே என்னாது ஆயுந்தகுதி யில்லவரே என்றமை அவ்வாறாயினும் பயன்பெறுதல் அருமை யெனக் காட்டற் பொருட்டு. ஏகாரம் பிரிநிலை.

தம்மிற் பிறரும் தமவெறுப்பு அறியார் = தாம் ஒருவரை வெறுத்துக் கூறுதல்போலப் பிறரும் அவ்வாறே தம்மையும் வெறுத்துக் கூறுவரென்பதனை அறிய மாட்டாதவராய்;

தம் வழி தழுவலர் என்றும் = தம்முடைய வழியைத் தழுவி நடந்தாரில்லையே எனக் கருதியும்;

தம் குறை நேரார் = (பிறர் தமக்கு ஒன்ன குறை செய்தனரே யென்று) தம்மைக் குறை நேர்தலைத் தெளிய மாட்டாதவர்களாய்;

பிறர் குறை செய்தனர் என்றும் = ஏனையோர் தமக்குக் குறைகளைச் செய்தனரே என்று கருதியும்;

உயர்வு அழித்து அல்லன உஞற்றினர் என்றும் = உயர்வுடையனவாய செயல்களை யெல்லாம் அழித்து அமமட்டோடமையாமல் இழிந்தனவற்றையும் மேம்படச் செய்தார் என்று கருதியும்;

உயர்வுடையனவாவன இருமைக்கும் நன்மை பயப்பனவாய பெருமை யமைந்த செயல்கள்.

பழமை மறந்து புதுமை தழீஇ = (பண்டைச்சான்றோர் செய்துவந்த) பழமையான காரியங்களை (மனத்தகத்தும் நினையாமல்) மறந்துபோய் (நமது காலதேச வழக்க ஒழுக்கங்கட்குப் பொருந்தாத) புதுச்செயல்களைத் தழுவிக்கொண்டு;

நமது தேசவழக்கையும் சமய வழக்கையும் அறவே ஒழித்துப் புறத்தேசவழக்கையும் புறச்சமய வழக்கையும் மேம்பாடு தருவனவாகக் கைக்கொண்டு என்றபடி.

கிழமை ஒரீஇ கெடுத்தனர் என்றும்=(நமது தேயத்திற்கும் வருணாச்சிரமத்திற்கும் சமயத்திற்கும் பொருள் வயது தேகஸ்திதி முதலாயவற்றிற்கும் ஏற்பச் சான்றோரால் நியமிக்கப் பெற்ற முறைமைகளை அனுசரித்து வருதலினானே நிகழும்) உரிமைகளைப் போகவிட்டு (தாம் கெட்ட தோடுமில்லாமல் நம்மையுஞ் சார்ந்து) கெடுத்தனரே என்று கருதியும்;

நெருப்பு பொறிபடு நேரின் நிலை அறு=நெருப்புப் பொறியானது தம்மேற் பட்ட மாத்திரையிலே எவ்வாறு பதைப்பரோ அவ்வாறு மேற்கூறப்பட்டவைகளை அறிந்தமாத்திரையிலே நிலைமை யழியப்பட்டு;

நிலைமையாவது தண்ணென்று அமைதியாயிருக்குந் தன்மை. அதுகெடுதலாவது மனப் பொறுமை நீங்கப்பெறுதல்.

சிவந்து புகைத்து தெறும் கடும் குரலராய்=(சினமாகிய வெம்மை தாக்கப் பெறுதலி னானே) கண் சிவக்கப்பெற்று மனம் புழுங்கி வெகுளப்பட்டாரைக் கொல்லுகின்ற வலிய சத்த முடைய சொற்களைச் சொல்பவராய்;

“சிவந்தன கண்ணிரண்டும்—போய்த் திசைகளெல்லாம்” எனவும் “தெழித்தன னுரப்பினன் சிறுகண் டீயுக விழித்தனன் வைதனன் வெய்து யிர்த்தனன்” எனவும் பிறரும் வெகுளியை விளக்கினமை யறியற்பாற்று. “நஞ்சுமிழ்ந்த மேற்றியாங்கு” என்ற பாசுபதசாற கட்டியங்காரன் கோபமும் நன்குவிளக்கப்பட்டது. “கறுப்புஞ் சிகப்பும் வெகுளிப் பொருள” என்றதனாற் கண் சிவத்தலின் றன்மை நன்கறியப்படும்.

தெளிந்து மலர்ந்து சொல் தேன் பிலிற்றி=(அமைதியாகவிருத்தலினானே) மனந் தெளிந்து முகமலர்ந்து இன் சொல்லாகிய தேனைத் துளித்து;

என்றது யாவரோடும் மனவமைதியாக முகமலர்ச்சி கொண்டு இன்சொற் சொல்லுதலாம். இதனானே சத்துவகுணமும் அதனிலைமையுங் கூறப்பட்டன.

மகிழ்வு பூத்து அமர்ந்த மனம் நிலை கலக்கி=மகிழ்ச்சி மிகுந்து நிறைவுற்றத் திருத்தி யொடு பொருந்திய மனத்தின் நிலைமையைக் கெடுத்து;

மன நிலை கலக்குதலாவது உள்ளக்களிப்பு, பொறுமை, நகை முதலாயினவற்றைத் தோன்ற விடாமல் மனோதுக்கம் பொறாமை உலோபம் முதலாயினவற்றைத் தோன்றும்படி செய்தல். “நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்—பகையு முளவோ பிற” என்றமை ஆராயத் தக்கது.

நல்வேர் களைந்து=நற்செய்கைகளின் மூலத்தையும் பிடுங்கி அழித்து;

“எல்லாம்—வெகுண்டார்முற் றோன்றாக் கெடும்” என்றாராதலின “நல்வேர் களைந்து” என்றார். வேர் என்றமைக்கேற்பக் களைந்து என்று கூறினார். நன்மையைத் தருவாக்கி உவமை யொடு பொருத்தி விரித்துரைத்துக்கொள்க. “திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்” எனப் பெரியாரும் தருமத்தைத் தருவுக்குவமித்துரைத்ததலைக் கண்டு கொள்க. “ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி—யாகம் முதற்றிண் பணைபோக்கி யருந்தவத்தின்—சாகந் தழைத்தன் பரும்பித் தருமம் மலர்ந்து—போகங் கனியொன்று பழுத்தது போலுமன்றே” எனப் பிறசான்றோருங் கூறியவாறறிந்து கொள்க.

நா வடுப்படுத்தி=(நன்மையமைந்த சொற்களைக் கூறி நயம்பெறுதற்காக அமைந்த) நாவினை (த் தீமை அமைந்த சொற்களைக் கூறித் தீமைபெறுதற்குக் காரணமாகிய) குற்றத் திடத்தே பொருத்தி;

ஒருமுறை வைதவன் பின்னர் நன்மைகூறினும் அந்நன்மையுந் தீமையாகும் என்பது போதர “நாவடுப்படுத்தி” என்றார் என்றலும் ஒன்று. “தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே—நாவினாற் சுட்ட வடு” என்னுமிதனை ஏற்ப விரித்துரைத்துக் கொள்க.

தம்மை அழித்து=தம்மை (ப் பெருமை முதலாயினவற்றை அடையாமல்) ஒழித்து;

"கோபமே பிறவியைக் கொடுக்குங் கொள்கையாம்—கோபமே யறிவினைக் குறைக்குங் குட்டநோய்—கோபமே தாயையுங் கொல்லுந் திண்படை—கோபமே தவத்தினைக் குலைக்கும் பேயரோ" எனவும், "கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினான்—கோபத்தா னகுடனுங் கோல மாற்றினான்—கோபத்தா லிந்திரன் குலிசம் போக்கினான்—கோபத்தா லிறந்தவர் கோடி கோடியே", எனவும், "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு—மேமப் புணையைச் சுடும்" எனவும் வருவனவற்றை விரித்துரைத்துக் கொள்க.

தமர் சார்பு அகற்றி = தம்மவர்களாகிய சுற்றத்தார் சார்பினை நீக்கி.

"மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய—பிறத்த லதனால் வரும்" என்னுங் குறள் கண்டாராயத்தக்கது. தமரையே சினம் அகற்று மாயிற் பிறரை அகற்றுவது சொல்லவும் வேண்டா.

செம்மை தருவோர் சேர்பு ஒல்லாது ஆக்கி = தமக்கு நன்மையைப் புரிவோர்தம் சேர்க்கையைப் பொருந்தாமற் செய்வித்து;

செம்மை தருவோராவார் கல்வி, பொருள், ஞானம், வீடு என்றற்றொடக்கத்தினைத் தருபவர்; எனவே நூலாசிரியர், செல்வராகிய எசமானர், ஞானாசாரியர், இறைவனார் என்றற்றொடக்கத்தினர் என்பது பெற்றாம். இவர் சார்பில்லையாயின் ஒன்றும் இல்லையாய்விடும். ஆதலிற் பிறரும் "வெல்வது வேண்டின் வெகுளிவிடல்" என்றும், "செறிநீ நெஞ்சத்துச் சினனீடி னோரும்—சேரா வறத்துச் சீரிலோரும் * * * * சேரார் நின்னிழல்" என்றும் இவ்வாறே கூறினார்.

அருமை சான்ற இருமை அழிப்பவர் = அருமை நிறைந்த இருமைப் பயன்களையும் எய்தாமல் இழந்து வருந்துவோர்களாவர்;

தமது எண்ணப்படியே எல்லாச் செயல்களையும் நடத்த வேண்டியவர் அவ்வெண்ணத்திற்குக் குறைநேர்ந்தவழித் தண்ணிய குணத்தோடு ஆராய்ந்து முடித்தல் வேண்டும். அவ்வாறு முடிப்பவர் "முனியாதார் முன்னிய செய்யுந் திரு" என்றபடி நினைத்த எல்லாவற்றையும் அடையப் பெறுவர். தமது அவாவானது தடைப்பட்டபோது அடைபட்ட ஒடு புனல் பொங்கி நுரைத்துப் பாய்வதுபோலச் சத்துவகுணங்கெட்டுக் கோபாவேசர்களாவரேல் அவர்க்கு இருமையிலும் துன்பமே வாய்க்கும் என்பது போதர "அருமை சான்ற விருமை யழிப்பவர்" என்றார்.

---

## (20) செய்வன மறந்து சிறுதொழில் புரிவோர்க் குய்வழி யிதுவென வுற்ற துரைத்தல்.

அஞ்சிறைத் தும்பியு மருநூற் சிலம்பியும்
பைஞ்சிறைப் பறவையும் பற்பல வாக
நினைத்தற் கரியவாம் புனைமனை புரிகுந
பிணியிடைப் பட்டில பிறரிடங் கற்றில
தச்சனை வேண்டில தளர்வுற் றொழிந்தில
மெய்ச்சும் பொன்பூண் விழைந்தில வாற்றுப்
பச்சுயிர்க் கிளைகளைப் பரிவுநீஇக் காக்குந
யார்கொ லிவற்றிற் காற்ற லளீஇயினர்
இவற்றுள்,

தம்மைப் புரப்பதூஉம் தமரைப் புரப்பதூஉ
மிம்பர் ஞாலத் திணையுயிர்க் கியற்கை
யவ்வெலா மாற்றற் கருங்கலை பயின்றுஞ்
செல்வ நுய்ந்துஞ் சிறப்புறூ நமர்க·
ளவற்றினு மெளியோ ராவது மறிகில
ரெல்லா வுயிர்க்கு மியலா வெவ்வெனக்
கல்லாது வீவதூஉங் கருதில ரென்னே
நில்லா திடிசுவர் நேருமியாக் கைக்கு
வல்லான் புனைந்த சித்திரம் வாய்ப்பப்
பல்லாற் றானும் பயனற்றுச்
செல்லா நிற்குநர் செய்வன மறந்தே.

---

(இ-ள்.) அம் சிறை தும்பியும் = அழகிய சிறகுகளையுடைய வண்டுகளும்;

தன்றொழினிமித்தம் பறந்துசேறற் குபகாரப்படுந் தலைமைபற்றி "அஞ்சிறைத் தும்பி" என்றார். பைஞ்சிறைப் பறவை என்றதும் அதுவே. உய்த்து நோக்கிற் சிலம்பிகளும் இதை தொக்கும்.

அரும் நூல் சிலம்பியும் = (பிறரால் நூற்றற் கமையாத) அரிய நூல் நூற்கும் சிலந்திப் பூச்சிகளும்;

பைம் சிறை பறவையும் = பசிய சிறகுகளையுடைய பறவைகளும்;

பல் பல ஆக = பலப்பலவகைகளாக;

நினைத்தற்கு அரியவாம் புனை மனை புரிகுந = (கண்டோரும்) மனத்தினாற் சங்கற்பித்தற் கரிய விசித்திர அலங்காரம்பொருந்திய இருக்கைகளை (த் தத்தமக்கு வேண்டியவாறு) செய்து கொள்ளுகின்றன;

பிணி இடை பட்டில = (அவ்விருக்கைகளை விடாமுயற்சி கொண்டு செய்வதினால்) நோய் வாய்ப்பட்டில;

பிறர் இடம் கற்றில = (அவற்றைச் செய்யுமுறையைப்) பிறரிடம் வினவிப் பயின்றில;

தச்சனை வேண்டில = (அவற்றைத் தமக்குச் செய்துதருமாறு) தச்சனை இரந்து கேட்டில;

தளர்வு உற்று ஒழிந்தில = (அவற்றைச் செய்யுங்காற்) சோர்வடைந்து (தாம் மேற்கொண்ட தொழிலை) விட்டுந் தவிர்ந்தில;

மெய்ச்சும் பொன் பூண் விழைந்தில = வியக்கத்தக்க பொன்னையும் ஆபரணங்களையும் விரும்பிற்றில;

ஆற்றா பச்சு உயிர் கிளைகளை பரிவு உடீஇ காக்குந = (அம்மட்டோ) வன்மையில்லாத (தங்கள்) இளமுயிர்ச்சுற்றங்களையும் நேயங்கொண்டு பேணுகிற்கின்றன;

பச்சுயிர்—அழகிய உயிருமாம்.

யார்கொல் இவற்றிற்கு ஆற்றல் அளிஇயினர் = இவ்வியல்பிற்றாய பலவுஞ் செய்தற் கேற்ற திறமையை இவைகட்கு வழங்கியவர் யாவர்?

கொல்—அசைநிலை.

இச்சிற்றுயிர்கட்கு இவ்வாறாய ஆற்றலை அளித்தவர் யாவரென்று வியப்புச்சுவை தோன்றலின் "அளீஇயினார்" என்றனபெடுத்தது. இவ்வாறே "தைஇயினார்" எனப்பண்டைச்சான்றோர் நூலுள்ளும், "இரீஇயினன்" எனப் பிற்காலத்தார் நூலுள்ளும் வந்தமை காண்க.

இவற்றால் = இன்ன தன்மைகளால்; (நுணுகி ஆராயுமிடத்து)

தம்மை புரப்பதூஉம் தமரை புரப்பதூஉம் = தம்மைக் காத்தலும் தமது சுற்றத்தாரைக் காத்தலும்; (கடப்பாடாகக் கொண்டு வேண்டிய வாயில்களை முடித்துக்கோடல்,)

இம்பர் ஞாலத்து இனை உயிர்க்கு இயற்கை = இந்தப் பூவுலகத்தின்கண்ணே பொருந்தியுள்ள எல்லாச்சீவராசிகளுக்கும் இயல்பாயகுணமாம்;

அவ் எலாம் ஆற்றற்கு அரும் கலை பயின்றும் செவ்வன் ஆய்ந்தும் சிறப்பு உறா நமர்கள் = (ஆனால்) நம்மவராகிய மனிதரோ அவற்றையெல்லாம் (இயற்கை அறிவானன்றிச் செயற்கை அறிவு கொண்டு மேம்பாடுறச்) செய்தற்பொருட்டு அரிய நூல்களை (உளங்கொளப் பலகால்) பயின்றும் (அப்பயிற்சியைத் துணையாகக்கொண்டு பலவாற்றால்) நன்காராய்ந்து சிறப்புற அமைத்துக் கொள்ளும் வன்மையின்மையால்;

அவற்றினும் எளியோர் ஆவதும் அறிகிலர் = அச்சீவராசியினுங் கடையராதலையும் அறிந்திலர்;

எல்லா உயிர்க்கும் இயலா எவ் என கல்லாது வீவதூஉம் கருதிலர் = எல்லாவுயிர்களானும் செய்துகோடற்கரியன யாவை என்று ஆராய்ந்தறியாது (தாம் வாளா) இறந்துபடுதலையுஞ் சிந்தித்திலர்;

என்னே = ஈதென்னவியப்பு;

நில்லாது இடி சுவர் நேரும் யாக்கைக்கு = நிற்றலாற்றாது (அண்மைக்கண்) இடிந்துவீழ்ந்தழியுஞ் சுவர்போல (நிலையற்ற) உடலிற்கு;

வல்லான் புனைந்த சித்திரம் வாய்ப்ப = கைவல் வினைஞன் வனப்புறத் தீட்டிய சித்திரச் செய்கை (பயனற்றொழிதல்) போல;

பல் ஆற்றானும் பயன் அற்று = (செய்யும் அலங்காரமெல்லாம்) எவ்வழியானும் பயன்றராதனவாக;

பல்லாற்றானும்—பலவழியானும் என்று பொருள்கொள்ளின் சில்லாற்றாற் பயனுண்டு கொல்லோ என்னும் மலைவு தோன்றுமாதலின எவ்வழியானும் பயன்றராதெனக் கொள்ளலே பொருந்தும்.

[செல்லா நிற்குநர் செய்வன மறந்தே] செய்வன மறந்தே செல்லா நிற்குநர் = (தப்பாது பயன்றரலிற்) செய்யவேண்டுவனவற்றைச் (செய்யாது) மறந்து (வாழ்நாளை வீணே) கழியவிட்டு நிற்பர்;

"செயற்கரிய செய்வர் பெரியோர்" என்றபடி மக்கள் இறைவனடியைச் சார்தற்கேற்ற சாதனங்களைப் பயின்று தழுவி யொழுகலே செயற்கருஞ்செய்கையாம். அதனை ஒழிந்து தம்மைப் புரப்பதூஉம் தமரைப் புரப்பதூஉம் ஆகிய தொழில்வயிற் புலனைச் செலுத்திப் பொழுதினைப்போக்கின் அத்தொழில்படைத்த அஃறிணைப் பிராணிகளினும் அவர் உயர்ந்தவராகார் என்பதாம். இதுகருதியன்றே "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ—னற்றா டொழாஅ ரெனின்" என்று திருக்குறளிற் கூறப்பட்ட

நல்லரை மரீஇ நல்லன உஞற்றியும்=நற்குண நற்செய்கை யுடையாரைப் பொருந்தி ன்மை பயப்பனவாகிய காரியங்களைச் செய்தும்;

நல்லரை மரீஇ நல்லன உஞற்றுதலாவது கால தேச வர்த்தமானத்திற் கேற்றவண்ணம் ன்மை பயப்பனவற்றை அறிந்து செய்தற்குரியார்க்குக் கருவியாகல்.

புல்லரை மரீஇ புல்லிய உஞற்றியும்=அற்ப குணஞ்செய்கையுடையாரைப் பொருந்தித் தீயனவற்றைப் பயக்கின்ற இழிவான காரியங்களைச் செய்தும்;

புல்லராவார் கற்றோர் முதலாய பெரியோரைப் போற்றாது வருத்தியும் பரத்தையர் முதலாய இழிந்தோரை வருத்தாது போற்றியும் நிற்பவர். புல்லிய உஞற்றலாவது அப்புல்லி பமைச் சார்ந்து அவர்தம் முயற்சி ஈடேறக் கருவியாகி நிற்றல்.

[போற்றாது தமரைப் போற்றியும் பகைஞரை] தமரை போற்றாது பகைஞரை போற்றியும் =(பிறர் கெடுக்காமற் றம்மைக் காத்தற்குரிய சுற்றத்தவரைப் போற்றுதலே பெரும்பயனாகவும் அவ்வாறு செய்யாமல்) சுற்றத்தவரைக் காப்பாற்றாமலும் (போற்றுவதனாற் றமக்கு அழிவினைப் புரியும் பகைவரைப் போற்றாதுவிடலே பெரும்பயனாகவும் அவ்வாறு செய்யாமல்) பகைவரைக் காப்பாற்றியும்;

ஒரு பூடை நெல் ஐந்து பொன் விலையாக விற்கும்போது பத்துப்பொன் கொடுத்து அதனைக் கோடற்கு ஒருப்படுவான் தனது பகைஞன் எனினும் அவனுக்குக் கொடுத்தற்கும், உள்ள விலைப்படிக்குந் தமருக்குக் கொடாது விடுத்தற்கும் உலகம் உடம்பாடுற்றுப் பீடுகெடுவது பணவாசையானே என்பது போதரப் "போற்றாது தமரைப் போற்றியும் பகைஞரை" என்றார்.

ஆற்றா தமர் ஒடு அவர் வேர் அழித்தும்=தம்மை இன்றி ஆற்றாத சுற்றத்தாரோடு அவர் தம் இருமைக்குங் காரணமாகிய வாழ்வினையும் நாசமாக்கியும்;

தம்மிடத் தமைந்துள்ள பொருள்களைப் பகைவர் கைக்கொண்டுவிடிற் றாமுந் தமரும் வறிஞராகி மெலியப் பகைவர் வலியாராகித் தம்மையுந் தமரையுங் கொல்வாராதலின் "ஆற்றாத் தமரோ டவர்வே ரழித்தும்" என்றார். வேரழித்தல் அடிகெடுத்தலுமாம்.

மெய் கொண்டு நடித்தலின்=(நீயே எல்லாச் சீவராசிகளையும் காப்பாற்றிவருதல்) மெய் யென நடித்துக் காட்டுங் காரணத்தால்;

மேன்மை இல் அவர் முன்=(திட்ப நுட்பமாய் உண்மைப்பகுதியை ஆராய்ந்தறியும் விவேகமாகிய) பெருமை இல்லாதவரிடத்தில்;

கூலம் காக்கும் கொள்கை முற்று ஒரீஇ=(சீவராசிகளைக்) கூலம் முதலியனவே காப் பாற்றும் என்ற கொள்கையை அறவே களைந்து;

ஞாலம் காக்கும் நலத்தினை மான=உலகத்தினைக் காப்பாற்றி வருகின்ற நன்மைப்பொ ருளை ஒப்ப,

பொய் கொண்டு மயக்கியும்=பொய்மையைக்கொண்டு (மெய்மையைப் பிறழ்த்தி) மயங் கச் செய்தும்;

பொழுது போக்குதி=(கிடைத்தற்கரிய) பொழுதினை (வீணே) செலவழிக்கின்றாய்;

உலகத்தாரின் உணவிற்குரியன கூலமும் பிறவுமாயிருப்பவும் ஒருபொழுதும் ஒன்றற்கும் உபயோகப்படாத பணத்தினை வேட்டுப்பெற்றுத் தம்மிடத்துப்பொருள்களைத் தமர்க்குக் கொடா மற் பிறர்க்குக் கொடுக்க மனந்துணிதல் இயற்கை என்பதும், உலகத்திற்கு உதவிசெய்தலே தமக்கு உதவிக்கோடலாகும் என்று கருதும் பேரறிவாளிகளைப் பணம் என்னுந் தூதினை விடுத்து மயக்கி உதவிசெய்யும்வண்ணம் தூண்டுதல் வேண்டாம் அவர்தாமே செய்வர் என் பதும், இழிந்தாரையே பணத்தினை விடுத்து மயக்கிக் காரியங்கோடல் வேண்டும் என்பதுந் தோன்றக் "கூலங் காக்குங் கொள்கைமுற் றொரீஇ—ஞாலங் காக்கு நலத்தினை யான—மெய்க்

கொண்டு மயக்கி மென்மையி லவர்முன் – பொய்க்கொண்டு மயக்கியும்" என்று கூறப்பட்டது. இவ்வாறு மயக்குதல் காலக்கழிவேயன்றிப் பிறவாய்ப்பு இல்லை என்பது தோன்றப் "பொழுது போக்குதி" என்றார்.

கூலம்—நென்முதலிய பண்டங்கள். "பால் வேறாக வெண்வகைப்பட்ட கூலங் குவைஇய கூலமறுகும்" என்பதனானும், "எவ்வகை யுணவின் செய்தியும்" என்பதனானும் கூலம் எண் வகைப்படுமென்று தெளிக. அவையாவன "பயறும் உழுந்துங் கடுகுங் கடலையும் எள்ளுங் கொள்ளும் அவரையுந் துவரையுமாம்". நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை மூங்கினெல் என்னும் இவையெட்டாவுங் கூறுப. இவற்றோடு எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை என்னும் இவற்றையுஞ் சேர்த்துக் கூலம் பதினெட்டென்பர் கூத்துநூலாசிரியர். "பதினெண் கூலமு முழுவாக்கு மிகுக" என்றார் மதிவாண நாடகத் தமிழ்நூலார் ஆகலிற் பலசரக் கென்பாருமுளர்.

கூலம் உலகத்தினைக் காத்துவருகொள்கை பிரத்தியக்கமாயிருப்பவும் அதனை மறந்துவிடுகின்றனரே என்பது தோன்ற ஒருவி என்பது "ஒரீஇ" என்றளபெடுத்தது. இவ்வாறே "நல்லரை மரீஇ", "புல்லரை மரீஇ" என்பனவற்றையும் முன்னும் பின்னும் கூறுதொழிந்தனவற்றையும் உய்த்துணர்ந்தறிக.

இனையை எனினும் = இத்தகைய மாறுபாட்டை உடையை என்றாலும்;

நின்விழைவானே = (நின்னை மென்மேலும் ஈட்டிப் படைத்துக்கோடல் வேண்டும் என்று) நின்மேல்வைத்த அவாவினானே;

நின்விழைவென்றது அறத்தினும் இன்பத்தினும் மேம்பட்டது பொருள் எனப் பிறழ வுணர்ந்து அதனை மேன்மேலும் ஈட்டவேண்டுமெனப் பொறுமையிழந்து மேற்சேறல்.

தமக்கு மிகுந்தன = (தங்கள் குடும்பச் செலவிற்கும் மருங்கமைவார்க்கும் வேண்டாதன வாய்த்) தம்மிடத்து மிகுந்திருப்பனவற்றை;

பிறர்க்கு தந்தும் = வேண்டிய பிறர்க்குக் கொடுத்தும்;

பிறர் இடை வேண்டுவ பெற்றும் = பிறரிடத்திலே (மிகுந்திருப்பனவற்றுள்) தமக்கு வேண்டியவற்றைப் பெற்றும்;

பிறங்குநர் = ஒளிமிகுந்து வாழ்கின்றனர்;

தனக்கும் மருங்கமைவார்க்கும் வேண்டாப்பொருளை வேண்டிய ஒருவற் களித்தற்கும், தனக்கு வேண்டிய பொருளைப்படைத்த பிறன்றனக்கு வேண்டிய பொருள் தன்னிடத்தில்லையாயின் அதனைப் பெறுதற்கும் பணம் கருவியாகும். இதனுட் பண்டமாற்றால் நேரும் துன்பங்கள் இவை எனவும், அவற்றை நீக்குதற்குப் பணம் கருவியாகும் எனவுங் கூறப்பட்டன. பண்டமாற்றுவான் பலர் கூடினும் அக்கூடினோர்க்குப் பயன் வாய்க்காது போதலும் பிறவும் உய்த்துணர்ந்துகொள்க. இனி நாடிடையிட்டும், கடலிடையிட்டும், பிறவிடையிட்டும் பெரிதாக வாணிபஞ் செய்தற்குப் பணமே கருவியாகும் என்க. பொன்னிடத்தும் மணியிடத்தும் வைத்திருக்கும் ஆசை காரணமாகவன்றே ஒருவர்க்கொருவர் அடிமைப்பட்டிருத்தல் முதலியன கண்கூடு.

பொல்லா பலரும் = குற்றம் பொருந்திய பலரும்;

புவிக்கு அடிமை ஆகி = பூவுலகத்துச் சீவராசிகளுக்கு அடிமைப்பட்டு;

[பல்லாற்றானும் பயன்பெற முயன்று]

பயன்பெற = அச்சீவராசிகள் எல்லாம் பயனை அடையும்படி;

பல் ஆற்றானும் முயன்று = பலவழியாகி நிற்குந் தொழிற்றுறைகளிலே முயலுதலைச் செய்து;

நெற்றி வரு பெரு வேர் = நெற்றியினின்றும் வழிந்துவருகின்ற பெரிய வேர்வையை;

நிலன் வீழ்க்குநர் = நிலத்திலே பெருகும்படி சொரிகின்றார்கள்;

சோறு, கூறை முதலாய பலவற்றையும் விற்பவர் உலகத்தார்க்குத் தம்மாலியன்ற உதவி புரிபவராவர். அன்னராயினும் அவர்பிறர்க்கு நலஞ்செய்யுந் தஞ்செயலை அறியாராய்ப் பணங் கருதியே செய்தலிற் "பொல்லாப் பலர்" எனப்பட்டார்.

பண்டமாற்றும் நாணயத்தையும் சாமானியர்தம் சோம்பலையும் போக்குதற்குக் கருவியாகிய பணத்தைப் பெற்றுக்கொண்டு கூலமுதலியவற்றைக் கொடுத்தல் அத்தொழில்வளர்ச்சிக்கே என்றுணர்ந்து வாணிபஞ் செய்வோரே பேரறிவாளிகள் எனப்படுவர்.

உண்மையிலே உபகாரஞ் செய்தற்கு விருப்பிலாதாரும் பொருளாசையானே தமக்கு வேண்டியவற்றிற்கு மிகுதிப்பட முயல்வர் என்பதும் பிறவும் கூறப்பட்டன.

மிடியர், மடியர், கொடியர், சினத்தினர், வெறுப்பினர் முதலாய பலரும் பொருள்வேட்கை யானே தமக்கமைந்த பொல்லாங்கு நீங்கப்பெற்று உலகுக்கடியராகி நெற்றிவருபெருவேர் நிலத்திற் பெருக்குவர் எனப் பொருள் கூறுவாருமுளர்.

பிண்டம் நெல்லில் பெருமை கொள் பித்தர் = (தமது குடும்பத்திற்கு வேண்டிய உணவின வகைக்கும் ஏனைப்பொருள் வகைக்கும் செலவழித்த பகுதி போகவும் எஞ்சிய) நெற்குவியல்களைப் பெருமையாகக்கொண்ட பைத்தியகாரர்;

கொண்ட நெல் எவர்க்கும் கொடுத்து மகிழ்குநர் = தாம் வைத்திருக்கும் நெற்குவியல்களை எவர்வந்து கேட்பினும் அவர்க்கெல்லாம் கொடுத்து மகிழ்ச்சியடைகின்றனர்;

அளவிற்கு மிகுதியாக உண்ணவுமொண்ணாது. ஆண்டாண்டுதோறும் நெல்வரவே மிகப் பெருக்கமடைகின்றது. பணத்தையோ உண்ணுதலுஞ் சாலாது. இவ்வாறாகவும் தேசம், பாஷை, சமயம்ஆதியன முன்னேற்றமடையும்வண்ணம் பணத்தை உபகரிக்காமல் பொருளாசை யால் அலைப்புண்டு பிறவழியிற் கொடுப்பவராதலிற் பித்தரெனப்பட்டார். "தமக்கு மிகுந்தன பிறர்க்குத் தந்தும்" என்ற பகுதிக்கும் இதற்குமுள்ள வேறுபாடு கண்டுகொள்க. ஈண்டு நெல் லென்று சிறப்பித்துக் கூறினமை இன்றியமையாமை கருதி என்க.

நாட்டினை நல்வழிப்படுத்துஞ் சார்பினர்க்கும், நாட்டில் நல்வழிப்படுஞ் சார்பினர்க்கும் உணவு முதலாயவற்றைப் பெறும்பொருட்டு உபகரித்தலே பிண்டநெல்லிற் பெருமையாளர்தஞ் செய்கையாயிருப்பவும் அவர்செய்கை மாறுபடுமாயின் அவரிடத்தமைந்துள்ள பொருள்களைப் பணமூலமாக உலகத்தார் கவர்ந்து வருகின்றனர் என்பது கூறப்பட்டது. அன்றியும் அவர்கைப் பட்ட பணத்தினையும், பிறவற்றையும் உறுதிச்சீட்டு முதலியவற்றால் உலகத்தார் பெற்று வாழ் கின்றனர் எனவும் அறிந்துகொள்க. வேலைகாரராகவும், நியாயாதிபதி முதலிய அதிகாரிகளாக வும் அறிவாளிகள் தங்கள் செயலை அவர் செயலாகக் காட்டி அவரிடத்துப் பொருள்களை முற்றுங் கொள்கின்றனர் என்பதும் ஆராயற்பாலன. பெரும்பொருள் படைத்த புல்லர்க்குப் பணவாசை இல்லையாயின் பிறர்க்கொடாது வீணே யழிவர் என்க.

வேறு நாடு அவர்க்கும் = புறநாட்டின்கண் வாழ்வுடையாராய்த் தம் நாட்டினை அடைந்த வர்க்கும்;

வேண்டிய எல்லாம் = அன்னோர் விரும்பியபொருள் எல்லாவற்றையும்;

ஈண்டிய உவகை கொண்டு = (அவர்க்களித்தலிற்) செறிந்த மகிழ்ச்சிகொடு;

இயைந்து ஈகின்றனர் = மனம் ஒன்றுபட்டுக் கொடுக்கின்றனர்;

இயைந்து ஈதலாவது வேண்டுவோர் நிலையிலே வேண்டப் படுவோர் நின்றறிந்து அவர் வேட்கையைத் தீர்த்தலே தமது வேட்கையைத் தீர்த்துக் கொள்வதுபோலக் கருதி உபகரித்தல்.

இனி நின் மயக்கிற்கு இசைகிலர் = இப்பால் நின்றற் கொடுபடும் மயக்கத்திற்குப் பொருந் தாதவர்; (யாவரோவெனில்?)

ஏனைய உயிரையும் தம போல் எண்ணி = (உயர்வு, தாழ்வு, விருப்பு, வெறுப்பு, நன்மை, தீமை, முதலாயவற்றானே பலதிறப்படும்) எல்லாச் சீவராசிகளையும் தம்மைப் போலக் கருதி;

காவு ஒரீஇ = (உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று காட்டும் புல்லிய குணமாகிய) வஞ்சத்தினின்றும் நீங்கி;

கனிவு பெறு நெஞ்சில் காத்து = அருண்முதிர்ச்சியைப் பெற்ற நெஞ்சினனே காப்பாற்றுதலைச் செய்து;

தனி நிலை பெறீஇயர் தவம் முயல்குநர் = ஒப்பற்ற சாந்த நிலையைப்பெறும் பொருட்டுத் தவத்தினை முயல்கின்ற பெரியோராவர்;

தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய பெரியோர் நூல்செய்தலும் நல்லறநெறியைச் செவியறிவுறுத்தலும் யாதொன்றின்கண்ணும் விருப்பு வெறுப்பு வைக்காதிருத்தலும் உற்றநோய நோன்றலும் உயிர்க்குறுகண் செய்யாமையும் பிறபல நல்லொழுக்கமு முடையோராதலின் அவர் பொருளாசைக்காக ஒன்றனையுஞ் செய்யார் என்பதும், பணம் பொல்லாதாரை வஞ்சித்து உலகத்தை நிலைபெறச் செய்தற்குக் காரணமாக நிற்றலிற் றமே உலகுக் கியல்பாக உதவிசெய்து வருந திறலாளர் பணத்தினை வெறுப்பர் என்பதும் பிறவும் இதனுட் கூறப்பட்டன.

செயற்கரிய செய்துவரும் பெரியோரை எவரும் போற்றத்துணிந்து முன்வருவர் ஆதலின் முனனர் "தவநோ வாதகு சாயில் பணனே" எனக்கூறினர்.

(22) ஐந்தன் புலத்தை யகற்றித் தூய
சிந்தைய ராதல் செவ்வியோர் தொழிலெனல்.

நூலமை யியற்கை நுவல்சால் சிறப்பிற்
பால்வகை யறிந்த பல்லோர் பழிச்சு
நுண்மாண் வினைபூ ணேகத் தமைமனை நன்
கியற்றினோ னதனிடை யிரீஇ யொருவனைப்
போற்று தொறுக்கும புலைமகன் போல
யாக்கைக் கினிய யாவையும் போற்றி
யின்னுயிர்க் குறுதி யென்னும் போற்றார்
காக்கை முதல தமமினக் கவினுக்
குவத்தலி னுவகுவ தயற்குறு மெழிற்கு
முவர்த்தகாங் குவர்த்த முலகினைக்
கலக்கித் தங்நிலை கலைநதொழி குநரே.

(இ-ள்.) [நூலமை யியற்கை நுவல்சால் சிறப்பின்] நூல் நுவல் இயற்கை அமை சால் சிறப்பின் = சிற்பநூல் கூறுகின்ற இலக்கணம பொருந்தி நிறைந்த சிறப்பினையும்;

பாட்டுநடையானது கேட்பவர்தஞ் செவிக்கு இன்பச்சுவை பயக்குமாறு ஓசை முதலிய நயம்வாய்ப்பச் சொற்களைத் தொடுத்துச்சொல்வதாகும்; உரைநடையோ கேட்பவர்தம் நெஞ்சிலே முட்டின்றிப் பொருளை நேரே தெளிவுறப் பதிக்கும் இயல்கொண்டு செல்வதாகும். ஆதலிற் பாட்டிலே நிரைக்கப்பட்ட சொற்கள் சிலவமையம் உரையிடத்து நிலைமாறி வருதலும் ஆவசியகமாம். இன்னவற்றையெல்லாம் மனனூல்வல்லார் நன்கு விளக்குப.

பால் வகை அறிந்த பல்லோர் பழிச்சு = உயர்வு தாழ்வுகளென்ற பகுதிகளின் வகைகளை நன்குணர்ந்த பலரும் துதித்தலையும்;

பகை நண்பு நொதுமல்களானே வேறுபாடுபெறாத உண்மைபொதிந்த அறிவுடையார் என்க. அவரே ஒவ்வொன்றின் உண்மைத்தன்மையையும் அறிந்துவக்கும் மேன்மையுடையார் என்க. அவர்தாமும் பல திறப்பட்டிருத்தலின் "பல்லோர்" என்றார். எத்தகைய உயர்வுடையாருங் குற்றங்காணமுடியாது துதிக்குந் தன்மைத்து என்றபடி. பழிச்சு-தொழிற்பெயர்.

நுண் மாண் வினை பூண் நோக்கு = திட்ப நுட்பங்களானே மாட்சிமைப்பட்ட தொழிலினை மேற்கொண்ட அழகினையும்;

நுட்பமென்ற விலேசானே திட்பமுங் கொள்ளப்பட்டது. மனைக்கு வேண்டியவற்றை ஏற்குமாறு ஈட்டுதற்கும் அதனை இயற்றுதற்கும் இன்றியமையாதது நுட்பமுடைமையாதலின் "நுண்" என்றும், நுட்பமிருப்பினும் அனுபவமும் ஆற்றலும் இல்லாவிடிற் பயன்பெறாதாதலானும் நுட்பத்தோடு செய்யப்பெற்றாலும் நான்முறைத்தும் வசிப்பவர் முதலானோர் வசதிக்கும் நலந்தரும் பெருமைவாய்ந்ததொன்றாயிருத்தல்வேண்டும் என்பார் "மாண்" என்றும், மேற்கூறியவற்றை யுடையதுவே மனைத்தொழிலாகும் என்பார் "வினை" என்றும், இத்தகைய வினையே மனைக்கு அமைதல்வேண்டும் என்பார் "பூண்" என்றும், இவ்வெல்லாப் பெருமையும் இயைந்தாலும் நோக்குவார் கண்களை வசீகரப்படுத்துந் தன்மையும் இன்றியமையாததென்பார் "நோக்கு" என்றுங் கூறினார். வாளா நோக்குடைமனை யென்று கூறப்பெறின் உள்ளீடில்லாத வெறுமனை யென்று எவராலும் இகழ்ந்தொதுக்கப்படுமாதலின் மேற்கூறிய அடைமொழிகளும் இன்றியமையாதனவாயினவென்க.

உடை = தனக்கு உடைமையாகக் கொண்ட;

மனை நன்கு இயற்றினோன் = மனையை நன்மையுறும்படி இயற்றுவித்த ஒருமகன்;

இவ்வாறெல்லாம் பொருந்த மனைசெய்தல் அதனிடைவாழ்பவன்றன் நலன்கருதியே யாகலின் "நன்கியற்றினோன்" என்றார்.

[அதனிடை யிரீஇ யொருவனை] அதன் இடை ஒருவனை இரீஇ = அம்மனையின்கண்ணே (வசித்துவருமாறு) ஒருவனை இருத்தி;

அம்மனையின்கண்ணே இருத்தியதற்கேற்ப அவனுக்கு வேண்டியவற்றையெல்லாம் செய்தல்வேண்டும். அவ்வாறு செய்யாமல் அளவில் பொருள்கொண்டு மனையை இயற்றுவித்தும் அதனிடை இருத்தப்பட்டவனை வருத்துகின்றானாதலின் அவனறியாமையைப் புலப்படுத்த "இரீஇ" என்றளபெடுத்தது.

போற்றாது ஒறுக்கும் புலைமகன் போல = தனக்கு வேண்டியவற்றைச் சிறிதும் செய்து கொடாமல (தன்னொடு வதியும் பொல்லாச் சுற்றங்களுக்கு வேண்டியவற்றைச் செய்துகொடுத்துத் தன்னை) வருத்திக் கெடுத்துக்கொள்கின்ற கீழ்மகனைப்போல;

ஆன்மா தனக்கு வேண்டிய தனுகரணங்களைத்தானே உண்டாக்கிக் கொள்ளுகின்றதென்பது ஒத்தாகலின் இயற்றினோனை உயிரென்று கொள்க. மனையை யாக்கையாகவும் அதன்கண் இருப்பவனை உயிரெனவுங் கொள்க. உயிரானது தனக்குக் கேடுசூழ்ந்துகோடலின் அதனைப் புலைமகன் என்றார். இவ்வாறே "கூத்தன் புறப்பட்டக்கால்" என்று உயர்திணையாக நாலடியுள்ளும் பிறவற்றுள்ளும் வழங்கப்பட்டமை காண்க.

யாக்கைக்கு இனிய யாவையும் போற்றி = சரீரத்திற்கே நன்மைபயப்பனவாகிய எல்லாவற்றையும் கொடுத்துக் காப்பாற்றி;

யாக்கை என்பது ஐம்பொறிகளையும் மனத்தினையும் உணர்த்தும். அவை வேட்டனவற்றையே அளித்துவந்தான் என்க. அவற்றான் விரும்பப்படுவனவும் பிறவும் அறமல்லாதனவே என்பது ஞானநூல்வல்லார் துணிபு. ஐம்பொறிகளும் மனமும் உடனுறையும் பொல்லாச் சேவகர்கள். தன்வழி அவர்களை இயங்கவைக்காது அவர்வழியிற்றான் நிற்பது தலைமைக்கும் அறநெறிக்கும் மாறுபயக்கும் என்க. ஆன்மாவைத் தலைவனாகவும், மனமும் பொறிகளும் அத்தலைவனுக்குரிய பொல்லாச்சேவகர்களாகவும் கொண்டுரைக்க

இன் உயிர்க்கு உறுதி என்னும் போற்றார்=இனிமையைத் துய்த்தற் கேதுவாகிய உயிருக்கு உறுதிபயப்பனவாகிய புருடார்த் தங்களைச் சிறிதும் பேணமாட்டார்;

என்னும்—சிறிதும். "இடங்கோட்டி யென்னு மிமையா ளினைத்திருந்தான்", "போமி னென வென்னு முரையியான்", "என்னு மருந்தல மிலார்கள்", "செருமதற் கெனு மைய மின்றால்" என்பன சிந்தாமணி. உயிர் இனிமையுறுதற் கேதுவாகி நிற்றலின் "இன்னுயிர்" என்றார். இனி இயற்றிரேனை ஊழ்என்றும் அதனிடை இரீஇயவனை உயிர் என்றுங் கூறுப. ஆயின அஃறிணையான அவற்றைக் கூறுதல் குற்றமாகாதோவெனில், ஆகாது என்னை? "இனைத்தலு முரிய வேறிடத் தான" என்பவாகலின். இருத்தப்பட்டவன் உயிர். வீட்டினைச் செவ்விதாகக் கட்டிக் காவன்முதலியவற்றை ஏற்படுத்தி இனிது புறந்தந்து ஆண்டுத் தலைவனாக ஒருவனைக் குடியிருத்தி அவனுக்கு உணவு முதலியவற்றைக் கொடுத்துக் காப்பாற்றாமல் விடுபவனைப் போல மெய்பொறிகளுக்கும் மனத்துக்கும் வேண்டியவற்றையெல்லாம் இனிதளித்து வருகின்றமை என் னலிபப்பு என்ப. இனி ஊழ்த்தெய்வம் இயற்றித்தந்தபடியே நிறைவேறுமாதலின் அதனை மாற்றி கொள்வது எங்ஙனம் சாலுமெனிற் கூறுதும். வருபிறவிக்குக் காரணங்களாகிய அறமுதலியவற்றைச் செய்யவில்லையே என்று இரக்கமுண்டாகுமவண்ணம் சிந்திக்கப்பெறின் அவையெல்லாம் உண்டாக்கிக்கொள்ளவும் ஊழ்ச்செயலை மாற்றிக்கொள்ளவும் இனிதினிடன் உண்டாகுமென்க. இழவூழாகிய சஞ்சிதத்தை அனுபவித்தற் குள்ளாகும் அநிஷ்டக் குறிப்பானே மாற்றிக்கோடற்கும் இனிதாகும் என்பவாகலின் இதனையும் வருநிலை கருதி அவ்வாறே மாற்றிக்கொள்ளக்கூடும் என்க. உடலை வீடாகப் பலரும் வழங்கிய உண்மையை ஆண்டாண்டுக் கண்டு தெளிக.

காக்கை முதல தம் இனத்தவினுக்கு உவத்தலின் ஆங்கு உவந்து=காக்கையை முதலாக வுடைய (கருநிறப்பொல்லாப்) பறவைகள் தங்கள் இனத்தின் (இழிவுடைய) அழகிற்கு மகிழ்வதைப்போல (இழிதொழிலையுடைய தம்மையும் தம்மைப்போன்ற தமரையும் அழகு செய்கை முதலியவற்றானே) விரும்பி;

"காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு" என்பது ஊர்வழக்கு. "காக்கை யுவக்கும் பிணம்" என்பது சான்றோர் வாக்கு. கூகை முதலியவற்றையுங் கொள்க.

அயற்கு உறும் எழிற்கு உவாத்து ஆங்கு உவர்த்தும=பக்கத்துள்ள பொருள்களிடத்திலே பொருந்திய அழகிற்கு அக்காகம் வெறுப்புறுதல்போலத் (தாமும பிறரது அழகு முதலியவற்றிற்கு விருப்பஞ் செய்யாது) வெறுத்தலைச் செய்தும்;

உம்மையைப் பிறவிடங்களினும கூட்டுக. அசையாகினும் அமையும்.

உலகினை கலக்கி தம் நிலை சோர்ந்து ஒழிகுநர்=உலகத்து நன்மக்கட்டம் செய்கைகள் முறையே நடந்துவராமல் கலக்கவைத்துத் தம் நிலையையும் நீக்கி யாரோ இறந்துபோகின்றார்கள்;

நன்மக்கட்டம் செய்கைகளாவன தேசம், பாஷை, வருணம், ஆச்சிரமம், குலம், கோத்திரம் முதலியவற்றிற் கேற்ப மிருதி முதலிய தரும சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவாறு நடத்தல். இவற்றை நிலவாதபடி தடுத்தலே உலகினைக் கலக்குதல் என்க. தந்நிலை களைதலாவது மேற் கூறியவற்றை நீக்கி அந்நியமதக் கொள்கைகளுக்கு ஆளாகித் தம்மையும தமரையும் கெடுத்தல் என்க. எனவே அவரதழிவு சொல்ல வேண்டாதாயிற்று.

---

## (23) பொறிவழிப் புகுத லறிவிற் கடாதெனல்.

பெரும்பிணி களையும் பெறலரு மருந்தினை
விரையின் றென்ன மூக்குவெறுக் குமமே
நறுஞ்சுவை யின்றென நாக்குவெறுக் குமமே

நச்சுக் கனிமிசை நன்னிற மயக்கா
னச்சிக் கண்ணு நலனிழக் கும்மே
வஞ்சங் கரந்து வாய்வழங் கின்சொற்
றஞ்சமாச் செவியுந் தாழ்ந்தொழி யும்மே
யிவற்றுவழி மனனு மிணைந்தழி யும்மே
யாதலி னிவற்றொ டறிவணைந் தாழ்ந்து
சாத லுறாமற் றட்பவர்
பூதலத் தென்றும் பொருந்திவாழ் வோரே.

---

(இ-ள்.) பெரும் பிணி களையும் பெறல் அரும் மருந்தினை = பெரிய நோய்களை நீக்குகின்ற பெறுதற்கரிய மருந்தினை;

விரை இன்று என்ன மூக்கு வெறுக்கும் = மூக்கானது (மோந்துபார்த்து) நறிய மணம் இல்லையென்று வெறுக்கும்;

ஏகாரம் இசைநிறை யீற்றசை; பின்வரும் ஏகாரங்களில் ஈற்றிலுள்ளது தேற்றக்குறிப்பு, ஏனைய இசைநிறை அசைகள்.

நறும் சுவை இன்று என நாக்கு வெறுக்கும் = நாவானது (அதனைச் சுவைத்துப்பார்த்து) இனிய சுவை இல்லையென்று வெறுக்கும்;

நச்சு கனி மிசை நல் நிறம் மயக்கால் = (உள்ளே) நஞ்சுத்தன்மைபொருந்திய கனியினது (புறத்தே அமைந்துள்ள) நன்மைவாய்ந்த நிறத்தின் மயக்கத்தாலே;

நன்னிறம் என்பதனை "இன்சொல் விழுக்குத் தரும்" என்றாங்குப் பொருளுரைத்துக் கொள்க.

நச்சி கண்ணும் நலன் இழக்கும் = (அதனைக்) கண்ணும் விரும்பி நன்மையை இழக்கும்;

வஞ்சம் கரந்து = (தன்னைக் கெடுத்தல் வேண்டிய) வஞ்சகச் சூழ்ச்சிகளின் முடிவுகளை உள்ளே மறைத்துவைத்து;

வாய் வழங்கு இன் சொல் = வாயானது வழங்குகின்ற இனிய மொழிகளுக்கு;

தஞ்சம் ஆ(ய்) செவியே தாழ்ந்து ஒழியும் = அடிமைப்பட்டுச் செவியுந் தாழ்வை அடைந்து கெடுதலைப்பொருந்தும்;

இவற்றுவழி மனனும் இணைந்து அழியும் = மனசும் இவற்றின் சார்பிலேபட்டு (விடாமற்) பொருந்தி (வீணே) கெடும்;

ஆதலின் = ஆதலினாலே;

இவற்றொடு = (பொறி, புலன், மனன் என்னும்) இவைதம்மோடு;

அறிவு அணைந்து ஆழ்ந்து = அறிவானது கூடி அமிழ்ந்து;

சாதல் உறாமல் தட்பவர் = கெடாமற்றடுத்து (அதனவழியே அவற்றை ஒழுகும்படி) செய்பவர்;

பூதலத்தில் என்றும் பொருந்தி வாழ்வோர் = இப்பூவுலகத்தின்கண்ணே எஞ்ஞான்றும் புகழொடு பொருந்தி வாழ்பவர் ஆவர்;

மனவடக்கம் பெற்றவரே சாதலுறாராதலிற் பொருந்திவாழ்வார் என்பதற்குப் புகழொடு பொருந்தி வாழ்வார் என்று பொருளுரைக்கப்பட்டது. ஒழுக்கத்து நீத்தாராதலின் அவர்பெருமை இவ்வுலகத்தின்கண்ணே பலுவலாற் புகழப்படும் ஒருமென்க.

றுக்குமுதலாயவற்றுற் சில சமயம் வெறுக்கப்படுவன நல்லனவாயும் விரும்பப்படுவன தீயனவாயு மிருத்தல்பற்றி அவற்றின் வழியே அறிவினைச் செலுத்துதல் இம்மை மறுமைகளை யுட உயிர்வாழ்வினையுங் களைந்துவிடுமென்றும், யாலறிவின்வழியே அவற்றைச் செல்லவிடுதல் எல்லா நன்மைக்கும் ஆதாரமாகும் என்றும் இதனுட் கூறப்பட்டன.

---

## (24) அருட்டிறங் கூறி யகத்தறி வுறுத்தல்.

தாஅய் நுரைத்துத் தத்தித் தத்திப்
பாஅ யருவியும் பார்ப்பவர் தம்மைக்
கீழ்ப்பிடித் துந்தலிற் கீழ்ச்செல் பாங்கரும்
கூர்த்த சிமயமுங் குழீஇய குவடும்
பச்சென் காடும பசுநெல் வயலு
மச்சுறுத் தழிக்கு மாரழற் சுரனும்
ஆங்கு,
முத்தும் பவழமு முதிர்ந்தபன் மணிகளு
நத்து முதலவு நல்குமலை யெற்றிய
பெருமண லெக்கர்ப் பெருக்குங் கடலும்
பாணிலாப் பரப்பும் வானூர் மதியமு
மளப்பில வாகி யகமகிழ்வு பூத்து
மினுக்குமினுக் கென்ன மிளிர்பன் னிறத்த
கதிரொருங்கு நிழற்றுங் காமரு மீன்களும்
பதிபிற ழாமற் பாங்குற வோம்பியும்
விருப்பும் வெறுப்பும் வியப்பும் வெரூஉம்
பற்பல வாத்தரூஉம் பன்மைய வாகி
யெண்ணறி வொண்ணா தேறுவடிவு முதலாக்
கண்ணறி வொண்ணாச் சிறுவடிவு கடையா
நண்ணுயிர் செய்யு நல்லவுந் தீயவும்
கண்ணறு திருத்திக் காத்தும் வருபொரு
ளொத்தைச் சிறியனை யுவந்து
காத்தல் செய்தல் கடும்பர மாமே.

---

(இ—ள்.) தாஅய் நுரைத்து தத்தி தத்தி பாஅய் அருவியும் = தத்தித் தத்தித் தாண்டு வதினால் நுரைத்தோடுகின்ற அருவியும்; (மலையின் வீழாறும்;)

"தாஅய்", "பாஅய்" என்னும் அளபெடைகள் தாவுதலினதும் பாய்தலினதும் கடுப்பினை யுணர்த்தற்கு வந்தமை போலும்.

பார்ப்பவர் தம்மை கீழ் பிடித்து உந்தலில் கீழ் செல் பாங்கரும் = (மேனின்று) நோக்கு வாரைப் பிடித்துக் கீழே தள்ளுவதுபோல அத்துணை ஆழ்ந்துசெல்லும் மலைச்சாரலும்;

கூர்த்த சிமையமும் = கூரியனவாகி மேலுயர்ந்த சிகரங்களும்; (மலைமுடிகளும்;)

குழீஇய குவடும் = (அச்சிகரங்கள்) பொருந்திய மலைகளும்;

பச்சு என் காடும் = (மழைவளங் குன்றாமையிற்) பச்சென்று தழைத்தோங்கிய காடுகளும்;

பசு நெல் வயலும் = பசுமையாகிய நெல்வயல்களும்;

அச்சுறுத்து அழிக்கும் ஆர் அழல் சுரனும் = (நோக்குவாரை) அஞ்சும்படி செய்து (அவர் மனவலியை) அழித்தோட்டும் அனல் நிறைந்தபாலை நிலனும்;

முத்தும் பவழமும் முதிர்ந்த பல் மணிகளும் நத்து முதலவும் நல்கும் அலை எற்றிய பெரு மணல் எக்கர் பெருக்கும் கடலும் = முத்து, பவழம், ஒளிமுற்றிய பன்னிறமணிகள், சங்குமுதலாயினவற்றைத் தருகின்ற அலைமோதலின் மேலெழும்புகின்ற பெருமணலைப் பெருக்குங் கடலும்;

குவடு, காடு, நெல்வயல், சுரன், கடல் என்றவற்றான் முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் என்னும் ஐவகை நிலனும் பெறப்பட்டன. இதனால் இவ்வாறு ஐவகையுள்ள திணைகளையும் கூறினாராயிற்று.

ஆங்கு—அசைநிலை; அவ்விடை எனக்கொள்ளினும் ஒருவாறமையும். இதனின்றியமையாமையையும் நுனித்தறிந்து கொள்க.

எக்கர்—மேலுக்கேறப்பண்ணல்.

பால் நிலா பரப்பும் வான் ஊர் மதியமும் = பால்போலும் வெள்ளிய நிலாவைப் பரப்பி வானிற் செல்லுந் திங்களும்;

அளப்பு இல ஆகி அகம் மகிழ்வு பூத்து மினுக்கு மினுக்கு என்ன பல் நிறத்த கதிர் ஒருங்கு நிழற்றும் காமரு மீன்களும் = எண்ணற்றனவாகி (காண்பாருள்ளத்து) உவகை பூப்பித்து மினுக்கு மினுக்கு என்று (ஒருவகைத் தன்மை விழுக்குப் புலப்பட) ஒளிவிடுகின்ற பன்னிறக் கிரணசமூகத்தால் (உலகமுழுவதையும்) குளிர்விக்கின்ற அழகிய நாண்மீன்களும்;

உலகின் பொருள்களுள் ஒன்றனை யுயர்த்தது மற்றொன்றின் இன்பம் ஈடுசெய்யுமாறு இறைவனாற் படைக்கப்பட்டுள எனபதுபோதர அச்சுறுத்தழிக்கு மாரழற்சுரன், அகமகிழ்வு பூத்து மிளிர்மீன், என்றாங்கு அடைமொழி புணர்த்துப் பொருள்களை ஓதினார்.

பதி பிறழாமல் பாங்கு உற ஓம்பியும் = (ஆகிய இவற்றை நிலைபெயரவிடின் உலக மழிந்து கெடு மாதலிற் றத்தம்) நிலை பிறழவிடாமல் (நிற்கும் வண்ணம்) முறைமையொடு காத்தும்;

விருப்பும் வெறுப்பும் வியப்பும் வெரூஉவும் = (பிறர்க்கு) விருப்பத்தையும் (அதனால்) வியப்பினையும் வெறுப்பையும் (அவற்றால்) அச்சத்தினையும்;

பல் பல ஆ(க) தரூஉம் பான்மைய ஆகி = பற்பலவாறு தருகின்ற இயல்பினவாகி;

எண் அறிவு ஒண்ணாது = அறிந்தளவு செய்துகோடற் கரிதாய்;

ஏறு வடிவு முதலா(க) = உயர்ந்த பேருருவம் முதலாக;

கண் அறிவு ஒண்ணா சிறு வடிவு கடையா(க) = வெறுங்கண்ணொளியால் அறிதல் செல்லாத சிற்றுருவம் ஈறாக;

நண் உயிர் செய்யும் நல்லவும் தீயவும் = (அமைந்த உடலோடுறவுபூண்டு நின்ற) உயிர்கள் செய்துவருகின்ற நல்லனவற்றையுந் தீயனவற்றையும்;

கண்ணாது = கருதாமல்;

திருத்தி காத்தும் வருபொருள் = திருந்தச்செய்து (அம்மாத்திரையினமையாமல் அவற்றையெல்லாம்) பாதுகாத்தும் வருகின்ற கடவுள்;

ஊத்தை சிறியனை = (செய்வதுந் தவிர்வதும் அறியாமல்) அஞ்ஞான மலவிருளில் அமிழ்ந்திய சிறியேனாகிய என்னை;

உவந்து காத்தல் செய்தல் = (எனது எளிமைக்கிரங்கி) விருப்பத்தோடு காத்துத் தலையளி புரிதல்;

கடும் பரம் ஆமே = (அவர்க்கு ஒரு) கடிய பாரமாகுமோ?

அஃதன்றாதலின மனனே நின்னுடலை ஓம்புமாறு பலதுறைகளினும் முயன்று உலகினுழிதரலை ஒருவி இறைவன தருள்வழியிற்றொழிலற நிற்பாயாக என்பதாம்.

பரம்--பாரம் என்னுஞ் சொல்லின் குறுக்கமன்று. பாரத்தை பூணர்த்தும் மற்றொரு பரியாயச்சொல்.

---

## (25) அல்லன புரிந்து நல்லன மறந்தோர் சில்யாண்டு கழியாச் சிறாரே யென்றல்.

காலையி லெழுந்து சாலவுண வுண்டு
நூல்பல கொண்டு கழகநோக் காரா
யாலடி யமர்ந்துபல் லாட்டயர்ந் தினிக்கு
மேழைச் சிறாரொ டலவிலா வெற்றமை
யுள்ளன வோராது மல்லன வுணர்ந்து
நல்லன மறந்து மல்லன நயந்து
மில்லன விழைந்து மிருப்பன மறந்து மு
வல்லாங் கூற்று மதியினர் பரி
வாரோ டொன்று மணியினை
வீணே யிழந்து வீங்கழி குநர்களே.

(இ—ள்.) காலையில் எழுந்து = காலையிலே துயிலைவிட்டெழுந்து;

சால உணவு உண்டு = உணவினை மிகுதியாக உட்கொண்டு;

நூல் பல கொண்டு = பலநூல்களையும் (வீணே) சுமந்துகொண்டு;

கழகத்திற்குச் செல்வோர்போலப் பெற்றோர்க்குப் போக்குக் காட்டுவர் என்பது தோன்ற "நூல்பல்கொண்டு" என்றார்.

நூல்களைச் சுமந்துகொண்டு சென்றவர் கழகத்தை அடைந்து வேண்டியவற்றைக் கல்லாது ஆலடிக்குச் சென்று விளையாட்டயர்தலின் அவர் நூல்களைச் சுமந்த பயன் ஒன்றுமில்லை என்பது தோன்ற வீணேசுமந்து எனப் பொருள்விரித்துரைக்கப்பட்டது.

கழகம் நோக்காராய் = (கல்வி கற்றற் குரிய) பாடசாலைக்குச் செல்லக் கருத்திற் கொள்ளாராகி;

ஆல் அடி அமர்ந்து = ஆலமரத்தடியிலே கூடியிருந்து;

பல் ஆட்டு அயர்ந்து = பலவகையான விளையாட்டுக்களை விளையாடி;

இனிக்கும் ஏழை சிறார் ஓடு = மனமகிழ்கின்ற அறிவில்லாச் சிறுவர்களோடு;

உள்ளன ஓராதும் அல்லன உணர்ந்தும் = உண்மைப் பொருள்களை ஆராய்ந்தறியாமலும் பொய்ப்பொருள்களையே அறிந்தும்; (அவற்றைப் பயின்றுவருமதனால்;)

உள்ளன என்றது அழியாதனவற்றை; அல்லன என்றது அவற்றிற்கு மாறாகி அழிவனவற்றை.

நல்லன மறுத்தும் அல்லன நயந்தும்=நல்லனவற்றையெல்லாம் தீயனவென்று மறுத் தொதுக்கியும் (அதுகாரணமாகத்) தீயனவற்றை (நல்லனவாகப் பிறழ்வுற) விருப்பின் உணர்ந்தும்;

நல்லன என்றது இயற்றினோர்க்கும் ஏனையோர்க்கும் நலன் பயக்கும் புண்ணியச் செயல்களை. நல்லனவற்றைப் பயிலாதார்க்கு அந்நல்லனவெல்லாம் தீயனவாகத் தோற்றும் என்பதைத் "தமரை யில்லார்க்கு நகரமும் காடு போன்றாகு" என்றதினாலும் பிறவற்றினாலுங் கண்டு கொள்க. அல்லன என்றது தீயனவற்றை.

நல்லனவற்றை மறுப்பதனாலே தீயனவாகும் என்பது பெறப்படவும் அல்லனவெனப் பின்னரும் கூறியது மிகையெனின், அற்றன்று, ஏனை நல்லனவற்றை மறுத்தவர் அம்மட்டோடமையாமல் மேன்மேலுந் தீயனவற்றை விரும்பிச் செய்வர் என்பது தோன்றப் பெறுதலின் என்க.

இல்லன இசைத்தும்=(ஆற்றல் இல்லாதனவற்றையெல்லாம் ஆற்றல் உள்ளனவாகக் கருதும் தமது கொள்கைக்கேற்ப) இல்லாதனவற்றைக் கூறிப் (பிறரைப்) பொருந்தவைத்தும்;

தமது சொல்வன்மையால் ஓராற்றலும் இல்லாதனவற்றை ஆற்றலுள்ளனவாகப் பிறர் மனங்கொள்ளப் பொருந்தவுரைத்தல் என்றபடி.

இருப்பன மறைத்தும்=(அவ்வாறு பொருந்தவைத்தலோடன்றி) இருப்பனவற்றை யெல்லாம் (இல்லாதனவாக) மறைத்தும்;

இருப்பன மறைத்தல் என்றது ஒரோவழித் தமது கொள்கை பிழையுடைத்தெனச் சிறிதுண்மைத்தன்மை தமக்குத் தோன்றப்பெற்றாலும் வெளிப்படச் சொல்லி அவ்வுண்மையை மறைத்து வைத்தல்.

வல்லாங்கு இயற்றும் மதியினர் ஆகி=வல்லபடி நடக்கும் அறிவினையுடையராகி;

வாழ்நாள் என்னும் மணியினை=வாழ்நாள் என்னும் அருந்தன மணியினை;

வாழ்நாளை மணியென்றது, மணியைப் போற்றிவைத்துப் பெருமை பெறுவதுபோல, வாழ்நாளை நல்வழியிற் செலுத்துந் தன்மையைப் போற்றிவைத்துப் பெருமை எய்தற்பாற்றாதலின்.

வீண் ஆ(க) இழந்து வீழ்ந்து அழிநர்க்கு=வீணாகும்படி இழந்து வாழ்வை விடுத்தழிந்து போகின்றவர்களுக்கு;

எவனோ வேற்றுமை=உள்ள பேதந்தான் யாது? பேதம் இல்லையென்றபடி.

கழகத்திற்குச் செல்லாமல் ஆலடியில் அமர்ந்து விளையாடுதல் குற்றமென்றறிந்து தவிர்க்கும் அவ்விளையாட்டினையே விரும்புகின்ற சிறார்க்கும், அறம் பொருள் இன்பம் என்னுமிவற்றை முற்றாமல் உலகவிடயத்தில் முயலுதல் குற்றமென்றறிந்து வைத்தும் உலகமுயற்சியையே பெரிதெனவேட்டு முயன்றுவரும் பெரியார்க்கும் பேதமில்லை என்பது இதனுட் கூறப்பட்டது.

---

## (26). வேறுபா டகன்ற மெய்யுணர் வெய்தி னூறுபா டின்றென வுளத்திற் குறைத்தல்.

ஒன்றனி வதற்கே மற்றவை யுழலா
தைம்பொறி தம்மி லமைதியுற் றிருக்கு
மதாஅன்று,
நல்லியல் பமைஇய நாரியர் குறுநடை
யழகுவழி மார்புக் குழுஉவாய் முகாஅ

ஒருபெருந் தவத்தி னிருபெரு முதியோ
ரிவர்க்குவரு நலனே தமக்கென வெண்ணுநர்
அஃதெய்ப்ப,
உற்றோ ருறவின ரூரினர் தேசத்தினர்
மற்றோர் மற்றவை யுள்ளவை யெல்லாம்
அன்னணந் தமரென வறிந்திசி னோர்க்குத்
தமருறு நலனே தம்முறு நலனே
தமர்கைப் பொருளே தங்கைப் பொருளே
யாதலிற் பிறவுயி ராக்கமு மாக்க
நீதறு சிந்தையிற் செயவ னோர்ந்து
குறைதெறு காட்சியொடு நிறைவெய் திருந்து
பிறவெலாக் கடியா வேறுமை மனமே
செவ்வகை யாக்கித் தெருளுற்றுத் தொழிற்குறி
யிவ்வுல குணாளன் றலைமே
லெவ்வகை யுயிர்க்கோ விளைவியா துருந்தே.

---

(இ-ள்.) ஒன்று அணிகெழு மற்றவை பாலாக ஐம்பொறி தம்மில் அமைதியுற்று இருக்கும் = (மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும்) ஐம்பொறிகளும் (ஒற்றுமையினுல்) ஒரு பொறியை அலங்கரிப்பதன்கண் ஏனைய பொறிகள் (அழுக்காறுற்றுத் தம்மை அவ்வாறு அலங்கரிக்கவில்லையே என்று வருந்தல் செய்யாது (அதனை அலங்கரிப்பது தம்மை அலங்கரிப்பதேயா மென்றெண்ணி மனம் பூரித்துத்) தமமளவிற் சாந்தநிலை யுற்றிருக்கும்;

அதா அன்று = அஃதன்றியும்;

நல் இயல்பு அமை இயல் நாரியர் = நல்லிலக்கணம் பொருந்திய மனைவியரும்;

குறு நடை அமுது வழி மார்பு குமுதம் வாய் மகாஅர் = சிறிய நடையும் (தாய்மாட்டுண்ட) பால் வழிந்தோடும் மார்பும் செவ்வாம்பல் மலர்போலும் வாயுமுள்ள சிறுவரும்;

ஒரு பெரும் தவத்தின் இரு பெரு முதியோர் = இருவர்க்கும் பொருந்து தவம் ஒன்றே யாகப் பெற்ற தாய்தந்தையர் என்னும் இருபெரு முதியோரும்;

இவர்க்கு வரு நலனே தமக்கு என எண்ணுநர் = ஆகிய இவர்களுக்கு வருகின்ற நன்மைகள் தமக்குவந்த நன்மைகளாக எண்ணி அவ்வளவில் அமைவர்; (அறிவான் மேம்பட்ட மனிதர்;)

அஃது எய்ப்ப = அதுபோல;

உற்றோர் = நண்பினர்;

உறவினர் = கிளைஞர்;

ஊரினர் = ஒரூரார்;

தேசத்தினர் = ஒரு தேயத்தார்;

மற்றவை உள்ளவை எல்லாம் = ஏனையுள்ள உயிர்களெல்லாம்;

அன்னணம் = அவ்வகை;

தமர் என அறிந்தோர்க்கு = தமது சுற்றத்தவரென அறிந்தவர்களுக்கு;

இசின்—இறந்தகால இடைநிலை.

தமர் உறு நலனே தம் உறு நலனே = தமது சுற்றத்தாராகிய அவர்க்குண்டாகும் சுகம் தமக்குற்ற சுகமும்;

நீதொரீஇத் தெளிநலஞ் சேர்குவ ரென்றுஞ்
சாதற் றுன்போ டகவழுத் தபுத்து
நீதிமுறை நன்குறீஇ நிலன்வாழ்வு கருதியிவ்
வோதினர் பொய்ம்மையென் றுரைப்பினு நலனே
யொன்றலி னப்பொரு ளுண்டென வுணரா
ரென்று நன்புற் றினைகுவா
நனறிதரும பற்பல நயனெலா மிழநதே.

---

(இ—ள்) அவி விளக்கு எற்றிய அ சுடர் = (காற்று முதலிய புறநிகழ்ச்சியானும் நெய் முதலிய அகநிகழ்ச்சியானும்) தணிந்த விளக்கினை மீண்டும் எற்றுதற்கண் உண்டாய அந்தச் சுடரானது;

முன்னாவாய்ந்த சுடர் அன்று எனும் வழக்காறு உண்மையின் = அவ்விளக்கிலே முன்னாப் பொருந்தியிருந்த சுடா அன்றென்னும் வழக்கொழுக்கம் (காண்டலளவைககமைநத) உணமையாதலின் அதனைப்போல;

வந்த உயிர் = புதிதாக உடல் பெற்றுவந்த உயிரானது;

முன்னது அன்று என அறிவுறீஇ = முன்னொருகாலத்திலே எடுத்தவுடலை விட்டு நீங்கிய அவவுயிா அன்றென்று கொண்ட காரணததானே;

போற்றும் ஒருபொருள் = (செய்ந்நன்றி யறிந்து) போற்றப்படும் கடவுள் இருத்தலை;

பொய் என புகலுநர் = இல்லையென்று (வாய்மாத்திரையானே) சொல்லுகின்றவர்களுடைய;

கூற்று மெய் அது ஆ(க) கொள்ளினும் = (பொய்மைநிறை) சொல்லை உண்மையுடைத்தாகக் கொண்டாலும்;

கலம் கவிழ் உண்மை தெளி மீகான ஒளித்து பொய்த்தாங்கு = அணித்தாக மரக்கலம் கவிழப்போகும் உண்மையை அறிந்த மீகாமனானவன் (அவவுண்மை தன்மருங்குள்ள பிறர்க்குச் சொல்வதாற் பயனில்லை யெனக்கருதி மறைத்துப்) பொய்மை செய்தாற்போல;

"ஒளித்து" என்றமையானே மீகாமன் கலங்கவிழாதிருத்தற் பொருட்டுப் பலபடியும் முயன்றான் என்பது போதரும். காற்றடித்தல் கலம் யுருதியாக அசைதல் முதலாய பிறநிகழ்ச்சிகளான் ஐயமுற்று ஆண்டிருந்த பிறா மீகாமனைப் பலபடியுங் கலங்கவிழ்தலுங் கூடுங்கொல்லோ என்று வற்புறுத்திக்கேட்டும் ஒளித்துவிட்டான் எனபதுபோதா ஒளித்தனன் என்றொழியாது "ஒளித்துப் பொய்த்தாங்கு" என்றிட்டார் இந்நூலாசிரியர் என்க.

அறம் செய் ஒரு மகன் துறக்கம் அணைகுறூஉம் = (பலரும் நன்மை பெற்று வாழ்தற்குக் காரணமாகிய) அறச்செல்வத்தினைச் செய்துகொண்ட ஒப்பற்ற மகன் மறுமையிலே சுவர்க்க முதலாய செல்வங்களை அநுபவிக்கும் வண்ணம அடைவான் என்றும்;

துறக்கம் அணைகுறூஉம் என்றமைக் கேற்ப அறம் என்றதனைக் காமியபலனுக் குரிமையாக்குக. நரகம் என்றதற்கும் இஃதொக்கும். காமிய நிட்காமிய கரும விபாரங்களைப் பகவற்கீதை முதலாய நூல்களிற் கணடுகொள்க.

மறம் செய் ஒரு மகன் நரகம் அணைகுறூஉம் = (அறத்திற்கு மாறாய) மறத்தினைச் செய்து கொண்ட ஒருமகன் மறுமையிலே நரகத்தை அடைவான் என்றும்;

அறம் என்பது தத்தம் வருணத்திற்கும், ஆச்சிரமத்திற்கும், சமயத்திற்கும், காலதேச வர்த்தமானத்திற்கும் தக்காங்கு நடத்தற்குரிய விதிகளை. மக்கள் ஒன்றுற்று வேண்டிய ஆற்றி

உடலைப் போற்றிக்கோடலே பெரும்பாலும் அறம் எனப்படும். ஏழைமுதலாய பலர்க்கும் உதவிடின் நன்றியறிந்த அவரெல்லாம் இவனது மேம்பாடு கருதித் தாமே இவனது சேமங் காரணமாக முயலுவர் என்பதும் பிறவும் அறியத்தக்கன. ஊருணிநீர் குறைதற்கு விடாது வருதல் போல இவன்றிருவுங் கெடாது வளர்தற்குப் பலரும் முயல்வர் என்ப. "வித்துமிடல் வேண்டுங்கொல்லோ விருந்தோம்பி மிச்சின் மிசைவான் புலம்" என்ற குறளுக்குத் தன்னை நோக்கி வருவார்க்கெல்லாம் முகமலர்ச்சியுடையனாய்ப் படிறிலவாய் அன்புகலந்த இன்சொற்களைக்கூறி விருந்தோம்பி மிச்சின் மிசைவானாயின் அவற்கு உலகம் வசப்படும். அத்தகைய அப்பெரியோன் தனது வயலில் வித்திடாதிருப்பினும் அதனை யுணர்ந்தார் பலரும் இவன் வயல் விதைக்கப்படாவிடின் ஊரவர் வயிறெல்லாம் சோறின்றி வாடுமென்று கவற்சி பெரிதுடையராகித் தாமாகவே விதைத்துக் காத்துப் பயன்பெறச் செய்வரென்று எனது இன்னுயிர்ப்பாவலர் கூறிய உரையானே அறத்தினையும் அதன்பயனையும் நன்கறியத்தகும்.

மறம் என்பது தனக்கும் பிறர்க்கும் பயன்படாத விலக்குகளை. இதனையும் அவ்வாறே விரித்துரைத்துக்கொள்க. "அறந்தரு சால்பு மறந்தரு துன்பமும்" என்றது ஈண்டு ஆராயத் தக்கது.

[எல்லாச் செல்வமு மிம்பர்வந் தெய்து முன்னோன்] முன்னோன எல்லாம் செல்வமும் இம்பர் வந்து எய்தும் = முதற்கட் கூறப்பட்டவனாகிய அறத்தினை இயற்றினோன செல்வங்களை வேண்டியவாறே நுகர்ந்து முடிந்தபின்னாப் பூவுலகிற்பிறந்து ஏற்றபெற்றி எல்லாவகையாகிய செல்வங்களையும்பெற்று விளங்குவான் என்றும்;

பின்னோன் அவை அல பிறவே குறுகுறூஉம் என்றும் = பின்னர்க் கூறப்பட்டவனாகிய மறஞ்செய்து நரகத்தை அடைந்து வருந்திய அம்மகன் நன்மை பயக்கும் செல்வமல்லாத தீமை பயப்பனவாம் மிடி, பிணி முதலாயவற்றை ஏற்றபெற்றி இவ்வுலகில் வந்து நுகருவான் என்றும்;

நல்வினை தீவினைகளைச் செய்தார்க்குரிய மறுமைப் பயன்களையும், மறுபிறப்புக்களையும், மநுஸ்மிருதி முதலாய நூல்களுட் கண்டுதெளிக. சிலப்பதிகாரத்திற் கட்டுரைகாதையானும், மணிமேகலையிற் பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை முதலியவற்றானும் நல்வினை தீவினைகளுக்கேற்ற பிறவிகள் இவையெனப் பெறப்படும் என்பது அறியற்பாலது.

கொள்பவை நனியே பெரிய எனினும் = அடையக்கூடியவை (இருந்தவற்றினும் மேம்பாடு முதலியவற்றானும் பிறவாற்றானும்) மிகப்பெருமை வாய்ந்தனவாய் இருப்பினும்;

[பிரிதற் குள்ளன வுருத மனத்தினுயர்ந்தோர்] உள்ளன பிரிதற்கு உருகு மனத்தின் உயர்ந்தோர் = உள்ளனவற்றைப் பிரிதற்கு நெஞ்சமுருகின்ற பெரியோர்;

உள்ளவற்றைப் பிரிதற்குருகும் இயல்பு உலகிற் பிரத்தியக்கமானது. தமக்குரிய குழவி கரியதாய் அழகற்றிருப்பினும் அதனைக் கொடுத்துப் பதிலாகச் சிறந்த மற்றொரு குழவியைக் கொள்வதற்கு உலகத்தார் உடன்படார். என்னின, இழிந்த குழவி இறந்தஞான்றே சிறந்த குழவி ஒன்றனைப் பெற்றாரேனும் திருத்தியுறாமல் அவ்விழிந்த குழவியையே நினைந்து வருந்தல் மக்கள் இயற்கை என்பது தானே போதரும். இனி அறமுதலாயவற்றை இயற்றிய ஒருமகன் மறுமையிலே துறக்கமுதலாய செல்வங்களை நுகர்ந்து இம்பர் வந்து மேம்படப் பிறப்பானாயினும் தனது உடலை நீத்தற்கே உருகி அவற்றையெல்லாம் ஒரு பொருட்படுத்தாது வருந்துவான்.

தம அறி வடிவம் பற்று அறு வகைத்து அறம் போற்றின் = தங்களுடைய அழிகின்ற வடிவங்களிலே அமைந்த பற்றினை அறுக்கும் வகையினதாகிய அறத்தினை அன்னார் போற்றி வந்தாராமாயின்;

தீது ஒரீஇ தெளி நலம் சேர்குவர் என்றும் = தமக்கமைந்த குற்றங்களை நீக்கித் தெளிந்த நன்மையை அவர் பெறுவர்என்றும்; (கூறுமுகத்தானே;)

துறக்கவின்பம், மறுபிறப்பு முதலியனவற்றை வேட்டுத் தமது அழிவை அகற்றினாரேனும் அவர் உண்மையறியாமல் மயங்கியவராதலிற் சூழ்ந்தவர் என்றும், மரணதுக்கத்திற்றும்

காரணமாகியது உடற்பற்றுதலின் அதனை ஒழிக்க முன்வந்தவரே அறிவான் உயர்ந்தவர் என்றும் தெளிந்துகொள்க.

சாதல் துன்போடு அகம் வழு தபுத்து = இறத்தற்காக நினைந்துவருந்தும் துயரோடு மனக் கசடுகளையும் நீக்கி;

[நீதிமுறை நன்குநீஇ] நன்கு நீதிமுறை உறீஇ = நன்றாக நியாயவகைகளை அனுசரித்து;

நிலன் வாழ்வு கருதி = நிலத்தின்கண்ணே அவரெல்லாம் வாழ்ந்துவருதலைக் கருதி;

மரணம் காரணமாகத்தான் அறனும் பயனும் வாய்ந்தன என்பது "இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கும்—மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ" என்னும் பகுதியால் அறியத்தக்கது. "உருளு நேமியு மொண்கவ ரெஃகமும்—மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்—தெருளு நல்லற மும்மனச் செம்மையும்—அருளு நீத்தபின் னுவதுண் டாகுமோ" என்னு மிதனுனே அறத்தின் இன்றியமையாமை முதலியன நன்கு புலப்படும்.

இனி அகவழுத் தபுத்தல் எங்ஙனமெனிற கூறுதும். ஒருவர்க்கு மற்றொருவர் உள்ளக்கிடையைக் காண்டல் இயலாது. நெறியாளர் முன்னிலையிலே வாய்வழி வழங்குஞ் சொற்கு மாறாக நெஞ்சத்தின் கண் நினைத்தலுங்கூடும். அதுகொண்டு புறத்தொழுக்கமே யாண்டுந் தலைப்படும். அகத்தொழுக்கமில்லாத புறத்தொழுக்கத்தானே உலகம் இழுக்கப்பட்டுக் கெடும். அறக்கமுதலாய செல்வங்களையும் பிறவற்றையும் நியமித்த கடவுள் உள்ளும் புறமும் அறிந்தாளும் ஆற்றல்சான்றவர் ஆகலின் அவர்க்கஞ்சியேனும் நாளடைவில் அகத்தழுக்கு நீங்கப்பெறுவர் என்பதாம். இதுகருதியே "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட—" என்று பெரியாரும் அநுபவ மாத்திரையிற் கண்டவாறே உரைத்திட்டார்.

[இவ் வோதினர் பொய்மையென் றுரைப்பினும்] இ பொய்மை ஓதினர் என்று உரைப்பினும் = இவ்வகையாகிய பொய்யை (நான்முகத்தானும் பிறமுகத்தானும் சான்றோரா) உரைத்தனர் என்று (அந்த நாத்திக வாதம் புரிவாராமாட்டு அவர்க்கேற்குமாறு) சொன்னாலும்;

நலனே ஒன்றலின் = (உலக வளர்ச்சியும் மரணபய நிவர்த்தியும் என்றற்றொடக்கத்தன வாய) நன்மைகள் வந்து பொருந்துதலினுனே;

அ பொருள் உண்டு என உணரார் = (இன்மையே உண்மையாக இருப்பினும் அதனையே உண்மையென்று கருதாவிடில் துன்பம் பயக்கவல்லு) அந்தக் கடவுள் உண்டென்றுணராதார்;

நன்றி தரும் பல் பல நலன் எல்லாம் இழந்தே = (இருமைக்கும் காரணமாகிய) நன்மையைத் தருகின்ற பலப்பலவாகிய சுபகாரியங்களையெல்லாம் ஒருங்கே இழந்து;

என்றும் துன்பு உற்று இனைகுவர் = எக்காலத்தும் துன்பத்தினை அடைந்து வருந்துவார்கள்;

மக்கள் செல்வம் முதலிய பேறுகளையும், பெண் விழைச்சு முதலாய நுகர்வுகளையும், விழா முதலிய காட்சிகளையும் பெற்றாலும் தமக்கு நேர்ந்த அழிவினையும், ஆதரவின்மையையும் நினைந்து நினைந்து வருந்துவர் என்பது தோன்ற "என்றுந் துன்புற் றினைகுவர்" எனறார். மேலும், புண்ணிய பாவங்கள், துறக்க நரகங்கள், மறுபிறப் பாதிய இல்லாவிடின் ஒருவா மற்றொருவர்க்கு அடங்காமல் வேண்டியவாறே பலப்பல தீவினைகளை இயற்றி உலகினைக்கெடுத்துத் தாமுங் கெடுவர் என்க.

இப்பாட்டு பிறர்தம் மதமேற் கொண்டு களைதல் என்னும் மதம்பற்றி வந்தது.

கலம் கவிழப் போதலை மீகாமன் ஒளித்துவைத்து ஆண்டுள்ளாரை மரணபயத்தினின்றும் நீக்கியவாறுபோலச் சான்றோரும் துறக்கமுதலாயவற்றைக்காட்டி மரணபயம் முதலாயவற்றை நீக்கிவிட்டார் என்க.

[இப்பாட்டிடைப் பொதிந்த பொருள் விளக்கம்]

கடவுள் இல்லையெனின் துறக்க நரகங்களும் வீடுபேறும் பிறவும் இல்லையாய்விடும். [illegible] இறவுபூண்ட உயிர்களெல்லாம் தங்கள் தங்கள் சரீரங்களும் உணைப்பொருள்களும் நிலை

யற்றனவென்றும், இறந்துபடிற் பின்னர் ஒன்றுமில்லையென்றும், ஆதலின் நன்மைபுரிந்தா லென் தீமைபுரிந்தாலென் வாழ்ந்தாலென் மடிந்தாலென் என்றும் இன்னவகையாகப் பலப்பல கருதிக்கொண்டு உள்ள இன்பங்களையும் நுகாதற்கு ஒருப்படார். உலகமெல்லாம் தமொற்ற முற்றுத் தத்தளிக்கும்.

கடவுள் உண்டெனில் சிற்றறிவாளிகள் துறக்கமுதலாய பேறுகளையும் மறுபிறப்புக் களையும் பேரறிவாளிகள் உடலப்பற்றினையொருவி வீடுபேற்றினையே நச்சி மரணபயத்தி னின்றும் நீங்கி இன்புறுவர்.

"எனபினை நரம்பிற் பின்னிக் குடாவழும் பிறைச்சி மெத்திப்–புண்புழுப் பொதுந்து செர்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்–துன்பமோ யெவற்றினுக்கு முறையுளாய்ப் புறந்தோன் மூடும்–வன்புலை யுடம்பே யாவி வருதநிடும் பிணிவே றில்லை" (காஞ்சிப்புராணம்) எனவும, "புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது" (மணிமேகலை) எனவும், காண்டலளவையானும் பிற வாற்றானும் றனிதநுணர்ந்து மயிர் வளர்த்து அணிவிலக்கி உண்டிசுருககி அவாவொறுக்கி வரு தலினானே வெறுக்கப்பட்ட உடலம் நீஙகுவதற்கு வருந்தார என்பது வெளிப்படை.

இனி நாத்திகர்கூற்றே உண்மையாகவிருப்பினும் அதனானே மரணபயமும் உலகநாசமும் எய்துதலின் அவர் கொள்கை மிகவும் இழிவுடைத்தென்பதும், ஆததிகர் கூற்றே பொய்மையாக விருப்பினும் அதனானே மரணவத்தையும் உலகவழிவும் நீங்கப்பெறுதலின் அன்னார் கொள்கை மிகவும் உயர்வுடைத்தென்பதும் ஆராயற்பாலன.

"பொய்யாமை பொயயாமை யாற்றி னறம்பிற–செய்யாமை செய்யாமை நன்று" எனவும், "பொய்மையே பாவமெல்லாம் விளைதரு பூமியாகும்" எனவும், "பொய்யுளான் மறந்தோர் பொய்மை புகலினும பொய்மையாகும்" எனவும், "புண்ணிய மனைத்துஞ் சோப் பொய்மையாற் பொன்று மன்றே" எனவும், "வையக மெல்லாம் பெறினு முரையற்க–பொய்யோ டிடை மிடைநத சொல்" எனவும் பிறவாறும் கூறுபவாகலின் பொய்கூறலாகாதெனின் அற்றன்று, கள்வரான் அலைப்புற்ற பெண்பேதை ஒருத்தி அவர்கள் அறியாவண்ணம் ஒருவனைச் சரண புகுந்தாள். அவள் இருந்தவிடத்தை அககளவர் அணுகி ஈண்டு ஒருமகள் வந்தனளாவென்று அவன் புகுந்து காத்திருந்த இல்லத்தானை வினவவழி அவன் மெய் கூறிற் பெரிதும் ஏதம் விளை யும் எனக்கருதிக கூறிய பொய்யும் பொய்யாகுமா? இதனைக் "கள்வர்க்கஞ்சித் தன்னடிப் புகு நரை–யுண்மைக் கஞ்சி யுறலவர்க் குரைப்பதூஉ–மெய்யே யெனுஅ * * * கொள்ளாதுலகம்" என்றதும், "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த–நன்மை பயக்குமெனின" என்றதும், அக்குறளின் உண்மைப் பொருளைப் பரிமேலழகியார் இதுவே என்றதும், "இம்மையின் விளங்கும் யார்க்கு மவரவ ரியற்கையாலே–மெய்ம்மையே யொருவர்க்குற்ற விபத்தினை மீட்கு மாயிற்–பொய்மையு மெய்ம்மைபோலப் புண்ணியம் பயக்கு மன்றே" என்றதும் அன்னபிறவும் பெரிதும் வற்புறுத்திப் பலப்படுத்தும்.

இங்ஙனம் காட்டியவற்றானே நாத்திகர் கூற்று உண்மையுள்ளதுவாகப் போற்றப்படினும் பயனற்றதாகலிற் பொய்மைத்தெனவும் ஆத்திகர் கூற்று பொய்யுற்றதுவாகத் தூற்றப்படினும் தப்பாது பெரும்பயன் விளைத்தலின் அஃது உண்மைத்தன்மைத்து எனவும் விளக்கப்பட்டன.

---

## (28) இன்பமுந் துன்பமு மெமக்கின் றென்றல்.

மனைநிலை யிருத்தலும் வளம்பல பெருக்கலுந்
தானின் றமையா தலகெனக் கொளீஇ
மயிற்குர லெழீஇ நெய்யுரி மரீஇப்
பொறிவழி யீர்க்கும் புனையினை நிரைகால்

வண்டியி னமர்ந்து தெருவிரு மருங்கிற்
கீழ்ச்சாய் சாரற் கிளர்பைம் புல்லெலாந்
தொடர்ந்தப் நாவின் றோற்றம் போன்றும்
புடைநிலை மரமெலாம் போதல் போன்றும
மாரியிற் சேற்றைக் கோடையின் மூடுபனி
நிகர்ப்பப் புழுதியை நீளிடைக் கால்பெயர்த்து
வழிபெறு வோரை வாரித் தெளித்து
வாய்செவி மூக்குவிழி மலியப் புகுத்தியாங்
கேயு முடுக்கையை யெய்யெனக் கெடுத்து
மெலமெலன வசைவுற்றுச சரேலென மன்றே
பல்லாறு போக்கிய பலப்பல பகர்தலும
வென்றனெ னென்று வீறுதலு மந்தோ
தோற்றனெ னென்று துன்புற் றுழிதலு
மறிந்தனெ னென்று மறிந்திலெ னென்று
மின்ப துன்பத் திடைப்பட் டுழல்வதா
னென்னும பயக்கா திதையுவ பொன்று
பொன்னிகர் சான்றோர் புகல்பலர் போயுங்
கருப்பே பிணியே கடும்பெருஞ் செருவே
யென்றிவை யளப்பில விம்பர்முற் றுழிதது
மெனனு கியதே யென்னு கியதே
ஆதலின,
இன்றே னன்ன வியற்கையறி கில்லா
வின்னு மனமே பலசுமந் திணைகுதி
நின்னு வுலகி னிலைப்பு மழிப்புந
துன்னு துண்மை பொய்யுரை யன்றே
நீயழிந தககா னிலவுநர்
போயழிந தொழிதவர் புதுமைமிக வுடைத்தே.

---

(இ—ள்.) மனம் நிலை மிகுத்தலும் = (விடயங்களிலே புலன்களை இயல்பாகச் செலுத்தி வருகின்ற) மனசின் நிலைமையை மிகும்படி செய்தலும்;

கிடைக்கப்பெற்றவைகளை அமைவுறத் திருத்திக்கொண்டு போற்றிவராமல் இல்லாதன வற்றை விழைந்து வருதலே மனநிலை மிகுதலின் பயன் எ-க. "மனமொருத்தன் வசப்படு மேலவன்—பினைவருத்தும் பிறப்பை யடைந்திடான்" என்பது பிரபுலிங்கலீலை; "எல்லாமும் வல்லசித்த மனமாயை யேழையா மென்னு லடக்க வசமோ" என்றும், "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்றுந் தாயுமானவர் பல்லாறு புலம்புவர்.

வளம்பல பெருக்கலும் = வளங்கள் பலவற்றை அதிகரிக்கச் செய்தலும்;

[illegible]ய இல்லத்தை, நிலத்தை, ஆடையை, அணியை, அன்னபிறவற்றை முன்னிலை [illegible] அதிகப்படுத்தல்.

[தானின் றமையா துலகெனக் கொளீஇ] உலகு தான் இன்று அமையாது என கொளீஇ=உலகம் நடைபெறுவது தன்னை யின்றி அமையாதென நினைந்துகொண்டு;

"தம்மின் றமையா நந்நயந் தருளி" என்பது கபிலர்பாட்டு. தான் என்னும் கர்வம் படைத்தவனே தன்னையின்றி உலகம் நடவாதெனக் கருதிக்கொண்டு பற்பல முயல்வான் என்பது போதர உலகு தானின்றி யமையா தெனக்கொளீஇ என்னாது "தானின் றமையா துலகு" எனக் கூறினர். அத்தகைய இன்றியமையாமை இவனைப் பொறுத்திருக்குமாயின் இறைவனும் இவனுக்குப் பலவளனும், பிறாமனம் வணங்காதிருந்துகோடும் பெற்றியும், நினைத்தவற்றை யெல்லாம் இனிது முடித்துக்கோடும் ஆற்றலும், அழியாது நீடித்துப்பெருகும் ஆயுளும் அன்ன பிறவும் கொடுத்திருப்பன் என்க. மேற்கூறியவாறு கொள்ளுதலை விபரீதஞானமென்ப. தான்வந்து பிறந்த கடமைக்கியன்ற தன்மையைப் புரிதலே அறமெனக்கோடல் பொருந்தும். மேற்கூறிய விபரீதஞானம் எத்துணை வனப்பு, கொள்கை, பொருத்தம், பயன், அளவைமுறை முதலிய வற்றான் மறுக்கப்படினும் நீட்சியுற்றுவருமேயன்றிக் குறைவுபடா தென்பது தோன்றக் "கொளீஇ" எனறளபெடுத்து. எல்லாவற்றிற்குங் காரணம் மனமாதலின் "மனம் என்றும், அம்மனசின் னிலைமையானே பெறற்பாலன பலவாதலின் "பல" என்றும, அப்பலவுந் தனக்குண் மையற்றனவாகத் தோற்றப்பெறாமல் வளனுடையனவாகவே தோற்றும் என்பதுபோதர "வளம்" என்றும், வளமுடையனவாகத் தோற்றியவற்றை மிகும்படி செய்தல் வழக்கமாதலின் "பெருக்கலும்" என்றும், இவையெல்லாம் நான் எனது என்னும் எண்ணமேலீட்டினானே வரப் பெறும் என்பது தோன்றத் "தான்" என்றும், இவ்வெண்ணமேலிட்டவரே தம்மொடு அமையாமல் உலகத்திற்குந் தம்மையின்றியமையாதவராய்க் கருதிக்கொண்டு வருவராதலின் "இன்றி யமையா துலகெனக் கொளீஇ" என்றும் கூறினார். பிற்கூறப்பட்டவைக்கேற்ப "மனநிலை என்றதற்கு அங்ஙனம் பொருளுரைக்கப்பட்டது.

நெய் எரி மரீஇ=ஒருவகையாய நெய்யோடு மற்றொருவகையாய நெய் சேர்தலினானே நெருப்புப்பொருந்தி;

"எரிமரீஇ" என்னும் இலேசினானே அம்மருவுதற்குப் பிறிதொரு நெய்யுமுண்டென்பது பெறப்படுதலின் நெய் என்றதற்கு அங்ஙனம் பொருளுரைத்தாம. இருவகைநெய்யும் தம்மிற் கலந்தவுடனே நெருப்பு மருவும செயலின்வியப்பினையும் மருவியநெருப்பு அத்துணைப் பெரிய தொருவண்டியை வாயுவேகம்போல இழுத்துச்செல்லும் ஆற்றலையும் புலப்படுத்த "மரீஇ" என்றளபெடுத்தது.

பொறி வழி ஈர்க்கும் புனை இணை நிரை கால்=இயந்திரத்தின் வழியாக இழுத்துச்செல் லும்படி அலங்கரித்து இவ்விரண்டாக வரிசையுற அமைக்கப்பட்ட சக்கரங்களையுடைய;

வண்டியில் அமர்ந்து வண்டியிலே உட்கார்ந்து;

வண்டி—வண்டில் எனவும், பண்டி எனவும் வழங்கப்படும, அங்ஙனம் குறிக்கப்பட்டது "மோற்றக்கார்" எனப்படும் இயந்திரவண்டில்.

மயில் குரல் எழீஇ=மயிற் குரல்போலும் ஒருவகை ஒலியை (த் தன்வரவை எதிர்வருவார் உணர்ந்துகொண்டு விலகி வழிவிடும் பொருட்டு) எழுப்பி;

அவ்வண்டி வருதலை வழிப்போக்கர்க்குப் புலப்படுத்துவதற்காக அடிக்கொருமுறை ஒலி யெழுப்பவேண்டிய கடமையைக் குறிப்பிட "எழீஇ" என்றளபெடுத்தது. இதனானன்றே வண் டியை வருணிக்கப்புக்கவர் மயிற்குரலென அதற்கொரு பெயருமிட்டார். அன்றியும் அவ் வொலிக்கு ஒருவமை கிடைத்ததுவே என்னும் மகிழ்ச்சியைப் புலப்படுத்தல் வேண்டி அங்ஙனம் கூறினருமாம். முற்காலத்திலே மணி, சதங்கை எனனுமிவற்றை வண்டிமாடுகளுக்குப் புனைந் தமையும் இதுகருதியே என்க. உருவாரை நோக்கி நோக்கி ஒலித்தற்கு ஒருவேளையேனும் இய லாது போகாவண்ணம் அவற்றோடு அவற்றைப்புனைந்துவிட்டனர் போலும். "படுமணியிரட்ட" என்பதுபாட்டு,

[தெருவிரு மருங்கிற் கீழ்ச்சாய் சாரல்] தெரு கீழ் சாய் சாரல் இருமருங்கின்=வீதியின் அடிப்புறஞ் சரிந்த சாரலாகிய இரண்டு பக்கங்களினும்;

பைம்புல்லின் வளங்கூறுவான் எடுத்துக்கொண்டார் ஆதலின் அப்புல் வளருமிடமாகிய தெருவின் இருமருங்குகளையும் முதற்கட் கூறினர். மழைநீர் முதலியன தெருவிடைநின்றடைத்துச் சேதஞ்செய்யாமல் வடிந்தகல்வதற்காக மருங்குகள் சரிவாக அமைக்கப்படல் வழக்காதலின் "இழிச்சாய் சாரல்" என்றார்.

கிளர் பைம் புல் எ(ல்)லாம் = விளங்குகின்ற பசிய புற்களெல்லாம்;

இதனன் மழைவளப்பம் கூறப்பட்டது. தெருமருங்குச் சாரல்கள் உடைந்தழியாதிருக்கும்வண்ணம் புற்கற்றைகளைப் பதியப் பரப்பிப் பாதுகாத்து வருவர்.

தொடர் செய் நூலின் தோற்றம் போன்றும் = செய்தற்பொருட்டுத் தொடர்ச்சியாக யாக்கப்பெற்ற நூலைப் போலவும்;

பைம்புல் என்றதைக்கேற்பப் பசிய நூலெனவும் பொருள்கொள்க. தறியிலே நெடிதாக யாக்கப்பட்ட பசிய நூலின் தோற்றத்தை அச்சாரற் புற்கள் கொண்டிருந்தன என்க. இதனல் வண்டிசெல்லும் விரைவின் மிகுதி குறிக்கப்பட்டது.

புடை நிலை மரன் எ(ல்)லாம் போதல் போன்றும் = பக்கங்களிலே நிலைமைபெற்ற மரங்களெல்லாம் (தந்தம் நிலைபெயர்ந்து விரைந்து) செல்லுதல் போலவும்;

புல்லணி நூலாதலும், மரவணி நிலைபெயர்ந்தோடலும் அசம்பாவிதமாதலின் இரண்டிடத்தும் "போன்றும" எனக் கூறினர். இவ்விலேசினனே வண்டியோடாது நிலைத்தமை போன்றிருத்தலும் கொள்ளப்படும்.

[மாரியிற் சேற்றைக் கோடையின் மூடுபனி—நிகாப்பப் புழுதியை நீளிடைக் கால் பெயர்த்து—வழியெதிர் வோரை வாரித் தெளித்து]

நீள் இடை கால் பெயர்த்து = நீண்டவழியிலே காலால் நடந்து;

வருவோர் என்னது "கால்பெயர்த்து" எனவிசித்தது ஊர்திகளில் வருபவரை நீக்கற்பொருட்டு. நீண்டு நடந்து வந்தமையென்பது தோன்றவும், தெருவினீட்சியும் பிறவுந் தோன்றவும் "நீளிடை" என்றார்.

வழி எதிர்வோரை வண்டிசெல்லும் பாதைக்கெதிரே குறுகுவோர்க்கு;

"எதிர்வோரை" உருபுமயக்கம், "அவரைக் காட்டு" என்றாங்கு.

மாரியில் சேற்றை மழைக்காலத்திலே சேற்றினையும்;

கோடையில் மூடுபனி நிகாப்ப புழுதியை = (விரைந்து செல்லும் வண்டியினல் எழுப்பப் பெற்று) மூடுபனியைப்போன்று அடர்ந்து விளங்கும் புழுதியினையும்;

வாரி தெளித்து = மிகுதியாகத் தூவி;

அள்ளி இறைத்துமாம்; தெளித்தலின் சிறப்புத்தோன்ற "வாரி" என்றார். திரண்டெழும்பு தூளியின் அடர்த்தி தோன்ற மூடுபனிக் கொப்பிட்டார்.

வாய் செவி மூக்கு விழி மலிய புகுததி = வாயே, செவியே, மூக்கே, விழியே என்னுமிவற்றிலே நிறையும்படி புகுத்தலினனே;

புகுத்த எனத்திரிக்க. அவற்றின் இயற்கையானன்றி வண்டியோடுஞ் செயற்கையால் அங்ஙனமாகும் என்பது தோனறப் "புக" என்னது "புகுத்தி" என்றும், அவவாறு புகுத்தப்பட்டதா உணர்வதற்குள் வண்டி ஓடிவிடும் எனபது தோனற "ஆங்கு" என்றும் கூறினர். பெருந்தூளி புக்கு நிறைதல் தூளிக்கு எளிதாகலின் முன்னர் வாயையும், அடுப்பச் செவியையும், பின்னர் மூக்கையும் விழியையும் முறையுற வரிசைப்படுத்திக் கூறினர். (இப்பெற்றி கருதிக் கவியிசைத்துச் சொற்றனரோவென்னில் அற்றன்று, இயற்கைப் புலவர்க்கு இன்னபலவுந் தாமே வந்தமையுமென்க) இத்தகைய வண்டியிலிவர்ந்து செல்வோரால் விளையுந் தீங்கிற் கோரளவேயில்லையென்க.)

ஏயும் உடுக்கையை எய்-என கெடுத்தும் = வழிப்போவார் தமக்குப் பொருந்திய ஆடையை அவர் தம்மெனவெகுண்டு கூறுமாறு பழுது படுத்தியும்;

"எய்யென வெழுபகை" என்பது கம்பராமாயணம். மாற்றுடை இல்லை என்பது தோன்ற "வயுமுடுக்கை" என்றார்.

மெல் என அசைவு உற்று = (சுற்று வளையங்களாயினும் காற்றாயினும் அகத்தே அடைக்கப் பெற்ற மெத்தைகளிடப் பெற்றமையானே உட்கார்ந்திருப்பவர்க்கு அசைதலினால் நிகழுந் துன்பம் தோன்றா திருப்ப) மெல்லென்றசையுமாறு செய்வித்து;

சரேல் என பல் ஆறு போகி (உள்ளிருப்பார் அவ்வண்டியைச்) சரேல் என்னும் ஒலியுண்டாகும்படி விரைவாகச் செலுத்துதலினாலே பலவழிகளையுங் கடந்து; (ஒரூரை யடைந்து;)

"பல்லாறு" என்பதனால் நீளிடை என்பது பெற்றாம். "நீளிடைக் கால் பெயர்த்து" எனபதனையும் நோக்குக.

பல பல பகாதலும் = (இன்றியமையாக் காரியம் இவ்விவையாகுமென்று அங்குள்ளார்க் குப்) பலப்பலவாகப் (புனைந்து) கூறுதலும்;

வென்றனெம் என்று வீறுதலும் = (அக்கூறியவற்றாலும் பிறவற்றாலும் யாம் இது பொழுது) வென்றுவிட்டோமென்று பெருமிதங்கொள்ளுதலும்;

இவரை அற்பசந்தோஷிகள் என்ப.

அந்தோ தோற்றனெம் என்று துன்பு உற்று ஒழிதலும் = ஐயகோ (இவ்வாறு செய்யப் பெறுமையானே இவ்விவற்றைத்) தோற்றுவிட்டோமே என்று துன்பம்பொருந்தி மனமழிந்து கெடுதலும்;

அறிந்தனெம் என்றும் = யாம் இதனை அறிந்துவிட்டோமென்று தற்பெருமைகொண்டும்;

அறிந்திலெம் என்றும் = யாம் இதனை அறியாதுவிட்டோமே என்று கவற்சியுற்றும்;

இன்பம் துன்பத்து இடை பட்டு உழல்வதான் = இன்பதுன்பங்களின் இடையிலே சிக்கி (முறையே மகிழ்ச்சியையும் வெறுப்பையும் அனுபவித்துச்) சுழல்வதான்;

இவற்றிடைச் சிககாதவரே உழலாமல் மனச்சலனமற்றிருப்பவர் என்க.

"இன்பம்வந் துற்றபோது மெதிர்மறை யுற்றபோது—முன்புட லுறுமூ ழென்றே விருப்புறா முனிவுஞ் செய்யா—ரன்புசிற் றுயிரகத்து மமைதருவாழ் கின்ற நீரார்" என்பது மாயூரப் புராணம்; "அம்புயத்தின்—பற்றிலா ததுபோற் பற்றிலார் பரமயோ கிகளே" என்பது மெய்ம் மொழி; "எய்தாத வேண்டா ரிரங்கா ரிழிந்ததற்குக்—கைவாரா வந்த விடுக்கண் மனமழுங்கார்—மெய்யாய காட்சி யவர்" என்பது கோவை; "இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழிச்—செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே" என்பது தாயுமானவா பாடல்; இவற்றையும் இன்ன பிறவற்றையும் விரித்துரைத்துக்கொள்க.

என்னும் பயக்காது = ஒரு சிறிது நன்மையுந் கொடுக்கமாட்டாது;

இயைந்த வொன்று = (முன்னர்ச் செய்த வினைவயத்தால்) வரக்கடவன வருதலிற் குறைவுபடா;

உறற்பால தாமேயுறும் என்றபடி. "திருவுறு கின்றுழி மகிழ்ந்து தீர்வுழிப்—பருவரலெய்தியும் பாசந் தன்னிடை—யரிதுணர் கேள்விய ரழுங்கு வார்கொலோ—வருவது வருமது மறுகக வாகுமோ" என்பது கந்தபுராணம்; "துன்பமு மின்பந் தானுந் தொல்வினைத் தொடர்ச்சி யென்பார்" என்பது பிரமோத்தரகாண்டம்; "நன்மையுந் தின்மையும் பங்கயத்தோ—னெழுதாப் படிவரு மோசலி யாதிரென் னேழைநெஞ்சே" என்பர் பட்டினத்தடிகள்.

பொன் நிகர் சான்றோர் (என) புகல் பலா போயும் = பொன்னையொத்த சான்றோர் என்று புகழ்ந்துரைக்கப்பட்ட பலரும் இவ்வுலகத்தைவிட்டு அகன்றும்;

சான்றோர் என்பார் அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, பொறுமை என்னும் எழுவகைப் பெற்றிவாய்ந்த அறிவுடைப் பெரியோர் என்க. அவர் சங்கராசாரியர், [illegible]த்துவாசாரியர், இராமாநுசர், நீலகண்டாசிரியர் முதலியோரும் அவர்போன்றாருமாம். [illegible] [illegible]ிற் சிறந்து தலையெய்தி நிற்பது பொன்னாதலிற் "பொன்னே[illegible]" [illegible]

"பொன்னிகர் சான்றோர்" என்பதற்கும் பொருள்கொள்க. இதனாற் காப்பவர்தம் அகற்சி கூறப்பட்டது.

கருப்பே பிணியே கடும் பெரும் செருவே=வற்கடமே, நோயே, கடிய பெரிய போரே;

என்று இவை அளப்பில=என்று கூறப்பட்ட இவைதாம் கணக்கற்றனவாகி;

இம்பர் முற்று ஒழித்தும்=இவ்வுலகத்துச் சீவராசிகளையும் அச்சீவராசிகளின் வாழ்விற் கினறியமையாதவற்றையும் அறவே கெடுத்தும்;

இதனான் அழிப்பின் மிகுதி கூறப்பட்டது. பஞ்சம் முதலியவற்றோடு பூகம்பம், எரிமலைக்கொதிப்பு, கடற்பெருக்கு முதலியனவும் கொள்ளப்படும்.

என் ஆகியது என் ஆகியது=யாது தான் உண்டாயிற்று, யாது தான் உண்டாயிற்று;

அடுக்கு உலகத்தி னுண்மையை வற்புறுத்தற்கண் வந்தது.

ஆதலின்=அது காரணத்தானே;

இன்(ன) ஓர் அன்ன இயற்கை அறிகில்லா இன்னு மனனே=இதனையொத்த இயல்புகளை அறியமாட்டாத துன்பத்தைக்கொண்ட மனனே;

உலகத்தியற்கையை எவ்வழியானும் எவரேனும் மாற்றுதல் கூடாத காரியம் என்னு முண்மையைத் தெளிந்து கொள்ளாமல் உலகம் கெட்டுவிட்டதாகவும், அதனைத் தான்றான் றிருத்தல்வேண்டும் எனவும் சங்கற்பித்துக்கொண்டு மனவருத்தமுறுதலைப் பிரமாணமுகத்தான் அகற்றுவாராயினார் என்க.

பல சுமந்து இனைகுதி=உனக்குத் தகாத பலவற்றையும் வாளா சுமந்துகொண்டு (அவற்றை யெல்லாம் ஆற்றும் வாயிலை அறியாமல்) கலங்குகின்றாய்;

தலையிட்டுப் பொறுப்பெடுத்துக்கொள்ளும் காரியங்கள் அடாதனவாதலின் வாளா சுமந்து என்றாம்.

நின்னால் உலகில் நிலைப்பும் அழிப்பும் துன்னாது=நின்னாலே இவ்வுலகத்தில் ஒன்றனைக் காத்தலும் மற்றொன்றனை அழித்தலும் பொருந்தமாட்டாது;

ஆகியசெய்கை எனவருவித்துக்கொள்க. மனனே நின்னான் ஒன்றனைக் காத்தற் கியலாவிடினும் அழித்தற்காயினும் இயலுமோவெனின் அதுவும் இயலாதென்றபடி.

உண்மை பொய் உரை அன்று=யாம் கூறியது மெய்ம்மையே பொய்வார்த்தை அன்று;

உடம்பாடெதிர்மறைகளானே எடுத்துக்கொண்டதை நிலைநிறுத்தினார் இந்நூலாசிரியர் என்க. "கொன்றவராகவும் கொல்லப்பட்டவராகவும் கருதிக்கொள்பவர் எவரோ அவரே மூடர்கள். என்னையன்றி ஒருதொழிலும் உஞற்றுகின்றார் யாண்டுமிலர்" என(ப் பகவற்கீதையிலே செப்பறிவுகேட்டல் என்னுமதிகாரத்திலே) கூறியதுகொண்டு மேற்கூறியதனை இதுவெனா னன்கறிந்துகொள்க.

நீ அழிந்தக்கால்=நீ நினது வீண்முயற்சிகளைவிட்டு அடங்கியிருந்தால்;

நிலவுநர் போய் அழிந்து ஒழிதவா=இப்பொழுது விளங்கிவருபவர் எல்லாரும் (புராபாரின்றித் தீநெறியிற்) சென்று தன்மை இழந்து (நரகு முதலியவற்றிலே நிலைபெறுதலினானே இங்குவாராமல் ஒழிந்திடுவர்கொல்லோ;

புதுமை மிக உடைத்தே=(இங்ஙனமெல்லாம் அவமே நினைந்துழல்கின்ற நினது செயலைக் கண்ட எமக்கு) ஆச்சிரியம் மிகவுண்டாயிருக்கின்றது;

கூறிய இவற்றாற் பெறக்கிடக்கும் இந்நூலாசிரியர் கொள்கைதான் என்னை, ஊழின் வலிமையான் நடப்பன நடந்தே தீரும் முயற்சிவேண்டாம் என்பதுவோ எனின் அற்றன்று. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று—சூழினும் தான்முந் துறும்" என்றிசைத்த பொய்யாமொழிப்புலவர் "முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை—யின்மை புகுத்தி விடும்" என்றுரைத்து முயற்சியை நனிதூண்டுவதையும், "இசையா தெனினு மியற்றியோ ராற்று லசையாது நிற்பதாம் ஆண்மை" எனவரு நாலடியார் கூற்றையும், அன்னபிற சான்றோர் மொழிகளையும் ஆயு

தறிக. இந்நூலாசிரியர் கருத்து நிறைவேற்றுவதற் கியலாதவற்றில் தலையிடப்படாதென்பதே யாம். அதுபற்றியே "பலசுமந்து" என்பதற்கு "உனக்குத் தகாத பலவற்றையும் வாளா சுமந்து கொண்டு" எனப்பொருள்விரித்தாம். சில சுமத்தல் இயல்பென்பது வெளிப்படை. தாம் வந்து பிறந்தகடமைக்குத் திரிகரண சுத்தமாக இயன்றவற்றைச் செய்துவருதல் வேண்டும். அவற்றிஞ லுண்டாகும பேறிழவுகளை எதிர்கருதல் கூடாது. என்னுமின்னோன்னவற்றையெல்லாம் இத னுட்டெரித்திட்டார் என்ப.

"நெடிது பற்பகல் செல்லினு நிரம்புவ தொன்றை-யிடைவி டாமலே முயன்றுபெற் றிடு கின்ற தியற்கை-யுடல்வ ருந்தியுந் தங்களான் முடிவுறா தொன்றை-முடியு மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே" (என்பது கந்தபுராணம்), "கால மறிந்தாங் கிடமறிந்த செய்வினையின்-மூல மறிந்து விளைவறிந்து-மேலுந்தாஞ்-சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்-தாள்வினை யாளப் படும்" (நீதிநெறிவிளக்கம்), என்பவற்றையும் பிறவற்றையும் கொண்டு முயலற்பாலன வற்றையும் முயலு முறையையும் இவையெனக் கண்டுகொள்க.

---

## (29) அன்பொடெம் மையன் யாரையும் புரத்தலின் வன்புசா தித்தன் மரபோ வென்றல்.

வயிற்றுப்பசி மாற்றி மெய்ந்நலன் வளர்த்த
லயிலுறுத் தன்மை யாதன் மான
வுயிர்ப்பசி பொரீஇ யுயிரை யோம்புதல்
கடவுள் வாழ்த்திற் கண்டமுறை யாகும்
மரபுவழி வந்த வுணவே யவ்வவ
ருடல வளர்ச்சிக் குரியது வாகுங்
கடவுள் வணக்கமக் காட்சியி னமையு
மொருபா லார்மற் றொருபா லார்தம
முணவு முதல வுவர்த்தலிற் கடவுள்
வாழ்த்தையும் வரைகுநர் மற்றிறை யுண்மை
யுடம்பாட் டவரோ டுறழ்தலொன் றின்று
முடம்படா ரன்றே யொன்னா ராவார்
அதா அன்று,
பலகோள் படைத்த பற்பலர் தம்மையுஞ்
செய்ந்நன்றி கொன்ற வில்லையென் போரையு
மறந்தரு சால்பி ஞன்றோர் தம்மையு
மறந்தரு பழிவளர் வன்க ணோரையுங்
காத்தல் புரிதல் கடவுட் கியற்கைநா
மீத்தரு செயல்செய வேட்டன்மட னன்றே
யாதலி னவன்றாட் கடியோந்
தீதறு மவன்செயல் சிதைத்தனல மன்றே,

(இ-ள்.) வயிறு பசி மாற்றி மெய் நலன் வளர்த்தல்=வயிற்றிலே தோன்றுகின்ற பசியை நீக்கி உடம்பினது நன்மையை வளர்ப்பது;

பசியெனப்படுவது உதானவாயுவின் சேட்டையா லுந்தப்பெற்ற உதராக்கினி உணவின் மேற் கொடுகரும் வேட்கையாம். இஃது உயிர்வேதனை பன்னிரண்டனுள் ஒன்றும், கூடற்குற்றம் பதினெட்டனுள் ஒன்றுமாம். பசியென்னாது "வயிற்றுப்பசி" என்றார், "அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல—துய்க்க துவரப் பசித்து" என்பது கருதியும், "உயிர்ப்பசி" எனப் பின்னாக் கூறப்போதல் கருதி அதனினின்றும் பிரித்துக்காட்டற்கு மாகவென்க. "மாற்றி" என்றார, "மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்—ஊறுபா டில்லை யுயிர்க்கு" என்பது கருதி. உடம்பு பெற்றா னெடிதுய்க்கு மாறு அற்றா லளவறிந்துண்க என்னு முண்மைகருதி "மெய்ந் நலன் வளர்த்தல்" என்றார்.

அயில் உணு தன்மை ஆதல் மான=உண்ணும் உணவின் தன்மை ஆவது போல;

செய்கைகளை நல்வழியிலே செய்தற்குப் பொறி முதலியவைகள் இன்றியமையாத் துணைக் காரணமாயிருத்தலே மெய்ந்நலனாகும். சத்துவமுதலிய முக்குணங்களும் பிறவும் உணவின் வழியாய் வருமென்பது பொருளியல் விளக்க நூலுடையார் துணிபென்ப. பதார்த்தகுண சிந்தாமணி முதலிய இக்காலத்து நூல்களுள்ளும் இவ்விஷயத்தை ஒருவாறு அறிதல் சாலும். குணமுதலியவற்றால் விரோதஞ் செய்யும் உணவுகளுமுண்டாதலின் அவற்றையெல்லாம் நீக்கற்பொருட்டு "அயிலுணு" என்றார். காலம், பருவம், நிலைமையாதியவற்றுக்கியைய "அயிலுணு" என்றருமாம். வருணாச்சிரம முதலியவற்றிற்கு இவவிவவுணவே தரும் என்னும் மேலோர் விதிகளும் இது கருதியே என்க.

உயிர் பசி ஒரீஇ உயிரை ஓம்புதல்=உயிருக்கு உளதாகிய பசியை நீக்கி அவ்வுயிரைக் காப்பாற்றுதல்;

உயிர்ப்பசி என்றது உடலோடுறவுபூண்டு அறம், பொருள், இன்பம் என்பவற்றை வேதாகம மிருதிகளின் விதிப்படி இயற்றா தொழியவும், விலக்கியவாறியற்றவும் உண்டாகும் உயிரின் வேட்கையை. பகவற்கீதை மூன்றாம் அத்தியாயம் பத்தாம் சுலோகம் முதலாயவற்றைக் கண்டு தெளிக. உடம்பை வளர்த்தலும் உயிரீடேற்று வினைப்பொருட்டாதல் காண்க. சுவேதாசுவதர உபநிடதம் 4—7 லும் இவ்வுண்மைக் கின்றியமையாதன புலப்படும். [உயிர் உடம்பிலே அகப்பட்டு எளியதன்மைக் குள்ளாகித் துன்புறுகின்றது. எப்பொழுது அவ்வுயிர் இறைவனையும் அவன்றன் ஆற்றலையும் இனிது நோக்குமோ அப்பொழுது துன்பற் றினிமையுறுகின்றது. சுவே—4—7.]

கடவுள் வாழ்த்தில் கண்ட முறை ஆகும்=கடவுளை வணங்கி வருவதால் அமைந்த முறைமையாகும்;

யஞ்ஞம், தானம், தபஸ் என்னுமித்தொடக்கத்தனவற்றை ஈஸ்வரார்ப்பணமாகச் சித்த சுத்திகொண்டு செய்துவருதலே கடவுள்வாழ்தலென்ப. மறைபொதி யுண்மைசான்ற நன்னூல்களை விதிப்படி கற்றுய்ந்து இருளசேர் இருவினையும் விருப்பும் வெறுப்பு மில்லான், பொறிவாயில் ஐந்தவித்தான், அறவாழியந்தணன், அகரவுருவாய உலகத்திற்கு முதற்காரணபகவன் என இறைவனைச் சிந்தைமலர்மிசைச்சேரத் தியானஞ்செய்து வருதலினானே பிறவிப்பிணி தீரப் பெறும். அத்தீர்தலே கடவுள்வாழ்த்திற் கண்டபயனாகும்.

[மரபுவழி வந்த வுணவே யவ்வவ—ருடல வளர்ச்சிக் குரியதுவாகும்] அவ்வவர் மரபு வழி வந்த உணவே (அவ்வவர்) உடலம் வளர்ச்சிக்கு உரியது ஆகும்=அவர் அவர்தம் பாரம்பரிய வழியில் உண்டுவந்த உணவே அவ்வப் பாரம்பரிய வழிவந்தார தங்கள் உடம்பு வளர்தற்கு உரிமையுடைத்தாகும்;

நான்கு வருணத்தார் தங்கள் தொழின் முதலியவற்றிற்கேற்ப உணவுமுதலியன இறைவனாலும் அவனருட்பேற்றோராலும் படைக்கவும் விதிக்கவும் பட்டிருக்கும் உண்மைதோன்ற எண்டெடுத்துக்கூறினார். பிராமண வருணத்தான் பிறவருணத்தாருண்ணும் உணவுப்பொருள்களை உண்டுவருவானாயின் அவ்வருணத்தார்க்குரிய புத்தி முதலியன வரப்பெற்று இழிந்திடுவன்.

இவ்வாறே ஏனையோர்க்குஞ் சொல்க. பிராமண வருணத்தான் அல்லாதான் அப்பிராமண வருணத்தார்க்குரியவற்றை விதிப்படி கைக்கொள்ளின் அவன் மேலாகுங் கொல்லோவெனின், ஆகான். பரதருமாநுஷ்டானத்தால் வருங்கெடுதிகளைப் பகவற்கீதை முதலாய நூல்களிற் பார்க்கக் கண்டுகொள்க. இனி அவ்வப்பகுப்புக்குரிய உணவுகளும் வாசஞ்செய்யுமிடத்துச் சீதோஷ்ணம், உண்பவர் தேகநிலைமை, வயது முதலியனவற்றிற் கேற்குமாறு படைக்கப்பட்டிருத்தலையும் அன்னபிறவற்றையும் "மரபுவழி வந்த" என்றது நன்கு புலப்படுத்தாநிற்கும்.

மாதாவின் கர்ப்பத்திலேதான் சதுர்வர்ணபுத்தி தோன்றப்பெறுதலும் அதுவும் பூர்வவினைக்கேற்றபடியாதலும் உண்மையெனக் கூறும் சில நவீனர்கள் அவ்வக் குலத்தில் வந்துபிறத்தற்கு அவ்வவ்வினை இடங்கொடுத்தலிற் றூலதேகவருணப்பகுப்புக்கள் உண்டென்றலை மறுத்தலும் ஒரு பெரும் வியப்பே! "பரான்னம் ப்ராண சங்கடம்" என்ப. அயல்வீட்டுச்சோறு என்று கூறுதல் உலகவழக்கு. என்னினும் அயல்வருண வுணவென்றே பேரறிவாளர் கொள்வர்.

[கடவுள் வணக்கமக் காட்சியினமையும்] அக்காட்சியில் கடவுள் வணக்கம் அமையும் = (மரபுவழியாக உண்டுவரும் உணவு உடலவளர்ச்சிக் கேதுவாகக் கண்டுவரும்) அக்காட்சியைப் போலவே கடவுளை வணங்கிவரும் வணக்கமும் பொருந்தும்;

பிராமண புத்தியுடையான் ஒருவனுக்கு இரத்தமும் அப்புத்திக்குரிய பரம்பரையினர் இரத்தம்போல்வதின் அவர்க்குரிய உணவும் கடவுள் வணக்கமுமே இவனுக்கும் இயற்கையில் பொருந்தி அமையும். இசைக்காரனுக்குப் பிறந்தமகன் குழவிப்பருவத்திலேயே பிறரிடங் கற்றற்கு முன்னர்த் தானே இராகமுதலியவற்றை ஒருவாறு பாடிவருதலுங் கண்கூடு. இவ்வாறே ஏனையோர்க்குங் குலவித்தை முதலியன அமைந்து பொருந்தல் காணலாம்.

ஒருபாலார் மற்றொருபாலார் தம் உணவு முதல உவர்த்தலில் = ஒரு பகுதியினர் பிறிதொரு பகுதியினர்க்குரிய உணவு முதலியவற்றை வெறுத்து வருதலைப்போல;

"முதல" என்றமையாற் பார்வை, உடை, நடை, ஒழுக்கம் ஆகியவற்றையுங்கொள்க. வடநாட்டார் தென்னாட்டாரின் உணவுமுதலியவற்றையும், ஈழத்தார் இவ்விருபாலாரதும் உணவு முதலியவற்றையும் வெறுத்து வருதல் இயல்பு. இவ்வாறே ஒழிந்த ஏனையர் தமக்குங் கொள்க.

கடவுள் வாழ்த்தையும் வெறுக்குநர் = கடவுளை வழிபடுமுறைமையையும் வெறுத்தொதுக்குகின்றனர்;

அவ்வவர் நிலைமைக்கேற்பக் கடவுளை வணங்கிவருகின்றனர் எனக்கருதாமல், தம் வணக்கமே சிறந்தது பிறர்செய்யும் கடவுள் வாழ்த்தெல்லாம் இழிவுடைய என்று கருதுகின்றனர் என்க.

மற்று இறை உண்மை உடம்பாட்டவரோடு உறழ்தல் ஒன்று இன்று = இறைவனது உண்மையை உடம்பட்டவர் தங்களோடு முரணுதல் ஒருபயனும் இல்லாதாகும்;

ஒவ்வொரு சாதியாரின் கடவுள் வணக்கமும் ஒவ்வொரு முறைமையுடையதுவாகலின "உறழ்தலொன் றின்று" என்றார்.

மரபுவழிவந்த பழமையாகிய கடவுள் வணக்கத்தை மாற்றிப் புதுமுறையை இடையிட்டுக் கொள்வதாலும், பழைய வணக்கமும் புதிய வணக்கமும் ஒப்புடைத்தெனக் கொள்ளுதலாலும் இவ்விவற்றினின்றும் இவ்விவ்வணக்கங்கள் பெருகின வெனனுமுகத்தாற் றமது வணக்கம் பெருமையுடைத்தெனக் கோடலானும், ஒருவணக்கம் செய்கை முதலியவற்றான் மற்றொன்றிற் கொப்பாகியும் பெயர் முதலியவற்றால் வேறுபடுமெனக் கொள்ளுதலானும், பிறவணக்கங்களைப் பழித்துப் பலகமுதலியவற்றைக் கொள்ளுதலானும், பிறவணக்கத்தை ஒருவாறு தம்வணக்கம் போல்வதெனக் கொள்ளுதலானும், பிறவணக்கத்தை ஒருவழி ஒழித்துப் பிறவழி ஒவ்வாததாகக் கொள்ளுதலானும், அன்னபிறவற்றானும் ஈண்டு "உறழ்தல்" எனப்பிரயோகித்தது ஆராயற்பாற்று.

உடம்படார் அன்றே ஒன்றார் ஆவர் = (கடவுளையும் அக்கடவுளை வாழ்த்துதலையும் இழிவாகக்கருதி நங்கொள்கையோடு) மாறுபடுகின்றவரன்றே நமக்குப் பகைவராவர்.

ஆத்திகவாதத்தைச் செய்தலினற் போர்தபயன் ஒன்றுமில்லை எனக் கூறுமாகத்தானே ஆத்திகரையெல்லாம் ஒன்றுபடுத்திய இந்நூலாசிரியர் அன்னோர் தமக்குட் சாதித்துவந்த பகைமைத்தொழிலைச் சாதித்தற்கு நாத்திகரே பாத்திரராவர் என்று கூறுகின்றார். இனி ஒரே கொள்கையுடையார் இங்ஙனம் முரண்படுகின்றனரே என்று அவரதம் அறியாமையைப் புலப்படுத்தினருமாம்.

அதாஅன்று =(ஆத்திகரோடு வீணுக வாது செய்துவருகின்ற) அக்காரண மன்றியும்;

நாத்திகரை எதிர்த்தொழிக்கவேண்டிய ஆத்திகரெல்லாம் தம்முட் கலாம் விளைத்துவருதலின் ஆற்றலழியப் பெற்றவராய் நாத்திகர்கட்காளாகி வெறிதுபடுவர் என்று முன்னாக கூறிய அவர் இனி அந்நாத்திகரோடு கலாம் விளைத்தலும ரன்மையாகாதெனை இசைந்தொதக்குவான் புகுந்தனர.

பல கோள் படைத்த பல் பலர் தம்மையும்=தெய்வ வணக்கத்திலே பலதிறப்பட்ட கொள்கைகளை யுடைய பலப்பலராதகளையும;

ஒவ்வொரு கொள்கையினும் பலவேறுபாடுடையர் என்பதுபோதரப் "பற்பலர் தம்மையும்" என்றார். பலசமயப் பிரிவுகளையும் அவற்றின் விரிந்த வேறுபாடுகளையும மாபாடியம் முதலிய நூல்களுட் கண்டுகொள்க.

செய்ந்நன்றி கொன்ற இல்லை என்போரையும்=கடவுள் இன்றியமையாத தனுகரண புவன போகங்களை நமக்குக் கைமாறு கருதாமல் உதவியருளிய நன்றியை மறந்து அககடவுளை இல்லை என்று கூறும் நாத்திகர்களையும்;

இல்லையென்போரென அவர்க்கொரு பெயரிட்டார். மறத்தலின் கொடுமை தோன்றக் "கொன்ற" என்றார். "எந்நன்றி கொன்றார்க்கு முப்வுண்டா முய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பது குறள்.

அறம் தரு சால்பின் ஆன்றோர் தம்மையும்=தருமத்தை (த்தமக்கும் உலகத்திற்கும்) தந்தாருகின்ற நிறைந்த குணஞ்செய்கைகளை யுடைய பெரியோர் தஙகளையும்;

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னுமிவைவைந்திலும் சால்பு தாங்கப் படுமென்க. இவையெல்லாம் அறமுடையார்க்கே ஆதலாதலின் "அறந்தரு சால்பு" என்றும், அச்சால்பு பூரணம்பெற்றிருத்தலின் "ஆன்றோர்" என்றுங் கூறினர். அன்பொப் புரவு கண்ணோட்ட மறியாவாய்மை நாணுநி—யினைபம் பெருகத நற்குணஙக ளொல்லா நிறைந்த சான்றோர்க—கென்புற் றவர்க்கு 'பினியனவே சூழ்வர்" என்பது விநாயகபுராணம்.

மறம தரு பழி வளர் வன்கணோரையும்=பாவத்தைத் தருகின்ற பழிப்பிற்கிடனுகிய செயல்களை வளர்த்துவருகின்ற கொடுமையையுடையவர்களையும்;

உலகவொற்றுமையான் இருமையும் பெறுதற் கேதுவாகிய தருமத்தை விரோதித்துப் பலசீவராசிகளுக்கும் துன்பஞ்செய்தலின் "வன்கணோரையும்" என்றார்.

காத்தல் புரிதல் கடவுட்கு இயற்கை=காப்பாற்றுதலை விரும்பிச செய்துவரல் கடவுளுக்கு இயற்கையாக அமைந்த குணமாகும்;

பால் எந்தப்பெற்ற பாத்திரங்களுக்குத் தக்காங்கு பயனை அளித்து வருதல்போல அவ அவர் வினைகட்கேற்றபடி அக்காத்தலும் மாறுபடும். இனி அவனையின்றி ஓரணுவுமசையாதாதலின் பாவ புண்ணியங்களும் அவற்றிற்குக் காரணமாகிய செயல்களும் அன்ன பிறவும உண்டாகின்றன என்றும், அதுபற்றி எவரும் தமககேற்றபடி செய்துவரல் தீமையாகாதெனின் நயந்தனவற்றை விரும்பிச் செய்தும் வெறுத்தனவற்றை ஒதுககியும் வருகின்றார்க்கு எங்ஙனம் பொருந்துமென விடுக்க.

நாம் மீ தரு செயல் செ(ய்)ய வேட்டல் மடன் அன்றே=நாம் நமது தகுதிக்கு மேற்பட்ட செய்கைகளைச் செய்ய விரும்புதலும் மடமை அன்றோ;

இதனானே அச்செயலுக்குரிய அதிகாரிகள் கூறப்பட்டனர். அவ்வதிகாரிகள் அகத்தியர், [illegible] தெலசிகர் முதலியோரும், சங்கரர், இராமாநுஜர், மத்துவர் நீலகண்டரும்

புத்தரும், கிருஸ்துவும், முகம்மதுவும் அன்னபிறருமாவர். இன்னோர் கூறியவற்றை நம்மனோர் கடைப்பிடித்து வருதலன்றிப் பிறரை இவ்விஷயத்திலே வருத்துதல் கூடாதென்க. தாந்தாம் பிறந்த சமயத்திலே விதிக்கப் பெற்றவற்றை நியமந்தப்பாமற் செய்தும் விலக்கப் பெற்றவற்றை அறவேயொழித்தும் வருதலோடு பிறர்தங் கொள்கைகளிற் றலையிடா திருத்தலுமே தகுதியா மென்பது குறிப்பு.

ஆதலின் = அதுகாரணத்தானே;

அவன் தாட்கு அடியோம் = அவ்விறைவனது திருவடிகளுக்கு அடிமைகளாகிய நாம்;

தீது அறும் அவன் செயல் சிதைத்தல் நலன் அன்று = குற்றமற்ற அவ்விறைவனது செய்கையைக் கெடுத்தல் (நம்மனோர்க்கு) நன்மை யாகாது;

எனவே இறைவனுக்குக் கேடில்லை யென்பது கூறப்பட்டது. அவன் செயலுக்கும் அழிவில்லை என்க. இவற்றானே நமக்கும் நமது செயலுக்கும் அழிவு கூறப்பட்டது. உலகத்திலே நடைபெறுஞ் செய்கைகள் நம்மனோர்க்குத் தீயனபோற் புலப்படினும் மருந்தின் கசப்புப் போலவே நலன் பயக்குமெனக் கொள்க. தீமையாகுமேல் இறைவன் பல அவதார புருடர்களை அவதரிக்கச் செய்து காப்பாற்றுவன் என்க. "ஆன்றோரைக் காத்தற்கும் மறவோரை அழித்தற்கும் நான் யுகந்தோறும் தோன்றுகின்றேன்" என்பது கீதை. (4 அத்: 8 சுலோகம்) ஒருவன் மற்றொருவனைக் கொன்றவிடத்தும் அக்கொலைசெய்தானை நேரேகண்ட பிறிதொருவன் தனக்குத் தண்டிக்கும் அதிகாரம் இல்லாமல் அவனைக் கொல்வானாயின் நீதிபதி யவனைக்கொல்லாது விடான். இதனையும் ஈண்டு ஆராய்க. "தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை - யத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி - யெத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்மைக்கே - மெய்த் தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே" என்பது திருமந்திரம்.

---

(30) உலகிய லறிதற் குறுபாகி யிலங்கயா
மறிவனே யறிதல் யாங்ஙன மென்றல்.

வானமு முதலிய சிலவே பூத்துக்
காய்த்து மவ்வழிக் கருவுயிர்க் கிலவே
சிலவே யிருவழி யானுஞ் செழிக்குந
சிலமுடி சிதைந்து முயிர்க்குந சிலவே
யிறக்குந சிலநம் மியையுறு புத்தொறூஉம்
வளர்ச்சி யுறுந வொருமரந் தானே
யிருமர மாகி யிலகுந வெண்ணே
அதா அன்று,
இருவே றுருவி னியைமரத் துறப்பா
லொருவேறு மரமா வுறுந வமமா
வியங்குதிணை நிலைப்பொரு ளிடையறவு பட்டுண்
டிருவே றுருவா யிலங்குதல் காண்கிலம்
அவற்றுள்,
குளவிமுதல் வருகைபை யிற்றெனக் குறித்திவை
யிறத்தலும் பிறத்தலு மில்லென வறிகிலந்
தம்முறு முயிருந் தக்கவுள் ளுறுப்புஞ்

செம்மைகொடு தாமே யில்லெனத் தேர்கிலெம்
வாய்ப்பிதற் றிடித்து வல்லாங்குப் புரிகுந
மெல்லா வுயிரு மிணைந்தின் புறுதற்
காவன செயலைப் போற மென்குநம்
வான்முறை யாக வுறுப்பெலா மழிவுழீஇப்
பிறவமைப் போருள செயினவை பெற்று
நம்முறப் பென்ன நயக்குதெவ மன்றி
யுயிர்நிலை யுண்டென வுணர்கிலெ மம்மா
குரக்குவழி மக்கள் கூடுநர் மீன்வழிச
சிறைததுணைப் பறவை யிங்ஙனை செழிக்குந
ரென்குநர் தம்மை யிதுபொழு தவ்வா
னின்றது கொல்லோ வவ்வழித் தொடர்சசி
யொன்றில தாதலிற் பொய்யென வுணர்கில
மென்கனா முதலிய கொண்டுயி ரிருப்புணர்
கென்னி னனதுயி ரெனுமவற் கிருத்தலே
பேற்றமுறை சூழ்வுற் றியம்பிலெங் கனவிற்
பெண்விழைச் செய்திப் பிறப்பதூஉம் பெறுகுந
முடனேப் வீக்க முறுகொலோ யெய்தப்
பெறினே பெற்றிலெம் பிதற்றறி விலெனமே
யில்லெல மறிகிலா வினையெ
மவ்விய லண்ணலை யறியுமா றெவனே.

---

(இ-ள்.) வாழை முதலிய சிலவே பூத்து காய்த்தும்=வாழையை முதலாகவுடைய சில மரங்கள் மலர்ந்தும் (அம்மலர்வழியே) காய்த்தும்;

"முதலிய" என்ற இலேசானே பூவரசு, சதுரக்கள்ளி என்னும் இத்தொடக்கத்தன வற்றையுங்கொள்க.

அ வழி கரு உயிர்க்கிலவே=அக்காயின் வழியாகக் கருவுயிர்க்கின்றில;

காய்த்தல்கருவுயிர்த்தற்பொருட்டு என்னும் உயிர்நிலையிலபற்பொருணூலுடையார்கொள்கை. யை ஈண்டு மறுத்துக் கூறுகின்றார். இனி மற்றொரு சாரார் வாழை, பூவரசு முதலியன உலகத் தாரால் வேறுவழியாக உண்டாக்கப்பட்டுவருதலின் காயின் வழியாகத் தம்மரபு வளர்த்தலை விட்டொழிந்தன என்பார். அவ்வாறாயின் அஃது இயற்கைக்கு அறிவின்மை ஏறப்பெற்று இழித்திடப்படும் என்க. மாவள்ளி முதலியன உடற்றுண்டுகளுள் எவற்றானும், கருணை இராசவள்ளி முதலியன அடிப்பாகத்துக் கிழங்குவழியாகவும், கரும்பு முதலியன முடிப்புறத் துண்டுகளானும் தத்தம் மரபைப் பெருக்குகின்றன. மாவள்ளிபோல் இராசவள்ளி வளராமையின் முன்னையதின் கிழங்கை முற்றுமுண்ணும் மக்கள் பின்னையதின் கிழங்கின் ஒரு பாகத்தை அம்மூல வளர்ச்சிக்காக விட்டுவருகின்றார்கள். பூவரசு முவலியவற்றை மாத்திரமே வேறு வழியாக உண்டாக்கத் தெரியுங்கொல்லோ. வாழையின் கனியை மக்கள் உண்டழிப்பதால் அம்மரம் தன்குலத்தைத் தன்னடிப்பாகத்திலிருந்து வளர்த்துக்கொள்ளுகின்றதெனிற் பூவரசின் பழத்தை உண்டழிப்பவர் தாம் எவரோ?

சிலவே இரு வழியானும் செழிக்குந=சில மரங்கள் காய்வழியானும் உடல்வழியானும் (தம்மரபை யீட்டிச) செழித்துவருகின்றன;

அவையாவன ஆல், அரசு என்னுமித்தொடக்கத்தன. கனிவழியாயும் உடல்வழியாயும் இவைகள் பெருகுதற் குள்ள காரணந்தான்யாதோ? இங்ஙனே வாழை முதலியனவற்றைக் குறித்து மேற்படிசாரார் கூறும் சமாதானம் அறவே மறுக்கப்பட்டமை காண்க.

சில முடிசிதைந்தும் உயிர்க்குந=சிலமரங்கள் தங்கள் முடி சிதையப்பெற்றும் (அச்சிதைவின் காரணத்தால் இறந்துபடவேண்டியது முறைமையாகவும் அங்ஙனம் அழியாமல்) உயிர்த்து வருகின்றன;

அவையாவன வாழை, புளிமுதலியன. சென் முதலியவற்றையுங் கொள்க.

சிலவே இறக்குந=சிலமரங்கள் (முடிசிதைக்கப்பெறின் உயிர்க்காது) இறந்துவிடுகின்றன;

அவையாவன தென்னை பலா முதலியன.

சில தம் இயை உறுப்பு தொறூஉம் வளர்ச்சி உறுகுந=சிலமரங்கள் தங்கட்கியைந்த உறுப்புக்கள் தோறும் தனித்தனி வளர்ச்சியடைந்து வருகின்றன;

அவையாவன மரவள்ளி, கிளுவை ஆமணக்கு முதலியன. முன்னரும் பின்னரும் அறிவொற்றுமை கருதிப் பொதுவகையாக மரமென ஒன்றே கூறப்படினும் கொடி, செடி முதலியவற்றையும் ஆண்டாண்டு ஏற்குமாறு பொருந்திக் கூறிக்கொள்க. உறுப்புக்களாகிய சினைகள் தாய்மரமாகிய முதலுக்கு இன்றியமையாதனவெனபார் "இயைபுறுப்பு" என்றார். மற்றவையெல்லாம் இங்ஙனம் துண்டஞ்செய்யின் மடிந்துபோகவும் இவை இங்ஙனம் உயிர்க்கின்றனவே என்னும் வியப்புக்கருதி "தொறூஉம்" எனறளபெடுத்தது.

ஒரு மரம் தானே இரு மரம் ஆகி இலகுந=ஒருமரமே இரண்டுமுதலிய பலமரங்களாகி விளங்குகின்றன;

அவ்வாறு பிரிவுபட் டிலகுவன மாமுதலியன. ஒருமரக்கொம்பின் அடிப்புறத்து மேற்பட்டையைச் சிறிது செதுக்கி வைக்கோற்புரி முதலிய எவற்றாலாயினும் வளைத்து மேலே மண்ணணைத்து நீர்பெய்து வரிற் சின்னாளில் வேர்வீழ்த்துதும். அதனைப்பின்னர் வெட்டித் தாய்மரத்தினின்றும் வேறாக்கி நட்டால் தனித்தொரு மரமாக நிலைத்து வளராது பூத்துக் காய்க்கும். அது தாய்மரத்துடன் ஒன்றுபட்டிருந்தகாலத்தில் அம்மரம் ஒருயிர் உடையதுவா, இரண்டு முதலிய பலவுயிருடையதுவா? வெட்டிவேறாக நட்டபின் இரண்டுயிராகக் கருதப்படவில்லையா? ஒன்றுயிருந்த காலத்தில் ஈருயிருடைத் தென்பாருமுண்டோ? இனிப் புளிமாவை ஒட்டவைத்துச் சருக்கரைமாவாக ஆக்குதலும், ஒருநிறப் பூப்பூக்கும் பூச்செடியின் ஒருகொம்பைக் களைந்து விட்டுக் களைந்த அவ்விடத்திலே மற்றொரு பூச்செடிக் கொம்பைப் பொருத்தி வளர்த்து இருநிறப் பூக்களைப் பூக்கும்படி செய்தலும், அன்ன பிறவாகச் செய்தலும் ஈண்டுக் கொள்ளப்படும். புல்லுருவியும் ஈண்டடங்கற்பாலது. பலகொம்புகளும் ஒருமரத்திலிருந்து பிரிந்து அங்ஙனம் நடப்படுதலின் "இரு" என்பதற்குப் பல என்று பொருள்கொண்டாம். பூச்செடிகளுக்கும் இஃது ஒக்கும்.

ஒட்டுமாங்கனி வழியாக அதன் பரம்பரையைப் பெருக்குவதற்கு இயலாமல் இருத்தலின் அனையவற்றையும் செயற்கையானே பெருக்குவதற்கு இயலாதென்பது வெளிப்படை. அவ்வெளிப்பாடு பூவரசு, வாழை முதலியவற்றிற் கொவ்வாமையின் அத்தகைய கூற்றுக்களும் ஒவ்வா என்பதூஉம் தேற்றம்.

என்னே=இவ்வகையாக அமையுங் காரணந்தான் என்னே;

ஒருயிரா, பலவுயிரா என்னும் கொள்கையுடையார்தம் கூற்றினுட் சிறந்தொன்றனை ஈண்டு எடுத்துக் கூறினோம். அவர் கூற்று நுணுகி ஆராய்வார்க்குப் புலப்படுமாதலின் ஈண்டு விரித்திலம்.

அற்றன்று=கூறிவந்த அக்காரணமன்றியும்;

இருவேறு உருவின் இயைய மரத்து உறுப்பால் ஒரு வேறு மரமா(க) உறுகுந அம்மா = இரண்டு வேற்றுமைத் தோற்றம் பொருந்திய மரங்களின் கொம்புகளான் மற்றொரு வேற்றுமை மரம் அமைதலுமுண்டு;

இயங்கு திணை நிலை பொருள் இடை அறவுபட்டு ஈண்டு இரு வேறு உருவா(க) இலங்குதல் காண்கிலெம் = சஞ்சரிக்கின்ற நிலைமையையுடைய உயிர்வர்க்கங்களிலுள்ளே அவற்றின் உடல்கள் துண்டப்பட்டு அத்துண்டங்கள் வழியாக இங்ஙனம் இரண்டு வேற்றுருப்பிராணிகளாகி விளங்குதலை யாங்கண்டிலேம்;

ஒருசார் இயங்குதிணை உயிர்ப் பொருள்கள் தம்முடலம் இரண்டுமுதல் எத்தனை துண்டங்களாகத் துணிக்கப்பெற்றாலும் பெற்ற அத்துண்டங்கள் எல்லாம் உயிர்ப்புற்று வெவ்வேறாக ஓடா நிற்கும் என்பர். ஒஷனுர்வாய் கண் முதலாகிய கருவிகள் பொருந்திய தலைத்துண்டத்தைப் போல ஏனைய துண்டங்கள் உண்டு வளர்ந்து நெடும்பொழுது சீவிக்குமோ என்பதுதான் ஐயம். அன்றியும் அங்ஙனமாதல் மிகச் சிறுபான்மைய தாதலினாலும் ஐயறிவுடையவற்றிற்கும் ஓரறிவுடையவற்றிற்கும் இடை நிகர்த்தனவாக அவற்றை யெல்லாம் ஆன்றோர் கருதி வருவர் ஆதலினாலும், இடை நிகர்த்தவற்றிற்கு முன் பின் அடுத்திருக்கும் ஏனையவற்றின் றன்மை சிறிதமை யப்பெறுதல் முறைமை யாதலானும் அன்ன பிறவாற்றானும் அக்கொள்கையையுந் தழீஇக் குறிப்பித்தாருமாம். ஒருடலோடு ரவு புண்ட வுயிர் தனதுடலம் பலபடியாகத் துணிக்கப்படின் அத்துண்டங்களெல்லாம் தனித்தனி உயிர்த்தோடச் செய்யுமாயின் அவ்வுயிர்தான் ஒன்று பலவா வெண்ணும் ஆசங்கையை ஈண்டுக் குறிப்பித்தாருமாம்.

அவற்றுள் = அவைதம்முள்ளே;

குளவி முதல் வருகையை இற்று என குறித்திலம் = குளவி முதலாகியவற்றின் பிறப்பு இத்தன்மைத்தெனக் குறிகொள்ள வியலாதிருக்கின்றோம்;

பலவகை அழுக்கிலிருந்து புழுவும், புழுவிலிருந்து குளவியும் வியர்வையிலிருந்து பேனும், மழைநீரிலிருந்து தழும்பும் அன்ன பிறவற்றிலிருந்து பிறவும் தோன்றுமென்ப. மானிட தேகத்தைப் பரீக்ஷை செய்யின் முற்றும் புழுவின் சேர்க்கையாயிருத்தல் காணலாமென்றுங் கூறுப. ஒருயிரினுடம்பு அறவே மாற்றமடைந்து பிறிதோருடலங் கொள்ளுதலை ஈண்டு விளக்கினார். வேட்டுவனென்னுங் குளவி புழுக்களை யெடுத்துத் தன்குலமாக மாற்றும் என்பது பண்டையோர் கொள்கை. இதனை ஆராய்ந்த பலரும் அங்ஙனமன்று கூட்டிற் சேமிக்கப்படும் புழுக்கள் குளவி முட்டையிலிருந்து தோன்றும் இளங்குளவிகள் இறகு முளைத்துப் பறந்து வெளிச் செல்லும் பருவம் அடையுமட்டும் உண்டு வளர்தற் குணவாயிருக்கும் பொருட்டென்பர். கார்முகில் வரவு கண்டு இன்புறீஇக் களித்தாடும் மஞ்ஞையின் வீரியம் கலிதமாகி நிலமிசை வீழப் பேடுகள் கவ்வி யெடுத்துண்டு கருவுயிர்க்குமென்ற கொள்கையும் அன்ன பிறவும் தற்கால ஆராய்ச்சியில் வலியிழந்து அழிந்தன

இறத்தலும் பிறத்தலும் இவ் என அறிகிலெம் = இறந்துபடுதலையும் வந்து பிறத்தலையும் இன்னவகைய என்று தெரிந்திலேம்;

எவ்வாறு இவ்வுடம்பெடுத்து இப்புவியில் எனவந்து பிறந்தோம், நிலையாமல் ஏன் இறக்கின்றோம், இறந்துபட்டெவ்வாறு எங்ஙனம் ஏகுவோம் என்றறிய வேண்டிய விசேடவிடயங்களை ஆய்ந்துணராமல் ஏனைய சில பல கற்றிறுமாந்து பலவுமறிந்தேம் அறிந்தேமென்று செருக்குவதாற் போந்த பயன்றான் என்னை யென்க.

தம் உறு உயிரும் தக்க உள் உறுப்பும் = தமக்கு உற்றதாகிய உயிரினையும் அவ்வுயிர்வாழ்வதற்குத் தக்கதாகிய உடலகத்துள்ளே இருக்கும் உறுப்புக்களையும்;

[செம்மைகொடு தாமே யிவ்வெனத் தேர்கிலெம்] தாமே இவ் என செம்மை கொடு தேர்கிலெம் = நாம் தாமே இவ்வகைத்தென நேர்மைகொண்டு அறிகிலேம்;

ஆயுள்வேதங்களானும், மெய்யியலான் முதலியவற்றானும் உடம்பின் தன்மையைத் தெளிதல் கூடும். உயிரின் தன்மையை ஆகம அளவைகளானும் பிறவாற்றானும் அறிதல் கூடும்.

அசித்தரு வியாபகம்போல் வியாபக மருவ மன்றாய்—வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய ளாகி—நசித்திட ஞானச் செய்தி யநாதியே மறைத்து நிற்கும்-பசுத்துவ முடையு ளாகிப் பசுவென நிற்கு மான்மா" (சித்தியார்; சுபக்கம்; 4-ம் சூத்திரம்; 20-ம் செய்யுள்) எனவும், "அறி விக்க வறிவன்" (ஷை 5-ம் சூத்திரம்; 3-ம் செய்யுள்) எனவும், "அங்கி யானது தானு மென்மை யணைந்து நின்று நிகழ்ந்திடும்—பங்கி யாதுயி தானு மிப்படிப் பற்றி யல்லது நின்றிடா" (ஷை பரபக்கம்—20-ம் செய்யுள்) எனவும், "அதுவது வாதல" (ஷை 4-ம் சூத்திரம் 2-ம் அதிகரணம் உதாரணச் செய்யுள்) எனவும், "அருப சொருபியாய் நிற்கின்றது" (ஷை 3-ம் அதிகரணம்) எனவும், "அவற்றி னான்மா ஒன்றிநதுக் காணினலலது அவை ஒன்றையும் விடயியா வாகலான்" (ஷை 5-ம் சூத்திரம் 1-ம அதிகரணம) எனவும், "அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போல் காட்டியவற்றைக் காட்டிநிற்றலான" (ஷை 8-ம சூத்திரம் 3-ம் அதிகரணம) எனவும், "பன் னிறமே காட்டும் படிகம்போல்" (ஷை உதாரணச்செய்யுள்) எனவும் கூறிப்போந்தவற்றாலும் பிறவாற்றாலும் உயிரின் தன்மையை அறிதல் கூடும் என்ப. இனி ஒருசாரார் உயிரின் தன்மையை எட்டுவகையானும் பத்துவகையானும் அறிதல் கூடும் என்பர.

உயிரெனப்படுவதும் வேறு (Life) ஆன்மா எனப்படுவதும் வேறு (Soul) என்றும் மானி டர்க்கு மாத்திரமே ஆன்மா உண்டு மற்றைய சீவராசிகட்கில்லை என்றும் கிருத்துவர் முதலியோர் கூறுவர்.

உயிர் எனப்படும் ஆன்மாவானது பிரமப்பொருளின் பரிணாமமாய்த் தோன்றி அறிவு, இச்சை, செயல் என்பவற்றை அடைந்து அநேக குணகுணி பாவமாய் நிற்குமென்று பரிணா மவாதிகளும், குணகுணித் தன்மையின்றி கேவலம் அறிவுமாத்திரையாய் நிற்குமென்று சாங்கி யரும், உருவப்பொருளா யிருக்குமென்று பௌராணிகரும், அருவுருவப்பொருளென்று கவுண கரும், இங்ஙனமே வெவ்வேறு வகைத்தாய்ப் பாதஞ்சலா, வைசேடியர், பட்டாசாரிய மதத்தர் பாஞ்சராத்திரிகள் ஆதிய பலவகைப் பேதசமயிகளும முரணுகக கூறுவர். இவாகள் கூற்றெல்லா வற்றையும் மறுத்துச செல்லும் சைவசித்தாந்தக கொளகை யாதெனில் ஒருவாற்றானும் அசித்தா தல் இல்லாத வியாபகப் பொருள்போல ஔபசிலேடிக வியாபகமாதலும அதுபற்றி அதிசூக்கும சித்தாதலுமின்றி, அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபகமாம வழக்குடைத்தாய் அநாதியே பசுத் துவ மெனப்படும். ஆணவமலத்தின் மறைக்கப்பட்டுக கிடக்கின்ற அழியாத இச்சா ஞானக கிரியைகளையுடைத்தாய்த் தூல சித்தாகிக் கேவலப்பட்டு நின்று அதனபின் அநாதிதேவராற் சிலக் குண்ட பகுதியாகிய காரண சரீரத்தைப் பொருந்திப் பொதுவகையாற் சமட்டி ரூபமாய் மாயா தத்துவத்தினின்றுந் தோன்றுங் கலாதிகளாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி வியட்டி ரூபமாய்ப் பிரிந்து தோன்றி அந்தக்கரண முதலியவற்றைத் தமக்குண்டாக்கி நின்ற தூலதேகங்களையும் பெற்று ஐந்தவத்தைப்பட்டு நிற்பதொன் றென்பதேயாம்.

வாய் பிதற்று இடித்து வல்லாங்கு புரிகுநம்=வாய்க்குவந்த வகையெல்லாம் இடித்து ரைத்து நாம் நினைத்த பிரகாரமெல்லாம் செய்துவருகின்றேம்;

"கல்லாது நீண்ட வொருவ னுலகத்து—நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல—இருப்பினு நாயிருந் தற்றே யிராஅ—துரைப்பினு நாய்குரைத் தற்று" என்பது நாலடி; "பலகற்றோம் யா மென்று தற்புகழ வேண்டா—வலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்—சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க்—கச்சாணி யன்னதோர் சொல்" என்பது அறநெறிச்சாரம்; "வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை—யாச்கைநயத் தாலறிய லாகாதே—காக்கையொடு—நீலச் சிறுகு யிலை நீடிசையா லன்றியே—கோலத் தறிவரோ கூறு" என்பது நீதிவெண்பா. இவற்றை ஏற்ப விரித்துக்கொள்க.

எல்லாம் உயிரும் இணைந்து இன்பு உறுதற்கு ஆவன செயலை = உடலோடு உறவு பூண்ட சகல உயிர்களும் தங்கள் தங்களோடு பொருந்தி இன்பத்தை அடைதற்குக் காரணமாய் அமைவன வாகிய செயல்களை;

பேர் அறம் என்கும் = பெரிய தருமம் என்று கருதிச் செய்[illegible]

ஒவ்வொரு சீவராசிகளும் தந்தம்மால் விழையப்பெற்றவற்றை அடையும் பொழுது பிற உயிர்க்கு உண்டாகும் இடையூற்றைக் கருதா திருத்தல் இயற்கை. பூனை எலிக்குவரும் துன்பத்தையும், சிங்கம் புலி முதலியன மான் மரை ஆடு மாடு முதலியவற்றிற்கு வருந்துன்பத்தையும் கருதுகின்றில. இவ்வாறே ஊனுண்போரும் ஆவர். பிறப்புகளுட் சிறந்த மக்கட்பிறப்பினர் பிறவுயிர்க்கு நிகழும் இடையூறுகளை இயன்றவளவு குறைத்து வருதற்குரிய வழிகளை அறநூல்கள் விரித்துக்கூறா நிற்கும். "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும் இலங்குமுயிர் உடலனைத்து மீசன் கோயில்-எவ்வுயிரும் எம்முயிர்போ லென்று நோக்கி யிரங்காது கொன்றருந்து மிழிஞரை-வெவ்விய மா தூதரும் தண்டஞ் செய்து வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து-வெவ்விய தீ யெழுநரகில் வீழ்த்தி மாறா வேதனைசெய் திடுவரென வோது நூலே" என்பது சிவஞான தீபம். ஒருவர்க்குவரும் இடையூற்றை மற்றவர் கருதாதொழியின் அம்மற்றவரும் இவர்க்குவரும் இடையூற்றைக் கருதாதொழிவர். அங்ஙனமே எல்லோரும் சுயநயம் ஒன்றையே கருதிப் பிறர்க்குத் தீங்கு விளைப்பவராகி அழிந்துபடுவர். சுயநலம் கருதிப்புரியும் செயலை அறமெனக் கூறுதலும் அடாது. இறைவனுக்கும் அவனடியார்க்கும் பல நன்மைகளைப் புரிவதாகவும், தமக்குப் பெரியதோர் இழிவினைப் புரிந்துகொள்வதாகவும் மக்கட் பிறப்பினர் வாளா கருதி இடர்ப்படுதலை நீக்கற்பொருட்டு இங்ஙனம் கூறினார். பேரறம் நிஷ்காமிய தருமத்தையும், சிற்றறம் காமிய தருமத்தையும் குறிக்கும். மக்கட் பிறப்பினர் இணைந்துவாழ்ந்து இன்புறுதற்கும் அறியாத அத்துணை இழிந்த அறிவினையுடையவர் எனக் குறிப்பித்தார்.

[வான்முறை யாக வுறுப்பெலா மழிவுழீஇப்—பிறவமைப் போருள ரெனினவை பெற்று—நம்முறுப் பென்ன நயக்குவெ மன்றி—யுயிர்நிலை யுண்டென யுணர்கிலெ மம்மா]

உறுப்பு எ(ல்)லாம் வால முறையாக அழிவுழீஇ=நமது உறுப்புக்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அழிந்துவரும் போழ்து;

பிற அமைப்போர் உளர் எனின் அவை பெற்று=பிறவற்றின் உறுப்புக்களை ஏற்குமாறு அமையவைத்துப் பொருத்துவோர் உளராயின அவர்களைக்கொண்டு அப்பிறவுறுப்புகளைப் பொருத்துவித்து;

எலும்பு முதலியவற்றைப் பொருத்துவோர் இருக்கின்றமையால் அவற்றையெல்லாம் பேணிவருகின்ற நாம் நமது மெய், வாய், கண், மூக்கு, செவி எனனும் உறுப்புகளுக்கு அழிவு வந்தவிடத்து இறந்தவன் ஒருவன் உறுப்புகளைப் பொருத்தவல்லார் இருப்பின் அவரைக்கொண்டு அங்ஙனம் பொருத்திவைத்துக் கொள்வோம் என்றபடி. இல்லாததுவே குறை என்க. இதனைப் புலப்படுத்தவே ஆண்டு "உழீஇ" என்றளபெடுத்தது.

நம் உறுப்பு என்ன நயக்குவெம் அன்றி=(அவ்வாறு பிறிதியாகப் பொருத்தப்பட்ட பிறவுறுப்பினை) நம்முடைய உறுப்பாகவே நயந்து கருதி வருவோமன்றி;

இறந்தவனுறுப்பாயிற்றே அதனைக்கொண்டு நமது பெண்டிர் முதலியோரைத் தீண்டலாகாதே என்று கருதோம் என்க. நம்மிடம் இருக்கும்வரைக்கும் நமதுபொருள் என்று கருதப்பட்டுவந்த ஒருபசுவைப் பிறர்க்கு விற்றபின் நமதெனக் கருதாதொழிதலும் ஈண்டு நோக்கத்தக்கது.

உயிர் நிலை உண்டு என உணர்கிலெம்=இசசெய்கையானே உயிரினது நிலைமை உண்டென்பதை உணரமாட்டோம்;

இங்ஙனமே எல்லாவுறுப்பும் பிறருறுப் பாகுழி உறுப்பன்றி ஓர் உயிருமுண்டென்றறிதலே முறைமை என்க. உயிர் நிலைமையை இங்ஙனம் எளிதிலுணர்தற்கு வழி கண்கூடாக இருக்கவும் பிறரெல்லாரும் அப்பிரதியக்க உவமைகளான் உணரச்செய்வர். அம்மா—அசைநிலை.

குரங்கு வழி மக்கள் கூடினர்—வானரத்தினது தோற்றத்தின் வழியாகவே நரர் தோன்றப் பெறுகின்றனர்;

குரக்கு எனவன்றொடராகியது,

இவகை மீன் வழி சிறை துணை பறவை செழிக்கும்=இத்தன்மையாகவே மீனினது தோற்றத்தினவழியாக சிறகுகளைப் பறத்தல் முதலியவற்றிற்குத் துணையாகக்கொண்டுள்ள பறவைகள் தோன்றிச் செழிக்கின்றன;

"பகைகொண்ட சீவராசிகளிடையே அகப்படாமற் றப்பியகல்வதற்குச் சிறகுகள் துணையா யமைதலின் "துணைச்சிறைப் பறவை" என்றார்.

[ஒன்றுகா தமைய மிதுபொழு தல்லா—னின்றது கொல்லோ வற்றுவழித் தொடாசி—[illegible] பொய்யென வுணர்கிலெம்]

என்குநர் தம்மை = என்று கூறுவார் தங்களை;

அவரல் இது பொழுது நின்றது கொல்லோ = (குரங்குவழி மக்கள் தோற்றுதலும் மீன் வழிப் பறவைகள் தோற்றுதலும் அன்னபிறவற்றின்வழி ஏனைய தோற்றுதலுமாகிய) அவ்வரன் முறை இக்காலத்து நின்றுவிட்டதோ;

பாதிவடிவம் குரங்காகவும் பாதிமக்களாகவுந் தோன்றப்பெறுதலும், அன்னபிறவாகத் தோன்றப்பெறுதலும் அமைந்து அவற்றின் வரலாறு தோன்றிக்கொண்டன்றே வரல்வேண்டும், அங்ஙனம் வரவில்லையே என்றபடி.

அவ்வழி தொடர்ச்சி ஒன்றிலது = அக்கூறிய முறையாகத் தொடர்ந்துவருதல் வாய்ந்திலது;

ஆதலின் பொய் என உணர்கிலெம் = அது காரணத்தானே அங்ஙனங் கூறுவோர் கூற்று பொய்மையுடைத்தென்று தெளிந்திலம்;

என் கண் முதலிய கொண்டு உயிர் இருப்பு உணர்க எனின் - எனது கண் என்பது முதலாகக் (கூறிவரும் வழக்குரைகளை ஆதாரமாகக்) கொண்டு உயிரிருத்தலை உணர்வாயாக என்று கூறுவாயானால்;

எனது உயிர் எனும் வழக்கு இருத்தலை ஏற்ற முறை சூழ்வு உற்று இயம்பிலெம் = என்னுடைய உயிரென்று கூறும் உலகவழக்கம் இருத்தலை (மாற்றி எடுத்துக்கொண்ட விஷயத்தை நிறுவுதற்குத் தகுதியாகிய முறைமையை ஆராய்வுற்று (இஃதெனத் தெளிந்து கொள்ளும்படி) சொற்றிலோம்;

என்னுயிர் எனனும வழக்கிற்கு அப்பிரத்தியக்கமாகிய "இராகுதலை" என்னும் ஒருமேற்கோளைக் காட்டி மயக்குகின்றனர். உலகவழக்கிற் காட்டுதற்கிடனில்லை என்பதை அவரே ஒப்புக்கொண்டவராவர். எனதுயிர் என்றுகூறும் வழக்கத்தாற் பரமாத்துமாவின் உண்மையை ஒருவாறு கேட்டலமையும் என்க. விரிக்கிற் பெருகுமாதலின் விடுத்தனம்.

கனவில் பெண் விழைச்சு எய்தி பிறப்பதூஉம் பெறுநம் - சொற்பனத்திலே பெண்ணை விரும்பியடைந்து புணர்ந்து (அப்புணர்ந்த இன்பத்தையும் அதனானேர்ந்த அடையாளத்தையும் விழித்தவுடனும்) பெறுகின்றனம்;

அச்சத்தால் அரற்றன் மகிழ்ச்சியாற் சிரித்தன் முதலியவற்றையுங்கொள்க.

உடல் நோய் வீக்கம் உறு கொலை எய்தப்பெறினே - உடலிற்றோன்றும் பிணி, வீக்கம், பொருந்திய கொலை இவை முதலாகியவற்றை அடையப்பெற்றால்;

[பெற்றிலெம் பிதற்றறி வினமே] பிதற்று அறிவினம் பெற்றிலெம் = வாய்க்கு வந்தாங்கு உரைக்கும் வெள்ளறிவினேமாகிய யாம் அவற்றையெல்லாம் அடைகின்றோமில்லை;

"உறுகொலை" என்றதனாற் றற்கொலையுங் கொள்ளப்படும்.

பெண் விழைச்சு மனகின் தன்மையென்று விலக்குவரேல் உடனோய் முதலியவும் அத்தன்மையவாதலின் அவ்வாறு தோன்றுமைக்குக் காரணந்தான் என்னையென்க. எனவே பிணி முதலியவற்றைக் கனவிற்கண்டு நனவில் எய்தப்பெறுமைக்குந் தக்ககாரணம் வேண்டப்படும். அதனை இன்னதெனக் கூறவியலாதென்பது ஈண்டுக்காட்டிய விளக்கத்தால் நன்கு தெளியப்படும்.

இ எ(ல்)லாம் அறிகிலா இனையெம் = இக்கூறிய எல்லாவற்றையும் அறிந்துகொள்ளும் ஆற்றல் சான்ற மெய்யறிவில்லாத (மிகச்சிறு தன்மையையுடைய) இத்தகையோம்;

அ இயல் அண்ணலை அறியும் ஆறு எவன் = பிரகிருதி சுபாவத்திற் கப்பாற்பட்ட இயல்புடைப் பெரியோனாகிய கடவுளை அறிந்துகொள்ளும் வழிதான் யாதுளது? இல்லை என்றபடி.

முக்குணவயப்பட்டு விருப்புவெறுப்பிற்கு உள்ளாகும் நம்மனோர்க்கு அவனை அறிதல் சாலாது. மேற்கூறியவற்றை விட்டகன்றார்க்கே கைகூடுமென்க.

அறியும் வழி இல்லையேயாயின் அக்கடவுள் ஒருவன் இருக்கிறான் என்னும் உண்மையை நம்புதல் எங்ஙனமெனில், தன்னையாளும் அரசனை ஒருபொழுதும் கண்ணுற்றறியாதவன் அவனுண்மையை நம்புதல்போல அநுமானம் உரையாதிய அளவைகளான் அறிந்துகோடல் சாலுமென்க. அருந்தவப் பெருந்திறல் எல்லாவான்றோரும் "ஒருத்தனே யுன்னை யோலமிட் டலறி யுலகெலாந் தேடியுங் காணேன்" என்றும், "உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே யானுன்னை யுரைக்குமா றுணர்த்தே" என்றும் மணிவாசகப்பெருமான் உரைத்தாங் குரைத்துச் சென்றமையும் பிறவும் நோக்கற் பாலனவேயாம்.

அறநெறியியல் நிறைவேறியது.

ஆகச்செய்யுள் 30.

# பொருணெறியியல்.

## (31) ஆண்மகன் சிறந்தவ னெனிக் கென்றல்.

மடவோர் தம்மினும் வார்கட லுலகி
னடவர் தம்மை மேம்படக் கோடல்
பண்டைநா டொட்டுப் பார்க்கெலா மியற்கை
யிவ்வே மான நான்மறை யியம்பு
மிமையர்வாழ் புறபல வியவுட் கொள்கை
நாட்டவர திசினோர் நங்கைய ரலரே
யாடவர் தமரையு மடவோர் தமரையு
முறைமைய கருவுறீஇ முற்றுநரு மிலரே
யறைபணி யாற்று மடிச்சிய சேய்ப்ப
மடவோ ரன்றே பற்றிரு வோரையுந்
தம்மகடு வருந்தத் தருகுந ரம்மா
வாடூஉ மேலு மகடூஉ கீழு
நாடுதல் விழைதன் ஞாலத் துயிர்க்கெலாங்
கூடுமுறை யாதலைக் குறித்தில ரேயோ
இவற்றான்,
மங்கையர் நிலைமை மாண்பில தேனு
மங்கவர் துணைமையி னன்றோ
தங்கியினித் துலகந் தழைத்தோங் குதலே.

---

(இ—ள்.) [மடவோர் தம்மினும் வார்கட லுலகில்] வார கடல் உலகில் மடவோர் தம்மினும் = நீண்ட கடல்சூழ்ந்த உலகத்தின்கண்ணே மடவோர் தங்களைப்பார்க்கினும்;

மடவோர் அதிகாரப்பட்டமை கருதி முற்கூறப்பட்டனர். நிலப்பாகத்தினும் நீர்ப்பாகம் மிக்கிருப்பது போதர "வார்கட லுலகில்" என்றார்.

ஆடவர் தம்மை மேம்பட கோடல் = ஆண்மக்கள் தங்களை மேன்மையுடையவராகக் கொள்ளுதல்;

இவ்வுண்மையைப் பெண்மை ஆண்மை எனனுஞ் சொற்களின் பொருள்வேற்றுமையே நனகு புலப்படுத்தும் என்க.

[பண்டைநா டொட்டுப் பார்க்கெலா மியற்கை] பார்க்கு எ(ல்)லாம் பண்டை நாள் தொட்டு இயற்கை = உலகத்தவர்க்கெல்லாம் பண்டைக்கால முதலாகக் கொண்டுள்ள இயல்பாகிய குணமாகும்;

"பண்டைநா டொட்டு" என்பது படைப்புக்காலந் தொடங்கி எனப்பொருள்படும். எல்லாச்சீவராசிகளுக்கும் இவ்வியற்கை உண்டென்பது போதரப் "பார்க்கெலா மியற்கை" என்றார்.

இவ்வியற்கையைத் தங்கள் செயற்கையான் மாறுபடுவதற்கு ஒருசாரார் ஆரம்பித்துவிட்டனரே யென்று அவர்தம் பேதைமையை இதுவெனக் குறிப்பித்தாராயிற்று.

மேனாட்டாரும் தங்கள் பெண்பாலாரைத் தம்மோடு சமமொத்தவர் என்று பேச்சளவின் மாத்திரம் சொல்லிக்கொள்வர். காரியத்தளவில் பாராளுமன்றத்திருத்தல், அரசுபுரிதல், போர் புரிதலாதிய விசேட தொழிற்றுறைகள் ஒன்றினும் அவர்களை அமர்த்தாரகள். இன்னும் அந் நாட்டுப்பெண்கள் தத்தம் கொழுநர் பெயரையே அடைமொழிகளைச் சேர்த்துத் தமக்கும் தம்மக ளிர்க்கும் பெயர்வைத்துக்கொண்டு வருகின்றனர். மகனுக்கும் அங்ஙனம் புரிந்துவரும வழக்கா றில்லைப்போலும். பெண்பாலார் பெயரைக் கொழுநர்கட்கிட்டு வழங்கும் வழக்காறில்லை. நம்மவர் சீதாபதி முதலிய பெயர்களையேனும் ஆடவர்கட்கிட்டுவழங்குவர். இதுகொண்டு பெண்பாலாரினும் தாமே அறிவாற்றல்களிற் சிறந்தவர் என்பது அந்நாட்டு ஆடவர் தங்களின் கருத்தென நன்கு புலப்படும். அவ்வாறே பெரும்பான்மைச் சாதியாருள்ளும் ஆடவரே முதன்மையாகக் கணிக்கப் படுவர். இவ்வுண்மையை எழாம்பாட்டுரையினும் செவ்வே விளக்கியிருக்கின்றோம்.

[இவ்வே மான நான்மறையியம்பும] நால்மறை இவ் மான இயம்பும் = நான்கு வேதங் களும் இவற்றை ஒக்குமாறே கூறுநிற்கும்;

"மங்கலமென்ப" என்னுங் குறளினுள் "அதன்" என்ற முறைமைபற்றி "இவ்வே" என்று கூறினார். வேதத்தில் இவ்வாறு கூறப்பட்டிருத்தலின் ஆடவரை மடவோர் தம்மினும் மேம்படக்கோடல் வேண்டும் எனுமிது இங்ஙனம் கூறியது என்னையெனில், வேதப்பிரமா ணத்தை முன்னரெடுத்துக் கூறில் வழக்கினை அழிக்கப்புக்கார் வெற்றிவேண்டி அக்கூற்றை மறுக்கவுங் கூடுமாதலின் உலகவழக்கை முன்னர்க்காட்டிப் பின்னர் நியாயப்பிரமாணங்களானே நிறுவி மேற்கோளுங் காட்டப்பெற்ற விடயம் தோல்வியடையாதாகலின் அங்ஙனங் கூறினார் என்க. உலகவழக்கத்தையும் நூல்வழக்கத்தையும் இங்ஙனம் மறுத்தொழுகத் தொடங்கினரே யென்று குறிப்பித்தாராயிற்று. இவ்வாறு ஆடவரை மதித்துவருதல் பண்டைக்காலந் தொடங்கி எல்லாத் தேயத்தாருக்கும் வழக்கம் என்று குறிப்பித்தாருமாயிற்று.

இம்பர் வாழ் பல் பல இயவுள் கொள்கை = இவ்வுலகத்தில் வாழ்கின்ற பலப்பலவாகிய தெய்வக்கொள்கையை;

"இயவுட் கொள்கை" என்பது தலைமை என்றும் பொருள்படும். ஆதலின் மடவோரான் நாட்டப்பெற்றவை அத்துணைச் சிறந்தனவல்ல என்பது தானே பெறப்படும் என்க. முக்காலத் தும் ஒத்த சீர்த்தி பெற்றுவிளங்கும் அவ்வாடவரான் நாட்டப்பெற்றவை என்பது போதர "வாழ் கொள்கை" என வினைத்தொகையாக்கிக் கூறினார். உம்பரில் எய்தும் பதவி ஒன்றேயாகவும் இம்பரில் பலப்பல பேதவழக்குகள் நடைபெறுவனவா யிருத்தலும்பற்றி "இம்பர்வாழ் பற்பல வியவுட்கொள்கை" என்றனர்.

நாட்டவந்திசினோர் நங்கையர் அலர் = நிலை நிறுத்தற் பொருட்டு உற்பவித்தவர்கள் மடவோ ரல்லர்; (ஆடவரே என்றபடி)

நூலமைத்தல், உபதேசித்துச் செவியறிவுறுத்தல், சிஷ்யபாரம்பரியத்தினால் தூண்டிவிடு தல் ஆதியவற்றால் ஆடவர் உலகத்திற்கு நன்மைபுரிந்துவருதல் கண்கூடாம். இங்ஙனமெல்லாம் அவர் செய்துவரும் அழியாப்பெருமை தோன்ற வந்தார் என்னாது "வந்திசினோரே" என்றார். இனி இயவுட் கொள்கையை மாத்திரம் கூறினாரேனும் மின்சாரம், தந்தி, புகைரதம், நீராவியந்தி ரம், வெடிகுண்டுமுதலாய படைக்கருவிகள் என்னும் இத்தொடக்கத்தனவற்றையெல்லாம் இயற் றலையும், இயற்றவித்தலையும், இயற்றுவதற்கேற்ற பலப்பல தத்துவசாத்திரங்களை யமைத்துக்கோ டலையுந் தழீஇக்கொள்க. இவற்றால் ஆடவர்தம் அறிவும் ஆற்றலும் விளக்கப்பட்டமை காண்க.

ஆடவர் தமரையும் = ஆண்மக்களானோர் தம்மவருக்கத்தாராகிய ஆண்மக்களையும்;

மடவோர் தமரையும் = அங்ஙனமே பெண்மக்களானோர் தம்மவருக்கத்தாராகிய பெண்மக் களையும்;

முறையே கருவுறீஇ முற்றுநரும் இலர்=சொல்லிய முறைமையோடு கருப்பங்கொண்டு வளர்வித்து ஈனுகின்றாருமிலர்;

அவ்வில்லாமை தோன்ற "உறீஇ" என்றளபெடுத்தது. ஆதியில் புருடர்மாட்டமைந்திருந்த கருவானது பெண்பாலார் கருப்பையுட் புக்கிய பின்னரே பூரணதசை அடைதல்பற்றி "முற்றுநருமிலர்" என்றார். இனங்கருதித் "தமர்" என்றார்.

அறை பணி ஆற்றும் அடிச்சியர் ஏய்ப்ப=சொல்லுகின்ற வேலைகளைச் செய்துவரும் பணிப்பெண்களை ஒப்ப;

தாமாகவே விரும்பியாங்கு இயற்றாது கட்டளையிடப்பட்டவாறே புரிபவராதலின் "அறைபணி" என்றும், இட்டபணியை இட்டாங்கியற்றிமுடிக்கும் கடப்பாடுடையவரே பணியாளராதலின் "ஆற்றுமடிச்சியர்" என்றுங் கூறினார். மடவோர் அடிமை போல்பவராயினும் உரிமையாற் சிறந்து மேம்பட்டவர் என்பது போதர அடிச்சியர் என்னாது "அடிச்சிய ரேய்ப்ப" என்று உவமை முகத்தாற் கூறினார்.

[மடவோ ரன்றே மற்றிரு வோரையுந்—தம்மகடு வருந்தித் தருகுந ரம்மா] மற்று இருவோரையும் மடவோர் அன்றே தம அகடு வருந்தி தருகுநர்=கூறிய ஆண் பெண் என்னுமிருபாலாரையும் பெண்களே அன்றோ தங்கள் உதரமானது பொறையான் வருத்தப்படச் சுமந்து பெற்றுத் தருகின்றனர்;

பெண்களது மனமானது புத்திரப்பேறு பலிப்பதைக் குறித்து மகிழ்வுறுதலின் வருத்தங்கொள்வது வயிறென ஒருநயம்படக் குறித்தற்பொருட்டு "அகடு வருந்தி" என்றார். பிள்ளை பெறுதலின் சிரமந்தோன்ற அங்ஙனங் கூறினருமாம். ஆடவர் முதற்கண் கருவினைத் தம்மிடம் வைத்திருந்தும் அதனால் வருந்திலர் என்று குறிப்பித்து அவரைச் சிறப்பித்தாருமாம். மரபுவளாதற்குக் கருவுயிர்த்துத் தருதல் மடவோராகவும் அவர்கது முதன்மை வகுக்காமல் ஆடவரைச் சிறப்பித்தல் எங்ஙனம் முறையாகுமெனின், கொடுப்பவர் ஆடவரும் கொடுக்கப்பட்டதைப் பெற்றுப் பிறப்பித்தல் மடவோரும் ஆதலினானும், பின்னையோர் முன்னையோர்க்குத் துணைவர் அன்றி முதன்மையோராகார் ஆதலினானும் பிறவாற்றானும் முறைமையாகும் என்பது. அவரது இன்றியமையாமை தோன்றத் "தருகுநர்" என்றார்.

ஆடூஉ மேலும்=ஆடவரதம் நிலைமை மேலாகவும்;

மகடூஉ கீழும்=மடவோரதம நிலைமை கீழாகவும்;

ஆடூஉ, மகடூஉ என்பன ஆகுபெயர்கள்.

நாடுதல் விழைதல் ஞாலத்து உயிர்க்கு எ(ல்)லாம் கூடு முறை ஆதலை குறித்திலரேயோ=ருதி விரும்பி உலகத்துச் சீவராசிகளெல்லாம் பொருந்துதலைச் செய்துவரன் முறைமையாதலை மதித்தாருமிலரோ;

பொறி நாடுவதையே மனங்கருதுதலின் "நாடுதல்" ஆகுபெயராய்க் கருதுதல் எனப் பொருள்பட்டது. "ஞாலத்துயிர்" என்றது ஈண்டு உடலோடுறவுபூண்ட உயிர்ப்பன்மைகளை; விண்ணுலகத்தார் இயங்ஙனம் விழையாராதலின் அவரை ப்பிரிதற்காய் "ஞாலத்துயிர்" என்றார் என்றலுமொன்று. கூறியவையெல்லாம் சிரமமின்றி யாவரும் எளிதிற் கண்டுணர்ந்துகொள்ளக் கூடியனவாயிருந்தும் அங்ஙனம் குறிக்கொள்ளாதுவிடுகின்றனரே என்னும் வியப்புச் சுவை தோன்றக் "குறித்திலரே" என்றார்.

இவற்றான்=(கூறிவந்த) இக்காரணங்களானே;

மடவோரினும் ஆடவர் சிறந்தவர் என்பதனை வலியுறுத்தற்கு எத்துணையோ காரணங்கள் இருப்பினும் அவையெல்லாம் ஈண்டு மிகையாகும் இவையே போதும் என்பார் "இவற்றான்" என்று மட்டுஞ்சொன்னார்.

மங்கையர் நிலைமை மாண்பு இலதேனும்=பெண்களது நிலைமையானது (பல்லாற்றானும் ஆடவர் தம்மினும்) சிறப்புடைத்தொன்றன்றாதலினானும்;

"மங்கையர்" என்பது ஈண்டுப் பெண்பாலார்க்கு ஒருபெயராயிற்று. இவர்கள் ஆடவர் ஒழிந்தவனைய எல்லாவற்றினுஞ் சிறப்புடையாராதல்பற்றி ஆடவர்தம்மினும் என விரித்துரைத்தாம்.

அங்கு அவர் துணைமையின் அன்றே = அப்பெண்களது உதவியினாலன்றே;

பெண் என்று கூறப்படினும் ஆடவரினும் அவரே சிறந்தவரெனப் போதருமாதலின் "அவர்" என்றும், அச்சுட்டுக்கு நிலைக்களமாவது முற்கூறப்பட்டது வாதலின் "அங்கவர்" எனவுங்கூறினார்.

[தங்கியினித் துலகந் தழைத்தோங் குதலே] உலகம் தங்கி இனித்து தழைத்து ஓங்குதல் = இவ்வுலகத்துச் சீவராசிகள் நிலைமையுற்று இன்படைந்து செழித்து வளர்தல்;

வளர்தல் துணைமையினான்றே என முடிக்க.

எல்லாச் சீவராசிகளும் நிலைபெறுதல் வேண்டுமென்பார் "தங்கி" எனவும், அங்ஙனந் தங்குதற்குபகாரணம் இன்பமாதலின் "இனித்து" என்றும், உலகமே இவ்விரண்டற்கும் நிலைக்களமாதல்பற்றி "உலகம்" என்றும், மிகச்செல்வதாகிய அம்மைப்பயன் பெறற்குரியவற்றை இம்மையிலே புரிதல்வேண்டுமாதலின் "தழைத்து" என்றும் அவ்வாறு புரிபவரே முத்தியை ஓங்கி அடைவாராதலின் "ஓங்கி" என்றுங் கூறினார்.

## (32) கலைநலங் காட்டி நிலையிது வென்றல்.

உடைமை முற்று மொருவர்நம் பலராய்க்
கடிமிகு வைப்பிற் காவல் புரிகுநர்
பிறர்க்கறி வுறுபயின் பெருந்துன் புறுத்து
மறக்கடுஞ் செயன்மனத் தாஅர நினைக்குநர்
நல்லவர் தீஇக்கு மல்லவர் நலக்கு
முள்ளவ ராக வுழக்கிக் கலக்குநர்
வேட்டன நலனு வெறுத்தன வலவா
நாட்டி நலன்பல வீட்டி நவிருந
ரொவ்வொன் றுற்று முரத்தினா பலவா
லிவ்வுலகு கழிக்கு மியல்பின ரிவரே
யெவ்வகை யொன்றுற் றிணைஇ நல னெய்துவர்
அதனால்,
சான்றோர் பலருந் தமரையும் பிறரையுஞ்
சான்றுநன் கறிவுறீஇத் தழைந்தவு மழிந்தவுங்
காட்சி முதற்கொடு கவினக் காட்டு
மாட்சித் தம்மா மாண்புறூஉங் கலவி
அதுவே,
யுன்னவு முரைப்பவு மொருவினை யுஞற்றவு
மின்னவும் பிறவு மினிதி னடாத்தவு
மருமை சான்ற விருமையு மூழ் துான்றவு
மின்றியமை யாத தென்ப
நன்றியமை பன்னூ லுணர வோரே.

(இ—ள்.) உடைமை முற்றும் ஒருவர் நம்பலராய் கடி மிகு வைப்பில் காவல் புரிகுநர் = (தம்முடைய) உடைமை முழுவதையும் பிறர் ஒருவரையும் நம்பாதவர்களாய்க் காவன்மிகுந்த ஓரிடத்திலே வைத்துக் காப்பாற்றி வருகின்றனர்;

இவ்வுலகத்தினர் ஒருவரையொருவர் நம்பாமற் றத்தம்பொருள்களை இரும்புமுதலியவற்றாற்கொண்டு உறுதியாகச் செய்யப்பட்ட பேழைகளுள்ளே கவனத்துடன் வைத்துப்பூட்டிப் பாதுகாத்துவரல் வழக்கமன்றே. வழக்கமாகின், ஒவ்வொருவருந் தத்தமொழிந்த ஏனையோரைக் கள்வரெனக் கருதிக்கோடும் இக்கொள்கையால் உற்றுநோக்குழி எல்லாரும் கள்வரேயாவர் என்க.

பெரும்பாலும் மனைவிமக்களையும் நம்பமாட்டார் என்பதுகருதி "ஒருவர் நம்பலராய்" என்றார். தம்பொருளைப் பிறர் கவர்ந்து கைப்பற்றினரோ என்னும் ஆசங்கை அடிக்கொருமுறை தோன்றப்பெறுதலிற் "கடிமிகுவைப்பில்" என்றொழியாது "காவல்புரிகுநர்" என்றுங் கூறினார். காத்துவருபொழுதும் அப்பொருள் உளதோ இன்றோ என்னும் ஆசங்கைகொட்பட்டுப் பேழையைப் பின்னும்பின்னும் திறந்துபார்த்து மூடிவருதலின் காக்குநர் என்றொழியாது "காவல்புரிகுநர்" என்றாராம். ஈண்டுப்பரிதல் என்றது பொருள்வேட்கை மிகுதியான் அப்பொருளை இடைவிடாது நெஞ்சத்தலோடு பார்த்துக் காத்துவருதல் பற்றியாம். இவ்வாறே பரிமேலழகியார் போன்ற தொல்லாசிரியர் உரைக்குமாற்றானுந் தெளியப்படும்.

பிறர்க்கு அறிவுறுப்பின் = பிறர்க்கு (வாய்மூலத்தாலேனும் செய்கைமூகத்தாலேனும்) அறிவித்தால்;

பெரும் துன்புறுத்தும் = (சகித்தற்கரிய) பெரியதொரு துன்பத்தையுண்டாக்கும்;

அறக்கடுமை செயல் மனத்து ஆர நினைக்குநர் = மிக்க கொடிய செய்கைகளை (ச் செய்தற்கு) மனசின்கண்ணே நிறைய எண்ணுகின்றனர்;

மனத்தானே நினைக்கப்படுவனவாகிய கொடுஞ்செயல்களை ஒறுப்பிற்கஞ்சி வெளிப்படுத்தாமல் மறைத்தல் உலகவழக்கம். உலகத்தாருள் வெளிப்படையாகக் குற்றம்புரியாதாரை நல்லவராக்கோடலும் உலகவழக்கேயாம்.

நல்லவர் தீக்கும் = (சொல்வன்மையானும் செல்வம் முதலாய பிறவன்மையானும் தங்கள் நற்குண நற்செயல்களைப் பிறர்க்கறிவிக்கும் வன்மையில்லா) நல்லாரைத் தீமைக்குள்ளாகவும்;

நல்லார்தம் நன்மையுணர்கிலராய் அவரைத் தீமைக்குட்படுத்தல் தமக்கே கேடுபயக்கும் என்பது தோன்றத் "தீஇக்கும்" என்றளபெடுத்தது.

அல்லவர் நலக்கும் = (நற்குண நற்செய்கைகள் அறவே) இல்லாதாரை (அவர்தம் சொல்வன்மையானும் செல்வம் முதலாய பிறவன்மையானும்) நன்மைக்குள்ளாகவும்;

உள்ளவர் ஆக உழக்கி கலக்குநர் = உட்பட்டவராகக் கருதி வருத்தி (நல்லாரைத் தண்டித்தும் தீயாரை மேம்படுத்தியும்) கலக்குகின்றனர்;

உலகத்தார் ஒருவர்க்கு நன்மைதீமைகளைச் செய்யுங்கால் அவர்தம் உண்மைநிலையறிந்து ஏற்றபடி செய்யும் ஆற்றலிலராய்த் தத்தம் மனப்போக்கின்படியே செய்துவருவர். ஆனால் காட்சியான் நிலைமை காணப்பட்டு ஏற்றவை செய்யப்படுதல் உண்மையாயிருக்கவும் அங்ஙனங் கூறுதல் குற்றமெனின் அற்றன்று, என்னை? புல்லார்தம் வஞ்சத்தானே உண்மைபோல ஒருவனது நன்மையைத் தீமையாகவும், தீமையை நன்மையாகவும் திரித்துக் காட்டப்படிற் காட்டியவாறே கொள்வது உலகவழக்கமாதலின் என்க. இதனைப் "பெரும்பிணி களையும் பெறலரு மருந்தினை" என்னும் பாட்டானும் "ஒருதுறைப் பணிமாட் டேற்றோர்" என்னும் பாட்டானும் அறிதல் கூடும்.

வேட்டன நலன்(க) = (நன்மையல்லாதனவா யிருப்பினுந் தம்மால்) விரும்பப்பட்டனவாயின் அவற்றை நல்லனவாகவும்;

வெறுத்தன அலவா(க) = (நன்மை யுடையனவாய் இருப்பினும் தம்மால்) வெறுக்கப்பட்டனவாயின் அவற்றைத் தீயனவாகவும்;

நாட்டி நலன் பல வீட்டி நலிகுநர் = (மனசின்கண்ணே நிலைமையாக அமைத்துக்கொண்டு (உலகத்திற்கு இன்றியமையாத) நன்மை பலவற்றையும் அழித்துத் தாமும் வருந்துகின்றனர்;

நன்றன் நிலைமையை உள்ளபடி ஆராய்வதும், செய்வதும், தவிர்வதும், பெறுவதும், உறுவதும், உய்வதும், இறத்தலும் என்றற்றொடக்கத்தனவற்றை அறியாதார் உலகத்தார் என்க.

ஒன்று ஒன்று ஆற்றும் உரத்தினர் = ஒவ்வொரு வினையைச் செய்துவரும் வலிமையையுடையவர்;

[பலவா லிவ்வுலகு கழிக்கு மியல்பினர்] இவ்வுலகு பலவால் கழிக்கும் இயல்பினர் = இவ்வுலகவாழ்க்கையைப் பலவினைகளைப் பலருஞ் செய்துவருதலினானே நடத்தற்குரிய இயற்கையுடையவர்;

இவரே = (இத்தகைய குணஞ்செய்கைகளை உடைய) இவர்தாம்;

எவகை ஒன்று உற்று இனைஇ நலன் எய்துவர் = எந்தத் திறங்கொண்டு (ஒருவரோடு மற்றொருவர்) ஒற்றுமைப்பட்டு(ச் செய்யும் செய்கைகளானே உண்டாகும் பயனுக்கு ஏற்றதாழ்வு கருதி வேறுபடாமற்) கலந்து (தமக்குரிய) நன்மைகளைப்பெறுவர்;

உலகத்தார் ஒன்றனைச் செய்தற்கு மனம் ஒன்றுபட்டுக் கூடார். கூடினும், அதனை இயற்றும்போதும் இயற்றுவதால் வரும் ஊதியத்தை அடையும்போதும் தங்கள் தங்களைச் சிறப்பித்தல் வேண்டுமென்று பிரிவுபடும் இயற்கை நோக்கி "ஒன்றுற்று" என்றொழியாது "இனைஇ" என்றளபெடுத்தது. உலகத்திலொற்றுமைப்பட்டு வாழ்தல் அரிதென்க.

அதனால் = அது காரணத்தானே;

[சான்றோர் பலரும்] பல சான்றோரும் = பல அறிவாளிகளும்;

தமரையும் = (தம்மைப்போலவே நற்குண நற்செய்கைகளில் மேம்பட்டு உலகினை உய்வித்து நன்மை எய்திய) உறவோரையும்;

பிறரையும் = (தீக்குணங்களையும் தீச்செயல்களையும் படைத்து உலகுக்கும் தமக்குங் கேடு விளைவித்த) பிறரையும்;

[சான்றாகன் கறிவுறீஇ] நன்கு சான்று அறிவுறீஇ = நன்மை யமைந்த சாக்ஷிகளாக அறிவுறுத்தி;

சான்றோரும் அவர் தமரும் அவரல்லாப் பிறர்தம் செய்கையைக் காட்டுதலும் நன்மையாதலின் அதனையும் உணர்த்துவான்வேண்டி "அறிவுறீஇ" என்றளபெடுத்தது. "இரக்க மின்மையன்றோவின் றிவ்வுலகங்க ளிராமன்—பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின்றனவே" எனவும் பிறவாறும் கூறியவற்றானே இஃதறியப்படும்.

தழைந்தவும் அழிந்தவும் = (தம் போன்றார் நன்மையமைந்த செய்கைகளைச் செய்து வந்தமையானே) வாழ்ந்து வந்தனவற்றையும் (தமரல்லாத ஏனையோர் தீய செய்கைகளைச் செய்து வந்தமையானே) கெடுதி யுற்றனவற்றையும்;

நன்மை செய்தார் நலம்பெறுதலும் தீமை செய்தார் தீமைபெறுதலும் உண்மையென்றுணர்த்தியவாறு. "தழைந்தவும்" என்றது இருமைக்குங் காரணமாகிய அறம், பொருள், இன்பம் என்னுமிவற்றைப் பெருக்கிவந்தமையானே எப்பொழுதும் ஒளி மிகுந்திருத்தலைக் குறிக்கும். "அழிந்தவும்" என்றது நல்வினைச் சார்புவிட்டுத் தீவினையையே நயந்து உலகினை வாட்டித் தம்மையும் வீட்டியதைக் குறிக்கும்.

காட்சி முதல் கொடு கவின காட்டும் மாட்சித்து அம்மா மாண்புறூஉம் கல்வி = காட்சி, அநுமானம், பிரத்தியக்ஷம் என்னும் அளவைகளானே அழகுபெறக் காட்டுகின்ற பெருமையுடையது (யாதெனில் அதுவே) மாட்சிமை பொருந்துங் கல்வியாகும்;

மாட்சியி னீட்சியும் ஆற்றலும் அன்னபிறவுந் தோன்ற "மாண்புறூஉம்" என்றளபெடுத்தது. அவற்றையெல்லாங் கற்றற்குத் துணைக்கருவிகளாக நிற்பனவே நூல்களெனப்படும், "காட்சி முதற்கொடு" என்றமையான் அளவை நூலும், "கவின" என்றமையான் தொல்காப்பிய முதலாய இலக்கண நூல்களும், "காட்டு மாட்சித்து" என்றமையானே சங்கத்துச் சான்றோர் அருளிய பத்துப்பாட்டு முதலாய இலக்கியங்களும், பிறசான்றோர் இயற்றிய இலக்கியங்களும் அடங்கும்.

இனி இருமைக்குங் காரணமாக இயற்றப்படும் எல்லாக்காரியங்களையும் அறிதலும் கல்வி யெனப்படும். என்னை? அவற்றை அறிதற்காகவே ஒலிவடிவானும் வரிவடிவானும் எழுத்துக்களை உண்டாக்கிச் சொற்களை அறிவித்துப் பொருள்களை உணர்த்தி உண்மை புலப்படுத்துதலின் என்க. இதனைப் "புலனெறி போகிய புலவோர்" என்னும் பாட்டினும் பிறபாட்டினும் காண்க.

அதுவே = அக்கல்வியே;

உன்னவும் = ஒன்றனை ஆராய்ந்து மனத்தான் நினைக்கவும்;

உரைப்பவும் = (அந்நினைத்தவற்றைப் பிறர்க்கு எடுத்துச) சொல்லவும்;

ஒருவினை உஞற்றவும் = (அச்சொன்னவாறே ஒப்பற்ற) ஒருகாரியத்தைச் செய்யவும்;

இன்னவும் = இவைபோனறவற்றையும்;

"இன்னவும்" என்றது பிறர்நினைந்தவற்றைத் தாம் சொல்லுதலையும் செய்தலையும், பிறர் சொல்லியவற்றைத் தாம் நினைத்தலையும் செய்தலையும், பிறர் செய்தவற்றைத் தாம் நினைத்தலையும் சொல்லுதலையும் குறிக்கும். அல்லதூஉம் அவ்வவை அங்ஙனமே நிகழ்தலையுங் குறிக்கும் என்பதூஉமாம்.

பிறவும் = இவற்றிற்கெல்லாம் புறம்பாயவற்றையும்;

திரிகரணங்களானும் புரியப்பெறுதன பெற்றனவாகவும், பெற்றன பெறுதனவாகவும் கருதுதலைப் "பிறவும்" என்றது குறிக்கும். இதனுட் பலஞானுதீத விஷயங்களும் பிறவும் அடங்குமென்ப.

எனவே இவையெல்லாம் உன்னுவதற்கும், உரைத்தற்கும், செய்தற்கும் ஏதுவாயடங்குதலின் "இன்னவும் பிறவும்" என்று பொதுப்படத் தழீஇயினார்.

இனிது உற நடாத்தவும் = இன்பம் பயக்குமாறு செய்யவும்;

அருமை சான்ற இருமை முழுது ஊன்றவும் = அருமை நிறைந்த இருமைப்பயன் முற்றும் நிலைமைபெறும்படி வேரூன்றிக் கோடற்கும்;

உம்மை தொக்கது. மேலே முதநிருதலாய பதவிகளிலே தோன்றி வளர்ந்து மலர்ந்து பயனபெறுவது தோன்ற "ஊன்றவும்" என்றார்.

இன்றி அமையாதது என்ப = இன்றியமையாச் சிறப்பினையுடையது என்று கூறுவர்;

படைப்புக் காலந்தொடங்கி நடந்துவரும் உலகவொழுக்கத்தை அறிந்தாலன்றிச் சிற்றறிவினர்களாகிய நாம் அவற்றைச் செவ்வையாகச் செய்துகொள்ளமாட்டோம் என்பது தோன்ற "இன்றியமையாதது" என்றார்.

[நன்றியமை பன்னூ னாவலோரே] பல் நூல் நன்றி அமை நாவலோர = பன்னூற் பயிற்சியும், (அப்பயிற்சிக்கேற்ற) உதவிபுரி நன்மையும், அமைந்த (நன்னெறியைப் போதித்தலிலே) நாவன்மையையும் உடைய அறிவாளிகள்;

ஒரு வழக்கை விசாரித்து முடிவுசெய்யப் புகுவோன் எவவெவர் எவவெவ வழக்குகளை எவவெவ்விதம் முடிவுசெய்திருக்கின்றனர் என்று அறிந்திருக்கவேண்டியது இன்றியமையாதவாறே போல, உலகத்தார் ஒன்றனை நினைத்தற்கும், உரைத்தற்கும், செய்தற்கும் முன்னோரது வழக்க பழக்கங்களை அறிந்த பின்னரே முற்படுதல் வேண்டும். அவற்றையெல்லாஞ் செவ்விதாகக் காட்டுவது நூல்களாதலின் அவற்றைக் கல்லாமல் ஒன்றனை ஆராய்வான்றுணிதல் ஏதம்பயக்கும் என்க.

சான்றோராவார் விடாமுயற்சியால் தத்தம் அநுபவ வழியானே பலப்பல இன்றியமையாத விடயங்களைக் கண்டு அக்கண்டவாறு உலகங்கொண்டின்புறுமாறு அவற்றையெல்லாம் இதயங்கொள்ளும்வண்ணம் நூல்வழியானும் பிறவழியானும் அருளிச்செய்தவர், சான்றோர்—இராமன் போன்றோர்; தமர்—அகத்தியனார் தொல்காப்பியனார் முதலாயினோர்; பிறர—இராவணனியர் போன்றவர்,

இனிச் சூத்திரமும், பாட்டும், பலதிறப்பட விரிந்தனவற்றைச் சுருங்கக் கூறன் முதலாய அழகுகளையும், எழ்வகைக்கொள்கைகளையும், என்னுன் குத்திகளையும் ஏற்றபெற்றி அமைய வைத்து மனத்தின்கண் பொருந்துதற்குரிய இயல்பினவாம். முக்குணவயப்பட்ட நாம் விரிந்தனவற்றை அங்ஙனமெல்லாம் செய்துகோடல் சாலாது. இது கருதியன்றே மூலபாடம் ஆவசியகம் எனப் பண்டைச் சான்றோராலும் போற்றப்பட்டு வந்தது. விரிவையும் அங்ஙனமே செவ்வையாக விரித்தல் அவர்க்குப் பழுதுபடும். ஆதலின் உரை விகற்பங்களும் இன்றியமையாச் சிறப்பின என்க. இவற்றை "எழ்வகை யிசையினக் கேற்ப" என்னும் பாட்டின் "முவ்வகை * * * தம்பயன் கெடுக்குந" என்ற பகுதியுட் காண்க. ஆதலிற் சான்றோர் முறையைத் தபுத்துத் தாந்தாம் மனம்போனவாறு புரிந்து கோடலும் பிறவும் பொருந்தாவென்க.

இக்கூறியவற்றானே எல்லாவிஷயங்களையும் நூல்யாப்பினுதல் பாவினுதல் இயற்றி உரை விகற்பங்களோடு கற்றுத்தேர்ந்து வரும் பண்டைய முறையே சிறந்ததெனபது வலியுறுத்தப் பட்டது.

---

(33) எழுதா மரபின வாதலின் மறைகள்
வழுவா தென்று மன்னின வென்றல்.

எழுதி யாவரு மெண்ணியாங்கு முறையே
பயிலற் குரிய பான்மைய வாகின்
மனத்திடை வளாவொரீஇ யேட்டிடை வளர்ந்து
புறநாட் டவர்தம மெரிபுகுந்து பொன்றி
யறவே யழியு நான்மறை யாதலி
னந்தணர் தமக்கே யாக்கினர் சிறப்பென
வதனை யன்றே யிற்றைஞான் றவருங்
காதிடைக் கேட்கவுங் கண்ணிற் காணவும்
வாயிடை யொழுங்கவும் வாய்ப்புடைத் தாயின
வெனக்கொடு நட்புற் றிணைந்து
மனக்கச டற்றுநாம் வாழ்வது முறையே.

---

(இ—ள்.) நால் மறை = நான்கு வேதங்களும்;

மறை நான்காவன பவுடிகம், தைத்திரியம், கௌசிகம், அதர்வணம் என்பனவாம. இவற்றை முறையே இருக்கு, யசு, சாமம (கீதவேதம்), அதர்வணம என்றும் வழங்குப.

[எழுதி யாவரு மெண்ணியாங்கு முறையே] யாவரும் முறையே எண்ணியாங்கு எழுதி = எல்லாரும் முறைமை இதுவெனக் கருதியபடியே (ஏட்டின்கண்) எழுதப்பெற்று;

"பான்மைய வாகின்" எனனும் பின்வரு முடிபினை நோக்கி "எழுதி" என்பதற்கு இங்ஙனம் பொருளுரைத்தாம். எழுதியென்றாரேனும் அச்சிடுதலையும் அடக்கிக்கொள்க. ஒரு சாதியார் வேதங்களை ஓதிவரவும் பிறரெல்லாம் வாளாவிடுதல் சரியாகுமா, எல்லாராலும் ஓதப்பெற்றுவருதல்வேண்டுமே, இது முறைமையாகுமா? எனக் கருதுகின்றனர் என்பார் "முறையே"

என்றார். எண்ணிய வண்ணத்தை முறையென்று செய்துகொண்டார் இக்காலத்தார் என்பது போதர "முறையே யெண்ணியாங்கு" என்னாராய் "எண்ணியாங்கு முறையே" என்றனர். அவற்றை எழுதுவது எல்லாரும் பயின்றுவருதற்குச் சிறந்த சாதனம் ஆகையால் "எழுதி" என்றார், ஒருவர் எழுதினுன் மட்டும் போதாது பலரும் எழுதுதல் வேண்டுமென்பார். "யாவரும்" என்றும் (இஃது அச்சில்லாத அக்காலங்களைக் குறித்ததென்றறிந்து கொள்க.) எழுதுவதின் மாத்திரமன்றிப் பயிறற்கண்ணும் விருப்பஞ் சென்றதென்பார் "எண்ணியாங்கு முறையே பயிலற்கு" என்றும் கூறினார். ஈண்டுப் பொருள்கோள் செய்தமைக்கும் காரணங்கூறியபடி காண்க. அந்தணர் வேதத்தை எழுதிவைக்காமலும் பிறர்க்கு ஓதுவிக்காமலும் தாங்களே மனனம்பண்ணிப் பெருமையடைந்து வருகின்றனரே என்பார் செய்கை ஈண்டுக் கூறப்பட்டது. எழுதுவதற்கும் பிறர் கற்றற்கும் அதிகாரமின்மை முன்னரே விளக்கப்பட்டது. இன்னும் வேண்டுமாயின் வல்லார்வாய்க் கேட்டுணர்க. ஈண்டு லௌகிக முறைமைகாட்டி அவரையெல்லாம் ஒன்றுகூட்டி ஒற்றுமை நாட்டுவான் புகுந்தார்.

பயிலற்கு உரிய பான்மைய ஆகின் = ஓதுவதற்குரிய தன்மை யுடையனவாயின்;

பன்னாள் சிரத்தைகொண்டு ஓதிவரப்பெறும் பழக்கத்தானே கைகூடும் என்பார் "பயிலற்கு" என்றார். "ஓதி யோதி யுணருந்தொறு முணர்ச்சி யுதவும்–வேதம்" என்பர் கம்பநாடர். அங்ஙனம் கைவரப்பெற்றாலும் அவற்றைச் சுரலய பேதங்களும், உச்சரிப்புத் தவறுகளும் இல்லாமல் அமைத்துக்கோடன் மிக வருமைத்தென்பார் "உரிய பான்மைய வாகின்" என்றனர். "தேற்று மாக்க ளாரியம் போலக்–கேட்போர்க் கெல்லாம் பெருநகை தருமே" என்னும் மேற்கோளும் ஈண்டைக்கேற்கும். தேற்றுமாக்கள்–அப்பிராமணா.

மனத்து இடை வளர்வு ஒரீஇ = (அந்தணர்தம் உள்ளத்தின்கண்ணே வளர்ந்துவந்தனவாகிய அவை ஆண்டு) வளர்ந்து வருதலை விடுத்து;

வேதத்தைப் பாடம்பண்ணியவன் விப்பிரன் எனப்படுவான் என்பவாகலின் அந்தணரெல்லாம் ஆவசியகம் போற்றிவருவார்கள். இவ்வாறன்றி யாவரும் வேதத்தைக் கற்றற்குரியார் என்றமையுமாயின் ஒருவரும் அதனை மனனம் பண்ணாமல் ஏடுமுதலியவற்றிலே எழுதிவைத்துப் புறமதத்தார்தம் சூழ்ச்சிக்குட் படுத்தியிருப்பர் என்க. மனசினைவிட்டு ஒருவுதலே அவ்வேதத்திற்கு ஏதம் பயக்கும் ஆரம்பகாலமாதலின் அதுதோன்ற "ஒரீஇ" எனறளபெடுத்தது.

ஏடு இடை வளர்ந்து = ஏட்டில் (எழுதப்பெறுதலினானே அதன்) இடத்திலிருந்து வளர்ச்சி எய்தி;

அந்தணர்மேல் எரிபற்றினாலும் சிலராவது ஓடித்தப்பி ஆம் வேதத்தைக் காப்பாற்றிவருவர். ஏட்டின்மேல் எரிபற்றினால் அந்தோ அவ்வேடுதான் என்செய்யும். வீணே சாம்பராகும். வேதமும் ஏதங்கொண்டு நீக்குணவாகும்.

புறம் நாட்டவர் தம எரி புகுந்து = புறங்கொள்கையையுடைய் வேற்றுநாட்டவர்தம்மால் இடப்பட்ட தீயினிடையிலே புகுந்து;

வேதத்தை அழிப்பவர் புறமதத்தினராதலின் அங்ஙனம் அடைபுணர்த்தப்பட்டது. காப்புடைய இடத்தில் அவ்வேதங்கள் வைக்கப்பட்டிருந்தாலும் அவர்களிடப்பட்ட தீயானது தாவிக்கொளுத்துதலின் அவை அத்தீயினிடை வந்து புகும் எனனும் இயற்கைச்சுவை பயப்ப "எரி புகுந்து" என்றார். அப்புறத்தவரிடப்பட்ட தீயினிடையிலே இவைபுகுந்து என்றுங் கூறுப. அக்கருத்திற்கு புறநாட்டவர் எரியிடைப்புகுத்த என்றாங்கு அமைதல் வேண்டும் ஆதலின் அது பொருந்தாதென்க.

பொன்றி அறவே அழியும் ஆதலின் = அழிந்து முற்றும் கெட்டொழியும் ஆதலினானே;

பொன்றுதலும் அழிதலும் ஒருபொருள் பயத்தலின் பின்னையது மிகையன்றோவெனின், அற்றன்று; என்னை? ஏட்டின்கண் உள்ள வரிவடிவங்களின் நாசத்தினைப் "பொன்றி" என்பதூஉம், ஒலிவடிவங்களின் நாசத்தினை "அழியும்" என்பதூஉம் குறித்துநிற்றலின் என். மனசிலுள்ள சிறுபகுதியும் பயன்படாதென்பார் "அறவே யழியும்" என்றனர். வேதத்தை

ஒரு சாதியார்க்கு மாத்திரம் கொடுக்காமற் பொதுமையாக்கி முன்னோர் வைத்திருந்தாராமாயின் அது அக்காலத்திற்றானே யவனர் முதலிய கொடியோரால் அழிக்கப்பட்டிருக்குமென்க.

[அந்தணர் தமக்கே யாக்கினர் சிறப்பென] அந்தணர் தமக்கு சிறப்பு என ஆக்கினர் = (எல்லார்க்கும் பொதுவாக்காமல்) அந்தணர் தங்களுக்கே சிறப்புடையதாகும் என்னும் விதியை விதித்தார்;

அதனான் அன்றே = அக்காரணத்தா லன்றே;

இம்மறை ஞான்றவரும் = இந்நாண் மாந்தர் தாமும்;

காது இடை கேட்கவும் = (பிறர் அவ்வேதத்தைக் கூறுங் காரணத்தானே தாங்கள்) காதின் வழியாகக் கேட்கவும்;

கேட்கவும் என்றதுவே சாலுமாகவும் காதிடை என மிகுதிப்படக் கூறியதால் அவ்வேதத்தைக் கேட்டும் பெருமையைப் புலப்படுத்தினாராயிற்று.

கண்ணில் காணவும் = கண்ணாலே (அதனுடைய வரிவடிவத்தைக்) காணவும்;

வாய் இடை வழங்கவும் = வாயினால் ஓதவும்;

கேட்டலுங் காண்டலும் என்னுமிவற்றால் வழங்குதல் பெறப்படவும் அதனையும் விரித்துக் கூறுதல் மிகையேயெனில் ஆகாது. சரலய உச்சாரண முறையெலாம் பெறுதற்குப் பயிற்சி பலபடி வேண்டப்படுதலின் என்க. ஒலிவடிவங் காரணமாக வரிவடிவம் ஏற்பட்டமையின் அவ்வரிசை நோக்கிக் கூறப்பட்டன.

வேதங்களை அச்சிட்டுப் பலரும் படித்தற்குரிய காலம் பலவாயின. ஆயினும் பெற்ற பயன்றான் யாது? தமிழ் நூல்களை இருந்துவருஞ் சிலவற்றைப்போலும் காத்தற்கு இயலாத இவர்க்கு இருந்துவரும் பேராசையை அளவிடுதற்கு இயலாது. அந்தணர் வேதமோதுதலைத் தவிர்த்தமைதான் பெரும்பயன். அவர் உத்தியோகங்களை வகித்துப் பெருமை அடைந்துவிட்டனரோ என்பது இதுபொழுது நடந்துவரும் போராட்டமாம். இவ்வ[illegible] இன்னும் எத்துணைக் காலங்கட்கு இங்ஙனம் இருந்துவருமோ இறைவனுக்கேதான் வெளிப்படை.

வாய்ப்பு உடைத்து ஆயின = பொருத்தமுடையனவாயின;

எட்டிடை இருந்திருப்பின் இங்ஙனமெல்லாம் வாய்க்கப்பெறா என்க.

என கொடு = என்ற இவற்றையெல்லாம் உட்கொண்டு;

நட்பு உற்று இணைந்து = (அவ்வந்தணரோடும் அவர்க்கு விதிக்கப்பட்ட விதியின்மேலும் அவ்விதியினை நன்கு போற்றிவருவார் மேலும் மாறுபாடு கொள்ளாமல்) நேசம்பொருந்தி மனமிணைந்து;

நட்புறுதற்கு மிகச்சேய்மைக்கண் இருப்பார் என்பது தோன்ற "நட்புற்று" என்றும், அங்ஙனம் உறுதலும் அவர்தம்மோடு சேர்தலும் மிக அருமையுடையன என்பார் "இணைந்து" என்றும் கூறினார். புறத்தோற்றத்திற்கு இணைந்தாற்போலத் தோற்றப்படுதல் ஒருவேளை இயையுமேனும் அகத்தின்கண்ணும் அவ்வாறே இயைந்துவருதல் மிக்கதோர் அருமைத்து என்பார் "இணைந்து" என்றாருமாம்.

மனம் கசடு அற்று நாம் வாழ்வது முறை = மனக்குற்றம் அறப்பெற்று நாம் வாழ்ந்து வருதலே முறைமையாகும்;

மனமிணைந்தாலன்றி மனக்கசடறப்பெறாது என்பது தோன்ற "இணைந்து" என்றதற்குப் பின்னர் "மனக்கசடற்று" என்பது கூறப்பட்டது. இனையோர் ஒற்றுமையில்லாதிருப்பரேல் அந்தணர் தமக்கும் நல்வாழ்வில்லை யென்பார் "முறையே" என்றுங் கூறினார்.

(34) தமிழ்தழு வாத தாழ்மதி யினர்பாற்
பொருள்வரு மென்னப் போதறவ றென்றல்.

எருமை முழுப்பொரு ளியையு மெனினே
யுரிமையொடு சென்றுங் குவந்துதலை வணங்கி
யருமைப் பனுவலை யதன்கைப் படுத்திச்
சிறிதுபொருள் கொண்டு திரும்புந ரன்றி
நல்லறி வுடையோ னற்றமிழ்ப் பாவலன்
வறிஞ னுரைகோ ளாளன் வாய்மையன்
வழிபடு தகையா னிவனே யென்றவற்
கொன்றுத வாற்றல் புலவோர்க் கில்லெனி
னாற்றுந ரச்சிற் போற்றிய பனுவலைப்
பொருள்கொடுத் தேற்றுப் புரைகொளா தவற்றை
யருள்வழி யளித்தற் காஞ்செல் வோரெலா
ரிருள்வழி மருளுந் திறத்தன ரேயோ
செந்தமிழ்க் கழகந் திருத்தநற் கொருப்பட
நிறைபொருள் பிறமொழி நிலவுற நீட்டுவ
ரிவரே தமிழ ரிவரே செல்வ
ரிவரே யறிஞ ரிவரே பெரிய
ரிவரே யறவோ ரிவரே குலத்தினர்
இனியே,
தொட்டுழி யெல்லா மினிமை சுரப்பன
நோக்குழி யெல்லா நுண்மை சான்றன
துளக்க மில்லாத் துணிபொருண் முற்றின
வளக்க வொண்ணா வளவு நிறைந்தன
பண்டைச் சான்றோர் பாலித்த மும்மைத்
தண்டமிழ்ப் பனுவலைத் தம்பொரு ளென்னப்
போற்றா தழித்தோர்க்குப் பொருளு நிலையுமே
யவற்றை யெல்லா மவாவி யாயாத
தமிழர்க் காக்கக் கேடுபிறி துவேண்டு
முண்மை கூறி னுலக முவர்க்கு
நன்றுநன் றம்மா நன்றே
யொன்றிய தமிழ்நாட் டுடைமைநனி நன்றே.

---

(இ-ள்.) எருமை முழு பொருள் இயையும் எனின் = மந்தமிகுந்த எருமையானது நிறைவாகிய செல்வத்தைப் பொருந்தியிருக்குமென்றால்;

எருமை மந்தபுத்தி யுடையதாதலின் மக்களுண் மதிகெட்ட மடவோரை அதற்கொப் பிட்டுப் பேசுதல் சிலநாட்டு வழக்கம். "எருமையிற் குறைந்த மதியின ராயினும்-பெருநிதி

யுளனே லரசரும் போற்றுவர்'' என்றார் பிறரும். எருமைப் பாலைத் தயிரைப் பெருமிதமாக உபயோகித்தவரின் புத்திமழுங்கி மந்தமாகு மென்று கூறுப. எருமை—ஆகுபெயர். இதற் கேற்பவும் உரைத்தல் கூடும்.

பாவமற்றிருத்தல், நோயற்றிருத்தல், தருமசிந்தைபெற்றிருத்தல், காரணமில்லாமலே கொடுக்கும் இச்சைகொண்டிருத்தல், சுத்தமுடைமை, பழிக்கப்படாத சீவனத்தொழிலுடைமை என்னும் இவ்வாறிலக்கணங்களையும் பொருந்தியவனிடமே பொருள் எய்தலாகும் என்னும் அற நூல் விதியை அறவே கடந்து எருமையொத்த மந்தபுத்தி யுடையோனாயினும் நிறைசெல்வம் பெற்றுளனாயின் அவன்பாற் சென்று பொருள்கேட்டு நிற்பர் என்பது குறிப்பு. "இலறன்மை கண்டு முடையாரை யாருங்—குறையிரந்துங் குற்றேவல் செய்வா" என்பது நீதிநெறிவிளக்கம்; "ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகிற்—போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதும்—கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி—விடாஅ ருலகத் தவர்" என்பது நாலடியார்; "கல்லானே யானு லுங் கைப்பொருளொன் றுண்டாயி—னெல்லாருஞ் சென்றங்கெதிர்கொள்வர்" என்பது நலவழி; ஏற்ப விரித்துக்கொள்க.

பெருநிதி பெரும்பான்மையும் அறிவில்லார்மாட்டே அமைதல் எங்ஙனமெனில், அறி வுடையான் தருமவழியினாலே பொருளைச் சம்பாதித்துச் சம்பாதித்தவற்றை அவாக்கொடு பேழையுட்சேமித்து வைக்காமல் சற்பாத்திரங்கள் முதலிய தருமவழி பலவற்றினும் நாடோறுஞ் செலவிடுகின்றான். (ஆகவே பொருள அவனைப் பொருந்தவருவழி ஒன்று, பிரிந்துபோம் வழி பலவாதல் காண்க.) அறிவிலானோ பகுத்தறிவைத் தொகுத்து மறைத்தொதுக்கி நல்வழி தீவழி என்று கருதாமல் எதிர்ப்படும் எல்லாவழியானும் பொருளைத்தேடி அவாமேலீட்டால் தேடிய வற்றைக் கடிய வட்டிக்குக் கொடுத்தல், ஈடு, ஒற்றி முதலியன பிடித்து ஆதனங்களை அறுதி யாக்கிக்கொள்ளல் ஆகிய பலதுறைகளானும் பொலிவுறப் பெருக்கிப் பெருக்கியவற்றை நோயுற்றவிடத்துக்கொள்ளும் மருந்துபோல இன்றியமையா ஆவசியமுற்றுழி மாத்திரம் அருக்கிச் சுருக்கிச் செலவிடுவான ஆதலின் அவனிடமே பொருள் திரண்டு குவிந்து பவகருன் றம்போனாறு பல்கிவருமென்க.

[உரிமைகொடு சென்றாங் குவந்துதலை வணங்கி] ஆங்கு சென்று உரிமை கொடு உவந்து தலை வணங்கி = எருமையிருக்கும் அவ்விடத்திற்குப்போய் உரிமைகொடு அதனை விருமபிப்பார்த் துத் தலையால் வணக்கஞ்செய்து;

அங்ஙனஞ் செய்தது அதனை முதற்கண் உரிமைப்படுத்திக்கொண்டால் அதனிடமிருந்து தாம்பெற விரும்பியதை எளிதிற் பெற்றுக்கொள்ளலாம் என்பது கருதியென்க.

அருமை பனுவலை அதன் கை படுத்தி = தாம் அருமையாக இயற்றி அச்சிட்ட நூலை அவ வெருமையின் வசத்திலே ஒப்புவித்து;

சிறிது பொருள் கொண்டு திரும்புநர் அன்றி = சிற்றுணை அளவினதாகிய பொருளைப் பெற்றுக்கொண்டு திரும்பிவருகின்றனரேயன்றி;

நூலினருமை அறியாதவராயினும் அவர் செல்வராய் இருப்பரேல் தாம் அரிதினியற்றி அச்சிட்ட பனுவலை அவரிடங்கொடுப்பர் என்பதூஉம், பனுவலின் தகுதிக்கேற்ற பொருள் கொடாமல் மிகச் சிற்றுணைப் பொருளையே அவர் கொடுப்பர் என்பதூஉம், அச்சிற்றுணைப் பொருளைப் பெறவானவேண்டி அன்னாரைக்கண்டு உரிமைகொடு தலைவணக்கஞ் செய்வர் என் பதூஉம் ஈண்டு விளக்கப்பட்டன.

நல் அறிவு உடையோன் = (நூல்களைக் கற்றற்கும், அக்கற்றவழி நல்லொழுக்கத்திலே வழுவாது நிற்றற்கு முரிய) நன்மை அமைந்த அறிவினையுடையோன்;

நல் தமிழ் பாவலன் = நல்ல தமிழ்ப் பாக்களைச் செய்தலிலே வல்லவன்;

போலிப் பாக்களைச் செய்வோருண்மையின் இங்ஙனம் கூறினர். நல் தமிழ், நல் பா என்க.

வறிஞன் = (உணவீட்டுந் தொழிலைக் கைவிட்டுக் கற்றற்கு அமைந்தமையான்) வறுமை யைப் படைத்த அத்தகையோன்

உரை கோளாளன் = ஆசிரியன் உரைப்பனவற்றை விரைந்து கற்றுணர்ந்துகோடலிலே வல்லவன்;

வாய்மையன் = உள்ளத்திலுசித்தவற்றையே வாயாலுரைக்கும் வல்லமையுடையோன்;

“வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந் தீமை யிலாத சொலல்” என்றார் பெருநாவலர். வாய்மை—சொலல் என்றும் முடிபினையும் நோக்குக. சத்தியத்தைத் திரிகரணங்களானுங் காத்தல்வேண்டும் என்பது தோன்றற்கன்றே உண்மை, வாய்மை, மெய்மை என்னுமிவை அமைந்தன என்ப.

வழிபடு தகையன் = அறநெறியிற் பிறழாத வழிபாட்டைச் செய்யுந் தகுதியையுடையோன்;

இவன என்று அவற்கு ஒன்று உதவு ஆற்றல் = இவனொருவனே ஆவான் என்றுணர்ந்து அவனுக்குப் பொருந்துவதாகிய ஒரு நூலைக் கொடுத்தற்குரிய வல்லமை;

“பனுவல்” என்று மேற்கூறப்பட்டமையின “ஒன்று” என்றதற்கு இங்ஙனம் பொருளுரைத்தாம். இனி அவையவைக்கு வேண்டிய வெவ்வேறாறைக் கொடாவிடின் அதனாற் பெறு பயன் இலதாகும் ஆதலின் “ஒன்று” என்றதற்கு அடைகொடுத்து அங்ஙனம் விரித்தாம். “வறியார்க்கொன் றீவதே யீகை” என்பது குறள். மேற்கூறிய இலக்கணமுடையவர்க்கே நூலைக் கொடுத்தல்வேண்டும் என்பதனைத் தொல்காப்பியவுரை முதலியவற்றுட் கண்டுதெளிக.

புலவோர்க்கு இல் எனில் = புலவர்களுக்கு இல்லை என்றால்;

பொருளில்லாதவர் இவ்வாறு புத்தகங்களையெல்லாம் கொடுத்துவிடுவாராயின் வறுமை கனியுற்று அத்தகைய முயற்சிகளிலே செல்லற்கியலாராய்ச் சிறைமுதலிய தண்டத்திற் குட்படுவர் என்க.

ஆற்றுநர் = (மேற்காட்டிய அறிவாளிகளுக்குதவும்) ஆற்றல் வாய்ந்தவர்;

கொடுப்பதாற் குறைவுபடாத செல்வத்தினர் என்க. “ஆற்றுநர்க் களிப்போர்” என்பது அறவணவடிகள் கூற்று.

அச்சில் போற்றிய பனுவலை - அச்சிடப்பெற்ற நூல்களை;

அவற்றையென்று முன்னாக கூறப்பட்டதற்கிணங்கப் “பனுவல்” என்றதைப் பன்மையாய்க் கொண்டனம். இவ்வுலகில் பலரும் பயன்பெறுதற்கும் இறந்துபடாமல் வருதற்கும் வழி அதுவேயாகலின் “அச்சிற் போற்றிய” என்றார்.

பொருள் கொடுத்து ஏற்று = அப்பனுவல்களுக்குரிய பொருளைக்கொடுத்து அவற்றையெல்லாம் ஏற்றுக்கொண்டு;

கல்வி கேள்விகள் இல்லாத பொருளுடையார் இதுவுஞ் செய்திலர் என்பது குறிப்பு.

புரை கொளாது அவற்றை = குற்றம் பொருந்தாமல் அப்பனுவல்களையெல்லாம்;

இராமபாணம் (ஒருவகைப்புழு), சிதல் முதலியன மலிந்தவிடங்களும் மூடரில்லங்களும் புரையுறுதற்கு ஏற்றவிடங்களாம்.

அருள் வழி அளித்தற்கு ஆம் செல்வோர் எ(ல்)லாம் = கருணையே காரணமாக (வறுமை சான்றகற்றோர்க்கெல்லாம்) கொடுத்துவருதற்கு இசைந்துளவாகும் செல்வத்தையுடையயாவரும்;

மன்னுயிர் ஓம்புதலே அருளாடல் என்பவாகலின் அளிப்பிற்கு அளியைக் காரணமாக்கினார். அருளாகிய வழியென்க. அங்ஙனம் அளிப்பார் ஒருவரும் இல்லையென்றபடி.

இருள் வழி மருள் உற்று இறந்தனரேயோ = பாவநெறியில (தீயனவற்றை இனியனவாக விரும்பிச்செய்து) மதிமயக்குற்று (அங்ஙனம் செய்துவந்தமை காரணமாக) தரித்திரராயினரோ;

நல்லனவற்றைப் பகுத்துக் கோடற்கு வேண்டிய ஆற்றலின்மையால் “இருள்வழி” என்றும், அவ்வின்மையாகிய காரணத்தின் காரியம் மருட்சியாகலின் “மருளுற்று” என்றும், அம்மருளுற்றோர் தம்செல்வத்தையும் போற்றார், போற்றாராகவே அவர் பொருளும் பொன்றிவிடும்,

பொன்றவே பிறரினும் இவர் மேம்படற்குக் காரணமாகின்ற அச்செல்வம் அகன்றதுவாகலின் "இறந்தன ரேயே" என்றுங்கூறினர். இறத்தல்—அகன்று சேறல். "நம்பிபொன் பெரியன்" என்றங்கு முதலொடு முடிந்தது. இனிச் செல்வமுடையாரைச் செல்வமிருந்தும் இங்ஙனம் முயலவாராமையாற் சபித்தாருமாம். "நாறாத் தகடேபோ னன்மலர்மேற் பொற்பாவாய்—நீறாய் நிலத்து விளியரோ—வேறாய—புன்மக்கள் பாலே புகுவாய்நீ பொன்போலு—நன்மக்கள் பக்கந் துறந்து", "புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா—ருய்த்தக மெல்லா நிரப்பினு—மற்றவற்றைப்—போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து—தேற்றும புலவரும் வேறு" என்புழி நாலடி. இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

செம் தமிழ் கழகம் திருத்தற்கு ஒருப்படார் = செந்தமிழ்மொழி பயிற்றிவரும் பாடசாலைகளைச் செப்பனிடுதற்கும் மனமிசையமாட்டார்;

"திருத்தற்கு" என்றமையானே முனனே செய்யப்பட்டிருந்தமை பெறப்படும். அவற்றிற் குண்டாகிய பழுதுகளைப் பொருளசெலவிட்டுத் திருத்தமாட்டார் என்பதாம். உம்மை தொக்கது.

[நிறைபொருள் பிறமொழி நிலவுற நீட்டுவர்] பிற மொழி நிலவு உற நிறை பொருள் நீட்டுவர் = (தமிழ்மொழிஅல்லாத ஆங்கிலம் முதலிய) இதர பாஷைகள் மிக்கு விளங்குமாறு நிறைவுற்ற தம்பொருளை (ஆடம்பரமகருதி) வழங்குவர்;

நிறை பொருள்—தமக்காவனவற்றிற்கெல்லாம் கழித்தும் மிகுந்திருக்கும் பொருள். இன்னோர் செயலை உற்றுநோக்குங்கால சுமந்து வருநதிப்பெற்றுவளர்த்த தாயானவள் வறுமையாற் பசித்துவருந்தி வீட்டிலிருந்துவாடவும் அதனைப்பொருட்படுத்தாமல் வெளிப்போந்து பிராமண போஜனம் முதலாய தானங்களைச் செய்யும் பேயன்றன் பேதமைச்செயலைப் பெரிதுமொக்கும். பிறமொழி வளர்ச்சிக்கு மிகுதியும் கொடுப்பர் எனபது போதர "நீட்டுவர்" என்றார்.

இவரே தமிழர் = (இழிசனராகிய) இத்தகையர்தாமோ தமிழ்ச்சாதியார்;

இவரே செலவர் = (இவவிழிகுணம் படைத்த) இவர்தாமோ பணக்காரர்;

தமிழராவார்தம் செல்வமிகுதி அன்னவர் தேசத்திற்கும் பாஷைக்கும உரியதுவாகி நலன் பெறச் செய்தற்பாலது. இவர்தம் செல்வமோ அங்ஙனஞ் செய்யாமையால் "இவரே செல்வர்" என்றார். இவர்தம்மைப் பணம்படைத்த வறியோர் என்ப. "பொதுமகளே போல்வ தலையாயர் செல்வங்—குலமகளே யேனையோர் செல்வங்—கலனழிந்த—கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயர்—செல்வம் பயனபடுவ தில்" எனபது நீதிநெறிவிளக்கம். "கூடன் வாங்கியும் பட்டினி கலியாணஞ் செய்தும் பிரமசாரி" என்னுமிது உலகவழக்கு.

இவரே அறிஞர் = (இழிந்த மதியுடைய) இவர்தாமோ அறிவாளிகள்;

தமது பாஷையின்கணணே விரும்பிய பேறெல்லாம் அடைதற்கு ஏற்றவழி பல இருப்பவும் பிறமொழியி லுண்டென்று மயங்கித் திரிவுபடுவாராதலின் "இவரே யறிஞர்" என்றார். "கையின் கலசப் பாலருந்தக காணுதென்றே கவிழ்த்தூற்றி—வெய்யிற் கானற் புனலெடுப்ப விழைந்தே செல்லும் பேதையரின * * * *" என்பதை நோக்குக.

இவரே பெரியர் = (புல்லிய குணமுடைய) இவர்தாமோ பெரியவர் எனத்தக்கார்;

தம்பாடைக்குந் தேயத்திற்கும் ஆண்மையாகவே உயர்ச்சிதருவனவற்றைத் தேடிச் செய்யாதவராதலின் "இவரே பெரியர்" என்றார்.

இவரே அறவோர் = (அறமுறை தெரியாத) இவர்தாமோ இருவகை அறங்களையும் இயற்றுவோர்;

இருவகை யறங்களாவன இல்லறமுந் துறவறமும். படிப்பது திருவாசகம் இடிப்பது சிவாலயம் என்றாங்கு இன்னரெல்லாந் தங்களைத் தமிழர் தமிழர் என்று புனைந்து கூறிக்கொண்டு தமிழ்மொழிக்கும் தமிழகத்துக்கும் கெடுதிசெய்து வருகின்றனர் என்க.

இவரே குலத்தினர் = (நல்லொழுக்கமற்ற) இவர்தாமோ மேன்குலத்தோர்;

இல்லை யென்றபடி.

பிறமொழியைப் போற்றிவருதலாற் றம்மொழியை அழிக்கின்றார் ஆதலின் "இவரே தமிழர்" என்றும், செல்வ முதலிய புறக்கருவிகள் வாய்க்கப்பெற்றிருந்தும் அவற்றால் அடைய வேண்டிய பயனை அடையாமல் இழத்தலின் "இவரே செல்வர்" என்றும், அறிவுடையோர் இங்ஙனமெல்லாம் செய்யார் என்பார் "இவரே யறிஞர்" என்றும், அவ்வறிவில்லார் எப்பொழுதுந் தம்மை அணிந்து கூறிக்கொண்டு தங்களுக்குற்ற கேடுகளைக் கருதார் என்பார் "இவரே பெரியர்" என்றும், இவ்வெல்லா விழிகுணஞ் செய்கைகளையுடைய இவர்க்கு அறனுங் குலனும் எவ்வாறு வந்துபொருந்தும் என்பார் "இவரே யறவோ ரிவரே குலத்தினர்" என்றுங் கூறினார். அறத்தானாவது குலனுதல்பற்றி அது முதற்கட் கூறப்பட்டது. "நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்—குலத்தின்க ணையப் படும்", "நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்—குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்", "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்—நிலையி னிழிந்தக் கடை" என்றவற்று மன்னபலவற்றையும் விரித்துரைத்துக் கொள்க.

இனியே = பின்னால்;

தொட்டு உழி எல்லாம் இனிமை சுரப்பன = ஆராயும் இடந்தோறும் (ஆராய்வார்க்கு மேலும் மேலும் ஆராய்வில் வேட்கையுண்டாகுமாறு) இனிய சுவையைச் சுரப்பனவும்;

தமிழ்ப்பாக்களின் உயர்வுதோன்றத் "தொட்டுழியெல்லா மினிமை சுரப்பன" என்றார். கல்வி என்னுமொழியின் "கல்" என்னும் பகுதிக்குரிய (கல்லுதல்) பொருளையே போலத் "தொடு" என்பதற்கும் பொருளுண்மையின் அதற்கு ஆராய்ச்சி எனப் பொருள்விரித்தாம். "என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு—நின்றலர்ந்து தேன்பிலிற்றும்" என்பவாகலின் "இனிமை சுரப்பன" என்றார்.

நோக்குழி எல்லாம் நுண்மை சான்றன = பார்க்கும் இடந்தோறும் நுட்பங்கள் நிறையப் பெற்றனவும்;

உழி காலத்தின்கண் வந்ததாகக் கொண்டு பார்க்கும் பொழுதெல்லாம் எனினும் ஒருவாறு அமையும். ஒரு நூல் பார்ப்பவர்தம் கண்ணுக்கு எப்பொழுதும் ஒரே தன்மைத்தாய் இருப்பினும் மீட்டும் மீட்டும் ஊன்றிப் பார்க்கும்பொழுது புதுப்புது நுட்பங்கள் அவர்மனத்திலே தோன்றுமென்க.

துளக்கமில்லா துணி பொருள் முற்றின = (எத்துணை இலக்கண விலக்கியங்களிலே வல்லுநராயிருப்பினும் அவர்தம்மானும்) அசைக்கமுடியாத் தெளிவுபொருள் முதிர்ந்தனவும்;

அப்பொருள்கள் வழக்கம், ஒழுக்கம், தண்டம் என்பன முதலாகியவற்றையும் அன்னபிறவற்றையும் குறிக்கும்.

அளக்க ஒண்ணா அளவு நிறைந்தன = நிலையை இவ்வளவினதென்று அளந்தறிந்து கொள்ள முடியாத அத்துணை ஆழ்ந்த அளவை முதலாய இலக்கணங்கள் நிறையப்பெற்றனவும், ஆகிய;

பண்டை சான்றோர் பாலித்த மும்மை தண் தமிழ் பனுவலே = முற்காலத்துச் சான்றோர் (சங்கப் புலவரும் ஏனைப்பெரியாரும்) கொடுத்தருளிய மூன்றாகிய தண்ணிய தமிழ்நூல்களையெல்லாம்;

"தெரிமாண் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்னும் பரிபாடற் பகுதியையும், "இருமை வகைதெரிந்து" என்னுங் குறட்பகுதியையும் போல "மும்மை" என்றது ஈண்டு எண்ணின்கண் நின்றது.

தம் பொருள் என்ன போற்றாது அழித்தோர்க்கு = தங்கள் கைப்பொருளைப் போலப் பாதுகாவாமல் அழித்தவர்தங்களுக்கு;

தம்பொருள் தமக்குரிய மண், பொன், பெண் முதலியன.

பொருளும் நிலையுமோ = செல்வமும் நிலைத்திருக்குமோ;

நிலையாதென்றபடி. அவரும் அவர்க்குரியாரும் (பொருள் நிலையாமை காரணமாக) இம்மையில் வறுமை, பிணி முதலாயவற்றிற் பன்முறையும் உழன்று மறுமைப்பயனையும் இழப்பர் என்க.

அவற்றை எல்லாம் அவாவி ஆயாத தமிழர்க்கு=அப்பனுவல்களையெல்லாம் விரும்பிப் படித்து ஆராய்ச்சி செய்யாத தமிழ்மக்கள் தங்களுக்கு;

[ஆக்கக் கேடுபிறிது வேண்டும்] பிறிது ஆக்கம் கேடுவேண்டும்=வேறொரு செல்வக் கேடு இயும் (அவர்தம் அழிவிற்கு) வேண்டுங்கொல்லோ; (வேண்டா, இஃதொன்றே அமையும் என்றபடி.)

[உண்மை கூறி னுலக முவர்க்கு—நன்றுநன் றம்மா நன்றே—யொன்றிய தமிழ்நாட் டுடைமைநனி நன்றே]

உலகம் உண்மை கூறின் உவர்க்கும்=உலகமானது உண்மையைக் கூறினால் கூறுமவனையே வெறுக்கா நிற்கும்;

"யதார்த்த வசனி வெகுஜன விரோதி" என்ப.

நன்று நன்று நன்றே=(இது) நன்றாயிருக்கின்றது, நன்றாயிருக்கின்றது, (மிக) நன்றாயிருக்கின்றது;

"அம்மா", "ஏ" அசைகள்.

தமிழ் நாடு உடைமை நனி நன்று=தமிழ் நாட்டிற்கு உரியதாகிய இயல்பு மிகவும் நன்றாகவே இருக்கின்றது.

---

(35) ஆலயந் தொழுதற்கு மறிவுவேண் டுவதாந்
சால்பமை பொற்பிற் றமிழ்க்கலைக் கழகம்
வாலிதி னமைத்தன் மாண்பா மென்றல்.

ஐம்பொறி வேட்பன வவாவி யீட்டியும்
வெம்மனப் பேய்க்கு விருப்புநிறை கிலராய்த்
தம்மறிவு கலங்கித் தாமயர்ந் தோரைக்
கண்ட காட்சியர் புலக்கத் தடைத்து
மெய்ப்பற்று விட்டுச் சாந்துயாக் குளத்தா
மெய்ப்பற் றின்பத் திடைமூழ் கினரே
மேய கடவுளை விளக்குநெறி முற்று
மீயுமுயர் நூலு ளிசைந்தன வற்றைத்
தோயு முறுபயின் றேற்ற நாட்டிக்
கோயில் படைத்துக் குலவுமந் நூலினு
மேற்றங் காட்டி யிறவாது போற்றினர்
தமிழர் தம்முள் வறுமைப்பழுக் காறு
துன்னும் பிறவுந் தோன்றல ராதற்
காங்கக் கோயிற் களனி னிலம்பொருள்
செவ்விதி னமைத்துச் சிறப்புற் றமர்ந்தன
ரிவ்வகை யறியா வேழையர் தம்மு
ளொருசா ராரே கோயினிலை யுணர்கிலர்
மற்றொரு சாரார் கோயிற் பொருள்கொடு
முத்தமிழ் வளர்க்கிலர் முற்றி வுடைய

வித்தகப் பாவலர் விழுப்பத்து நாவலர்
தங்கட் கியாதுந் தருகில ராகிப்
பல்லிய மியம்பும் பாலோர் தமக்குங்
கூத்தர் தமக்குங் கூத்தியர் தமக்குங்
கொடுத்துக் கோயிலொடு நங்குலங் கெடுக்குநர்
வெளிற்றுக் கோயிலொடு விராவுதல் கொள்கையு
மளப்பில கழக்கு மமைத்துச் செழிக்குந்
தன்மைய ராகு மேனோர் சார்பினாற்
றுன்னுவ வெல்லாந் துய்ந்தாக் கொள்ளுந்
ரின்னவை கற்கலா தென்னோ விருக்குநர்
கோயிற் றுறவுங் கோயிற் றுறவுங் கூடற் கெழீஇய
தாயமார் தமிழைக் கலைமையொடு நம்மனோர்
பற்பல வாகப் பயின்று
பொறாமை நல்வறிப் போக்கிலை புரிந்தே.

---

(இ-ள்.) ஐம் பொறி வேட்பன அவாவி ஈட்டியும் = (பஞ்சேந்திரியங்கள் எனப்படும் மெய், வாய், கண், மூக்கு, செவிகளாகிய) ஐந்து பொறிகளும் விரும்பியவற்றை (அவற்றின் வழியே நின்று) விரும்பி ஈட்டுதலைப் புரிந்தும்;

மனம், வாக்கு, காயம் என்பனவற்றை முப்பொறி என்று வழங்கலின் அவற்றினின்றும் பிரித்துக்காட்டற்காக "ஐம்பொறி" என்றார். இவ்வைம்பொறிவாயிற் புலன்களும் ஐந்தாகலான் அவற்றின்கட் செல்லும் அவாவும் ஐந்தெனக்கொள்க. பொறிகளின் அனுபவங்களையும், காட்சி வகைகளையும் அன்னபிறவற்றையும் பௌட்காரகம் முதலியவற்றுட்காண்க. ஈட்டுதல்—சம்பாதித்தல், பெருக்குதல். ஈண்டு விரும்பிய அளவிற் குறையாமற் பெற்றநுகரக் கொடுத்தலைக் குறிக்கின்றது. ஈட்டியும் என்றமையால் இயலாமை காட்டப்பட்டது. அவாவுதல் ஓசை முதலாயவற்றை.

வெம் மனம் பேய்க்கு விருப்பு நிறைகிலாய் = கொடிய மனமாகிய பேய்தனக்கு விரும்பிய விருப்பங்கள் நிறையப் பெறுதவர்களாய்;

"மநஷ் ஷஷ்டாநீந்திரியாணி" என்பவாகலிற் பொறியின் பின்னர் மனசுங்கூறப்பட்டது. பொறியின் வழியாக மனனுணடென்று தெளிதல் பிரத்தியக்கமாதலின் அப்பொறி முற்கூறப் பட்டது. மனம் எப்பொழுதும் அலைந்து கொண்டிருக்கு மியல்பிற்றாதலின் அதனைப்பேய்க் கொப்பிட்டார். "சொல்லான திற்சற்றும் வாராத பிள்ளையைத் தொட்டில்வைத் தாட்டி யாட்டித் தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றிற் றொடுக்குந் தொடுத் தழிக்கும்—பொல்லாத வாதனை யெனுஞ்சத்த பூமியிடைப் போந்துதலை சுற்றியாடும் புருடனி லடங்காத பூவைபோற் றானே புறம்போந்துசஞ்சரிக்குங்—கல்லோடி ரும்புக்கு மிகவன்மை காட்டிடுங் காணாது கேட்ட வெல்லாங் கண்டதாகக் காட்டியே யணுவாய்ச் சுருங்கிடுங் கடநா டகசாலமோ—வெல்லாமும் வல்லிந்த மனமாகிய * * * *" என்வருந் தாயுமானவர் பாடல் மனசினது கோலாகலக் கூத்தை நன்கு விளக்கும்.

கொடிய வழியை அடைவிக்கும் என்பது போதர "வெம்மனம்" என்றார். "—தன்னைக்— குடிகெடுக்குந் நிசெஞ்சிற் குற்றேவல் செய்தல்—பிடிபடுக்கப் பட்ட களிறு" என்பது அறநெறிச்சாரம். "—அன்புயின மனத்தோற்ற நாசமாகு மனத்தினது நாசமே மகத்தாந் தோற்றம்" என்பதுமீண்டுணர்ச்சிட்டம்.

விரும்புதலுக் கோரளவின்மையின் "நிறைகிலராய்" என்றார். "ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி யாளினுங் கடன்மீதிலே யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக வம்பொன்மிக வைத்த பேரும்—நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்" என்பது தாயுமானவர் பாடல்; "மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற—வைவாய வேட்கை யவாவினைக்—கைவாய்—கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்—விலங்காது வீடு பெறும்" என்பது நாலடி.

தம் அறிவு கலங்கி தாம் மாய்ந்தோரை = தமது அறிவு கலக்கப்பெறுதலினாலே அழிந்து போனோரை;

அறிவுகலங்கி மாய்தலாவது பாவகர்ம பலத்தான் உயர்ந்தபிறப்பு அழியப்பெற்று விலங்கு முதலிய இழிந்த பிறவிகளை யெடுத்தல். இவற்றையெல்லாம் விரிந்த நூல்களிற் கண்டு தெளிக. செயற்பால இவையென்று தேர்ந்து செய்யாமல் இறந்தாரை யென்பாரும் உளர்.

கண்ட காட்சியர் புலம் கதவு அடைத்து = சோதகக்கண்ட அறிவினையுடையோர் ஐம்பொறி கட்குரிய ஓசைமுதலிய ஐந்து புலன்களாகிய கதவுகளை உலகவிடயத்திற் செல்லாமற் றடுத்துமூடி;

"அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்—வேண்டிய வெல்லா மொருங்கு" என்னுந் திருவள்ளுவனார் கூற்றும் இக்கருத்துப்பற்றியே எழுந்ததென்க. புலக்கதவடைப்பவர் தம் அறிவே மெய்யறி வென்றும், அடையாதாரைக்குப் பிறப்புப் பல்கிக்கொண்டே வருமென்றும் கூறுப. "மாசறு காட்சி யவர்க்கு" என்னுமிடத்தும் இப்பொருட்டாதலைக் கண்டு தெளிக.

மெய் பற்று விட்டு = தேகாபிமானத்தை அறவே யொழித்து;

மெய்ப்பற்று என்றவிலேசானே மண், பொன், பெண், என்னுமித்தொடக்கத்தனவும் கொள்ளப்படும். பற்றுக்கள் எவற்றிற்கும் முதற்காரணமாக இருப்பது தேகப்பற்றாதலின் அது தோன்ற அஃதொன்றனையே எண்டெடுத்துக் கூறினார். "சிறந்தநஞ் சுற்றமுஞ் செப்பொருளு நீக்கித்—துறந்தார் தொடர்ப்பா டெவன்கொல்—கறங்கருவி—எனக்வாய் வீழு மலைநாடா வஃதன்றோ—யானைபோய் வால்போகா வாறு" என்பது பழமொழி; "மற்றுந் தொடர்ப்பா டெவன் கொல் பிறப்பறுக்க—லுற்றார்க் குடம்பு மிகை" என்பது குறள்.

சாம் துயரகு உளது ஆம எயப்பு அற்று = சாகின்ற துன்பத்திற்குளதாகும் இளைப்பு நீங்கப்பெற்று;

"தன்னை யறியாது தானல்ல ரென்னுநிக—கின்மை யறியா தினையரென் றோராது—வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னம்—தன்மையு நல்ல தவஞ்செய்யு நீரே" என்பது திருமந்திரம். எல்லாப் பற்றுக்களுந் தேகாபிமானத்தைப் பற்றியே வருதலின் அதத்தேகப்பற்றைத் துறந்தார்க்குத் தேகம் முதலியவை அழிதலினாற் றுன்பமில்லை யென்க.

இன்பத்து இடை மூழ்கினர் = பேரின்பத்தினிடையிலே எப்பொழுதும் ஆழ்ந்திருக்கின்ற சான்றோர்கள்;

சிற்றின்பத்தை நாடாமல் மெய்ஞ்ஞான வின்பக்கடலுள் எஞ்ஞான்றும் மூழ்கியிருப்பவராதலின அந்நிலைச் சுகத்தைப் பேரின்பம. "கரையின்மெய்ஞ் ஞான வின்பப் பிரமமாங் கடலினுள்ளே—யொருவன தூள்ள மொன்றி யொடுங்குமே லவனைப் பெற்றோ—பெரியயே றெல்லாம பெறுமா பேணுமுக குலமுந் தூய்தாம—பொருவிலா னிருந்த தேயம் புண்ணிய பூமி தானே" என்பது சமாதி; "கன்முதற் புலன்கள் யாவையு மொடுக்கிக சாணவா குலமறக் கடிந்தாங்—குண்மைகாண் விருப்போ டியிர்க்கெலாம் பரிவுற் றுற்றசிற் றின்பத்தை யுவர்த்து—வண்மையா முணர்வு வந்தவா கண்டு வாட்டமு மகிழ்ச்சியு மின்றித்—தண்மையா முடம்பு தான்றன தென்னுத் தன்மை யோன் றத்துவ முணர்வான்" என்பது குறுந்திரட்டு.

மேய கடவுளை விளக்கும் நெறி முற்றும் ஈயும் உயர் நூலுள் = பொருந்திய கடவுட் டன்மையை உண்டாக்குகின்ற வழியை முழுவதுந் தருகின்ற உயர்ச்சி வாய்ந்த நூலுள்ளே;

விதிப்படி உத்தமமாக அமைக்கப்பட்ட வடிவங்களினும், முறையுறவமைந்த யந்திரம் முதலியவற்றினும், தெய்வீகநூல்களினிடத்தும் மேவிய கடவுணிலையை உணர்தற்கு "மேயகடவுள்" என்றும், அக்கூறியவற்றிலே அக்கடவுளர் ஆற்றலை நிறுவுதற்குச் சித்தசுத்தியோடு செய

தபதியானங்கள் செய்யப்படவேண்டுமாதலின் "விளக்குநெறி" என்றும், அந்நெறிகளிற் சிலவற்றை மாத்திரம் அறிதலாற் பயனில்லையென்பார் "முற்றும்" என்றும், அவற்றையெல்லாம் அருளிச்செய்த சான்றோர்தம் வண்மை இதுவெனப் புலப்படுத்துவார் "ஈயும்" என்றும், "வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூல்" "முன்னோர்நூல்" என்பவாகலின் அப்பெரியோரான் அருளிச்செய்யப்பட்ட நூலகளின் பெருமைதோன்ற "உயர்நூல்" என்றும் கூறினர்.

இயைந்தனவற்றை = பொருந்திய விடயங்களையெல்லாம்;

அக்கர சொரூப வகைகளையும், அச்சொரூபங்களுக்கேற்ற ஒலிவடிவங்களையும் அன்னபிறவற்றையும் ஈண்டுக்குறிப்பித்தார். இவற்றின விபரங்களையெல்லாம் விரிந்த நூல்களுட் காண்க.

தோயும் உறுப்பின் தோற்றம் நாட்டி = தங்களுக்குள்ளே சார்பாக இருக்கின்ற உறுப்புக்களின் தோற்றங்களை எல்லாம் பொருந்துமாறு நிலைநிறுத்தி;

உறுப்புக்களெல்லாம் ஒவ்வொரு காரணம்பற்றி அமைந்திருத்தலின் "தோயு முறுப்பு" என்றும், கட்புலனுக்கு அவ்வுறுப்புக்களை ஒகுதமாறு செய்தல் வேண்டு மென்பார் "தோற்றம்" என்றும், அத்தோற்றத்திலே அவ்வுறுப்புக்களுக்குரிய ஆற்றலை மந்திரம் முதலியவற்றான் நிறைவுபெறச் செய்தல் வேண்டுமென்பார் "நாட்டி" என்றுங் கூறினர்.

கோயில் படைத்து = ஆலயங்களை உண்டாக்கி;

குலவும் அ நூலினும் = விளங்குகின்ற (இறைவனை உணர்த்தும்) அந்நூலைக் காட்டினும்;

அவ்வச் சமயத்தார்க்குரிய வேதங்கள் போற்றப்பட்டு வருதல் நோக்கிக் "குலவுமந் நூலினும்" என்றார். வரிஒலிவடிவங்களிலே அமைக்கப்பெற்ற வேதம் பயனைத்தருதல் எவர்க்கும் உடம்பாடாகவும், அவ்விறைவனைக் காட்டும் விக்கிரகமுங்கோயிலும் அவர்க்கெல்லாம் உடம்பாடாகாமை ஒரு வியப்பே. பிறநாட்டார்தம் எரிமுதலியவற்றிற் புகுந்து விரைந்தழியாமற் காத்தற்கு இதுவுமொருவழியெனக. கோயிலமைப்பும் இறைவனுக்கு உறுப்புக்களாகும் என்பதை ஆகமங்களுட் கண்டு தெளிக. கோபுரத்தைக் தூலலிங்கம் எனவும், அன்னபிறவற்றைப் பிறவாறும் அறிந்தோர் கூறுப. விரிக்கிற் பெருகும்.

ஏற்றம் காட்டி இறவாது போற்றினர் = உயர்வு காட்டி அக்கோயில்களையெல்லாம் அழிந்துபடாமற் காப்பாற்றி வந்தார்கள்;

கற்பிலாமூர்க்கர் நூலை விரும்புதலினும் கோயிலை வழிபட்டுய்தல் கண்கூடு. இக்காலத்தார் ஒரு கூட்டத்திற்குச்சென்று ஆபாசங்களைப் புரிந்து நோய்முதலியவற்றைத் தேடிக்கொள்கின்றனர். முற்காலங்களிலோ திருவிழா முதலியவற்றை இயற்றி அவற்றினிடையே பலவரிய விஷயங்களை அக்கர காரியத்திற் பொருத்தி ஆய்ந்துவந்தனர். தெய்வத்தலங்களிலே அசுத்தஞ் செய்தால் நரகு கிடைக்கும் என விதித்தமை எத்துணை ஆழ்ந்த நுணுக்கம் என்பது ஈண்டு வெளிப்படை. இவைமுதலிய எல்லாம் போதாவன்றே "ஏற்றங் காட்டி" என்றனர். சுகாதாரத்திற்கும், மனோசுத்தத்திற்கும் ஏதுவாக ஆலயதரிசன விதி முதலியன விதிக்கப்பெற்றிருத்தலை நோக்குக. புறமதத்தார் எத்துணைக் கோயில்களை அழித்துவரினும் ஒருமூலைக்குள் இருந்தும் ஒன்றுவது நிலைபெற்று நமது சாத்திரத்தை நிலைநாட்டும் என்பது போதா "இறவாது போற்றினர்" என்றார் இறைவனது வடிவமாக அமைந்த கோயிலைத் தம்முயிரைக் கொடுத்தேனும் போற்றி வருவர் என்பதுதோன்றப் "போற்றினர்" என்றார்.

தமிழர் தம்முள் வறுமை அழுக்காறு துன்னும் பிறவும் தோன்றலர் ஆதற்கு = தமிழ்ச்சாதியார் தங்களுக்குள்ளே தரித்திரமும் பிறர் ஆக்கத்திற்குப் பொறாமையும் அவற்றோடு பொருந்திய வினையவும் தோன்றாதவர்கள் ஆதற்கு;

"நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்-துன்பங்கள் சென்று படும்" என்பவாகலின் வறுமை முதற்கட் கூறப்பட்டது. இவ்வறுமையும் நசையில்வழி இல்லையாகும் என்ப. "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்-பிடித்த கல்விப் பெரும்பிணை விடூஉ-நாணணி களைய

மாவெணழில் சிதைக்கும்—பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்—பசிப்பிணியென்னும் பாவி" என்பது மணிமேகலை. "ஸர்வம் ஶூந்யம் தரித்ரஸ்ய" என்பா வடநூலார். அவா, வெகுளி, இன்னாச்சொல் என்னுமித் தொடககத்தனவும் அடங்குவதற்குத் "துன்னும் பிறவும்" என்றும், இவையெல்லாம் உயிர்கட்கு இயற்கையாகிய குணம் அல்ல என்பது தோன்றத் "தோன்றலர்" என்றும், ஆதலிற் சீவராசிகளை நல்வழிப்படுத்தும் வழியும் ஒன்றுண்டு என்பது போதர "ஆதற்கு" என்றும் கூறினார்.

ஆங்கு அ கோயிற்கு = முன்னாக் கூறிய அந்தக் கோயிலுக்கு;

அளவு இல் நிலம் பொருள் = அளவற்ற நிலத்தையும் பொருள்களையும்;

செவ்விதின் அமைத்து சிறப்பு உற்று அமர்ந்தனர = ஒழுஙகாகக்-கொடுத்துச் சிறப்புப் பொருந்தி வீற்றிருநதாாகள்;

கோயிற்பொருள் எவரானுங் கொள்ளுதற்கியலாது என்பது தோன்றச் "செவ்விதி னமைத்து" என்றும், அவர் அளித்தவா இம்மையில் இனிய போகஙகளைத் துய்த்துப் பின்னர முத்தி முதலியவற்றிலே சிறந்துவாழ்வர் ஆதலின "சிறப்புற் றமர்ந்தனர்" என்றும் கூறினார். அழுக்காறகறலின் அங்ஙனஞ் சிறப்புற்ற மர்ந்தனர் என்றுமாம், அமர்தல சத்துவகுணமாதலின் என்க. ஒருவா நிலன் முதலியவற்றிலே மேம்பாடுற்றனரேற் பிறாககது பொறாமை முதலிய வற்றைப் பயக்கும். இறைவனுககு அஙஙனம் நிலன்முதலியன விருப்பின் அவற்றை எல்லாரும் விரும்பி வளர்த்து வருவரேயன்றி அழிததற்கு முயலார. ஊர்தோறும் அமைந்துள்ள கோயில் களுக்குரிய பொருள்கள் அவ்வக கோயிற்பணிகளில் அமர்ந்துள்ள வறிஞாதம் சீவனத்துக்கும உதவுகின்றன. அமர்ந்தனர் = விரும்பிவநதனருமாம். "வருவிருந் தமரும்" என்பர் இடைக் காடனார்.

இ வகை அறியா ஏழையா தம்முள் = இக்கூறிவந்த வகையை அறியமாட்டாத மடவோர் தங்களுக்குள்ளே;

ஒரு சாராரே கோயில் நிலை உணர்கிலர் = ஒரு சார்பினர் கோயினிலைமை இஃதென அறி கின்றாரிலலை;

அந்நிலைமை முற்கூறப்பட்டது. கடவுள் கோயிலிற்றான் இருக்கின்றாரா என்றும், ஆண்டுச் செய்துவரும் பூசை, திருவிழா முதலியவற்றிற்காகச் செலவழியும் திரவியங்களும், பிறவும் வீண் செலவனறே என்றும் வேணடியவாறே கூறுவர். அரசனென ஒருவனை வைத்து அவன்பொருட்டு அளவிறநத பொருள்களை வாளா செலவிடுவோா இறைவன்பொருட்டுச் சிறிது செலவிடல் வீண் என்றல் பெரும் வியபபே.

மற்று ஒரு சாரார் = பிறிதொரு சார்பினர்தாம்;

இவர் புத்தியுடையவர்போல நடிப்பவர் எனப்படுவர்.

கோயில் பொருள் கொடு மு தமிழ் வளர்க்கிலர் = கோயிற் பொருளைக்கொண்டு மூன்று வகையாகிய தமிழை வளர்க்கின்றார்கள் இல்லை;

கோயிற் பொருளாவது அதற்கு வருவாயாகவந்தவற்றுள் எஞ்சியபொருள். கோயிற்பொரு ளைப் பிற எவற்றிற்கும் உபயோகித்தல் பாவமெனத் திருமந்திரம் முதலிய நூல்கள் கூறுதலின் அதைக்கொண்டு முததமிழ் வளர்த்தல் பாவமாகாதோவெனின் ஆகாது, படித்தவரையே கோயிற் பணியாளராக வைககவெனக் குறிப்பித்தலின் என்க. சோமசுந்தரக்கடவுளும் சங்கப்புலவரோடு வீற்றிருந்து தமிழாராய்ந்தமையை ஊன்றிநோக்கின் இவ்வுண்மை வலியுறும். இறைவனே அறிவு மயமானவன். அறிவோ கல்வியான் வளர்க்கற்பாலது. ஆகவே சிறப்புடைக்கல்வியாகிய தமிழை வளர்த்தலும் ஈசுரத்தருமமாகவே கொள்ளப்படும்.

மூதது அறிவு உடைய வித்தகம் பாவலா விழுப்பத்து நாவலர் தங்கட்கு = முதிர்ந்த அறிவை யுடைய மெய்ஞ்ஞானப்பாவலலோரும் மேன்மை பொருந்திய நாவல்லோரும் ஆகிய அவர்கட் களுக்கு;

எழுமையும் பயின்றுவந்த அறிவு என்பது போதர "மூதறிவுடைய" என்றார். "ஒருமைக் கட் டான்கற்ற கல்வி யொருவற்–கெழுமையு மேமாப் புடைத்து" என்பது குறள். இவ்வுலகத்தாரோடு வீற்றிருந்தும் அவ்வுலகத் துண்மையெல்லாம் எடுத்துக் கூறுவோர் பாவலரொருவரேயாதலின் "வித்தகப் பாவலர்" என்றார். பாவலர்போன்ற அத்துணை அன்புருக்கம் பெறுதார் ஆதலின் "விழுப்பத்து நாவலர்" என்றார். இம்மை மறுமைகளின் இயல்பை ஒருங்குணர்த்த வல்ல இவர்தங்களுக்கு உதவாமற் பாமரர்தங்கட்கெல்லாம் பெரிதுவந்து கொடுப்பர் என்க.

யாதும் தருகிலராகி = சிற்றளவினதாகிய பொருளையும் கொடுக்காதவர்களாகி;

எனவே பிற்கூறப்படுவோர்கட்கெல்லாம் வலியப் பலபொருளையுங் கொடுத்துமகிழ்வார் என்க.

பல்லியம் இயம்பும் பாலோர் தமக்கும் = பலவாச்சியங் கூறுகளையும் முழக்குகின்ற பகுதியினார் தமக்கும்;

இயம்–வாச்சியம்; பலவித வாச்சியக் கருவிகள் பல்லியம் எனப்படும். இன்னியம் என்பதனையும் நோக்குக. அவைவருமாறு:–இடக்கை, உடுக்கை, உறுமி, தம்பட்டம், பம்பை, பேரிகை, மத்தளம், முரசு, முருடு, முழவு. இவற்றை வாசித்தலை இயம்பல், கொளுத்துதல், வாத்துதல், துவைத்தல், முழக்கல் என்று கூறுப.

கூத்தர் தமக்கும் = நாடகமக்கள் தங்களுக்கும்;

கூத்தியர் தமக்கும் கொடுத்து = நாடகமகளிர் தங்களுக்கும் (பலப்பலபொருளைக்) கொடுத்து;

கோயில் ஒடு நம் குலம் கெடுக்குநர் = ஆலயங்களையும் நமது மரபினையும் கெடுத்துவருகின்றார்கள்;

கல்வியும் அதனாற் பெறப்படும் நல்லறிவும் இல்லையேல் எவையும் இலவாமற் போகுமாதலின் இங்ஙனம் கூறினார் என்க.

வெளிறு கோயில் ஒடு விராவு தம் கொள்கையும் அளப்பு இல் கழகமும் அமைத்து செழிக்கும் தன்மையர் ஆகும் = உள்ளீடில்லாதமைத்த கோயிலோடு தமது மதத்தினையும் அளத்தற்கரிய கலாசாலையையும் உண்டாக்கிச் செழித்துவரும் தன்மையுடையவராகின்ற;

நூலுக்குப் படம்போல் அமைக்கப்பட்ட நம் கோயில் போலாது சாமானியமாக அமைக்கப்பட்டது என்பது போதர "வெளிற்றுக் கோயில்" என்றார். "வெளிறிலாக் கேள்வி யானை" என்பது சிந்தாமணி. அவர்தம் கொள்கையும் அங்ஙனமேயாகும் என்பது போதர "விராவுதங் கொள்கையும்" என்றார். கோயிற்றோறும் கழகங்கள் பல என்பதூஉம், அவற்றானவலப்பெறும் கல்வியும் பல என்பதூஉம், தோன்ற "அளப்பில கழகமும்" என்றார். இங்ஙனமெல்லாம் அமைந்துவருங் காரணத்தான் இம்மையில் ஒருவாறு விளக்கின்றனர் என்பது தோன்றச் "செழிக்கும்" என்றும், இவரது பழக்கம் நீண்ட காலத்தினது என்பது போதரத் "தன்மையர்" என்றும் கூறினார்.

மேல் நாடு சார்பினர் துன்னுவ எல்லாம் தூய்து ஆ(க) கொள்ளுநர் = மேனாட்டைத் தமக்குச் சார்பாக உடையவர் தங்களுக்குப் பொருந்துவனவாகிய எல்லாவற்றையும் புனிதமுடையனவாகக் கொள்ளும் இவர்தாம்;

ஒரு நாட்டார்க்கு எத்துணைத் தேயங்கள் இருப்பினும் தாம் பிறந்துவளர்ந்த சுயதேசத்திற்கே அன்பு செய்வர் என்பது கருதி மேனாட்டார் என்னாது "மேனாட்டுச் சார்பினர்" என்று கூறினார். "தூய்து" என்றது தனித்தனி சென்றியையும். தூயதன்மையைத் தூயதாகக் கருதும் இழிபுதோன்ற அங்ஙனம் மயங்கிற்றென்றலுமாம்.

இன்னவை களைகலாது என்னோ இருக்குநர் = இத்தகைய இவற்றையெல்லாம் அகற்றாமல் (விட்டொழியாமல்) யாதுகாரணம் பற்றி இருக்கின்றார்களோ;

இன்னணம் ஒன்றது கூத்தர் முதலியோர்க் களித்தலை.

கோயில் தொறும் கோயில் தொறும்=ஆலயமிருக்கும் இடந்தோறும் ஆலயமிருக்கும் இடந்தோறும்;

ஓரூருள்ளும் பலகோயில்கள் இருந்துவரும் இயைபு கருதிக் "கோயிறொறுங் கோயிறொறும்" என்றார்.

கூடல் மெழீஇய தாய் அமர் தமிழை=மதுரையில் விளங்கிய (முதன்மைபொருந்திய) தாய்மொழியாயமைந்த தமிழ்ப்பாஷையை;

சுயபாஷை என்பது கருதித் "தாயமர் தமிழ்" என்றார். "கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழ்" என்று பெரியார் கூறுப.

[தலைமைகொடு நம்மனோர் பற்பலவாகப் பயின்று] நம்மனோர் பலபல ஆகத் தலைமைகொடு பயின்று=நாமெல்லோர்தாம் பலப்பல துறைமுகமாக இருக்கும் பிரிவுகளில் எல்லாம் முதன்மைகொண்டு கற்றுவருதலினாலே;

பாஷை ஒன்று சாத்திரங்கள் பலவாகவும் இருத்தல்பற்றிப் "பற்பலவாக" என்றும், பிறபாஷைகளைப் பிரதானமாகவும் தாய்மொழியாகிய தமிழை அப்பிரதானமாகவும் பயின்றுவருதலை நீக்கித் தமிழையே பிரதானமாயக் கற்றுவருதல் வேண்டும் என்பதூஉம் தோன்றற்பொருட்டுத் "தலைமைகொடு" என்றும் கூறினார்.

பொற்பு அமை நல் வழி போகு நிலை புரிந்தே=பொலிவமைந்த நல்ல நெறியிலே செல்கின்ற நிலைமையை விரும்பிச்செய்தே;

பொற்பு=சிறப்புமாம்.

நம்மனோர்–புரிந்து–இன்னவை கலைகலா தென்னோ விருக்குநர் என முடிவுசெய்க.

இருமைப் பேறுகள் அனைத்தையும் ஒருங்கினிதடைய முதற்றுணைக் காரணமாவது அறிவு. அறிவைப் பயப்பது கல்வி. "கற்பக் கழிமட மஃகு மடமஃகப்–புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்–றத்துவ மாய நெறிபடரு மந்நெறி–யிப்பா லுலகத் திசைநிறீஇ யப்பா–லுயர்ந்த வுலகம் புகும்" என்பது நான்மணிக்கடிகை.

---

## (36) நூனுவல் மரபு நுவலினிது வென்றல்.

முந்தை ஞான்று முதறி வுடைய
நுவல்வோ ரெனாஅஞ் சிறுபொழுது நுவலக்
கேட்போ ரெனாஅங் கேண்மையொ டந்நாள்
முழுதும் பயின்றனர் முறைமையிற் றனரே
தன்னடி யார்க்குத் தகதபணி நாமெழ்
நாழிகை வரையி னவின்றுநவின் றேவ
வன்னோ னவற்றை யமைநெடிய பொழுதின்
முற்றுவித் தாங்கு நுவல்வோர் பலரே
சுற்றுபு சுற்றுபு நுவன்றன வெல்லா
மிற்றைஞான் றவரே கேட்குநர் நொடியிற்
கற்றுத் தேர்குநர் காட்சிநன் றம்மா

அதா அன்று,

கழகத்தை நாடி வருதற்கு மழுங்கு
வீட்டை நாடி விரைதற்கும் விழைவிறு

சிறு பொழுது நுவல = சிற்றள்வினதாகிய காலம் பாடத்தைச் சொல்ல;

கற்கவேண்டிய காலத்திற் கற்பங்கு நேரமாவது உடனிருந்து சொல்லிக்கொடார் என்பது போதரச் "சிறுபொழுது" என்றார். மாணுக்கர்க்கு ஆராய்ச்சியின்மை உண்டாதற்கு அவரையே ஆராயும் வண்ணம் விடுதல் முறைமையாகும் என்க. அவரிடத்திலே நெடும் பொழுது இருந்து வந்தால் எப்பொழுதும் ஆசிரியர்தம் துணையையே வேண்டித் தாமாக ஒன்றனையும் இயற்றிக் கோடும் ஆற்றலிலராய்க் கெடுவர் அம்மாணுககர் என்ப.

கேட்போர் எல்லாம் = (அவ்வாசிரியர் கூறிய பாடங்களைக்) கேட்டுவருகின்ற மாணுக்கர் எல்லாரும்;

கேண்மை கொ(ண்)டு அ நாள் முழுதும் பயின்றனர் முறைமை உற்றனர் = நட்புக் கொண்டு அக்கூறிய நாள் முழுதும் (கூறியவற்றைச் செவ்வையாகக) கற்றுவருபவராகி நல்வழியைப் பொருந்தினர்கள்;

ஆசிரியனிடத்தும் கற்கும் நூலிடத்துமுள்ள அனபுதோன்றக் "கேண்மைகொடு" என்றார். ஆராய்ச்சியின பெருக்கமும் கல்வியிலேயுள்ள சிரத்தையும் புலப்பட "அந்நாண் முழுதும பயின்றனர" என்றும், (சொல்லிக்கொடுத்த அந்நாள் என்றுமாம், கூறத்தகாத நாட்கள் உளவாதல்பற்றி யென்க.) இவ்வகை செய்துவருபவரே நன்னிலை பெறுவர் என்பது போதர "முறைமையுற் றனரே" என்றும் கூறினர்.

தன் அடியாற்கு = தனது அடிமைப்பணி செய்வானுக்கு;

தக்க பணி நால் ஏழ் நாழிகை வரையில் நவின்று நவின்று ஏவ = தகுந்த வேலே இருபத்தெட்டு நாழிகைகாறும் இவ்வாறு செய் என்று சொல்லிச் சொல்லித் தூண்டிவர;

நினைத்து நினைத்து முன்சொன்னவற்றை மறத்து மறத்துப் பிறிதொன்றுசெய் என்று கூறுகின்றன என்பது போதரத் "தக்கபணி" என்றும், பலகாறும் மறத்து மறந்துக் கூறும்அந்நீட்சி தோன்ற "நாலேழ் நாழிகை" என்றும், சொல்லியவற்றையே பின்னரும் சொல்லிச் சொல்லி நேரங்கழிப்பான் என்பது தோன்ற "நவின்று நவினறு" என்றும், அங்ஙனம் எல்லாம் கூறினும் வெறுக்காமல் ஏவப்படுதற் குரியானுகிய பொறையுடையான் அப்பணியாளன் என்பது தோன்ற "ஏவ" என்றுங் கூறினர்.

அன்னோன் அரை நொடி பொழுதில் முற்றுவித்தாங்கு = அப்பணியாளன் (தனது தலைவன் கூறிய) அவற்றையெல்லாம் அரைநொடிப் பொழுதுக்குள்ளே நிறைவேற்றினற்போல;

செய்துமுடிக்கும் தூய்மையும் விரைவுந் தோன்ற "அரைநொடிப் பொழுதில்" என்றார். மந்தபுத்தியுடைய பணியாளர் பெரும்பான்மையுந் தங்கள் தலைவர்க்குக் கீழ்படிந்தொழுகுங்குணமும் துட்பதிட்ப ஆற்றலும இல்லாதிருப்பர். இவனோ தலைவன் எத்துணைக் கெட்டவனாயினும் அவனிடத்திருக்குமவரையினும் கீழ்ப்படிந்து நடக்குந நற்குணமும் ஏவியவற்றையெல்லாம் விரைவொடு இனிதுமுடிக்கும் ஆற்றலும் வாய்ந்தவன் என்பது போதர "அன்னோன" எனச் சுட்டி "அரைநொடிப் பொழுதின் முற்றுவித் தாங்கு" என்றார.

நுவல்வோர் பலரே சுற்றுபு சுற்றுபு நுவன்றன எல்லாம் = பாடஞ்சொல்லும் ஆசிரியர் பலரும் (மாணுக்கர் தங்களைச) சுற்றிச் சுற்றிச சொல்லிய எலலாவற்றையும்;

பலப்பல விஷயங்களையும் ஓயாமல் நுவன்று நுவன்று வருகின்றனராதலின் நுவல்வோரும் பலராயினர என்க. ஆசிரியர்தம்மிகுதியும் வேலைக குறைவுந் தோன்ற "நுவல்வோர்" என்றொழியாது "பலர் சுற்றுபு சுற்றுபு" என்றார். மாணுக்கர்க்கு ஓய்வின்மையும இதனாற் பெறப்பட்டது.

[இற்றைஞான் றவரே கேட்குநர் நொடியிற்—கற்றுத் தேர்குநர் காட்சிநன் றம்மா]

இற்றை ஞான்றவரே நொடியில் கேட்குநர் = இக்காலத்து மாணவர்தாம் நொடிப் பொழுதுக்குள்ளே பாடங் கேட்டு விடுகின்றனர்;

எடுத்துக்கொண்ட விஷயத்திற்குத் தகுந்த அவகாசமின்மை தோன்ற "நொடியில்" என்றார். கேட்டவற்றைக் கற்றலும் அவ்வாறே என்பது தோன்றக் [illegible]

என்றார். நொடியிற் கேட்டுக் கற்குநர் என்பது இகழ்ச்சிக்குறிப்பு. பாடங்களின் மிகுதி தோன்ற நொடியிற் கேட்குநர் என்றார்.

நொடியில் கற்று தேர்குநர் = ஒரு நொடிப்பொழுதுக்குள்ளே படித்துத் தேர்ந்துவிடுகின்றார்கள்;

நொடியில் என்பதைக் கேட்டலுக்கும் கற்றுத் தேர்தலுக்கும் ஏற்றிக்கொள்க.

காட்சி நன்று = (அங்ஙனம் செய்யும் இக்காலத்து மாணவகாதம்) அறிவு நல்லதொன்றாயிருக்கின்றது;

தலைவன் சிலநேரத்திற்குள்ளே தனது பணியாளனுக்கு ஒருநாளைக்குச் செய்யவேண்டியவற்றைச் சொல்லுதலும் அப்பணியாளன் அந்நாண்முழுதும் இயற்றி நிறைவேற்றுவது வழக்கம். இவ்வாறே மான முற்காலத்துக் கணக்காயரெல்லாரும் தமது மாணுக்கர்க்குச் சிலநேரமே பாடஞ் சொல்ல அப்பாடங்களை மாணுக்கர் எல்லாரும் அந்நாண்முழுதும் பயின்று செப்பஞ் செய்து கோடல் வழக்கமாயிருந்தது. இக்காலத்து எல்லாக் கணக்காயரும் நாண்முழுதும் பாடஞ் சொல்வதும் எல்லா மாணுக்கரும் அச்சொல்லியவற்றை இரண்டொரு நாழிகையிற் படித்து விடுவதும் வழக்கமாயிருக்கின்றது. நாண் முழுதுஞ்செய்தற்குத் தலைவனால் ஏவப்பட்ட பணியைப் பணியாளன் இரண்டொரு நாழிகையில் நிறைவேற்றிவிடுதலை இவர்தமக்கு உவமையாக்கினார். பணியாளனது உயர்வும் தலைவனது இழிவும் கூறுமுகத்தானே இக்காலத்துப் போதனாமுறையை இடித்து மறுத்திட்டார் இந்நூலாசிரியர் என்க. பண்டையோர் பாஷா ஞானத்தை ஊட்டிய பின்னரே சாத்திர ஞானத்தைப் புகட்டிவந்தனர். இங்ஙனகிய அறிவுமேலிட்ட மாணுக்கர் தமக்கு உரைக்கப்படும் சாத்திரத்தை இலகுவிற் கிரகித்துக்கொள்ளும் ஆற்றன்மிக்கவையும். "முடிச்சு முடிச்சாக நட்டால் கோட்டை கோட்டையாக விளையுமா?" பண்டையமாணுக்கர் பயிலத்தொடங்கிய ஐந்தாண்டளவில் இலக்கியவுணர்ச்சியும், பிற்றைய ஐந்தாண்டளவிற் சாத்திர வுணர்ச்சியும் இனிதுகைவரப்பெற்றுச் சிறந்து விளங்குவர். இக்காலத்திலே பதினைந்தாண்டு கல்வி பயிலப்பெற்ற மாணுக்கரும் தாங்கற்ற பாஷையிலே ஒரு விஷயத்தைப் பிழையற எழுதும் ஆற்றல் இல்லாதவராயிருக்கின்றனர் என்க.

அதான்று = கூறிவந்ததுவுமன்றி;

கழகத்தை நாடி வருதற்கும் = (வீட்டிலிருந்து) பாடசாலையை நோக்கி வருதற்கும்;

உபாத்தியாயர் தண்டிப்பரோ விளையாட்டிற் பொழுது கழிகின்றதே என்று கருதுவர் என்பது போதரக் "கழகத்தை நாடி" என்றார்; அன்றியும் அந்நாடற்கு விருப்பமில்லாதிருத்தலையுங் குறிப்பித்ததூஉமாம். கலாசாலை விஷயத்திலே இதுபொழுது அவர்தமக்கிருத்தலின் போதற்கும் என்னாது "வருதற்கும்" என்றார். ஆசிரியர் மாணுக்கர் வருதற்கு முன்னரே கழகத்தை அடையவேண்டும் என்னும் முறையும் இதனாற் குறிப்பிக்கப்பட்டது. இவ்வாறன்றேல் "வருதற்கும்" என்பது பொருட்சிறப்பன்றாகும்

ஆங்கு வீட்டை நாடி விரைதற்கும் = அவ்வாறே இல்லத்தை நோக்கி விரைந்து சேறற்கும்;

வீட்டிற்குச் செல்லும் விருப்பந்தோன்ற "விரைதற்கும்" என்றார். இடைவழியில் விளையாடிக்கொண்டே செல்வர் என்பது போதர முதற்கண் "ஆங்கு" என்றார். இரண்டிடத்தும் கூறிய "நாடி" என்பது அவரது ஆராய்ச்சியையும் புலப்படுத்தும்.

[வினவிறை கூட்டி யுரைத்துக் கொள்கை முற்றுற—நாட்டு தற்கு நண்ணறிவு மசார்க்கு]

கொள்கை முற்றுற = தாம் கொண்ட கருத்து நிறைவேற;

வினா இறை கூட்டி உரைத்து நாட்டுதற்கும் = வினவுதலும் (பிறரால் வினவப்பட்டவற்றிற்கு) விடையிறுத்தலும் ஆகிய இவற்றை (வேண்டியாங்கு) பொருத்தியுரைத்து நிலைநிறுத்தற்கும்;

வினவிடைகள் கொள்கை முற்றுதற்கு ஏற்ற சாதனங்கள் என்க.

நண் அறிவு மசார்க்கு = பொருந்திய அறிவினையுடைய மாணுக்கர்க்கு;

* பூனை என்பதை பூனை கிழி காட்டி = பூனை என்னும் பொருளைச் சித்திரிக்கப்பட்ட படத்தினிடமாகக் காண்பித்து;

பூனை—பூஞை என்றும் வழங்குப. கிழி—எழுதுபடம். அறிவுநுட்பந் தோனறப் "பூனை கிழி" என்றார்.

சொல் அறிவித்து = அப்பொருளுக்கு உரியதுவாகும் சொல் இதுவேயென அம்மாணாக்கர்க்கு அறிவுறுத்தி;

சொல்லை பிரித்து ஆங்கு எழுத்து அறிவித்தல் எவனோ பயக்கும் = அக்கூறிய சொல்லைப் பிரித்துக் காட்டி அச்சொல்லின்கண்ணுள்ள எழுத்துக்களை அறிவித்தலினாலே அம்மாணாக்கர்க்கு யாதுதான் பயக்கும்;

பலபொருள்களுக்கு முரிய பெயர்களையும் அவற்றிலிருக்கும் எழுத்துக்களையும் இங்ஙனமே அறிவித்து வருதற்கும் அவற்றையெல்லாம் கிரகித்தற்கும் வீணகாலமாகுமென்பது குறிப்பு. வீண்பொருட் செலவும் ஆரவாரமும் நேருமெனக.

உயிர் ஈர் ஆறும் = உயிரெழுத்துகள் பன்னிரண்டும்;

மெய் மூ ஆறும் மெய் எழுத்துக்கள் பதினெட்டும்;

[பன்னிரு பதினெட் டொனறுமுயிர் மெய்யும்] உயிர்மெய் பன்னிருபதினெட்டும் = உயிர்மெய் என்கின்ற இருநூற்றுப்பதினாறும்,

(ஆகிய எழுத்துக்களை)

சில் நாள் பயின்று தெளிந்த சிறார்க்கு = சில நாளிலே கற்றுத் தெளிவடைந்த சிறிய மாணவர்களுக்கு;

முதற்கட் சிரமமுண்டென்பார் "சின்னாட் பயின்று தெளிந்த" என்றார்.

என் ஆனும் ஒன்றை இயம்புவிர் ஆயின் = யாதாயினும் ஒருசொல்லை (நீவிர்) உரைப்பீராயின்;

அன்னது தன்னை = (உரைத்த) அந்தச் சொல்லை;

நீவிர் நன்கு அறிந்த எழுத்துள் காட்டுதும் என்னும் வினவிற்கு = நீங்கள் நன்றாக அறிந்துவைத்த எழுத்துக்களுள்ளே யாம் காட்டிவிடுகின்றோம் என்று மாணாக்கரை நோக்கி ஆசிரியன் கூறிய வினவிற்கு;

இறுத்த சொல்லை அம்மாணாக்கர் தங்களாலே விடையாக இறுக்கப்பட்ட சொல்லை;

விடையாக இறுப்பது சொல்லாதலின் "இறுத்த சொல்லை" என்றார்.

படி படி ஆக விரைவு குறைத்து விளக்கில = (அம்மாணாக்கர் சொல்லிய சொல்லை) முறையே வேகங் குறைத்து விளக்கினால்;

செவ்வே எழுத்து புலன் ஆகி இயங்குவர் = செவ்வையாக எழுத்துக்களின்பயன் இதுதான் என்றறிந்து நூல்கற்றலிற் செல்வார்கள்;

விரைவு குறைத்தலாவது சொற்களைத் தீவிரமாக ஒலிக்காமல் எழுத்துக்கள் மாத்திரையினளப் பதமாய் ஒலித்தல். மரம் என்றதை ம—ர—ம எனவும், ம‒‒‒ர‒‒‒ம்‒‒‒ எனவும் கூறுதல். எழுத்துக்களை முன்னரே அறிந்தவராதலின் இங்ஙனம் பொருள் உரைத்தாம். புலனாதல்—இதற்காகத்தான் நாம் எழுத்துக்களைப் பயின்று வந்தோம் என்றுகருதிச் சொல்லியவற்றை அறிவிற் றெளிந்துகோடல். இயங்குதல்—கற்றற்கண் ஊக்கங்கொண்டு பயின்றுவருதல்;

"யானை எருத்தம் பொலிய" என்றதை = (நாலடியார் என்னும் நூலிலே) "யானையெருத்தம் பொலிய" என்றுவரும் தொடரை;

"ஆவை எருது பொலிய" என்று அறிந்த = ஆவை எருது பொலிய என்று மாறுபட விளங்கிக்கொண்ட;

"யானை யெருத்தம் பொலிய" என்று ஒருவன் இயற்றியுள்ள செய்யுட்டொடரை மற்றொருவன் பிழையெனக் கருதி "ஆவை யெருது பொலிய" என்று திருத்திக்கொண்டான்;

இத்திருத்தம்போலவேயாகும் நம் முன்னோர் கையாண்டுவந்த போதனைமுறையை இக்காலத்தார் திருத்திவருதல் எனக.

அத்தகையவரே அன்னர்=அத்தகுதியுடையார் தங்களையே ஒப்பார்கள்; (யாரெனில்?)

முததை மரபு வரு முறை தபுககுநர்=தொன்றுதொட்டுப் பாரம்பரியமாய் வருகின்ற படிப்புமுறையை மாற்றிவருகினறவா;

முறை தபுக்குநர்—அன்னவர் என முடிக்க.

---

(37) பொருளோர் தூற்றலி னின்றமி ழாள
ரவ்பாற் செல்லா தமைதனன் றென்றல்.

பாடல்சால் பனுவல் சிறுவிலைக் களிகருழீஇப்
பீடறி யொருவன் பெரும்பொருட் கேற்றிடி
னன்னோ னுலகி னெவ்வா றமைகுவ
னஃதே மானத் தமிழறி செல்வருங்
கல்வியை வயிற்றுக் காப்பிற் கமைத்துப்
பல்வினை தவிர்ந்து பதைபதைப் புறீஇய
தமிழ்ப்புல வோர்க்குத் தக்கவொன் றறில
ரிவருந் தம்மவாச் சுருக்கி யினிதமைந்
தவாமனைப் புறங்கடை யணைபா திருக்கில
ருழவுமுத லாய பற்பல வினைஞரும்
வாணிப வாணரு மன்னும் பிறரு
மேற்ற பெற்றி யின்றமி ழாய்ந்த
பின்ன ரத்துறை பேணுப் பயின்று
நன்னர்பெற் றுய்ப முத்தமிழ் நாட்டின்
வேளாள வாழ்க்கையர் தாளாண்மை செய்தில
ரற்பி லாப்பதொடிப் பரத்தையர்க் காளாய்க்
கற்புக்கடன் பூண்ட பொற்புடைத் தெய்வத்தைக்
கண்வழிச் செந்நீர் கரைந்துகக் கடுந்
திண்மைகொ ளிருப்பு நெஞ்சத் திருட்டனி
ளுவ லோரையு நற்றமிழ் நாடிய
பாவ லோரையும் படுத்தழிக் குநரே
யிவ்வா றியற்றுநின் சேய்களியல் பறியாய்
துஞ்சுதி யின்னந் துஞ்சுதி
செஞ்சுவைப் பனுவலணி செந்தமிழ்த் தாயே.

---

(இ—ள்.) பாடல் சால் பனுவல்=(இனியதமிழ்ப்) பாடல் மிக்குள்ள (ஒரு) நூலை;
[illegible] இயற்கையினை என்பது தோன்றப் "பாடல்சால்" என்றார்.

சிறு விலைக்கு அளிக்கு உழி = சிறிய விலைக்குக் கொடுக்கின்ற பொழுது;

உழி—காலத்தின்கண் வந்தது.

பீடு அறி ஒருவன் பெரும் பொருட்கு ஏற்றிடின் = (அந்நூலின்) பெருமையைத் தெரிந்த ஒருவன் அதிகபணங்கொடுத்து வாங்குவானாயின்;

ஒரு ரூபாய் கொடுத்து ஏற்கும்படி விலை பகரப்பட்ட புத்தகம் அருமையானதெனக்கண்டு பத்து இருபது ரூபாய் கொடுத்து அதனைக் கோடல் எனறபடி.

அன்னோன் உலகில் எவவாறு அமைகுவன் = (கூடிய விலை கொடுத்துவாங்கிய) அத்தகுதியுடைய அவன் (சீர்கேடுற்ற இககாலத்திலே இவ) உலகத்தில் எவவாறு அமைகுவன்;

அமைகுவன்— கணிக்கப்படுவான். ஒரு பொன்னை விலையாகவுடைய ஒன்றை நூறுபொன் கொடுத்து வாஙகுவனேல் இக்காலததார் அவனைப் பித்தன் எனறும், மையலுற்றமகன் என்றும் எள்ளி ஒறுக்காநிற்பர். பண்டைககாலததிலோ அரசரும பிரபுக்களும் புலவா முதலியோர்க்கு ஏராளமான திரவியமும் பிறவும் வழஙகிவந்தனர்.

"வானம் வாய்த்த வளமலைக் கவாஅற்—கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய—வருந்திற லணங்கி னாவியர் பெருமகன்—பெருங்க னுடன் பேகனுஞ் சுரும்பு—ணறுவீ யுறைகு நாக நெடுவழிச்—சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய—பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்—பறம்பிற் கோமான் பாரியும்" என்பது இடைகழி நாட்டு நததத்தனார் பாட்டு; "உடாஅ போரா வாகுத லறிந்தும்—படா மஞ்ஞைக் கீத்த வெஙகோ—கடாஅ யானைக கலிமான் பேகன்" என்பது பரணா பாட்டு; "பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை—நாத்தழும் பிருப்பப் பாடா தாயினுங—கறஙகு மணி நெடுநதேர் கொள்கெனக் கொடுத்த—பரந்தோஙகு சிறப்பிற் பாரி", "தேருடன்—முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்—படுமணி யானைப் பறமபிற் கோமா—னெடுமாப் பாரி" என்பன கபிலர் பாட்டுக்கள். "முல்லைக்குத் தேரு மயிலுககுப் போர்வையு—மெல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத—தொல்லை—யிரவாம லீந்த விறைவர்போல் * * *" என்பது புறப்பொருள் வெண்பாமாலை.

கடையெழு வள்ளல்களில் ஒருவனும் பறம்பு என்னும் மலைநாட்டுச சிற்றரசனுமாகிய பாரி என்பான் ஒருபகற் றேரூர்ந்து காட்டுவழிச் செல்லுமேல்லை தேரானது முல்லைக்கொடியொன்றிற் றடககுண்ண அததேரை அம்முல்லைக்கொடி பெறுதற்கு விரும்பியதாகக்கொண்டு அதன்பால் அதனை நிறுத்திவிட்டுச் சென்றனன். அவவெழுவருள் மற்றொரு வள்ளலாகிய நல்லூர்ச் சிற்றரசன் பேகன என்பான் தன்பதியிலுள்ள மயில்கள் யாவும் மாரிகாலத்திற் குளிர் கொண்டு நலியாமல் வாழ அவைகளுககுச் சட்டைகளளித்தான். பொருணசையைக் குறைக்கவும், சீவ தயையைப் பெருக்கவும், கொடையியன் முதலியவற்றைத் தெளியவும் செய்கைவழியாயப் போதித்துக்காட்டிய இவவிருவர்தம் அன்புநிலைமை இக்காலததுப் புல்லறிவாளர்க்கு விபரீதமாகத் தோற்றுமெனக.

அஃதே மான = அவ்வாறை ஒப்ப;

தமிழ் அறி செல்வரும் = தமிழினருமையைத் தெரிந்து ஈடுபட்ட செல்வர்களும;

கல்வியை வயிறு காப்பிற்கு அமைத்து = கல்விகற்றலினாலே வரும் விற்பத்தி ஞானத்தைச் சீவனோபாய கர்மத்திற்கு உதவும்படி பொருத்திக்கொண்டு;

பண்டைச் சங்கத்துப் புலவரெல்லாரும் நெய்தல், வாணிபம், வைத்தியம் ஆதிய பல வகைத் தொழில்களிற் றத்தமக்கு ஏற்றவற்றைச் சீவனோபாயத்தின்பொருட்டு நியமித்துக் கொண்டு பாஷா விற்பத்தியையுந் தஙகளுக்குச் சிறப்பாகப்பூண்டு வந்தனராகலின் அவருட் பெரும்பான்மையோர் வறுமைப்பிணிக்குட் பட்டிலர். இககாலத்திலே தமிழ்மொழி பயின்றோ ரெல்லாரும் அப்பயிற்சியைக்கொண்டே காலங்கழிக்கக் கருதி இடர்ப்படுகின்றனர். பத்துப் பதினைந்து ரூபாய் மாதவேதனம் பெற்றுத் தமிழ்ப்பண்டிதராய் அமர்ந்து வறுமையி லீடுபட்டுப் பிறரால் அவமதிக்கவும் படுகின்றனர். மூட்டை சுமந்தாலுங் குடும்ப காப்பிற்கு வேண்டிய பணத்தை முட்டின்றித் சம்பாதித்துக்கொள்ளலாம். தச்சர், கொல்லர், நாவிதர, வண்ணாராதியோரும் தங்குலக் கொழுந்துக்கள் அரசவுத்தியோகஸ்தராய் வாழவேண்டு மென்ற வாஞ்சை

ஒன்றனையே மேற்கொண்டு அவர்களைப் பள்ளிக்கு வைப்பர். அறிவை வளர்த்தலே கல்வியின் விசேட நோக்கமெனத் தெளிவாராயின தமிழ்க்கல்வியை நனி விரும்பிக் கற்பிப்பர்.

பல் வினை தவிர்ந்து = (தமக்கும் தாம் கற்ற கல்விக்கும் செய்தற்குரிய) பல செயல்களைச் செய்யாமல்;

வறுமைக் காரணத்தான் நூலியற்றல், அச்சிடுவித்தல், ஆராய்தல், குடும்பக்காப்பு என்றன்னபிறவற்றையெல்லாம் நிறைவேற்றிக்கொள்ளாமற் பாழ்படுகின்றனர் என்க. "பிறந்த குலமாயும் பேராண்மை மாயுஞ்-சிறந்ததங் கல்வியு மாயுங்-கறங்கருவி-கன்மேற கழூஉங் கண மலை நன்னாட-வின்மை தழுவப்பட் டார்க்கு" என்பது நாலடி.

பதை பதைப்பு உறீஇய தமிழ் புலவோர்க்கு = (பலதுன்பங்கள் ஓயாமல் வந்து வருத்துவதானே அவற்றைத் தாங்கற்குரிய ஆற்றலில்லாதவராய்) மிகப்பதறுகின்ற தமிழ்ப்புலவர் தங்களுக்கு;

தக்க ஒன்று ஆற்றிலர் = தகுதியாகிய ஒரு காரியத்தையாவது செய்திலர்;

அச் செல்வர் செய்திலர் என்க. செய்யாமைக்குக் காரணம் முற்கூறப்பட்டது. சிறு விலைக்குப் பெறக்கூடிய பொருளுகளுப் பெருவிலை கொடுத்துக் கோடல் எனக்காட்டிய உவமை புலவர்க ளுதவாமையொடு பொருந்துமா றெங்ஙனமெனில், புலவர் சேவகம் விலையுயர்ந்ததெனத் தெரிந்திருந்தாலும் தற்காலம் எளிய சம்பளத்திற்குப் பெறக்கூடியதாயிருத்தலின் உயர்ந்த வேதனங்கொடுத்தால் உலகு நகைக்கு மென்றஞ்சிக் கொடா தொழிதலின் ஒருபுடைப் பொருந்தும், அன்றியும் அங்ஙனம் அஞ்சி விலக்கும் உலக நகைப்பை அற்ப விலைக்கு வாங்கக்கூடிய பாத்தையர் போகம் முதலியவற்றுக்கு அதிக விலை கொடுத்துக் கோடலால் மறுவழித் தம்பால் அடைவித்துங் கொள்கின்றனர் என்ற இகழ்ச்சிக்கும் மற்றொரு புடை ஒக்கும் என்க.

இவரும் தம் அவா சுருக்கி இனிது அமைந்து = இப்புலவர்தாமும் (தம்மை வருத்தி வருகின்ற) ஆசையைக் குறைத்து இனிதாக மனோசாந்தமுற்று;

தம்மிடத் தில்லனவற்றைத் தாம்பெற விரும்புதல் அவாவாதலின் அதற்கு வறுமை எனப் பொருளுங் கூறுப. அதனை முற்றும் விடுத்தல் துறவிகளொழிந்த ஏனையோர்க்கு அரியதொன்றாதலின் "சுருக்கி" என்றார். சுருக்குதலாவது உடலை ஓம்புதற்கு வேண்டிய உணவும் உடையும் பெற்றுழி மனரம்மியமாகி அலங்காரம், சுவை, ஆரவாரம் என்னுமித் தொடக்கத்தனவற்றை நாடாமல் அறவே களைந்து "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல்" என்பனவும் அவை போன்றனவும் இல்லாதாராய் இருமைக்கும் காரணமாகிய நற்குணநற்செய்கை யுடையவராய் இருத்தல் என்க.

அவர் மனை புறங்கடை அணையாது இருக்கிலர் = அச்செல்வருடைய வீட்டு வெளிவாயிற் கதவத்தைச் சேராதிருக்கவுமாட்டார்கள்;

அச்செல்வர் இப்புலவரைத் தம் அகத்துள்ளே வரவிடவுமாட்டார் என்பது தோன்றப் "புறங்கடை" என்றார். "புல்லுக் கட்டும் விறகுஞ் சுமந்தபேர் பூர்வ சன்ம புண்ய பலத்தினானெல்லுக் கட்டும் பணக்கட்டு நேர்ந்தபி னிலக் கல்லுக் கடுக்கனும் போடுவர்-சொல்லுக் கட்டும் புலவரைக் கண்டகாற் றூறிப் பாய்ந்து கதவை யடைத்தெதிர்-மல்லுக் கட்டும் புல்லரை ***" எனப் பிற்காலத்தாருங் கூறி வருந்தினர்.

உழவு முதல் ஆய பல் பல வினைஞரும் = உழவை முதலாகவுடைய பலப்பல தொழிலாளர்களும்;

வாணிபம் வாணரும் = (அத்தொழிலாளர்களால் விளைவிக்கப்பட்ட பொருள்களை), வியாபாரஞ் செய்து பிழைக்கும் வைசியரும்;

மன்னும் பிறரும் = இவர்களிடத்திற் சேர்ந்திருந்து பிழைக்கும் ஏனையோரும்;

கணக்கர் முதலோரையுங் கொள்க.

ஏற்ற பெற்றி இன் தமிழ் ஆய்ந்த பின்னர் = (தங்கள் பாஷையையும் தாம் செய்யும் தொழிலையும் நுட்பமாக அறிதற்கேற்ற தன்மையளவாக) இனிய தமிழை ஆராய்ந்து கற்ற பின்னர்;

அ துறை பேணுபு பயின்று = (தம் சீவனோபாயத்திற்கு வேண்டிய) அத்தொழிற் பகுதியை விரும்பிக்கற்று (அவ்வாறு கற்றபின்னர் அத்தொழிலைப் பலகாலம்) செய்துவருதலினாலே;

நன்னர் பெற்று உய்ய = நன்மையை அடைந்து (அவரெல்லாருஞ்) சீவிக்க;

இங்ஙனம் புரிவரேல் நம் தேசமும் பாஷையும் கெடாமல் நனி விளங்கும் என்க. இதனாற் கட்டாயப் படிப்பு வைத்துக்கோடல் இன்றியமையாதெனக் குறிக்கப்பட்டது.

மு தமிழ் நாட்டின் வேளாண் வாழ்க்கையர் = மூன்றாகிய தமிழ்நாட்டிலேயுள்ள நாகரிகம் வாய்ந்த பெரியோரெனக் கூறிக்கொண்டிருப்போர்;

நாகரிகம் என்பது உபகாரம் என்னும் பொருட்டு. "நயத்தக்க நாகரிகம்" என்பது குறள்; "நஞ்சு முண்பா நனிநா கரீகர்" எனபது நற்றிணை.

தாளாண்மை செய்திலா = முயற்சி புரிகின்றிலர்; (ஊக்கஞ் செலுத்துகிலர், உபகரித்திலர், என்றும் கூறற்கும்.)

உழவர் முதலியோர்க்குத்தாம் இவ்வறிவு வாய்ந்தில தென்னின் அறிவுமாற்றலுஞ் சான்றவரெனப் பெரும்பெயர் வாளா தாங்கிக்கொண்டிருப்பவர் யாது காரணம்பற்றி இவற்றைச் செய்தற்கு முன வந்திலா என்க. இவர்கள் தமிழொடு தமிழ்ப்புலவர்களையும் அழிக்கின்றார்கள் எனப் பிற் கூறுப.

அற்பு இல் ஆய தொடி பரத்தையர்க்கு ஆளாய் = அன்பில்லாத தெரிந்த வளையல்களை அணிந்த பொதுமகளிர்க்கு ஆட்பட்டு;

பரத்தையர் காட்டும் அன்பு வஞ்சகப் போலியன்றி மெய்யன்பு ஆகாது ஆதலின் "அற்பில்" என்றார். "அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா—ரின்சொ லிழுக்குத் தரும்" என்னும் குறளையும் அதன் விசேடவுரையையும் நோக்குக.

மதிகேடர் நிதிதொலைக்கும் மார்க்கம் பல்லாறு இருப்பவும் பரத்தையரைமட்டுங் குறித்த தென்னேயெனின் காமமே பாவங்களெல்லாவற்றையும் பயக்குந் தாயாகித் தலைநிற்றலின் என்க. "கொலையஞ்சார் பொய்நாணார் மானமு மோம்பார்—களவொன்றோ வேனையவுஞ் செய்வார்—பழியொடு—பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்—காமங் கதுவப்பட் டார்" என்னும் நீதிநெறிவிளக்கச் செய்யுளையும், "முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகிற்—கடியப் பட்டன வைந்துள வவற்றிற்—கள்ளும் பொய்யுங் களவுங் கொலையுந்—தள்ளா தாகுங் காமந் தம்பா—லாங்கவை கடிந்தோ ரல்லவை கடிந்தோரென—நீங்கின ரன்றே நிறைதவ மாக்க—ணீங்கா ரன்றே நீணில வேந்தே—தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்" என்னும் மணிமேகலை கூற்றையும், "மண்ணுலகி லுள்ள வரம்பில் பெரும்பவத்தைப்—பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனா—லண்ணலஃ துணர்தி யன்னவரைச் சிந்தைதனி—லெண்ணவரும் பாவ மெழுமையினு நீங்குவதோ" என்னுங் கந்தபுராணச் செய்யுளையும் அன்னபிறவற்றையுங் கண்டறிக. "தூம கேது புவிக்கெனத் தோன்றிய—வாம மேகலை மங்கைய ரால்வருங்—காம மில்லை யெனிற்கடுங் கேடெனு—நாம மில்லை நரகமு மில்லையே" என்றனர் கம்பநாடரும். பரத்தையர் பொருள்பறிக்குந் தன்மையைச் சீகாளத்திப் புராணஞ் செப்புமாறு—"குனித்த விற்றிற லரசிளங் குமரராங் குடத்தை—யனிச்ச மெல்லடிக் குவியிள முலையவ ளழகாந்—தனிக்க யிற்றினிற் பூட்டிவிட் டனுதினந் தாழ்ந்த—மனக்கிணற்றினிற் பொருட்சலம் வறந்திட முகப்பாள்".

கற்பு கடன் பூண்ட பொற்பு உடை தெய்வத்தை = தனது கற்பனைப்படியே நடக்கும் கடமையை விரதமாகப் பூண்டுகொண்ட பொலிவினையுடைய தெய்வத்தன்மை வாய்ந்த மனையாளை;

செய்கையாற் குறைவில்லை என்பார் "கற்புக்கடன் பூண்ட" என்றும், அழகாற் குறைவில்லை என்பார் "பொற்புடை" என்றும், நிக்கிரகாநுக்கிரக வாற்றலுமுண்டென்பார் "தெய்வத்தை" என்றும் கூறினர். "பொற்புடை" என்னுமிசைசானே அணியிருந்தமையும், முன்

பின் அமைந்த சொற்போக்கால் அதனைப் பாத்தையர்க்குக் கணவன் கட்டளைப்படி அளித்தமையும் பெறப்பட்டன. இதனாற் பொறையுடைமையுங் கூறப்பட்டது. பொற்பு—அழகுமாம்.

கண் வழி செந்நீர் கரைந்து உக கடுகும்=கண்ணினிடமாக இரத்தம் கரைந்து சிந்தும் வண்ணம் விரைந்தொழுகும்;

கொடுமை தோன்ற நீர் என்னாது "செந்நீர்" என்றார். செந்நீர் என்றமையானே கரைதலைக் கண்ணின்மேல் ஏற்றுக. "உக" என்று சொல்லப்பட்டிருத்தலின் "வழி" என்றது வழிந்தோடுகின்ற என்று தொகைப்பொருள் பயக்காது. ஆராய்வின்மையும் சினமிகுதியும் தோன்றக் "கடுகும்" என்றார்.

திண்மை கொள் இரும்பு நெஞ்சம் திருடன் இன்=திண் என்ற வன்மைத்தன்மையைக் கொண்ட இரும்பையொத்த மனசினையுடைய கள்வனைப் போல;

பிறபெண்களை விரும்பி நாடாமல் நின்னையே நித்தமும் பேணிவருவேன் என்று வாக்குச் செய்து மணந்தபின்னர் மாறு செய்தலில் "திருடன்" என்றார். "தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என்றாங்கு அவனெஞ்சிற்கு அது புலப்படும் என்பது தோன்ற "நெஞ்சத் திருடன்" என்றார். அடைமொழிக்குங் காரணம் இதனானே இதுவெனப் புலப்படும். இரும்பிற்கும் இவனுக்கும் இயைந்தவற்றை விரித்துக் கூறிக்கொள்க.

(நல தமிழ் நாடிய) நாவலோரையும்=(நல்ல தமிழை ஆராய்ந்த) நாவன்மை வாய்ந்த புலவர் தங்களையும்;

நல் தமிழ் நாடிய பாவலோரையும்=நன்மையமைந்த தமிழானது இவரையடைந்து உய்குவலென்று ஆராய்ந்து வந்தமைந்த பாக்களைப் பாடும் வல்லமை வாய்ந்தார் தங்களையும்;

"நற்றமிழ் நாடிய" என்னும் அடைத்தொடரை இரண்டிடத்துங் கூட்டிக்கொள்க. அத்தொடர் பாவலர்தமக்கு இயற்கையாக அமைந்திருப்பது அவர்க்கியற்கையான் அமைந்த பெருமையைப் புலப்படுத்தற் கென்க. பாவலர் கூறுவதை விளங்க வைத்தற்கும் நாவலரே காரணராகி நிற்றலின் நாவலர் முற்கூறப்பட்டனர்.

படுத்து அழிக்குநர்=(வறுமைக்குள்ளும் இகழ்ச்சிக்குள்ளும்) அகப்படுத்திக் கெடுக்கின்றார்கள்;

இ ஆறு இயற்றும் நின் சேய்கள் இயல்பு அறியாய்=இக்கூறியவண்ணம் பல கேடுகளைத் தாமே இயற்றிக்கொண்டு கெடுகின்ற நினது குழந்தைகளின் இயற்கையை அறியாதவளாகி;

துஞ்சுதி இன்னம் துஞ்சுதி=நித்திரை புரிகின்றாய் இன்னும் இவ்வாறே உறங்குவாயாக;

நீ அவர்களைத் திருத்த முயலாமற் பராமுகமாயிருதல் பெருங்குற்றமே என்று குறிப்பிக்கப்பட்டது.

செம் சுவை பனுவல் அணி செம் தமிழ் தாயே=செவ்விய சுவை வாய்ந்த நூல்களை அணிகலன்களாகப் பூண்ட செந்தமிழ்த்தாயே;

தாயே—துஞ்சுதி இன்னந் துஞ்சுதி என முடிக்க.

"நின்னருமைப் புதல்வரெலா நினையிகந்தாங் கிலமகள்பா னேசம் பூணக்—கன்னிநறுந் தமிழணங்கே யென்பவநீ யிழைத்தனைகொல் கமலப்புத்தேள் * * *" என்று பிறரும் புலம்பினர்.

---

## (38) மேனிலை புணர்ந்து விழுமிய நடைபயின் றானமின் மரபின துண்மைக் கவியெனல்.

புலத்துறை முற்றிய புலவோர் தம்மையு
நலத்தகு பாவரு ணல்லோர் தம்மையு

## உலகியல் விளக்கம்.

நிலத்துப் புகழ் நிறீஇய நெறிய வேலோரையு
மறத்துறை வழாத வந்தணர் தம்மையும்
மறத்துறை வழாத மறவோர் தங்களொடு
மண்ணுள் வேளாரையு மங்கையர் கற்பையும்
பெற்றோர் போற்று பெருநா ளவர்கட்குநி
ருற்றோர் தம்மையு மின்னர் பிறரையும்
பத்து மருங்கினு நேருநர் பெயரினன்
மெய்த்திரு மகனே மேன்மைசா லவரே
யென்னுமித தொடக்கத் திவர்வர லாற்றையு
நன்றிதரு கடவுளர நாம்போற் றுதுமே
பொன்றாற் றுந்தொடரா மொன்றுபெறு நதா
நன்றாற் றிறையை நாமுள் குதுமே
இனியே,
நிறநிலைக் காப்பும் பிறர்நேர்பு வெறுக்கு
முறையு நம்மனோர் முற்றித்துறை போந்த
முதலினு னன்றே முரண்கோ ளாளர்தம
யற்பல குழூஉக்கள் பாறுபட்டு மறைந்துங்
கற்புட னமைந்து காட்சியுற் றதுவே
யுடைமை யனியே யுயர்த்துவ தம்மையென்
றடைவுறு மனத்தி னம்மே னுட்டா
ருண்டு வகைதமை யுணவிற்கமை கருவியை
யண்டிய வல்லியை யருந்துவகைப் பொருளை
மண்டிய வுடையின் மரபினைப் பலவா
றொடிகளொரு மாற்றம் பிடிகருந ரிவரே
சொல்லணி தமைமைத் தூற்றுநர் முரண்டு
நமரே,
யுணுமுத லவற்றிற் குள்ள வாகுல
நீர்மை களைந்து நிலத்தமொழிக் கவ்வெலா
மீரங் கலந்த நெஞ்சினொ டியைகுநர்
பொருள்களை யவர்போல் வாளா புனைகிலர்
மருளற வருள்வொடு மனனிறீஇ யாய்ந்து
குறைவு மிகையுங் கொளாஅது செவ்வெ
னிலத்துவகை யியற்கை நலத்தரசர் செய்கை
குலத்தரிவை நலத்திற் கூறியாங் குநரே
தேன்பொதி மருந்தெனச் செய்யுணனி செய்தே
னான்குமுழுக் தறுவையை நம்மனோ ரொன்றுமீஇத்
தாஅஞ் சென்று தகைபல வாற்றுந
ராஅஞ் செய்கைகொ லன்னவர் தமக்கே
யுடையில ராகி யுரைப்பருஞ் சீர்சா
னடைதவழ் வினைதமை நனிதுறந் தனர்யல

ரிவற்று னமரே யேற்பன வற்றை
யெதனுணை மதிகதின் புயற்றி நீரீஇயின
ரேனையர் தமமையு மமேரயு
மான வறிவா னமைந்தநோக் குமினே.

---

(இ-ள்.) புலம் துறை முற்றிய புலவோர் தம்மையும்=நூற்றுறைகளிலே ஆராய்ச்சி சிறந்த புலவர்தங்களையும்;

புலம்—நூல்; "புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்" என்பது தொல்காப்பியப் பாயிரம். புலத்துறை முற்றிய கூடலூரககிழார என்பது ஒருபுலவர்பெருமானின் பெயர். "புலந்துறை போகிய புலவர் நாவினுட்—கலந்துறை கலைமகள் கவிதை கர்தமா—நிலந்தொழப் புறப்படு நிலைய ளாகுமிவ—விலங்கிழை பெருமையை யெண்ண வேண்டுமோ" என்பது ஒரு பெரியார் பாட்டு. புலவோர் என்றமையின் நூலியற்றி ஆராய்வோர என்க. இயற்கைக் கவித்துவமும் ஆராய்ச்சி வன்மையு மிருத்தல்பற்றி இவர் முற்கூறப்பட்டனர். இதற்குச் சான்றுவோர் நலலந்துவனூர் முதலிய நல்லிசைப் புலவர்கள் என்க. இனி, புலம் வேதமுமாம். "புலனும் பூவனு நாற்றமு நீ", "புலம்புரி யந்தணர் கலங்கினர் மருண்டு" என்பன பரிபாடல். புலத்துறைகளை முடித்த பெரியோருமாம்.

நலம் தகு பா அருள் நல்லோர் தம்மையும்=நன்மைக்குத் தகுதியனவாகிய பாடல்களைச் செய்துதவும நல்லோா தங்களையும்;

பாவலன் செய்யுட் செய்யுங் காலத்தும் பாடப்படுபொருளோடு ஒன்றுபட அரும்பெரும் பொருள்களைப் பாவின் வழியாக அமைத்துக் கொடுத்தலின் "நலத்தகு பா" என்றார். உலகத்துப்பொருள்களோடு வேற்றுமையின்றி நெஞ்சநெக்குருகிக் கண்டுகண்டுவந்து கண்டெனவளிக்கும் காட்சி சான்ற நன்றியமைந்தவர் என்பது தோன்ற "அரு ணல்லோர்" என்றும் கூறினார்.

நிலதது புகழ் நிறீஇய நேர் இயலோரையும்=இபபூவுலகத்திலே கீர்த்தியை நிறுத்திய நேர்மையமைந்த இலககணமுடையோரையும்;

"தேடினு ரியாவ ரேகொ லெழுவகை யானுஞ் சீர்த்தி—நீடினு ரவரே யென்பர் நீணிலத் துயர்ந்த மாந்தா" என்பது விலலிபாரதப்பாயிரம். கல்வி, ஆண்மை, செல்வம், வீரம், கொடை என்னு மித்தொடக்கத்தனவற்றாற் புகழ் மருவும் என்ப. "நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்—போற்றாது புத்தே ளுலகு" எனபது குறள்; "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்—வலவ னேவா வான வூர்தி—யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்து" என்பது புறம்.

அறம துறை வழாத அந்தணர் தம்மையும்=(தங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள) அறவழியினின்றும் விலகிச் சேராத பிராமணர்தங்களையும்;

அந்தணர்—அந்தத்தை அணவுவார். எனவே வேதாந்தத்தையே நோக்குவார் என்றவாறு. அந்தணாளன் என்புழி அழகிய தண்ணளியுடையவன் என்றும் பொருள்படும். "அறத்துறை விளங்கிய யறவோர் பள்ளியும்" என்பது சிலப்பதிகாரம். இனி, அறமும் அதன் துறைகளும் விளங்குவதற்குக் காரணமாகிய அந்தணர் தங்களையும் என்றுமாம். "அறத்துறை" அறமும் அறததின் றுறையுமென உம்மைத்தொகை. அறத்தின் விரிவாகிய இயல்களையும், இல்லறதுறவற வியல்களையும் அவ்விரண்டறங்களின் பல துறைகளையும் விரிந்த நூல்களிற் காண்க.

மறம் துறை வழாத மறவோர் தங்கள் ஒடு=வீரமும் அதன் துறைகளும் பிறழாத (எனவே அவைகள் விளஙகுதற்குக் காரணமாகி நின்ற) வீரர் தங்களோடு;

இதுவும் உம்மைத்தொகை. "மறத்துறை விளங்கிய மன்னவர்" என்பது சிலப்பதிகாரம். மறத்துறை வெட்சி முதலிய எழுவகைப்படும். விரிவைத் தொல்காப்பியப் புறத்திணையியலுள்ளும் பிற விலக்கணப் பொருளதிகாரங்களுள்ளும் கண்டு கொள்க.

மண் ஆள்வோரையும் = நிலவுலகத்தை ஆட்சிபுரியும் அரசர்களையும்;

"பொன்னி னாதந் பொருபடை யப்படை—தன்னி னாதந் தரணி" என்பது கருதி மறவரோடு அரசர் கூட்டி எண்ணப்பட்டார். மன்னர்தம்மையும் என்றது ஆள்வோரையும் என்றமையான் அவர்தஞ் செங்கோலுண்மை விளக்கப்பட்டது.

[மங்கையர் கற்பையும்] கற்பு மங்கையரையும் = கற்பினாற் சிறந்த மகளிர் தங்களையும்;

முற்கூறப்பட்டவரும் அன்னபிறரும் தந்தமக்குரிய தொழில்களிலே சிறப்புற்றிலரெனினும் இகழப்படமாட்டார். மங்கையர்க்கது சாலாமை தோன்றக் கற்பு மங்கையரையும் என்னாது "மங்கையர் கற்பையும்" என்றார். ஆதலின் கற்பு மங்கையரையும் என விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது.

"தங்களு யகரிற் றெய்வந் தவம்பிறி திலவென் றெண்ணு—மங்கைமார் சிந்தை போலத் தூயது" என்றார் கம்பநாடரும். கற்பு ஆறிய கற்பு, சீறிய கற்பு என இருவகைப்படும். அறக் கற்பு மறக்கற்பு என்றுங் கூறுப. "ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை—வண்டார் கூந்த லொண்டொடி கணவ" என்பது பதிற்றுப்பத்து. "உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்" என்பது சிலப்பதிகாரம். "கற்புடைமகளை மகளே அன்றித் தேவரு முனிவர் முதலாயுள்ளோருஞ் சென்றேத்துதல் இயல்பாகலும்" எனபா அடியார்க்குநல்லார். "வானம் பொய்யாது வளம் பிழைப் பறியாது—நீணில வேந்தன் கொற்றஞ்சிதையாது—பத்தினிப் பெண்டி ரிருந்த நாடு" என்பது சிலப்பதிகாரம். இவற்றையும் இன்னபிறவற்றையும ஏற்ப விரித்துரைத்துக் கொள்க.

பெற்றோர் போந்த பெருநாள் = தம்மைப் பெற்றெடுத்த இருமுது குரவர்களும் இறந்து போன பெரியநாளிலே;

சிராத்த தினத்தை இங்ஙனங் கூறினா. சிராத்தம் சிரத்தையோடு செய்யப்படுவதாதலின செய்யு மத்தினத்தைப் பெருநாள் எனறார். அத்தினத்தைத் திதியைக் கொண்டேனும் நட்சத்திரத்தைக்கொண்டேனும் குறிப்பர். அடியார், முனிவரா, துறவிகளாதிய பெரியோர்க்குப் பெரும்பான்மையும் நட்சத்திரத்தையும் ஏனையோர்க்குத் திதியையும் கொள்வது வழக்கம். பெறறோர்க் கன்றி ஏனையோர்க்கும் சிராத்தம் செய்தல் உண்டேனும் முறையின் தலைமைபற்றி இங்ஙனங் கூறினர். "தென்புலத்தார் தெய்வம்" என்று வள்ளுவனார் தொடங்கியதும் ஆராய்தற் பாற்று.

அவர்க்கு நிகர் உற்றோர் தம்மையும் = அவர்களுக்குச் சமானமானவர் தங்களையும்;

பிதிர்வர்ணம், மாதிர்வர்ணம் என்னுந் தானத்திலே வரிக்கப்பெற்ற அந்தணரைப் பிதிரராகப் பாவித்து வணங்குதலை ஈண்டுக் கூறினா. விசுவதேவர், விண்டு முதலியதானங்களையுங் கொள்க.

இன்னார் பிறரையும் = இவர்ப்போன்றோராகிய பிறர்தங்களையும்;

("இன்ன பிறரையும்" என்பது பாடமாயின இவர்போன்ற பிறர்தங்களையும் என்றுரைத்துக்கொள்க.)

ஆசாரியர், உயர்ந்தோர, வள்ளல்கள் என்னுமித் தொடக்கத்தாரை ஈண்டுக் குறிப்பித்தார்.

பத்து மருங்கினும் தேர் ஊர் பெயரினன் = பத்துத் திசைகளினும் தேரைச் செலுத்துவோன் எனப் பெயரியவன்றன்;

அவனைத் தசரதன் என்ப. வடமொழிப் பெயரைத் தமிழ்நூலுட் சேர்த்தல் பெரும்பாலும் வழக்கன்றாதலின் இங்ஙனங் கூறினா. இப்பெயர்க் காரணம் பத்துவகைத் தேருடைமை என்றும், பத்துவிதத் தேர்செலுத்தும் ஆற்றலுடைமை என்றும் பலபடக் கூறுவாருமுளர். யாதொரு காரணம் பற்றியாவது இப்பெயர் ஏற்பட்டதெனின் அதற்குமுந்தி வழங்கிய இயற்பெயரும் ஒன்றிருத்தல் வேண்டுமெனக.

மெய் திரு மகனே = மெய்மை அமைந்த செல்வத்தினையுடைய குமாரனே;

அவனை இராமன் என்ப. சீதாபிராட்டி இலக்குமணன் அனுமன் முதலியோரையுங் கொள்க.

திரு—அழகுமாம். திருமகன்—சிதாமணாளனுமாம். "நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉ—மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்" என்னும் மணிமேகலைப் பகுதியும் மகனுக்கு இப் பொருளுண்மையை வலியுறுத்தும். "மெய்த்திரு"—முத்திச் செல்வமுமாம், மற்றவையெல்லாம் பொய்த்திருவாதலின். ஈண்டுத் தேவர்தம் அவதாரங்களை யெல்லாங் கொள்க.

மேன்மை சால் அவரோ = மாட்சிமை மிக்க பஞ்சபாண்டவர்களோ;

துரியோதனாதியோரால் எத்துணையோ தாழ்த்தப்பட்டும் தாழாமல் அறச்செயலும் இறைப்புரிவும் உடையராயிருந்தமைபற்றி மேன்மை சான்றனர் என்றார்.

என்னும் இத் தொடக்கத்து இவர் வரலாற்றையும் = என்றுகூறும் இத்தொடக்கத்தினை யுடைய இவர்களின் வரலாற்று முறைகளைத் தெரிவிக்கின்ற நூல்களையும்;

இராமாயணம் பாரதம் என்னும் இவ்விரண்டும் இதிகாசமாதலின் சிறப்புக்கருதிக் கூறப் பட்டன. இவற்றை இக்காலத்தார் தேச சரித்திரம் என்பர். அடியவர் வரலாறு, அரசர்வரலாறு வள்ளல்கள் வரலாறு, கற்புடை மங்கையர் வரலாறு என்பன போன்றவற்றையுங் கொள்க.

நன்றி தரு கடவுள் ஆ(க) நாம் போற்றுதும் = நன்மையைத் தருகின்ற கடவுளாக நாம் (பாவித்துத்) துதித்து வருகின்றோம்;

கற்றோரையும், அவரை ஒப்பாரையும், கல்வியையும் தெய்வமாகக் கருதிவருதற்கு அவர் தம் ஆற்றலை எத்துணை அறிந்தின்புற்றிருத்தல் வேண்டுமென்பது ஈண்டாராய்தற்பாற்று. இவ ரன்றோ தமக்கு வேண்டியவற்றை இழந்திடாத ஆற்றல் வாய்ந்தவராவர்.

ஒன்று ஆற்றும் தொறூஉம் = ஒரு காரியத்தைச் செய்யும் எல்லாப் பொழுதின்கண்ணும்;

ஒன்று பெறும் தொறூஉம் = ஒன்றனை அடையும் எல்லாப் பொழுதின்கண்ணும்;

தொறும் என்பது கடவுள்வாழ்த்தி னீட்சிதோன்ற இரண்டிடத்தும் அளபெடுத்தது.

நன்று ஆற்று இறையை நாம் உள்குதும் = நன்மையைப் புரிந்துவருகின்ற கடவுளை நாம் நினைத்துவருகின்றோம்;

யாதொன்றைச் செய்யும் பொழுதும் கடவுளை நம்பிச் செய்தால் அச்செயலாற் பெறுவது நன்மையே என்பது போதர "நன்றாற் றிறையை" என்று கூறினார். பெறுதல் முதலாய நன் மைகளை அடைவிப்பவன் இறைவனாதலின் அவனை உள்ளுதல் செய்ந்நன்றியறிதலாகும். உள் ளார்க்கு உய்வில்லை. "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்—செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பது குறள்.

இனியே = அப்பால்;

நிறம் நிலை காப்பும் = வருணாச்சிரமக் காவலையும்;

தந்தம் வருணங்கட்கும் ஆச்சிரமங்கட்கும் ஏற்ப விதித்தபடி ஒழுகுதலே நிறநிலைக் காவல் எனப்பட்டது. இதனைச் சுவதருமம் என்ப. தத்தமக்கு ஒவ்வாத பிறவருணாச்சிரம தருமங்களை அநுட்டித்தலைப் பரதருமம் என்ப. "சாதுரியமாக அநுட்டிக்கப்பட்ட பரதருமத்தினும் சுவ தருமம் பண்பானே தாழ்மைத்தேனும் அது சிறப்பைச் செய்யும். சுவ தருமத்தான் வருமரணம சிறப்பைக் கொடுக்கும், பரதருமம் அச்சம்பயக்கும்" என்பது கீதை. இவ்வரிய மேற்கோளையுங் கருதுகிலராய இக்காலத்தார் பரதருமத்தையே அநுட்டித்துக் கெடுவர். தூல தேகப் பிறப்பிலே வருணபேதங்களில்லை, புத்திதத்துவத்திலே அவை பொருந்தியுள என்றாங்கு நினைத்துவருதலே பரதருமாநுட்டானத்திற்கு மூலகாரணம். புத்தி தத்துவம், நோய், பேறிழவுகள் என்னுமிவை ஊழின்வழியே வருதற்பாலன என்பதுபோல அவ்வூழ்வழியான் வருணபேதங்களும் தூல தேகப்பிறப்பைப் பற்றிநிற்கும் என்னும் நுணுக்க முணராமையே மேற்கூறிய நினைப்பை உண் டாக்கிற்றென்ப. முன்னர்ச்செய்த தீவினை நோய் முதலியவற்றைக் கொண்டு வருத்தற்கும் நல் வினை நன்மைபுரிதற்கும் ஆதாரமாக இருப்பது தூலதேகமாய் இருப்பவும் அத்தூல தேகம் வருணப் பிறப்புக்குமட்டும் காரணமாகாது என்றல் பொருந்தாதென்க.

பிறர் நோர்பு வெறுக்கும் முறையும் = பிறர்தங்கள் ஊறுமுதலியன நிகழ்தலை முனிகின்ற முறைமையையும்;

பிறர் என்பவர் நீசர், புறச்சமயிகள், சமயப்பிரட்ட ராதியோர்.

நம்மனோர் முற்றி துறை போந்த முதலினுன் அன்றே=நம்மவராகிய முன்னைச் சானரோர் (நம்மவரிடத் தெல்லாம் நிறைவேறும்படி வாய்ந்த ஆற்றல் சான்ற) தெளிந்தவழியிற் சென்ற காரணத்தினுல் அன்றோ;

முரண் கோள் ஆளர்தம்=ஒன்றோடொன்று மாறுபடுகின்ற கொள்கையையுடைய மதச் சார்பினர்களின்;

பல் பல குழூஉக்கள் பாறுபட்டு மறைந்தும்=பலப்பலவாகிய கூட்டங்கள் அழிவினுட் பட்டு மறைந்துபோயும்;

கற்பு உடன் அமைந்து காட்சி உற்றது=(முன்னைச் சான்றோர்) கற்பித்தவண்ணம் (இதுகாறும்) பொருந்திவந்து தோற்றம் பெற்றது நமது மதம்;

ஒவ்வொரு சாதியாரும் தத்தமக்குரிய மதத்தின்மேற் பற்றுடையவராயிருத்தல் வேண்டியது முறைமையாகும். அப்பற்றுக்கொண்டு புறச்சமயங்களை இகழ்ந்து ஒறுக்கவும் படாது. கணவனையே கைக்கொண்டொழுகும் கற்புடைப் பெண்ணொருத்தி அந்நியன்பால் உரையாட நேரந்துழி விருப்பும் வெறுப்புங் காட்டாமல் எங்ஙனம் நடந்துகொள்வாளோ அங்ஙனமே புறமதச்சார்பினரோடு நடந்துகொள்ளல் வேண்டும். இதனைப் புறவேற்றுமை என்ப. இனிப்புறவேற்றுமை இனிது நடந்துவருதற்கு அகவேற்றுமையும் சாதிக்கப்பட்டு வரல்வேண்டும். சைவ மதத்தினராகிய அந்தணர் முதலிய நான்கு வருணத்தார்களும் வெவ்வேறாகிய ஒழுக்கங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. மேற்குலத்தான் கீழ்க்குலத்தவன்பால் விருந்துண்ணல் மணசேர்தல் ஆதியன செய்யமாட்டான். இத்தகைய அகவேற்றுமைகளை அநுசரிக்கும் பொழுதும் மேற்கூறியவாறே பகை, பழி, பொறாமை முதலியனவற்றைக் கொள்ளாமற் சாதித்துவருதல் வேண்டும். சாதிக்காவிடின் உலகம் இனிது நடைபெறுமாறேயில்லை. சாதிப்பதால் என்றும் நலனேயன்றித் தீமை விளைவது மில்லை. ஓர் உடம்பின்கண்ணுள்ள அவயவங்கள், இடக்கை, வலக்கை, பாதம், சிரசு, எனப்பல்வேறு பணிக்குரிய ஏற்றத்தாழ்வுகள் உடையனவாக அமைக்கப் பட்டிருந்தாலும் அவையெல்லாம் தம்முள் முரணுமல் உடம்பொடு பயன்படப் பொருந்தி அவ்வுடலுக்கோர் தீமைவருங் காலத்து ஒன்றித்துதவுதல்போல அகவேற்றுமையுடைய ஒருசமயப் பலபகுப்பினர்தமிருள்ளும் மதாபிமானமும் அதனை அடுத்த ஒற்றுமையும் இருந்துவருதல் வேண்டும். முக்காலமும் ஒருங்குணர்ந்த பெரியோர் தாபித்தவற்றை முக்குணவயத்தராகிய நாம் அகற்றிவிட நினைப்பது எத்துணைப் பேதைமை என்க. இங்ஙனமே இந்நூலாசிரியர் நுதலிய கருத்தை இன்னும் விரிக்கிற் பெருகும். வல்லார்வாய்க் கேட்டுணர்க.

உடையே அணியே உயர்த்துவ தம்மை என்று அடைவுறும் மனத்தின் அ மேல் நாட்டார்=ஆடையே, அலங்காரமே தம்மை உயர்த்துவன (மேன்மைப்படுத்துவன) என்று கருதி (அவற்றை அவாவி) அடைதலுறும் மனசினையுடைய அந்த மேனாட்டு மக்களது;

ஆயுத வகைகளையும் கொள்க. நகைகள் பலவற்றை அணிந்து கொள்ளாமாதலின் அணியென்பது ஈண்டு அலங்காரத்தின்கண் வந்தது. நற்குண நற்செய்கைகளிலே அவர்க்கு நம்பிக்கையில்லை என்றபடி.

உண்டி வகை தகை=உணவிற்குரிய பண்டங்களின் பகுதிகளையும்;

உணவிற்கு அமை கருவியை=அப்பண்டங்களை உணவிற்காமாறு செய்துகோடற் குரிய கருவிகளையும்;

அண்டிய வல்சியை=பொருந்திய ஆகாரங்களையும்;

அவ்விரண்டானு மாதல்பற்றி "அண்டிய வல்சி" என்றார். புறநாட்டது என்பது போதரற்குமாம்.

அருந்து வகை பொருளை=அவ்வுண்டியை அருந்துவதற்கேற்ற வகையினையுடைய பொருள்களையும்;

ஆகாரம் வைத்தற்கும் அதனை எடுத்தருந்தற்கும் இருத்தற்கும் வேண்டியன பீடம், கலம், காண்டி, (சிற்றகப்பை) முள், இருக்கை முதலியன என்க. அருந்துதல் என்றவிலேசானே கள் முதலியன பருகுதலையுங் கொள்க. தமிழ்ச்சாதியாரின் உணவுவகை கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல் என ஐந்துவகைப்படும். அவற்றைக் கொள்வகை உண்டல், தின்றல், நக்கல், பருகல் என நான்கு வகைப்படும்; சோறு முதலியன உண்டல், கறிமுதலியன தின்றல், தேன் முதலியன நக்கல், நீர் முதலியன பருகல் என்ப.

மண்டிய உடையின் மரபினை = நெருங்கிய ஆடையின் முறைமையையும்;

காற்றுப்புகுதற்கும் இடனின்றி யுடுப்பர் என்பதூஉம் புறநாட்டுப் பருத்தியான் இயற்றப் பட்டது என்பதூஉம் போதரற்பொருட்டு "மணடிய வுடையின்" என்றும், அநாவசியகமாகப் புனைந்து கொள்வர் எனவும் அப்புனைதற்கு மாறுபடின இகழ்ச்சி நேரும் என்றஞ்சுவர் எனவும் தோன்ற "மரபின்" என்றுங் கூறினார்.

பல ஆ(க) நொடிககு ஒரு மாற்றம் பிடிக்குநர் = (மேற்கூறியவற்றை யெல்லாம்) பல வகையாக நொடிப்பொழுதுக்கு ஒவ்வொரு வேற்றுமையாகக் கண்டுபிடித்து அநுட்டித்து வருபவராகிய;

இவற்றைக் கையாளுதலிற் பலரும் வருந்துவர். பலபண்டங்களும் அவமாகும். உணவிற்கும் உடைக்குமே தங்கள் கிடைத்தற்கரிய காலத்தையெல்லாம் வாளா போக்குவர்.

இவரே = இக்குணஞ் செய்கைகளையுடைய இவர்தாம்;

[சொல்லணி தம்மைத் தூற்றுநர் முரண்டு] சொல் அணி தம்மை முரண்டு தூற்றுநர் = (நம்மனோர் காவியங்களிலே கையாண்டு வரும்) சொல்லணி தங்களை தமக்கு மாறுபட்டனவாகக் கருதி வைதுவருகின்றனர்;

அணி, சொல்லணி பொருளணி என இருவகைப்படும். "பொருளினுஞ் சொல்லினும் புனைவுறு செய்யுட்—கணியெனப் புணர்த்தலி னணியெனும் பெயர்த்தே" என்பது மாறனலங்காரம். இவற்றின் விரிவை அம்மாறனலங்காரம் முதலாய நூல்களுட் கண்டு தெளிக.

நயரே = நம்மவர்தாம்;

உணு முதல் அவற்றிற்கு உள்ள ஆகுல நீர்மை களைந்து = உணவு முதலியவற்றிலே (பிறர் வைத்திருக்கும் அநாவசியகச் செயலாய்) உள்ள ஆரவாரத் தன்மைகளை நீக்கிவிட்டு;

நிலைத்த மொழிக்கு அ எ(ல்)லாம் = அழியாமல் நிலைபெற்ற தங்கள் பாஷைக்கு அப்புனையும் வகை எல்லாவற்றையும்;

ஈரம் கலந்த நெஞ்சினொடு இயைக்குநர் = அன்புகலந்த நெஞ்சத்தோடு பொருத்தி அலங்கரித்து வருகின்றனர்;

இது கருதிப்போலும் இறைவற்கும் அபிடேகம் அலங்காரம் முதலியவற்றைச் செய்து வருகின்றனர். அழியும் உடலத்திற்கு மிகைபடச் செய்யாமல் அழியாத் தெய்வத்தன்மையுடைய பாஷைக்கு அவ்வலங்கரிப்புக்களைச் செய்துவருகின்றனர் நம்மனோர் என்க.

செருப்பிற்கும், முடிக்கும், உடைக்கும், உணவிற்கும் அன்னபிறவற்றிற்கும் வீணாகப் புனைந்துகொண்டிருக்குந் தங்கள செயலின் இழிவைக குறிககொள்ளா அம்மேனாட்டார் நம்மவரைப் பழித்துவரல் எத்துணைப் பேதைமை என்க.

[பொருள்களை யவர்போல் வாளா புனைகிலா] அவர்போல் பொருள்களை வாளா புனைகிலர் = அம்மேனாட்டாரைப்போலப் பொருள்களை வீணே கூறுகிலராய்;

எனவே அறம் பொருள் இன்பம் வீடு என்பனவற்றையும், திணை துறை வகைகளையும், மேற்கோண் முகத்தால் அரசர்தம் செயல்களையும் புனைந்து கூறுவர் என்றபடி.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனொடு புலந்த தலைமகள் கூறிய மருதத்தை வருணிக்கப் புக்க நக்கீரனார், தலைமகனால் வந்த அலரை "பூக்கே ழூர வதுவை யயர்ந்தனை யென்ப வலரே..... ....செழிய—னலங் காணத்தகன்றலை சிவப்ப- பொழுவர் நல்வல

மடங்க--------கொன்றுகளம் வேட்ட---------வீர ரார்ப்பினும் பெரிதே" என்று வருணித்திட்டார். இதனைத் தேசசரித்திரம் படிப்பவர்தம் மனசில் எத்துணை ஆழ்ந்து படிகின்றதென நோக்குக. இவ்வாறே நிலத்தினை வருணித்திடுங்கால் அந்நிலத்திலே விளைவனவற்றையும், அந்நிலத்திற்கமைந்த சிறேஷ்டமா நிலைமையினையும், அந்நிலத்துமக்கள் இயல்பையும் அன்னபிறவற்றையும் எனிலெடுத்து மொழிந்திடுவர். இங்ஙனமெல்லாம் வகைப்படுத்திக் கூறுதல் அம்மேனாட்டார்க் கில்லை.

மருள் அற அருள் கொடு மனன் நிறீஇ ஆய்ந்து = (மக்கட் பிறப்பினர்க்கு இயல்பாகவே அமைந்துள்ள மும்மலவிருளாகிய) மயக்கத்தை அற்றுப்போகும் வண்ணம் அருளைக்கொண்டு மனதை (யோகவழியால) ஒருநிலையில் நிறுத்தி (உலகவியற்கையை) ஆராய்ந்து;

குறைவும் மிகையும் பொரு(ள்)ளாது = (தாங்கள் செய்யுஞ் செய்யுட்களுக்கு வேண்டிய சொற்களும், பொருள் அணி முதலிய நலன்களும்) குறைதலும் மிகைபடுதலும் ஆகிய குற்றத்தை அடையாமல்;

குற்றமடையாமற் சொல்லே யாக்கும் அருமை தோன்றக் "கொளாஅது" என்றளபெடுத்தது. ஆண்டு மனனிறுத்தும் அருமை தோன்ற "நிறீஇ" என்றளபெடுத்தது என்க.

செவ்வென் நிலத்து வகை இயற்கை = செவ்விதாகிய நிலத்தின் பிரிவுகளையும் இயற்கைகளையும்;

நிலத்துவகை என்றதனானே முதலும், கருவும், உரியும், அவற்றையுடைய திணைகளும், பிறவும் கொள்ளப்படும். "முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி—னியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே" எனவும், "தெய்வ முணாவே மாமரம் புட்பறை—செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ—யவ்வகை பிறவுங் கருவென மொழிப" எனவும், "புணர்தல் பிரிதல் இருத்த லிரங்க—லூட லிவற்றி னிமித்த மென்றிவை—தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே" எனவும், "மாயோன் மேய காடுறை யுலகமுஞ்—சேயோன் மேய மைவரை யுலகமும்—வேந்தன் மேய தீம்புன லுலகமும்—வருணன் மேய பெருமண லுலகமு—முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்—சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" எனவும் வருவனவற்றான் அவை இவையென உணரப்படும். இவற்றின் விரிவைத் தொல்காப்பியத்துட் காண்க.

நலத்து அரசர் செய்கை = நன்மையையுடைய அரசர்தங்கள் செய்கையினையும்;

குலத்து அரிவை நலத்தில் கூறி = குலச்சிறப்பையுடைய தலைவியை மணமயர்தற்கும் மணந்து இல்லறமாற்றுதற்கும் உரிய நன்மை பயக்கின்ற களவு கற்பு என்னும் பகுதிகளின் மூலமாக (ஆங்காங்கு இவையும் வழியறிந்து எடுத்துக்) கூறி;

உலகத்து நிகழும் எல்லாவினைகளும் இல்லறத்தையே காரணமாக்கிக் கொண்டிருத்தலை உணராதார் அகத்திணைப் பகுதிகளை இகழ்வர். எல்லா மக்களும் காமத்தின் மயங்குவது இயற்கை. அக்காம வழியினின்று பிரிந்தார்க்கே வீடுபேறு கிடைக்கும். காம வழியாக அறம்பொருள்களைக் கூறின் அதனை விரும்பிக்கேட்டு நற்பேறடைவர் இக்காலத்தார். இக்குணஞ் செய்கைகள் மேனாட்டார்க் கறவே இல்லை என்க. "ஆள்குநர்" என்றதைப் பின்னர்க் கூட்டுவோம். உம்மை தொக்கது.

தேன் பொதி மருந்து என செய்யுள் நனி செய்து = (உண்ணுதற் கினிதாமாறு) தேனுட் பொதிந்த மருந்துபோல (க்கற்றற் கினிதாமாறு அகத்திணைகளுள்ளேயும் புருடார்த்தங்களை அடக்கிய) செய்யுள்கள் பலவற்றை மிகுதியாகச் செய்து;

ஆள்குநர் = நம்மை ஆண்டுவருகின்றனர்;

[நான்குமுழத் தறுவையை நம்மனோரொன் றுடீஇத்—தாஅஞ் சென்று தகைபல வாற்றுநர்]

நம்மனோர்தாம் = நம்மவர்களாம்;

நான்கு முழத்து அறுவை ஒன்று உடீஇ = நான்கு முழ நீளங்கொண்ட வத்திரமொன்றனை யுடுத்திக்கொண்டு;

சென்று பல தகை ஆற்றுநர் = (வேண்டிய இடங்களுக்கு மனங் கூசாமற்) போய்ப் பலவாகிய இன்றியமையாத் தகுதியையுடைய காரியங்களைச் செய்கின்றனர்;

[ஆஅஞ் செய்கையோ டவன்னவர் தமக்கே] அன்னவர் தமக்கு ஆம் செய்கைகொல் = (அவ்வாறு செய்தல்) அம்மேனாட்டார் தங்களுக்கு இயல்வதொன்றாகுமோ;

இயலாதென்றபடி. நமரைப்போனாறு அவர்வருதற்கு எத்துணைக் காலஞ்செல்லும் என்பது தோன்ற "ஆஅம்" என்றளபெடுத்தது.

உடை இலா ஆகி = செல்லுமிடத்திற்கேற்ற உடையிலராகிய காரணத்தானே;

உரைப்பு அரும் சீர் சால் நடை தவழ் வினை தமை = உரைத்தற்கரிய சிறப்பு மிக்க ஒழுக்கந் தவழப்பட்ட காரியங்களை;

எனி துறந்தனர் பலர் = அறவே நீங்கி வருந்தினோர் பலராவர்;

இவற்றால் = கூறிய இவற்றானே;

நமரே = நம்மவர்தாம்;

ஏற்பனவற்றை = (நமக்கு இன்றியமையாச் சாதனமாய்க் கோடற்கு) ஏற்றனவாயிருப்பவற்றை;

[எத்துணை மதித்தீண் டியற்றி நிறீஇயினர்] ஈண்டு எத்துணை மதித்து இயற்றி நிறீஇயினர் = இவ்வுலகத்திலே எவ்வளவு ஆராய்ந்து உண்டாக்கி நிலைநிறுத்தி இருக்கின்றார்கள்;

அழியாப் புகழ்படைத்தமை தோன்ற "நிறீஇயினர்" என்றளபெடுத்தது.

ஏனையர் தம்மையும் = நமரல்லாத பிறர்தங்களையும்;

எமரையும் = எமது முன்னோரையும்;

ஆன் அறிவான் அமைந்து நோக்குமின் = பொருந்திய அறிவுகொண்டு நடுவுநிலைமையில் அமைந்து நோக்குவீராக;

இயற்கையறிவோடு செயற்கையறிவுந் தோன்ற "ஆனறிவான்" என்றார். அவ்விருவகை அறிவும் ஒன்றனை ஆராய்ந்துணர்தற்குக் கருவியாதலை உய்த்துணர்ந்து கொள்க. "அமைந் தொருபாற்—கோடாமை சான்றோர்க்கணி" என்றார் குறளினும்.

---

## (39) தன்மொழி கல்லாத் தகவிலி வருந்தி யெம்மொழி கற்பினு மிகழ்வே யென்றல்.

மேலை நாட்டுழி விளங்குபுலந் தெளிந்தோன்
றன்னாட் டவர்க்குத் தகுதிசெயல் விழைஇப்
பொருள்குறு கொருவற் பொருந்தப் போற்றி
யையநின் மக்கட் களவறு கல்வி
யெய்தல் செய்குவ லெற்புறந் தருகென
அன்னோன்,
நன்றிதந் தினிக்க நல்லோய் நிறைஅ
தோன்றிய வருகை யுவந்தனென் யாழ
மற்றுநின் குலனு மரபு மிவ்வெனச்
சொற்றல் வேண்டுந் தூயோ யென்னப்
புலவன்,

தருதமிழ் நாட்டுத் தலைமையை நின்னினு
நகையி னோன்பினர் தமக்குநகை செய்தன்
றிறைமைதரு மக்களி னெவ்வேற் றுமைகொடிங்
கறைகுதி யிவ்வெலாம் பூனூ லணியாக்
குறையே கடையோர்க்கு முதல்வரொடு கொள்ளுங்
குறைமற் றமமா னொன்பிறி தில்லை
கற்புடை யவரே பெருங்குலக் காட்சியர்
கற்பமை கிலரே கடைக்குல வாட்சிய
ரிமமெய் யறிவுறீஇ யினிதுய் னென்னப்
பொருளோன்,
கண்டது வேட்டுக் கொண்ட திழக்குந
கழறக கேண்மோ காசினி மாகக
டதந் தொழிற்குத் தகுவுண முதல
மரபுவழி யாக வழாஅது பெறீஇ
யுய்தல் வேண்டி பொருவனுவந துதவினை
னறிவின் மாககடம மளிபபுக் கருதிக
கோடு முதல கொடுத்தாங் கினிநீ
பெவ்வெச சரிதை வல்லுநை யென்னப்
புலவன்,
மேலையர் சரிதம் வல்லுந னென்னத்
தமிழன்,
அவசரித மேனாட் டவர்க்குமிக வினிதே
நமமனோர் தமக்கே நமமுன் வேந்தர்
தமமுறு சரிதை தககன் றம்மா
நினவ கூறுவ லெனவ கேண்மதி
தன்னுறு பெண்டிர் மக்க டாய
ரின்னவர்க் கேற்ற வீகிலான் றனது
நாடுபொருண் முற்று நவைபெற வழித்தோ
னொருவற் கண்டு நினது பொருளோா
மினி துவளை செய்குவ லெற்காத நீதனை
யெனினே யன்றோ னிமைககுங் கொலமேலை
அஃதேயபப,
நின்னுறு கல்வியை நேடிலே
யென்னும் றுரைத்தனை யென்றிசி னோனே.

---

(இ-ள்.) மேலை நாடு உழி விளங்கு புலம் தெளிந்தோன் = மேலைத்தேசத்திலே விளங்குகின்ற நூல்களை ஆராய்ந்த ஒரு கீழைத்தேசத்தான்;

சீதோஷ்ண நிலைமைக்கேற்ப உடலமும், குணமுதலியனவும், தானிய விளைவும், பிறவும் அமைந்துகிடத்தல் பிரத்தியட்சமாதலின் அவ்வகைக்கேற்ப அவ்வந்நாட்டுச் சான்றோர் நம்மனோ

செல்லாம் உய்தற்குப் பெரிதும் விழைந்தாராகித் தம்போன்றாரது நற்செய்கைகளையும், தம் போன்றார் அல்லாத பிறரின் தீச்செய்கைகளையும் முறையே விதித்தும் விலக்கியும் சென்றனர். அவரது செயல்களை விரித்தும், தொகுத்தும், வகுத்தும் அமைத்துச் செல்வனவே நூல்களெனப்படும்.

குளிர்நோய்க்கு வெப்புநோய் மருந்து பயன்றராமற் பாழ்படுத்துவது போலவே குளிர் நாட்டுப் பழக்கவழக்கங்கள் வெப்புநாட்டிற்குப் பயன்கொடாமற் பாழ்படுத்தும். இவவொழுக்கம் பொதுவும் சிறப்பும் என இருவகைப்படும். பொதுவொழுக்கம் யாவாக்கும் பயன்றரத்தகசது. அது நாலடியார் திருக்குறண் முதலாயவற்றிலே விதிக்கப்பட்ட அறத்துப்பாலையும் அன்னபிறவற்றையும் போன்று விளங்கும். சிறப்பொழுக்கமாவது அவ்வத் தேயத்தார்க்கும், அவ்வத்தேயத்தார் தம்முள்ளும் வருணாச்சிரம பேதங்கள் முதலிய பேத வகுப்புக்களாற் பிரிவு பட்டவர்க்கும் ஏற்றபெற்றி தனிதனித் தலைசிறந்து வருவது. ஆரியர்க்குரிய நீதிகள் பிறர்க்குப் பொருந்தாமல் வருதலும்; ஒருசாதியார்க்குரிய நீதிகள் பிறசாதியார்க்குப் பொருந்தாமல் வருதலும்; வடநாட்டந்தணர் ஊனுண்டல் தென்னாட்டந்தணர்க்குப் பொருந்தாமல் வருதலும்; தென்னாட் டந்தணர்க்குரிய மருமகளை மணந்துகோடல் வடநாட்டந்தணர்க்குப் பொருந்தாமல் வருதலும்; காலத்தானும், இடத்தானும் வேற்றுமைப்பட்டு அவ்வாறுதலும் பிறவும் இங்கு ஆராயத்தக்கன. மேனாட்டார் சௌசம் முதலியன கீழ்நாட்டார்க்கு ஒவ்வாதிருத்தலையுங் காண்க.

இவ்வாறாகவும் கீழ்நாட்டான் தன்னாட்டுப் புலந்தெளியாமல் மேனாட்டுப் புலந்தெளிந்தான் ஆதலின் அவனும் அவனாற்றெளியப்பட்ட புலமும் விளக்கம்பெறுதற் கியலா எனபது போதர "மேலை நாட்டுழி விளங்குபுலந் தெளிந்தோன்" என்றார். அப்புலம் மேனாட்டார்க்கு இனிமைசெய்து ஆண்டு விளக்கம்பெறுமேயன்றி ஈண்டு விளக்கம் பெறாது என்பது கருத்து.

தன் நாட்டவர்க்கு தகுதி செயல் விழைஇ = தன்னுடைய நாட்டினராகிய கீழ்நாட்டார்க்குத் தக்க நன்மையைச் செய்தல் விரும்பி;

தன்னாட்டார் தக்கசெயலின்றி வருந்துகின்றார் என்பது அவன் கருத்து. வடக்குந் தெற்கும் ஒற்றுமைப்பட்டவாறு மேற்கொடு ஒற்றுமைப்பட்டது கிழக்காதலின் அவனது நாடு கீழ்நாடெனப் பொருள் உரைக்கப்பட்டது.

பொருள் குறுகு ஒருவன் பொருந்துபு போற்றி = செல்வம் வந்து பொருந்தும் ஒரு மகனை அடைந்து துதித்து;

• அச்செல்வனது ஒழுக்கம் முதலியனவற்றைக்கண்டு திருமகள் தானே அவனிடம் புகுந்தாள் என்பது போதரப் "பொருள்குறு கொருவன்" என்றார். ஒருவன் என்றதும இப்பொருளையே வலியுறுத்தும். பொருளுடையாரை நல்வழிப் புகுத்திவிட்டால் அவர் புடையாளரும் பிறரும் நன்னெறி பெறுவராதலிற் "பொருள்குறு கொருவற் பொருந்துபு போற்றி" என்றார்.

ஐய நின் மக்கட்கு அளவு அறு கல்வி எய்தல் செய்குவல் என் புறந்தருக என = ஐயனே நின்னுடைய மக்களுக்கு எல்லையற்ற கல்வி அடைதலைச் செய்வேன் என்னைக் காப்பாற்றுவாயாக என்றுகூற;

சொல்லப்படும் விஷயத்தை நன்கு கவனித்தற்பொருட்டு 'ஐய' என்று கூறினுன். "எற்புறந்தருகென" முதற்கட் கூறப்படின் பின்னர்க் கூறப்படும் விஷயத்திலே மனவூக்கஞ் செல்லாதாகலின் "நின்மக்கட் களவறு கல்வி யெய்தல் செய்குவல்" என முற்கூறப்பட்டது.

[இத்தொடரிலே 'நின்மக்கள்' எனமுதற்கட் கூறப்பட்டமைக்குக் காரணம் அவனது மனசை வசியப்படுத்தற்பொருட்டென்க. ஏனையவற்றையுங் கூறியவாறே கூறிக்கொள்க.] அடைக்கலம் புகுந்தார் எவரேயாயினும் அவரைப் போற்றுதல் இல்லறத்தார்க்குச் சிறந்தவொழுக்க மாகலின் "எற்புறந் தருகென" என்பது பிற்கூறப்பட்டது. தன்னுடைய நாடு கற்றன் முதலாயவற்றைப் பெறாது வருந்துதல் தனக்குரிய வறுமையாகக் கருதினன் என்பது போதர "ஐய வெற்புறந் தருக" என்றான். பெண்களுங் கற்றல் வேண்டும் என்பது போதர "நின்மக்கள்" எனப்பட்டது.

அன்னோன் = புலவனால் வினவப்பெற்ற அந்தச் செல்வன்;

நல்லோய் = கல்வி கேள்விகளிற் சிறந்தமைக்கேற்ப நற்குண நற்செய்கைகளையுடைய வனே;

நினது ஒன்றிய வருகை நன்றி தந்து இனிக்க = நினது பொருத்தமுள்ள வருகையானது (எனக்கும் என்மக்கட்கும்) நன்மையைச் செய்து இனிக்கக் கடவது;

உவந்தனென் = (இத்தகைய நற்குண நற்செய்கைகளையுடைய நின்னைக் கண்ட அள விலே) மனமகிழ்ச்சி அடைந்தேன்;

அளவறு கல்வியைத் தன்மக்களுக்கு எய்தல் செய்யும் ஆற்றலும், பொருண்முதலியவற் றின்மேல் அவாவின்மையும், பிறவும் அவனை மகிழ்வித்தன எனக.

யாழ—முன்னிலை அசைச்சொல். "செல்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழ" என்ற விடத்தும் பிறண்டும் வருமுறை காண்க.

தூயோய் நின் குலனும் மரபும் இவ் என சொற்றல் வேண்டும் என்ன = (மனமொழி மெய்களானே) பரிசுத்தம் பொருந்திய அறிவுடையோனே நின்னுடைய குலத்தினையும் மரபினை யும் இவைதாம் என்று (எனக்குச்) சொல்லுதல் வேண்டுமென்று (அச்செல்வமுடையான்) வினவுதலும்;

குலனும் மரபும் மாறுபடிற் பெரிதும் ஏதம் பயக்கும் ஆதலின் அவை கூறப்பட்டன. "நின்மக்கட் களவறு கல்வி யெய்தல் செய்குவல்" என்றமையானே நூலுமாற்றலும், அவ்வாற் றல்கொடு கல்வியும், அளவறு என்று பிரித்தலோடு களவறு என்று பிரிக்கவும் நேரிடுதலின் வாய்மையும், மாட்சியாற் றூய்மையும், "எற்புறந்தருக" என்றதனால் அவாவின்மையும், செல் வரைக் கண்டு பொறாமை கொள்ளாது அவாதம் குலத்தை வளாகக வேண்டுமென்ற முயற்சியால் அழுக்காறின்மையும், அறிந்துகொண்டான் ஆகையால் "தூயோய்" என்றான். இனி உயர் குடிப் பிறப்பின்றேல் இவையெல்லாம் தோன்றுவன போலக் கெடுமாகலின் அப்பிறப்புக்குக் காரணமாய குலத்தினையும் மரபினையும் இவ்வடிகளால் வினவினான் என்க. இவ்வெட்டு வகை யும் இன்றியமையாதன வாகலின் அவற்றையெல்லாம் முற்றுமுணரவேண்டி வினவினான், என்னை? "எட்டுவகை நுதலிய வவையத் தானும" என ஆசிரியர் தொல்காப்பியனாரும் கூறு தலின என்க.

புலவன் = மேனாட்டு நூல்வல்லானாகிய கீழைத்தேயத்தவன்;

தகு தமிழ் நாட்டு தலைமையை = சிறந்த தமிழ்நாட்டாருள்ளே முதன்மை பெற்றவனே;

நின் வினா நகை இல் நோன்பினர் தமக்கும் நகை செய்தன்று = நின்னால் இதுபொழுது வினவப்பட்ட வினாவானது நகையாமையை விரதமாகக்கொண்டவர் தமக்கும் நகைப்பினைச் செய்தது;

இறைமை தரு மக்களின் = தலைமைதருகின்ற மக்களிலே;

இம்மானிடப் பிறப்பின் அருமை "அரிதாம் பிறப்புளுயர் மானிடத்தி னடைவுற்று வைகல்" எனத்தணிகைப் புராணத்திலும், "நிலமிசை மக்க ளாகுத—னன்மைகொ ளுயிர்க்கலா லரிது நந்தியே" எனப பிரபுலிங்கலீலையிலும், "உற்ற யோனிக டம்மி லுற்பவி யாமன் மானுட வுற்பவம்" எனப்பாரதத்திலும், "அரிதாற்—பெரிய யோனிகள் பிழைத்திவண் மானுடம் பெறலே" எனச் சிந்தாமணியிலும், "பல்லுயிர்க்கு மனிதரி னரியதாகுந் தோன்றுதல்" என வளையாபதியிலும் வருவனவற்றால் நன்குபுலப்படும்.

[எவ்வேற் றுமைகொடிங் கறைகுதி யிவ்வெலாம்]

இவ் எலாம் எ வேற்றுமை கொடு இங்கு அறைகுதி = (குலமும் மரபும் என்னும் இவற்றை யெல்லாம்) எந்தவித்யாசத்தைக்கொண்டு இங்கே எடுத்துச் சொல்லுகின்றாய்;

[பூணூ லணியாக் குறையே கடையோர்க்கு முதல்வரொடு கொள்ளுங் குறை] கடை யோர்க்கு முதல்வரொடு கொள்ளும் குறை பூண் நூல் அணியா குறை = சூத்திரர்க்கு அந்தண

நோடு ஒத்துப்பார்க்கின் பொருந்துகின்ற குறைவு பூணுகின்ற நூலினை அணியாத குறைவு ஒன்றேயாகும்;

நூலாகப் பூணுகின்றது என்பது கருத்து. இனிக்கடையரை நீசரென்பாரும் உளர். முதலிடைகடை என முப்பிரிவிற்கு உரித்தாகும ஆதலின் அது பொருந்தாது.

பிறிது இல்லை = வேறுகுறைவு இல்லை;

மற்று, அம்மா, கொன் – அசைநிலைகள்.

கற்புடையவரே பெரும் குலம் காட்சியர் = கல்வியுடையவரே பெருமை வாய்ந்த குலத்தினராகத் தோற்றப்படுவோர்;

கற்பு அமைகிலரே கடை குலம் ஆட்சியா = கல்வியில்லாதவரே இழிந்த குலத்தினை ஆள்பவராவர்;

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்–கீழ்ப்பாலொருவன் கற்பின்–மேற்பாலொரு வனும் அவன்கட் படுமே" எனப்புறத்தும், "கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந் தோரைத–தலைநிலத்து வைக்கப் படும்" என நாலடியாரினும் வருவனவற்றைகொண்டு இவவாறு கூறப் பட்டது.

இமெய் அறிவுறீஇ இனிது உய்க என்ன = இவவுண்மையை அறிதலுற்றுச் சுகமாக வாழக்கடவாய் என்று அப்புலவன் கூற,

பொருளோன் = அச்செல்வன்

கண்டது வேட்டு கொண்டது இழக்குந = கண்ணுற் கண்டதை விரும்பி அமைந்துள்ளதைப் போற்றாமல் இழப்பவனே;

அறிவின் சம்பந்த மில்லாமை தோன்றக் "கண்டது" என்றார்.

கழற கேண்மோ = யான் சொல்வனவற்றைக் கேட்பாயாக;

அறிவு இல் மாககள் தம் அளிப்பு கருதி = பகுத்தறிவு இல்லாத விலங்கினங்கள்தம் பாது காப்பை நோககி; (அவற்றிற்கு)

விலங்கென்பது போதர "அறிவில்" என்றடை கொடுத்தார்.

கோடு முதல கொடுத்தாஙகு = கொம்பு முதலாயவற்றை (உடலோடு பொருத்திக்) கொடுத் தாற்போல;

விலங்கினங்கள் தமக்கு நேரிடும் இடையூறுகளைத் தடுத்தற்கேற்ற படைக்கருவிகளைச் செய்துகொள்ளவும், செய்தவற்றைப் போற்றி வைத்துக்கொள்ளவும் வேண்டிய ஆற்றல் இல்லா தனவாகலின் கோடுமுதலியவற்றை அவற்றின் உடலோடு கடவுள் பொருத்திக் கொடுத்தனா என்க.

காசினி மாக்கள் தம்தம தொழிற்கு தகு உணுமுதல = நிலவுலகத்தில் வாழ்கின்ற மனிதர் கள் தங்கள் தங்கள் தொழில்களுக்குத் தகுந்த உணவு முதலாயினவற்றை;

மரபுவழியாக வழாஅது பெறீஇ உயதல் வேண்டி = பாரம்பரிய முறையாகத் தவறாமல் பெற்று உச்சீவித்தலை விரும்பி;

ஒருவன் உவந்து உதவினன் = ஒப்பற்ற கடவுள் மகிழ்ந்து அளித்தார்;

ஒவ்வொருவரும் தத்தம் தொழிற்கேற்றவண்ணம் உணவு முதலியவற்றைப் பெற்று உய் தல் வேண்டும். நூற்பயிற்சி முதலியவற்றைத் தமக்கு ஆதாரமாகவுடைய அந்தணர் தமமறிவு வளர்ச்சிக்கேற்ற உணவுகளையும், உலகங் காக்கும் க்ஷத்திரியர் தேகவலிமையை வளர்த்தற்கேற்ற உணவுகளையும், இவ்வாறே ஏனையோர் தமக்கேற்ற உணவுகளையும் உண்டுவருதலைக் கருதித் "தத்தந் தொழிற்குத் தகுவுணு முதல" என்றார். ஒருவன் சிலநாள் க்ஷத்திரியர்க்குரிய உணவு களைப் புதிதாகவுண்டு வன்மை பெற்றனனாக எண்ணிக்கொண்டு போர்செய்யப் புறப்பட்டாங்கு பிற குலத்தினர் அந்தணராதற்கு நினைத்தல் பொருந்தாது என்றும், அவ்வாறுதல் மரபு வழி யாகவே வருதல்வேண்டும் என்றும் உணர்த்தற் பொருட்டு "மரபுவழியாக" என்றார். அவ்

வுணவு முதலியவற்றைப் பெற்றுவரும்போது இடையிலே தவறுபடின் அவற்றாற் பயனில்லை என்பார் "வழாஅது பெறீஇ" என்றும், அவ்வாறு வழாஅது பெற்றவர்களே உய்வார் பிறர் உய்யமாட்டார் என்பது போதர "உய்தல்வேண்டி" என்றும் கூறினர். பாரம்பரியப் பழக்க வழக்கங்களில் வழுவாது ஒழுகலும் நற்பயனைப் பெறுதலும் மிகவருமைப்பாடுடையன என்பது போதர "வழாஅது" எனவும், "பெறீஇ" எனவும அளபெடுத்தன. "மாக்கள்" என்றார் அவனருளானன்றித் தாமே ஒன்றனையும் ஆற்றிக்கொள்ளும் ஆற்றல் இல்லாமை நோக்கி.

இனி = அப்பால்;

நீ எ எ சரிதை வல்லுநை என்ன = நீ எந்த எந்தச் சரித்திரங்களிலே வல்லவனாக இருக்கின்றாய் என்று வினவ;

பொதுவாகச் சரிதையை வினவினாறினும் ஏற்பனவற்றையுந் தழுவிக் கொள்க.

புலவன் = மேலைநாட்டு மொழியிலே புலமைபெற்றவனாகிய அவன்;

மேலையர் சரிதம் வல்லுநன் என்ன = மேலைத் தேயத்தார்தம் சரித்திர ஆராய்ச்சியிலே வல்லமை பெற்றுள்ளேன் என்று விடையிறுத்தானாக;

தமிழன் = தமிழ்நாட்டானாகிய அந்தச் செல்வன்;

அ சரிதம் மேல் நாடு அவர்க்கு மிக இனிது = (நீ கற்றுக்கொண்ட) அந்தச் சரிதம் (நினக்குப் பயன்றராமல் அச்சரிதைக்குரியாராகிய) மேலைத்தேயத்தாருக்கு அளவிறந்த இனிமைதருவதொன்றாம்;

[நம்மனோர் தமக்கே நம் முன் வேந்தர் தம்முறு சரிதை தக்கன்று] நம் முன் வேந்தர் தம் உறு சரிதை நம்மனோர் தமக்கு தக்கன்று = நமது தமிழ்நாட்டை ஆண்டுவந்த முன்னோராகிய அரசர்தமக்குப் பொருந்திய சரித்திரத்தைக் கற்றலே நம்போன்ற தமிழர் தமக்குத் தகுதியுடையதாகும்;

இதுபொழுது தமிழரையர் இல்லாமை பற்றி நம்வேந்தர் என்னாது "நம்முன் வேந்தர்" என்றார். வேந்தரைக் கூறினாராயினும் நாவலர், பாவலர், அறமே பொருளே இன்பமே வீடே என்னுமிவற்றை இறும்பூதெய்த அடைந்தோர் என்றற் றொடக்கத்தாரும் அடங்குவா என்க.

அம்மா—அசைநிலை.

நினவ கூறுவல் எனவ கேண்மதி = நின்னுடையனவாகிய சிலகாரியங்களைச் சொல்லுவேன். என்னுடையனவாகிய சில வார்த்தைகளைக் கேட்பாயாக;

இவ்வடி புறநானூற்றிலிருந் தெடுத்தாளப்பட்டது. நின்னுடையவற்றிற் கின்றியமையாதன என்னுடைய வார்த்தைகள் என்க. 'எனவ' கேட்டற்கு விருப்ப மூட்டுவது 'நினவ' என்று கூறுதலாகலின் அது முதற்கட் கூறப்பட்டது.

தன் உறு பெண்டிர் மக்கள் தாயர் இன்னவர்க்கு ஏற்ற ஈகிலான் = தனக்குச் சுற்றமாகப் பொருந்திய மனைவி, மககள், தாயர் முதலிய இவர் போன்றார்க்கு வேணடிய தகுதியானவற்றைக் கொடுத்துப் பாதுகாவாதவனும்;

அற முதலியவற்றைச் செய்தற்கும், மரபு வளர்தற்குங் காரணமாகிய அன்பு பூணற்குரியவர் பெண்டிராதலின் முதற்கட் "பெண்டிர" எனவும், அவ்வாறு ஒருவரோடொருவர் அன்பு பூண்டு நடாத்திவரும் இல்லறத்திற்கு 'நன்கலம் நன்மக்கட்பேறு' ஆதலின் அடுக்க "மக்கள்" எனவும், இவவெல்லாப்பேறும் எய்துதற்குக் காரணமாக இருப்பவர் தாயராதலின் அவர்கட்குப் பின்னர்த் "தாயர்" எனவும் மாலை படுத்தப்பட்டன. தமமுடைய மனஞ்சிற்கொத்த பெண்டிர் தம்மாலேயே எல்லா நலன்களையும் எய்துதல் கூடுமாகலின் "தன்னுறு பெண்டிர்" என்றும், செவிலி முதலியோரை நோக்கித் "தாயர்" என்றும் கூறினர். தாயாற் காட்டப்பட்டானையே தந்தையாகக் கோடல் வேண்டி இருத்தலின் தந்தையைத் தொகுத்துக் கூறினர். பெண்டிர் தன்னாலேயே பிறர்க்குரிமை யாதலின் "தன்னுறு" என்றாருமாம். அறியாச் சிறாரையும், பெண்பாலாரையும் போற்றாத் தன்மையன் தந்தை முதலானவரையும், ஏனையோரையும் போற்றான் என்பது தானே அமையும் என்றலும் நேர். தமரைப் புறக்கணித்தலை ஒக்கும் தாய்ப் பாஷையைப் புறக்கணித்தல் என்க.

தனது நாடு பொருள் முற்றும் நவை பெற அழிந்தோன் = தன்னுடைய பொருளும், தன்னை நாடிவந்த பொருளும் ஆகிய எல்லாவற்றையும் குற்றம்பெற நாசமாக்கினேனும்;

நவைபெற அழித்தலாவது சூது, கள், பரத்தை என்றற் றொடக்கத்தனவற்றிற்கும், பாபி கட்கும் கொடுத்துக்கெடுத்தல்.

"முகனெதி ரொன்றும் பிரியின்மற் றொன்று மொழிபவர் விழைவுறு தூத—ரகறு கேள்வி யிலர்மருத் தவர்க ளரும்பொருள் கவருநர் தூர்த்தர்—புகலருந் தீமை புரிபவர் மல்லர் செருக்கினர் புன்றொழிற் றீயோ—ரிகழ்தரு மினையோ ரொன்பது பெயர்க்கு மீந்திடல் பழுதென விசைப்பார்" எனக் காசிகாண்டத்திலும் நவையுடையார் இவரெனக் காட்டியிருத்தல் காண்க.

தனது பொருள—தான் தேடிய பொருள்; நாடுபொருள்—பிதிரார்ச்சித முதலிய. தன்னை நாடிக்கொண்டு வருதலின் அஃதப்பெயராத்தாயிற்று.

ஒருவன் கண்டு = (ஆகிய அவ்வழிந்தோன்) செல்வம்பெற்ற ஒருவனைக் கண்டு;

நினது பொருள் எ(ல்)லாம் இனிது வகை செய்குவல் = நின்னுடைய பொருள்கள் எல்லாவற்றையும் (சிதைவுறாமல் மேம்படுத்தற்குரிய) நல்வழிகளைச் செய்வேன்;

என் காத்தி எனின் = என்னைக் காப்பாற்றுவாயாக என்று கூறினால்;

இத்தை—முன்னிலை அசைச்சொல்.

அனோன் இயைக்கும் கொல்லோ = அங்ஙனம் கூறப்பட்டவனாகிய செல்வன் (தன் பொருளை நல்லவகைப்படுத்தும் உத்தியோகத்தில் அவனை) அமரும்படி செய்வானோ? செய்யான் என்றபடி;

அஃது வய்ப்ப = அவ்வாறே மாண;

நின் உறு கல்வியை நேடிலை = (உனக்கும் உன்னுட்டவர்க்கும் பயன்றரற்பாலதாய) உனது தமிழ்க்கல்வியை ஒரு சிறிதும் ஆராய்கிலையாய;

என் உற்று உரைத்தனை என்றிசினோன் = எக்காரணங்கொண்டு (இவ்வாறு பலப்பல) கூறினாய் என்று சொன்னான்.

---

(40) வண்டமிழ் வாணர்ப் பிழைத்தோ ரிடருறி
னண்டரைத் தூற்ற லமையா தென்றல்.

மனன்சிவப் பார மதிமயக் கேற
வைகலும் பற்பல வண்மையொடு சூழ்ந்து
கைவந்த வெல்லாங் கடனுலகு கொள்ளும்
வண்ணஞ் சான்ற வளநூல் யாதத
பாவலர் நாவலர் பல்லாறு போக்கி
யார்வமொடு பொருளுடை யொருவற் குறுகி
யெம்முறு கடனே யின்றமி ழாய்ந்து
செம்பொருள் கண்டு தேளநலன் புரித
லும்முறு கடனே மிடிநுங் காம
லெம்முறு குலனை யினிதுபுறந் தருதலென்
றும்பர்நாட் டமுதிற் செவிமுத லொழுக்கினு
மன்னர் முதற்றம் பொய்க்குறை யறைஇ

யின்று வாக்க வினிதறி புலவ
ரன்னோர் தம்மை யன்பொடு விளீஇ
நின்னதூஉம் பிறரதூஉ மெனகொடு நீயே
நெல்பெறு வினைமுத னிகழ்த்துநர்க் குதவுதி
சொல்பெறு வினைபுரி தொலலோர்க் களைதுதி
பெனப்பல விடுப்பினு மீயா ரிவரே
பெண்ணிலர் பற்பல விகழுந ரென்னை
கதிரே மழையே சாலை பென்பன
சாப்தல் பொழிதல் விசுத லென்றிவை
நடுவொரீஇ யாற்றிய தானை
யடுபொரு ளெல்லாம யாழ்பட் டனவே.

---

(இ—ள்.) மனன் சிவப்பு ஆர = மனசிற் சிவப்புத்தன்மை நிறையவும்

மதி மயக்கு எற = அறிவிலே கலக்கம் உண்டாகவும்;

[வைகலும் பற்பல வண்மையொடு சூழ்ந்து] வைகலும் வண்மையொடு பல் பல சூழ்ந்து = நாடோறும் மாறுபடாத வளப்பத்தோடு பலப்பல விடயங்களை ஆராய்ந்து;

"தொல்பலநூ—லாய்ந்து சிவந்தது பாவாணர நெஞ்சம்" என்றார் பிறரும். மனஞ்சிவக்கவும் மதிமயக்குறவும் தமது ஆராய்ச்சியானே பெற்றனரேனும அவைகாரணமாகத் தாமேற்கொண்ட விடயங்களை விட்டொழிபாராகித் திண்மையொடு ஆராய்ந்தார் என்பதுபோதர "வைகலும் பற்பல வண்மையொடு சூழ்ந்து" என்றார.

கைவந்த எல்லாம் = நன்குபொருந்திய விடயங்கள் எல்லாவற்றையும்;

கடல் உலகு கொள்ளும் வண்ணம் சான்ற = கடலாற்சூழப்பட்ட உலகத்தார் லகக்கொள்ளும்படியான முறைமைகள் நிறைந்த;

வளம்நூல் யாத்த பாவலர் நாவலர் = (பாட்டானும் உரையானும்) வளப்பம்வாய்ந்த நூலைச் செய்த பாவலரும் நாவலரும்;

கடலுலகம் என்றமையானே உயர்ந்தோரைமட்டும் உணர்த்தாமல் உலகத்தார் அனைவரையும் உணர்த்தியதாயிற்று. பெரும்பாலும் செல்வம் உயர்ந்தோரல்லாரிடத்து இருத்தலின் அவரையும் வியக்கவைத்தல் இவர்க்கு ஒருநிலையாயிற்று. கற்றாரையே இன்பஞ்செய்யும நூல்களையும் போலாது, ஏனையோர்களையே இன்பஞ்செய்யும் நூல்களையும் போலாது அவ்விருபாலாரையும் இன்பஞ்செய்யும் நூல் என்பது போதர "வளநூல்" எனச்சிறப்பிக்கப்பட்டது. வளநூல் என்றமையானே அழகு, உத்தி, கொள்கை முதலியன நிரம்பப்பெற்ற நூல் என்று கூறலும் ஒன்று.

இதுகாறும் நூல்செய்யும் அருமையும் நூல் செய்வோர்க்குள்ள சிரமமும் கூறப்பட்டன.. "அடிக்கு பின்சொற் சுவைக்குமுன்றோர் விதிக்குமொரு குறைவுவாரா தமைத்தோர் பாட்டைத்—தொடுக்குமுனந் தாய்கொடுத்த சேனையெல்லாம் வாங்குதையா" என்றொரு பெரியார் கூறிய தனிப் பாசுரததாலும் இவ்வுண்மை அறியப்படும்.

பல் ஆறு போக்கி = பலவழிகளையும் போகச்செய்து;

ஆதியந்தம் பெற்ற பலவழி என்பது போதரப் "பல்லாறு" என்றார். அவர்தம் நடைவருத்தம் முதலியன புலப்படுத்தற்குப் "போக்கி" என்றார். பலவழிகளையுங் கடந்தனரோயன்றித் தமக்குரியனவாய பலவருத்தங்களையும் போக்கினர் இல்லை என்பதூஉம் ஒன்று. தம்மொடு துணையாயின அப்பல்லாறுகளே என்றும், அவற்றையும் போகச்செய்து தமியராயினர் என்றுங் கூறுப.

ஆர்வமொடு பொருள் உடை ஒருவன் குறுகி = விருப்பத்தோடு பொருள்படைத்த ஒருவனை அடைந்து;

"ஒருவன்" என்பதற்கும் "ஆர்வம்" என்பதற்கும் இடையிலே "பொருள்" என்னும் இதனை வைத்தமையானே இப்புலவர்கள் அவனது பொருளையே விரும்பினார்களன்றி அவனது குணாதிசயங்களை விரும்பினார் அல்லர் என்றுணர்த்தினாராயிற்று. இனி ஆர்வமொடு என்னுமிதனைப் பொருளுடை ஒருவன் ஆர்வமொடு குறுகி எனஞ்சூ புலவர்க்கும் செல்வர்க்கும் தனித் தனி இயையுமாறு ஈண்டுப் பொருள்கோள் செய்யப்பட்டிருத்தல் எக்காரணம்பற்றியெனில் பொருண்மேல் ஆர்வம் அவவிருபாலார்க்கும் இருத்தலின் அங்ஙனம் கவர்படு பொருள்படக் கூறப்பட்டது என்க.

[எம்முறு கடனே யின்றமி ழாய்ந்து—செம்பொருள் கண்டு தேஎநலன் புரிதல்] இன்றமிழ் ஆய்ந்து செம் பொருள் கண்டு தேஎம் நலன் புரிதல் எம் உறு கடன் = இனிய தமிழை ஆராய்ந்து ஆராய்ந்தவற்றிலே செவ்விய பொருள்களைத் தேர்ந்தெடுத்து அத்தேர்ந்தெடுத்தவற்றானே தேசத்தை நன்மை பெறும்படி செய்தலே எமக்குற்ற கடமையாகும்;

அறம், பொருள், இன்பம், வீடென்பனவற்றை ஆக்கி இருமையுங் கோடற்குத் துணையாக நிற்பது நல்லறிவும், அந்நல்லறிவிற்குத் துணையாக நிற்பது கல்வியுமாகலின் "இன்றமிழாய்ந்து செம்பொருள் கண்டு தேஎநலன் புரிதல்" என்றார். தேசநன்மைக்கு ஆதாரம் கல்வி என்பது போதரத் "தேஎம்" என்றளபெடுத்தது.

[நும்முறு கடனே மிடிநுங் காம—லெம்முறு குலனை யினிதுபுறந் தருதலென்று] எம் உறு குலனை மிடி நுங்காமல் இனிது புறந்தருதல் நும் உறு கடன் என்று = (கல்வித்துறையில் எமது வாணாளைப் போக்கிவருதலின் குடும்பக் காப்பிற்குரிய பொருளின்றி இருக்கின்றேம் அத்தகைய) எமக்குற்ற குலத்தினை வறுமை அழித்துவிடாமல் இனிதாகப் காப்பாற்றிவருதல் நுமக்குற்ற கடமையாகும் என்று கூறி;

உள்ளன்புவைத்துப் புரத்தல் வேண்டுமென்பார் "இனிது புறந்தருதல்" என்றார்.

உம்பர் நாட்டு அமுதில் செவி முதல் ஒழுக்கினும் = தெய்வ உலகத்தார் நுகர்தற்குரிய அமுதைப்போலப் பயன்றரும் இன்சுவையார்ந்த சொற்களை அவர்தம் செவியகத்து மெல்லெனச் சொன்னாலும்;

"அமுது" என்றதற் கேற்ப "ஒழுக்கினும்" என்றார். பாவலர் நாவலர் எடுத்துக் கூறினும் அவர் வெறுத்துவெறுத்து ஒதுக்கி வருவர் என்பது தோன்ற "உம்பர்நாட் டமுதிற் செவி முதலொழுக்கினும்" என்றார்.

அன்னாமுதல் தம் பொய் குறை அறைஇ = அப்புலவரிடத்திலே தமக்கு (ஒருவகைத் துன்பமும் இல்லாதிருந்தும உள்ளதுபோலப்) பொய்க்குறைகளைச் சொல்லி;

பொய்க்குறையாவன—விளைவு குன்றியது, கடன் விஞ்சிவிட்டது, கள்வர் கவர்ந்தேகினர், பொய்வழக்கு நேர்ந்தது என்றல் போல்வன. சிறு பொருளை வேட்டு வந்திருக்கும் புலவரிடத்தில் அவற்றையெல்லாங் கூறுதலின் அக்கூற்றுப் பொய்கறையாயது என்க.

இன்னா ஆக்கல் இனிது அறி புலவர் = தமக்குத் துன்பஞ்செய்தலை எளிதாக அறிந்துகொண்ட அப்புலவர்;

இனிது என்றது இனிமையை உணர்த்தாமல் அறிதற்கு விசேடமாகி நிற்றலின் எளிதில் என்று பொருளுரைக்கப்பட்டது. நாவலரையும் பாவலரையும் புலவர் என்றமை சாலுமோவெனில்? இருவர்க்கும் அறிவுநுட்பம் உண்மையிற் சாலும் என்க. பாட்டினானும் உரைநடையினானும் இயற்றப்பட்ட நூலைப் புலம் என்று கூறும் வழக்கை நோக்கி அறிக. உலகத்தார் இங்ஙனம் புலவரைக் காவாதிருத்தலும் கூடுங்கொல்லோவெனிற் கரியநெடுவேட்டுவனைப், பெருந்தலைச் சாத்தனாரும், அதியமான் நெடுமானஞ்சியை ஔவையாரும் பாடிய பாட்டுக்களானும் அன்னபிறவாற்றானும் இவ்வுண்மை நன்கு புலப்படும்.

அன்னோர் நம்மை அன்பொடு விளீஇ = அவ்வாறு மறுத்துக் கூறியவரை (அவர்மேல் வெறுப்புக்கொள்ளாமல்) அன்புடன் அழைத்து;

பொய்க்குறை கூறியும் அவரை வெறுக்காதிருந்தமையான் "அன்னோர் நம்மை யன்பொடு விளீஇ" என்று கூறினர். வெறுக்காமல் வாளா அன்பு பூண்டாராகிச் செல்லாது அவர்க்கு நன்மைபுரிதற்கும் துணிந்தார் என்னும் அருமைதோன்ற "விளீஇ" என்றளபெடுத்தது.

நீயே = நீதானே;

நின்னதூஉம் பிறரதூஉம் என கொடு = (உடலைக் காப்பாற்றுதற்குரிய நென்முதலாய பொருள்களைச் சேகரித்து வைத்து உதவிவருகின்ற தொழிற்றுறையை) நினக்குச் சொந்தமாகவும் (உடலோடுறவுபூண்ட உயிரினையும் அறிவினையும் காப்பாற்றிவளர்த்தற்குரிய தொழிற்றுறையைப்) பிறருடையதாகவும் (மனசின்கண்ணே அறியாமை கந்தாக) அமைத்துக்கொண்டு;

[நெல்பெறு வினைமுத னிகழ்த்துநர்க் குதவுதி] நெல் முதல் பெறு வினை நிகழ்த்துநர்க்கு உதவுதி = நென்முதலாயவற்றைப் பெறச்செய்கின்ற பணியாளர்கட்கு (வேண்டியவற்றைக்) கொடுத்துக் காத்துவருகின்றாய்;

சொல்பெறு வினை புரி தொல்லோர் களைகுதி = நூல்களைப் பெறும்படி செய்துவருகின்ற தொழிலையுடைய சான்றோரை (அப்பணியாளர்க்கு உதவிவருதல்போல உதவிசெய்து காவாமல்) நீக்குகின்றாய்;

நென்முதலாயவற்றைத் தரும்பணியாளரைத் தமராகவும், சொல்லேருழவரைப் பிறராகவும் அறியாமையாற் கருதி நெல்லுழவோர்க்கு வேண்டியவற்றை வேண்டியவாறே உதவியும் சொல்லுழவோர்க்கு அங்ஙனம் ஆற்றாமலமையும் வியப்புத் தோன்ற நின்னதும், பிறரதும் எனனும் சொற்கள் அளபெடுத்தன. "நும்முறு குலன் அன்னோர்" என்றமைக்கு ஒவ்வாது "நீயே களைகுதி" எனக் கூறியது அவரது இழிந்த குணநிலையைக் கொடைமறுத்த பின்னரே கண்டுகொண்டமையான் என்க. "கொடுப்போ ரேத்திக் கொடாஅரப் பழித்தலும்" என்பதோத்து. "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்-தேரான் பிறனில் புகல்" என்பது குறள்; "என்னீ ரறியாதீர் போல விவைகூறி-னின்னீர வல்ல நெடுந்தகாய்" என்பது கலி. இம்மயக்கங்களையும் ஊன்றி நோக்கித் தெளிக. தற்காலப் புலவருட் பெரும்பான்மையோர் ஒருமைப் பன்மை மயக்கங்களை வேண்டியவிடத்து உபயோகிக்கும் வழக்காறிலராய்ச் சுவை கெடுத்தொழிப்பர். இந்நூலுள் வரும் அளபெடைகளின் இன்றியமையாமையையும் ஆண்டாண்டு நோக்கியறிக. இந்நாட் புலவர்களுட் சிலர் அளபெடைகளை வெறுத்தொதுக்குவர். மற்றுஞ் சிலர் அவற்றை இடனறிந்து உபயோகிக்கும் முறைதெரியாமல் அபாவனை செய்து கெடுப்பர்.

ஈயாதார் இழிவுடையார் என்பதை "ஈயென விரத்த லிழிந்தன் றதனெதி-ரீயே னென்ற லதனினு மிழிந்தன்று-கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்-கொள்ளே னென்ற லதனினுயர்ந் தன்று-தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கட-லுண்ணா ராகுப நீர்வேட் டோரே-யாவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச-சேறொடு பட்ட சிறுமைத் தாயினு-முண்ணீர் மருங்கி னதர்பல வாகும்-புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை-யுள்ளிச் சென்றோர் பழியல ரதனாற்-புலவேன் வாழிய ரோரி விசும்பிற்-கருவி வானம் போல-வரையாது சுரக்கும் வள்ளி யோய் நின்னே" என்னும் புறநானூற்றுச் செய்யுளானும் பிறவாற்றானுந் தெளிக.

தனாட்டின் வளர்ச்சிக்குக் காரணம் கல்வியே எனவும், கற்றாரைக் காப்பது தம்மையுந் தமரையுங் காப்பதுவேயாகும் எனவும், கூலம் முதலியன பெறுதற்கு அவ்வினையாளர்க்கு ஒரு பகுதி கொடுத்தல் போலச் சொல்லேருழவர்க்கும் ஒருபகுதி கொடுத்தன் முறையாகும் எனவும், நெல்லேருழவர்க்குக் கொடாதார்க்கு நென் முதலாயின இல்லையாகும் அவ்வாறேபோலச் சொல்லேருழவர்க்கு உதவாதார்க்கு அறிவு, உலகவழக்கு இன்பம் முதலாயின இல்லையாகும் எனவும், அறிவு முதலாயின இல்லாவழி அற முதலாயினவும் இல்லையாய்விடும் எனவும், இவ்வெல்லாம் இல்லாவிடின் நென் முதலாயினவும் சீவராசிகளும் இல்லையாய்விடும் எனவும் கருதிலாதலின்

அப்புலவர்பெருமக்களை இம்முழுமக்கள் வெறுத்து வருத்தினர் என்க. இனிப்புலவரை இகழ்ந் தாரும் அவர்நாடும் கேடுறும் என்றதற்கு "இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்" என்றற் றொடக்கத்துச் செய்யுட்களே சான்று பகரும். வேட்டனை நீரூக விழித்துச்சென்ற தமையந்தி யானவள் அடைந்திருந்து புலம்பிய சுரத்தின் கொடுமையை வருணிக்கப் புக்க புகழேந்தியார் "வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோற் றீத்தழன்மீ-மண்டு கொடுஞ்சுரத்தோர் மாடிருந்து" என்றார்.

என பல இடிப்பினும் ஈயார் இவரே = என்று பலவாறு நெருக்கிக் கூறினும் அப்புலவர் தமக்குக் கொடுக்காத இத்தகையவரே;

கதிரே மழையே காலே என்பன = ஞாயிறே மேகமே காற்றே என்புனவாகிய இவை தாம்;

காய்தல் பொழிதல் வீசுதல் என்ற இவை நடுவு ஒரீஇ ஆற்றியதானே = கதிர் காய்தலும் மேகம் பொழிதலும் காற்று வீசுதலும் என்று கூறப்படுவனவாகிய இவற்றைச் சீராகப் புரியா மற் குறைத்தும் மிகுத்தும் புரிந்து வந்தமையானே;

படு பொருள் எல்லாம் பாழ்பட்ட எனவே = தமக்கு உண்டாகக்கூடிய நென்முதலாய பொருள்கள் பாழாகிப் போய்விட்டனவே என்று;

அயரந் தொக்கிருந்தது.

என்னே = யாதுகாரணம்பற்றி;

எண்ணிலர் பல் பல இகழுநர் = (தாம் புலவர்முதலாயவர்க்கு அளிப்பது வீண் என்று கொண்ட கொள்கைக் கேற்பக் கதிர முதலியனவும் தமக்குதவாதொழிதல் தகுதி என்று) எண்ணு தவராய்ப் பலப்பலவாக இகழ்ந்து கூறுகின்றனர்;

புலவரைப் போற்றும் நடுவுநிலை அறியாத இவர் கதிர் முதலாயின தமக்கு நடுவுநிலைமை நீங்கிக் குற்றம் புரிந்தனவேயென்று கூறுங் கொடுங்கூற்றைப் புலப்படுத்த "ஒரீஇ" என்றனெ டுத்தது. கதிர்முதலாயினவற்றைத் தமக்கு ஒவ்வுமாறு தத்தம் வினைகளைச் செய்தல் வேண்டு மென்று கட்டளையிடுதற்கு இப்புலவர்க்கு உளதாய காரணந்தான் என்னை? நாட்டுக்குக் குற்றந் தரும் பிறவற்றின் செய்கைகளெல்லாம் அறத்தொடு மாறுபட்டனவாயும் கதிர்முதலியவற்றின் செய்கைகள் அங்ஙனம் மாறுபடாமலும் இருத்தல் கருதிப் பிறவற்றை நீக்கிக் கதிர்முதலாயின வற்றை எடுத்துக்கொண்டார். அறத்தொடு மாறுபடாத செய்கையானே அப்புலவர் பெறுவது பயனற்றனவாக இருக்கும்பொழுது பிறவற்றைக் குறித்துப் பேசுதலும் வேண்டாம். தாமே அமையும் என்றபடி.

---

## (41) தமிழுணைக் தராதெனப் பிறமொழி பயிலுந ரமிழ்தன சோற்றை யயிறரவ றென்றல்.

இற்றைஞான் றிம்மா னிலத்தியல் வாழ்க்கை
நற்றமிழ்க கற்பா னன்று தாதலின்
வேற்றுமொழிய பயிற்சி வேட்டன மென்குநர்
நெய்த்தோ ரொத்த நென்முதற் கூழும்
பிறர்தமைப் பிரிந்த பிறவுந் தாம்விடுத
குறுகிய நோக்கங் கூர்த்துங் குறிகொளா
தீண்டுந் துய்த்து முவந்துங்
கண்டியில் வேட்டுங் கடையிழந் தோரே.

(இ—ள்.) இற்றை ஞான்று (அம்மா) = இக்காலத்திலே;

இனிது இயல் வாழ்க்கை = இனிதாக நடைபெறத்தக்க வாழ்க்கை;

நல் தமிழ் கற்பால் நண்ணாது = இருமைக்கும் நலம்புரிகின்ற தமிழ்க்கல்வியின் உதவியினுன் வாய்க்கமாட்டாது;

தமிழரசர் இன்மையானும், தமிழ் கற்றாரை நன்குமதித்து உதவிப் புரக்கும் கொடையாளர் இன்மையானும், யாமும தமிழ்கற்று என்செய்வது என்றபடி.

ஆதலின் = அது காரணத்தானே;

வேறு மொழி பயிற்சி வேட்டனம் என்குநர் = (இல்வாழ்க்கை நடத்தற்கிசைந்த ஆற்றல் சான்ற வருவாயைத் தரவல்ல) பிறபாடையை யாம் விரும்பிக்கற்றேம் என்று வீணே கூறுகின்றவர்கள்;

இவர் பொருளபெருவறிஞர். ஆடம்பரங்கருதியும் பிறவேண்டியும் பிறமொழியைக் கற்பாருமுளர். தஞ்சுயமொழியைக் கல்லாது பிறமொழி பயிலும வழக்கு மேனாட்டின்கண் இல்லை.

நம் தமிழ்நாட்டு = நமது தமிழ்நாட்டிற்கு உரிமைபூண்ட;

நல் புலத்து உழவோர் = (வன்பால் எல்லாவற்றையும் மென்பாலாகத் திருத்தி) நல்ல வயல்களாக்கி அவற்றினிடத்து உழுதொழிலைச் செய்துவருகின்ற வேளாண்மக்கள்தம்;

நெய்த்தோர் ஒத்த நெல் முதல் கூலமும் = இரத்தத்தை யொத்த நெல்லை முதலாகவுடைய தானியங்களும;

கூலம் பண்டமுமாம். "பாதர் தந்த பல்வேறு கூலம்" என்னும் செய்யுளை நோக்குக. ஈண்டு அடைமொழி விசேடத்தாற் றானியங்களை உணர்த்திற்று. சிறப்புப் பற்றி நெல்லை எடுத்துக்கூறிப் பிறவற்றையுந் தழுவினர்.

"நெல்லுமுயிரன்று" என்பர் புறத்தும். கூலத்தின் வகை பெயர் முதலியவற்றை 21ம் செய்யுளுரையிற் காண்க. உழவர்தம் உழைப்பு மிகுதியும் வருத்தமுந் தோன்ற "நற்புலத்துழவோர நெய்த்தோரொத்த நென்முதற் கூலமும" என்றார். இதனுன் அவர் மேடு முதலிய நிலங்களை நற்புலமாக்கிய செயலையும் வெளிப்படுத்தினாராயிற்று.

பிறர் த(ம)மை பிரிந்த பிறவும் = (நம் தமிழ்நாட்டிற் குரிமையாளர்களாகிய உழவோரொழிந்த) ஏனை தொழிலாளர் தம்மைவிட்டு நீங்கிவந்த ஏனைப்பொருள்களும;

பண்டி, பேழை முதலியனவும், வாள், வேல் முதலியனவும், விக்கிரகம், இல்லம், சித்திரம் முதலியனவும் இன்னபிறவும் அப்பிறர் தம்மைப் பிரிந்துவருவன என்க. இவை யாவற்றினும நென்முதற் கூலம் சிறத்தலின் முன்னர்க் கூறப்பட்டது. வயிற்றுப் பிழைப்பின் நிமித்தமே தத்தம பொருள்களைப் பிறாக்குக கொடுத்தலின் "பிறர்தமைப் பிரிந்த" என்றார். பிறநாட்டில் நின்று பலபண்டங்களை வரவழைத்துக் கொள்வதானும், சுருங்கச் சொல்லல் சிறப்பாதலானும "நந்தமிழ் நாட்டு" என்னுமிதனை ஈரிடத்தும் கூறிற்றிலர்.

தம் இடை குறுகிய நோக்கம் = தங்களிடத்தைச் சார்பாக அடைந்த எண்ணத்தை;

குறுகிய அடைந்த; "புணரிய விலையிடைக் குறுகலு முரித்தே", "ஆயிரு மூன்றே யுகரங் குறுகிடன்", "யகரம் வருவழி யிகரங் குறுகும்" என்புழியும், "கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் சென்றுழி", "கோவலன் றன்னைக் குறுகின ளாகி", "கோயின் மன்னனைக் குறுகினள் சென்றுழி", "குறுங்காற் றண்ணெனும்", "ஆறுங் குறுகா ரறிவுடையார்" என்புழியும் இப் பொருடருதல் காண்க.

கூர்த்தும் குறிக்கொளாது = ஆராய்ந்தேனும் கணித்தறியாது;

ஒருபொருளை யாம் பெறுங்காலத்து அப்பொருளைச் செய்தற்கு எத்துணைப்பேர் முயன்றிருத்தல் வேண்டும், எவ்வாறு செய்தனர், எப்பொருட்டு அதனை நமக்குத் தந்தனர் என்றன்ன

பலவற்றையும் சிந்தித்தல் வேண்டுமென்க. இச்சிந்திப்பின் அருமை நோக்கிக் "கூர்த்துங் குறிகொளாது" என்றார்.

உண்டும் = (அப்பொருள்களுள் உண்ணத்தக்கனவற்றை) உண்டும்;

துய்த்தும் . (நுகரற்பாலனவற்றை) நுகர்ந்தும்;

உவந்தும் = (இவ்வுண்டியானும் துய்ப்பானும்) மனமகிழ்ச்சி அடைந்தும்;

கண் துயில் வேட்டும் = (ஒருவாற்றானும் குறைவின்மையானே) கண்ணுறங்குவதற்கு விரும்பியும்;

தமக்கு நித்திரைசெய்ய விருப்புண்டாயிருந்தும் கண்களின் இதழ்கள் குவியப்பெற்றில என்பார் "கண்டுயில் வேட்டும்" என்று கூறினார்.

கடமை இழந்தோர் = (பிறர்முயற்சியான் வரப்பெற்றனவற்றையெல்லாம் கூசாமலுண்டும், துய்த்தும், உவந்தும், துயின்றும் வருகின்றமைக்கேற்பக் கைமாறு செய்தல் வேண்டிய) கடப்பாட்டை இழந்தவராவர்;

தமிழ்நாட்டு உணவினையுண்டும், பிறவற்றையனுபவித்தும் நற்றமிழ்க் கற்பால் வாழ்க்கை நடத்தற் கியலாதெனறல் அறியாமைப் பாலதென்றும், அங்ஙனம் சொல்வோர் தமிழ்மொழியிலேயே உலகவிடயத்தையெல்லாம் நடத்தற்கேற்ற ஆற்றலும் பிறவும் இல்லாதவரென்றும் கூறியவாறாயிற்று.

இச்செய்யுட் சாரத்தை அமைத்து இந்நூலாசிரியர் இயற்றிய மற்றொரு தனிப்பாசுரம் பின்வருமாறு காண்க.

"தெய்வத் தமிழ்க்கல்வித் தேர்ச்சியிந்தக் காலத்திற்
குய்வைத் தராதென் றுரைப்பவோ—மெய்வைத்த
சீரியநந் நாட்டுணவைச் செவ்வனே யுண்டுவருங்
காரியத்தைக் கண்டறிந்தக் கால்."

## (42) கல்லா மாந்த ரல்லற் கிரங்கல்.

தாய்மொழி வெறுத்துப் பிறமொழி தழுவுந்
ரவர்மற் றம்மா வபலவர் மனத்த
மறைவுழிர கரந்திகழ் மாண்பில செயல
முன்னறி கிலராய்ப் பின்முழு தறிந்தன
ருன்னிய வுடன்பெற் றுயர்ந்திசி னோரே
யாதலி னன்றே யங்ஙன மாற்றின
ரிஃதிற் றூகமற் றிவருட் சிலரே
மாபுவரு தெய்வ மாய்த்துப் புல்லிய
புறக்கோட் காளரிப்ப புகுந்தழி குநர்சிலர்
மிகக்குயர்த்து வினையே மயிருடை மேற்றென
முகத்தன தலையின மழிக்குநர் நீட்டுந
ரறுவைமுத லுடையோரீஇ யங்கிகொள் குநரிவர்
மூக்குமுத லுறுப்பெலா முரண்டுகளை கில்லர்
வாக்கம் புரிதிற னதுநன்று மன்ற
இனியே,

மேனாட் டுரைபயில் சிறுதொழில் வெளிற்றுப்
புலையனைப் பாராண் மன்றுபுகுத் தூர்கொல்
கலைவில் கருத்து மாற்றலுங் கவின்பெறு
முண்மைதெளி கிலரா யுலைவுற்
றுண்மையிழுந் தொழிதரு முலகத்துப் பலரே.

---

(இ-ள்.) தாய் மொழி வெறுக்து = தம்முடைய சுயபாஷையைப் பயிலாது வெறுத்து;

தாய் மொழி ஈண்டுத் தமிழ்மொழியைக் குறிக்கின்றது. அன்புடைமைதோன்றத் "தாய் மொழி" என்றார். தமிழ் கற்றார்க்கு உத்தியோகம் முதலியன எய்தப்பெறாத காரணம்பற்றி அக்கல்விமேலும் வெறுப்புண்டாகின்றது. பிறரும் "அடகெடுவாய் பலதொழிலு மிருக்ககல்வி யதிகமென்றே கற்றுவிட்டோ மறிவில்லாமல்" என்றும், "கேள்வி நொந்து" என்றும் கூறு மாற்றால் இவ்வுண்மை நன்கு புலப்படும், தாய்மொழியை வெறுத்தலும் பிறமொழியைக் கற்றலும் அறியாமைப்பாலன என்பது முன்னரே விளக்கப்பட்டது.

பிற மொழி தழுவுநர் = வேற்றுமொழியையே விரும்பிக்கற்பவர்கள்;

புறமொழி யென்னில் தமிழ்மொழியைச் சூழ்ந்த மொழிகளைக் குறிக்கும் ஆதலின் மேனாட்டுமொழி எனபது போதரப் "பிறமொழி" எனறார். "தாய்மொழி வெறுத்து" என்ற மையால் 'பிறமொழியையேவிரும்பி' எனப்பொருளுரைக்கப்பட்டது. "பிறமொழி" என்பதும் ஈண்டு அரசினர்க்குரியதாகிய ஆங்கிலமொழியைப் பெரும்பான்மை குறிக்கும். அப்பாஷைக் குரியாரைப்போலப்பேசுதற்கும், கவிதைகளைச் செய்தற்கும் அமையப்பெறார் என்பார் "தழுவுநர்" என்றார். இவர்தாமே அப்பாஷையைத் தழுவிக்கொள்ளுகின்றனரன்றி அப்பாஷை இவர்தம்மைத் தழுவிக்கொள்வதில்லையென்க. தழுவிக்கோடல் ஈண்டுக் கற்றுக்கோடல் ஆதலின் அங்ஙனம் பொருளுரைக்கப்பட்டது. "வெஃகியபுகழ்" என்றதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரை விசேடமுரைத்தாங்கு ஈண்டுத் "தழுவுநர்" என்றதற்குப் ஏற்ப விசேடம் உரைக்கப்பட்டது.

மற்று அம்மா—அசைநிலைகள்.

அயலவர் = தம்மையல்லாத பிறருடைய;

மனத்த = மனசின்கண்ணே நிறைந்திருப்பனவற்றையும்;

மறைவு உழி கரந்து இகழ் மாண்பு இல் செயல = அவர் அறியாத மறைவிடத்திலே ஒளித்திருந்து (உறுப்பு முதலியவற்றால்) இகழ்ந்து காட்டுவனவாகிய பெருமையில்லாத செயல்களையும்;

பழிப்பவர் தாம் பழிக்குஞ்செயலைப் பழிக்கப்படுவோர் ஒருசிறிதும் அறியாவண்ணம் செய்வர் என்பார் "மறைவுழி" என்றொழியாது "கரந்து" என்றுங் கூறினார்.

முன் அறிகிலராய் = தாய்மொழியைச் சிறிது பயின்றவரும் அந்நாட்களிலே அறியாதவர்களாய்;

பின் முழுது அறிந்தனர் = (அத்தாய்மொழியை வெறுத்துப் பிறமொழியைப் பயின்ற) பின்னரன்றே (அவற்றுள் ஒருசிறிதும் குறைவுபடாமல்) முழுதும் அறிந்துகொண்டார்கள்;

உம்மை தொக்கது. பொருள்களை அறிவித்தற்காக ஒலிவடிவாகவும், வரிவடிவாகவும் அமைந்துள்ள எழுத்துக்களும்; அவ்வெழுத்துக்களாற் சொற்களும் உண்டாயின. எல்லா மொழிகளும் மக்கள்தம் கருத்தை வெளிவிடுதற்கேற்ற சிறந்தசாதனமாய் இருக்கின்றன. இவ்வுண்மையை விளங்காப் புல்லறிவாளர் இம்மொழி இழிவுடைத்து, அம்மொழி உயர்வுடைத்து எனப்பல்லாறு மயங்கி அவமே கெடுகின்றனர் என்க. நாட்டின் வெப்பதட்பங்களுக்கேற்ற பொருள்களும் அவற்றையுண்டு உயிர்த்து வரும் சீவராசிகளும் அவற்றிற்கொத்த ஒலிக்குறிப்புகளும் பிறவும் இயற்கையாக அமைந்திட்டமையை உணராதாரே பிறமொழிப் பயிற்சியை

வேட்பவர் என்ப.

உன்னிய உடன் பெற்று உயர்ந்திசினோர் = நினைத்தவற்றை யெல்லாம் கூறிய அப்பொழுதே பெற்றுப் பெருமைபடைத்திட்டார்கள்;

தண்ணீர் வேண்டுமென்று தமிழிற் கூறினோர்க்குத் தண்ணீர் தானே வாராதிருத்தல் போலாது "I want some water" என்று ஆங்கிலத்தில் கூறப்பெறின் அத்தண்ணீர் தானே வந்தெய்துங்கொல்லோ என்றபடி.

ஆதலின் அன்றே = (தமிழிற் கூறியும் வாராதிருக்கும் அவையெல்லாம் ஆங்கிலத்திற் கூறியவுடன் வரற்பாலனவாயிருக்கும்) அது காரணத்தானன்றே;

அங்ஙனம் ஆற்றினர் = தாய்மொழியை வெறுத்துப் பிறமொழியை விரும்பிக் கற்றலைச் செய்துவருகின்றனர்;

எப்பாஷையிற் கூறினாலும் கூறிய கருத்துமாத்திரம் வெளிப்படுமேயன்றிப் பொருள்கள் தாமே வரப்பெறா என்க.

இஃது இற்று ஆக = இச்செய்கை இத்தன்மைத்தாகவும்;

இவருட் சிலரே = அங்ஙனம் பிறமொழியை வேட்டுக் கற்றவர்தம்முட் சில்லோர்;

மரபு வரு தெய்வம் மாய்த்து = பாரம்பரியமாகச் செய்துவரும் தெய்வவழிபாட்டுமுறையைக் கெடுத்து;

புல்லிய புறம் கோட்கு ஆளாய் = அற்பமாகிய புறமதக் கோட்பாட்டுக்கு அடிமைப்பட்டவர்களாகி;

எங்கள் மதமே உண்மைத்தன்மை உடைத்து; உங்கள் மதம் பொய்மை உடைத்து எனப் பலவாறு கூறி மயக்கி வருதலிற் "புல்லிய புறக்கோட்கு" என்றார். இதுபொழுது உள்ளவர்தங்களுள்ளே எவரும் கடவுளைக் கண்டாரில்லை. இங்ஙனமாகவும் பலகூறிமயக்கிக் கெடுத்துவருகின்றனா என்க.

ஒரு பிராமணன் கிருத்துவ மதத்தைச் சார்ந்து அதனையே பெருமையுடைத்தாகவும், ஆரியமதம் இழிவுடைத்தாகவும் பேசிவருநாளில் ஒருநாள் தான் கிருத்துவனாகிய பின்னரே (ஞானக்)கண்ணொளிபெற்று எல்லாவற்றின் உண்மைகளையும் நன்கு காண்கின்றதாகக் கூறினன் எனவும், அதனைக் கேட்டிருந்த ஒருசிறுவன் ஆம்! ஆம்! உமது குறும்பார்வை நீங்கக் கண்ணாடி பூண்டு வருதலினாலன்றோ எல்லாவற்றையும் நனகுபார்த்து வருகின்றீர் எனறு நகைச்சுவை நனிததும்பக் கூறினன் எனவும் ஒருகதையுண்டு. இங்ஙனமே பொய்கூறுவார் யாவரானும் இகழ்ந்தொதுக்கப்படுவர் என்க.

புகுந்து = (வெற்று ஆரவாரத்தானும் பிறவாற்றானும் மதிமயங்கி அவர் மதத்திற்) பிரவேசித்து;

திரும்பிவருதலும், வரினும் இனத்தொடு சேர்ந்துகொள்ளலும் இயலப்பெறா என்பது குறிப்பித்தற்குப் "புகுந்து" என்றார். பிறமதம் புக்கார் மீண்டுஞ் சுயமதஞ் சாரினும் அவரை அந்தணாகள் தம்மொடு பண்டுபோலச் சேர்த்துக்கொள்ளாமை ஈண்டுச் சிந்திக்கற்பாலது. கட்டுப்பாடு கெட்டழியும். தீவினைச் சிறைவாய்ப் பட்டாரை அரசாங்கப்பணியில் அமர்த்திவராமை போல் இதுவும் சிறப்புடைத் தாகும் என்க.

அழிகுநர் = நாசமாகின்றனர்;

சமபந்தி முதலியவற்றைப்பெறாமல் தற்கொலைபுரிந்து கொண்டாரும் பலராவர். அங்கு மிங்கும் உயர்நிலைபெறார் என்பது வெளிப்படை.

சிலர் = இனனும் சிலர்;

மீக்கு உயர்த்து வினையே = மேம்பாடு தருவதற்குரிய செய்கை;

மயிர் உடை மேற்று என = மயிரின்மேலும் உடையின்மேலும் உள்ளதென்று கருதி;

முகத்தன தலையின = முகத்தின்கண்ணவும் தலையின்கண்ணவும் உள்ளனவாகிய மயிர்த் தொகுதிகளை;

மழிக்குநர் நீட்டுநர் = களைந்தும் வளர்த்தும் வருகின்றார்கள்;

மழித்தல்--மயிரை அறவே களைந்து முண்டிதஞ்செய்தல். ஆயினும் கத்தரித்தல் முதலிய வற்றையும் இயைத்துக்கொள்க. பலரும பலபடியாக அமைத்துக் கோடலின் "மழிக்குநர் நீட்டுநர்" என்று தனிப்படுத்திக் கூறினர்.

அறுவை முதல் உடை ஒரீஇ = (நாம் மரபுவழியாக உடுத்துவருகின்ற) சேலை முதலாகிய உடைகளை நீக்கி;

அரைவேட்டி, மேல்வேட்டி, தலைப்பாகை என்பன பலவும் அடங்குதற்கு "முதல்" என்றார். உஷ்ண தேயத்தாராகிய நாம் நன்மையடையுமாறு வகுக்கப்பட்டன என்பதை அறி யாது ஒருவினரே யென்னும் வியப்புத்தோன்ற "ஒரீஇ" என்றளபெடுத்தது.

அங்கி கொள்குநர் = காற்சட்டை மேற்சட்டை முதலியவற்றைக் கையாண்டு வருகின்றன ராகிய;

இவர் = இவர்தாம்;

மூக்கு முதல் உறுப்பு எ(ல்)லாம் = மூக்கை முதலாகவுடைய உறுப்புக்கள் எல்லாவற் றையும்;

முரண்டு களைகில்லா = மாறுபட்டு நீக்கிக்கோடலைச் செய்யாத;

ஆக்கம் புரி திறன் அது நன்று (மன்ற) = (அவையெல்லாம் இயற்கையாகவே) பெரு மிதப்பட்டுச் செய்துவரும் வாலாறாகிய அச்செய்கை நன்மைதருவது ஒன்றாகும்;

"மீக்குயர்த்து வினையே மயிருடை மேற்று" எனக்கொண்டவர் மூக்கே, காதே, கண்ணே, கையே, காலே என்பனவற்றுள் ஒன்றையாவது; இரண்டு முதலாய பலவற்றை யாவது; குறைத்தும், களைந்தும் கொள்வதுதான் நாகரீகமெனக்கருதி அறுத்தழிக்காமல் விட்ட மையே பெரியதொரு நன்மை யென்க. சிலர் தொள்ளைக்காது உடையராகவும், கால்வளர்ச் சியை அடிபுதையரணம் முதலியவற்றாலே குறுக்கி இயற்கையழகு கெட்டவராகவும் காணப்படு கின்றனர். இவர் செய்கைகளைப் புறனடையாற் கொள்க. ஒவ்வொரு சாதியார்க்குமுள்ள வேற்றுமை பெரும்பான்மை மயிரிடத்தும் உடையிடத்தும் அமைந்திருத்தல்பற்றி "மீக் குயர்த்து வினையே மயிருடை மேற்று" எனக் கூறினர். "மீக்குயர்த்துவினை" என்பதற்கு மேம்பட்ட பதவியை உரிமையாக்கும் வினை யென்று பொருள்கொண்டு "மழித்தலும் நீட்டலும்" என்று தொடங்கிய திருக்குறட் கருத்தையுந் தழுவி நிற்பது கழிபெருஞ்சுவையுடைத்து. "குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகு--மஞ்ச ளழகு மழகல்ல" என்னும் நாலடிச் செய் யுளாகிய அாதனமனையை ஒவடிகளாகிய பசும்பொன்னிற் சிறப்புறப்புனைந்து மதிப்பேற்றி யிருத்தலையும் கண்டறிந்துகொள்க.

மன்ற--அசை.

இனியே = அப்பால்;

மேல் நாட்டு உரை பயில் = மேலைத்தேயத்து மொழியைப் பேசிவருகின்ற;

"மேனாட்டுரை" யென்று பொதுப்படக் கூறினாரேனும் ஆங்கிலமொழி அரசமொழி யாதலின் அதனைப் பெரும்பாலும் ஈண்டுக் கருதினர் என்க.

சிறு தொழில் = அறிவின் சிறுமையைக் கொண்டே செய்யப்படும் தொழிலையுடைய;

அறிவின் கூர்மைக்கேற்பத் தொழிலும் மேம்பாடுபெற்றுவரும். உடம்பின் சிரமத்திற் குத் தக்க அளவு மேம்பாடு எய்தமாட்டாது.

வெளிற்று புலையனை = உள்ளீடில்லாத அறிவினையுடைய கீழ்மகனை;

நிமித்திகனை "வெளிறிலாக் கேள்வி யானை" என்ப. "வெளியார் முன்" என்பது குறள். வயிரமில் மரத்தினை வெளிறென்பது வழக்கு. வெள்ளையென்பது உள்ளே ஒன்றுமில்

லாதது எனவும் பொருள்படும். "வெள்ளை நோக்கின்", "வெள்ளைமை கலந்த நோக்கின்" என்பர் தேவரும். சீவகனது துறவு விசேடத்தைக் கூறுமிடத்துச் "சீலம் வெளிறில் வாள்" எனப் பட்டமைகொண்டு குற்றமெனவும் பொருள்கொள்ளலாம்.

பார் ஆள் மன்று புகுத்துநர் கொல் = உலகத்தைச் செங்கோன்முறை வழுவாமல் ஆளுதற் பொருட்டுக் கூடிய ஒளியார் தங்கள் அவையின்கண் (வேண்டப்பட்ட சூழ்ச்சியை உசாவுதற்கு உரியோனாகப்) புகுத்துவர் கொல்லோ;

புகுத்தார் என்றபடி. இவனைப் பிடித்து அச்சபையுள்ளே தள்ளினாலும் இவன் அச்ச முதலியவற்றின் மிகுதிப்பாட்டால் உட்செல்லான் என்பது தோற்றுவித்தற்குப் "புகுத்துநர்" என்றார். ஆங்கிலம் பேசுவது நன்மதிப்பெனவும், பேசாமையே அவமதிப்பு எனவும் கருதிப் பிதற்றி வருவோரை மறுத்துக் கூறினாராயிற்று.

உலகத்து பலர் = இவ்வுலகத்திலே வாழும் மக்களுட் பலர்;

கலவு இல் கருத்து = பின்னர் அழியப்பெறாது நன்மையைப் பயக்கும் எண்ணமும்;

"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்—எண்ணுவ மென்ப திழுக்கு" என்பவாகலின் "கலவில் கருத்தும" என்றார். நல்லனவற்றையே எண்ணுதல் வேண்டும், இடையூறு வந்தாலும் கலவில்லாது எண்ணியவற்றைத் திண்மையொடு நிறைவேற்றுதல் வேண்டுமென்று குறிப்பித்தாராயிற்று.

ஆற்றலும் = அக்கருத்தை நிறைவேற்றும் வல்லமையும்;

ஆற்றல் என்பது ஆக்கவும் அழிக்கவும் வல்லமைபெற்றிருத்தல். தாம் எண்ணியவற்றைச் சிதைவுறாமல் ஆக்கிக்கோடலும், அவற்றிற்கு நிகழப்பெறும் இடையூறுகளைப் போக்கிக் கோடலும் என்னும் இவையே ஆற்றல் எனப்படும். இவற்றின் விரிவைத் திருக்குறண் முதலாய நூல்களுட் கண்டு தெளிக.

கவின் பெறும் = ஆகிய இவையேதாம் மேம்படுதற்கு இலக்கணமாக அமையும் என்கின்ற;

உண்மை தெளிகிலராய் = மெய்ம்மையை அறியாதவர்களாகி;

உலைவு உற்று ஒண்மை இழந்து ஒழிகுநர் = வருத்தமுற்று ஒளியுடையாராந் தன்மையை இழந்து தமது வாணாளை வீணாகக் கழிந்து போகின்றனர்;

நமக்கு இன்றியமையாதனவற்றைச் செய்யாது வீண்பொழுது போக்கினேமே என்று உலைவுறுவா என்க. ஒளியுடைமையாவது எல்லாருள்ளும் தலைசிறந்து விளங்கப்பெறுதல்.

---

## (43) பல்வே றொலிமொழிப் பான்மைய தாமெனல்.

**எ**ண்ணிய வெண்ணுவ வெல்லாஞ் சிலசொலி
நண்ணுறச் செய்குநர் நாழிகை யிடத்திற்
சேயோர் கருத்துஞ் சொரிநற் றெளிதற்
காயவவ் வொலிகஞ் சிலவரி யமைக்குநர்
நெஞ்சே யவற்றை விழிவழி நேடிக்
கொண்டபொரு டிரிதக கூறிமொழி குறித்தமை
யெண்வகை யுறுப்பினு ளேற்குமா முயன்று
புறத்தவர் செவிவழிப் புகுத்திநொடி புணர்த்துந்
திறத்துயர்வு வழக்காற் றெளிகில ரினியே

வேற்றுமைப் பட்டு விளங்கொலி பிறவான்
அவ்வொலி யளந்தறி யாற்றலுஞ் சான்றனர்
இவற்றால்,
சிலவொலி குறிப்புமுதற் செய்யுறவை முதல
நம்ம னோரி னவின்றுணர் வனவா
வலம்வர லற்றாங் கறிதல்
புலனெறி போகிய புலவர்க்குக் கடனே.

---

(இ-ள்.) எண்ணிய எண்ணுவ எல்லாம் = நினைத்தனவும், நினைப்பனவும் ஆகிய எல்லாவற்றையும்;

எண்ணிய எண்ணுவ என்றாரேனும் எல்லாம் என்ற விலேசானே எணணுகின்றவையும் அடங்குமெனக.

சில ஒலி நண்ணுற செய்குநர் = சில சத்தங்களுக்குள்ளே பொருந்தும்படி செய்துவிடுகிறார்கள்;

மக்கள் மனசில் நினைப்பனவற்றை ஒலிவடிவாகிய சொற்களாக்கிக் கூறுவர். சொற்களோ எழுத்துக்களுள் அடங்கும். எழுததுக்களோ பன்னிருபதினெட்டாகும. இப்பன்னிருபதினெட்டாகிய இருவகை யெழுத்துக்களுள்ளே நினைத்த, நினைக்கின்ற நினைக்கும் விடயங்கள் எல்லாவற்றையும் பொருத்திக்கொண்டனர் என்க.

நாழிகை இடத்தில் சேயோர் கருத்தும் = காலத்தானும் இடத்தானும் தூரத்துள்ளோர்தம் எண்ணங்களையும்;

காலத்திற் சேய்மைப்படுதலாவது முன்னிருந்தார் தமது காலத்திற்குப் பின்னிருப்பவர்க்குத் தமது கருத்தைத் தெரிவித்து வைத்தமை போன்றனவாம். இடத்திற் சேய்மைப்படுதலாவது ஒருவர் தமது கருத்தைத் தூரதேயத்துள்ள மற்றொருவருக்கு உணர்வித்தல் போல்வனவாம்.

செயிர் அற்று தெளிதற்கு = (தங்கருத்துக்களை அறியவேண்டியவர் அறிந்துகோடலில் ஒருசிறிதும்) குற்றமில்லாம லுணர்ந்துகொள்வதற்கு;

சேய்மைக்கண் உள்ளார் ஒருவர்க்குத் தமது கருத்தைத் தூதுவர் மூலமாகத் தெரிவிக்குங்கால் பெரும்பான்மையும் மாறுபாடு எய்துமாதலின் அக்குற்றமும் பிறகுறைகளும், வீணலைச்சலும் வாராமலிருத்தற்குத் தக்கதொரு சிறந்த சாதனம் வேண்டுமென்பார "செயிரற்றுத் தெளிதற்கு" என்றார்.

ஆய அ ஒலிக்கு சில வரி அமைக்குநர் = பொருந்திய அவ்வொலிவடிவ எழுத்திற்கு ஒப்பாகச் சிலவரிவடிவ எழுத்துக்களையும் அமைத்துக்கொண்டார்கள்;

உறுதி முதலியன நிலைபெறுதல் வரிவடிவ எழுத்தாலே என்பது சிந்திக்கற்பாலது. ஒலிவடிவத்திற்கும், வரிவடிவத்திற்குஞ் சிறந்த வொற்றுமையுண்டு என்பார் "ஆய" என்று கூறினார். ஒலிவடிவத்தாற் கூறப்படும் விஷயம் சிலபொழுது முரண்பட்டும், விகாரமுற்றும் அழிவெய்தும். வரிவடிவத்தாற் குறிக்கப்பட்ட விஷயம் அங்ஙனம் பெரும்பான்மை அழியப்பெறாது.

நெஞ்சு = மனசானது;

அவற்றை விழி வழி நேடி = கையால் எழுதப்பெற்ற அவ்வரிவடிவங்களை விழியின் வழியாக விருப்பத்தோடு நோக்கி;

தேடுதற்குக் காரணமாகிய விருப்பத்தினை நேடல் என்னும் ஆகுபெயரால் அறிவித்தார்.

கொண்ட பொருள் தரீஇ = அவ்வரிவடிவ எழுத்துக்கள் உட்கொண்ட பொருளை இன்னதெனத் தொடர்ந்துசென்று;

துருவுதலைத் தேடுதல் என்றுமட்டும் பொருள் பண்ணுதல் ஈண்டுச் சிறவாதிருத்தலையும், உரையாசிரியர்கள் உரைக்கும் உரைவழக்கினையும் உணர்ந்துகொள்க. வரிவடிவத்திற்குப் பொருள் ஒலிவடிவம் என்க. இந்நுணுக்கம் அறியாதார் சொல்லுக்களது பொருள் எனக்கூறி இடர்ப்பட்டு விரிப்பர். வரிவடிவ எழுத்துக்களைக் காணும்பொழுதே ஒலிவடிவவெழுத்துக்களும் மனசின்கட் டோன்றப்பெறும் என்னும் வியப்புச் சுவை தோற்றுவித்தற்குத் "துரீஇ" என்றனை பெடுத்தது.

கூடும் ஒலி குறித்து = அவ்வரிவடிவ எழுத்திற்குப் பொருந்திய ஒலிவடிவ எழுத்தை உடைத்தற்குக் கருதி;

வரிவடிவைக் கண்டவுடனே அதற்குரிய ஒலிவடிவம் தானேவந்து கூடும் என்பார் "கூடு மொலி" என்றார். எண்வகை உறுப்புக்களும் ஈண்டு முயன்றுவருதல் ஒலிகுறித்தேயாதலின் "ஒலிகுறித்து" என்றார்.

அமை எண்வகை உறுப்பினுள் = தாமே முயற்சிசெய்தற்கு அமைந்திருக்கின்ற எட்டு வகையான உறுப்புக்களுள்ளே;

"தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇப்—பல்லு மிதழு நாவு மூக்கு—மண்ணமு முளப் பட வெண்முறை நிலையா—னுறுப்புற் றமைய" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் அவ் வெட்டுவகையையும் இனிதுணர்ந்துகொள்க. இவ்வெட்டு நிலையும் காற்றுப்பொருந்தியும், தொழிற்பட்டும் எழுததுக்களைப் பிறப்பிததற்கு உறுப்பாக நிற்றலின் அவற்றையும் உறுப் பென்றார்.

ஏற்குமா(று) முயன்று = பொருந்தும் வண்ணம் முயற்சிசெய்து;

ஒவ்வோர் எழுத்தும் பிறத்தற்கு இடமுயற்சிகள் வேற்றுமைப்பட்டிருத்தலின் "ஏற்குமா முயன்று" என்றார்.

புறத்தவர் செவி வழி புகுத்தி = அயலிருந்து கேட்பவர்தம் செவியின்வழியாக (வரைந்த வன் கருதிய ஒலிவடிவத்தை மனசுட்) புகும்படி செய்வித்து;

நொடி உணர்த்தும் = ஒரு கைநொடிப் பொழுதைக்குள்ளே அவர்தம்மை உணரவைக் கின்ற;

உணர்ந்துகோடல் கேட்பாருடையதேனும் அக்கேட்கைக்குக் காரணம் கேட்கப்படுவாரே யாதலின் "உணர்த்தும்" என்றார்.

திறத்து உயர்வு = தன்மையினது உயர்ச்சியை;

வழக்கால் தெளிகிலர் = (பல்லாயிர வருடங்களாக) வழங்கப்பெற்றுவருகின்ற காரணத் தானே தெரிந்துகொண்டாரில்லை;

உடற்கண் அமைந்துகிடக்கும் விசித்திரத்தை அறிந்து வியக்கும் ஆற்றலில்லாத இவா தமக்கு இவற்றின் பெருமை யருமைகள் எவ்வாறு புலப்படும் என்க.

இனியே = அப்பால்;

வேற்றுமை பட்டு விளங்கு ஒலி பிறவான் = மாறுபட்டு விளங்குகின்ற இரட்டை ஒலி யானும் பிறவாற்றானும்;

கட், கட என்பன வேற்றுமைப்பட்ட ஒலியென்க. எல்லா வடிவங்களினும் தலைசிறந்து விளங்குதல் பற்றி "விளங்கொலி" என்றார். பிற என்பது சுருக்கெழுத்து (Short-hand) முதலியவற்றைக் குறிக்கும். "விளங்கு" என்பதை ஈண்டைக்கும் ஏற்றிக்கொள்க.

அவ் எலாம் = அவ்வரிவடிவ எழுத்துக்கள் எல்லாவற்றையும்;

அளந்து அறி ஆற்றலும் சான்றனர் = நுனித்து அளந்து அறிகின்ற வல்லமையும் நிறை யப்பெற்றனர்;

வரிவடிவமாகப் பெருக்கி வரையவேண்டியவற்றைச் சுருக்கியெழுதியும்; பலவரிவடி வானும், ஒலிவடிவானும் அறியவேண்டியவற்றைக் கட் கட என்னும் இரண்டொலிகளானும்.,

—என்னும் இரண்டு வரிவடிவங்களாலும் அளந்துகொண்டும் வருவது தோன்ற "அளந்து" என்றும்; அவற்றையெல்லாம் அளத்தற்கும், அறிதற்கும் மிகவொருவல்லமை வேண்டுமென்பது ஒருதலையாதலின் "அரியாற்றல்" என்றும்; சேயிடத்தார் இருவர் உசாவுபொறி, சென்ற காலத்திற் பேசியவற்றை மீட்டுஞ் சொல்பொறி என்னும் இவற்றை முதலாகவுடைய பலவற்றையும் அடக்குவதற்குப் "பிறவான்" என்றும் கூறினர்.

இவற்றால் = இக் காரணங்களால்;

சில ஒலி குறிப்பு முதல் செய் = சிலவகையான ஒலியும் குறிப்பும் ஆகிய இவை முதலானவற்றைச் செய்துவருகின்ற;

பறவை முதல = பறவையை முதலாகவுடைய சீவராசிகள்;

பாடுதல் முதலாய ஒலிச்சிறப்புப்பற்றிப் பறவையை ஈண்டுத் தலைமையாக்கினர்.

நம்மனோரின் நவின்று உணர்வனவாக = நம்மவர்போலவே (ஒன்றனோடு மற்றொன்று) பேசி (த் தங்கள் தங்கள் கருத்துகளைப் பிறவும் பிறவற்றின் கருத்துகளைத் தாமும்) உணர்ந்து கொள்வனவாக;

அலம்வால் அற்று ஆங்கு அறிதல் = சுழற்சியற்று அறிந்துகோடல்;

புலன் நெறி போகிய புலவர்க்கு கடன் = நூற்றுறையிலே தேர்ச்சியடைந்த பழக்கத்தையுடைய அறிஞர் தமக்கெல்லாம் கடமையாகும்;

தந்தியடிக்கும்போது அம்முறை அறியாதவன் கட், கட என்று அடிப்பதேயன்றிப் பிறவொன்றுமில்லையென்று துணிந்துகொள்வதுபோலப் பறவை முதலாயவற்றின் பாஷையறியாதானும் அவையெல்லாம் வெற்றொலி முழக்குகின்றன என்று நினைந்துகொள்வன் என்க.

---

## (44) அருந்தமிழ்ப் புலவ ராற்ற லுரைத்தல்.

ஆங்கிலப் பனுவற் கழகத் தவரே
பாங்கின ரம்மொழிப் பயிற்சிதெளி பண்பிற்
கதான்று,
செந்தமிழ்ப் பயிற்சி தெளிதற் கவரை
முந்துபு போற்றுநர் முத்தமிழ் நாட்டினர்
கடற் கூடிய கொழுஞ்சுவைச் செழுந்தமிழ்ப்
பாடல்சால் கூட்டமொடு பார்வாழ் புலவரைத்
தாட்கீழ்ப் படுத்துந் தகைமை சான்றவர்
வெரிநொடு வயிற்றிடை வேற்றுமை பெறப்படார்
புரைவெண் ணறுவையர் புயல்பனி வெயிலாற்
றிரிவுறு மேனியர் பேணுநர்ச் சிறிதிலர்
பன்னூ லாயும் பான்மையர் பரந்த
நன்னூற் கேள்வியர் நாவலர் பாவலர்
பொன்னேர் தங்கோள் புவிகாட்டு மாற்றலர்
திருந்தெழில் குலந்திகழ் சேயிழை
யருந்துணை யிழந்தாங் காற்றிடப் படுத்தே.

---

(இ-ள்.) [ஆங்கிலப் புலவர் கழகத் தலைவரே—பாங்கினர் அம்மொழிப் பயிற்சி தெளிவிற்கு] ஆங்கிலப் புலவர் கழகத்தவர் அம்மொழி பயிற்சி தெளிவிற்கு பாங்கினர் = ஆங்கில நூல் ஆராய்ச்சி செய்யும் சங்கத்தவர்தாம் அம்மொழியைப் பயின்றுவருவார்தம் பயிற்சி எத்துணையதென்று தெளிந்து சொல்லுதற்குரிய தன்மைக்கேற்ற தகுதியுடையோர் ஆவர்;

ஒருமொழிப் புலவர்களைக் கற்பவரின் கல்வித்திறமையைப் பரீக்ஷைசெய்தற்கு அம்மொழி வல்லுநரே தகுந்தவர் என்றபடி.

அதான்று = அத்தகுதியல்லாமல்;

[செந்தமிழ்ப் பயிற்சி தெளிதற் கவரை—முந்துபு போற்றுநர் மூன்றமிழ் நாட்டினர்]

மூன்று தமிழ் நாட்டினர் = மூன்றாகிய தமிழ்மொழிவழங்கும் (மூன்றாகிய) நாட்டின் கண்ணுள்ளோர்;

மூன்று தமிழ் என்றும், மூன்று நாடு என்றுங் கொள்க. மூன்று தமிழாவன இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ். மூன்று நாடென்பன சேர, சோழ, பாண்டியநாடுகள்.

செம் தமிழ் பயிற்சி தெளிதற்கு - செம்மை ஆகிய தமிழில் எத்துணைத் தேர்ச்சியுண்டென்று தெரிந்துகோடற்கு;

அவரை முந்துபு போற்றுநர் = அவ்வாங்கிலேயரை முந்துற்றுத் துதித்து மேற்கொள்ளுகின்றனர்;

அவர் வேண்டாதிருப்பவும் இவராகவே வேண்டிக்கொள்ளுகின்றனர் என்பது போதர "முந்துபு போற்றுநர்" என்றார்.

கூடல் கூடிய கொழும் சுவை செழும் தமிழ் = மதுரைக்கண்ணே தெய்வப் புலமையாளர் ஒன்றுகூடி ஆராய்ந்த கொழுவிய சுவைவாய்ந்த செழுமையுற்ற தமிழை;

தெய்வப் புலமையாளர் ஆராய்ந்தமையால் கொழுவிய சுவைவாய்ந்தது என்றும், இவ்வாய்ப்பின் காரணத்தால் செழுமையுற்றது என்றும் கூறினார். நான் மாடங்கள் தம்மிற் கூடுதலிற் கூடல் எனப்பெயர்பெற்றது. நான்மாடங்களாவன திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர். கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்றுங் கூறுப. கலித்தொகை நச்சினார்க்கினியர் உரையையும் நோக்குக. "கன்னிதிரு மால்காளி யீசன்காக்கும் கடிமதில்சூழ் மாமதுரை" என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.

பாடல் சால் கூட்டமொடு = (ஆராய்ச்சிச் சிறப்பாற் பல்லோரும் புகழ்ந்து பாடும) பாடல் மிக்க சங்கத்தோடு;

இவரைச் சங்கநூலாராய்ந்த புலமையாளராகிய நான்காஞ்சங்கத்தவர் என்க.

பார் வாழ் புலவரை = இவ்வுலகத்திலே வாழ்கின்ற ஏனைமொழிப்புலவர்தங்களையும்;

உம்மை தொக்கது. சங்கநூலாராயாத் தம்மொழிப் புலவரையும் உள்ளடக்கிற்று.

தாள் கீழ் படுத்தும் தலைமை சான்றவர் = தங்கள் அடிக்குள்ளே அகப்படுத்திக் கொள்ளும் (மடங்கச் செய்யும்) தகுதி நிறைந்தவரும்;

இவர்தம் புலமைகண்டார் இவரடியிற் றாமே வந்து வணங்குவர். வணங்காமற் குதர்க்கவாதம் இடுவோரையும் வணங்கும்படி செய்யும் உண்மைப்புலமை வாய்ந்தவர். இனித் தாள் என்றதற்கு முயற்சி எனப்பொருள் கொண்டு அம்முயற்சிவன்மையானே ஏனையோரை அடிக்கீழ்ப்படுத்தும் தகைமைசான்றவர் எனினும் சாலும்.

வெரிந் ஒடு வயிறு இடை வேற்றுமை பெறப்படார் = முதுகொடு வயிற்றுக்கு இடையிலேயுள்ள வேற்றுமையைப் பிறரால் அறியப்படாதவரும்;

இதனால் அவர் ஊணின்றி நலியும் வருத்தத்தைக் கற்பவர் எளிதிலுணர்ந்துருகுமாறு கூறினார். தமக்கு வெரிநும் வயிறும் தோன்றுமேயன்றிப் பிறர்க்கவை தோன்றா என்பது போதர "வேற்றுமை பெறப்படார்" என்றார். "என்பெழுந் தியங்கும் யாக்கையர்" என்பது பாட்டு. ஈண்டு "இயங்கு" என்பது ஆராய்தற்பாற்று. முதுகென்றும், வயிறு என்றும், அவ்

விரண்டனுள் அமைந்த இடையென்றும் வேற்றுமை தோன்றாமல் ஒன்றுபடச் சுருங்கிய உறுப்பினர் என்றும் பொருள் கொள்ளலாம்.

புரை வெண் அறுவையர் = பொத்தலையுடைய வெள்ளிய ஆடையை உடையவரும்;

“புரை” என்றது வறுமையையும் “வெண்” என்றது தூய்மையையும் ஒழுக்கத்தையும் காட்டிநின்றன. வெள்ளாடையை ஆங்கிலேயரும் பிறரும் மதிப்பர்.

புயல பனி வெயிலால் திரிவு உறும் மேனியர் = மழை, பனி, வெயில் என்பவற்றால் மாறுபட்டுவருகின்ற உடம்பினையுடையவரும்;

தங்கள் குடும்ப காப்பிற் குழைத்தற்பொருட்டுப் புயலெனவும், பனியெனவும், வெயிலெனவும் பாராமல் வெளிச்சென்று சுழல்வதினாலே அவ்வக்காலங்கட்குரிய சீதோஷ்ணங்களுக்கேற்றவாறு தேகம் மென்மை நிறம் முதலியவற்றால் வேறுபட்டிருத்தல். “**** துணிச்சிதருடுத்து—வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி—வெயிலென முனியாது புயலென மடியாது—புறங்கடை நின்று புனகண் கூர்ந்து” என்னும் மணிமேகலை அடிகள் ஈண்டுச் சிந்தித்தற்பாலன.

பேணுநர் சிறிது இலர் = தம்மை விரும்பிக் காப்பவரைச் சிறிதேனும் இல்லாதவர்;

உம்மை தொக்கது. ஒரோவழி இருப்பினும் பேறாது சிறிதுகொடுத்து வருத்துவோர் பலர் உளர் என்க. தற்காலம் ஆங்கிலக்கலாசாலைகளிலே சிறுதொகை வேதனத்தின்பொருட்டுப் பெரும் பணியாற்றி வேதனையுற்றுவரும் தமிழ்ப்பண்டிதர்தங்களை அக்கலாசாலைகளின் அதிபர்களும் ஏனைத்தமிழறிவில்லாத நந்நாட்டுப் பாதிரிமாரும் அவமதித்துவருதலை ஈண்டொப்பிடுக. “காணா கேளா கான்முட மானோர்—பேணுமாக்கள்” என்பன மணிமேகலை. தந்நாட்டு மொழிவாணரைப் பேணுதல தம்மேற் பொறுத்த கடமையாகவிருந்தும் அங்ஙனம் செய்யாது ஒழிதலுடன் நில்லாமல் அவரை அவமதித்தலுக்கும் இவர்மாட்டிருக்கும் அறிவுதான் என்னையென்க. இத்தமிழ்ப்புலவரைப பேணாமல் இவர்க்குரிய பொருள்களைத் தங்கள் தங்களுக்குப் பகுத்துக்கொள்வோரும் ஒருபெருங் கள்வராவர் எனக.

பல் நூல் ஆயும் பானமையர் = (தம்மைப் பலரும் அவமதித்தலைக் கருதிக் தமிழ்நூலாராய்ச்சியை விட்டொழியாது) பலநூலகளையும் ஆராயுந் தகுதியுடையோரும்;

பன் என்பதாகவுங் கொள்ளுப. பன்னுகின்ற நூல் என்று பொருள்கொள்க. கல்விச் சுவையை உள்ளபடி அறிந்தீடுபட்டவராதலின் அறிவில்லார் தமக்குச் செய்துவரும் இழிவு முதலியவற்றையெல்லாம் ஒருபொருளனவாக மதித்திலர் என்க. எழுமையுங் கற்றுவந்தவராகலின இவர்கது இத்தன்மை உண்டாகியது என்க. இத்தகையர் இலரேல் நமது அரும்பெரும் தமிழ்ப்பனுவல்களும் இல்லையாய்விடும்.

பரந்த நல் நூல் கேள்வியர் = அகன்றுவிரிந்தனவும் நன்மையமைந்தனவுமாகிய நூற்கேள்விகளை உடையவரும்;

ஆராய்ச்சி செய்தற்குரிய காரணத்தை ஈண்டுக் கூறினர். கற்கும் அருமைதோன்றப் “பரந்த” என்றும், பரந்துபட்டனவாயிருப்பினும் நன்மைபயத்தலின அவற்றைக் கற்றற்கண் ஊக்கமேலிட்டது என்பது தோன்ற “நன்னூல்” என்றும், இங்ஙனம் கேட்டல் பின்னர் ஆராய்தற்குக் காரணமாகுமென்பது தோன்றக் “கேள்வியர்” என்றும் கூறினர். ஆயின் கேள்வியர் என்று முற்கூறாததுதான் என்னையோவெனில்? சிலநூல்களைக் கற்றுவிட்டு ஆராய்ச்சி செய்யாமல் வாளாவிருக்கும் பலரையும் இகழ்தற்குக் கருவியாதலின் அங்ஙனம் முற் கூறப் பட்டிலதென்க “நன்னூற் புலவர்க்கு நன்கன முரைத்தாங்கு” என்பது சிலப்பதிகாரம்.

[நாவலர் பாவலர் பொன்னேர் தங்கோள் புவிகாட்டு மாற்றலர்]

பொன் நேர தம் கோள் புவி காட்டும் ஆற்றலர் = பொன்னையொத்த(இவர்)தமது கொள்கையை (தத்தம்கொள்கையை ஆதாரப்படுத்தற்குக் காட்டாக) உலகத்தவரெல்லாம் எடுத்துக் காட்டும் திறமையுடையவரும்;

அருமை கருதிப் பொன்னேர்கோள் என்றார். பொன் நேர்கோள்; அதுதங்கோள் எனக. புலினொரது புறமொழியாளரை. பாவலர்க்கு இவ்வாற்றல் பெரிதருண்மையின் நாவலர்க்கு அடுத்துக் கூறப்பட்டது. பொருள்கோண் முறையும் ஈண்டு நோக்கற்பாலது.

நாவலர் பாவலர் = (ஆகிய) நாவலர், பாவலர் தங்களையும்;

திருந்து எழில் குலம் திகழ் சேய் இழை = திருந்திய அழகும் குலனும் விளங்குகின்ற செவ்விய ஆபரணங்களையுடையாள்;

அரும் துணை இழந்தாங்கு = பெறுதற்கு அரிய (தனது) நாயகனைப் பிரிந்து ஆற்றுதலைப் போல;

ஆற்றிட படுத்து = ஓலமிடும்படி துன்பத்துட்படுத்தி;

ஆற்றிடப் படுத்து—(ஆங்கிலப் பனுவற்கழகத்து) அவரைப் போற்றுநர் என முடிக்க.

எழிலை ஓசைக்கும், குலத்தைத் தூய்மைக்கும் சேயிழையைப் பொருளுக்கும் ஒப்பிடுக. தமிழர் அகத்திணை புறத்திணைகளிலே பொருளைத் தூய்தாக அமைக்கின்றனர். தூய்மை என்பது கலப்பின்மையைக் குறிக்கும். புறமொழியாளர் திணைதுறையென்னும் வரம்பின்றிச் செய்யுட் செய்வர். பொருட்பகுப்பானே எழிலும் பொருளும் தமிழுக்கிசைந்தன. ஆதரிக்குந் துணைவனில்லாத மங்கை தனக்கும் பிறர்க்கும் பயன்படாமற் கெடுதல்போலத் தமிழ்ப்புலவரும் ஆதரிப்பின்றித் தமக்கும் பிறர்க்கும் பயன்படாது கெடுகின்றனர் என்க. தமிழர் இருக்குங் காலத்தில் தமிழ்ப்புலவர் இங்ஙனம் ஓலமிடுவது கணவனிருக்க மங்கல்யம் இழந்தாங்கு எனக் குறிப்பித்துத் தமிழ்ப்புலவரைக் காக்குமாறு தமிழ்மக்களை வற்புறுத்தினாராயிற்று. விரிவஞ்சி விடுகின்றாம். ஏற்பனவற்றையும் இன்னும் விரித்துக் கொள்க.

---

## (45) திருந்துகலை பயில்வோர் சித்தமயல் கொண்டு வருந்திக் கல்லா மரபுக் கிரங்கல்.

கற்போர் தம்மைக் காதணி முதல
பொற்பா வணிகிலிர் புனைமி னெனவு
நற்சுவை யுணவை நன்கருந் திலிரே
யற்புட னருந்துமி னருந்துமி னெனவு
மொள்ளிய வாடை யுடுத்திலி ரெனவும
வற்புறுத் திடுத்து வைதற்கு மகிழ்வ
ரிவ்வா றியைய வுயிர்வளர்ப் பியற்றிச
செவ்வே யணிதருஞ் சீர்த்த கற்பினை
யாற்றுமை பெரிதே யாசாகு மென்னுங்
கூற்றுச் செவிக்கொள்ளிற் கொடுமைகொடு குன்றுவர்
கூலிபெறு வினைஞன் றன்னொடு கூடிச
சால்வினை தவிர்க்குந் தலைவனை நோக்கி
யிவ்வகை நீயே யியற்றுதி மடனென
வடியோ னுரையு மகங்கொளாத் தலைவற்குப்
படிநேர் பமைந்தனிர் பனுவற் கேட்பீ
ரும்பொரு ளெமக்கீண் டுவகையுற் றுதவினி

ரெம்பயிற் றிறைபயு மேனோ தாிதல்
பெரிதுந தவறெனப் பேசினு மப்பா
திரிபுறு கின்றனர் செய்வ தெவன்கொல்
இவரே,
ஆசான் பொருளொன்று மனைதம் பதியெனத்
தேசார் கலவியுள் சொல்கிலர் செவியிடைப்
கான்கிலங் கொறுபயிற் கஞ்சி போல
லீன்புரி திரையயு மெண்ணரித் துணிந்து
பெரமயினை பெரிதிற் பிறரே
வரப்பக ரேதுப மக்குறிமன் குறரே.

---

(இ-ள்.) கற்போர் தம்மை = கற்கின்ற மாணக்கர் தங்களை;

காது அணி முதல = காதணியை முதலாகவுடைய ஆபரணங்களை;

பொற்பு ஆ(க) அணிகிலிர் புனைமின் எனவும் = பொலிவாக அணிகின்றீரில்லை (அப் பொலிவுறுமாறு அவற்றையெல்லாம்) அணிந்துகொள்ளுமின் என்று கூறியும்;

ஏனைய ஆபரணங்களைக் கூறாது காதணி ஒன்றனையே எடுத்துக் கூறினார், கர்ணபூஷணச் சடங்கொன்றே முதற்கட் செய்யப்பெறுதலின் என்க. அன்றியும் உயிர்க்குறுதி பயப்பனவாகிய அறமுதலாயவற்றை எளிதினுணர்ந்துகோடற்கு இன்றியமையாச் சாதனமாகிய கல்வியைக் கேட்டற்குச் செவியானது நற்றுணைக் கருவியாய் அமைந்துநிற்கும் சிறப்புநோக்கி அங்ஙனம் அணிந்துரைத்தனர் போலும்.

உறப்புகட் கிசைந்தவாறு ஒளியும், அளவும், பிறவும் பொருத்தமுறப் புனையாவிடின் உள்ள பொலிவுங் குறைந்துவிடும் என்பது போதரப் "பொற்பா வணிகிலிர" என்றார்.

நல் சுவை உணவை நன்கு அருந்திலிர் = நாவிற்கினிய ருசிபயப்பதுவாகிய உணவினை நன்மைபொருந்துமாறு உண்டிலீர்;

சுவையற்ற மருந்தினை உண்டிலிரே என்று கேட்கின் அவர்க்கு வெறுப்புண்டாகும் என்க.

அற்புடன் அருந்துமின் அருந்துமின் எனவும் = (உணவருத்துவோர் அம்மாணக்கரை நோக்கி) அன்புடனே (இவ்வுணவுகளை) உண்ணுங்கள் உண்ணுங்கள் என்று கூறியும்;

நகையணியாவிடிற் புறத்தோற்றத்திற்குப் பொலிவில்லையாகும், உணவருந்தாவிடில் உடற்குக் கெடுதியுண்டாகும் ஆதலின் "அருந்துமி னருந்துமின்" என்றார்.

ஒள்ளிய ஆடை உடுத்திலிர் எனவும் = நல்ல வஸ்திரங்களைத் தரிக்கின்றிலீர் (தரித்துக் கொள்மின்) என்று கூறியும்;

வற்பு உறுத்தி இடித்து வைதற்கும் மகிழ்வர் = உறுதிப்படுத்தி (கட்டுமைப்படுத்தி) நெருக்கிக்கூறி இகழ்வதற்கும் (வெறுப்புக்கொள்ளவேண்டியது இயற்கையாகியும் அவ்வாறு கொள்ளாமல்) மகிழ்ச்சியைக்கொள்வா;

அவை காரணமாக அடிக்கில் வெறுப்புக்கொள்வர் என்பதுபோதர "வைதற்கு மகிழ்வர்" என்றார். வெளிக்குத் துன்பப்படுவாரா போன்றிருந்தும் உண்மகிழ்ச்சியை யெய்துவர் என்பதுவே ஈண்டுப் பெரும்பான்மை குறிக்கப்பட்டது.

புனைமின், அருந்துமின், உடுமன் என்று தூண்டியும் அங்ஙனஞ் செய்யாது நிட்சித் திருந்தமையை நன்கு புலப்படுத்துவான் "வற்புறுத்தி", "இடித்து", "வைதற்கும்" என்று பின்னருங் கூறினா.

இவ்வாறு இயைய = இத்தன்மையைப் பொருந்த;

உயிர் வளர்ப்பு இயற்றி = உயிரை வளர்த்தலை (நன்கு) செய்து;

உயிர் வளர்ச்சிக்குக் காரணமாக இருப்பது அறிவு. அவ்வறிவே உடல வளர்ச்சிக்குங் காரணமாகுமென்றறிக.

செவ்வே அணிதரும் சீர்த்த கற்பினை = செம்மையாக அலங்கரித்துக் கோடலைத் தருகின்ற சிறப்புவாய்ந்த கல்வியை;

ஆற்றாமை பெரிது ஆசு ஆகும் எனனும் கூற்று = கல்லாது இருந்துவருதல் பெரியதொரு குற்றமாமென்று கூறிய சொல்;

"கூற்று" என்னுமிலேசானே அஃதவர்க்குக் கொடுமைத்தாக இருக்குமென்பதூஉம் கொள்ளப்படும்.

செவி கொள்ளில் கொடுமை கெடு குன்றவர் = செவியகத்திலே கொள்ளப்பெறுவார் என்னில் கொடுமையைக் கொண்ட வராய் ஒளி சுருங்கிப்போவார்;

ஊண் முதலியவற்றிலே வெறுப்புவராது கல்வி முதலியவற்றிலே வெறுப்புவரும் என்பது இதுகாறும் கூறப்பட்டது.

"உண்டுடுத்துப் பொன்பூண் டுடலோம்பும் பேதையர்க்குத்—தண்டமிழைக் கற்றறிவைத் தாம்பெருக்கிக்—கொண்டிருமைப்—பேறடைந்து வீடு பெறுமுயல்வி லென்றிடித்துக்—கூறினுங் கொள்ளாரே குணம்" என்றார் பிறரும்.

கூலி பெறு வினைஞன் தன்னொடு கூடி = கூலியைப்பெறுகின்ற தொழிலாளன் தன்னுடனே சேர்ந்துகொண்டு;

[சாலவினை தவிர்க்குந் தலைவனை நோக்கி] வினை சால தவிர்க்கும் தலைவனை நோக்கி = (அக்கூலி பெறுதற்காகத் தொழிலாளனாலே செய்யப்படும்) தொழில்களை மிகுதியுங் கெடுத்துவருகின்ற தலைவனை (அத்தொழிலாளன்) பார்த்து;

தலைவனுயிற்றே என்றஞ்சிச் சின்னாட்களை வாளா வழித்தான் என்பது போதர "நோக்கி" என்றார். "கூலிபெறு வினைஞன்" என்றமையால் வினைசெய்யாவிடினும் தலைவனால் கூலி கொடுக்கப் பெறுதற்குரிய தொழிலாளன் என்பது தானே போதரும்.

[இவ்வகை நீயே யியற்றுதி மடனென] நீயே இவ்வகை மடன் இயற்றுதி என = நீ ஒருவனே (கூலிக்கு வேலைசெய்யவந்தவனை வேலைசெய்து முடிக்கவொட்டாமல் அவனோடு கூடியாடித் தவிர்க்கின்ற) இத்தகைய மடமையைச் செய்துவருகின்றாய் என்று கூறிய;

அடியோன் உரையும் அகம் கொளா தலைவற்கு = அத்தொழிலாளன் சொல்லும் வார்த்தையையும் மனத்துட் கொள்ளாத அத்தலைவற்கு;

[படி நேர் பமைந்தனிர் பனுவல் கேட்பீர்] பனுவல் கேட்பீர் படி நேர்பு அமைந்தனிர் = நூல்களைக் கேட்கின்ற மாணாக்கராகிய நீவிர் (அத்தலைவனை) ஒப்ப நேரந்தமைந்தவராகின்றீர்;

குன்றுவராகிய பனுவல் கேட்பீர் நீவிர் அத்தலைவற்குப் படி நேர்பு அமைந்தனிர் என முடிக்க.

[உம்பொரு ளெமக்கீண் டுவகையுற் றுதவினிர்] ஈண்டு எமக்கு உம் பொருள் உவகை உற்று உதவினிர் = இதுபொழுது எமக்கு உமக்குரிய பொருளை மகிழ்ச்சியுற்று வழங்கினீர்;

அப்பொருள் மாணாக்கர் அளிக்கும் தக்ஷிணையாகும் என்க. அது பெற்றோரால் அளிக்கப்பட்டதாயினும் இவரை அடைதற்குரியதாதலின் "உம்பொருள்" என்றார். ஈண்டு இவ்விடத்துமாம்.

எம் பயிற்று இறையும் எலாது ஆடுதல் = (உமக்குக் கற்பித்துக் கொடுக்கின்ற) எமது கல்வியின் ஒருசிறிதையாவது (நீவிர்) ஏற்றுக்கொள்ளாமல விளையாடிக்கொண்டிருத்தல்;

ஏற்காது விடுதலும், ஆடுதலுமாகிய இரண்டு குற்றம் புரிந்தனர் என்க.

பெரிதும் தவறு என பேசினும் = மிகவும் குற்றமாகுமென்று கூறினாலும்;

அன்புகாட்டிக் கூறினமை தோன்றப் "பேசினும்" என்றார்.

திரிபு உறுகின்றனர் = (நல்வழிக்கு வராமல்) மாறுபாடடைகின்றனர்;

பெரும்பான்மை கேட்டகாலையிற் கற்றற்குச் சிறிது மனமுள்ளவராவர் என்பதுதோன்றத் "திரிபுறுகின்றனா" என்றார்.

செய்வது எவன் = (உங்களைக் கல்விகற்குமாறு) செய்யத்தகுந்த காரியந்தான் யாதோ;

"உம்பொருளுதவினிர்", "திரிபுறுகின்றனிர்" ஆதலின் அத்தலைவனை நிகர்ப்பீர் என முடிக்க.

வேலைக்காரன் வேலைசெய்யாது சோம்புவானாயின் அவனைத் தண்டித்துத் தம் வேலையை நிறைவேற்றிக்கோடல் தலைவர்தமக்கெல்லாம் வழக்கமாயிருக்கவும், வேலைக்காரனோடு கூடி விளையாடிச் செய்யவேண்டிய பணிகளைக் கெடுக்குந்தலைவனைப்போல, ஆசிரியர் பாடஞ்சொல்லாது சோம்பினரேனும், அவர்க்குப் பொருளைக்கொடுத்த மாணுக்கர் காலமும் பொருளும் வீணாகாமல் நயந்துநயந்தருட்டிப் பாடங்கேட்டுக்கோடலே முறைமையாகவும் அங்ஙனம்புரியாமல் ஆசிரியர் தாமே படியுங்கள் படியுங்கள் என்று வற்புறுத்தவும் படியாமல் விளையாடுகின்றனா என்க.

இவரே = இம்மாணவகர்தாம்;

ஆசான் பொருள் ஒன்றும் அடைதல பழி என = ஆசிரியனுடைய பொருள்களுள் யாதொன்றனையேனும் பெறுதல் (இருமைக்கும் ஆகாத) பாவம் என்று கருதி;

[தேசார் கல்வியுங் கொள்கிலா செவியிடை] செவி இடை தேசு ஆர் கல்வியும் கொள் கிலர் = காதகத்திலேனும் புகழ்நிறைந்த கல்வியையும் ஏற்கின்றாரில்லை;

தேசு—ஒளியுமாம், அஞ்ஞான இருளைநீக்குதலின். அவரது தூய்மை தோன்றக் "கல்வியும் கொள்கிலர் செவியிடை" என்றிட்டார், இதனால் அவரது அறியாமையைப் புலப்படுத்தினாராயிற்று.

கான் விலங்கு ஒறுப்பிற்கு அஞ்சி = காட்டிலுள்ள (புலிமுதலாகிய) மிருகங்கள் (அடித்தல் முதலாகிய) தண்டனைகளைப் பயந்து;

ஏவல் ஈண் புரி திறனையும் எண்ணி துணிந்து = (அத்தண்டனை செய்வோன் ஏவிய) ஏவல்களை (நாம் காணுமாறு) இங்கே புரிந்து வருகின்ற வகையினையும் ஆராய்ந்து அவ்வாறே செய்யத்துணிந்து;

யானைமுதலியவற்றைக் கொண்டு எல்லாவினைகளையும் செய்து கொள்ளுதற்கும், சிங்கம், புலி, கரடி, குதிரை, குரங்கு முதலியவற்றைத் தாம்வேண்டிய விளையாட்டுக்களைப் பயிற்றுதற்கும் அடித்தல் முதலாய ஒறுப்பினைச் செய்துவருதல் காணகூடு.

பிரம்பினை எடுக்கில் = (அம்மாணவகர்தாம் படிக்கவில்லையே என்று அவர்களைக் கண்டிக்கு முகத்தாலேனும் திருத்தற்பொருட்டுப்) பிரம்பினைக் கைக்கொண்டால்;

பிறர் = (இதுபோது கல்வியை வளர்க்கும் கலாசாலை அதிபர் முதலிய) மற்றையோர்;

மேனாட்டின் வழக்கத்தை இவர்களும் படைத்திட்டார் ஆதலின் அவரைப்போலவே இவரையும் 'பிறரே' என்று கூறியடக்கிவிட்டார்.

வரம்பு அகல் ஏதம் மல்கும் என்குநர் = (ஆசானுக்கு) எல்லை கடந்த குற்றங்கள் பெருகு மென்று கூறுகின்றனா; (எனவே தண்டித்தலைத் தடுக்கின்றனர்; இனிச் செய்யும் வழிதான் யாதுளது என்று வருந்தினன் அவ்வாசிரியன் என்க.)

கட்டளையின் மிகுதிதோன்ற "எடுக்கில்" என்றார். மறைத்துவைத்தல் வழக்காறு என்று அறிவித்தற்குமாம்.

## (46) பேதைதுயர் களைதல் பிழையா மென்றல்.

வான்பயிர் முதலா வளர்வழிப் புன்னிக்
கழுத்திடைப் பிணித்த கயிற்றினது கடையைப்
பலாவடிப் பிணீஇப் பைம்புல் லார
விடுத்த வெருமை யாயிடை வெம்முட்
செடியொடு சுற்றுபு சிக்கித் திகைதிற
னோக்கிக் காக்குமா றெய்தி நிகழ்த்துவோ
னுடன்படு துயரே யுறுவர்
மடவர் படுதுயர் மாற்றுவந் தோரே.

---

(இ-ள்.) வான் பயிர் முதலா = பெருமை பொருந்திய நெற்பயிர் முதலாக உள்ளனவற்றின்;

வான் பெய்தாலன்றித் தான் வளர்ச்சியடையாத பயிர் என்று கூறுப. "வானம்பார்த்துழவுசெய்யு மாக்கடயெ ரினுங்கொடிய வறுமைகொண்டேம்" என்னுங் காட்டினையும் அவர் காட்டுப.

வளர்வு அழிப்பு உன்னி = வளர்ச்சியை அழித்தல் கருதி;

கழுத்து இடை பிணித்த கயிற்றினது கடையை = கழுத்தினிடமாகக் கட்டிய கயிற்றினது முடிப்பாகத்தை;

பலா அடி பிணீஇ = பலாமரத்தின் அடிப்பாகத்திலே கட்டி;

பைம் புல் ஆர விடுத்த எருமை = (அப்பலாமரத்தின் பக்கலிலே நிறைந்துள்ள) பசிய புல்லை மேயும்படி விடப்பட்ட எருமையானது;

பைம் எனறனமயால் மழைபெய்துவிட்ட பக்கத்து நாட்கள் என்பதும் எருமைக்கு உண்ணும் இனிமையது என்பதும் குறிக்கப்பட்டன. ஆர்தல்—நிறைதல், அநுபவித்தல், புசித்தல் என்னும் பலபொருட்குரிய கிளவி ஈண்டு (ப்புல்லின் நிறைவையும், உண்ணும் சுவையையும், கருதி) மேய்ந்து வயிற்றை நிரப்பிக்கொள்ளுதலைக் குறிக்கின்றது.

ஆயிடை = அவ்விடத்திலேயுள்ள;

வெம் முள் செடியொடு சுற்றுபு சிக்கி திகை திறன் நோக்கி = கொடிய முட்கள் நிறைந்த செடிகளிலே சிக்குண்டு மேயவியலாது திகைத்து நிற்கும் வகையை இரககமேலீட்டாற்பார்த்து;

புல்லைமாத்திரம் மேயும் இயல்புடையதன்றி உணவிற்கு உபகாரமாகும் பயிரையும் அழிக்குமென்பார "வான்பயிர் முதலா வளர்வழிப்பு" என்றும், பலகாலும் பலப்பல பயிரையும் அழித்தமை தோன்ற "உன்னி" என்றும் கூறினர். இவற்றால அவ்வெருமையைக் கயிற்றால் யாத்துவிடவேண்டுமென்ற எண்ணம் முன்னிருக்கவில்லையென்பது புலப்படுத்தப்பட்டது. இனி முன்னர் இருந்தமாடு புல்லைமட்டும் மேய்ந்துவந்தமையானன்றே இதனையும் அவ்வாறே மேய்ந்துவர விடுத்து விடுத்து வந்தமையால் வளர்பயிர்தம் வளர்ச்சியும் அழிவதாயிற்று. அது கருதியன்றே அதனைக் கயிற்றிடைப் பிணித்து மேயவிடுத்தான் என்க. இக்கருத்தை "வளர் வழிப் புன்னி" என்பதும், "விடுத்த" என்பதும் வலியுறுத்தாநிற்கும். இதனைப் புலப்படுத்த வேண்டியே "பிணீஇ" என்றளபெடுத்தது. வான்பயிர் இல்லாத இடத்தும் பைம்புல்லிருந்தும் அப்புல்லை விரும்பாமல் பயிரையே விரும்பி அழித்துவந்தது என அதன் கொடுமை விளக்கப் பட்டது. இதுகருதியே "பைம்புல்" எனறு விசேடித்தார். அதனை அடித்தற்கும் மனந்துணிகிலன் என்பது போதர "உன்னி" என்று கூறப்பட்டது. எருமை தன்னிஷ்டப்படி மேய்ந்

னால் அதற்கு நன்மையாகும்; அதுவே பயிரை வளரவொட்டாமல் அழிக்கின்றது; என்செய்யலாம்; கயிற்றிடை யாத்ததுதான் 'விடுதல் வேண்டும் என்பனவே அவனது எண்ணம் என்க. அவ்வெருமை அசைதலுகளுள் பலமுட்களும் அதனை வருத்துதலின் அசையாமல் வாளாநின்றது என்க. இதனைத் "திகைதிறன்" என்றது வலியுறுத்தும். இத்தகைய வெம்முட்செடிகள் இருத்தல்பற்றி அதனை யாத்தது மேய விடுதற்கு ஆதியில் ஒருப்படாமல வாளா விடுத்தவர்களென என்க. இதுபோனப் பலபொருள்களைச் சில சொற்களில் அடக்கி அழகுற விளங்கவைத்தமை கவனித்தற் பாலது.

காக்குமாறு எய்தி நிகழ்த்திஞேன் = அச்சிக்கலினின்று அவ்வெருமையைக் காக்கும் பொருட்டு ஆண்டுசென்று அதனை யாத்திருக்கின்ற கயிற்றுச்சிக்கல்களை நீக்குந்தொழிலை நிகழ்த்துபவனுறன்;

உடல் படு துயரே உறுவர் = உடலம்படுகின்ற துன்பத்தினையே அடைவர்; (அவர்தாம் யாரோவெனில்?)

அவவெருமை சிக்கில் நின்று விரைவிலே வெளிவருதற்பொருட்டுக் கூத்தாடி இழுக்குங் காரணத்தால் அவனது உடலைப் பக்கங்களிலிருந்த முட்செடிகள் சுற்றித் துன்பப்படுத்தின வென்க. மனத்திலே துனபமில்லை யென்பார் "உடல்படு துயரே" என்றூர். உரியோன் எனச் சிறப்பித்துக் கூறுமல் "நிகழ்த்துவோன்" எனப் பொதுப்படக் கூறினமையால் அவவெருமைக் குரியோனையும் பிறனையும் குறிக்கும். அவவாறு கூறியது சீவப்பிராணிகள் துன்பப் படும்போது கணடோர் யாவரேனும் அவற்றை விலக்கிவிட வேண்டியது கடனுகலின் என்க. பிறனுக்கேற்ப முற்கூறியவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் எடுத்து விரித்துரைத்துக்கொள்க. உரியோன் அன்புடையவன், பிறன் அருளுடையவன் எனினும் ஒக்கும். அன்புடையானுக்கு மனமும, அருளுடையானுக்கு உடலும் மனமும் வருந்தா எனத் தேர்ந்து அறிக. இனி வஞ்சமுதலியவில்லாத மடவோர்க்கே உதவி செய்தல் தீமை பயக்குமெனில் வஞ்சமுதலிய பயிலும் பிறர்க்குதவிசெய்தல அறவே இறுதி பயக்கும் என்பது தானே பெறப்பட்டது. நீர்நிலையில் அமிழ்ந்துதல் முதலிய உடையாரைச் சென்றெடுத்தலும் உயிர்க்கிறுதி பயக்கும் என்பது குறிப்பு. அறியாமையினுண்மை கருதி மடவோரை எருமைக்கு ஒப்பிட்டார், என்னை? "விலஙகொடு மக்க ளனைய ரிலஙகுநூல்—கற்றுரோ டேனை யவா" என்றூராதலின்.

மடவர் படு துயர் மாற்றவந்தோர் = அறிவில்லா அடைகின்ற துன்பத்தை அகற்றவந்த அறிஞர்;

மடவோரை எருமையொடு பொருத்தி மற்ருேரை வேண்டியவாறே ஏற்பவற்ருேடு பொருத்தி விரித்துக்கொள்க.

(47) ஓதிய முறையி னுறுதுணை புரிந்து
தீதினை யகற்றல் செவ்விதா மென்றல்.

பிறர்மனன் காண்பான் பெரிதுவிழை மனனே
நிறைவுடைச் சிலசொ னீர்மைகொடு கேண்மைநீ
பகையமை யொருவனைப் பார்த்திடி னவற்குத்
தன்மறை புலப்படாத் தகையெவன் புரிகுந
னண்பமை நெறியிடை யார்ந்து நட்டபின்னு
நடைபயின்று தேர்ந்து நன்குசிற வானே
லின்பமு முண்மையு மியாண்டெய்துங் கொல்லோ.

ஆதலின்,
எத்துணை யெவ்வழி யெவனட் பேற்று
மத்துணை யவ்வழி யவனுங் கூண்மை
தவற்றுவழி யொரீஇத் தானறிந் தினிதுகு
மிவற்று னட்டுநட் டெவற்றையும் பேணுதி
நட்டற் கமைந்திடி னுடுமாழுக் காறவா
வெருளியின் னுசசொல வெறுப்பன வொறுக்கத்
தகுபடை யாகு மன்புகைக் கொண்டு
பொறுமையிற் றிருந்து கறைபோக நின்சொ
லெல்லை கிடைபெ யிருமைதரு மறைகுடி
மாக்குற வாண்டு வளர்கருதி
தொல்லையோ ருணர்த்திய முறையுறற் றிறனே.

---

(இ—ள்.) பிறர் மனன் காண்பான் பெரிது விழை மனனே = பிறர்மனத்தமைந்து கிடப்பனவற்றைக் கண்டுகொள்ளும்பொருட்டு மிகவும் ஆசிக்கின்ற நெஞ்சமே;

மெய்யுறவு பூண்ட சுற்றத்தார் சிநேகிதர் முதலியோரின் மனநிலை அறிதற்பாலதாதலின் "பிறர்" என்றமையால் அன்னோரை ஒழித்த ஏனைப் பொலி நட்புடைத்தமர், பகைஞர் முதலியோர் குறிக்கப்பட்டனர் என்க.

பகைஞர் யாது கருதுகின்றனர் என்றறிந்துகோடற்கு அவாவுதலும், தங்கருததுக்களை அன்னோர் அறியாவண்ணம் மறைத்தற்கு முயல்வதூம் உலகத்தியற்கையாகும். குறிப்புமொழி முதலியனவைத்து வழங்குதலும் மறைப்புக் கருதியே என்க.

நிறைவு உடை சில சொல் நீர்மை கொடு கேண்மதி = உண்மை நிறைதலையுடைய சில வாகிய சொற்களைக் கேட்டற்குரிய தன்மையைக் கொண்டு கேட்பாயாக;

சத்துள்ள என்பார் "நிறைவுடை" என்றும், நீண்டு கேட்டலில் வெறுப்புண்டாகுமாதலின் சொல்வனவும் சிலவே கேட்பதும் எளிது என்பது தோன்றச் "சிலசொல்" என்றும், சிந்தைகொண்டு கேளாவிடிற் பயனில்லை ஆதலின் "நீர்மைகொடு" என்றும் கூறினார். "மதி" முன்னிலை யசைச்சொல். "கேண்மோ" என்றும் பாடமாம்.

பகை அமை ஒருவனை பார்த்திடின் அவற்கு தன் மறை புலப்படா தகை எவன் புரிகுநன் = பகைபொருந்திய ஒருவனைக் காண்பானாயின் அவன்றனக்குத தனது மாமங்களை (இரகசியங்களை) வெளிவிடாத் தகுதியை எக்காரணம்பற்றிச செய்துகொள்ள விரும்புகின்றான்;

ஆகலின் நண்பின் தகுதிக்கேற்ப மெய்மையும், பகையின் தகுதிக்கேற்பப் பொய்மையும் புலப்படும் என்க. பகைஞன் மர்மங்களை அவன் காணாது இயன்றவரையில் மறைந்துகொண்டறிதற்கே முயற்சிசெய்வான் என்பது போதரப் "பார்த்திடின" என்றார்.

நண்பு அமை நெறி இடை ஆர்ந்து = சிநேகம் அமைந்த வழியிடத்திலே பொருந்தி;

பூர்த்திபெற வேண்டுமென்பார் "ஆர்ந்து" என்றார்.

நட்டல் என்னும் நடை பயின்று தேர்ந்து நன்கு சிறவானேல் = சிநேகித்தல் என்னும் ஒழுக்கத்தைப் பழகிவந்து அப்பழக்கத்திலே தேர்ச்சியுற்று நன்றாகச் சிறப்படையானாயின்;

சிநேகத்தின் பெருமையும் அதனை அநுட்டிக்கும் அருமையுந்தோன்ற "நண்பு" என்றொழியாது "நட்டல்" எனப் பின்னருங் கூறினார். உலகத்தவா சிநேகஞ்செய்துவரும் வழியிலே தாமும் அவரொடு பழகிவருதலினால் ஆங்காங்கு அமைந்து கிடக்கும் பலாபலன்களை அறிந்துவரல் வேண்டுமென்பது போதர "நண்பமை நெறியிடை யார்ந்து" என்றும், (இவ்வாறு

பழகிவருங்காலத்துத் தீயோர் குழுவிடைப் புகுதல் கூடாது என்பதை வற்புறுத்தவே "நண்பமை நெறியிடை" என்றனர்.) அப்பழகிவரும் பழக்கச் சிறப்பானே தமக்கியைந்த ஒருவரோடு நேசித்தல் வேண்டும் என்பது போதர "நட்டல்" என்றும், அந்நட்டலினானே ஒழுக்க விசேடம் பெறுதல் வேண்டும் என்பார் "நடை" என்றும், அந்நடையும் பன்னாள் முயற்சியான் எய்தப்பெறுவ தொன்றென்பார் "பயின்று" என்றும், இப்பயிற்சிவயத்தானே நண்பிலே தேர்ந்தவராவர் என்பார் "தேர்ந்து" என்றும், இத்தேர்ச்சியே நன்மையமைந்த சிறப்பினைத் தருமென்பார் "நன்குசிறவானேல்" என்றும் கூறினார். சிநேகம் அதிகப்பட அதிகப்பட உண்மையும் இன்பமும் அதிகப்பட்டுவரும். தத்தம் நெஞ்சினைபோலத் தன்னை நினைந்துவரப் பழகிவருதல் வேண்டுமென்பது கருத்து.

[இன்பமு முண்மையு மியாண்டெய்தும்] உண்மையும் இன்பமும் யாண்டு எய்தும்= உண்மைப்புலப்பாடும் (அதனாலடையப்பெறும்) இன்பப்பேறும் எவ்விடத்து அடைதல் கூடும்;

எ துணை எ உழி எவன் நட்பு எற்றும்=எவ்வளவு எப்பொருளிடத்து எவன் நட்பினை எற்றுவானோ;

அ துணை அ உழி அவன் ஆங்கு உண்மை தவறு வழி ஒரீஇ தான் அறிந்து இனிக்கும்= அவ்வளவு அப்பொருளிடத்தே அந்நட்டவன் உள்ள உண்மையைக் கெட்டவழியினின்று நீங்கித் தானுணர்ந்து இன்புறுவான்;

"மெய்ப்பொருள் காண்ப தறிவு" எனவும், "எவ்வ துறைவ துலக முலகத்தோ–டவ்வ துறைவ தறிவு" எனவும் குறளிற் கூறப்பட்டன.

இவற்றால்=இக்கூறிய காரணங்களானே;

[நட்டுநட் டெவற்றையும் பேணுதி] எவற்றையும் நட்டு நட்டு பேணுதி=எல்லாவற்றையும் சிநேகித்துச் சிநேகித்து விரும்பி வருவாயாக;

துன்பமும் வெறுக்கத்தக்க பிற ஏதுக்களும் அன்னபிற எவையாயினும் நிகழப்பெறினும் விடாமல் நட்டல் வேண்டுமென்பார் "நட்டு நட்டு" என்றார். "செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டோர்–மறுத்துஞ் சிறைசெய்வர் நீர்நசை வாழ்நர்–வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே–தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு" என்பது நாலடி. (செறுக்குந்தோறும்= அடைக்குந்தோறும்.) உயிர் உள்ளன இல்லன என்றுதல், உயர்திணை அஃறிணை யென்றுதல் வேற்றுமை யெண்ணாமல் நேசித்துவரல் வேணடுமென்பார "எவற்றையும் பேணுதி" என்றார். அங்ஙனம் செய்வார்க்கே கவித்துவ சத்தி அமையுமென்பது பெரியோர் துணிபு. "வெறித்த விளமானகாள் மென்மயில்காளிந்த–நெறிக்க ணடிதாழி வாழ்வீர்" எனவும், "வாவுமிள மான்காள் மயில்காள் மடப்பிடிகாள்–கூவுங் கரிய குயில்காள்மென் புள்ளினங்காள் ** வழியெனக்குக் காட்டீரோ" எனவும், "பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்–கானலே வேலைக் கழிக்குருகே * * * * * சொல்லீரெனக்கு" எனவும், "போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி–நாவாய் குழற நடுங்குறுவாய்–தீவாய்–அரவகற்று மென்போல வார்கலியே மாதை–யிரவகற்றி வந்தாய்கொ லின்று" எனவும், "முல்லையும் பூத்தியோ" எனவும், "கோயிலு மந்தப் புரமுங் கொடிநுடங்கு–வாயிலு நின்று மயங்கியதே" எனவும் விலங்குகளைப் புட்களைக் கானலைக் கடலைக் கொடியினைப் பிறவற்றைக் கூவிவிளித்து உரையாடிய கவிஞர்தங் கூற்றெல்லாம் கணித்தற்பாலன.

நட்டற்கு அமைந்திடின்=(மனனே யானுரைத்த சில சொற்களைக் கேட்டுக்கொண்டு அக்கொண்டவாறே) நேசித்தற்குப் பொருந்துவையேல்;

நாடும் அழுக்காறு அவா வெகுளி இனனாச்சொல் வெறுப்பன ஒறுக்க=பொருந்துகின்ற பொறாமை, ஆசை, ஆறுச்சினம், துன்பந்தரத்தக்க கெட்டசொல் என்பனவாகிய வெறுக்கத் தக்கவைகளை ஒறுத்தழித்தற்கு;

நல்லமைதியோடு இருக்குங்காலத்திலே இவையெல்லாம் வந்து புகுந்து அந்நிலையைக் கெடுத்துவிடும் என்பது தோன்ற "நாடும்" என்ற அடை புணர்க்கப்பட்டது. இவற்றையெல்

லாம் உன்னிடத்தில் வைத்திருப்பாயானால் யான் கூறிய உண்மையை நீ பெறமாட்டாய் என்று குறிப்பித்தார்.

தகு படை ஆகும் அன்பு கைக்கொண்டு = தக்க படைக்கருவியாகிய அன்பினைக் கைக்கொண்டு;

பொறுமை வீற்றிருந்து = பொறுமை யென்ற இடத்தைவிட்டு விலகாமல் அதிலேயே வீற்றிருந்துகொண்டு;

கறை போக்கு இன் சொல் எல்லைக்கு இடையே = குற்றத்தைப் போக்குகின்ற இன்சொல்லாகிய எல்லைக்குளளே;

இருமை தரும் அறம் குடி = இம்மை மறுமைகளை ஒருங்கே தரவல்ல அறமாகிய குடியை;

மல்கு உற ஆண்டு வளர்க்குதி = தழைத்தல் பொருந்தும்படி ஆளுதலைச்செய்து (அக்குடியை அழியவிடாமல்) வளர்த்துவருவாயாக;

தொல்லோர் உணர்த்திய துறையும் மற்று இதுவே = பண்டைப் பெரியோர் நமக்குணர்த்தி வந்த முறைமையும் இதுவேயாகும்;

* "தேங்குவிண் போகமுஞ் சிறந்த முத்தியு—மீங்குறு மாக்கமு மினிது நல்கலா- லோங்கிய வறத்தினை யுளமுன் மூன்றினும்—பாங்குற நித்தலும் பரிந்து செய்தியால்" என்பது விநாயக புராணம்.

---

## (48) பொருளெனும் பொய்யா விளக்கினை யுடையோ ரிருள்கடிந் தெண்ணியாங் கெய்துவ ரென்றல்.

"பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு மெண்ணிய தேயத்துச் சென்று". (என்பது குறள்.)

---

வளர்பொரு ளடையுநர் வாழ்க்கை மழையிடை
கண்பொத் தன்ன காரிருள் கடப்போர்க்குச்
செயிரைக் கண்ட ஒளிவிளக் கற்றே
செய்பொரு ளுடையோர் செய்கையத் தீவினைக்
கொரிஇ வெளிப் படுநர்த முண்மை
மரீஇயற் றென்று வகுத்துரைத் தனரே.

---

(இ-ள்.) வளர் பொருள் அடையுநர் வாழ்க்கை = வளர்ச்சி பெற்றுவருகின்ற பொருளை அடைபவாதம வாழ்க்கையானது;

பழியஞ்சிப் பாத்துண்ணும் பொருள் என்பது தோன்ற "வளர்பொருள்" எனறார். எடுக்குந்தோறுங் குறைவுறாது நிறைவுபெற்று வரும்பொருள் என்பது கருத்து. பெறுங்காற் செப்பமுடையவராய்ப் பழியஞ்சி ஈட்டிப் பகுத்துண்ணும் வாழ்க்கை என்பது ஈண்டுப் போதரக் கிடந்தது.

மழை இடை கண் பொத்து அன்ன கார்இருள் கடப்போர்க்கு = மழைபெய்யும் பொழுது கண்ணைப்பொத்தினாலொத்த கரிய இருள் நிறைந்த வழியைக் கடந்துசெல்வோர்க்கு;

இருட்டில் நடப்போர் கண்ட விளக்கு என்பதுவே இன்றியமையாத உவமையாதலின் மழையிடைக் கடப்போர் என்றிலம். கார் இருள், கண்பொத்தன்ன இருள், மழை இடை இருள் எனக் கூட்டிப் பொருள்பண்ணுக. ["இருள்குழைத் திறுக வியற்றிய சுவரின்" என்று இந்நூலாசிரியர் கூறிய மற்றொரு பகுதியும் ஈண்டுக் கருதற் பாலது.] வழிச்செல்கைக்கு அவை யெல்லாம் இடையூறு செய்வனவாகும் என்றபடி. "கண்பொத் தன்ன விருள்" என்று கூறிப் படிப்பார்க்கு அவ்விருளின் றன்மையை நன்கு புலப்பட வைத்தார் என்க.

சேய் இடை கண்ட தீ விளக்கு அற்று = தூரத்திலே அவர்கண்ட ஒளி விளக்கை ஒத்து விளங்கும் தன்மையுடையது;

மழை பொழியுங் காரிருளிலே வேற்றிடத்துச் செல்வோர் வழிதெரியாமல் அலைந்துழலும் போழ்து சேய்மையிலே அவர்கண்ட விளக்கு அவர்க்கு இனிமைசெய்து வருதல் போலப் பாவம் நிறைந்த உலகத்திலே அறிவின்மையாகிய இருட்டிற் றயங்கிநின்று தாம் செல்லும் வீட்டு நெறியை அறியாது இடர்ப்படுவார்க்குப் பழியஞ்சிப் பாத்துண்டுவருதல் என்னும் ஒளி விளக்கு தோன்றப்பெறின் நலன் புரியும் என்க. நிழலின் இனிய அருமையை வெய்யிலின் கடிய கொடுமை காட்டுமாறு புண்ணிய கருமங்களின் நலத்தைப் பாவகாமங்களின் தீமை காட்டும். அறவழியே ஈட்டி அறஞ்செய்தலின் அருமைப்பாடுதோன்றச் "சேயிடைக் கண்ட தீ விளக்கு" என்றார். தம்மொடு விளக்கினைக் கொண்டு செல்வார்க்கு அவ்விடர் தோன்றப்பெறாத வாறேபோல இயற்கையிலே அறமுடையார்க்கு இவ்வுலகில் ஒருவகைக் கேடும் உண்டாவதில்லை. உலகவாழ்க்கையைக் கடத்தற்குரிய பொருளை அறவழியில் ஈட்டித் தருமஞ்செய்தார்க்கே இன்பமும் வீடும் உரியன என்றும், அவ்வாறு புரியாதார்க்குத் துன்பமும் நரகும் உரியன என்றும் கூறினாராயிற்று.

தேய் பொருள் உடையோர் செய்கை = நாள் தோறும் குறைந்து வருகின்ற பொருளுடையவர்தம் வாழ்க்கை;

அறமுறை கோடி ஈட்டப்பட்டபொருள் என்பது தோன்றத் "தேய்பொருள்" என்றும், அவரது வாழ்க்கையும் ஒருவாழ்க்கையோ என்பது தோன்றச் "செய்கை" என்றும் கூறினர்.

அ தீ விளக்கு = முன்னர்க்கூறப்பட்ட ஒளியுடைய விளக்கை;

ஓரீஇ வெளி புகுநர் தம் உண்மை மரீஇ அற்று என்னு = நீங்கி வெளிப்புறப்பட்டவர் தங்களுடைய தன்மையை ஒக்கும் அத்தன்மைத்து என்று;

வகுத்து உரைத்தனர் = வகைப்படுத்தி ஆன்றோர் உரைத்தருளினர்.

---

## (49) விழைபொருள் பெறினதை வெறுப்பது மியல்பெனல்.

மழைவேட் டெய்தினோர் மழையையும் வெறுப்பர்
கோடைவேட் டோரு மய்யா லாவர்
பொருட்பா லோரசர் பொருந்திய போற்றார்
பெறுதன பேணிப் பெரும்பே துறுவர்
பெற்றன வுவர்த்தலும் பெறுதன வேட்டலும்
கற்றறி வில்லார்க் கியல்பெனி னுங்கவர்
பெற்றநன் மக்களைப் பிரித்தகற் றிலரே
யுற்றநற் பொருள்களை யொறுத்தொதுக் கிலரே
யற்றகன் மிடியைமீண் டழைத்துமகிழ் கிலரே
கற்றிலாப் பனுவலைக் கற்கமுயல் கிலரே.

பொன்னே யிவர்தம் மியற்கை
தன்னே ரில்லாத் தமிழ்நிலத் தவரே.

---

(இ—ள்.) மழை வேட்டு எய்தினோர் மழையையும் வெறுப்பர் = (கோடைக்காலத்து வெப்பத்தால வருந்தும் பொழுது) மழையை விரும்பி அது வரப்பெற்றோ (குளிர்மிக்கு வாட்டுங்கால் அக்குளிரைத் தரும் மழையானது தம்மாலேயே விரும்பிப் பெறப்பட்டதென்று எண்ணாமல்) அதனை வெறுப்பார்; (எனவே பழய கோடையை அடைய விரும்புவர் என்க.)

கோடை வேட்டோரும் அ பால் ஆவர் = வேனிற் காலத்தை விரும்பினோரும் (மழை வேட்டெய்திய பின்னர் அதனை வெறுத்திட்ட) அப்பகுதியினரை ஒத்தவராவர்;

அஃதாவது விரும்பிய கோடையை எய்திய அவர் பின்னரும் அதனை வெறுப்பர் என்றல். மனைவி முதலியவர்களோடு வெகுளியெழுந்தால் கடவுளை இம்மனைப் பந்தத்தைவிட்டு நீக்கத் திருவருள் கொள்ளாயோ என்று தவங்கிடந்தார் தவப்பயனை எய்தியபின்னர் மனைவி முதலியவர்கள் இல்லாது எவ்வளவு வருத்தமுறுகின்றேன் என்று முன்னொடு பின் முரணக் கடவுளை வேண்டிக்கொள்ளுதல் என்னும் இதனை முதலாகவுடையவற்றையே ஈண்டுக் குறிப்பித்தார் இந்நூலாசிரியர் என்க.

பொருள் பால் ஓரார் = உலகத்துப் பொருள்களின் பகுதிகளை உணர்ந்தறியமாட்டார்;

என்றது ஒவ்வொரு பொருளின் தன்மையை உள்ளவாறு உணர்ந்துகொண்டால் அறியாமை நீங்கிப் பெற்றவற்றை நயந்து கொண்டு பெறாதனவற்றுக்கு இரங்காமல் அமைவர் என்க.

பெறாதன பேணி பெரும் பேது உறுவர் = பெறாதனவற்றை விரும்பி (அவை கிடைக்கப் பெறாமையானே) பெரியதொரு மயக்கத்தை அடைவர்;

பொருந்தியுள்ளனவற்றை நயந்து பேணி அவற்றொடு மனமமைந்த மாதலே ஞானமாதலின் இங்ஙனம் கூறினர். "உடற்குள் வந்தெழு மொள்ளழல் போன்றுபின்—கிடைத்தி டாப்பொருண் மேற்கிளாந் தோடியே—நடக்கு மாசையை நண்ணு முவப்பினொ—டடக்கு மந்தண ரேயறிவாளரால்" என்பது பாகவதம்.

பெற்றன உவர்த்தலும் பெறாதன வேட்டலும் = (தாம்) பெற்றுக்கொண்டவற்றிலே வெறுப்புண்டாதலும் பெறக்கிடையாதவற்றில் விருப்புண்டாதலும்;

கற்று அறிவு இல்லார்க்கு இயல்பு எனின் = கல்வியைப் பயின்று (அப்பயிற்சிவழி) அறிவைப் பெறாதார்க்கே இயல்பாகுமென்று கூறுவிரேல்;

ஆங்கு அவர் = அவ்வியற்கையுடையார்;

பெற்ற நல் மக்களை பிரித்து அகற்றிலர் = தாங்கள் பெற்றுவைத்திருக்கும் நல்லமக்களை (வெறுப்புநீஇ வேண்டாராய்த் தம்மில் நின்றும்) வேறாக்கி அகற்றிவிடுகின்றாரில்லை;

தீய மக்களை ஒரோவழித் தூரத்திவிடுதற்கு உடம்படுவராதலின் "நன்மக்கள்" என்றார். பெற்றவற்றில் உவாப்புண்டாதல் இயற்கையெனக் கோடலின் பெற்றநன்மக்கள்பால் அவ்வியற்கை நிகழாமற் பிறழ்வது என்னை யென்றபடி.

உற்ற நல் பொருள்களை ஒறுத்து ஒதுக்கிலர் = (தம்பால்வந்து) அடைந்த நன்மையாகிய செல்வங்களை வெறுத்து ஒதுக்கிவிடுகின்றாரில்லை;

அற்று அகல் மிடியை மீண்டு அழைத்து மகிழ்கிலர் = (செல்வச் சேர்க்கையால்) மடிந்து அகன்றுபோன வறுமையைத் திரும்பியம் (தம்மிடத்து முன்புபோலவே) வரவழைத்து மகிழ்ச்சியுறுகின்றாருமில்லை;

இல்லாதனவற்றை விரும்புதல் இயற்கையாமெனில் தம்மிடமில்லாத வறுமை வந்து பொருந்துமாறு விழையாமை எவன்கொல் என்றபடி.

கற்றிலா பனுவலை கற்க முயல்கிலர் = தாம் கற்றில்லாத (ஆரிய) சாத்திரங்களைக் கற்கவும் முயல்கின்றாரில்லை;

இல்லாத கல்வியைக் கொள்ள விரும்பாமை இல்லாததனை வேட்கும் இயற்கைக்கு மாறாகும் என்க.

[என்னே யிவர்தம் மியற்கை—தன்னே ரில்லாத் தமிழ்நில தவரோ] தன்நேர் இல்லா தமிழ் நிலத்தவரோ இவர்தம் இயற்கை என்னே = தன்னொப்பாரில்லாத தமிழ்நாட்டவரோ இக் கூறப்பட்டவர் ஆங்கன சுபாவந்தான் எத்தகைத்து; (கூழ்மையின் என்றபடி.)

---

(50) முந்தைநிலை யறியா வந்தணன் மகன்போற்
செந்தமிழ் வாணர்தந் திறன்றெரி கிலரேனல்.

தொடுதோன் முதல துன்னிழி சனர்வாழ்
குடில்வாய் நின்று கூறிய வாற்றிப்
படுசோ றுண்டுவளர் பார்ப்பனச் சிறுவன்
முகந்தரு குறிகொடு முந்தைநிலை தெளிகாஞ்
சநங்குழை தந்தை யந்தணன் கடுப்ப
விற்றறைந்தோன் றியலுமிக் தமிழர்முன் னிலைதெரி
பெற்றிதரு பண்டைப் பெருநூல
கற்றறிந் தோர்மனங் கலங்கியழி குநவே.

---

(இ-ள்.) தொடு தோல் முதல = (காலில்) அணிகின்ற செருப்பு முதலியவற்றை;

கல், முள் முதலியன பாதத்தை உறுத்தாது காத்தலின் இதனைப் பாதகவசம் என்றும் அரணமென்றுங் கூறுப. "மென்றோ லடிபுதை யரணம்" எனவருதல் காண்க. தொடுதோல் பலவகையின் அமைக்கப்படும். முழங்கால் முதல் பாதம் முழுவதையும் மறைத்தற்குத் தற்காலம் தொடுத்தணியும் அரணத்தைச் "சப்பாத்து" என்று வழங்குவர்.

துன் இழிசனர் வாழ் = தைக்கின்ற (உறைகாரரும் பறம்பருமாகிய) கீழ்மக்கள் வாழ்கின்ற;

பறம்பர்—செம்மார், சக்கிலியர். இத்தொழிலுடையார் இழிசனர் என்பதனைக் "கட்டி னிணக்கு மிழிசினன் கையது" என்னும் புறப்பாட்டாலுணர்க. இவரை ஆவுரித்துத் தின்னும் புலையரென்று இழித்துரைப்ப.

குடில் வாய் நின்று = குடிசையின் வாயிற்கண்ணே நின்று;

குடிலுட் புகுதற்கும் உரிமை பெற்றிலன் என்பார் "குடில்வாய் நின்று" என்று கூறினார்.

கூறிய ஆற்றி = செய்யென்று கூறிய பணிவிடைகளைத் தவறுபடாமற் செய்து;

இதனால் அவனைப் பலநாள் ஒறுத்தும், பட்டினிபோட்டும், அச்சுறுத்தியும் வந்தனர் என்பதும் பிறவும் பெறப்பட்டன. இதனைக் "கூறியவாற்றி" என்னும் சொற்போக்கே வலியுறுத்தாநிற்கும்.

படுசோறு உண்டு வளர் = கையிற் கிடைத்த சோற்றை (ச் சிதைவுபடுத்தாமலும், வேண்டேனென்று வெறுத்தொதுக்காமலும்) உண்டுவருகின்ற;

பார்ப்பனச் சிறுவன் = பிராமணச் சாதி இளையவன்றனது;

முகம் தரு குறி கொடு = முகமானது தந்த குறிப்பினைக்கொண்டு;

உரை முதலாயினவற்றால் அறிதற் கியலாதென்பார் ''முகந்தரு குறிகொடு'' என்றார். அவர்கள் ஏவியவற்றை மகிழ்ந்து செய்யாமலும் பிறவாறும் அவன் இருந்தல்பற்றியும் அந்தணர் தம் சாதிக்கு இயற்கையிலே அமைந்துள்ள முகத்தேசுபற்றியும் ஒரேயிரத்தமாதலின் ஒருவரை யொருவர் உள்ளன்போடு இயற்கையிலே பார்க்கும்படி நேரிட்டமைபற்றியும் ''முகந்தரு குறி'' என்றார் என்றலும் ஒன்று.

முந்தை நிலை தெளிந்து ஆங்கு அகம் குழை தந்தை அந்தணன் கடுப்ப = (அவனதுயர்ந்த) பழயநிலைமையை உய்த்தறிந்து மனம் வருந்துகின்ற (அவ்விளையோன்றன்) தகப்பனாகிய பிராமணனை ஒப்ப;

''முந்தைநிலை'' என்றது அந்தணர் குலத்திற் செல்வம்பெற்றிருந்த நிலைமையை. சாத்திர ஆராய்ச்சி செய்து பெருமை பெறுதற்கிசைந்த உயர்குலத்திற் பிறந்தும் இவ்வாறாயினனே என்று அவன் தந்தை வருந்தினான். அவவிளைஞன் தன்பொருட்டுத் தந்தை வருந்துகிறான் என்றதையும், தான் இன்னவன் என்றதையும் அறிந்திலன். தந்தைபடு துயரத்தைக் கண்டார் இத்தகைய இழிவுடைமகனை இவன் பெறுதற்கு எனனபாவம் செய்தனனோ என்று இகழுமுறை யாற்றெளிக. தற்காலத் தமிழரும் தங்கள் நிலைமையையும், தம்பொருட்டு மனமுருகும் பெரியார் துயரையும் அறிந்திலர் என்க. தனது மகனிலைமைக்கு வெளிப்படையாக இரங்குவது நாணமாதலின் ''அகங்குழை'' என்றார்.

இற்றை ஞான்று இயலும் = இக்காலத்திலே இயங்காநின்ற;

இ தமிழர் = (தமக்கியைந்த உடை, நாடை கல்வி மாண்பு ஆதியபலவற்றையும் இழக்கப் பெற்ற) இத்தமிழருடைய;

முன் நிலை தெரி = பூர்வீக நன்னிலைமையைத் தெரிவிக்கின்ற;

ஏனைச் சாதியாரைப் பார்க்கிலும் தலைசிறந்து பண்டைக்காலத்தில் இத்தமிழர் விளங்கியிருந்தனர் என்றபடி.

பெற்றி தரு = (தற்காலத் தமிழரைச் செவியறிவுறுத்தி நல்வழிக்குக் கொண்டுவரும்) பேற்றினை (த் தம்மைச் செவ்விதிற் கற்றுத் தேர்வார்க்கு) க் கொடுக்கின்ற;

''பெற்றியுமைதென'' என்னும் மணிமேகலைப்பகுதியும், ' பிணிப்பறுத்தோர்தம் பெற்றி யெய்தவும்'' என்னும் சிலப்பதிகாரப் பகுதியும் ''பெற்றி''என்பதற்குப் பேறு என்னும் பொருளுண்மையைப் புலப்படுத்தாநிற்கும். தமது முன்னோர் நிலைமையை நன்கறிதலே பிற்காத்தாராகிய தமிழர்க்குப் பெரும்பேறு ஆருமாதலின் அங்ஙனம் பொருளுரைக்கப்பட்டது. பெற்றி என்பதற்குத் தன்மை என்று பொருள்கூறினும் பொருந்தும்.

பண்டை பெரும் நூல் = முற்காலத்து முச்சங்க நூல்களையும் அவை போன்ற பிறநூல்களையும்;

பிற்காலத்தார் செயத நூல்களெல்லாம் பிறமொழிகளுக்குப் பெரும்பான்மை சிறப்பும், தமிழ்மொழிக்குப் பெரும்பான்மை சிறப்பின்மையும் தருவனவாகும். முற்காலததார் செய்த நூல்களோ பிறமொழிகளுககு ஏக்கத்தையும், தமிழ்மொழிககுச் சிறபபினையுந் தருவனவாதலிற் ''பண்டைப் பெருநூல்'' என்று சிறப்பிததுக்கூறினார். அந்நூல்களே தமிழரைப் பிறர்மதிககுஞ் சிறப்பினைத் தருகின்றனவென்க. சொல்லளவிற் சிறியனவாயினும் பொரு ளளவினும் மிகப்பெரியன என்றலும் பொருந்தும்.

கற்று அறிந்தோர் = (கசடறக்கற்றுக் கற்றவற்றை எடுத்துரைக்கு வற்றையும் நன்கு) பயன்றறிந்த (பெருமையுடைய) மூதறிவினர்;

கற்றன் மாத்திரையினின்று விட்டால் பயன்றாவாதலின் ''கற்றறிந்தோ ரினை ஒரு சொல்லாக்கியும் உரைப்ப.

மனம் கலங்கி அழிகுநர் = மனமானது கலங்கப் பெற்று (த்துயர் மிகுதியால்) அழிவினை யடைகின்றன

தம்மாற் றிருத்தற்கும் இயலாமையான் அங்ஙனம் அழிகுநர் என்க.

அந்தணர்தம் வருணத்திற்கும் தமிழ் நாட்டவாக்கும் வேண்டியவாறே ஒப்புக்கூறி விரித்துக்கொள்க. இழிசனா இல்லத்தை அடைந்து அடிமைபுகுந்த அவவிளைஞனை அந்தணனுக்கு தற்கு அவன் தந்தைமுதலியோரால் இயலாதவாறேபோல் இத்தமிழரையும் பண்டைய நிலைக்குக் கொண்டுவருதற்கும் அக்கற்றறிந்தோரால் இயலாது. திருநாளைப்போவார், திருப்பாணாழ்வார் முதலியோரை மேம்படுத்திய இறைவன் றிருவருளே இவரையும் மேம்படுத்தல் வேண்டும். தாழ்வடைந்த மைந்தனைக்கண்ட தந்தையாகிய அநதணன் வருந்திய வருத்தத்தைப் போலவே பண்டையநூல் கற்றறிந்த நம்மவரும நம்மைக்கண்டு வருத்தமெய்துவா. நம்மனோர் அனைவர்க்கும் இவ்வகைத்தாய இரக்கம் வரப்பெறவும், ஈடேறி உய்யவும் வேண்டி ற்பண்டைப் பெருநூல் கலைக் கசடறக் கற்றறிந்து ஒழுகுதல் வேண்டும் என்றபடி.

---

## (51) உயர்வு மிழிவு முண்மையி லின்றெனல.

ஏழ்வகை யிசையினக் கேற்பத் தனிதனி
வாழ்தலை தம்மு ளொன்றின்மற் றொன்றின்
சூழிசை துவைத்நுச சுவைதொலைச சிடீயுன்
யாழிற் கேட்போர் தம்மு ளொருவரை
விளவுழிப மிறரே விரைநதுவிடை யிறுக்குநர்
மூவ்வகைப் பண்பின் மூடமூக் கறிவின
ரெவ்வகை யொன்றினைச சுருக்கிமனத் திசைக்கவு
மிசைத்த வற்றை யினிதுவிரித் தியம்பவுங்
கூடு மிவற்றைக் குறிக்கொடு சான்றோர்
நாடும் பாவுரை நயந்தாய்ந்து நல்கின
ரிவ்வறி யாரே யியைந்தாங்கு சுருக்கி
யொவ்வவுளத் தூன்றவு மூழின்றி விரிக்கவுந்
தலைபபட்டு வீணே தம்பயன் கெடுககுநர்
நிலைப்பட்ட நெஞ்சி னிறைதமி ழியற்கைப்
புலவர் பாடல் பொருந்திசி னோரே
நிலவுநர் மற்றெவர் நிலைபெற் றனரே
தத்தமை மதித்துத் தருக்கொடு செருக்கிய
வெத்துணைச் செல்வ ரிருந்துமறைந் தனரே
யந்தண னொடிகை யதற்குமா றாகப
புலையன் கையை மருத்துவன் பொருத்திடி
னக்கை கொடுதனக் காவன செய்குவ
னிழிவுள் ளனவு மேற்றமுள் ளனவு
மாயபல் லுறுப்பு நமக்கமை வனபோற்
றூய முழுமுதற் றொல்லோன் றனக்கு
மேயின வுறுப்பென வியன்பார் முதல
வவ்வப் பொறிவழி யேற்பன வரித்தற்குச்
செவ்வை சேர்தலுந் திறனிசைத் தளித்தற்குத்

தெவ்வமை வெறுப்புச் சேர்தலு மனன்பெறு
மொருவற் சார்தற் குளவழிச் செல்கைக்
குவப்பும் பிறவழிக் குவர்ப்புமவ னென்று
மீண்டிய விவைபோ லெண்ணில செய்கை
யீண்டிண் டின்பமென் றிணைந்திணைந்
தாண்டாண் டலைந்தய ரவனிக் கியற்கையே.

---

(இ—ள்.) ஏழ் வகை இசை இனக்கு ஏற்ப தனி தனி வாழ் தலை தம் உள் = ஏழ்வகையாய சுர இனங்களுக்கு ஏற்குமாறு தனித்தனியாக வாழும் கட்டுக்கள் தம்முள்ளே;

ஏழ் வகை இசையாவன குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி. விளரி, தாரம் என்பனவாம். இவை முறையே மிடறு, நா, அண்ணம், சிரம், நெற்றி, நெஞ்சம், மூக்கு என்பனவற்றிருந்து தனித்தனி பிறக்கும். இவற்றின் எழுத்துக்கள் ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ; ஔஉ எனவும், ச,ரி,க,ம,ப,த,நி எனவுங் கூறுப. சட்சம பஞ்சமங்கள் ஒழிந்த ஏனையவற்றிற்கு இனமுண்மையின் "இனக்கு" என்றும், சதுச் சுருதிரிஷபமே சுத்தகாந்தாரமும், சட்சுருதிரிஷபமே சாதாரண காந்தாரமும், சதுச் சுருதி தைவதமே சுத்த நிஷாதமும், சட்சுருதி தைவதமே கைஷிக நிஷாதமும் ஆதலின் "ஏற்பத் தனித்தனி வாழ்தலை" என்றும் கூறினர். ஏற்ப வாழ்தலை தம்முள், தனித்தனி வாழ்தலை தம்முள் என்க. சுத்தரிஷபமும், அந்தர காந்தாரமும், சுத்தமத்திமம், பிரதிமத்திமம், காகலிநிஷாதம் என ஒருமுறையின்றித் தனித்தனி வீடுகளைப் பெற்றிருத்தலின் "தனித்தனி" என்றார். தலையென்பது ஸ்வரவீடுகளை. அவ்வொலி ஆண்டாண்டுத் தலைப்பட்டிருத்தலின் அங்ஙனம் ஒரு பெயர் கூறப்பட்டது. பிறவிடத்திலே தோன்றாது என்பதுபோதர "வாழ்" என்றார். கீழ் மேல் மத்திம தானங்களிலே வேறு பட்டிருத்தலின் "தனித்தனி" என்றாருமாம். இனி யாழின் நரம்புகளில் ஒன்று அற்றுப்போயின் கை வன்மையான் மற்றொரு நரம்பிடை வேண்டிய இசையை ஒருவாறு பிறப்பித்துக் கோடல் வழக்கமேயாயினும், பிறப்பித்த அவ்விசை வாழ்தற்கு இயற்கையின் அமைந்தவிடம் யாண்டையதென்பது தோன்ற "வாழ்" என்றாருமாம்.

ஒன்றில் மற்று ஒன்றின் சூழ் இசை துவைத்து = ஒரு சுரத்திற்குரிய தானத்திலே மற்றொரு தானத்திற்குரிய ஓசையை ஒலித்து;

இவ்வாறு ஒலித்தலை அபசுரவாத்திய மென்ப. இதனை வாசிப்பவர்க்கு மேன்மை கெட்டுவிடும்.

சுவை தொலைச்சிடும் புன் யாழின் = (யாழாசிரியன் தான் காட்டவந்த) சுவையைக் கெடுத்துவிடும் புல்லிய யாழைப் போல;

கேட்போர் தம் உள் = (பாடம்) கேட்பொர் தங்களுக்குள்ளே;

ஒருவரை வினவு உழி = ஒருவரை நோக்கி (இவ்வினவிற்கு விடையிறுக்க என்று) கேட்கும் பொழுது;

உழி—காலத்தின்கண் வந்தது.

பிறரே விரைந்து விடை இறுக்குநர் = வினவப்பெறாத மற்றைய மாணாக்கரே விரைந்து விடைகூறிவிடுகின்றனர்;

அறியாதானைக் குறிப்பால் அறிந்துகொண்டு விடைதரும்படி அவனைக் கேட்டல் ஆசிரியர்க்குச் சிறந்ததொரு கடமையாதலின் "ஒருவரை வினவுழி" என்றும், வினவப்பெற்றோன் விடையிறுக்குமுன் வினவப்பெறாதார் ஒருவரை மற்றொருவர் முந்தித் தாமே விடையிறுத்துவிடுதல் வேண்டுமென்னும் அவாமேலீட்டினனே எல்லாரும் ஒருங்கு கூடி உரத்து விடையிறுப்பர் என்பது போதர "மற்றொருவன் என்னாதுபிறரே என்றார்.

அபசாரங் கொண்ட யாழினையும், வினவப்பெறாதபொழுது விடையிறுக்கும் மாணவகரை யும் வெறுப்பவிரித்துரைத்துக் கொள்க. யாழ்திருத்துவோன் அவ யாழை எங்ஙனம் ஆயுதம் கொண்டு திருத்துவனோ அங்ஙனமே இம்மாணுக்கரையும் பிறப்பு முதலியவற்றைக் கொண்டு ஆசிரியன் திருத்துதல் வேண்டும் என்றாங்கு விரித்துரைத்துக் கொள்க. "வாவென வந்தாங் கிரு வென விருந்து —சொல்லெனச் சொல்லிப் போவெனப் போகி" என்ற நன்மாணக்கர் இயற் பகுதி ஈண்டாராயற்பாற்று.

[மூவகைப் பண்பின் மூடழுக் கறிவினர்] மூ வகை அழுக்கு பண்பின மூடு அறிவினர் =மூன்றுவகை மலமாகிய குணவேற்றுமையானே மறைக்கப் பெற்ற அறிவினையுடையார்;

மும்மலம் ஆணவம், மாயை, கன்மம் என்பன.

எ வகை ஒன்றினை சுருக்கி மனத்து இயைக்கவும்=எவ்வாறு (பரந்துபட்ட) ஒரு விஷயத் தைச் சுருக்கி மனசின்கண்ணே பொருத்தி வைத்துக்கொள்ளவும்;

இயைத்தவற்றை இனிது விரித்து இயம்பவும் கூடும்=(அவ்வாறு மனசின்கண்ணே பொருந்தியவற்றை (க் கேட்போர்க்கு) இனிதாமாறு விரித்துக் கூறவும் இயலும்; (இயலாதென்ற படி.)

பேரறிவாளர்க்கே அங்ஙனம் செய்தல் கூடும் என்க. நமமனோர் குறைவுபட அமைத்துக் கொண்டு மிகைபடக் கூறிவருவர். இதனால் உண்மை பெரிதும் மறைபட்டு உலகந்தடுமாறும். இதுகருதியே "நூலுரை போதகா சிரியர் மூவரு—முக்குண வசத்தான் முறைமறந் தனரே" என்றார் இலக்கணக்கொத்துடையாரும். கேட்பார்க்கின்ன பயப்பின் வெறுப்பாதலின் "இனிதுவிரித்து" என்றார.

[இவற்றைக் குறிக்கொடு சான்றோர்—நாடும் பாவுரை நயந்தாய்ந்து நல்கினர்] சான்றோர இவற்றை குறி கொ(ண்)டு நாடும் பா உரை நயந்து ஆய்ந்து நல்கினர்=அறிவாற்றல் நிறைந்த பெரியோர் ஈண்டுக் கூறப்பட்ட விஷயங்களைக் கணித்துக்கொண்டு நன்மை நாடுகின்ற பாக்களை யும், உரைகளையும் விரும்பி ஆராய்ந்து நமக்குதவியருளினர்;

அவற்றால் தீமை நாடாதாதலின் "நாடும்" என்றதற்கு இங்ஙனம் பொருளுரைத்தாம். குறிக்கொடு பாவுரைகளை இயற்றிக்கொள்ள எல்லாரையும் விட்டுவிட்டால் உலகந்தடுமாறுமென்று தாமாகவே ஆராய்ந்து அவற்றைச்செய்து நல்குவான் கணித்துக்கொண்டு அங்ஙனஞ் செய்தனர் என்றவாறு. இனிப் பாவலர் பொருளோடு ஒன்றுபடுதலே யோகவழியால் நாடி அமைக்கும் பா எனவும், அப்பாவை நாடி அறியும் உரை எனவும் பொருள் கூறினும் இழுக்காது. காட்டில் வாசஞ் செய்து வந்தமையானும், எழுதுதற்கு வேண்டிய காகிதம் அச்சுமுதலியவற்றிற்கு வேண் டிய கருவிகள் இன்மையானும் முன்னோர்கள் தங்கள் சாத்திரங்களைச் சுருங்கிய சூத்திரவடிவமாக எழுதிவந்தனர் என்றலும் அன்னபிறவும் பொருந்தாமையை உய்த்துணர்ந்து கொள்க. அறியா மையின் வசப்பட்ட நாம் அவவாறு சுருக்கவும், விரிக்கவும் இயலா எனபது கருதி அங்ஙனம் செய்துதவினர் என்க. அன்னோர் சுருக்கியதுவே சுருக்கம், விரித்ததுவே விரிவு என்றறிக.

இ அறியாரே=இக்காரண காரியங்களை அறியமாட்டாத இக்காலத்தினர்தாம்;

இயைந்தாங்கு சுருக்கி=விஷயங்களைத் தத்தமக்குப் பொருந்தியவாறே சுருக்கிக்கொண்டு;

ஒவ்வ உளத்து ஊன்றவும்=தமது புல்லிய நெஞ்சத்தின் கண்ணே (அழுந்திப் பொருந்து மாறு) பதிக்கவும்;

எனவே முன்னோர் சூத்திரங்கள் உள்ளத்திலே பதியுமாறு செய்யப்பட்டன என்பது பெற்றாம். 'ககார ஙகார முதனா வண்ணம்', 'சகார ஞகார மிடைநா வண்ணம்', டகார ணகார நுனிநா வண்ணம்", எனப்படிப்போர் மனசில் இனிதுபடிந்திடுமாறு ஆசிரியர் தொல்காப்பியனார் சூத்திரித்தமையே மேலதற்கொரு சான்றாகும். இந்நூலாசிரியர் மேற்கூறியவற்றைப் படி யெடுத்துமொழியும "கஙவும் சஞவும் டணவு முதலிடை—நுனிநா வண்ண முறமுறை வருமே" என்னும் நன்னூற் சூத்திரத்தைக் கீழ்வருமாறு கண்டித்தார் "இம்மூன்றனையும் ஒரு சூத்திர

மாக்கி ஓசை முதலிய நயங்களை நன்னூலார் பாழ்படுத்தினமை உரைத்தறிக.'' (செந்தமிழ்த் தொகுதி பதினெட்டிலே 103ம் பக்கத்தைப்பார்க்க.)

ஊழ் இன்றி விரிக்கவும் = முறைமையின்றி (ச் சுருக்கியவற்றை) விரித்துக் கூறவும்;

தலைப்பட்டு வீணே தம் பயன் கெடுக்குநர் = முற்பட்டு அவமே தாம் அடையும் பிரயோசனத்தைக் கெடுத்துவருகின்றனர்;

நிலை பட்ட செஞ்சின் நிறை தமிழ் இயற்கை புலவர் பாடல் பொருந்திசினோர் நிலவுநர் = (யோகமுதலாய வழிகளானே ஒரு) நிலைப்பட்ட மனதின்கண்ணே (சாபாநுக்கிரகமும், சொற்சுவை பொருட்சுவையும், இன்னோசையும், சுருங்கச்சொல்லல் முதலாய அழகுகளும் கொள்கைகளும், அநுபவயுதிகளும் அனைபிறவும்) நிறைந்த செந்தமிழியற்கை சிவணிய புலவர்தங்கள் பாடல்களைப் பொருந்தியவரே (இந்நிலவுலகத்தின்கண் யாண்டும் எப்பொழுதும் பொன்றாது) விளங்கிவருகின்றனர்;

புல்லரை நல்லரென்றுரையினும், நல்லரைப் புல்லரென்றுரையினும், எளியோரைச் செல்வரென்றுரையினும், செல்வரை எளியோரென்றுரையினும் சொல்லிய அவ்வண்ணமே உலகத்தாரால் மதிக்கப்படுவர் என்பது தோன்றப் ''புலவர் பாடல் பொருந்திசினோர்'' என்றார். தமிழ்நாடு உள்ளவரையினும் அவர்தம் பாடல்கள் இருந்துவரல் மரபாகலின் அங்ஙனங் கூறினருமாம். ''இசின்'' இறந்தகால இடைநிலை.

''இம்மூ வுலகி லிருள்கடியு மாய்கதிர்போ—லம்மூன்று முற்ற வறிதலாற்—றம்மி—னுறழா மயங்கி யுறழினு மென்றும்—பிறழா பெரியோர்வாய்ச் சொல்'' என்பது புறப்பொருள் வெண்பாமாலை. ''கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு—மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்—வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு—மற்றிவர் செய்யு முடம்பு'' என்பது நீதிநெறிவிளக்கம்.

மற்று எவர் நிலைபெற்றனர் = அவரல்லாத பிற எவர்தாம் உலகத்திலே விளங்கிவருகின்றனர்; (ஒருவரும் இல்லையென்றபடி.)

தம் தம்மை மதித்து தருக்கொடு செருக்கிய = (புலவர்தங்களை மதியாமல் அவமதித்துத்) தங்கள் தங்களையே நன்குமதித்துக் களிப்பினைக்கொண்டு மனோராச்சியஞ்செய்த;

தருக்கு—அகங்காரமுமாம். செல்வப்பெருக்கே செருக்குண்டாதற்கு விசேட காரணமாரும். ''சிறியரே மதிக்கு மிக்கச் செல்வம்வந் துற்ற ஞான்றே—வறியபுன் செருக்கு மூடிவாயுளார் மூக ராவர்—பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவா—குறிபெறு கண்ணுளாருங் குருடராய் முடிவ ரன்றே'' என்பது குசேலோபாக்கியானம்.

எ ஆனை செல்வர் இருந்து மறைந்தனரே = எத்துணைக் கணக்கான செல்வர்கள் (இவ்வுலகத்திலே) வாழ்ந்திருந்து (இருந்தவிடமுந் தெரியாமல்) மறைந்து போயினர்;

அவர்கள் இருந்தவிடமுந் தெரியவில்லை யென்பது போதர மாய்ந்தனரென்னாது ''மறைந்தனரா'' என்றார். ''மக்களிற் பிறவி யுள்ளு மன்னர்தம் மன்ன ராகித்—திசைகெலா மடிப்ப டுத்துந் திகிரியஞ் செல்வரேனு—மக்குலத் துடம்பு தோன்ற வன்றுதொட் டின்று காறு—மொக்கநின் றூர்கள் வையத் தொருவரு மில்லை யன்றே'' என்பது யசோதரகாவியம்; ''—இமையவ ரமையலர்க் கடந்த—தாங்குமா வண்கைச சக்கர மிக்குயர் பிறரும்—யாங்க ணூரவ ரூரொடு பேரெமக் குரையாய்'' என்பது சீவகசிந்தாமணி.

அந்தணன் ஒடி கை அதற்கு மாறு ஆக = பிராமணன் ஒடிந்துபோன தன கரத்திற்குப் பிரதியாக;

[புலையன் கையை மருத்துவன் பொருத்திடின்] மருத்துவன் புலையன் கையை பொருத்திடின் = ஒரு வயித்தியன் (ஆவுரித்துத் தின்றுழலும்)புலையன்றன் கரத்தைப் பொருத்திவிட்டானேல்;

பொருத்தும் அருமை நோக்கிப் ''பொருத்திடின்'' என்றார்.

அ கை கொடு தனக்கு ஆவன செய்குவன் = (பொருத்தப்பட்ட) அந்தக் (ப் புலையன்) கரத்தைக்கொண்டு (தன்கையெனவுட்கொண்டுமாம்.) தனக்கு ஆகவேண்டியவற்றைச் செய்து கொள்வான்;

உடல் வேற்றுமையானே சாதியுண்டென்று கூறுவாரை யீண்டு மறுத்தனர்.

இழிவு உள்ளனவும் ஏற்றம் உள்ளனவும் ஆய = தாழ்ச்சி (எளிமை) உள்ளனவும் உயர்வுள்ளனவுமாகிய;

பல் உறுப்பு நமக்கு அமைவன போல் = பல அவயவங்கள் எங்களுக்கு (எங்கள் உடற்கண்) பொருந்தியிருத்தல் போலவே;

நா, மூக்கு முதலியனவற்றுள் வெறுக்கத்தக்கனவும் உண்டென்பது தோன்ற "இழிவுள்ளனவும்" என்றார். அவை இடக்கர்க் கிளவியாலே கூறத்தக்கன என்க.

தூய முழு முதல் தொல்லோன் தனக்கு = பரிசுத்தமுடைய முழுமுதலாகிய தொன்மை பொருந்திய இறைவனுக்கு;

[மேயின வுறுப்பென வியன்பார் முதல] வியன் பார முதல உறுப்பு என மேயின = அகன்ற புவியை முதலாகவுடையன எல்லாம் அவயவங்கள் எனப் பொருந்தின;

பிரகிருதி சுபாவத்தினாக்கு இதனை எடுத்துக் கூறுதலிற் பாரை முதன்மையாக்கினர். "முதல" என்றதனாலேசானே பாரகத்துள்ள உயிருள்ளனவும், உயிரில்லனவும், மருங்கு சூழ்ந்த மற்றைய அண்டங்களும், பிறவுங் கொள்ளப்படும். இவற்றுள்ளே உயர்ந்தனவும் இழிந்தனவும் அடங்குதலின நம்முடலகத்தில் இருவகைத்தன்மைய அவயவங்களும் இருத்தல் போல இறைவன் உடற்கண்ணும் உண்டென்க.

அ அ பொறி வழி ஏற்பன அளித்தற்கு செவ்வை சேர்தலும் = அந்த அந்தப் பொறிக்கு முறைமையாகத் தகுந்தவற்றை நாம் கொடுத்தற்கு நன்மை அடைதலையும்;

திறம் சிதைத்து அளித்தற்கு தெவ் அமை வெறுப்பு சேர்தலும் = அவ்வகையைக் கெடுத்துக் கொடுத்தற்கு விரோதம் பொருந்திய வெறுப்பினை அடைதலையும்;

மனன் பெறும் = மனசானது ஏற்றுக்கொள்ளும்;

அவ்வப் பொறிகட்கு வேண்டுவன நாவிற்குச் சுவையும், மூக்கிற்குக் கந்தமும், கண்ணுக்குக் காட்சியும் போல்வனவாம். அவ்வப் பொறிகட்கேலாதன நாவிற்கு புழுகும், 'கண்ணுக்குக் குழம்பும் போல்வனவாம்.

ஒருவற்கு சார்தற்கு உள வழி செய்கைக்கு உவப்பும் = (அவ்வாறே) ஒருவன்றனக்கு அடைதற்கு உள்ள நெறியாகச் (அவன்றன்னிடத்திற் பிறர்) செல்லுதற்கு விருப்பத்தினையும்;

பிற வழிக்கு உவர்ப்பும் = (சாரவொண்ணாத) வேற்றுவழியாகச் செல்லுதற்கு வெறுப்பினையும்;

அவன் ஒன்றும் = அவன் அடைவான்;

ஈண்டிய இவை போல் எண் இல செய்கை = நெருங்கிய இவைபோன்ற கணக்கற்ற செய்கைகளைச் செய்துவருதல;

ஈண்டு ஈண்டு இன்பம் என்று இணைந்து இணைந்து = இவ்விடத்தே இவ்விடத்தே இன்பம் உளதென்று (கருதிக்கொண்டு கருதிய அவ்வவ் விடயங்களைப்) பொருந்திப் பொருந்தி;

அறியாமை தோன்ற "ஈண்டீண் டின்பம்" எனறும்; இன்பத்தின் விருப்பும், துன்பத்தின் உவர்ப்பும் இவை இவையெனத் தோன்ற "இணைந்திணைந்து" என்றும் கூறினர்.

உயிர்களெல்லாம் இன்பம் அடைதற்கே விழைகின்றன. அவ்வின்பமானது ஊணிடத்ததோ, பொருளிடத்ததோ, பெண்ணிடத்ததோ எனப் பலவாறெல்லாம் முயன்று வருந்தித் தேடியும்; தேடியடைந்தும்; அடைந்து நுகர்ந்தும்; நுகர்ந்து வெறுத்தும்; முடிவில் அவற்றையெல்லாம் ஒருவி முத்தி தலைக்கூடும்; என்னும் மறைபொதியுண்மையை ஈண்டுத் திட்பநுட்பமாய் விளக்கினா இந்நூலாசிரியர் என்

ஆண்டு ஆண்டு அலைந்து அயர் அவனிக்கு இயற்கை = அவ்வவ்விடத்தே (உண்டென்று தேடிய இன்பம் கிடைக்கப்பெறாமல்) அலைவுற்றுத் (ச் சுழன்று) துன்புறுகின்ற இவ்வுலகத்தார் தங்களுக்கெல்லாம் இயல்பாய குணமாகும்;

ஆண்டாண்டு என்பது இன்பமுளதாக நினைந்து சென்ற அவ்வவ் விடங்களிலே என்றவாறு. அவ்வப்பொருள்களை நுகர்ந்து இன்புறுவான் பலதுறைக்கண்ணும் தேடித்திரிதலின் "அலைந்து" எனப்பட்டது. "அயர் அவனிக்கு" என்றமையாற் பிரபஞ்ச விலாசத்துள்ளே நிலைபெற்ற இன்பம் இல்லையென்பது குறிப்பாகும். எனவே உயர்வு தாழ்வு கருதி விருப்பு வெறுப்புக் கோடலும் அவம் என்க. "இன்பம்வந் துற்ற போது மெதிர்மறை யுற்ற போது—முன்புட லுறுமூ ழென்றே விருப்புறா முனிவுஞ் செய்யா—ரன்புசிற் றுயிரகத்து மமைத்துவாழ் கின்ற நீரார்—வன்புழும் மலமு நீங்கத் திருவருண் முழுகு மாண்பார்" என்பது மயூரப் புராணம்; "ஒழுக்க மேவின ருயர்ந்தவ ரும்பர்மா முனிவ—ரிழுக்கு நீசர்க ளெண்ணுநான் மறையவ ரியாரும்—பழிக்கு மூர்க்கர்நற் பண்டிதர் பாவிய ரறவோர்—புழுக்க ளியாவையும் போதமென் றிகழ்வுறார் புகழார்" என்பது தத்துவராத்திஞவளி; "* * * * யாற்று—நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்—முறைவழிப் படூஉ மென்பது திறவோர்—காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்—பெரியோரை வியத்தலு மிலமே—சிறியோரை யிகழ்த லதனினு மிலமே" என்பது புறநானூறு.

---

(52) அருமைக் கேள்விய ராத லேனையர்க்
குரிமைய தெனினு மரியதொன் றாகலின்
மூத்தோர்ப் பிழையா மரபி னவர்பாற்
சீற்றங் காட்டல் சிறப்பில தென்றல்.

வன்மைபெற விழைஇ வாய்விடம் கருந்திப்
போர்க்கொரு மடவோன் போதல் போலுங்
குழவிபெற விழைஇக் குறுகுபு போந்தி
நிழல்வலம் வந்தாங்கு நின்றடி யகட்டை
வருடி நோக்கிய மடவரல் போலு
மீரெழுத்துப் பயின்ற வேழையர் நான்மறைப்
பார்ப்பா ராகப் பதைக்குந ரம்மா
இவரே,
பரபுமர பாக வகத்தன புறத்தன
வேற்ற பெற்றியா வியைந்துவந் தார்நே
யாற்றல்சா லன்னவை யாதலறி கிலரே
புறத்தன சூழ்ந்த வந்தணர் தம்முளு
மிழிந்தன ருளரே யிழிநதோர் தம்முளு
மஃதே மான வந்தணர் மறைகுந
ராதலிற் றிணைக்காப் பறஞ்சிறந் தன்றே
யென்குநர் புலாலை மேலோ ரெண்ணினு
மிழிந்தோ ரியைத்த வின்சுவைப் பண்டங்
கண்டருந் தற்குங் கயப்புக் கோடல்

கண்புலர் கொல்லோ கற்றறி மாக்க
ளீறு பூசலு நீரிடை மூழ்கலும்
பேறுதரு கடவுளை வடிவிடைப் பேணலுங்
கூறை தூய்தாகக் கோடலும் பிறவு
மாறு கிலையோ வகத்தொழுக் கிற்கே
இதனால்,
அகத்துப் பயில்விற் கணைமுக னாகிய
புறத்துப் பயில்வுமே பொன்றுபு மாறும்
இனியே,
ஒருவயிற் பிறந்தோர் தம்மு ளொருவர்
பெரும்பயிற் றமர்ந்து மேம்பா டன்றே
யண்ணன் றம்பி யருமபெறற் கேளப்
நண்ணிய பெற்றோர் நலன்சிறந் ததகா
லவரொடு பொருந்த லழகா குங்கொன்
மேம்பட் டோரை மேனிலைச் செயலு
ளாம்படி வைத்தற் கறியா ராகித்
தாம்பொறுக் கிலராய்த் தபுக்குந ரவர்நிலை
யென்றுகொ னமமனோ ரிணைந்து
நன்றிபல பெறீஇ நயந்துவளர் நாளே.

---

(இ—ள்.) [வன்மைபெற விழைஇ வாய்விடக் கருந்திப்—போர்க்கொரு மடவோன் போதல் போலும்] ஒரு மடவோன் வன்மை பெற விழைஇ வாய் விடக்கு அருந்தி போர்க்கு போதல் போலும் = (போரைவிரும்பிய) ஒரு மடமைத்தன்மையுடையோன் (அப் போர் செய்தற்கு இன்றியமையாத) வலிமையைப் பெறவிரும்பி (அவ்வலிமைக்குக் காரணமாகப்) பொருந்திய ஊனை உண்டு (உண்ட அப்பொழுதிற்றனே போர்செய்தற்பொருட்டுப்) போர்க்களத்தை நோக்கிச் செல்வதைப் போலும்;

விடக்கு—ஊன். "இனிச்சுவை கிடக்கும் விடக்கரிது" என்றார் கம்பரும். "பல்வுயிர் தம்மைக்கொன்று விடக்கடித் துக்கொண்டு" என்றா பட்டினத்தடிகளும். "அறவகை யோரா விடக்கு மிசைவோர்" என்பது வளையாபதி.

சுவைவேட்டுத்தின்றிலன் என்பது போதர "வன்மைபெற விழைஇ" என்றார். எனவே ஊனுண்ணு மரபினன் எனபதும் பெற்றாம். பெரும்பாலும் அந்தணரையும், சிறுபான்மை ஏனையரையும் இது குறிக்கும். ஊன் உண்டலை மிருதி முதலியன அந்தணர்கு விதித்துச்சேற லில்லையோ வெனின் ஊனருந்தல், வேள்விசெய்தல், துறவுமேற்கோடல், தாழ்ந்தகுலத் தையலைக் கைப்பிடித்தல், தாழ்ந்த குலத்தவரைக்கொண்டு உணவு சமைப்பித்தல என்னும் இத் தொடக்கத்தன பலவும் அநதணர்க்கு இக்கலியுகத்திலே பொருந்தாத தருமங்களாய் விலக்கப்பட்டிருக்கின்றன வென்க.

பிணியை நீக்கிச் சுகம்பெறற்கெழுந்த வேட்கை மிகுதியான் மருந்தினது கசப்பைக் கருதாமற் கொள்வதுபோல வன்மையை விரும்பிய விழைவால் ஊனின் இழிவைக் கருதிலன் என்க.

க்ஷத்திரியர் முதலியோர் ஊன் உண்டலினனே வன்மையுற்றுப் பிறரை அடக்கி ஆண்டு வருகின்றனர் எனக் கேள்வியுற்ற அந்தணன் ஒருவன் தானும் அதனை உண்ணின் உலகை

ஆட்சிசெய்தல் கூடுமெனக் கருதி விடக்கையுண்டு, உண்ட அக்கணமே போர்செய்தற்குப் புறப் பட்டான் என்பது உவமைக்கெடுத்த குறிப்பு. ஊனுணவு வன்மையை வளர்க்குமெனக் கொண் டாலும் ஒருமுறை உண்டபொழுதிற்றனே வளர்த்துவிடுமென மயங்கினனாதலின் "மடவோன்" என்றார்.

[குழவிபெற விழைஇக் குறுகுபு போதி-நிழல்வலம் வந்தாங்கு நின்று] குழவி பெற விழைஇ நிழல் போதி குறுகுபு வலம் வந்து ஆங்கு நின்று = மகப்பேற்றை விரும்பி (அதுபெறு தற்கு) நிழலொடு பொருந்திய அரசமரத்து அடியை அடைந்து வலமாகச் சுற்றிவந்து அவ்வந்த விடத்திலே நின்றுகொண்டு;

அரசமரப் பிரதக்கணஞ் செய்வார்க்குப் புத்திரப்பேறு உண்டாகும் என்று சிலர் கூறுப. நிழலை வலம்வருதற்கு இயைப்பாரும் உளர். போதி நிழலொடு செறிந்தது என்றமையானே அதனைச் சிரத்தையொடு காத்துவந்தமையும் புலனாகும்.

[அடியகட் டை—வருடி நோக்கிய மடவரல் போலும்] அகடு அடியை வருடி நோக்கிய மட வரல் போலும் = (கருக்கொண்டுவிடு மென்ற எண்ண மேலீட்டால் புடைத்ததுளதோ என்றறியும் பொருட்டுத் தனது) வயிற்றின் அடிப்பாகத்தைத் தடவிப்பார்த்த பேதையைப் போலும்;

கருக்கொண்டு இரண்டொரு திங்கள் கழிந்த பின்னரே வயிறு புடைப்பெய்தல் இயல் பாகவும், இவள் மரத்தைச் சுற்றியவுடனே ஆராயத் தலைப்பட்டுவிட்டனள், ஈதென்ன பேதைமை என்னும் வியப்பு மேலீட்டால் "வருடிய" என்றொழியாது "வருடி நோக்கிய" என்றடை கொடுத்தார். இவள் குழவி வேட்டு நோக்கியவாறு ஏழையர் அந்தணராதற்கு அவாவுவர் என்க.

ஈர் எழுத்து பயின்ற ஏழையர் = சில நூல்களைக் கற்ற அறிவில்லாதவர்;

"ஈர" என்பது சிறுமையையும் "எழுத்து" என்பது நூலையுங் குறிக்கின்றன. "இரண் டெழுத் தறியா மூடன்" என்பது உலக வழக்கு. ஆழ்ந்து கற்றமைந்தார்க்கே அந்தணர்தஞ் சிறப்பு நனிபுலப்படும் என்பது குறிப்பு. அற்பக் கல்வி உயிர்க்கிறுதி பயக்குமென்பது எல் லார்க்கும் ஒப்பமுடிந்த வுண்மை. "Little learning is dangerous" என்பா மேனாட்டாரும். இக்காலததிலே சில கற்றுவிட்டுக் கற்றோரையும் முன்னோரையும் அவரது பழக்கவழக்கவொழுக் கங்களையும் புறக்கணித்துத் தூற்றித்திரிதல் கண்கூடு. இது கருதியே மரபுமரபாகப் பயின்று வராத இழிகுலத்தாருக்குத் தத்துவஞான நூல்களை உபதேசித்தல் கூடாதென்று வடமொழி வாணரும் பிறரும பலபடி வற்புறுத்திச் சென்றனா என்க.

நால் மறை பார்ப்பார் ஆக பதைக்குநா நான்கு வேதங்களை ஓதுவதற்கும் ஓதுவித்தற்கும் அதிகாரிகளாகிய பிராமணர்கள் ஆதற்குத் துடித்துருகுகின்றனர்;

வேதத்தைப் படிப்பவனை விப்பிரன் என்ப. "நான்மறைப் பார்ப்பார்" என்பதூஉம் அதனையே குறிக்கும். இருடிகளின் பரம்பரையினர் என்று அந்தணாகளைப் போற்றுது தூற் றுதலும், அசசான்றோர் உலகத்தாருள் எங்களைச் சிறந்தோராககுமாறு செய்துதவிய நூல்களின் கொள்கைகளுட் சிலவற்றைக் கைககொண்டும் பலவற்றை நீககிவிடுதலும முறைமையாகா. சதுர்வர்ணங்களையும், அவை நடைபெறற்கிசைந்த தொழில்களையும், அததொழில்களுக்கேற்ற உணவுகளையும் கடவுள் உண்டாககினார் என்பது மறைபொதியுணமை. ஆரியவருத்தமே சிவ ராசிகளுக்கு வைப்பாதலின் இனறும் அம்முறைகள் ஆண்டு நடைபெற்று வருகின்றனவென் றும், ஆண்டிருந்து பிறவிடங்களுக்குச் சென்றாரிடையிற் காலகதியில் அககொள்கைகள் நழுவிப் போயின என்றும் பலருங கூறுப. அந்தணர் பிறர் எவரினும் மேம்பட்டவர் என்பதற்குப் பிற ரிடம் பெருகிவருகின்ற கொலைப்பாவம் இவரிடம் அருகியிருத்தலே தக்க சான்றாகும் என்பது கண்கூடு. "கொல்லான் புலாலை மறுத்தானைக கைகூப்பி—யெல்லா வுயிருந் தொழும்" என்பது குறள்.

இவரே = இவர்தாமே;

[மரபுமர பாக வகத்தன புறத்தன—வேற்ற பெற்றியா வியைந்துவந் தார்க்கே] அகத்தன புறத்தன மரபு மரபு ஆக ஏற்ற பெற்றியா இயைந்து வந்தார்க்கே = (மனம், அறிவு இவை முத

லாகிய) அகத்தனவற்றையும், (உடை, அணி, ஊண், ஒழுக்கம் இவை முதலாகிய) புறத்தன வற்றையும் பாரம்பரியமாக (இவ்விவைதாம் இவ்விவர்க்குரியவாகும் என்னும் விதிக்குள்) ஏற்ற தன்மையாகப் பொருந்திவந்தவர் தங்களுக்கே;

ஒவ்வொரு தொழிலும் தந்தம் பரம்பரைக் கிரமமாக வருதல் வேண்டுமென்ப. அவ்வத் தொழிலின் வளர்ச்சிக்கு ஏற்றவாறு உணவு, உடை, நடை முதலியனவும் அங்ஙனமே பொருந்தி வருதல் வேண்டும். நரம்பு வழியாக அத்தொழிற் சத்திகளேறிப் பலப்பல நன்மைகளைப் பயக்கும். தொழிலுங் கருவிலே தொடர்ந்து விடுதல் வேண்டு மென்ப.

வித்தையைப் பயிலற்குரிய சிறப்பிலக்கணம் பயின்றூரன்றி யாவரும் முறைதப்பிப் பயின்றுவருகின்ற இக்காலப் பழக்கம் முன்னோரைத் தூற்றலும், அவர் விதித்தவற்றை இகழ்ந் தொதுக்கி விலக்கலும், ஆகியவற்றைப் பயப்பதன்றி வேறு இனிய பயனொன்றும் அளிக்க வில்லை யென்பது புனைந்துரையாகாது. உயர்ச்சிவாய்ந்த கல்வி கற்றற்குரியான் மாமிசவுணவை யுண்டு பலரொடுங்கூடி அளாவிவரின் அவர்தம் வாசனை இவனுக்கேறிவிட்டால் எங்ஙனம் கல் வித்துறையிலே முறைபோந்து லோகோபகாரியாவான்? உலக வாழ்வுக்குரிய மோகவலையில் ஈடுபட்டுவிட்டால், உண்மையும், நடுவுநிலையும் அன்னபிறவும் புலப்படுதல் அரிதாகும். சதுர் வருணாச்சிரம முறைதவறிய தேசத்தில் அழுக்காறு, அவா, வெகுளி முதலியவை நிலவி ஆண் டுள்ளாரை அழித்துவருதலும் பொய்யாமோ? ஆதலின் வருண நியமமே உலகின் மேன்மைக் குக் காரணமாகுமென்று அறிஞர் கூறுவர்.

நமது உடலின் அங்கங்கள் தலை, கழல், இடதுகை, வலதுகை என்று பிரிவுபட்டு வேற்று மைதொழில் பயின்று வருதலால் யாதேனும் குறைவு நிகழ்கின்றதோ? யாவன் எவ்வருணத் தானு யிருந்தாலும் தான் என்றும் பிறன் என்றும் பேதித்து நினையாமல் யாவரையும் ஒரேபடித் தாக நேசித்துவருவானாயின் அஃதொன்றே பெருந்தருமமாகும். பல்லாயிர வருடங்களாகச் சதுர்வருணாச்சிரமப் பாகுபாடு நடைபெற்றும் அப்பெற்றமையாற் குற்றமொன்றின்றி வந்த தருமமானது சின்னாட்களாக அப்பாகுபாட்டினாலேயே நிலைகுலைகின்றதென்று கூறுதல் ஒரு பெரும் விந்தையாகுமென்றும், அப்பாகுபாட்டைக் கவனியாது சோரவிடுதலே தருமக்கேட் டிற்குக் காரணமென்றும் பல சான்றோர் கூறுவர். ஒரு தொழிலுக்குரியது மற்றொன்றுக் கியையாமற் பகையாகுமாதலின் பலவகைச் சீவராசிகளையும் படைத்தோம்பிவரும் இறைவன் அவையெல்லாம் இனிது வாழ்தற்குரிய வருணாச்சிரம முறைகளை வகுத்திலனென்பது ஓர் இழிந்த கருத்தென்றும், எல்லாநாட்டகத்தும் இந்நிலைகள் மிகப்பூர்வகாலந்தொட்டு வழங்கி வரவர மங்குவதாயின என்றும் பலர் கூறுவர்.

ஆற்றல் சால் அன்னவை ஆதல் அறிகிலர் = (வளர்ந்து பெரும்பயன் அளிக்கவல்ல) வல்ல பம் நிறைந்த அவையெல்லாம் நிறைவேறுதலை அறிந்துகொள்கிலா; (இக்காலத்து மாநதர்கள்.)

புறத்தன சூழ்ந்த அந்தணர் தம் உ(ள்)ளும் இழிந்தனா உளரே = (பூணூல், நீறு, அக்க மாலை, தோத்திர முதலாய) புறவொழுக்கஙகள் மட்டும் நிறையப்பெற்ற அந்தணர்தங்கள் குலத் தின்கண்ணும் அவரிற் றாழ்ந்த வருணத்தார பிறந்திருக்கின்றனரே;

இழிந்தனா என்றது தம் வருணத்துக்குரிய ஒழுக்கங் குறைந்தோரை. இவ்விழிவு தாழ்ந் தவர் சங்கமத்தாலும், கற்பில் பெண்களாலும், தீநாளிற் சேர்க்கையாலும் நிகழ்ந்திடுமென்ப. அகத்தனவும் சூழப்பெறின் இங்ஙனம் உளதாகாது என்பது போதரப் "புறத்தன சூழ்ந்த" என்றார். உம்மை அவரது சிறப்பை விரித்து இழிவைப் புலப்படுத்தியது.

இழிந்தோர் தம் உ(ள்)ளும் அஃதே மான அந்தணர் மறைகுநர் = அவ்வந்தணரிற் றாழ்ந்த வருணத்தாருள்ளும் அவ்வாறே ஒப்ப அந்தணரும் பிறந்திருக்கின்றனரே;

என்பது ஏனை மூவருள்ளும் அந்தண்மை சான்றோர் உளர் என்றலை; என்னின், விபசார காரணத்தானே வருணக்கலப்பு வந்தமைதல் சாலுமேயெனில், அக்கலந்தோர் அநுலோமர் முதலி யோர் ஆவரேயன்றிச் சதுர்வருணத்தர் எனப்படார் என்க.

இழிந்தாருள்ளே மறைந்து கிடக்கும் உயர்ந்தோர் நிலைமை பிரகாச மெய்துவதில்லை ஆதலின் "மறைகுநர்" என்றார். அந்தணருள்ளே மறைந்த பிறர்க்கு அங்ஙனம் தற்காலத்து

மனேதுக்க மின்மையின் ஆண்டு "இழிந்தனருளர்" என்றார். இவற்றான் வருணக்காப்பில்லை என்பது கூறப்பட்டது.

ஆதலின் = அதுகாரணத்தானே;

திணை காப்பு அறம் சிறந்தன்று = சதுர்வருணக் காப்பு என்னும் தருமம் சிறந்ததொன்று என்றல் சாலாது;

விபசார தோஷத்தானும், நியம மாறுபாட்டானும் அன்ன பிறவற்றானும் நமது வருண தருமம் பாழ்பட்டுக் கிடத்தலின் எல்லாவருணங்களையும் ஒன்று கூட்டலே இக்காலத்திற்கு நலனுதுமென்று சிலர் கூறுப. அங்ஙனம் புரிதல் உள்ள நிலையையும் கெடுத்து விடுதற்குக் காரணமாகுமென்றும், உணவு முதலியவற்றினும் பிறவற்றினும் பெரும்பான்மை விகற்பங்கள் பெருமையின் இதுபோதுள்ள வருணத்தாரை இருக்கும்படியிலே இருக்கவிட்டு அவர் ஒழுக்கங்களைத் தக்காங்கு சீர்ப்படுத்தி நடத்துதலே வாய்ப்பாகுமென்றும் பிறர் கூறுவர். நாத்திகவாதிகளும், அரசனை வேண்டாமென்னும் வாதிகளும், வருணதருமக் கட்டுக்கு முரணுகின்ற வாதிகளும் ஒரு நிலையினராக மதிக்கப்படுவர். இந்நூலாசிரியர் வருணக்காப்பைக் கெடுப்போர் நாத்திகர், அரசுமுரண்வாதி என்னுமிவர்தங்களையே ஒப்பர் என்று ஒரு வெண்பாவைக் கூறியுள்ளார். அது வருமாறு. "ஒருவ னுளனென்னு முண்மையா லாளு—மாசர்செங் கோலினரு ளாட்சி—வரிசையா—னல்வருணக் காப்பா னலம்பெறலா லிவ்வழிப்போர்—போல்வமனு முணமேடா புகல்".

எனகுநர் = என்று கூறுகின்ற இவர்தாம்;

[புலாலை மேலோ ரெண்ணினு—மிழிந்தோ ரியைத்த வின்சுவைப் பண்டங்—கண்டருந் தற்குங் கயப்புக் கோடல்—கண்டிலர் கொல்லோ கற்றறி மாக்கள்] கற்று அறி மாக்கள் மேலோர் புலாலை எண்ணினும் இழிந்தோர் இயைத்த இன் சுவை பண்டம் கண்டு அருந்தற்கும் கயப்பு கோடல் கண்டிலா கொல் = (பல நூல்களையும்) பயின்று (அப்பயிற்சி வழியே விஷயங்களை) அறிந்துகொண்ட மக்கள் அறிவொழுக்கங்களானே மேம்பட்ட அந்தணாகள் (மீன்முதலாய) மாமிச உணவை நினைத்தாலும் தம்மினிழிந்த வருணத்தார் சமைத்த இனிய சுவைபொருந்திய உணவுப் பண்டங்களை நோக்கி உட்கொள்வதற்கும் வெறுப்புக்கொள்வதைப் பார்த்தாருமில்லை கொல்;

கற்றறிந்தாரேயன்றி அறிந்தவண்ணம் நடவாதார் என்பது போதரக் "கற்றறி" என்றும், அவ்வறிவு பயன்படாமையின் "மாக்கள்" என்றும் கூறினார். "கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ—னற்றா டொழாஅ ரெனின்" என்பது குறள்.

"கயப்புக் கோடல் கண்டிலர் கொல்" என்றமையாற் கண்டிருந்தால் அங்ஙனம் வருண தருமத்தைக் கெடுத்தற் கொருப்படார் என்பது குறிப்பு.

புன்மணம் வீசி வெறுக்கவைக்கும் தன்மைத்தாதலின் புலாலைக் கூறினாராயினும் ஏனையவற்றையுங் கொள்க. வழியிடைக் கண்ட அமங்கலப்பொருளை நினைக்குந்தோறும் அருவருப்புக்கொள்வர் என்பது தோன்ற "எண்ணினும்" என்றார். இழிந்தோர் இயைத்த இன்சுவைப் பண்டத்தை அந்தணன மூலமாகப் பெறிற் கயப்புக் கோடல் செய்யாது உண்டுவிடுதலும் கூடுமாதலிற் "கண்டருந் தற்கும்" என்றார். வெறுப்பின் மிகுதி தோன்றக் "கயப்புக் கோடல்" என்றார்.

நித்ய ஸ்நானஞ் செய்யாமை, உடுத்தவுடைகளைத் தோய்க்காமற் பன்னாளுமுடுத்துவருதல், புலாலுண்ணல், எச்சின் முதலியவற்றை நோக்காமை ஆதிய சுகாதாரக் கெடுதிவிளைக்கும் ஒழுக்கங்கள் பலவும் அந்தணரல்லாதாரிடத்துப் பெரும்பான்மை பொருந்தியிருத்தலின் அன்னாருடன் அந்தணர் பயின்றுவருவரேல் நாளடைவில் தங்கள் வருணக்காப்பற்றுப் புனிதமும் அன்பு தயை ஆசாரம் முதலியனவும் இழிந்திடப்பெற்றுக் கெடுவர் என்க. "சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்—சுற்றமாச் சூழ்ந்து விடும்" என்பது குறள். "நிந்தையிலாத் தூயவரு நிந்தையரைச் சேரிலவர்—நிந்தையது தம்மிடத்தி னிற்குமே" என்பது நீதிவெண்பா.

வேதியன் ஆறுபொழுது உண்டிகிடையாவிடின் இழிதொழில் செய்வோன் கையுணவையும் அருந்தலாமென்று மிருதிகள் விதித்திலையோவெனில், அவ்விதி முன்னைய யுகங்களுக்காய்

மைக்கப்பட்டுக் கலியுகத்துள் விலக்கப்பட்டவற்றுள் ஒன்றாயதென்க. பண்டைய யுகத்தினர் யுளானும், அறிவாற்றல்களானும், புத்தி தத்துவங்களானும், தவவன்மையானும் மிக்கச் சிறந்தராதலின் அன்னவாறாக அமைந்த விதிகள்பல இக்கலியுகத்தாருக்கு இசையாவென விலக்கப்பட்டன. நெடுங்காலம் பிரமசரியந் தரித்தல் முதலாகத் துறவி மாலைப்பொழுதினுக்குமேல் கிரந்தனுயிருத்தல் ஈறாகவுள்ள ஐம்பத்துமூன்று ஒழுக்கங்கள் யாவையுங் காலதத்துவ உணர்ச்சி பற்று மகான்களாகிய புலவர்கள் தவவன்மையாற் கட்டுப்பாடாகக் கலியுகத்திற் கூடாவென நிறுத்திவிட்டார்கள் என்றும், தருமமுணர்ந்தவர்களாகிய அந்தப் பெரியோர்களுடைய சமயக்கட்டு வேதம்போலும் பிரமாணமாயிருக்கும் என்றும் பராசரம் ஆசாரகாண்டம் முதல் அத்தியாயத்திற், கலியுகத்தில் ஒழிக்கத்தக்கன என்னுந் தலைக்கீழ் கூறியிருப்பது காண்க. அவ்விலக்குப் பற்றவற்றுள் இழிதொழிலான் கையுணவு முப்பத்தேழாவதாகக் கூறப்பட்டுளது.

யுகந்தொறும் தருமம் பேதமுறுதற்குக் காரணம் சீமந்தனிப்புராணத்துள் (மிருதி வாக்யத்தைத் தழுவிக்) கூறப்பட்ட பின்வரும் இருசெய்யுள்களானும் அறியப்படும்:—"வேதத்துணையி னமைந்துடனெறியே விளங்கிப்—பேதமாயவரு நாலுகந்தொறும்பொருள் பிரிவுற்றுது மாநிலக் கற்பமோடொடுங்கிமேலொடுங்கா—வேதவாயுயர் பொருளதே கருமமென்னைசைப்பார்", "நாலுகந்தொறும்பொருள் பிரிவதை நவிலின்—மேலெலும்பொடு தசைக்கறைரும்புகூழழியுங்—காலியம்புயிர் முறைமுறை யுகத்திடைக் கழியு—மாலியம்புமூனுந்தவம்னுகத் தமையர்". இக்கலியுகத்திற்றனும் பண்டையோர் நிலைமையுடன் ஒப்பிடுபவராகின் இன்றையோர் தேகவன்மை மிக்கக் குன்றிவிடுதல் கண்கூடு.

மேற்கூறிய இழிந்த செயல்கள் அவ்வந்தணருள்ளும் இருந்து வரவும் இங்ஙனமெல்லாம் றுதல் முறையோவெனின், முறையேயாம், என்னை? இக்காலத்தார் உபதேசத்தானும் ழக்கத்தானும் தம்முறு தொழில்களையும் ஆசாரங்களையும் நழுவவிட்டமையின் அக்குற்றம் அவர்களைச் சாராதென்பது உண்மையாதலின் என்க.

நீறு பூசலும் நீர் இடை மூழ்கலும் = (தூளிதமாகவும் குழைத்தும்) திருநீற்றினைப் பூசிக்கொள்ளுதலும் தண்ணீரிலே தோய்தலும்;

பேறு தரு கடவுளை வடிவு இடை பேணலும் = (புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கட்பேறு, பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் என்னும் எண்ணிருவகைச்) செல்வங்களையுஞ் சீவராசிகளுக்குக் கொடுத்துவரும் இறைவனை உருவப்படுத்தி (ஆராதனை செய்துவருதலினாலே) அதன்பால் விருப்பங்கொள்ளுதலும்;

விக்கிரக வணக்கத்தைப் பதினைந்தாஞ் செய்யுள் முறையும் விரித்துச் சேறல் காண்க.

கூறை தூயது ஆ(க) கோடலும் = ஆடையைப் பரிசுத்தமுடையதுவாக உடுத்திக்கொள்ளுதலும்;

பிறவும் = இவை போன்ற பிறவற்றைக் கொள்ளுதலும்;

இருக்கை, நல்லுணவு, தூய்மை முதலியவற்றையும் "பிறவும்" என்றது குறிக்கும்.

[ஆறு கிலையோ வகத்தொழுக் கிறகே] அகத்து ஒழுக்கிற்கு ஆறு ஆகிலையோ = மனத்தின்கு (இவைகளெல்லாம்) வழியாக இருக்கவில்லையோ;

ஆடை முதலியன அழுக்குற்றிருப்பின் நோய்முதலியன வரப்பெற்று மனநிலை கெடுவதாதலின் அங்ஙனங் கூறினார்.

இதனால் = இக்கூறிய காரணத்தானே;

[அகத்துப் பயிலவிற் கிணைமுத லாகிப்—புறத்துப் பயில்வும் பொன்னெனப் பாரும்] புறத்து பயில்வும் அகத்து பயில்விற்கு அணை முதல் ஆகி பொன் ஒப்பு ஆகும் = புறத்திலே பழகிவரும் ஒழுக்கங்கள் எல்லாம் மனசின்கண்ணே பழகிவரும் ஒழுக்கங்களுக்கு அணைந்த காரணங்களாகிப் பெருமை தருவதிற் பொன்னுக்குச் சமமாகும்;

புறத்தொழுக்கம் பயின்றிலரேல் விக்கிரகவணக்கம் முதலியனவும் பயனற்றனவாகும் என்பது குறிப்பு. தொடர்ச்சி உண்டென்பது தோன்ற "அணைமுதலாகி" என்றார். அருளு

நோக்கிப் "பொன்னைப் பாரும்" என்றார். "பொன்" என்னும் இலேசினானே அப்பயில்வுகள் நன்மை சான்றன என்பது தானே பெறப்படும்.

இனியே—அப்பால்;

ஒரு குடி பிறந்தோர் தம் உள் ஒருவர் மேம்படில் தமக்கு அது மேம்பாடு அன்று=ஒரு குடியின்கண் உதித்த பலருள்ளும் ஒருவர் (கல்வி, செல்வம் முதலியவற்றால்) மேம்பாட்டை அடைந்தால் அம்மேம்பாடு (அக்குடியின்கண் உள்ள) அவர் தங்களுக்கு எல்லாம் மேம்பட்ட தொரு பெருமிதமன்றே;

அரசர் குடியுள் ஒருவன் அரசனாகில் அக்குடியோர் அவனை வெறுப்பரோ? என்றாங்கு வினாவிக்கொள்க. இந்நூலாசிரியர் 26ம் செய்யுளில் "அன்னணந் தமரென வறிந்திசினோர்க் குத்—தமருறு நலனே தம்முறு நலனே—தமர்கைப் பொருளே தங்கைப் பொருளே" என்று கூறிப் போந்ததையும் நோக்குக. "* * * உறக்கருதி—எவ்வா றுமக்குறுதி யெண்ணுதிர்நீ ரெல்லார்க்கு—மவ்வாறே யெண்ண லறம்" என்பது பெருந்தேவனார் பாரதம்.

[அண்ணன் றம்பி யரும்பெறற் சேஎய்—நண்ணிய பெற்றோர்] அண்ணன் தம்பி பெறல் அரும் சேய் நண்ணிய பெற்றோர்=தன்முற் பிறந்தோன் தன்பிற் பிறந்தோன் (தான்பெற்ற) பெறுதற் கரிய பிள்ளை (தன்னைப் பெற்றுப்) பொருந்திய தந்தை தாயர் என்னும் இவர்கள்;

சிறந்த பொருள்களுக்கு அடைகொடுத்தல் வேண்டா மென்ப. "திருவளர்" என்னும் பாசுரத்திலே கோங்கினை அங்ஙனங் கூறியமை சிறந்த காட்டாகும். இதனானே "அண்ணன் றம்பி" என்று வாளா கூறினார். மக்கட்பேற்றிற்குக் காரணமாகி நிற்றல் சிறந்த தவமாதலின் "அரும்பெறற் சேஎய்" என்றும், தவத்திற்கேற்ற குணஞ்செய்கைகளையுடைய மக்கள் வந்துதிப் பர் ("தக்கார் தகவில ரெனப தவரவ—ரெச்சத்தாற் காணப் படும்") என்பது தோன்ற "நண்ணிய பெற்றோர்" என்றுங் கூறினார்.

நலன் சிறந்தக்கால் அவரொடு பொருதல் அழகு ஆதும் கொல்=நன்மைபெற்றுச் சிறப் படைந்தால் அச்சிறந்த அவர்தங்களோடு (பொறாமை கொண்டு) சண்டையிட்டுக்கொள்ளுதல் சிறப்பாகுங்கொல்லோ; ஆகாது என்றபடி.

முன்னர் ஒருகுடியில் வாழ்வார் தங்களுள் ஒருவர் மேம்படில் அம் மேம்பாடு அக்குடியிலுள்ள எல்லார்க்கும் பொருந்துமென்று கூறிய ஆசிரியர் பின்னரும் அதனை எதிர்மறை முகத்தானும் விளக்கியிட்டார். நுதலிய பொருளைக் கற்பவர் சிந்தையில் வலியுறுத் தும்பொருட்டு அங்ஙனம் செய்தமை மிகைபடக் கூறிய குற்றமாகாது. தேவர் குறளுள்ளும இங்ஙனமே கல்வி—கல்லாமையும் அன்னபிற உடன்பாடெதிர்மறைகளும் அதிகாரப்பட்டிருத்தல் காண்க.

ஒரு குடியைக் குறித்துக் கூறினவர் பின்னரும் "அண்ணன்றம்பி" என்றாங்கு வேறு பிரித்துக் கூறியதின் நோக்கம் உலகத்தவர் குணக்கேட்டை நன்கு விளக்கிக்காட்டித் திருத்துதற் பொருட்டுப் போலும்.

இக்காலத்து வடதேசத்தாருட் சிலர் அவ்விடத் தந்தணர் பலர் உத்தியோகம் முதலிய பதவிகளிலே மேம்பட்டுவிட்டனர் எனவும், பிறரையெல்லாம் விலங்குகளினும் தாழ்ந்தவராக மதித்தொதுக்குகின்றனர் எனவும், அவமே கருதி இடாப்பட்டுக் கலாம் பலவிளைத்துத் தமிழ் மக்கள் முன்னேற்றமடைதற்கு முரணாகவிருந்துவருகின்றனர் என்பது கருதி, அன்னவர் யாவரையும் ஒன்றுபடுத்துவான் கொண்ட இரக்கமேலீட்டால், இவ்வாறெல்லாம் நூலாசிரியர் இனி தெடுத்தோதினர். இக்கருத்தை "ஒன்றணி வதற்கே" என்ற 26ம் செய்யுளும் பிறவும் வலியுறுத்தாநிற்கும். நாமெல்லாரும் ஒரு சாதியினர் ஒரு வயின் பிறந்தவர் என இங்ஙன நாகரீகத்தார் உணர்வராயின் நம்முள் எவரொருவர் பெருமையுற்றாலும் அப்பெருமை எம்மியாவர்க்கும் உரியதே என்று கருதி மகிழ்வரல்லது பொறாமைகொள்ளார் என்க.

மேம்பட்டோரை மேல் நிலை செயல் உள் ஆம்படி வைத்தற்கு அறியார் ஆகி=(நமக் குள்ளே மரபுமரபாக) மேம்பட்டு வந்த அந்தணரை (அவர்க்கிருந்துவரும்) மேலாகிய நிலைமை

யைப் பயக்கும் (ஏதன்முதலாகிய) தொழில்களுக்குள்ளே இயைந்துவரும்படி வைத்துப் பாது காத்துவருதற கறியாதவராகி;

சதுர்வருணத்தார் தந்தமக்கு விதிக்கப்பெற்ற விதிவழி ஒழுகிவருதலே சிறப்பென்பது ஈண்டு விளக்கப்பட்டது. சகல சாத்திரங்களையும் இயமறி உதவியவரும, நாட்டுக்குவரும் நன்மை தீமைகளைத் தமக்குற்றனவாகக்கொண்டு நடாத்தியருபவரும், பிறர்க்குக் குற்றேவல் பூண்டவர்போல அவர் பணியாற்றி அவரால் உதவப்படும் சிறுபொருளை உவந்தேற்று வாழ்ப வரும் அந்தணரேயாவர். இக்காலத்தந்தணர் இவ்வியல்பின் மாறினரேயெனில், இவ்வியல்புக கவரைக் கொடுவர முயலவேண்டியது நமமவர் கடனேயாம்.

[தாம்பொறுக கிலராய்த் தபுக்குந ரவர்நிலை] தாம் பொறுக்கிலராய் அவர்நிலை தபுக்குநர = அவ்வந்தணர் தம் மேம்பாட்டிற்கு (இக்காலத்துச் சிலர்) மனஞ்சகியாதவர்களாகி அவர் நிலைமை யைக் கெடுத்துவிடுகின்றனர்.

அவர்க்கு வருகேடு இவர்க்கே என்பது முன்னர் விளக்கப்பட்டது.

[என்றுகொ னம்மனோ ரிணைந்து—நன்றிபல பெறீஇ நயந்துவளர் நாளே] நம்மனோர் இணைந்து நன்றி பல பெறீஇ நயந்து வளர் நாள் என்றுகொல் = நம்மவரெல்லாரும ஒன்றாக மன மிணைந்து (அவ்விணைப்பாலே பெறுதற்குரிய) நன்மை பலவற்றையும் பெற்று (அப்பெற்ற வற்றை இகழாமல) (விரும்பி வாழ்ந்துவருநாள்தான எந்நாள் கொல்லோ;

இணைந்தாலன்றி ஒன்றும் நிறைவேறாது ஆதலின் "நம்மனோ ரிணைந்து" என்றும; இணைந்தாலே நன்மைபெறலாம் ஆதலின் "நன்றி" என்றும்; அந்நன்றியும் ஒன்றேயென்னின் அன்று, பல என்பது போதரப் "பல" என்றும்; அப்பலவும் அழியாமல் நீடுநிலைப்பன என்பது போதரப் "பெறீஇ" என்றனபெடுத்தும; இவைதமமை அடைந்துவிடுதல் இக்காலத்தார்க்கு எளியதொன்றன்று, நெடுங்காலஞ் செல்லும், செல்லினும் கைகூடல் ஐயம் என்பன போதர "என்றுகொல்" என்றும் கூறினார். "என்றுகொல்" என்று முன்னர் வைத்ததும் ஐயப் பாட்டினை வலியுறுத்தற்பொருட் டென்க. ஏனையவற்றையும் ஏற்றபெற்றி வைப்புமுறை கூறிக்கொள்க.

---

(53) இழிவுடல் கழிபொரு ளிவைகொண் டோடாப்
புறுபவ ரழியா வுடலமும் பொருளும்
பெறுகுவ ரென்னிலைப் பெற்றிய ரோவெனல்.

உலகிடை விளங்க வுணவின் றொகுதியை
யவமே யழித்தற் கியாருந் துணிகில
ரிருவயி று படைத்தோ ரெண்டெவ ரிலரே
யாதலி னமக்கமை வனவிரைந் தணையு
மெனக்கருதிக் திருக்கு மினிமையறி கிலரே
தொழிலறவு படாமற் றொன்றுதற் கன்றே
பொருள்கொண் டாடை பொருவில்பல் பண்டம்
விற்குந மென்ற விலைஞரு முண்டுகொல்
பலப்பல பண்டம் பார்கொள் சருவியாம்
பணத்தினைக் கவர்ந்துமறை பதகர்நிலை யெவன்கொல்
பல்லோர் கூடியொரு மல்லனைப பாற்றுவ
ரெல்லோரு மிணைந்து கூடலிருந் தின்றமிழ்

வல்லாங் காய்ந்த வழுபுலப் புலவரு
மொருவர்க் கிணையா வுயர்குவர் கொலவிலா
விலவிவ வளைகயா விலங்கினவை யிவர்க்கிலாத
தீந்தாம தனிசா வெனவோட டெழுந்த
தாஅந் தந்நிக் தழைசெல வோரெனா ச
சாஅந் நிணையுஞ் சார்தற் கரிவிரா
நரையே திரையே மூப்பே பிணியே
கருநாசாக் காடே யின்ன கருவுறாஅ
நாற்றவுடற் காளா நயந்துத நந குறுவோர்
நறுமணை வுடல நாளபல நன்னால
பெறுநிந பிறவும பெற்ற மெனினே
பொதுத்துணை வீறுற் றேபாய் புறுவோம
பார்நடை முற்றும பயின்று
மார்கொ லின்னவை யறிந்துநடக் குநரே.

---

(இ—ள்.) உலகு இடை விளைந்த உணவின் தொகுதியை = உலகத்தின்கண்ணே (குறிஞ்சி முதலாகிய நான்குவகைப்பட்ட நிலங்களில் உணவிற்கிசைய) விளைந்த தானியக் குவியல்களை;

"மாயோன் மேய காடுறை யுலகமுஞ்—சேயோன் மேய மைவரை யுலகமும்—வேந்தன் மேய தீம்புன லுலகமும்—வருணன் மேய பெருமண லுலகமும்—முல்லை குறிஞ்சி மருத நெய்த லெனச—சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என ஆசிரியர் தொல்காப்பியனார் முல்லை முதலாகியவற்றை உலகங்கள் என்றலை நோக்கி "உலகிடை" என்றும், அவ்வுலகங்களின் உதவி தோன்ற "உலகிடைவிளைந்த" என்றும், பல்லோர் புரிந்த அருமுயற்சியும் உண்டென்பது தோன்றத் "தொகுதி" என்றும் கூறினர். கதிர், கார் முதலியவற்றின் உதவியுங்கொண்டு விளையும் என்க. உணவின் றொகுதியைமட்டும் கூறினா ரெனினும் பருத்தி, மருக்துப்பூடு, விறகு, வாசனைத்திரவியம் முதலிய உபயோகப்படும் பொருள்கள் எல்லாவற்றையும் தழீஇக் கொள்க.

[அவமே யழித்தற் கியாருந் துணிகிலர்] யாரும் அவமே அழித்தற்கு துணிகிலர் = எத்தகைய இழிகுணம் படைத்தவரும் (அவ்விளைந்த உணவுப்பொருள்களை) வீணாகுமாறு அழித்தற்குத் துணியமாட்டார்;

அவமே அழிப்பவர் நல்லவர் ஆகார் ஆதலின் "யாரும்" என்பதற்கு அங்ஙனம் பொருள் விரித்தாம். அவமே அழித்தலாவது உண்ணுவதற்கு உபயோகப்படாமல் நிலம், நீர், எரி முதலியவற்றுள அடக்கிச்சிதைத்தலும்; நஞ்சிடைப்பெய்து கெடுத்தலும்; அன்னபிறவாகச் செய்தலுமாம். ஆயின், அங்ஙனமெல்லாம் இக்காலத்தார் செய்துவரும் போரிடை நிகழ்கின்றனவே என்னில், அந்நிகழ்ச்சி யாண்டும் எப்போதும் நடைபெற்றுவரும் வழக்காறின்மையானும், போரில் நிகழ்ந்தனவற்றை எடுத்து இத்தகைய இடங்களிற் காட்டுதல் "கொல்லுதல் கூடாது" என்று கூறுமுழிப் "போரிடைக் கோறல் நிகழ்கின்றதுவே" என்று எதிர்மறுத்துக் கூறும் கூற்றொத் திகழப்படுமாதலானும், அன்னபிறவற்றானும் அது பொருந்தா தென்க. அவமே யழித்தல் என்றமையால் அவமாகாதழித்தலு முண்டோவெனில், மாற்றலரைமடக்கி வெல்வான் அழித்தலும், பிறபொதுப்பயன் விளைய அழித்தலும் அவச்செயல்கள் ஆகாவென்க.

[இருவயிறு படைத்தோ ரீண்டெவரு மிலரே] ஈண்டு இரு வயிறு படைத்தோர் எவரும் இலர் = இவ்வுலகின்கண்ணே இரட்டை வயிறு படைத்தவர் ஒருவரும் இல்லை;

ஒருபோதில் இருபோதுக்குரிய உணவுண்பார் இல்லையென்பது கருத்து. "ஈண்டு" என் பதனைக் காலத்தின்கண் வந்ததாகக்கொண்டு பண்டைக் காலத்தில் குண்டோதரன், வீமன் முதலி யோர் இருந்தனர்.அவர் போன்றார் இக்காலத்தில் இல்லை என்று பொருள் கூறுவாருமுளர். "ஒருநா ளுணவை * * * இருநாளைக் கேலென்றா லேலாய் * * *" என்னும் பாட்டும் இக்கூற் றுக்கேற்றதொருமேற்கோளாகும். இருவயிறு படைத்தோர் இருந்தால் நமக்கு வரவேண்டிய பாகத்தையும் புசித்துவிடுவர், அன்றோ இல்லையாதலின் வரற்பாலன வந்தே தீரும் என்று குறிப்பித்தாராயிற்று.

ஆதலின் = அது காரணத்தாலே;

நமக்கு அமைவன விரைந்து அணையும் என குறித்து இருக்கும் இனிமை அறிகிலர் = நமது பசியை ஆற்றுதற் கிசைந்த உணவுப் பொருள்கள் (வீணாகாமல்) விரைந்துவந்து (நம்மைச்) சாரும் என்று நினைத்து (அழுக்காறு முதலியவற்றையும் துன்பத்தையுங் கொள்ளாமல் மகிழ் வுற்று) இருக்கும் இனிய வழியை அறிகின்றாரில்லை;

அவ்வுணவின் தொகுதியை வைத்திருக்கும் அவர்தமக்கு வேண்டியன போக எஞ்சியன வாய் நமக்கு வேண்டியனவற்றை என்று பெயதுரைத்துக்கொள்க. அவர் பக்கல் இருந்துவரும் பொருள் மிக்கும் பதனழிந்தும் வருஞ்சமயத்திற் பிறர்க்குக் கொடுத்தே விடுவர் என்பது போதா "விரைந்து" என்றும், இலலாதாரே அவவுணவினைப் பெறுதற்கு முற்பட்டுவருவர் ஏனையோர் முற்படார் ஆதலின் "அணையும்" எனறுங் கூறினார்.

இது துறவிகளானோர் மனத்திருத்திபுற்று அடங்கிவாழும் வழியைப் புலப்படுத்தியது. ஏனையோர்க்கும் பொருந்தும், என்னை? செயற்பாலனவற்றைச் சோம்பாது செய்துமுடித்து இங்ஙனம் கருதியிருத்தலே பெருநலன் ஆதலின் என்க.

"அலரவன் றீட்டி வைத்த வாயுளி னளவை காறும்-விலகிலா வினைக்குத் தக்க விருப் புறு வெறுப்பு ணவு-மிலக வுண்டு * * *" என்பது குசேலோபாக்கியானம்; "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி-தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" என்பது குறள்; ஏற்ப விரித்துக் கொளக.

தொழில் அறவுபடாமல் தோன்றுதற்கு அன்றே = (தாம் செய்துவரும் வாணிபத்) தொழில் நடவாது இடையறுந்து போகாமல் தோற்றம்பெற்று வருதற்பொருட்டன்றோ;

பொருள் கொண்டு ஆடை பொருவு இல் பல் பண்டம் விற்குநம் என்ற வினைஞரும் உண்டுகொல் = பணத்தை வாங்கிக்கொண்டு (அப்பணந் தந்தார்க்கு வேண்டிய) ஆடைகளையும் ஒப்பற்ற பல பண்டங்களையும் விற்றுவருகின்றேம் என்று (உண்மையைக் கருதிவரும்) வாணி பரும் உளரோ; (இல்லையென்றபடி.)

பணவாசையின் மிகுதிதோன்றப் "பொருள்கொண்டு" என்பதனை முன் வைத்துக் கூறினார்.

வாணிபராவார் லோகோபகாரத்தொழில் செய்பவரேனும் தம்தொழிற் பயனுண்மையை அறியமாட்டாதவராய்ப் பணவாசைகொண்டு அலைவாராதலின் இங்ஙனம் கூறினார். " நீதி- கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பாரமே-னடத்துவாய் " என்று வணிகனைப் புக ழேந்தியார் வருணித்தார்; தற்கால வணிகமாக்களோ தருமந் திறம்பித் தொழின் முறை தவறி னரைக் கொள்ளையடிப்பவராவர்.

[பலப்பல பண்டம் பார்கொள் கருவியாம்—பணத்தினைக் கவர்ந்துமுறை பதகர்நிலை யெவன்கொல்]

பார் பல பல பண்டம் கொள் கருவி ஆம் = நிலவுலகத்து மக்கள் (தமக்கு வேண்டிய) பலப்பலவாகிய பண்டங்களையும் பெறுதற்குத் துணையாகின்ற;

பணத்தினை கவர்ந்து மறை பதகர் நிலை எவன்கொல் = பணத்தைத் திருடிக்கொண்டு (பிறர் எடுத்துக்கொள்ளக் கூடாத அத்துணைக் காப்புவாய்ந்த இடத்திலே) மறைத்துவைக்கின்ற பாதகர்களின் நிலைமைதான் யாது; (மிக்கதோரிழிவுடைத்தாம் என்றபடி.)

உலகத்திலுள்ள பலவகைப்பண்டங்களையும் வாங்குதற்பொருட்டே பணம் உபயோகப்படும்; அவ்வுபயோகத்தை அடையவிடாமற் றடுத்தல் பழியாகும்; ஆதலின் அங்ஙனம் செய்வார் "பதகர்" எனப்பட்டார். பொருள்களை வாங்குதற்பொருட்டுப் பணம் உண்டாயதாதலின் "பலப்பல பண்டம்" என்றும், பணவாசையால் இவ்வுலகத்தார் எவற்றையுங் கொடுப்பர் என்பது போதரப் "பலப்பல" என்றும் கூறினர் என்க. (சிலவற்றைச் சில்லோர் கொடுக்கார் என்பது குறிப்பு.) நிலவுலகத்து மாக்கள் கற்பனையே என்பது தோன்றப் "பாரகோள் கருவியாம்" என்றும், எல்லாரும் முயற்சியானும் உலக காரியங்கள் நடைபெறவும் சில்லோர் பணம் படைக்கும் பல்லோர் வறிஞராய் இருத்தலும் அச்சில்லோரது கள்ளத்தனமே என்பது போதாக் "கவர்ந்து" என்றும், உலகத்திலே உலாவவிடாது பூமியினகத்தாதல் காப்புற்ற இடத்தினாதல் மறைத்து வைப்பது தமக்கும் பிறர்க்கும் கேடுவிளைக்குந் தன்மைத்தாதலின் "மறைபதகர்" என்றுங் கூறினர். "பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைக்கும்—கேடுகெட்ட மானிடரே * *" என்றார் பெரியாரும். இங்ஙனம் புரிவாரைக் கயவரென் றிகழ்ப.

பல்லோர் கூடி ஒரு மல்லனை பாற்றுவர் = பலரும் ஒருங்கு சேர்ந்து மற்போரவல்லான் ஒருவன் வலிமையை [illegible] கெடுக்கிடுவர்;

உம்மை [illegible] நோக்கது; "நினைத்தால் ஒருவனைச் செல்வனாக ஆக்கிவிடுதலுங் கூடும்" என்பது போல்வனவற்றை [illegible] தழீஇக்கொள்க. "இரவுக் குணவிலா வேமை யாளரைப்—பரவுத் தனைத்துணை பணமும் [illegible]ல்லுமே" என்பது நோக்கற்பாலது. சில்லோரால் முடியாது என்பது குறிப்பு.

எல்லோரு[illegible] [illegible]ணர்ந்து = உலகத்து மக்களெல்லாரும் (அறிவின் பகுதியிலே) ஒற்றுமைப் பட்டு;

கூடல் இரு[illegible] [illegible]ர் தமிழ் வல்லாங்கு ஆய்ந்த வடி புலம் புலவருள் = மதுரையிலே (தமுமிய தமிழ்ச்சங்கத்[illegible] [illegible] [illegible]றிருந்து இனிய தமிழ்மொழியின் இயல்பைத் தந்தம் வன்மைக்கிசைந்தபடி ஆரா[illegible] [illegible]மையானே (குற்றமெல்லாம் நீங்குமாறு) வடித்தெடுத்த தூய்மையான நூல்களை [illegible] [illegible]ந்த (பொய்யடிமை யில்லாப்) புலவர் தமக்குள்ளே;

பாண்டிய[illegible] [illegible] [illegible]ராகிய கூடல் எனனும் மதுரைப்பதியைமட்டும் புலவர்பெருமக்கள் [illegible] [illegible]பந்த தலமாகக் கூறினர் "செந்தமிழ் நாடே—சந்தனப் பொதியச்செ[illegible] [illegible]ளரசர பாண்டியனெனுந்தமிழ் நாடனைந—சங்கப் புலவருந் தழைத்த[illegible] [illegible] [illegible]ண்டி வளநாடென்ப" வாகலின். இனி [illegible] சாரார சோழநாட்டையும் [illegible] [illegible]. "செந்தமிழ் நாடே—மன்ற வாணன் மல[illegible] [illegible] நளாற்—றென்றமிழ் மகி[illegible] [illegible] [illegible] வடிபவா கூட்டமு மாதிச சங்கமும-படியனை [illegible] [illegible]ரவுறு சோழனு[illegible] [illegible] [illegible]தவருந் தழைத்திரி நீருகத்—மையறு சோழ வளநா[illegible] [illegible]ரவுறுரு செய்யுளுங் காட்டுவர். "கூடலிலாய்ந்தவொண் டீந்தமிழின் றுறைவாய்" என[illegible] [illegible]யாருங் கூறுதலின் அவர் கூற்றுப் பொருந்தாதென்க. சேருவரையரும் நச்சினார்க்கி[illegible] [illegible] [illegible]வையை யாற்றின் வடக்கென்று கூறுவர். பண்டைய பனுவலகளெலலாம பாண்டியனையே தமிழ்நாடன் என்று கூறுகின்றன.

முற்காலத்துப் புலவர்பெருமக்கள் பிற்பாலை[illegible]ப் புலவர் போலாது தங்கள் மனவியற்கைக் கொத்தவற்றையே பெரும்பாலும் பாடிவந்தனர் என்பது தோன்ற "வல்லாங்கு ஆய்ந்த" என்று கூறினர். எல்லாவற்றையும் ஒருவராகப் பாடுதல் வதம்பயக்கு மென்ப. பலரும் தந்தமக்கியற்கையிலே அமைந்து கைவந்த விடயங்களைப் பாடிய பாக்களுள் தலைசிறந்தனவற்றையே நூல்களாகத் தொகுத்திருத்தலின் "வடிபுலப் புலவருள்" என்றார். அவர்செய்த புலமும் வடிபுலம், அவர் தாமும் வடிபுலமையாளர் என்க. "மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்—கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய—பாலையோ தல்லாந்தை பன்முல்லை பேயனே—நூலையோ தைக்குநூறு" என்பது முதலியவற்றையும் நோக்குக.

ஒருவர்க்கு இணை ஆ(க) உயர்குவர் கொல் = ஒரு புலவர்தம் ஆற்றலுக்கு ஒப்பாக உயர்ச்சி பெறுவார் கொல்லோ; (பெறார் என்றபடி.)

இவர்களது தாழ்வும், அவர்களது பெருமையுந் தோன்ற "உயர்குவர் கொல்லோ" என்றார். இதனானே புலவோர் சிறப்புக் கூறப்பட்டது. "ஆயிரவ ராவு மறிவிலார் தொக்கக்கணா—மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார் * *" என்றார் மூன்றுறையனாரும். "கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு—மலரவன் வண்டாமரைக் கொவ்வான்—மலரவனசெய்—வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு—மற்றிவர் செய்யு முடம்பு" என்பது நீதிநெறிவிளக்கம்.

இ இ வகையால் இ இவை இவர்க்கு இவர்க்கு = இந்த இந்த முறையாக இந்த இந்தப் பொருள்களை இவர் இவர்களுக்கு;

[ஈந்தாந் தனிசா வெனவேட் டெழுதித்—தாஅந் தருக்கித் தழைசெல் வோரெனச்—சாஅந் துணையுஞ் சார்தற் கறிவிலர்]

தனிசு ஆ(க) ஈந்தாம் = கடனாகக் கொடுத்திருக்கின்றோம்;

என எட்டு எழுதி = என்று கணக்குப் புத்தகத்திலே எழுதிக்கொண்டு;

"எழுதி" என்னும் இலேசானே உறுதி, கணக்குப் புத்தகம் முதலியன பெறப்படுதலின் "என + வேட்டு" என்று கண்ணழித்துப் பொருளுரைத்தலும் அமையும்.

தழை செல்வோர் தாம் என தருக்கி = தழைத்திருக்கின்ற செல்வம் படைத்தவர் தாம் ஒருவரே என்று செருக்குற்று;

சாஅம் துணையும் சார்தற்கு அறிவு இலர் = இறக்கும்வரையும் (மனத்திருத்தியை) அடைந்திருத்தற்குரிய அறிவுடையாருமிலர்;

உண்மையிலே பணத்தைக் கொடுக்கல் வாங்கல் செய்வார்க்குப் பலகஷ்ட நஷ்டங்களுமுண்டு. இவர் தமக்கு எப்போதும் அமைவில்லை. இவற்றைக் குறித்தற்கே "தாஅம்", "சாஅம்" என்னும் அளபெடைகள் வந்தனபோலும். முடிவில் இறந்துபோதல் வேண்டும் என்பது குறிப்பு.

உலகின் பொதுக்காரியங்களை நடத்தற்கு நிதியுடையார் உதவல் வேண்டும். கொடுக்கல் வாங்கல் செய்தற்கென்றே நிதிபடைத்தார் தம்மினும் இக்கூறியவரே சிறந்தார் என்பது கருத்து; இவராலே கெடுதியில்லை ஆதலினென்க. "பண்புதரு நல்வழியிற் பாத்தளியா தேபணத்தை—மண்ணிற் புதைத்தால் வளர்ந்திடுமோ—கண்படைத்தும்—பார்க்காமற் சென்று படுகுழியில் வீழ்ந்தக்கா—லார்க்குண்டா சோவென் றறை" என்றார் பிறரும்.

மிகுதியாகப் பணம்படைக்க வேண்டுமென்று அவாவுவாரை நோக்கி இது கூறப்பட்டது. பணமிருந்துதான் லோகோபகாரம் செய்தல்வேண்டும் என்னும் நியதியில்லையென்ப.

நரையே திரையே மூப்பே பிணியே கருது சாக்காடே இன்ன கதுவுறூஉம் நாற்றம் உடற்கு ஆளா(க) நயந்து தருக்கு உறுவோம் = மயிர் வெளுத்தல், தசை சுருங்கல், முதுமை கொள்ளுதல், நோய்வாய்ப் படுதல், நினைக்கின்ற இறந்துபோதல் என்னும் இவைகளெல்லாம் பற்றுவதற்குக் காரணமாகியதும் துர்க்கந்தத்தை உடையதுமாகிய இந்த உடலத்திற்கே அடிமையாகி விரும்பிச் செருக்குறுகின்ற நாம்;

நரை முதலாகியவற்றிற்குக் காரணமாகிய உடல், அழியும் உடல், அது (புன்) நாற்றவுடல் என்க. தேகாபிமானத்தாற் றுன்பமேயன்றி இன்பஞ் சாராதென்பது தோன்றக் "கதுவுறூஉம்" என்றளபெடுத்தது. நரை முதலாகியவற்றிற்குக் காரணமாயிருப்பினும் நறுமணங் கமழும் உடலமாயின் ஒருவேளை போற்றல் தகும், அதுவுமில்லையே என்பது தோன்ற "நாற்றவுடற்கு" என்று உடலொடு பொருத்திக் கூறினார். பின்னர் "நறுமணம்" என்று விதந்தோதப் பெறுதலின் "நாற்றவுடல்" என்னுமிதற்கு இங்ஙனம் பொருளுரைத்தாம். உடலின் இழிவு தனை முன்னர் விளக்கினோமாதலின் இங்கே விரித்திலம். இறத்தலை இன்னதென்று அறிதற்

கருமையா யிருத்தலின் "கருதுசாக் காடு" என்றார். மரணத்தை நினைப்பின் தேகாபிமானம் பொருந்தாது என்பது தோன்றற்கென்றுங் கூறுப. "இறப்பெனு மெய்ம்மையை" என்றார் கம்பரும். நரை திரை முதலியவற்றாற் றேகப்பற்று நீங்குதலினும் இறத்தலைக் கருதுதலினுமே நனி நீங்கும் எனபது தோன்ற அங்ஙனங் கூறினாராம்.

நறு மணம் உடலம் = நல்ல வாசனையை இயற்கையாகப் படைத்துள்ள தேகத்தையும்;

[நாள்பல நண்ணல்] பல நாள் நண்ணல் = பலகாலம் சீவனைப் பொருந்தியிருத்தலையும்;

[பெறு திரு பிறவும்] பெறு பிற திருவும் = பெறற்பாலனவாகிய ஏனைய செல்வங்களையும்;

பிணியற்றிருத்தல், வல்லமை பெற்றிருத்தல், செல்வமுதலாகிய வளம்பெற்றிருத்தல் முதலியவற்றையே ஈண்டுக் குறிப்பித்தார். பசியற்றிருத்தலையும் வேண்டுமேல் இயைத்துக் கொள்க. துர்நாற்றத்தைப் போக்குவதே மக்களுக்குப் பிரதானமாதலினாலும், அது வாய்க்கப் பெறின் நீடித்திருக்கவேண்டிய எண்ணம் நீடித்துவருமாதலினாலும் முதற்கண் "நறுமண வுடலம்" என்பது கூறப்பட்டது.

பெற்றாம் எனின் = நாம் பெற்றுவிட்டோம் ஆனால்;

பெறுவதியாண்டு மில்லையென்க. பெறாமைக்குக் காரணம் இந்நூலாசிரியர் கூறிய ஓம்படைச்செய்யுட்கண் நனகு விளக்கப்பட்டிருத்தலின் ஆண்டுக் கண்டுகொள்க.

எ துணை வீறு உற்று எமாப்பு உறுவோம் = எவ்வளவு பெருமிதங்கொண்டு இறுமாப் படைந்திடுவோம்;

கடவுளர் இது கருதியன்றே நமக்குச் சின்னாட் பல்பிணிப் புன்மையாக்கை அளித் திருக்கின்றார்.

பார் நடை முற்றும் பயின்றும் = உலக நடையை எல்லாரும் முழுதும் பயின்றிருந்தும்;

உலகத்திலுள்ளவையெல்லாம் அழியுந்தன்மையுடையன இழிவுடைய என்று எல்லாரும் அறிந்துவைத்தும், பாசமயககமேலீட்டால் அறிந்தவாறு நடந்து நடக்கின்றாரில்லை யென்பது குறிப்பு.

[ஆர்கொ லின்னவை யறிந்துநடக் குநரே] இன்னவை அறிந்து நடக்குநர் ஆர் = இவற்றை உண்மையில் அறிந்து அறிந்தவாறே நடப்பவர் யாவர்; (ஒருவருமில்லை யென்றபடி.)

"பலதிரண்ட செல்வத்தைப் பார்க்கிற் கனவா—மலர்திரண்டாற் போலிளமை வாடுஞ்—சிலதிகழ்ந்த—மன்னே நேசமுமவ வாழ்நா ளிவையிற்றை மெய்யென்றிட்—டுன்னக் களிப்பாருளர்" என்றார் பெருந்தேவனாரும்.

---

(54) மக்க டாமே பல்வகைக் குணத்தர்
மிக்கோ ரென்ன வியத்தலு மியல்பெனல்.

மக்க டாமே வேண்டு வகைபுரீஇத்
தொக்குமகிழ் தூங்கித் துலங்குந ரிவரே
தமக்கின்றி யமையாத் தன்மைய வற்றைப்
போற்றுநர் பகைதமைப் பொருதழிக் குநரே
யேனைய வற்றை யெவன்கொல செய்குநர்
புன்முத லாய நிலையுயிர்ப் பொருளு
மெறும்புமுத லாய வியங்குயிர்ப் பொருளு
மெவன்கொல் புரிபு மியாவர்தாம் புரக்குநர்

னன்னோன் சார்பி னடிக்கீ ழுவரிற்
பலரே சிலபெற் றுப் பலமுரண் விளைக்குந
ரிஃதெரி யுற்றுங் கிளைபொரு ளழிதல்
காணாது துயில்வோன் கனவிடை மனக்கு
நல்லன நுகர்ந்து நகைத்துமகிழ்ந் தாஅங்
கோங்குபெரும் பணியு மொபயில் பட்டமும்
பாங்கெனப் பெரீஇப பசசென் றமைகுநர்
முன்னோர் துன்புற முரண்டுழபல் குநரே
இனியே,
பனுவல் வகையினும் பல்பல வேற்றுமை
நாட்டுமொழி தம்மினு நவில்பல வேற்றுமை
திணையினு நிலையினுஞ் சீர்சா னிறத்தினுங்
கணியின் மனவிரு டணக்கருங் கடவுட்
பணியினும் பலப்பல வேற்றுமை மன்ற
வாய்க்குபல வேற்றுமை வமைந்துநிலை போக்குந
ஆகலின்,
சென்றன செல்க சேர்வன கருதி
யொற்றுமை கொள்ளுமி னொற்றுமை கொள்ளுமின்
கற்றறி மாந்தர்தங் கட்டிட் புகுநதமைந்
தொற்றுமை கொள்ளுமி னொற்றுமை கொள்ளுமி
னமதுகுறிப் பென்னு நற்சுவைய பழந்தான்
பழுத்து நின்று பதன்பெற் றிட்டது
நாள்பல கழிப்பி னயன்கெட் டழியும்
பறவை முதலிய பார்த்துணர்ந்து முண்ணுங்
கள்வர் கதுவிக் கவர்கினுங் கவர்குவர்
கொடுங்காற்று வந்து குலைப்பினுங் குலைக்கும்
அதனால்,
காலங் கழித்தனங் கடமையு மன்று
ஞாலம் பழிக்கு நாமது பெறுவிடற்
செய்வன செய்மின் றவிர்வன களைமி
னறிவு மாற்றலு மறனும் பொருளு
நறுமணங் கமழு நல்வழி யின்பமும்
பொறுமையு மாட்சியும் புரைதீர் புகழும்
வறுமையறப் பெரீஇ வாழ்குவிர் பெரிதே
யிழிவுக் குலத்தின ரென்றுநா மல்லே
மடிமைக் குரிய மொற்றுநாட் டவரலே
முப்பொழு துணர்ந்த முனிவருந் தேவரு
மொப்பில் வேந்தரு முயர்நூற் புலவருங்
கொற்றம் பலதருஉங் கொடுங்கண் மறவரும்
பொன்மணி வெள்ளிப் பொருப்புகள் பலவும்

கலந்து சூழ்ந்து குலவுவா ராடி
ஞாலம் புகழப் பாடிப் பரி தாமுடனே
பொன்றுறிமை கருதி யினிதே
நன்னர்வினை பலவா நாடு முயல குவிதே.

— ———

(இ-ள்.) [மக்கட்டாமே வேண்டுவகை புரீஇத்-தொக்கு மகிழ் தூங்கித் துலங்குநர்] மக்கள் தொக்கு தாம் வேண்டுவகை புரீஇ மகிழ் தூங்கி துலங்குநர் = மாந்தர்கள் ஒன்றுகூடித் தாம் (விரும்பியவற்றை இலகுவின்மேல் அடைதற்கு) வேண்டிய வகைப்பட்ட காரியங்களைச் செய்து முடித்து (முடித்தமையாற்றமது குறையெல்லாம் நீங்குதலின்) மகிழ்ச்சி மிகவுடைந்து விளங்குகின்றனர்.

கூடுகின்றவர் மக்களாதலின் முதற்கண் "மக்கள்" என்றும், தமக்குரியவற்றை நிறைவேற்றுதற்பொருட்டே குழுமுவராதலின் "வேண்டுவகை புரீஇ" என்றும், புரிதற்பொருட்டே கூடுவராதலின் "தொக்கு" என்றும், ("மக்கள்" "தொக்கு" என்பன எழுவாய்களாக அமைந்த காரணமும் இதுவே போலும்.) குழுமுதலான் வருவன மகிழ்வும் விளக்கமும் பெறுதலுமாதலின் "மகிழ் தூங்கித் துலங்குநர்" என்றும் கூறினர். வேண்டுவகையைப் புரிதல் போதே மேலே இங்கெடுத்துக்கொண்ட இன்றியமையாச் சாதனமாதலிற் "புரீஇ" என்றெடுத்தனர்.

இவரே = (தமக்கு வேண்டியவற்றை ஒன்றுகூடிப் புரிந்துகொடுக்குஞ் செய்கைகளையுடைய) இவர்தாம்;

தமக்கு இன்றியமையா தன்மையவற்றை போற்றுநர் = தங்களுக்கு எவை இல்லாவிடின் (வாழ்க்கை) நிறைவுறாதிருக்குமோ அவ்வியல்புடையவற்றைப் பாதுகாத்து வருகின்றனர்;

எனவே மக்கள் போற்றிவருவனவெல்லாம் தங்கள் வாழ்க்கையை வளர்த்துவருதற் பொருட்டாதலிற் சுயநலமே கருதிவருவர் என்பது புலனாயிற்று.

இன்றியமையாதது-இல்லாவிடின் நிறைவேறாதது; உணவின்றிப் பசிதணித்தல் இல்லாமையின் அவ்வுணவு பசிதணித்தற்கு இன்றியமையாப்பொருள் எனப்படும்.

பகை தமை பொருது அழிக்குநர் = (தங்கள் வாழ்க்கையின் வளர்ச்சிக்கு மாறாகி) இடையூறு செய்யும் எவற்றையும் அடர்ந்து (மூலவேரறச்) சிதைத்துவிடுகின்றனர்;

"பகை" ஈண்டுப் பன்மைப்பொருள் பயத்தலின் "தமை" என்றார்.

ஏனையவற்றை ஏவன்கொல் செய்குநர் = (வாழ்க்கை வளர்ச்சிக்கு வேண்டியதன்மையெல்லாம் தருவனவற்றைப் போற்றியும் இடையூறு செய்வனவற்றை அழித்தும் வருவனவல்லாத) மற்றையவற்றை யாதுதான் செய்துவருகின்றனர்;

போற்றுதும் அழிக்காதும் எனவே ஒன்றுஞ் செய்யாது விட்டு வருகின்றனர் என்க.

புல் முதலாய நிலை உயிர் பொருளும் = புல்லை முதலாகவுடைய இடம் பெயரா திருக்கின்ற சீவராசிகளும்;

நிலைத்திணைப் பொருளைத் தாவரசங்கமம் என்றும் அசரம் என்றும் கூறுப.

எறும்பு முதலாய இயங்கு உயிர் பொருளும் = எறும்பை முதலாகவுடைய நடமாடித்திரிகின்ற சீவராசிகளும்;

மூச்சுடையதாகிய இயங்குதிணைப்பொருள் சரம் எனப்படும்.

ஏவன் கொல் புரியும் = (தந்தம் வாழ்க்கையை வளர்த்து நிறைவுறக் கொடற்பொருட்டு) யாதுதான் செய்யும்;

யாவர் தாம் புரக்குநர் = (அவற்றையெல்லாம்) எவர்தாம் காப்பாற்றுகின்றனர்

உயிர்ப்பரப்பு மலமகன்று உய்தற்பொருட்டு ஐந்தொழில் நடாத்திவரும் இறைவனே காப்பாற்றி வருகின்றனன் என்க.

நென்முதலாய பயிர்களையும், தெங்கு முதலாகிய விருக்ஷங்களையும், மல்லிகை முதலாகிய பூங்கொடிகளையும், ஆடு மாடு குதிரை முதலாய விலங்குகளையும், கிளி முதலாய பறவைகளையும் மக்கள் ஓம்பிவருதலும்; பாம்பு, தேள், கரடி, புலி, காஞ்சிரை, காஞ்சோன்றி முதலியவற்றை அழித்துவருதலும் மெய்யே எனினும் மக்கள் தங்கள் தங்கள் சுயாலங் கருதியேயன்றி அவைதம் பொருட்டுப் போற்றியும், அழித்தும் வருவதில்லை. அன்றியும் அவர்கள் முயற்சியாற் புரக்கப்படுவன யாண்டும் பொலிவடைந்தும், அழிக்கப்படுவன அறவே அழிந்தும் வருவதின்மையால் இறைவனது ஆணையின் பேராற்றலே மேலாய் விளங்கும் என்பது இனிது பெறப்படும்.

அரசியலையும் மக்களையும் பற்றிக் கூறவந்த இச்செய்யுட்குத் தொடர்பில்லாத மேலை அடிகளை ஆசிரியர் புணர்த்தியது குற்றமேயெனில் அற்றன்று, தமிழ்மொழியினதும் அம்மொழி பேசுவோரினதும் நிலைமையை நினைந்து ஆசிரியர் வருந்துழி ஏனைச்சீவராசிகளினது நிலைமையும் இறைவனது திருவருட்காப்பும் அவர்கருத்துப்புலப்பட்டுக் கவிதையாகிச் சுரந்து, அச்சுரந்த கவிதையுள்ளே தமக்கு ஆறுதலளிக்கத்தகு இவ்விடமாதலின் இதனை முதற்கட் கூறினார் என்க. அன்றியும் இவரை ஒப்பப் பண்டைச் சங்கத்தாரும் பாடியிருத்தலைக் காண்க.

இனிமே = அப்பால்;

நம் உறு மொழியும் = நமக்குப் பொருந்திய பாடையும்;

தாய்மொழி என்பது போதர "நம்முறு மொழி" என்றார். பாடை வளர்ச்சியடையாவிடின் ஏனையவெல்லாம் தாமே குன்றிவிடுமாதலின் முதற்கண் இது கூறப்பட்டது. இங்ஙனம் கருதப்பட்டது தமிழ்மொழி என்க. கனவிற் பிறபாடை பேசுவது மிகுதியும் கிடையாது என்பது கருத்து. சுயபாடையிலே நினைத்தற்கான பிறபாடையில மொழிபெயர்த்தல் வேண்டுமென்ப. நமது ஏற்றத்திற்குத் தக்கமொழி என்பது குறிப்பு. இதைக் கருதியே "நம்முறு மொழி" யென்றாருமாம். தொழிலாளிகளுக்குப் பாஷாவிற்பத்தி யில்லாமையானே நமது நாட்டுத் தொழில்களெல்லாம் மறைந்தொழிந்தன என்பதூஉஞ் சிந்திக்கற்பாலது.

நம் உறு பொருளும் = நமக்குப் பொருந்திய பொருள்களும்;

நம் முன்னேற்றத்திற்குரிய பொருளுமாம். பிறர் பொருள் பிறர்க்கு நலன்பயத்தலின் "நம்முறு பொருள்" என்றார்.

நம் உறு தொழிலும் = நமது (பாடைக்கும், நாட்டிற்கும், வாழ்க்கைக்கும் இன்றியமையா முன்னேற்றத்திற் குரியனவாய்ப்) பொருந்துகின்ற தொழிற்றுறைகளும்;

நாம் போற்றிலெம் = நாம் பாதுகாத்து வருகின்றோமில்லை;

பிறமொழி பொருள் தொழில பேணி வளர்க்குநம் = பிற பாடையையும் பொருளையும் தொழிற்றுறைகளையும் காப்பாற்றி வளர்த்துவருகின்றோம்;

இச்செயல் நமது தாழ்விற்கும், பிறரது வாழ்விற்கும் காரணமாகும். நமது மொழி முதலியவற்றைப் போற்றிலெம் என்பது கொண்டு பிறமொழி முதலியவற்றைப் போற்றிவருகின்றேம என்பது பெறப்படுமாதலின் இங்ஙனம் விரித்தது மிகையேயெனில் அற்றன்று தெளிவுறவற்புறுத்தற் பொருட்டு விரிக்கப்பெற்றதாதலின் என்க. நம்முறு மொழி முதலாயவற்றைப் போற்றிலோம் என்னின் மந்தராயினோம் என்பது பெறுதலும் முறையாதலின் அங்ஙனம் கூறினார் என்றுங் கூறுப.

நாமே = நாம் தாமே;

உண்ணும் உணவே = உண்டுவருகின்ற உணவே;

உரைக்கும் உரையே = பேசிவருகின்ற பாடையே;

உடுக்கும் உடையே = உடுத்துவருகின்ற உடையே;

[அடுப்பன [illegible]] பிற அடுப்பனவே = இவையல்லாத வினையவாகிய நம்மை அடுத்துவருகின்றவைகளை;

...உபயோகமான பெட்டி, பேழை, இருக்கை, ஊர்தி, குடை, பாதரக்ஷை, விளக்கு, மனைக் குரியன... ...த்தற்குக் கருவியாகிய அடுப்பு முதலியனவும் அன்னபிறவுமாம். பழக்க வழக்க வொ... ...ளாம் ஈண்டே அடங்கும்.

...ற இவை முதலா(க) இயைந்தன இரவல் = என்று சொல்லப்படும் இவற்றை முத லாக ... நம்மிடத்திற் பொருந்தியுள்ள எல்லாம் யாசித்துப் பெற்றவை யாகும்;

...ல் என்பது முகமாற்று; மீண்டுந் தருவதாகக் கொள்ளப்படுவது. எனவே சொந்த மற்றது.

...ற நாட்டவர்தமைப் பேணி நம் உற வாழ்க்கை ளர்ப்பது வாய்க்குங்கொல்லோ = பிற நாட்டிலுள்ள பொருள் முதலாகியவற்றை விரும்பி (நமது நாட்டனவற்றை வெறுத்து) வருதலி னாலே நமக்குற்ற வாழ்க்கையை (த் தாழ்ந்துபோக விடாமல்) வளர்த்து வருதற்குப் பொருந்துமா; பொருந்தாது என்றபடி.

பிறநாட்டனவற்றை விரும்புதல் பரதார விருப்பத்தை ஒக்கும்; நம்மவளல்லா அயன் மாதரைச் சகோதரிகளாகக் கருதல் முறையாதலின் அம்முறைபோலப் பிறநாட்டனவற்றை விரும்புதலன்றிக் காதலித்தல் குற்றமாகும். ஏற்ப விரித்துரைத்துக் கொள்க.

உலகு முடிகாறும் உவந்தாங்கு நடை பெறற்கு இயலுமேகொல் = (பிரளயம் வந்து அழித் தலினாலே) இந்த உலகம் அற்றுப்போகும் அக்காலம் வரையிலும் அப்பிறநாட்டோடு உவந்த படியே நடந்துவருதற்கு முடியுமா; முடியாது என்றபடி.

பிறநாட்டை நம்பி எதிர்பார்த்துவரின நம்பால் உவப்பிருக்கும் வரையும் தருதவும்; வெறுப்படையிற் றராதுவிடும்; பின்பு நமக்கு வேண்டியவற்றைத் தருபவர் யார்? ஆதலின் வேண்டிய எல்லாவற்றையும் நமக்குரியனவாக அமைத்துக்கொள்ளுதலே முறைமையாகும் என்பது குறிப்பு.

பகைமை இயையாது கொல் = மாறுபாடே உண்டாகாதோ; நிச்சயம் உண்டாகும்.

இங்ஙனம் உடை முதலியவற்றிற்குப் பிறரை நம்பிவந்தால் ஒரு காலத்திலே அவமானம் எய்துவோம் என்பது கருத்து.

ஆதலின் = அதுகாரணத்தாலே;

நம் உறு தொழில் முதல் நண்ணிய எவற்றையும் = நமக்குற்ற பாடை முதலாகப் பொருந் திய எல்லாவற்றையும்;

நாம் இனிது போற்றி நயத்தல் வேண்டும் = நாம் நன்றாகக் காப்பாற்றி விரும்பிவருதல் வேண்டும்;

நயந்து போற்றல் வேண்டுமென்று முறைப்படி கூறாமற் "போற்றி நயத்தல் வேண்டும்" என்றமை என்னெனில் பிறநாட்டுப் பொருள்களை நெடிது பழகிவந்தார்க்கு அவைமாட்டே மனவிருப்புச் செல்லுமன்றித் தேசாபிமானங்கருதித் தம்முறு பொருள்களைப் போற்றிவந்தாலும் அவற்றைத் துய்த்தற்கு விரும்பார் என்பது கருதி அங்ஙனம் கூறினார் என்க. சுவைநல னற்ற ஆகாரத்தை நெய்யுங் குணநலன் கருதிப் பொருந்துழிக் கொள்ளற்பாலதேயாம்; அதுபோல நம் முன்னோர் காட்டிவைத்த விதிகளிலே சில பல அநுட்டித்தற் கரியனவாயினும் விளைபலன் கரு தித் தழுவற் பாலனவேயாம் என்பது குறிப்பு.

பிறர்க்கு உரிய எல்லாம் = பிறநாட்டார்க் குரிமையாகிய பொருள்களெல்லாம்;

பெரிது மயக்குவ = மிகுதியாக நமது மனசினை மயக்கி வசீகரிப்பனவாகும்;

"பெரிது" என்றது மயக்குந் தன்மையின் வன்மைமிகுதியை ஆதல் காலநீட்சியை யாதல் காட்டும்.

இவ்வசீகரணம் அறிவிலிகளை மயக்குகின்ற பரத்தையர் வசீகரிப்பை ஒக்குமேயன்றி, அறிவாற்றல் படைத்தார்மாட்டுச் செல்லும் வன்மையிலது. பிறநாட்டவற்றிற்கு மயங்குவோர் பொறியின்வழி மனசினையும், மனசின்வழி அறிவினையும் *சென்றுள விடுப்பவராவர் என்க.

அவாஅ அறுக்கும் ஓர் ஆற்றல் மேற்கோடல் = (கண்டவற்றையெல்லாம் விரும்பிப் பற்று தற்குரிய) ஆசையை அழிக்கும் ஒப்பற்ற வல்லமையை மேற்கொள்ளுதல்;

அவா + வறுக்கும் என்றும் கண்ணழிப்ப. மெய்ப்பொருண்மேலுள்ள பற்றினை வைத்துக் கோடல் வேண்டுமென்பார் "அறுக்கும்" என்றும், அறுத்தலின் அருமைதோன்ற "ஓராற்றல்" என்றும் கூறினர். "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்-பற்றுக பற்று விடற்கு". என்றார் குறளினும். பிறநாட்டவற்றால் ஏதமே பயக்கும் என்றறிந்தவுடன் அவற்றினமேல் வெறுப்புத் தானே அமைந்துவிடும் என்ப. "ஒருவன் பிறநாட்டுப் பொருண் முதலியவற்றுள்ளே யாதொரு பொருளிடத்துப் பற்று நீங்கினான் அவன் அப்பொருளால் துன்பம் எய்துதல் இலன" என்றா பிறரும்.

தவாஅ ஒழுக்கம் ஆ(க) தாம் கொளல் வேண்டும் = தவறாத ஒழுக்கமாகத் தாம் கொள்ளு தல் வேண்டும்;

"ஒழுக்கத்தி னொல்கா ரரவோர் * * * *" என்னுங் குறளுஞ் சிந்திக்கற்பாலது. புற நாட்டுமொழியே பொருளே என்னும் இவற்றின்மேலுள்ள பற்றுக்களை முற்றத் துறந்தார்க்குச் சுயவாட்சி கிடைத்தல் எளிது. இதனானே துறவின் பெருமையும் நன்கு புலனாகும்.

இவ எ(ல்)லாம் இயைவான் ஏற்றவை சூழ்ந்து போற்றல் = இவைகளையெல்லாம் நாம் அடையும்பொருட்டுத் தகுதியானவற்றை ஆராய்ந்து செய்துவருதற்கு;

பிறநாட்டவற்றைப் பேணாது தன்னாட்டவற்றையே பேணிவருதலாகிய இவைதம்மை எனவிரித்துக்கொள்க. சுயவாட்சி பெறாது இவற்றைச் சூழ்தற்கும், போற்றுதற்கும் இயலா வென்க. இனிது முற்றமற் றடைப்பட்டுவிடுமென்க.

நம் ஆட்சி பொருந்தல் வேண்டும் நமக்கு இசைவதாகிய ஆட்சியை நாம் அடைந்திருத் தல் வேண்டும;

நம் + மாட்சி என்று கண்ணழித்துப் பொருளுரைப்பிற் றொடர் பொருட்கு முரண்படும்.

படைத்துணை இல்லீர் = (அங்ஙனம் சுயவாட்சி பெறுதற்கு ஏற்ற படையாகிய துணை யுடைமை இல்லீர்;

படை துணை எனப்பாடங்கொண்டு படையுந்துணையு மிலலீர் என்பாருமுண்டு. இனி "மறத்துறை", "அறத்துறை" என்பனவற்றை அடியார்க்குநல்லார் உம்மைத்தொகையினவாகக் கொண்டனராதலின் "படைத்துணை" என்னும்தற்கும் அப்பொருளுண்டென்க. படையும் அதற்கேற்ற துணையும எனப் பொருள் கொள்க.

பயன் பெறுகில்லீர் – (அவ்வின்மை காரணத்தானே நீவீர் கருதிய) பயனையும் பெற மாட்டீர்;

சுயவாட்சி பெற்றக்கால் அப்பேற்றால் விளையும் பயனை அடையவிடாது அயல் நாட்டார் முதலியோர் நலிவுசெய்வர், ஆதலிற் பெற்றும் பயனில்லை என்றும் கூறுப. இனி அது பெறு தற்கே அத்துணை வேண்டுமென்றுங் கூறுப.

நடை துணை மேஎய் நன்று பெறல் பாலீர் = உமது ஒழுக்கத்தையே (சுயவாட்சி பெறுதற் குத்) துணையாகக்கொண்டு நன்மையை அடைதற் குரியவராவீர்;

நடையும் அதனுக்கேற்ற சாதனுமாம். பிறர்க்குரியவற்றைப் பேணாது தமக்குரியவற் றையே பேணுதல், இப்பேணுகைக்கு அவாவறுக்கும் ஓராற்றலைத் தவாஅ வொழுக்கமாகக் கோடல் வேண்டுதல் என்னும் இவையே அவவொழுக்கம் என்க.

இனி இவற்றைப் பழகிவருதற்குரிய வாயில்களைக் கூறுவர்.

தம் உறு செயலை தாம் பேணுதல் = தங்களுக்குப் பொருந்திய காரியங்களைத் தாமே [illegible]வருதலும்;

தம்முடைய மொழி முதலியவற்றை வளர்த்தற்குரிய செயலே "தம்முறு செயல்" என்க. பிறரை எதிர்பார்த்திருத்தலும், தம்முட் பலர் செய்யாதிருக்கின்றனரோ என்று தாமும் அயா

விட்டு வாளாவிருத்தலும் கூடாவாம் என்றபடி. "தாமும் பேணுதல்" என்றளபெடுத்தமையும் நோக்கற்பாலது. எவையாயினும் தாமே தம்மவற்றைப் பேணுதல் வேண்டும்; இடையறவு படுத்துதல் கூடாது என்றன்னபலவற்றையும் இது விளக்கும்.

வெம் உறு பிறர் செயல் வேளாது அகற்றல் = (வெளிக்கு நட்டும்) விருப்பத்தைக் காட்டுகின்ற பிறர் செயலைக் கண்டு (மயக்கங் கொண்டு) விரும்பாது புறத்தே ஒதுக்கிவிடுதலும்;

வெம்—கொடுமையுமாம். பிறர்செயலானே நமது மொழி முதலியன அழியப்பெறுதலின் அவர் செயலை "வெம்முறு பிறர் செயல்" என்றார். இதனானே தமர் வெம்முறு செயல் செய்வரேல் அவற்றையெல்லாம் வேட்டேற்றுக்கொள்ளல்வேண்டும் என்பதும் தம்முறு செயலைத் தாம் பேணுதலில் இழுக்குதல் கூடாது என்பதும் குறிப்பு. அவர் செயல் நாட்டு வேற்றுமையானும், இயற்கை மாறுபாட்டானும் கொடுமை பெற்றது என்டார் "வெம்முறு" என்றும், அக்கொடுமை பிறரானே சேர்வதாதலிற் "பிறர்" என்றுங் கூறினர். அச்செயல் அவர்நாட்டுக்கு நன்மையையும், நமது நாட்டிற்குத் தீமையையும் பயக்கும் என்பது குறிப்பு. நம்முடையன எல்லாம் பிறர் செயலாலே கெட்டழிகின்றனவென்று உள்ளக்கசிந்து உருகிவரின், நம்முடையனவற்றைப் பேணலும் அப்பிறவற்றை வெறுத்தலும் உண்டாதல் என்பவற்றை இவ்வடிகளாற் குறிப்பிட்டார். இனிக் கட்சி வேற்றுமையையுங் குறிப்பித்தாருமாம.

நலனே புரிதல் = (தமக்குப் பிறர் நன்று புரியினும் தீது புரியினும் அவர்தமக்கெல்லாம்) நன்மையையே புரிந்துவருதலும்;

தீமை புரிதல் தகாது; "புரிதல்" என்னுஞ் சொற்போக்கால் நினைத்தலும் கூடாது என்றருமாம். "தாந்தம்மையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை-யாந்தனையுங் காப்ப ரறிவுடையார்" என்பது மூதுரை.

நல்லன பேசுதல் - நன்மை தரற்பாலனவாகிய (இனிய) பேச்சுக்களைப் பேசுதலும்;

இதனையே இன்சொல் லென்றுங் கூறுப. "இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்—வன்சொலா லென்று மகிழாதே—பொன்செய்யுங் கதிர்வரவாய் பொங்கா தழற்கதிரா லுண்ணணை—கதிர்வரவாற் பொங்குங் கடல்" என்பது நன்னெறி.

[நிலனே போன்று சேர்ந்தன பொறுத்தல] சேர்ந்தன நிலனே போன்று பொறுத்தல் = (பிறரானே தமக்கு) உண்டாகிய துன்பங்களை நிலன் (எவையாயினும் எல்லாவற்றையும் பொறுத்துக் கொளகின்றதுபோல அவ்வாறே) பொன்று பொறுத்துக் கொள்ளுதலும்;

"அகழ்வாரைத் தாங்கு நிலன்போலத் தம்மை—யிகழ்வார்ப் பொறுத்த றலை", "தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்—பருவ முயற்சி யளவிற் பயத்தலு- மருவிய நன்னில மாண்பா கும்மே" எனபன நோக்கற்பாலன.

முன்னர் உளப்பாட்டுத் தன்மையிற் கூறியவர் பின்னர் முன்னிலையாக்கினமை நாட்டன வற்றையெல்லாம் ஒருங்காய்ந்தவர் சிலரை முன்னிலைப்படுத்தித் தங்கோள் விளக்குதற்பொருட்டு என்க. "முன்னோர் மொழிபொருளே யன்றி" என்னும் வெண்பாவின் அமைதியையும் நோக்குக.

அன்பு கைக்கோடல் = (மேற்கூறியவற்றையெல்லாம் அநுசரித்தற்கு இன்றியமையாச் சாதனமாகிய) அன்பினை ஆதாரமாகக் கொள்ளுதலும்;

நமது பாடை முதலியவற்றை விரும்புதற்கும்; பிறர்க்குரியவற்றை வெறுத்தற்கும்; தமரானும், பிறரானும் நேரிடும் இடையூறுகளைப் பொறுத்தற்கும்; உரிய அபிமானம் அன்பினனே தோனறப் பெறுதலின் "அன்புகைக் கோடல்" என்றார். "முன்பு பின்பின்றி மூவுல கத்தினு—மன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ" என்றனர் கம்பநாடரும்.

**ஆம் இவை எல்லாம் இன்பு என கொள்ளின் = ஆகுகின்ற இவற்றையெல்லாம் (அநுட்டித்து வருதலே) இன்பமென்று (கூறிய அவற்றையெல்லாம் அடைதற்குரிய முயற்சிகளில் முயன்று வருதலைக் கைக்) கொண்டால்;**

அவற்றையெல்லாம் கையாண்டுவருதல் முதற்கட்டுன்பமாகிப் பின்னர் இன்பம் பயத்தலின் அதுதோன்ற "துன்பெனக் கொள்ளின்" என்றார். மருந்தின் கசப்பையும், பத்தியத்தின் கடுமையையும் தமக்கு இனியனவாகக் கொள்வோர் அவற்றைக்கையாளுங் காலத்துத் துன்பை நுகரினும் பின்னர் நலன்பெறுவர் என்றதுபோல மேற்கூறியவற்றைப் பொறுமைகொடு அநுட்டித்துவருதல் நலமெனப் பெறுவீரென்பது கருத்தென்க.

துன்பு கைவிடும் = (நமக்குற்ற) துன்பமெல்லாம் நம்மைவிட்டுச் சென்றுவிடும்;

முன்னர் அமைந்துள்ள துன்பமும், அத்துன்பத்தை நீக்குதற்கான முயற்சியால் நேர்ந்த துன்பமும் கைவிடும் என்க. கைவிடல் நிச்சயம் என்பது போதரக் "கைவிடும்" என்றனர் பெய்தது.

என்குநர் = என்று கூறுகின்றார்; (அவர்தாம் யாவரோவெனில்.)

ஒரு சார் இயல்பு உடை சான்றோர் = ஒரு பகுதியான இயற்கையுடைய பெரியோர் ஆவர்;

ஒரு + சார் + இயல்பு — ஒப்பற்ற அழகிய குணம் எனப்படுமாயினும் இங்ஙனம் அக்கருத்துப் பொருந்தாது.

பின் வரு மரபின் பெருமை நிலை நாட்டுவான் = நமக்குப்பின்னால் வருகின்ற பரம்பரைக்குப் பெருமையை நிலைநிறுத்துதற் பொருட்டு;

நம் உறு நலனை நயக்கிலிர் ஓட்டி = நமக்குப் பொருந்திய சுகத்தினை விரும்பகில்லீராய் அதனை அகற்றி;

உடல் பொருள் உயிர் தமை உதவல் வேண்டும் ஆல் = உடலை பொருளை ஆவியே என்றவற்றை அர்ப்பணஞ்செய்தல் வேண்டும்;

நாம் கஷ்டப்பட்டாவது நமது மரபினைக் காப்பாற்றல்வேண்டும் என்பது கருத்து. ஆல் அசை.

என்குநர் = என்று கூறுகின்றார்; (அவர்தாம் யாவரோவெனில்.)

ஒருசார் இயல்பு உடை சான்றோர் ஒருபகுதியான இயற்கையுடைய பெரியோர் ஆவர்;

இவ்விருசார் இயல்புடையோரே சான்றோராவர். மற்றைய சார்புடையார் அங்ஙனம் கூறப்பெறார் என்க. இவ்விருவகையாக முயல்வதுமே மக்கட்குரிய இயல்பாயமைந்த இலக்கணமாகும். வினைப்பிரிவுடைமை அச்சம், ஆசை, தன்னலம் என்னும் இவை முதலாகியவற்றைக் காரணங்களாகக் கொள்ளுதலின் அவற்றையுடையார் அங்ஙனம் உயர்த்துக் கூறப்பெறார் என்க. "இயல்புடைச் சான்றோர்" என்றமைமேய மேற்கூறியவற்றை வலியுறுத்தாநிற்கும். இங்ஙனம் முயல்வதுவே இயற்கை என்பது தோன்ற "இயல்புடை" என்றும், அவ்வியல்புடையவர் நமது சான்றோர் போல நமக்கு ஆவனவற்றையெல்லாம் ஆக்கிக் காத்தலிற் "சான்றோர்" என்றும் கூறினர்.

தலைவனை தணந்து உழல் தகை வளம் குடியை நாயகனை நீங்கி வருந்துகின்ற தகுதியையும் வளப்பத்தையும் உடைய ஒருகுடும்பத்தை;

தலைவனாலே தகுதியையும் வளப்பத்தையும் பெற்றிருந்தது அக்குடி என்க.

விலைஞன் நொதுமலன — வாணிபனும் அயலானும் ஆகிய ஒருவன் வந்து;

வாணிபஞ் செய்தற்பொருட்டு அயனாட்டிலிருந்துவந்தவன் என்பது கருத்து. தேயம், பாடை, சாதி, மதம் முதலியவற்றினும் "நொதுமலன்" என்க.

வேட்கை கொடு போற்றி நிலை பெற செய்குவல் — விருப்பங்கொண்டு காப்பாற்றி முன்னிருந்த நிலைமையைப் பெறுதற்குரிய செய்கைகளைச் செய்துவருவேன்;

நீவிர் என் நிழல் கீழ் என்றும் அமைகுவிர் என = (அக்குடிக் குரிமையாளர்களாகிய) நீங்கள் எனது பாதுகாப்பாகிய நிழற்கீழ் எப்போதும் அமைந்துவருவீர்களாக என்று கட்டளையிட்டு; (அந்தக் குடும்பாதிகாரத்தை நடாத்திவருதலினாலே)

தன வளர்த்து = (தான் கொண்டுவந்த பொருள்களை அக்குடும்பத்தாரை வாங்கும்படி செய்தலினலே தனக்குரிய) செல்வங்களை வளரும்படி செய்து;

பொன் நாடு என்ன = தேவலோகம் என்று கூறும்படியாக;

தன் நாடு புரக்குநன் = தனக்குரிய நாட்டைப் போற்றிவருகின்றான்;

அக்குடியாளர் தம்மைக் காக்குமாறு கேட்காமைகொண்டு இவனது பாதுகாப்பு அவர்களுக்கு வேண்டா வெறுப்பாகிற்று என்பது வெளிப்படை. வாணிபம் புரிய வந்தான் குடும்பப் பாதுகாப்பிற்குள்ளே பிரவேசித்தமையுஞ் சிந்திக்கற் பாலது.

இன்னார் தமக்கு உள் = இக்குடியாளர் தமக்குள்ளே;

இயை சில்லோர இடை என்னுனும் ஈந்து = (தனது சார்பிற்குப்) பொருந்திய சிலரிடத்திலே யாதேனும் ஒரு பொருளைக்கொடுத்து;

தனது அதிகாரஞ் சென்றுவருமாறு யாதேனும் ஒன்றனைக் கொடுத்து என்க. அச்சில்லோர்க்கும் மனன் நிரம்பப்பெறுமை தோன்ற "என்னுனும்" என்றார். வேறுங் கூறுப.

தன் இன்னாத போக்குநன் = தனக்குற்ற கெடுதிகளைப் போக்கிவருகின்றான்;

இவனது குடும்பாதிகாரத்திற்கு அமையாது விலகி நிற்பவர் விளைக்கக் கூடிய துன்பங்களைத் தடுத்தற்பொருட்டுத் துணைசேர்ப்பான் சிலருக்கு வேண்டியவற்றைக் கொடுத்துவருகின்றான் என்பது குறிப்பு.

அன்னோன் சார்பின் அடிக்கீழ் அவரில் = அவ்வணிகன் பக்கம்பற்றி அவனது அடிக்குக் கீழ்ப்பட்டிருந்துவரும் அவரைப்போல;

பலரே = பலமக்களே;

சில பெற்று பல முரண் விளைக்குநர் = சிலவகைச் சௌகரியங்களைப் பெற்றுக்கொண்டு நாட்டுக்குப் பல மாறுபாடுகளைச் செய்துவருகின்றனர்;

அவ்வணிகன் பக்கம் சார்ந்து தமது குடும்ப முன்னேற்றத்திற்குப் பாடுபடுகின்ற பரோபகாரிகளுக்கும், தமது குடும்பத்திற்கும் கேடுசூழ்ந்துவரும் அவர்களைப் போல்வார் இவர்களும என்க.

இல் எரி உற்று ஆங்கு இயை பொருள் அழிதல் = மனையிலே நெருப்புப்பற்றி ஆங்குப் பொருந்தியுள்ள எல்லாப்பொருள்களும் அழிந்து போதலே;

காணுது துயில்வோன் கனவு இடை = அறியாமல் நித்திரை செய்கின்றவன் காணும் கனவிலே;

மனக்கு நல்லன நுகர்ந்து நகைத்து மகிழ்ந்தாங்கு = மனசுக்குமட்டும் நல்லனவாகத் தோற்றப்படுகின்ற விடயசுகத்தை அநுபவித்து அவ்வநுபவிப்பின் காரணமாகச் சிரித்து மகிழ்ச்சியடைதல் போல;

ஓங்கு பெரும் பணியும் = உயர்ந்த பெருமைவாய்ந்த உத்தியோகங்களையும்;

ஆட்சிக்கு முரணுகிய கிளர்ச்சியின் வளர்ச்சிக்கேற்பப் பணிப்பெருமையும் ஓங்கிக்கொண்டேவரும் என்பது தோன்ற "ஓங்குபெரும் பணியும்" என்றார்.

ஒப்பு இல் பட்டமும் = நிகா இல்லாத பட்டங்களையும்;

பாங்கு என பெறீஇ பசுஉ என்று அமைகுநா = தங்களுக்கு இயைந்தனவாகக் கருதிப் பெற்று (அவற்றையெல்லாம் பெற்றதினுலே) பசுமையுற்று (மனத்திருத்தியான தன்மையைப் பொருந்தி) அமைந்துவருகின்ற இவர்தாம்;

முன்னோர் துன்பு உற முரண்டு முயல்குநா = முன்னர்க் கூறப்பட்ட அவ்விரண்டுவகையான சார்பினையுடையவர் துன்பத்துட் பட்டழியுமாறு அவர்களோடு மாறுபட்டு (அம்மாறுபாட்டை நிறைவேற்றுதற்குரிய முயற்சிகளிலே) ஈடுபட்டுவருகின்றனர்;

பேதைமையால் தமக்கும், தமது நாட்டுக்கு முண்டாகின்ற கேட்டை அறியாது மகிழும் இவர் நித்திரை நீத்தெழும்புங்கால் தம்மகிழ்ச்சியின் பயனைக் காண்பர். மனையில் நெருப்புப்

பற்றிப் பொருள் அழிதல்போன்று நாட்டுமொழி, கைத்தொழில் முதலாயின கேடுறுகின்றன, அந்நிகழ்ச்சியை உணராதான் மனசுக்கினியனவற்றைக் கனவிடைக் கண்டுநுகர்ந்து நகைத்து மகிழ்தல் போன்று பெருமைவாய்ந்த உத்தியோகங்கள் முதலியனபெற்று மகிழ் தூங்குகின்றார் விழித்துழி ஓலமிடுவார் என்க.

வீட்டு நெருப்பை அவிக்க முயன்றவரைக் கனவின் இன்பத்தைக் கெடுப்பவராகக் கொண்டு துன்புறுத்துவான் போன்று நாட்டிற்கு நலம்புரிய முன்வந்தாரையும் முரண்டு துன் புறுத்துவர்.

இனியே = அப்பால்;

பனுவல் வகையினும் பல பல வேற்றுமை = சாத்திரவகைகளினும் பலப்பலவாகிய வேற்றுமைகளுண்டு;

அவர் செய்த நூல் சிறந்தது இவர் செய்த நூல் சிறந்தது என்று வாதாடி வருதல்.

நாட்டு மொழி தம்மினும் நவில் பல வேற்றுமை = தேசபாடைகள் தம்மினும் சொல்லு கின்ற பல வேறுபாடுகளுமுண்டு;

தெலுங்கு பெரிது, கன்னடஞ் சிறந்தது, மலையாளம் மாண்புடையது என்றாங்கு வாதாடல்.

திணையினும் = சாதியினும்;

நிலையினும் = ஆச்சிரமங்களினும்;

சீர் சால் நிறத்தினும் = சிறப்புமிக்க வருணங்களினும்;

தணிவு இல் மனம் இருள் தணக்கும் கடவுள் பணிவினும் = குறைவில்லாத மனசின் கண்ணே (இயற்கையாக அமைந்துள்ள அறியாமை என்னும்) இருளைப் போக்குகின்ற கடவுளை வணங்கும் வணக்கத்திலும்;

அரசாங்கத்தார் குடிகள் மனநிலையைக் கண்டுபிடிக்கும் ஆற்றலில்லாதவராதலின் அவரா லும் தணிக்கமுடியாத மனவிருள் என்பது போதரத் "தணிவின் மனவிருள்" என்றார். மனோ சுத்தமில்லாவிடில் வெளியொழுக்கத்தாற் போந்த பயன்றான் யாதோ? ஆத்திக தாபனத்தை அர சாங்கம் கைக்கோடல் ஆவசியகமாயிற்று. அரசனைத் திருமாலின் அமிசமென்று இறைவன் முதலிய பெரும்பெயரான் அழைத்துவருதலும் இதுகருதிப் போலும். இந்நூலாசிரியர் இவ்வுண்மையை முன்னும் பின்னும் வாய்க்கு மிடந்தோறும் கூறியிருக்கின்றனர். ஒவ்வொரு செய்கையிலும் நம்மவர் கடவுளை இணைத்து வருதலும் இதுகருதிப் போலும். இப்பெற்றி தெளியாதார் எல்லாச் செய்கையிலும் கடவுளை இயைத்தல் அறியாமைப் பாலதென் றிகழ்வா.

அடிக்கு பல வேற்றுமை அமைந்து நிலை போக்குந = அடிதோறும் இங்ஙனமாய பலவிகற் பங்கள் அமைந்துவந்து நமது நிலைமையைக் கெடுத்துவிடுகின்றன.

இப்பிரிவுகள் உடலுறுப்பின் ஏற்றத்தாழ்வுகள்போல ஒற்றுமை வேற்றுமையாக அமையப் பெறின் பெரியதொரு நன்மையுண்டாகுமென்பது குறிப்பு.

ஆதலின் = அது காரணத்தானே;

சென்றன செல்க = (சென்றவற்றைப்பற்றி வாளா சிந்தித்தலிற் போந்த பயன் யாது மில்லை யாதலிற்) சென்றவை செல்க;

"சென்றன கருதார் மேலைச் சேர்வன கருது கீரார்" என்றார் பெரியாரும்.

சேர்வன கருதி = இனிச் சேரற்பாலனவற்றை கவனித்து;

"உற்றது கொண்டு மேல்வந் துறுபொருள் கருதுங் கோளார்" என்றார் கம்பரும்.

ஒற்றுமை கொள்ளுமின் ஒற்றுமை கொளளுமின் = ஐக்கியம் கொள்வீர்களாக, ஐக்கியம் கொள்வீர்களாக;

கற்று அறி மாந்தர் தம் கட்டு உள் புகுந்து அமைந்து = (நமது நாட்டுக்கு வேண்டியவற் றைக்) கற்றுத் தேர்ந்த சான்றோர்தங்கள் கட்டுப்பாட்டினுட் சென்று பொருந்தி;

ஒற்றுமை கொள்ளுமின் ஒற்றுமை கொள்ளுமின் = ஐக்கியம் கொள்வீர்களாக, ஐக்கியம் கொள்வீர்களாக;

"ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்–பொன்றாமை யொன்ற லரிது", "எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு–முட்பகை யுள்ளதாங் கேடு" என்னுங் குறட்பாக்களையும் நோக்குக. "ஒருவீ ரொருவீர்க் காற்றுதி ரிருவீரு–முடனிலை திரியீ ராயி னிமிழ்திரைப்–பௌவ முடுத்தவிப் பயங்கெழு மாநிலங்–கையகப் படுவது பொய்யா காதே–அதனால், நல்ல போலவு நயவ போலவுந்–தொல்லோர் சென்ற நெறியே போலவுங்–காத னெஞ்சினு மிடைபுகற் கலமரு–மேதின் மாக்கள் பொதுமொழி கொள்ளா–தின்றே போல்கநும் புணர்ச்சி" என்றார் காரிக்கண்ணனார்.

நமது குறிப்பு என்னும் நல் சுவை பழம்தான் = நமது இலக்ஷியம் (இலக்கு) என்கின்ற இனிய சுவையைத்தரும் கனியானது;

நாவிற் கினியனவாய்ச் சுகத்திற் கிடையூறு செய்வனவும் இருத்தல் பற்றி அவற்றை நீக்க "நற்சுவைப் பழம்" என்றார்.

பழுத்து நின்று பதன் பெற்றிட்டது = கனிந்து நின்று (உணவிற்குரிய) பக்குவத்தைப் பெற்றுவிட்டது;

நாள் பல கழிப்பின் நயன் கெட்டு அழியும் = நாள்கள் பலவற்றை உண்ணாது செல்லவிடுவோமானால் (அப்பழத்தை உண்ணுவதால் அடையும்) நன்மைகெட்டு அழிந்துபோகும்;

பழுதாகி அழுகிப்போகும் என்றபடி. கனிதற்கு முன்னும், கனிந்து பதன்கெட்ட பின்னும் உண்ணக் கூடாதாதலிற் கனிந்து பதனாயிருக்கும்பொழுதே உண்ணவேண்டுமென்க.

பறவை முதலிய பார்த்து உணர்ந்தும் உண்ணும் = (அப்பழத்தின்மேல் விருப்புள்ள) பறவை முதலாகவுடையன (பழத்தின் பக்குவ நிலையை) நோக்கி (அதனை உண்ணுவதா லுண்டாகும் நன்மையை) உணர்ந்துகொண்டும் உண்ணினும் உண்ணும்;

கள்வர் கதுவி கவர்கினும் கவர்குவர் = (அப்பறவை முதலியவற்றிற்கு ஒருவேளை அகப்படா திருப்பினும்) திருடர்கள் மறைந்து வந்து அதனைப்பற்றிக் களவாடிச்செல்லினும் செல்வர்;

கொடும் காற்று வந்து குலைப்பினும் குலைக்கும் = (பறவையானும் கள்வரானும் தப்பி விடினும்) கொடிய காற்றுவந்து (அப்பழத்தினை நாம் நுகராமல் அசுத்தமாகிய இடத்தில் விழும்படி) உதிர்க்கினும் உதிர்க்கும்;

"தீவளியா னற்கா யுதிர்தலு முண்டு" என்பது நாலடியார். . பறவை, கள்வர், காற்று என்பனவற்றை முறையே பௌதீக, தெய்வீக, பிராரத்துவ வழிவரு இடையூறுகளுக்கு ஒருவாறு ஒப்பிடலாம்; பஞ்சம், கொள்ளைநோய், மாற்றார்படை அன்னவற்றிற்கும் பொருத்தலாம்.

அதனால் = அதுகாரணத்தானே;

காலம் கழித்தல் நம் கடமையும் அன்று = (அந்தக் கனியை உண்பதற்கு உரியதாய் நமக்குக் கிடைத்திருக்கின்ற) காலத்தை (அங்ஙனம் செய்யாமல் அவமே) செல்லவிடுதல் நமது கடமையும் ஆகாது;

[ஞாலம் பழிக்கு நாமது பெறாவிடில்] நாம் அது பெறாவிடில் ஞாலம் பழிக்கும் = நாம் அக்கனியைப் பெற்றுண்ணாவிடில் இவ்வுலகம் நம்மை இகழும்;

செய்வன செய்மின் = செய்யவேண்டிய காரியங்களை (இதுபொழுதே விரும்பி விரைந்து) செய்வீர்களாக;

விருப்பின்றிச் செய்யின் இனிது முடியாது, விரைந்து செய்யாவிடிற் செய்தும் பயனில்லை ஆதலின் அங்ஙனம் பொருள் விரித்தாம்.

தவிர்வன களைமின் = (அவ்வாறே) நீக்கத் தக்கனவற்லைறயும் (விரைந்து வெறுத்து) நீக்குவீர்களாக;

அக்கனியை உண்ணுதற் கிடையூறா யிருப்பனவற்றைத் தவிர்தல்வேண்டும் என்றபடி.

அறிவும் ஆற்றலும் அறனும் பொருளும் நறு மணம் கமழும் நல் வழி இன்பமும்=அறிவுடைமையும், (ஆக்கவேண்டியவற்றை ஆக்கிக் கோடற்கும் நீக்கற் பாலனவற்றை நீக்கிவிடுதற்கும் வேண்டிய) வல்லமையும், அறமுடைமையும், பொருளுடைமையும், இனிய வாசனையைத் தருகின்ற சன்மார்க்கத்தால் உண்டாகும் இன்பத்தையும்;

உலகியற்கையை முதற்கட் டெரிந்துகோடல் வேண்டுமாதலின் "அறிவும்" என்றும், அறிவைப் பெறுங்காலத்து ஒருவல்லமை தானே தோன்றுமாதலின் "ஆற்றலும்" என்றும், அவ் வாற்றல் கொண்டு கடமைகளைத் தவறாது செய்தல் வேண்டுமாதலின் "அறனும்" என்றும், அறனைத் துணையாகக்கொண்டு பொருளை யீட்டவேண்டு மாதலிற் "பொருளும்" என்றும், அப் பொருளைச் சன்மார்க்க வழியாக நுகர்வதே நற்குணமும் நற்செய்கையும் ஆதலின் "நறுமணங் கமழு நல்வழி யின்பமும்" என்றுங் கூறினார்.

பொறுமையும் ஆட்சியும் புரை தீர் புகழும்=(எல்லாவற்றையும் சகித்தொழுகும்) பொறுமையும், ஆளுகையும், குற்றந் தீர்ந்த கீர்த்தியும்;

மனசிலே இன்பம் பொருந்தாவிடிற் பொறுமை பொருந்துவதில்லை யாதலிற் "பொறுமையும்" என்றும், மேற்கூறியவற்றை உடையவரே எல்லாவற்றையும் ஆளுகை செய்தற்கு உரியவராதலின் "ஆட்சியும்" என்றும், இவவாட்சியாலே உண்டாகும்புகழ் வினைய புகழ் போலாது புரைதீர்ந்த புகழாருமாதலாற் "புரைதீர்" என்றும் கூறினார். மாட்சி எனப்பிரித்துப் பொருள் கூறுவாருமுளர்.

[வறுமையறப் பெறீஇ வாழ்குவிர் பெரிதே] வறுமை அற பெறீஇ பெரிது வாழ்குவிர்= (உமக்குரிய இன்பத்திற்கு இடையூறாக நின்று கெடுத்துவரும்) புன்மை அற்றுப்போமாறு (அவற்றையெல்லாம்) பெற்றுப் பெரிதாக வாழ்வீர்கள்;

பெறுதல் நிச்சயம் என்பது குறிக்கப் "பெறீஇ" என்றளபெடுத்தது.

[இழிவுக் குலத்தின ரென்றுநா மல்லேம்] நாம் என்றும் இழிவு குலத்தினர் அல்லேம்= நாம் எக்காலத்தும் தாழ்வாகிய குலத்தினர் அல்லோம்;

மிடிமைக்கு உரிய வெற்று நாட்டவர் அல்லேம்=வறுமைக் குரிமையாகச் செய்யும் வெறுமையாகிய நாட்டினரும் அல்லோம்;

அவற்றையுடையார் பிறர் என்க.

முபொழுது உணர்ந்த முனிவரும்=மூன்று காலங்களையும் (எனவே சென்ற, நிகழ்கின்ற, வருவனவாகிய காரியங்களை) அறியவல்ல முனிவர்களும்;

தேவரும் ஒப்பு இல் வேந்தரும்=தேவர்களும், தம்மை நிகர்ப்ப (இவ்வுலகிற் பிறா எவரும் இல்லாத அரசர்களும்;

உயர் நூல் புலவரும்=பெருமைவாய்ந்த பனுவல்களைச் செய்துதவும் புலவர்களும்;

கொற்றம் பல தரூஉம் கொடுங்கண் மறவரும்=வெற்றிகள் பலவற்றையும் (நமது நாட்டிற்குத்) தருகின்ற அஞ்சாமையுடைய வீரர்களும்;

பொன் மணி வெள்ளி பொருப்புகள் பலவும்=பொன்னே அரதனமே வெள்ளியே என்னும் இவைமுதலாயின மலைகளை ஒப்பக் குவிந்துகிடக்கும் குவியல்களும்;

பொன்—மேருமலை, வெள்ளி—கைலைமலை என்றும் கூறுப.

கூலம் சுரந்து குலவு வளம் நாடும்=பலவகைத் தானியங்களும் மிக்குப் பெருகிவிளங்குகின்ற வளம் பொருந்திய நாடுகளும்;

(ஆகிய பலவற்றையும்)

ஞாலம் புகழ நாம் பெரிது உடையேம்=உலகமெல்லாம் புகழ்ந்து கொண்டாடுமாறு நாம் பெரிதும் படைத்துள்ளோம்;

என்னும் இவை கருதி=என்கின்ற (பெருமைவாய்ந்த) இவற்றையெல்லாஞ் சிந்தித்து;

இனியே=(சென்ற காலம்போக) இனிமேலாவது;

நன்னர் வினை பல ஆ(க) நாடி முயல்குவிர்=நன்மை பயப்பது இவ்விச் செயலென்று பலசெயல்களையும் ஆராய்ந்து முயன்றுவருகின்றவர்களே;

முயல்குவிரே—ஒற்றுமை கொள்ளுமின் என முடிக்க.

முயல்குவிர் என்பதற்கு முயற்சி செய்வீர்களாக எனப் பொருள் கொண்டு (ஒற்றுமை கொள்மின், செய்மின், வாழ்குவிர் என்பனவற்றைப் போல) முற்றுவினையாக்கி இது நீவிர் என்னும் தோன்றா எழுவாயின் பயனிலையென முடித்தலும் பொருந்தும்.

---

## (55) பேதைப் புரோகிதர் பெருமையுற் றிருப்ப வோதுதமிழ் வல்லோர் நோதற் கிரங்கல்.

பட்டாங் குணராப் பதடிக ளென்னு
முட்டார் புரோசர் முனைமுனைத் தியாண்டும்
பேசுபொறி யொப்பத் திருப்பிப் பிதற்றுந
ரெட்டுவரி கற்றதோ டின்புற் றிருக்குந
ரவ்வரி தம்மு ளமைந்ததிற னவைதே
றித்திக்கு நலந்தரூஉம் பத்துப் பாட்டே
மட்டிசைப் பரிய வெட்டுத் தொகையே
மதியெலா மணக்கும் பதினெண் கணக்கே
யிவைமுத லாகிய வெல்லா வற்றையுங்
கண்ணெளி மழுங்க வரியிடைக் கண்டு
மெண்ணுளஞ் சோநதுபுண் ணினைவுற வாய்ந்து
நாத்தழும் பேற நவின்றும் புற்கையுங்
கண்டில ராகிக் கலங்குந
ரொண்டமி ழாய்ந்த வொழுக்கத்துப் பலரே.

---

(இ—ள்.) பட்டாங்கு உணரா பதடிகள் என்னும்=உண்மை உணராத பதர்கள் என்கின்ற;

பட்டாங்கு—உண்மை; "பிரிவின்றிப் பட்டாங் கறிய" ஏன்பது வெண்பாமாலை. ஊழ், நியதி, நீதிநூல், தத்துவநூல் முதலியவற்றையும் குறிக்கும்; "பட்டாங்கி லுள்ள படி" என்றார் பெரியாரும். பதடிகள்—உள்ளீடில்லாதவர், எனவே அறிவற்றோர் என்க. பட்டாங் குணராமையின் அவர் பதடிகள் (பதர்) எனப்பட்டார். உண்மையுணராதார்க்கு முத்தியுமில்லை யென்பவாகலின் யாண்டுந் துன்பினையே நுகர்ந்துவருவர் எனபது பெறப்படும். மெய்மையாய் உள் பொருள்கள் எவையோ அவை யாண்டும் உண்மைப் பொருள்களேயாம். கடவுள், ஆன்மா, பாசம், மோக்க நரகங்கள் முதலிய உள்பொருள்களின் உண்மையை அறிவின்மையாற் றெரிந்திலார் பதடிகளாவர் என்க.

முரண் கொள் முட்டு ஆர் புரோசர்=மாறுபாட்டைக் கொள்வதினுனே வழுஉக்கள் நிறைந்த பார்ப்பாராவோர்; (புரோகிதராவோர்;)

பட்டாங் குணராமையானே மாறுபாடும் வழுஉக்களும் அவர்பக்கல் நிறைந்தன என்க. புரோகிதனுவான் அரசன் ஐம்பெருங் குழுவில் ஒருவன் அவன் வருங்காரியஞ் சொல்வோனும்,

கிருத்தியம் பண்ணுவிப்போனுமாவான். "மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட" என்று அடிகள் கூறுதலின் ஙேங்குழுவைச்சார்ந்தோராதாம் புரோகிதராவர் என்னும் நியதியில்லை, வணிகர்க்குச் சடங்குசெய்வித்தானைப் புரோகிதன் என்று அடியார்க்குநல்லார் கூறுதலின் என்க.

புரோசர்—புரோகிதர். "புரோசு மயக்கி", "புரையறு கேள்விப் புரோசு மயக்கி" என்பன நோக்கற்பாலன.

தற்காலத்திற் பார்ப்பார் பலரும் பொய்மந்திரங் கூறிப் புன்னெஞ்சினராய்ப் பிதற்றி நமது பூர்வீக நன்னிலையைப் பாழ்படுத்தி நரகிற்கு ஆளாக இருந்துவருகின்றனர். வேதம், தர்மசாத்திரம், வடமொழிப்புலமை என்னும் இவறறில என்னுமறியாராய்ப் புரோகிதப்பட்டம் பெற்றுக் கொள்ளையடித்துப் பெற்றபொருளைக்கொண்டு பலபழிபாவங்களைச் செய்து வருவோர் பலர் உண்டு.

[முணுமுணுத் தியாண்டும் பேசுபொறி யொப்பத் திருப்பிப் பிதற்றுநர்] யாண்டும் முணுமுணுத்து பேசு பொறி ஒப்ப திருப்பி பிதற்றுநர் = எவ்விடத்தும் முணுமுணுவென்று பேசுகின்ற யந்திரத்தை ஒக்குமாறு (சொல்லிய மந்திரங்களையே) திருப்பிப் பிதற்றுகின்றவர்களும்;

பிதற்றல்—ஒன்றனையே பற்றிக்கொண்டு விடாது பேசுதல். இரகசியமாக உச்சரிக்க வேண்டிய மந்திரங்களுமுள என்பதுதோன்ற "முணுமுணுத்து" என்றும், வெளிப்படையாகவுங் கூறவேண்டுவன சிலவுள அவற்றை அர்த்தஞானமில்லாது கூறுகின்றனர் என்பது தோன்றப் "பிதற்றுநர்" என்றும் கூறினர். அர்த்த ஞானமில்லாதவராதலின் அவர் உச்சரிப்பு முதலியன பிறழக் கூறுவர் எனபதை அறிவித்தற்கு அங்ஙனம் கூறினருமாம். பேச்சுக் கருவி சொல்லியதைப் பிறழாது மீட்டுஞ் சொல்லியாங்கே மறவாமல் உரைத்துவருதலினானும், சொல்லியவுடனே மீட்டும் ஒப்புவிக்கும் ஆற்றலுடைமையானும் இவரினும் சிறந்தது எனபது போதர உவமைமுகத்தால் ஒப்புக்கூறினர். திருப்பிச் சொல்லும் மாத்திரை ஒன்றே அதற்கும் இவர்கும் பொதுவாகு மென்க. "பிதற்றுநர்" என்னுமிலேசானே பிதற்றுகின்ற பேசுகருவி எனப்பெய்துரைத்துகொள்க. இவரை ஒரு சடப்பொருளோடு அங்ஙனம் ஒப்புக் கூறியது அருத்த ஞானமின்றி வேதபாடம பண்ணுபவரைச் சடமென்று வடமொழிக்கவிஞர் கூறும் கூற்றைக கருதிப்போலும்.

இனி நெருப்பானது சுடுமென்றுதல், சுடாதென்றுதல் நினைந்தாயினும் மறந்தாயினும் தன்னைத் தீண்டுவானைச் சுட்டேவிடுமாறு வேதமந்திரமும் பொருளறிந்தாதல், அறியாதாதல் தன்னை உச்சரிப்பார்க்குப் பயனைத் தந்துவிடுமென்பார் ஒரு சாரார். அத்தருகைக்கு ஒரு கதையையுங் கட்டுவர். இம்மந்திரத்தை இதன்பொருட்டு இவ்வாறு உச்சரித்தல் வேண்டும் என்று அறிந்துகோடற்கு அருத்தஞானமும் வேண்டப்படுதலின் அவர் கூற்றுப் பொருந்தாதென்க. அருத்தமறியாத காரணத்தால் உச்சரிப்புமாறித் தீப்பயனை ஒருவன் அநுபவித்தான் என்று வேதத்திலும் கூறியிருத்தல் கவனித்தற்பாலது. இவவாறே பிற்காலத் தாசிரியரும் கூறுப.

இனிச் சேய்மைக்கண் உள்ள ஒருவன் அவனுக்கிடப்பட்ட சொந்தப் பெயரைக்கொண்டு அழைக்கப்படும் பொழுதே விரைவிற் றிரும்பிப்பார்ப்பான்; அதுபோலப் பழம்பொருளையும் பல்லாயிர வூழிக்காலங்களாக முனிவரர் அழைத்தவாறே அழைப்பின் உடனே அவர் பிரசன்னமாவா என்பர் பிறிதொருசாரார். இதையகமலங்கள் எல்லாவற்றிலும் வசித்துவரும் வாலறிவனுக்கு அங்ஙனம் வேண்டுவதில்லை என்க.

வடமொழியிலேதான் துதித்தல்வேண்டும் என்பதூஉம் அன்னபிறவும் உண்மையாகமாட்டா. வேதமுதலியவற்றைச் செய்தோர பெருமையையும், ஆற்றலையுங் கருதி அவற்றைப் போற்றிவரல் வேண்டுமென்றுகோடல் எத்துணையோ மேன்மையுடைத்தென்க. வந்தனை வழிபாட்டிற் செப்புஞ் சொல்லினும் சிந்திக்கும் பொருளே விழுமியது ஆதலின் இறைவனை எப்பாஷையானும் துதித்துவரல் மரபாகும் என்பது வெளிப்படையாயிற்றென்க.

இனி ஆரியர் வைதீக காரியங்களுக்குத் தம்மொழியையே உபயோகித்து வருதல் வேண்டும் என்று விதித்த நுணுக்கம், அக்காலத்துப் பொதுமொழியாய் நிலவிய "தங்கள் ஆரிய

மொழி பிற்காலத்துத் தனது பதவியை ஒருவேளை இழந்துவிடினும்; அதன் வழக்கும், பெருமையும் குன்றாதிருந்துவரல் வேண்டுமென்று கொண்ட கருத்தைப் பற்றியதென்க.

பொதுமொழி எனனும் நிலைமையிறந்து வழக்கு வீழ்ந்திருந்தும் இமயசேது பரியந்தமுள்ள ஆரியர்களும், அவரைச் சார்ந்த பலமொழியாளரும் அம்மொழியையே பெரிதெனப் பேணித் தங்கள் வைதீக காரியங்களை நிறைவேற்றி வருகின்றனர். புராணமுதலியவற்றிற்கும் பிறவற்றிற்கும் வடமொழியே சிறந்துவருதல் கண்கூடு. நமது மொழியையும் அங்ஙனம் செய்துவாராமை ஒருபெருங் குறையென்க.

இனி அருத்தஞான மில்லாமல் வேதாதிகளைப் பாடம் பண்ணுவதால் வருங்கேடு உச்சரிப்புப் பிழை, சந்தமறியாமை, விட்டனவறியாமை, கலந்தனவறியாமை என்னும் தொடக்கத்தனவென்க.

இக்காலத்திலே பிராமணரல்லாதார்க்குச் செய்துவரு சடங்குகள் எல்லாம் வேதாதிகளிலே இல்லாதனவாய் நவமாய்ச் சிருட்டிக்கப்பட்டனவேயாம். இவைதாமும் யசுர்சிறு பகுதிகளே. இவற்றைப் பாடம்பண்ணிக்கொண்டு நாடோறும் பலவகையாகப் பொருளீட்டி வருகின்றனர். விற்பத்திஞானம் இல்லாதவராதலின் நற்குண நற்செய்கைகள் இவரிடம் இருக்கப்பெறா.

கோயிற்பூசை முதலியவற்றைச் செய்வோரும் இத்தகையவரே.

அங்ஙனம் இழிந்துவருதற்குக் காரணம் வடமொழி மந்திரமேயென்க. அருத்தஞானந் தெரிந்தார்க்கு நலஞ்செய்துவாராமல் அமைந்துவரும் பழக்கத்தினும் கொடிது பிறிதில்லை. இவற்றையெல்லாஞ் சுருக்கமாகச் சிலவரிகளுள் இந்நூலாசிரியர் தெளிவுபெற அடக்கிச் சொன்னமை நோக்கற்பாலது.

எட்டு வரி கற்றதோடு இன்பு உற்று இருக்குநர் = நாலிரண்டு (சில) வரிகளைக் கற்ற அம்மட்டோடு மகிழ்வடைந்து இருந்து வருகின்றனர்;

சிலவற்றைப் பாடம் பண்ணிக்கொண்டவர் என்பது போதர "எட்டுவரி" என்றார். இவரைப் பெரியார் என்று பாராட்டி நன்மை தீமைகளுக்குக் குருக்களாக்கி வேண்டியவற்றையெல்லாம் அளித்து உபசரிக்கின்றனர் இக்காலத்தார் என்பதூஉம், இவர்தம்முள்ளே ஒவ்வொருவரும் தாம் தாம் பெரியோர் என்று மகிழ்ச்சிகொண்டு இறுமாந்து பிறரை அவமதிக்கின்றனர் என்பதூஉம் தோன்றற்பொருட்டு "இன்புற்றிருக்குநர்" என்றார். பிராமணர்களுக்கு வைதீகச் சடங்குகளைச் செய்விக்கும் உபாத்தியாயர் பலவருட காலம் பலமுறையும் பாடம்பண்ணவேண்டியிருத்தலின் அவரது சிரமங்குறித்து அவர்தம்மை நீங்கி ஏனையவர்க்கு இக்காலத்திற் செய்துவரும் புரோகிதர்களை இங்ஙனம் இந்நூலாசிரியர் குறித்திட்டார் என்க. இவர்களுள் ஒருபகுதியார் கும்பாபிடேக முதலாய கருமங்களுக்குத் தம்மிடத்துள்ள பிழைபடவெழுதிக்கொண்ட ஏடுகளை வாய்க்குவந்தவாறெல்லாம் பிதற்றிக்கொண்டு பொருளீட்டிவருகின்றனர். இத்தகையவரையே "எட்டுவரி கற்றதோ டின்புற் றிருக்குநர்" என்றார். (அற்ப விற்பத்தியுடையானை இரண்டொன் றறிந்தவன் என்றும், மத்திம விற்பத்தியுடையானை நாலிரண் டறிந்தவனென்றும், உயர்தர விற்பத்தியுடையானைப் பத்தெட் டறிந்தவன் என்றும் சொல்வது சில நாட்டு வழக்கு) கற்றாரைப் போற்றாது மற்றிவரைப் போற்றிவருதலினாலே இவரும் பிறரும் கல்விக்கும், அக்கல்வியைக் கற்றார்க்கும் சிறப்பளிக்காது இகழ்வளிக்கின்றனர் என்க.

இவற்றான் முன்னர் விரித்தனவெல்லாம் இச்செய்யுட்கருத்தென்று தெற்றென உணர்ந்துகொள்க. வேத விப்பிரர்க்கே பேசுகருவி உவமையாயிற்று; ஒரு சிறிது இவர்க்கும் ஒருவாறு ஒக்கும்.

**அவ் வரி தம் உள் அமைந்த திறன் எவன் = (வேண்டிய பொருள்களையெல்லாம் அளித்து வருகின்ற) அவ்வெட்டுவரி தங்களுக்குள்ளே பொருந்தியிருக்கும் வல்லமைதான் யாது;**

**அவற்றிற்கு ஓராற்றலும் இன்று; உலகின் அறியாமையே அங்ஙனம் அவரை இன்புறுத்தி வருகின்றது என்பது குறிப்பு. பன்னூலாய்ந்த புலவர்களைக்கொண்டு மேற்கூறியவற்றைச் செய்வித்துவந்தால் நமது நாட்டுப் புலவர்களும், நூல்களும் எந்நிலைமை எய்திவிடும் என்பதும் ஈண்டு விளக்கப்பட்டது.**

சிந்தித்து நலம் தரூஉம் பத்துப்பாட்டு = (படிப்பவர் வாயும் கேட்பவர் செவியும் இவ்விருவர் மனசும் ஆகிய இவற்றை) இனிமைசெய்து (இருமைக்கும் வேண்டிய) நலத்தைக்கொடுக்கின்ற பத்துப்பாட்டும்;

பாஷாபிமானமே ஏனைய அபிமானங்களை யுண்டாக்குதலினாலும், தமிழ்ப்பாஷைக்குள்ளே தலைசிறந்திருக்கும் நூல்களுட் பத்துப்பாட்டு விசேடம் பெற்றதாதலினாலும் இங்ஙனம் கூறினார்.

பத்துப்பாட்டு என்பது இருவகைக் கணக்குள் மேற்கணக்கின் பாலதாகும். "நூறடிச் சிறுமை நூற்றுப்பத் தளவே-யேறிய வடியி னீரைம் பாட்டுத்-தொடுப்பது பத்துப் பாட்டென வருமே", "அதுவே, யகவலின் வருமென வறைகுநர் புலவர்" என்பன அப்பாட்டின் இலக்கணங்களாகும்.

இருவகைக் கணக்காவன மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்பன. இவற்றை "அகவலுங் கலிப்பா வும்பரி பாடலு மா-பதிற்றந் தாதி பதின்மே னிம்பரு-மித்தொடன் றொகுப்பன மேற்கணக் கெனவும்-வெள்ளைத் தொகையு மவ்வகை யெண்பெறி-னெள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே", "ஐம்பது முதலா வைந்நூ றீறா-வைவகைப் பாவும் பொருணெறி மரபிற்-றொகுக்கப் படுவது மேற்கணக் காகும்", "அடிநிமி ரில்லாச் செய்யுட் டொகுதி-யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வத்-திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்" என்னும் சூத்திரங்களான் அறிந்துகொள்க.

பத்துப்பாட்டின் அடங்கிய பிரிவுகள், "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லைப்-பெருகு வளமதுரைக் காஞ்சி-மருவினிய-கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்-பாலை கடாத்தொடும் பத்து".

மட்டு இசைப்ப அரிய எட்டுத்தொகையே = ஒப்புச் சொல்வதற் கரிய எட்டுத்தொகைகளும்;

எட்டுத் தொகைகளாவன, "நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ-றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்-கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென-றித்திறத்த வெட்டுத் தொகை". இவை எண்பெருந்தொகை எனவும், எண்கோவை எனவும் சொல்லப்படும்.

அகரம் தொக்கது. மேற்காட்டிய வெண்பாவில் உள்ள நூல்களுக்குக் கொடுக்கப்பெற்ற அடைமொழிகளை ஆராய்வோர்க்கு "மட்டிசைப்பரிய" என்னும் அடைவிசேடமும் நன்கு புலப்படும்.

மதி எ(ல்)லாம் மணக்கும் பதினெண் கணக்கு = ஆராய்வார்தம் புத்தியைப் பரிமளிக்கச் செய்யும் பதினெண்கீழ்க்கணக்குகளும்;

பதினெண் கீழ்க்கணக்காவன, "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்-பால்கடுகங் கோவை பழமொழி-மாமூலம்-இன்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே-கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"

இச்செய்யுளின் மூன்றாமடி "எய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே" என்றும் பாடமாம். சிலர் "இன்னிலை" என்பதை ஒரு நூலாகவுங் கொள்வர். வேறுசிலர் அதனைக் காஞ்சிக் கடையாக்கிக்கொண்டு "கைந்நிலையை" ஒரு நூலாகவுங் கொள்வர். இன்னுஞ் சில விவரங்களை எமது "தமிழ்வரலாறு" 259-260ம் பக்கங்களிற் காண்க. பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலியவற்றையும் அந்நூலில் விரித்திருக்கின்றாம்.

பதினெண்கணக்கு என்றாரேனும் அடைமொழி விசேடத்தால் கீழ்க்கணக்கு என்பது பெற்றாம். "ஆரியம்-வேத முடைத்து தமிழ்திரு வள்ளுவனா-ரோது குறட்பா வுடைத்து" எனவும், "நானூறும் வேதமாம் நானூறு நானூறும-நானூறுங் கற்றற்கு நற்றுணையாம்", "வேளாண் மரபுக்கு வேதமெனச் சான்றோர்கள்-எல்லாருங் கூடி யெடுத்துரைத்த" எனவும், "ஐந்திணை யைம்பது மார்வத்தி னோதாதார்-செந்தமிழ் சேரா தவர்" எனவும் பிறவாறும் வருவனவற்றை நோக்கி "மட்டிசைப் பரிய" என்றார்.

"முப்பால்" என்பது அறம், பொருள், இன்பங்களைப் பப்பத்து வெண்பாக்களாலே கூறும் மற்றொரு நூலெனவுஞ் சொல்லுவர். தொல்காப்பியப் பொருளதிகார வுரையில் இவ்வுண்மை புலப்படும்.

இவை முதல் ஆகிய எல்லாவற்றையும் = (கூறிவந்த) இவைகளை முதலாகக்கொண்ட எல்லாநூல்களையும்;

"இவைதங்களை முதலாகக்கொண்ட" என்றேமாயினும், முதலாகிய இவை என்பதுவே கருத்தாகக் கொள்க. இவ்வாறு கொள்ளுதலும் உரைவிகற்பத்தில் ஒன்றென்ப.

சிந்தாமணி முதலாகிய ஐம்பெருங்காப்பியங்களையும், சூளாமணி முதலாகிய ஐஞ்சிறுங் காப்பியங்களையும் பாரத ராமாயணம் சமயநூல் என்னுமித்தொடக்கத்தனவற்றையும் "இவைமுதலாகிய" என்றுகுறிப்பிட்டார்.

கண் ஒளி மழுங்க வரி இடை கண்டும் = (சொல்லிய நூல்கள் எல்லாவற்றையும் ஊன்றி நோக்குதலினாலே) கண்ணொளி மழுங்கிப்போமாறு வரிவடிவங்களிலே நூலிடையிற் கண்டு ஆராய்ந்தும்;

ஊன்றி நோக்குதலின் நீட்சி தோன்றக் "கண்ணொளி மழுங்க" என்றார். கண்ணீர் முதலியன சுரத்தலும், ஒருவகை இருளுண்டாதலும் நீண்டாராய்வாருக்கு நேரிடுதலின் அங்ஙனம் கூறினருமாம். வடு பாரத்தலையும குறிக்கும் என்க.

எண் உளம் சேந்து புண் இனைவு உற ஆய்ந்து (அக்கண்டவற்றிலுள்ள உண்மைப் பொருளை இதுவென மதித்தற்குக்) கருதும் மனசானது கன்றி (அக்கன்றுதலினால் நேர்ந்த) புண்ணால் துன்பம் பொருந்துமாறு ஆராய்ந்து;

"தொல்பலநூ-லாய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம்" என்றார் பிறரும்.

நா தழும்பு ஏற நவின்றும் = நாவிலே தழும்பு மிக்கேறும்வண்ணம் (பலர்க்கும் பலவிடங்களிலேயும) கூறியும்;

கண்டாய்ந்தவற்றைக் கூறிக்கூறி வருதலின் மிகுதியானே நாவிற்றழும்பேறிற் றென்க.

புற்கையும் கண்டிலர் ஆகி கலங்குநர் = சோற்றைத்தானும் கண்ணாலேயும் காணாதவராகிக் கலக்கமுறுகின்றனர்;

புற்கையுங் காணாதார்க்குப் பிற சௌகரியங்கள் எங்ஙனம் வாய்க்குமென்க. இந்நிலையிலே இருந்துவந்தும் தமிழை ஆய்ந்து வளர்த்துவருதல் வியக்கற்பாலது என்பது குறிப்பு.

(அவர்தாம் யாவரோ வெனின்?)

ஒண் தமிழ் ஆய்ந்த ஒழுக்கத்து பலர் = ஒள்ளிய தமிழை ஆராய்ந்து (அவ்வாராய்ந்த வண்ணமே ஒழுகிவரும்) ஒழுக்கத்தையுடைய பல்லோர் ஆவர்;

வடமொழிப் புலவரையும், அவர் நூல்களையும் ஈண்டுக் கூறாது விடுத்தார்; தமிழ்ப்புலவரும், தமிழ்நூல்களும் மிகப் பரிதபிக்கத்தக்க நிலையில் இருத்தல் கருதிப் போலும். அன்றியும் வடமொழியை வளர்ப்பவர் பலநாடுகளிற் பலப்பலருளர்; வடமொழிநூல்களும் பலப்பல வுளள என்பன கருதிப் போலும்.

---

## (56.) தண்டமிழ்ப் புலவரைத் தாங்கறக வென்றல்.

முடிகவித் தென்ன முகமலர்ச்சி செய்குந
வடிவேற் குத்தின் வருத்துந பாலொடு
தேனுண் டாங்குச் செவியினிப் பொழியுந்

புணர்வே விளையாட்டே என்பனவற்றால் வரப்பெறுவதை, "இன்னவும்" என்றவிலேசினால் அமைத்துக்கொள்க. இராமபிரானுக்கு முடிசூட்டப் போதலைக் கேள்வியுற்ற எல்லாமக்களும் தத்தமக்கு நடஅரசென மகிழ்சிறந்தார் என்பது போதர "ஒத்த சிந்தைய ருவகைய ரொருவர்க்கொருவர்- தத்த மக்குற்ற வரசெனத் தழைக்கின்ற மனத்தர்" எனக்கம்பநாடர் கூறியுள்ள முறைமையை நோக்குக. முடியிலுடைய அமைப்பு,விலை முதலியவற்றால் நிகழப்பெறும் மகிழ்ச்சியை நீக்குதற்பொருட்டு "முடிகவிந் தென்ன" என்றார். "என்ன" என்னும் ஒப்புருபாற்றலினாற் கவித்தற்குரிய ஆற்றலில்லாத பிறாகமெனப் பொருள்பட்டது. மகிழ்ச்சியின் மிகுதி தோன்ற "முகமலர்ச்சி" என்றார்.

வடி வேல் குத்தின் வருத்துந=கூரிய வேற்படையின் குத்தைப்போன்று வருத்தஞ் செய்வனவும்;

இது அச்சமுந் துன்பமுங் காரணமாக அழுகையைத் தோற்றுவிப்பது. "வருத்துந" என்பதற்கு வருத்தி அழச்செய்வன என்று விரித்துப் பொருள்கொள்க. "எழுதெழில் சிதைய வழுதன ளேங்கி-யடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்- நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு -கூர்நுதி மழுங்கிய வெயிற்ற-ளூர்முழுது நுவலுநிற் காணிய சென்மே" எனனும் நெடுந்தொகைப்பாட்டை ஏற்ப விரித்துரைத்துக்கொள்க. குத்தின கொடுமை தோன்ற "வடிவேல்" என்றார்.

பாலொடு தேன் உண்டாங்கு செவி இடை பொழியும் தீம் சுவை சான்ற=பாலோடு கலக்கப்பெற்ற தேனை உண்டாற்போலக் கேட்பவர்தம் செவியிடத்திலே பொழிகின்ற தித்திப்பான சுவைநிறைந்தனவும்;

பாலொடு தேன்கலக்கப்பெற்றாற் சுவை மிகுதிப்படும் என்பவாகலிற் "பாலொடு தேனுண்டாங்கு" என்றார். "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி-வாலெயி றூறிய நீர்" எனறார் குறளினும். இசைகூட்டி உரைக்கப்படும் பாக்களைக் குறிப்பித்தாருமாம். "கவிப்பா லமுத மிசையின் கறியொடு கண்ணேனுண்ணக்-குவிப்பான்" எனக்கம்பநாடரும் கூறினர். பாலினைச் செய்யுளாகவும், தேனை இசையாகவும் பொருத்தி ஏற்குமாறு விரித்துரைத்துக்கொள்க. இதுவும் நுகர்ச்சி காரணமாகிய உவகையின்பாற்படும். சுவைப்பண்பு காரணமாகிய உவகை என்றுங் கூறுப. ஏனைப்பண்புப்பகுதிகளையும், பிறகூறப்படுவனவற்றையும் ஏற்றபெற்றி தழீஇக்கொள்க.

வேம்பு தின்றாங்கு கயத்தல் சான்ற=வேப்பங்காயைத் தின்றாலொத்துச் செவிக்குக் கயப்பினைத் தரும் சுவைநிறைந்தனவும்;

"வாய்கயப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்" எனக்கம்பநாடர் கூறினராதலின் உரைக்கின்ற வாயுங் கசக்குமெனக்கொள்க. செவிகைத்தலுக்குச் "செவிகைப்பச் சொலவி" எனப் பிறர்கூறிய கூற்றும் மேற்கோளாகும். வேம்புதின்றார்க்கு நிகழும் தலைநடுக்கம் முதலியனவும் ஈண்டுக் கொள்ளப்படும். இதுவும் வெறுப்பின்பாற்படும்.

ஆற்றல் தவழ் சொலலின=வல்லமை அமைந்த சொற்களையுடையனவும்;

"ஆற்றல்" என்ற இலேசானே ஆக்கவும் அழிக்கவும் வல்ல சொற்களையுடையன எனவும் கொள்க. இதனை "ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த-காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்-சீரிய - வந்தண் பொதியி லகத்தியனா ராணையாற் - செந்தமிழே தீர்க்க சுவாகா" எனவும், "முரணில் பொதிய முதற்புத்தேள் வாழி-பரண கபிலரும் வாழி - யரணிய-வானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட-னானந்தஞ் சேர்க சுவாகா" எனவும் தெற்கண்வாயில் திறவாத பட்டிமண்டபத்தார்பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும, சாவவும் பாடிய மந்திரம் அங்கதப்பாட்டாயின என்று பேராசிரியர் கூறியவற்றானும்; கம்பர், காளமேகம் முதலிய நல்லிசைப்புலவர்கள் பாடிய வசைகளானும் தெளிக.

மூப்பு தளர்வு ஓட்டி வீரம் முழக்குந=மூப்புடைமை காரணத்தான்வந்த தளர்ச்சியை அகற்றி வீரதன்மையை உண்டாக்க வல்லுநவும்;

இது தன்கட்டோன்றிய ஆக்கம்பற்றிய வியப்பைப் பிறக்கவைப்பது. வீரம்பற்றி ஆர்த்தன் முதலியன உளவாதல்பற்றி "முழக்குந" என்றார். ஒரு முதுமறவன் இராமாயணப் பிர

சநகங் கேட்டுவரு நாளுள் ஒருநாள் இராவணன் பிராட்டியை எடுத்துச் சென்றான் என்னும் விஷயம் செவியில் விழுந்த மாத்திரையிலே வீராவேசங்கொண்டு கூக்குரலிட்டனன் என்னும் கன்னபரம்பரைச் செய்தியும், சிவாஜி என்பான் இராமாயணபாரத சரிதைகளைக் கேட்டுவந்தமையானே வீரத்தன்மை எய்தப்பெற்று எல்லாரையும் வென்று அரசனாகி மேம்பட்டனன் என்னும் கதையும் பிறவும் ஈண்டொப்புநோக்கத்தக்க பெற்றியனவாம்.

காமம் போக்கை கடிந்து அருள் ஊட்டுந = காமத்தால் விளையுங் குற்றங்களைக் களைந்து நன்மை பயக்கவல்ல அருளைப் புகட்டுவனவும்;

காமப்போக்கு என்பதைப் பண்புத்தொகை எனவும் கூறுப. மனவருத்தம், உடம்புத் தளர்ச்சி, வாய்பிதற்றல், அறிவுமயக்கம் முதலியன இம்மைக்கண்ணும்; நரகத்துன்பம் மறுமைக்கண்ணும் பயக்கவல்லது காமம் என்க. இதற்கு மெய்ப்பாட்டினை மேலுரைத்தாங்கு ஏற்ப விரித்துரைத்துக்கொள்க. புதுமையே, பெருமையே சிறுமையே என்னும் பகுதிகளை "இன்னவும்" என்றதாற் கொள்க. அருள் வேட்டார்க்குக் காமப்போக்கு நீக்கப்படல் வேண்டும் என்பது தோன்றக "காமப் போக்கைக் கடிந்தருளூட்டுந" என்றனர். தலைமைபற்றிக் காமமொன்றனையே கூறினரேனும் புலை, கொலை, களவு கள்ளாதியவற்றையும் கூட்டிக்கொள்க. "தள்ளாத் தாருங் காமந் தம்பா-லாங்கது கடிந்தோ ரல்லவை கடிந்தோர்" என்னும் மணிமேகலைச் செய்யுளானே காமம் அவற்றுட் டலைசிறந்தமைக்கும், மற்றையவற்றைக் கூறாமைக்கும் உளவாம் காரணங்கள் நன்கு அறியப்படும். இந்திரற்குக் காமத்தை மூட்டிய பிரகஸ்பதி இயற்றிய நூலும் பிறவும் இதனது எதிரினை வலியுறுத்தும். வல்லாரவாய்க் கேட்டுணர்க.

இரும்பு அ(ன்)ன நெஞ்சினை இளக்கி குழைக்குந = இரும்புபோன்ற (வல்லென்ற தன்மையையுடைய) நெஞ்சத்தை இளகவைத்துக் குழையச் செய்வனவும்;

நட்பினை முதலிடைகடைகளாக முப்பாற்படுத்தி முதற்பிரிவுக்குப் பொன்னையும், இடைக்கு வெள்ளியையும், கடைக்கு இரும்பினையும் ஒப்புக் கூறுப. பொன் தன்னொடு கூடிய நெருப்பினை அகற்றித் தான் அடிபட்டுவருதல்போல உத்தம நட்பாளரும் தம்மொடு கூடிய நேசரைத் துன்பத்தினின்றும் நீக்கிவிட்டு அத்துன்பத்தைத் தாமே அநுபவிப்பர். வெள்ளி தன்னொடு கூடிய நெருப்புக்கு இடைநிகர்த்த துன்பத்தை அளித்தல்போல மத்திமநட்பாளரும் தமது நேசர்க்கு இடைநிகர்த்த துன்பங்களை அளித்துவருவர். இரும்பு நெருப்பிருக்கும்வரையினும் அடிபட்டுப் பின்னர் அடிபடாதிருத்தல்போல அதமநட்பாளரும் தமது நேசரொடு ஒருநிகர்த்த துன்பத்தை அநுபவித்துவருவர். "இரும்பன நெஞ்சு" என்றமையானே தமரையும் தம்மையும் வருந்தவைக்கும் அதமத்தன்மையுடையார் என்க. வேறுங் கூறுப. வல்லென்ற நெஞ்சுடைய வேடனை நாரதமுனிவர் முனிவனாக்கினமையும் பிறவும் ஈண்டொருவாறு ஒப்புநோக்கற்பாலனவாகும்.

இவற்று எதிர் = ஆகிய இவற்றையும் இவற்றிற்கு மாறுபட்ட பிறவற்றையும்;

இளமையை ஓட்டி முதுமை காட்டுவனவும், அருளினை ஓட்டிக் காமப்போக்கை ஊட்டுவனவும், இளகுந் தன்மைத்தாய நெஞ்சினை இரும்புபோலாக்குவனவும் ஆகிய பலவும் அடங்குவதற்கு "இவற்றெதிர்" என்றார். வேறுமுரைப்ப.

இன்னவும் = (மேற்கூறிய) இவை போன்றவற்றையும்;

பிறவும் = (கூறாத) ஏனையவற்றையும்;

உவமை, மரபு, உத்தி, மதம், அழகு என்னும் இத்தொடக்கத்தன பலவும் அடங்குவதற்குப் "பிறவும்" என்றார். இனிப் பிறவும் என்றதனால் மாத்திரை முதலாய முப்பத்துநான்கு உறுப்புக்களையும், திணைதுறை வகைகளையும் கூறினர் எனினும் இழுக்காது.

ஏற்புழி = ஏற்குமிடத்தையறிந்து;

**இதனாற் கவிமரபிற்குரிய ஒரு நுட்பம் காட்டப்பட்டது**

பாட்டு இடை நாட்டி = செய்யுளினிடமாகத் தாபித்து;

பாட்டி னுறுப்புக்களை "மாத்திரை யெழுத்தியல்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானும் பிறவாற்றானும் அறிந்துகொள்க.

பாரகத்து வியப்பு உறுத்தும் = உலகத்து மக்களுக்கு வியப்பினைச் செய்விக்கின்ற;

பாரகத்து எனப் பொதுப்படக் கூறினாரேனும் அப்பாட்டினை ஆய்ந்தறியும் ஆற்றலுள்ளவரையே கொள்க.

புத்து அமிழ்து ஒத்த = புதிய அமுதத்தைப்போன்ற;

சுவையும், அருமையும், ஆற்றலும் உடைமைபற்றி அமுதோடு புலவரையொப்பிட்டார். முத்தமிழ்க்கேற்றிக் கூறினும் இழுக்காது.

முத்தமிழ் புலவோர் = இயல் இசை நாடகம் என்னும் மூன்று தமிழையும் அறிந்த சான்றோரும்;

ஆங்கு என்பது அசை. "புரக்கில்லார்", "விளங்குநர்", "துயில்குநர்", "இயம்பிலர்" "மூட்டுநர்", நோக்கிலர்", "வெறுக்குநர்" என்னுமிவையெல்லாம் பிறர் என்பது போதரற்பொருட்டு அங்ஙனம் அசைகொடுத்துக் கீழ்வருவனவற்றைப் பிரித்தார் என்க.

தம் புரக்கில்லார் = (தமிழ்ப்புலவர்களாகிய) தங்களைக் காத்துவருகின்றாரில்லை;

தாஅம் பெரும் பணி வெம் உறு பட்டம் மேஎய விளங்குநர் = (அப்புரக்காத) அவர்தாம் பெருமைவாய்ந்த உத்தியோகங்களையும் விருப்பமுறுகின்ற பட்டங்களையும் பொருந்தி ஒளிசிறந்துவருகின்றனர்;

வேலை, பட்டம் என்னுமிவற்றைப் பெறவேண்டுமென்று நீடு நினைத்து முயன்று தாமொருவரே பணிக்குரிமையாளர் பட்டத்திற்குரிமையாளர் என்றியாண்டும் பொலிந்து தோன்றும் செய்கைநோக்கித் "தாஅம்" என்றெடுத்தும், எய்தபணிக்கு மேற்பணியையும் எய்தபட்டத்திற்கு மேற்பட்டத்தையும் ஓயாமல் விரும்பிவரும் இயல்பு நோக்கிப் "பெரும்பணி", "வெம்முறு பட்டம்" என்றும், தாம் பணியாளர் தாம் பட்டத்தினர் என்று இறுமாந்துவருதலிற் குறைவுபடாமையை நோக்கி "மேஎய விளங்குநர்" என்றும் கூறினார். பணிகளையும் பட்டங்களையும் நழுவவிடாமற் பற்றிவரும் இயல்புநோக்கி "மேஎய" என்றெடுத்தது. வெம்—கொடுமையுமாம், நாட்டுக்குத் தீமைசெய்தலின் என்க.

உண்டு உடீஇ ஊர்ந்து உவந்து இறுமாந்து துயில்குநர் = (உண்ணவேண்டியவற்றையெல்லாம்) உண்டும், (உடுக்கவேண்டியவற்றையெல்லாம்) உடுத்தும், (ஊரவேண்டியவற்றையெல்லாம்) ஊர்ந்தும், (வருதலினாலே) மகிழ்ச்சி கொண்டும், (அம்மகிழ்ச்சி காரணமாகத் தம்மினும் பிறரெங்கும் இல்லையென்றுகருதித்) தலையெடுத்து (கவலை யொன்றேனும் இல்லாமையால்) நித்திரைபுரிந்துவருகின்றனர்;

இவரல்லாத பிறரெல்லாம் உண்ணவும், உடுக்கவும், ஊரவும், உவக்கவும் வழியில்லராய்த் தலைகுனிந்து நித்திரைகொள்ளாமல் நிலைதலைகின்றனர் என்க.

என் துணையேனும் பெட்டாங்கு இயம்பிலர் = எள்ளளவேனும் விரும்பியபடியே பின்னரும் பேசுகின்றாரில்லை;

"பெட்டாங் கீயும் பெருவளம் பழுநி" என்றார் கபிலரும். சிலர் எப்பொழுதேனும் விரும்பினாரேனும் அவ்விருப்பத்தை வெளிக்காட்டிற் புலவர் பொருள்கேட்டுவிடுவரோ என்றும், பிறர் தம்மை நன்குமதித்தல் குன்றிவிடுமோ என்றும் பிறவாறும் கருதி வாயாலும் விருப்பமாகக் கூறிலர். கூற்றே இவ்வாறாகுமேல் செய்கையைப்பற்றி ஒன்றும் கூறவேண்டாம் என்க. ஆங்கிலங்கற்று நாட்டுமொழி கற்றார்போன்று நடித்துப் பெருமையீட்டுவான்வேண்டிச் சிலபுலவர்களைக் கையாட்களாக வைத்துக்கொள்வோர் இங்கே குறிக்கப்பட்டனர் என்க. தனித்தவிடத்திலும் அகத்திலும் விரும்பியபடி என்று விரித்துக்கொள்க.

நாட்டுமொழி புலவோர் நவையோர் என்ன முகத்து முன்னரும் நகைத்து பகை மூட்டுநர் = தேசபாஷாவித்பத்தியுடைய வித்துவான்கள் குற்றமுடையவராவார் என்று நேரிலே இகழ்ந்து சிரித்துத் தாமாகவே பகைமையை அதிகரிக்கச் செய்கின்றனர்;

"நாட்டுமொழிப்புலவோர் நகையோர்" என்றது தேசபாஷாபண்டிதர்க்கும் போதனா சக்தி, மாணாக்கரையடக்கியாளும் வல்லமை, புறநாட்டு நாகரிகம், சித்தசுத்தம் என்றன்னபலவும் இல்லையென்று கருதுதல் இக்காலத்துச் சிலர்க்கு இயற்கையாதலின் அப்பண்டிதரை அவர் நகையோர் என்கின்றார் என்றவாறு. "முகத்து முன்னரும் நகைக்கப் பகை மூட்டுநர்" என்றது புறம்பேதான் தூஷிக்கின்றாரோ? நேர்முகமாகவுந் தூஷித்து நகைத்தவமானப்படுத்துகின்றார் என்றவாறு. "முகத்து முன்னரும் நகைக்க" என்றமையால் அச்சிலர்க்கு நாட்டுமொழிப் புலவர் தம்மேல் உள்ள அவமதிப்பினைப் புலப்படுத்திற்றாயிற்று. "பகைமூட்டுநர்" என்றமையான் பண்டிதர்கள் வாளாவிருந்தாலும் அச்சிலரே அவரை வாளாபகைக்கின்றார்; பண்டிதர்க்குக் கதி பிறிதின்மையின் அவரை நேசித்தே வருகின்றார் என்று குறிப்பித்தாராயிற்று.

மகள் கொடை நேர்கிலர் — (நாட்டுப் புலவரைத்) தங்கள் பெண்களை மணந்து கொள்ளுமாறு கொடுக்கக் கொடைக்குப் பொருந்துகின்றாரில்லை;

ஆங்கிலங் கல்லார்க்குப் பெண்கொடுத்தல் அவமானம் என்று கருதல் இக்காலத் தமிழரியல்பு. புலவர்களும் பெண்டருமாறு கேளார் என்க.

மடவோர் வெறுக்குநர் = மடப்பம் வாய்ந்த பெண்களும் (தமிழ்ப் புலவர்களை (நினைத்தலும்) வெறுப்புறுகின்றனர்;

சோற்றுவாரும் மதிப்பாரும் இல்லாமையிற் கந்தையுடைகளை யுடுத்திக்கொண்டு வீதிகளிலே வெய்யிலென்றும், மழையென்றும் நினையாராய் யாண்டுந் திரிந்தும் மிகச்சிறு பொருளும் கிடைக்கப்பெறாராய்த் தமிழ்ப் புலவோர் இருந்துவருதலின் அங்ஙனம் அவரை மடவோரும் வெறுக்கின்றனர் என்க.

இனி, மடவோர் என்றதற்கு மனையாட்டி எனப் பொருள்கொள்ளுவாரு முண்டு.

என்ன சினோஇ என்று சினங்கொண்டு;

வெகுண்டு என்றது "சினோஇ" என்றார் புலவோரது பொறுமை தோன்றற்பொருட்டென்க. மேற்கூறியவெல்லாம் வெகுடற்குக் காரணங்களாகவிருந்தும் சினமுறாது கொள்கிலர் என்பது குறிப்பு. அச்சினங்கொள்வரேல் அஃது ஆறாச்சினமாய்விடும் என்பது தோன்றச் "சினோஇ" என்பதாற் பெறப்பட்டது.

ஒருபால் தமிழ்ப் பனுவலை நெருப்பு இடை எரிக்க — இப்போது நமது கையகத்துள்ள இயற்றமிழ் நூல்களை நெருப்பிடையிலே எரியவிட்டு அழியுமாறு செய்தலினும்;

ஏனைய இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் இவற்றுக்குரிய பனுவல்களை யெல்லாரும் போற்றாமையான் காலவாய்ப்பட்டன. இதுபோதுள்ள இயற்றமிழ்ப்பனுவல்களையும் புலவரைப் போற்றவிடின் தீயிடையிட்டு அப்புலவர் அழிக்கிடுவர் என்று நாட்டார்க்கு அச்சங்காட்டிப் புலவரைப் போற்றுமாறு ஒருசூழ்ச்சி செய்தனர் இந்நூலாசிரியர் என்க. புனல், மண் முதலியவற்றிற் பனுவல்களை யிட்டாரேற் சிலர்கண்டு ஒருவேளை எடுத்துவிடுவர். அவர்க்கு அங்ஙனம் எடுக்கவும் ஒண்ணாமல் நெருப்பிலிட்டிடுவர் என்று அச்சமிகுதி கொள்ளற்பொருட்டு "நெருப்பிடை யெரிக்க" என்றார்.

நிலவு தமிழ் மக்கட்கு இருக்கும் ஒரு பெயர்க்கு = இதுகாறும் விளங்கிவந்த தமிழ் மக்கட்கு இருந்துவரும் ஒப்பற்றபெயர்க்கு,

தமிழர் என்னும் பெயருண்மை மொழியால் எய்தப்பெறுதலின் இங்ஙனம் கூறினார். பாஷை காரணமாகவே தமக்குப்பெயர்வாய்த்திருத்தலைத் தமிழர் அறிந்துகொண்டாரில்லை என்பது குறிப்பு.

இறுதி செய்கில்லா அருள் திறம் பூண்ட அரும் தமிழ் கடவுளர் = முடிவினைச் செய்யாத அருளாகிய கூறுபாட்டை ஆபரணமாகப் பூண்டுகொண்ட அரிய தமிழ்நிறைந்த கடவுளரும்;

அருள் பூண்டவராதலின் இறுதிசெய்திலர் என்க. தமிழ் நிறைந்தமையே அங்ஙனம் அருள்பூண்டதற்குக் காரணமாகும். மக்களியற்கையைவிட்டு உலகோர் தமக்குச்செய்துவரும் அவமதிப்பைப்புறக்கணித்துச் செந்தமிழைக் காத்துவருதலின் அவர் கடவுளர் எனப்பட்டார்

என்க. கடவுட்பெயர்க்கொடை பிறாக்கு முண்டென்பதைப் பத்துப்பாட்டிலும் கலித்தொகையிலுங் காண்க. ஆண்டாண்டு நச்சினார்க்கினியர் எழுதிய விசேடக்குறிப்புகளையும் நோக்குக.

தாய் மொழி பொருட்டு தம் நலம் துறந்து = நாட்டுமொழியாகிய தமிழ்மொழியைப் போற்றிவருதல் காரணமாகத் தமக்குரிய நன்மையைநீக்கி;

அரசமொழி பயின்றோர்களன்றி இக்காலத்து நன்மையின்மையின் நாட்டுமொழி பயின்று தந்நலந்துறந்தார் என்க. கட்டுடி, நிதி, பரதன்தையர்விழைவு இன்னவற்றால் நலந்துறத்தல் இயல்பு. மொழியறிந்தமையால் நலங்கெடுதல் இக்காலத்துக் கோலத்திற்கு இயல்பாயிற்றென்க. இதனான் நாட்டாரதம் அறிவின்மை விளக்கப்பட்டது.

சீரிய நோன்பு செயிர் அற்று செய்து = சிறந்தனவாகிய குணஞ்செய்கைகளுக்குக் காரணமாகிய நோன்பினை (விரதத்தை) த் தற்காலத்தார் தம்மை அவமதித்தல் முதலாய இழிவுசெயல்களுக்கு உட்படவேண்டிய குற்றத்திற்குப் பாத்திரமாகாமல் நீங்கிச் செய்துவந்தமையால்;

நற்குண நற்செய்கைகளை யுடையாரே நோன்புசெய்தற்குரியார் என்பார் "சீரிய நோன்பு" என்றும்; தமிழ்ப்புலவர்கள் இக்காலத்தார்க்கும் தமிழ்க்கும் இழவு செய்யவேண்டியதுவே இயற்கை, அவ்வியற்கையாகிய குற்றமற்றோர் இவர் என்பார் "செயிரற்று" என்றும், ஏககாரணத்தை முன்னிட்டும் உண்மையை அநுட்டித்தற்கு உரவோர் மடியாராதலிற் "செய்து" என்றுங் கூறினார்.

[திருநாண் மங்கலஞ் செந்தமிழ்த் தாயின] செம் தமிழ் தாயின் திரு நாண் மங்கலம் = செம்மையாகிய தமிழ்த்தாயின் சீகரம் பொருந்திய நூலாகிய மங்கலியம்;

ஒரு மாண் கழுத்தில் ஊழிதொறும் வாழ்ந்து வருமாறு = ஒப்பற்ற கழுத்திலே பிரளயந்தோறும் நிலைத்து வரும்படி;

காத்த வளம் சால் வண்மையா = காப்பாற்றிய வளப்பம் நிறைந்த கொடையையுடையாரும் ஆகிய பண்டிதர்கள்;

தமிழ்மாதுக்குரிய நூலழியாமற் காத்தவர் என இருபொருள் படுதலை யுய்த்துணர்ந்து கொள்க. மற்றைய மடவார்தம் கழுத்திலுள்ள நூல்களுக்கும் தமிழ்த்தாயின் கழுத்திலுள்ள நூலுக்கும் ஒரு வேற்றுமை யுண்டென்பது தோன்ற "ஒருமாண் கழுத்தில்" என்றார். என்றும் நிலைத்திருக்கவேண்டும் என்பார் "ஊழிதொறும் வாழ்ந்து வருமாறு" என்றார்.

பொருள் உடையவரேல் = (இல்லறம் முதலியவற்றை நடாத்துதற்குத் தக்க) செல்வமுடையவரேல்;

புடை சூழ் செல்வர் — (அவர்தம் இல்லத்து) மருங்கிலே பொருந்திய தனவந்தர்கள்;

புலவர்தம் சிறப்புத்தோன்றப் "புடை சூழ் செல்வர்" என்றார்.

அருள் தரு கல்வியின் ஆட்சி சான்றவா (தன்னை முறையோடு கற்றுத் தேர்ந்தார்க்கு அம்மை இன்பத்திற்குக் காரணமாகிய) அருட்செல்வத்தினைத் தருகின்ற கல்வியை ஆண்டுவரும் ஆட்சி நிறைந்தவராவர்;

கற்றவராவர் என்றபடி. "கற்றலிற் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று" என்பவாகலின் இவ்வாறுகூறினர். கற்றவர்களித்தலே உலகத்தை வளர்ப்பதும், அளியாமையே உலகத்தைக் கெடுப்பதும், ஆம் எனவும் குறிப்பித்தாராயிற்று. தற்காலத்துத் தமிழ்நாட்டாருட்பலர் தமிழ்ப் புலவரைப் பாதுகாவாமற் பிறரைக் காத்துவருகின்றனராதலின் அவர் செய்கை அவர்க்கே கேடு பயக்கும் என்று குறிப்பித்தாருமாம்.

இல்லாதவரேல் = (அக்கற்றவர் செல்வம்) இல்லாதவராமாயின்;

இயைபவர் கல்லா மடவர் என கருது நிலையவர் = அவர்தம் புடைசூழ்ந்த செல்வர் கற்றறிவில்லா மடமை பொருந்தியவர் என்று (சான்றோர் யாவராலும் இகழ்ந்து) கருதப்படும் நிலையினராவர்.

இதனாற் றம்புடை சூழ்ந்த புலவரைக் காத்துவருமாறு செல்வர்க்கெல்லாம் செவியறிவுறுத்தினாராயிற்று.

(இ-ள்.) தட்பம் வெப்பம் = குளிர்ச்சியும் உஷ்ணமும்;

உலகத்தின் பருவகாலம் ஆறாகப்பிரித்து வழங்கப்படும். ஆவணி மாசம் முதல் இவ்விரு மாசம் ஒவ்வொரு பருவமாக முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் எனப்பிரிவுபடும். ஆயினும் நுணுகிநோக்குங்கால் இவ்வாறு பிரிவுகளும் மேலைய இரண்டனுள் அடங்கும் என்ப. சூட்டின் அபாவமே தட்பமாகும் என்றும் ஒருசார் வழக்குப் பற்றித் தட்பம் முதற்கட் கூறப்பட்டது போலும். அன்றேல் நமது நாட்டார் விரும்புவது தட்பமாதலின் அங்ஙனம் கூறப்பட்டது எனினும் பொருந்தும்.

தகுதியொடு நாடு வயது தொழில் நிலை = தக்கதோடு தேசமும், வயசும், தொழிலும், நிலைமையும் ஆக;

அறிவு, ஒழுக்கம், குணம், நடுவுநிலை ஆதியவற்றைத் "தகுதி" என்றது குறிக்குமேனும் ஈண்டுச் செல்வம், வலிமை முதலியவற்றைக் குறிக்கின்றது. இல்லறதுறவறங்களையும், ஆச்சிரமங்களையும் "நிலை" என்றது குறிக்கும். தொழில்கொண்டு வருணம் உய்த்துணரற்பாலதாகும்.

வாய்ந்த இவற்றிற்கு = பொருந்திய இவைதமக்கு;

என்ற வல்சியும் — இயன்ற உணவினையும்;

உணவு முதலியவெல்லாம் சீதோஷ்ண நிலைமைக்கு ஏற்குமாறு இருத்தல்வேண்டுமென்பார் "தட்பம் வெப்பம்" என்றும்; அத்தட்ப வெப்பங்களுக்கு ஏற்ப அமையும் உணவு முதலியன செல்வர் முதல் எளியோர் ஈறாக உள்ளவர்தந் தன்மைக்கு ஏற்குமாறு இருத்தல் வேண்டுமென்பார் "தகுதி" என்றும்; ஏழைகட்கு அமைக்கப்படும் உணவு முதலியன அவர்தாமும் வன்மைமுதலியன பெற்றுய்தற்கு ஏற்றனவாய் இருத்தல்வேண்டும் எனபார் "தகுதியொடு" என்றும்; சீதோஷ்ணம் தகுதி என்பன நிலத்தியல்புக்கும், உணவு நாட்டில் அகப்படக்கூடியவற்றிற்கும் ஒத்திருத்தல் வேண்டுமென்பார் "நாடு" என்றும்; அவையெல்லாம் ஒத்திருப்பினும், குழவி, இளமை முதலாய பருவநிலைக்கு ஏற்குமாறு அமையப்பெறாவிடின் ஒருபயனும் இலவாதலான் "வயது" என்றும்; மேற்கூறிய அனைத்தும் தொழில் நிலைமைகளுக்கு ஒத்தனவாய் இருத்தலும் ஆவசியகமாதலின் "தொழில்" என்றும்; இல்லற துறவறங்களுக்கும், ஆசிரமங்களுக்கும் மேற்கூறியவெல்லாம் வேற்றுமைப்பட்டிருத்தலின் "நிலை" என்றும் கூறினார். "தொழில்" என்றதனை "நிலை" என்றதனுட் பொருத்தாவிடாது தனித்துக் கூறிய காரணந்தான் யாதோவெனில் தொழிலானது ஒவ்வொரு வருணத்துள்ளும் பலபடியாக வேற்றுமைப்பட்டிருத்தலின் அங்ஙனம் கூறப்பட்டது என்க. சீதளநாட்டார் உணவையும், நமது நாட்டாருணவையும் ஒன்காய்ந்து வேற்றுமை தெளிக. விரிக்கிற் பெருகும்.

இனிது ஆக்கும் ஆறும் — (அவ்வுணவை) இனிதாகச் செய்துகோடும் வழியையும்;

கூழ்முதலியவற்றையும், காய்கிழங்குமுதலியவற்றையும் உணவாக்கிக்கொள்ளும் வழியை என்பதுமேல் ஈண்டுப் போந்தபொருளென்க.

பாகசாத்திரம் முதலியன அவ்வழியைப் புலப்படுத்தும். தேக சௌக்கியமும், கண்ணுக்குத்தூய்மையும், தெளிவும், நாவிற்குச் சுவையும், மூக்கிற்கு நறுமணமும், இன்னபிறவும் தருவனவாக ஆக்கிக்கோடல் வேண்டுமென்பார் "இனிதாக்கும்" என்றும்; அவ்வாக்குதலைப் பழக்கமுடையாரபாற் கேட்டுணர்ந்து பழகுதல் வேண்டுமெனபார "ஆறும்" என்றும் கூறினார்.

ஆன்ற அளவும் = நிறைந்த அளவினையும்;

"ஆன்ற" என்பது கால், கான்ற என்றாற்போல ஆல் என்னும் முதனிலையடியாகப் பிறந்த பெயரெச்சம். ஆன் "ஊன்ற" என்றாயிற்று என்பாரும் உண்டு. தூய்மை, சுவை, நன்மணம், உண்மை என்பன பலவும் நிறையப்பெறுதற்கு ஓரளவு உண்டென்பார் "ஆன்றவளவும்" என்றார்.

அளவான்றிருத்தலையும் என்றதனால் அளவோசை பிழைபடுமாதலானும், சொற்பல்கும் ஆதலானும் "ஆன்ற வளவும்" என்று கூறினார். இந்நூலாசிரியர் அளவோசைபட ஈண்டு விஷயத்தை ஏற்குமாறு கூறினர் ஆதலின் விதிமுறைகொண்டு சீருக்தளையுமட்டுக் தழுவிச்செல்

றிலர். விதிகூற வேண்டியவிடத்தும் விஷயங்கூறிக்கொள்ளுமிடத்தும் முறையே செருந்தளையும்படவும் அவற்றுடன் ஓசைபடவும் ஆண்டாண்டு அமைத்துச் செல்கின்றனர்.

ஒன்றனோடு மற்றொன்றினைச் சேர்த்தல் என்னும் பொருள்அளவும், சூட்டின் ஏற்றத் தாழ்விற்குரிய சூட்டளவும், இவற்றிற்குவேண்டிய காலவளவும் இன்னபிறவும் அடங்குவதற்கு "ஆன்ற வளவும்" என்றொன்றலும் ஒன்று.

பிறவும் அளித்தனர் = இவைபோன்ற பிறவற்றையும் கொடுத்தவரும்;

பாத்திரவகை, இடவகை, விறகுவகை, செய்வோர்வகை, ஆக்குதற்குரிய காலவகை, உண்ணுதற்குரிய காலவகை என்னும் இத்தொடகத்தனவற்றையெல்லாம் "பிறவும்" என்றதனாற் றழீஇக்கொண்டார்.

தோன்று பிணிக்கு மருந்தும் = (பழவினைக் காரணமல்லாத ஏனைக்காரணங்களால்) உண்டாகின்ற நோய்களைத் தீர்க்கும் மருந்தினையும்;

பழவினைப்பயனாய் வருமபிணிகள அவ்வினைக் கழிவினன்றித் தீராவாகலின் மருந்தினாற் றீர்க்கப்படுவன ஏனைக்காரணங்களாலவரும் பிணிகளேயாம்.

துணைமை சான்ற உடுகைகைக்கு உரியன = (மேற்கூறியவற்றிற்குத்) துணையாகுந் தன்மை நிறைந்த ஆடைக்கு உரியனவாகிய;

ஆடையினாலே உடலமைதிக்குத் தக்காங்கு வெப்பதட்பங்களை அமைத்துக்கோடலைக் கருதித் "துணைமை" என்றும், அவ்வாடைக்குத் தூய்மைமுதலியன அமையாவிடின் மேற்கூறியவற்றிற்குத் துணைமையாகாது ஆதலின் அது தூய்மை முதலியவற்றைக் கொண்டிருத்தல் வேண்டுமென்பார் "சான்ற" என்றும் கூறினார்.

பட்டும் பருத்தியும் தந்து நம் வருத்தம் பாற்றினர் = பட்டினையும் பருத்தியையும் (கண்டறிந்து நமக்கு) உதவி நமது துயரை நீக்கியவரும;

"பட்டும் பருத்தியும்" என்றோரேனும் சரிகை, மயிர் முதலியவற்றையுந் தழுவிக்கொள்க. தூய்மையும் பிறவும் பட்டிடத் தன்மைபற்றி அது முற்கூறப்பட்டது. இவற்றையெல்லாம் தாமே வைத்தநுபவியாமல் எம்மனோர்க்கெல்லாம் கொடுத்தருளினர் என்னுமுகத்தால் அவர்தம் பெருமிதத்தை வெளிப்படுத்தினாராயிற்று.

இருக்கையும் = வீடு முதலியவற்றையும்;

பீடமுதலிய ஆசனங்களும் அன்னபிறவும் "இருக்கை" என்பதனுள் அடங்கும்.

வாழ்க்கைக்கு இன்றி அமைகில்லா திருத்தம் பயின்ற சீர் சால் நெறியும் = (மேற் கூறியவற்றைக்கொண்டு வாழ்ந்துவரும்) வாழ்க்கையை நடாத்தற்கு இனறியமையாத திருத்தம் பழகிவந்த சீர்த்தி நிறைந்த நீதிகளையும்;

வாழ்க்கைக் கின்றியமைகில்லா நெறி; திருத்தம் பயின்ற நெறி; சீர்சால் நெறியென்க. உலகத்தார்க்கு நடுவுநிலைமை முதலியன வாய்க்கப் பெறாவிடில், ஒருவர்க்கொருவர் பொறாமை கொண்டு கலாம்பலவிளைத்து மடியுற்றுமன்றி கள்வராகிக் கெடுவராதலின், அக்கேடுமுதலியன வின்றி வாழ்தற்கு, ஒரு நீதிநூல் வேண்டுமாதலின் "வாழ்க்கைக் கின்றியமை கில்லா" என்றும்; தேயத்தானும், காலத்தானும், பிறவாற்றானும் முறையே வேற்றுமைப்பட்டு எற்குமாறு திருத்த

---

*இளம்பூரணவடிகளும் இக்கருத்தையேகொண்டு பின்வருமாறு கூறினர்:—"மேற்சொல்லப்பட்ட ஓசைவகையால் அல்லாது பட்டாங்கு கூறார் என்றவாறாயிற்று. பட்டாங்கு கூறலாவது ஓசையொழிந்து சீருந்தளையும் படக்கூறல். அவ்வாறு சொல்லுங்கால் பட்டாங்கு ஆகாது என்பதூஉம், அடியுந்தொடையும் பெற்றுவந்ததாயினும் நூலின்பாற் படுதல் உரையின்பாற் படுதல் என்பதூஉம் கூறியவாறாம். அது வருமாறு "ஐவகையடியும் * * * * * * * * தைந் தாகும்மே" என்பது ஆசிரியப்பாவிற்குரிய இலக்கணமுடைத்தாயினும் ஓசையின்மையால் ஆசிரியம் எனப்படாது நூல் எனப்படும் என்றுகொள்க."

ழற்று வருதலின் "திருத்தம் பயின்று" என்றும்; மக்கள் எல்லாரும் சீரும், சிறப்பும் பெறுதற்குக் காரணமாக இதுவே அமைதலிற் "சீசால் நெறி" என்றும் கூறினர்.

முன்னம் புரக்கும் இயவுள துஉண்மையும் = உள்ளத்தை (த் தீயவழியினின்றும் நீக்கி நல்வழியிற் சேர்த்து) ஆட்கொள்ளும் கடவுள் உண்டு என்னும் உண்மையையும்;

முன்னம்—மனசு; இயவுள்—தலைவன். ஒருவர் மனநிலையை மற்றொருவர் அறிதல் சாலாது. அங்ஙனமாகவே எத்துணை ஆணையிட்டு நன்னெறியின் முயன்றுவருமாறு வற்புறுத்திக் கூறினும் உலகதத்துவத்தை அறியாத சாமானியர் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசிவருவர். மனசினையும், பிறவற்றையும் அறிதலும் ஆட்சி இயற்கையுண்டென்று அறியப் பெறுவரேல் நன்முயற்சியின்பாற்பட்டு நலமுறுவர். ஆதலின் "முன்னம் புரக்கு மியவுள துண்மையும்" என்றார். "பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்" என்பது முருகாற்றுப்படை.

இன்னவும் பிறவும் = இத்தகையவற்றையும் பிறவற்றையும்;

அரசாங்கமும், ஐம்பெரும்பூதமும், உயிருடல்களும், இயற்கைசெயற்கைகளும், அழிதலும் வளர்தலும், உறுதலும்பெறுதலும் ஆகியவெல்லாம் இனிதுடங்க "இன்னவும்" என்றும், முத்திவகைகள் அடங்கப் "பிறவும்" என்றும் கூறினர். இவற்றையெல்லாம் உபதேசவழியானும் நூல்வழியானும் தந்தருளினர் எனக.

இனிது ஈந்து இயன்றனர் = இனிதாக அளித்து விளங்கினவரும்; (ஆகிய இவர்தாம் யாவரோவென்னில்? சான்றோர் எனக.)

நாம் அவற்றையெல்லாம் செவ்வியிற் கற்றுணர்ந்து நடந்தின்புறுதல் எளிதன்று. அவ்வாறாகவும் சிரமமின்றி எளிதின் அவற்றையெல்லாம் எளிதிற் பெறுமாறு உதவியருளினர் என்பார் "இனிதீந்து" என்றும் இத்தகைய செயற்கரியசெயலைச் செய்தமையானே அழியாது விளங்கி வருகின்றனர் என்பார் "இயன்றனர்" என்றும் கூறினர். தாம் அரிதினெய்திய கண்டவற்றையெல்லாம் பிறர்க்குக் கொடுக்கப்படாதென்ற எண்ணமில்லாதவராய் மனமகிழ்வோடு கொடுத்தருளினர் என்பதுதோன்ற "இனிதீந்து" என்றனர் எனினுமமையும். அவர்செய்துவந்த பேருதவியெல்லாவற்றையும் அறவேமறந்திருக்கும் நம்மவர்க்குள் அவர் இப்பொழுதில்லையென்றும், நம்முன்னோரிடத்தில் இயன்றுவந்தனர் என்றும் குறிப்பித்தற்பொருட்டு "இயன்றனர்" என்று இறந்தகாலத்திற் கூறினர் என்றலுஞ் சாலும்.

இவ்வாறு ஆகவும் = (அச்சான்றோர்கள் நம்மவர்க்குச் செய்த உதவி) இவ்வழியாகவும்;

அன்னோரது செய்கைமூலமாகவே அவர்தன்மையறிதல் இக்காலத்தார்க்கு இயலுமாதலின் இன்னவராகவும் எனாது "இவ்வாறாகவும்" என்றார். அவ்வான்றோர் நம்மனோர்க்குச் செய்துவந்த உதவிகளையே நினைந்துருகிப் பாடிவருபவராதலின் அவரை மறந்து அவர்தம் செய்கையின்மேல் இந்நூலாசிரியரது மனஞ்செல்லப்பெற்று அவர்செய்த உதவி இவ்வழியாகவும் என்று கூறினர் என்றலும் சாலப்பொருந்தும்.

இற்றைஞான்றவருள் = இக்காலத்தார் தம்முள்;

சிலர் = சிலரேலார்தாம்;

அவரினும் நுட்பம் ஆர்ந்தனர் என கொடு = அவ்வான்றோர்தம்மினும் தம்மை மிக்க நுண்மதிநிறைந்தவர் என்று நினைந்துகொண்டு;

இங்ஙனம் நினைப்பவர் பேதையர் எனப்படுவர். அன்னவரைக் காணலும் தகாது. "குற்றத்தை நன்றென்று கொண்டு குணமின்றிச்—செற்ற முதலா வுடையாரைத்—தெற்றவறிந்தா ரொன் றேத்து மவர்களைக் கண்டாற்—றுறந்தெழுவார் தூய்க்காட்சி யார்" என்பது அறநெறிச்சாரம். "வினைய மோர்கிலாது—ஒருசெயல் விரைந்துசெய் தயங்கி வாழ்தலும்" கீழ்மக்கட்கு இயற்கையென்று கந்தப்புராணங்கூறும்.

மூத்தைதொட்டு முறை வருஉம் அவ் எ(ல்)லாம் = பழமைதொடங்கி முறைமையாக வருகின்ற அவற்றையெல்லாம்;

முந்தை முத்தையென விகாரப்பட்டது. "முத்தை வரூஉங் காலந் தோன்றின்" என்பது தொல்காப்பியம். மேற்கூறியவெல்லாம் படைப்புக் காலந்தொடங்கி உள்ளனவென்பார் "முத்தை தொட்டு" என்றும், அவற்றாற் பெற்றபலனும் மிகப்பலவென்பார் "முறைவரூஉம்" என்றும் கூறினர். முறையாகவரவும் அவற்றையெல்லாம் மாற்றுகின்றனரே என்னும் ஆச்சரியந்தோன்ற "வரூஉம்" என்றனவெடுத்தது.

தம் தம் விருப்பில் தபுத்து உறழ்தரா = தங்கள் தங்கள் விருப்பத்திற்சேர்த்தமாறு (முறைமையுற்றுவரும் அவற்றையெல்லாம்) பிரித்துக் கெடுத்துவேறுபடுகின்றனர்;

சான்றோர் உலகவளர்ச்சிகருதி நடுவுநிலைமையில் வீற்றிருந்து அளித்த நல்விதிகளையெல்லாம் தீமை பயப்பனவாகக்கருதித் தங்கள் தங்கள் அறிவுமுழுமை உத்தியுமில்லாப் புதுமுறைகளைச் செய்தோர் என்பார் "அவையெலாந் தத்தம் விருப்பில" என்றும், அதனைச்சார்ந்தவர்றானே உலகவளர்ச்சி கெட்டொழிந்தது என்பார் "தபுத்து" என்றும, இந்நிலையிலே அவர்தம்முள்ளும் பிறர்தம்முள்ளும் தாந்தாம் கண்டவற்றையே மேன்மையுடையனவாக ஒருவரோடொருவர் கருத்துமாறுபட்டு இகலிக் கலாம்விளைப்பார் என்பார் "உறழ்தரா" என்றும் கூறினர்.

இவரே = (இவ்வாறு ஆன்றோர் செய்கையோடு முரண்பட்டுப் புதுமுறைகளைச் சேர்க்கக் கருதிய) இவர்தாம்;

ஒல்கா பெருமை தொல்காப்பியமும் = தளர்ச்சியடையாத பெருமையுடைய தொல்காப்பியத்தையும்;

சொற்சுவைமுதலியவற்றினும் பொருட்சிறப்பு முதலியவற்றினும் "ஒல்கா" என்க. எத்தனையோ வழிநூல்கள் உண்டாகியும் அவற்றையெல்லாம் போற்றிவளர்த்தற்குப் பலர் மலிந்திருந்தும் அவையெல்லாம் இருந்தவிடமுந்தெரியாமற் கெட்டொழிந்துபோகவும், தொல்காப்பியமோ இடைச்சங்ககாலமுதலாக இதுகாறும் தன்பெருமையிற் கெட்டொழியாது நிலைபெற்றது எனபார் "ஒல்காப் பெருமைத் தொல்காப்பியமும்" என்றார். ஒல்குதல் குறைதலுமாம்.

வள்ளுவர் வழங்கிய தெள்ளு தமிழ் புலமும = திருவள்ளுவர் கொடுத்தருளிய தெளிந்த இனிமைவாய்ந்த நூலாகிய திருக்குறளையும;

தமிழ்மொழிக்குச் சிறப்பளித்தவர் என்பதுதோன்ற "வள்ளுவர்" என்றும், உலகத்தார் அளித்தகொடை எவற்றினும் சிறந்ததென்பார் "வழங்கிய" என்றும், உலகவழக்கினும் செய்யுள் வழக்கினும் மறைந்துகிடந்தவற்றை எல்லாரும் அறிந்துய்க்குமாறு அடைவுபடுத்தி இலக்கண முறைப்படி அமைத்தனர் என்பார் "தெள்ளு" என்றும், எவர்க்கும் எப்பொழுதும் இனிமை கொடுப்பது இஃதொன்றே என்பார் "தமிழ்" என்றும், நூல் என்ற மாத்திரையானே எல்லாரானும் அறியத்தக்கது இஃதொன்றே என்பார் "புலமும்" என்றும் கூறினர். தமிழ்ப்புலம் தமிழ்நூலுமாம். வள்ளுவனாரைத் "தமிழா" என்று பிறசான்றோரும் கூறுபவாகலின் அவர் நூலும் அங்ஙனம் கூறப்பட்டதெனினும் அமையும்.

சுவை கசிந்து ஊற்றும் நவை இல் பண்டை தண் தமிழ் பனுவலும் = (சொற்சுவை பொருட்சுவை முதலாய) சுவைகள் கசிந்து (அக்கசிவு மிகுதியானே) ஊற்றெடுத்துப் பெருகுகின்ற குற்றமில்லாத பழைய தண்ணிய தமிழ்நூல்களையும்;

சுவை கசிந்தூற்றும் பனுவல்; நவை இல் பனுவல்; பண்டைப் பனுவல்; தண்டமிழ்ப் பனுவல் என்க. ஆராய்வார் உள்ளத்தில் ஊன்றியுடன் சுவை கசியத்தொடங்கும் என்பார் "சுவைகசிந்து" என்றும், உள்ளத்தில் ஊன்றப்பெற்றவர் இடைவிடாது ஆய்ந்தாய்ந்து பழகினின் ஊற்றெடுத்துப் பெருகுமென்பார் "ஊற்றும்" என்றும், பிறமொழிநூல்கள் தனித்தனி ஒவ்வொருவராற் பெரும்பாலும் யாக்கப்பட்டமை போலாது ஒவ்வொன்றும் அவ்வத்துறையின் முறையே கைபோகிய உத்தமப் பாவலர்களான் இயற்றப்பட்டுப் பலப்பல காலம் உலகத்தில் உலாவி அவற்றுள் நன்மக்களாற் கொண்டாடப்பெற்றவற்றைப் பின்னுள்ளார் ஒவ்வொரு நூலாகத் தொகுத்துச் சங்கத்தில் அரங்கேற்றுவர் ஆதலின் அவையெல்லாம் குற்றமற்றனவாகும் என்பார் "நவையில்" என்றும், இக்காலத்தார் அவ்வழக்கினின்றும் வழுவினர் என்பார்

"பண்டை" என்றும், அவைகளே தண்ணிய தமிழ்நூல்கள் எனப்படும் என்பார் "தண்டமிழ்ப் பனுவலும்" என்றும் கூறினர்.

தரும் சார்பினர்கொல் = தருகின்ற தன்மையுடையரோ;

வேற்றுமொழி ஒன்றினைப் புதிதாகத் தாமே இவ்வாறெல்லாம் உண்டுபண்ணிக் கொள்வார்களோ என்றபடி.

ஆறுகடை இட்ட பத்து வகை கூலம் முதல உணவும் பிறவும் = ஆறு என்னும் இலக்கத்தைக் கடையிலே படைத்த பத்து (பதினாறு) வகையினையுடைய கூலங்களை முதலாகவுடைய உணவுகளையும் பிறவற்றையும்;

காய்கனி கிழங்கு, பால் தயிர் நெய் மோர், முதலியவெல்லாம் அடங்குவதற்கு "முதல" என்றும்; சித்திரம், சிற்பம் என்றற்றொடக்கத்தனவும், மேற்சொல்லியவற்றுட் கூறப்படாதனவும் அடங்குவதற்குப் "பிறவும்" என்றும் கூறினர்.

முறையே யாற்றி பிற வழங்கும் ஆற்றலரேயோ = முறைமையாக அவற்றையெல்லாம் களைந்து (அவற்றிற்கொத்த) பிறவற்றைக்கொடுக்கும் அத்துணைத் திறமையுள்ளவராவரோ;

திறமையுள்ளார் கொடுத்தவற்றையெல்லாம் அறமேமாற்றுதல் வேண்டுமென்பார் "முறையே மாற்றி" என்று கூறினர். முடியாது என்றபடி.

ஆதலின = அதுகாரணத்தானே;

இன்னோர் ஆட்சியுள் படாமல் = இத்தகைய இழிசனர்தம் ஆளுகையிலே அகப்படாமல்;

அன்னோர் என்னாது "இன்னோர்" என்றனர், இவரே அதிகாரப்பட்டுச் சமீபித்திருத்தலின் என்க. தாங்கள் முறைமை நியாயமுடையதுவாகவும், ஆன்றோர் முறைமை நியாயமற்றதாகவும் மருட்டித் தம்வசப்படுத்துவர் ஆதலின் அவர்தம் ஆளுகை இடத்தையும் மிதித்தல் கூடாது என்பார் "ஆட்சியுட் படாமல்" என்றும் கூறினர். இவர்தம்கோட்டியை வெள்ளைக் கோட்டி என்ப. "பிறவோரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்", "வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்", "செய்ந்நன்றி கொல்லன்மின்" என்பன சிலப்பதிகாரம்.

உடல் கருவி அமைப்பும் = யாக்கையின்கண் உள்ள மெய், வாய், முதலியகருவிகளின் அகம்புறவமைப்பினையும்;

நமது எண்ணத்திற்கு அகப்படாமலிருந்து நம்மால் அளிக்கப்பெற்ற ஆகாரங்களைச் சீரணமாக்கி எவ்வெப்பாகங்கள் எவ்வெவ்விடங்களிற் சேர்க்கப்படவேண்டுமோ அவ்வப்பாகங்களை அவ்வவ்விடங்களிற் சேர்க்கும் உள்ளுறுப்புக்களின் விநோதத்திறமைகளும்; வெளிப்பொருள்களைக் கண்டறியுமாறும், உட்பொருள்களைக் காணுமாறும், விசித்திரமாக அமைக்கப்பட்டிருக்கும் கண்களின் அமைப்பும்; இன்னபிறவற்றின் அமைப்புக்களும் ஈண்டுக் கொள்ளப்படும். இவற்றையெல்லாம் ஆராய்வதால் இறைவனது உண்மையும், அவனறன் ஆற்றலும் நன்கு புலப்படும்.

உயிர் வரு வியப்பும் = அவ்வுடலுக்குள்ளே உயிர் வந்துபொருந்தும் வியப்பினையும்;

ஒன்பது வாயில்களையுடைய உடலின்கண்ணே உயிர் எங்ஙனம் பொருந்தியிருக்கின்றது, எங்ஙனம் வருகின்றது என்று ஆராய்வார்க்கு நிகழ்வது வியப்பாதலின் "உயிர்வரு வியப்பும்" என்றார்.

உயிர் போம் மயக்கும் = அவ்வந்துபொருந்திய உயிரானது உடலைவிட்டு நீங்கிச்செல்கின்ற மயக்கமும்;

தம் உடலைவிட்டு உயிர்நீங்குதல் அறியப்படாதிருத்தலினானும், அந்நீக்கம் துன்பந்தருவதொன்றாதலினானும் "உயிர்போ மயக்கும்" என்றார். உயிர் பிரியுமுன் புலன்கள் சோர்ந்து ஒடுங்கும் வரைக்கும் அடையுந் துன்பமே இங்ஙனம் குறிக்கப்பட்டது. புலன்களின் ஒடுக்கத்தின் பின் நித்திரை போமாறொப்பத் துன்பவுணர்ச்சி தோன்றுவதில்லை.

ஒன்றிய ஐம் பெரும் பூதத்து இயற்கையும் = பொருந்திய ஐந்து பெரியபூதங்களினது இயல்பாய குணமும்;

நமது உள்ளும் புறத்தும் இருப்பன ஐம்பெரும் பூதமாகலின் "ஒன்றிய" என்றனர் நமது உடம்பும் ஐம்பூதச்சேர்க்கைத்து ஆதலின் "ஐம்பூதத்து" என்றார்.

ஐம்பூதங்களாவன பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். இவை முறையே மண், நீர், தீ, காற்று, விண் எனவும் சொல்லப்படும். இவற்றின்குணம் ஆகாயம் சத்தகுணம் உடைத்து; காற்று சத்த பரிசங்களை உடைத்து; தீ சத்த பரிச உருவமென்னும் முக்குணங்களையுமுடைத்து; நீர் அம்மூன்றனேடு இரச குணத்தையும் உடையது. மண் அந்நான்கனேடு கந்தமென்னும் குணத்தையும் உடையது. இவற்றின்றொழில், ஆகாயம் வாயிலாகி மற்றைய பூதங்கட்கு இடம் கொடுக்கும்; காற்று சலித்து எவற்றையும் திரட்டும்; நெருப்பு சுட்டு ஒன்றுவிக்கும்; புனல் நெகிழ்ச்சிசெய்து குளிர்விக்கும்; மண் வன்மையாகி எல்லாவற்றையும் தாங்கும். இப்பூதங்கள் தத்தம் தன்மைநீங்கி மண்மெய்யாகவும், நீர் வாயாகவும், நெருப்பு கண்ணாகவும், காற்று மூக்காகவும், ஆகாயம் செவியாகவும் நின்று உடம்பாகும். பொறிகடோறும் விநியோகப்பட்ட புலன், சுவைமுதல் ஐந்து வகைப்படும். இவைவைந்தும் பொறி ஐந்தினுமேறி மண்ணால் மெய் ஊறுயும், நீரால் வாய் சுவையாயும், தீயாற் கண் ஒளியாயும், காற்றான் மூக்கு கந்தமாயும், ஆகாயத்தாற் செவி ஓசையாயும் வந்து அமையும். அன்றியும் மண்ணின் பகுதி நரம்பு, இறைச்சி, என்பு, மயிர், தோல் என ஐந்து; நீரின் பகுதி மூளை, சுக்கிலம், நிணம், உதிரம், நீர் என ஐந்து; காற்றின் பகுதியும். தீயின்பகுதியும், பசி, சோம்பு, மைதுனம், காட்சி, நீர்வேட்கை என்னுமைந்துமாம். ஆகாயத்தின்குணம் வெகுளி, மதம், மானம், ஆங்காரம், லோபம் என்னும் ஐந்துமாம். இவற்றின் விரிவுகளையெல்லாம் ஆயுள்வேதம் முதலியவற்றுட்காண்க.

புந்தி கொடு துரீஇ = அறிவைக்கொண்டு தேடி ஆராய்ந்து பார்த்து;

பன்னாள் நீண்டு ஆராய்தல் வேண்டும் என்பது போதரத் "துரீஇ" என்றளபெடுத்தது. வெளிநோக்கத்தாற் றேடாது உண்ணிலைமையை நன்கு ஆராய்தல் வேண்டுமென்பார் "புந்தி கொடு" என்றார்.

பழக்கம் வழக்கம் பாற்பட அணிந்து = பயின்றுவரல் வேண்டியவற்றையும், வழங்கிவரல் வேண்டியவற்றையும் தந்தம் பகுதிகளுக்கு ஒக்குமாறு செய்துவருதலை விரதமாகப் பூண்டு கொண்டு;

நல் இன்பம் உற்று ஓங்கி இலகுதல் = நல்ல பேரின்பத்தை இருமையினும் அடைந்து சீர்த்தி முதலியவற்றான் மிக்குயர்ந்து விளங்குவது;

மற்றவற்றான் எய்தப்பெறும் இன்பம் முடிவிற்றுன்பமாகி வருதலைப்போலாகாது இவ்வின்பம் அழியாத இன்பம் என்பார் "நல்லின்பம்" என்றார்.

அன்பு உற்று அமர் வழக்கு ஆறு ஆகும் = அன்பினாலே ஈண்டிப் பொருந்தி வாழ்ந்துவரும் வழக்கத்தின் பயனாகும்;

"என்பு தோலுடை யார்க்குமி லார்க்குந்தம்–வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்–முன்பு பின்பின்றி மூவுல கத்தினு–மன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ", "என்பென்ப தியாக்கை யென்ப துயிரென்ப திவைக ளெல்லாம்–பின்பென்ப வல்ல வேனுந் தம்முடை நிலையிற் பேரா–முன்பென்ப வுளதென் றாலு முழுவதுந் தெரிந்த வாற்றா– லன்பென்ப தொன்றின் றன்மை யமரரு மறிந்த தன்றால்" என்பன இராமசரிதை. "அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்–கென்போ டியைந்த தொடர்பு", "அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்–தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு" என்பன குறள். இவற்றை ஏற்புழி விரித்துக்கொள்க.

---

செம் வானத்து இடை வெள் உடு செறிவு என = செம்மையாகிய விசும்பின்கண்ணே வெள்ளிய நட்சத்திரங்கள் அடர்ந்திருந்தாலொத்த;

செவ்வானம் புடைவை நிறத்திற்கும், வெள்ளுடுச்செறிவு அதன்கண் நிறைந்த புள்ளிகளுக்கும் ஒப்பாயின. உடுவைப் புரைக்கும் ஒப்பாக்குப.

"பெருமையுஞ் சிறுமையுஞ் சிறப்பிற் றீராக்-குறிப்பின் வருஉ நெறிப்பா டுடைய" என்றாரேனும், "மைக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்-பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்-கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்" என்பது வழக்காதலின் இதுவும் அவ்வழக்கொடு ஒத்துச் சிறப்பிற்றீராது மனங்கொள வந்ததென்றே கொள்ளப்படும் என்க.

இது வண்ணவுமம். ஆயின் இதனுக்குரிய "போல" முதலிய உருபுகளையே கூறற்கிருந்தும் "என்ன" என்றது ("போல மறுப்ப வொப்பக் காய்த்த-நேர விரப்ப நளிய நந்தவென்-றொத்துவருகிளவி யுருவி னுவமம்" என்று தொல்காப்பியங் கூறலிற்) குற்றமாகாதோ எனின் "நெருப்பெனச் சிவந்த வுருப்பவிர் மண்டிலம்" என்று சான்றோர் வழக்கிருத்தல் பற்றியும், "பொதுச் சூத்திரத்தின் வருமெனப்பட்ட வாய்பாடு சிறுவரவின" என்று பேராசிரியர் உரைக்குமுறைபற்றியும் குற்றமாகாதென்க.

முன்னும் பின்னும் உள்ள சிலவற்றிற்கும் இங்ஙனம் உரைக்கின் உரை பெருகுமாதலின் உரைத்திலம் என்க.

புள்ளி இடை இட்டு நான்கு மருங்கு கறுத்த = வெள்ளிய புள்ளிகளை இடையிடையே இட்டு நான்கு பக்கங்களிலும் கறுப்புக்கோடுடைய;

செந்நிறப்புடவை; நடுவிலே பல வெள்ளிய புள்ளிகளையுடைய புடவை; நான்கு பக்கங்களிலும் கறுப்புக்கோடுடைய புடவை என்க.

கூடல் செம் கூறையள் = மதுரையிலே செய்யப்பட்ட சிவந்த புடவையினை உடையவளும்;

மதுரைச் சிவப்புச் சேலையே இத்துணை வருணிக்கப்பட்டது.

அரிதில் கோள் உணா = அரிதாக (எப்பொழுதேனும்) கொள்ளப்பட்ட உணவினை;

பட்டினி கிடத்தலே பெரும்பான்மையதென்க.

வருநிலை கருதி வாய் கொ(ள்)ளா துயரினள் = தனக்குவருகின்ற நிலைமையை நினைப்பதினாலே வாயிலுங்கொள்ளாத அத்துணைத் துன்பத்தினை உடையவளும்;

"கிட்டியதைப் பின்னுண்ணக் கிட்டிலதை யெண்ணவருஉங்-கட்டமதா லுட்கொள்ளாக் கன்மத்தேன்" என்றார் பிறரும். நாளை வருபசியை எவ்வாறு தணிப்பேன் என்று சிந்தாகுலங் கொள்வதால் இன்று அரிதிற்கிட்டிய உணவையும் உட்கொள்ளமாட்டாத அத்துணைத்துன்பத்தை உடையவள் என்க. "இன்று வருவது கொல்லோ நெருநலுங்-கொன்றது போலு நிரப்பு என்னும் திருக்குறளும் நனி பொருத்தமுடைத்து.

பகல் துயில் வேட்டு மாலை நுனி எழீஇ = (இரவிலே துயில்வதற்கு வசதியின்மையான் மற்றையநாளின்) பகற்பொழுதிலே நித்திரையை விரும்பிச்செய்து மாலைப்பொழுதின் முடிவிலே எழுந்திருந்து;

இரவிலே துயில்கொள்ள இயலாமைக்குக் காரணங்கள் பசி, பனி, மழை முதலாயின என்க.

பல் துலக்கல் வேண்டும் = தந்தம் துலங்குமாறு விளக்கல் வேண்டுமென்றும்;

வெயிலும் ஒளியும் குன்றிய மாலைக்கடை அவ்விரண்டுமில்லா விடியற்காலத்தை ஒத்துத் தோன்றும் ஆதலிற் றன்னைமறந்து துயிலுணார்ந்தாட்கு அங்ஙனம் நிச்சயமாகவே தோற்றிற்றென்க.

நெருநல் பசித்தேன் = நேற்றைய இரவு உண்ணாமையாலே மிகுந்த பசியை அடைந்துவிட்டேன்;

# பொருளணரியியல்.

[illegible]லவாரும் என்னை யெழுப்பியுண்பிக்காமல் உண்டுவிட்டீர்கள் என்று வருத்தங் [illegible]டாள் என்பது குறிப்பு. விடியற் காலமாகக்கொண்டமையிற் பசிகிடக்தது சென்ற இர[illegible] என்று எண்ணினள்.

என்று ஏங்கி முயல் உழி = என்று உட்கொண்டு மனமிரங்கி (வேண்டியவற்றைச் செய்தற்கு) முயலும்பொழுது;

உழி–காலத்தின்கண் வந்தது.

நன்று விளக்கு ஏற்றியது என் என எண்ணி = நன்றாகிய விளக்கை (ப் பிறர் ஏற்றியிருத்தலே போகவி இக்காலைப் பொழுதிலே) ஏற்றினமை யாதுகாரணத்தால் என்று எண்ணுதலினானே;

இரவுக்கு நன்றுபுரிவது விளக்காதலினாலும், அதனைத்திருமகளாகக் கருதிவரும் உண்மையினாலும் "நன்று விளக்கு" என்றார். "நன்று" என்பதனை விளக்கின் அடைமொழியாக்காமற் பிரித்து "நல்லது இது காலைப்பொழுதென யான் கருதியது சாதமேயானால் விளக்கேற்றல் நிகழ்ந்தமை என்னென்று நினைந்து" என்று பொருள் செய்தலும் அமையும்.

இனி ஒரு பகலிரவும், மற்றொருபகலும் உறங்கியதாகக் கருதி இரங்கினளுமாம்.

தன் குறைக்கு நாணுவோள் = (அந்திப்பொழுதைக் காலைப்பொழுதாகப் பிறழ்ந்துணர்ந்துகொண்டமையைத் தெரிந்துகொண்டு) தன் அறியாமைக்கு வெட்கமுற்றவளும்;

இருட்டுமிகுந்துவருதல், புள்ளினமடங்கல் முதலிய பலகுறிகளாலும் அவவெண்ணம் மாறிவிட்டதென்க.

காது துளை பொத்தி சின்வீடு கறங்கல் கண்டு ஈது எவன்கொல் என்று நகைத்திடுவோள் = செவிகளின் உட்டுளைகளை (க் கையினாதல் கைவிரலினாதல் கொண்டு) மூடிக்கொள்வதாற் சில் வண்டு இரைவதுபோன்றதோர் ஒலிதோன்றலின் இவ்வொலிதான் யாதென்று இனிதாய்ச் சிரிப்பவளும்;

சின்வீடு–ஒருவகை வண்டு; அதனைச் சிள்ளீடு, சிள்வண்டு, சில்வண்டு, சில்லி என்றுங் கூறுப. உருவத்தைக் கண்கொண்டுகாணலும், ஒலியைச் செவிகொண்டு கேட்டலும் இயல்பாகலிற் சின்வீடொலியைக்கேட்டு என்னாமற் "கண்டு" என்று சொன்னது குற்றமேயெனின், மனசிடைத் தோன்றியவற்றையும், உணர்ந்தவற்றையும் "கண்டு" என்று வழங்கல் உண்மையிற்குற்றமாகாதென்க. "காணல்" என்னுஞ்சொல் குறித்தல், தோற்றல், நினைத்தல், பெறுதல் என்னும் பலபொருட்குமுரியது.

[கண்டு வண்டொலி கறங்கொலி யென்பவள்] கறங்கு ஒலி கண்டு வண்டு ஒலி என்பவள் = காற்றாடி (விண்ணிடைப் பறப்பதாலுண்டாகும்) சத்தத்தைக்கேட்டு இது வண்டின் இரைச்சலோ என்று ஐயுறுபவளும்;

வண்டொலி இவளால் அறியப்படாவிடத்து வண்டொலிகண்டு கறங்கொலி என்பாள் என்னும் பொருள்கோளும் செய்தல்சாலும். காற்றாடி–காற்றிற் பறக்கும் படம்.

துஞ்சு இடை உண்டல் அறிகிலள் = நித்திரைசெய்தபோது (சுற்றத்தார் எழுப்பிக் கொடுக்க வாங்கி) உண்டதனை (நித்திரைமயக்கத்தால்) உணராதவளாகி;

துப்பு இரவு உண்டிலென் உறங்கினென் என்று உரை மடவோள் = உணவினை நேற்றிரவு உட்கொண்டேனில்லை உண்ணாது உறங்கிவிட்டேன் என்று கூறிவருந்தும் மடப்பம் பொருந்திய வளும்;

சுண்ணம் தீட்டிய மண் சுவர் = சுண்ணாம்பு பூசப்பெற்ற மண்ணாலாகிய சுவரானது.

[illegible]சுவர்; சுண்ணந் தீட்டிய சுவர் என்க. தூய்மைக்கும், அழகுக்கும் சுண்ணந் தீட்டுதல் [illegible]. "வெண்சுதை தீற்றிய பித்தி" என்பது நைடதம்.

[illegible] பல நன்னி அடி உப்பு உண்டு நடந்தால் என்ன = ஆண்டுகள் பலவாகச் சென்[illegible] [illegible]ருக்குள் அமைந்த உப்பானது மேலோடி விழுங்கிச் சென்றதுபோல

[illegible] மயிற் றென்க. [illegible]

## [illegible]

கநதை அடி புரை மறை கதவு பழம் புல் பாய் யாத்த தட்டி உடை இல்லோள் [illegible] மனைது அடியிலேயுள்ள கிழிவுகளை மறைக்கும்வண்ணம் (அதன் உட்பக்கத்தின் அடியில் பொருந்துகின்ற பழைய புற்பாயால் யாககப்பட்ட தட்டியையுடைய இல்லினையுடையவளும்;

சதுரமாக அமைக்கப்பட்ட சட்டஙகளையுடைய மறைப்பு; அச்சட்டங்களிலே நிறமங்கிய பழையதுணி யாக்கப்பட்டிருக்கின்றது; அத்துணியின் அடிப்பாகம் பொத்தல் பலவற்றை யுடையது; அப்பொத்தல்கள் மறையும்வண்ணம் அடிப்பாகத்திற் பழைய பழுப்புநிறம் படைத்த புற்பாய் மூடப்பட்டிருக்கின்றது. மேலே தோன்றும் கந்தை மட்சுவரிற் நீட்டிய சுண்ணும்பின் தோற்றத்தையும், உட்பாகத்திற் பொருத்தப்பட்ட புற்பாய சுணணும்புப்பூச்சு உப்புண்டழியப் பெற்ற மணணினது தோற்றத்தையுங்கொண்டது அத்தட்டியிலென்க.

[முகப்பில்வரு நிழலொடு நிலவளாஅய் நிலவுறு மண்ணை] இல் முகப்பு வரு நிழலொடு நிலவு அளாஅய் நிலவுறும் மண்ணை மனையினது முறபககத்திலேயுள்ள இறப்பினுல் வருகின்ற நிழலொடு சந்திரன் காலும் ஒளிவாய்நத நிலவு கலந்துவிளங்குகின்ற மண்ணை;

சந்திரன் ஒளி பரப்புதலானே இறப்பின் அடிப்பாகம நிறமஙகி இருள்கலந்து தோன்றும் மண்ணையுடையது என்க.

மழைப்பெயல் வாய்ந்தது என்று மகிழ்வு உறீஇ எடுத்து நாண் உற்று வீசும் நல்லவள் = மழைப்பெயலால் நனைதலைப் பொருந்தியதென்று மகிழ்ச்சியுற்று எடுத்து (அவவாறில்லாமை யானே) வெட்கமுற்று வீசும நலலாளும்;

மனையகத்திருந்தவள் வெளிவந்து பார்க்கும்போது தாழ்வாரத்துமண் மழைப்பெயலான் நனையப்பெறறதுபோன்று காணப்பட்டமையால வியப்பெய்தி மழை பெய்ததுகொல்லோ என் லுறையுற்று அம்மணணிற் சிறிதள்ளியெடுத்துப் பாாகக நனைவு காணப்படாமையால் வெட்கமுற் றனள் என்க.

என் உயிர் வைப்பு அ(ன்)னள் = எனதுயிரைக் காப்பாற்றிவருகின்ற புதையலைப் போன் றவளுமாகிய எனது மனைவி;

அவள தான்படும் துயரையெல்லாம் ஒருபொருளென மதியாமல் மேற்கூறியவாறெல் லாம் மகிழ்வுபூததது வருகின்றனள்; அவளது செல்வ மிகுதியும், அச்செல்வம் தன்காரணமாக அழியப்பெறறும வெறுப்புககொள்ளாமல் நேசிததுவரும் அன்பின் மிகுதியும் இதுகாறும் புலப் படுத்தப்பட்டன.

வகை கண்டு ஆற்றாது போற்று என = (வறுமையா லடையுந் துன்பங்களின்) தன்மை யைப் பாரதது நெஞ்சம சகிககாமல் தனனைக் காப்பாற்றுவாயாக என்று வேண்டிக்கொண்ட மையால்;

பலகுழந்தைகளைப் போற்றுதற்காற்றுமையாற் குசேலனுர் தம்மனைவியார் கண்ணபிரா னிடத்து யாசித்துவருமாறு வேண்டிக்கொண்டதை முன்னர்மறுததுப் பின்னர்ச் சென்றது போல யானும் நின்னிடத்தே வந்தேன் என்க.

இனி அவளது ஆற்றுமைகண்டு கானெறிபோக்கிப் பாண்டித்துரையே போற்றென நினை நயநதேன என்றுமாம்.

புலம் தரு கான் நெறி மகிழ் கொடு போக்கி = அறிவினுன் மட்டிட்டுணர்ந்த காட்டுப் பாதையை மகிழ்ச்சிகொண்டு கடந்து;

ஒரு நெறிக்கண் பலவழி பிரிதலிற் செல்லற்குரிய பாதை இதுவெனக் கண்ணுற் றெரிந்து கோடலும், எதிர்வருவார் இன்மையின் உசாவிக்கோடலும் இயலா ஆதலின் "புலந்தரு நெறி" என்றும், அந்நெறியைப் போக்குதலும் ஒரு மகிழ்ச்சியாதலின் "மகிழ்கொடு போக்கி" [illegible] கூறினர். புலம்—இசையுமாம். கால் நெறி என்றுங் கூறுப. [illegible]

[illegible] தரு பாண்டித்துரை நினை நயந்தேன் = [illegible] [illegible]

"தாமென்று வெண்ணைான் பாடையிற் காட்டிற் றலையெடுக்க—வேமென்று கேட்ப ரில்லாத் தமிழை யினிதளிக்க—நாமென்று கங்கணங் கட்டிக" கொண்டமையாலும்; நான்காஞ் சங்கந் தாபித்தமையாலும்; பொன்மாரி, சொன்மாரி, கவிமாரி பொழிந்து உலகை நன்னிலை மைக்குக்கொண்டுவந்தமையாலும் "நலந்தரு பாண்டித் துரை" என்றார். பிறர்க்கெலாம் புலவர் தம் அருமை பெருமைகளை அறிந்துகோடும் ஆற்றலின்மையின் "நினை நயந்தேன்" என்றார்.

(யாது காரணத்தான் நின்னை யடைந்தேனோ வெனனில.)

நிலம் தரு திரு முதல் நிறைந்த குலம தரு கொள்கை கொண்டனை என = நிலம் கொடுக் கக்கூடிய செல்வம் முதலாயினவெல்லாம நிறைந்த குலந்தருகின்ற கொளகையை நினக்கு அணி கலனாகக் கொண்டனையென்று கருதி;

கொண்டனையென நினை நயந்தேன் என்க.

உயிர்களெல்லாம் உடலோடுறவுபூண்டு ஈண்டிருந்துவருதல் அறமுதலாய நாற்பொருள் களையும் முற்றுவித்தற்பொருட்டேயாம; அவற்றையெல்லாம நீ உடையையென்க. இனி, மாற்றாது நிலத்தைத் தன்கீழ் வாழ்வார்க்குத் தருகின்ற திருவென்றும் பிறவாறுகவும் கூறுப. "நிலந்தரு திருவிற் பாண்டியன்" என்பது பனம்பாரனார் உரைதத பாயிரம். "இலவென்னு மெவவ முரையாமல் ஈதல்—குலனுடையான் கண்ணே யுள" என்பதனை நோக்கிக் "குலந்தரு கொளகை கொண்டனை" என்றார்.

---

(59) உயிரினு மானஞ் சிறந்ததென் றுன்னிச்
செருவிற் கேருந் திறமிது வென்றல்.

உடம்பென் றுரைப்பினு முழன்றலைந்து குலைந்தாங்
கம்மவென் றரற்றிக் கண்ணீர் பாய்ச்சி
யாருயிர்க் கிரங்கு மந்தமிழ் மறவி
ரென்மகன் போரிடை வெரிநகொடுத் தீங்கு
வந்தன னென்றுரை மருண்டழன் றேங்கி
யவன்வரு மகட்டை வேறுதுகளி யழிப்ப
லென்று புகுந்தாளு பெருந்தையு மென்னையும்
போருற் றுயர்ந்தனர் போமென்ப டான்மண
மின்னங் கமழு மிளமபூட் சேலை
யமமுனை விடுத்த வன்னளுமப் பிறருந்
தமமுறு மரபின் றுப்பொனக் கூஉய்
மார்பிடைத் தட்டி நெடுமொழி வழங்கிவரு
நேர்மைத்தமிழ் மக்கா ணிகழ்ந்ததுவ கேண்மோ
கழுத்தை வருத்திக் கருத்துப் பிறக்கிட
வுயர்ந்தோங் குசசி யுலவில்பல வரையு
மிருட்டுக்குடி யிருக்கு மெழினிழல் படைத்து
முல்லையுடைப் பூத்துக் கொன்றைப்பொன் சொரிந்து
பாற்கடல் பரந்து வெண்ணெய்க்குன் றிருந்து
நெய்யாறு பாயு நீளிடைக் காடும்

பழுத்த நெற்பயிர் பலகோப்பு ழுத்தைத்
வழுத்திவள ருழ்வரை வாழ்த்தி வழங்கும்
கருஞ்சேற்று வண்டல் கதுவிமனங் கவரும்
காமர் வளவயலும் வான்கீழ் வீழ்ந்த
காட்சியி னிடையிடைக் கயன்முதல மிளிர்ந்து
நீலக்கதிர் விரிக்குங் கோலக்கடன் மாட்டு
வான்வளைந் துடுவு மழையும பூத்தென
விலையிடைப் பூவு மிணைநதுகுடை கவித்த
புன்னையும் வீழுடைப் பொலன்சேர் தாழையு
மின்னபல செறிந்து நன்னர்தரு நெய்தலும
படைத்தநன் னாடு பட்டினம் பாக்க
மடுத்த பெருநக ரன்னபல வுடையிர்
நெறிமுறை நிகழ்த்து நிகரில் பல்சுவை
குறைவறக் கொடுக்கு மிருமைநிலை கொளுத்தி
நிறைவுசெய் தமிழ்மொழி நிலவுத லுடைமையி
னன்புறுநா படைத்தீண் டாற்றலசான் றுலகெலா
மின்புற வாளு மியலபுநனி யுடையிர்
எனினும,
காதல வேண்டினுங் கருப்புச்சுவை தரூஉ
நீஇர் வேண்டினு நெல்ல் வேண்டினு
மறுவை வேண்டினு மாரொளி வேண்டினுங்
கல்வி வேண்டினுங் கவினுரை வேண்டினு
மணிகலன் வேண்டினும் பிணிதவிர் மருந்தே
பொருந்து மடிபுதை காப்பே குடையே
படையே நடையே பகரு மின்னன
வெவற்றை வேண்டினும் பிறர்முக நோக்குதி
ரொத்துணை நாட்க ளிவைபெறற் கியலும்
பிறர்மனங் கோணுப் பெற்றிதரு நட்பைப்
பொறைகொடு விடாது போற்றுவிர் கொல்லோ
விடையறவு படினே யென்னு குவிரே
நசசெயிற் றரவு நலிவுகொடுக் கமைதே
ளசசுறுத் தழிக்கு மாற்றல்சால் வரிப்புலி
தைசசடிக் கஞர்செய் தகைமா னிவற்றை
யெச்சமறக் கொன்று மின்றுநின் றிலகுந
நொடியிற் படியை நுங்குபிணி பலப்பல
மிடியிற் கடுத்து விட்டியு முயிர்கள்
குறைகில வாதலி னமரையுங் கோறல்செய்
முறையொன் றுண்டென முன்னுத றவறு
மிசைபட [illegible] வாழா வெளிமைகொள் வாழ்க்கையொடு
கைசேர்ந்தபெறு இல்லிர் நாடுமெழுமி யாற்றல [illegible]

## பொருணெறியியல்

௮௮ வசையொழி வண்மை யறிவொழுக்க மாட்சி
யிசைவினிர் துன்பெலா மேற்றுயிரைத் தழிகுவிர்
மானம் பிழைத்துயிர் வாழ்தலிற் செருவிற்
றானுயிர் தந்து தழைப்பி
னூன வெவற்றையு மடைந்தாய் குவிரே.

---

(இ-ள்.) உம் என்று உரப்பினும் = (ஒருவர் வந்து உரத்த சத்தமாய்) உம்மென்று முழக்கமிட்டாலும்;

உழன்று உலைந்து குலைந்து அம்ம என்று ஆற்றி கண்ணீர் பாய்ச்சி = தடுமாறி அலைந்து கட்டவிழ்ந்து அம்ம என்று ஓலமிட்டுக் கண்ணீர் சொரிந்து;

ஆர் உயிர்க்கு இரங்கும் அரும் தமிழ் மறவீர் = (உடலின்கண்ணே) நிறைந்துள்ள உயிரானது நிலையற்று நீங்கிவிடுமோ எனறழுது வருந்துகின்ற அருமையான தமிழ்நாட்டுக்குரிய வீரர்களே;

இவற்றால் அச்சமிகுதி கூறப்பட்டது.

"அச்ச வகிர்ந்த மாயுங் காலை-யொடுங்கிய வுடம்பு நடுங்கிய நிலையு-மலங்கிய கண்ணுங் கலங்கிய கண்ணுங்-கரந்துவர லுடைமையுங் கையெதிர் மறுத்தலும்-பரந்த நோக்கமு மிசைபண்பினவே", "அவலத் தவிர்ந்த மறிவரக் கிளப்பிற-கவலையொடு புணர்ந்த கண்ணீர் மாரியும்-வாடிய சீர்மையும் வருந்திய செலவும்-பீடழி யிடுமையையும் பிதற்றிய சொல்லு-நிறைகை யழிதலு நீர்மையில் கிளவியும்-பொறையின் றாக்கலும் புணர்த்தினர் புலவர்" என்பனகொண்டு அச்சங்கூர்ந்தார் அறிகுறி தெளியப்படும்.

"ஐம்பதி னிரட்டி யவனச்சேரியும்-ஐம்பதி னிரட்டி யெறிபடைப் பாடியும்-மன்பெருஞ் சிறப்பி னுயிர் மாகிய-தலைப்பெருஞ் சேனைத் தமிழச் சேனையும்" என்று முன்னர்க்காலத்திலே சிறப்பிக்கப்பெற்ற நந்தமிழ்மறவர் இக்காலத்திலே இங்ஙனமாயினர் என்க.

என் மகன் போர் இடை வெரிந் கொடுத்து வந்தனன் என்குதிர் = எனது மகன் போருக்காற்றானாய் இடையிலே முதுகுகாட்டி (புறங்கொடுத்தோடி) இங்குவந்தானே என்று (என்னை நீவிர்) வினவுகின்றீர்; (என்று கூறி.)

மருண்டு அழன்று ஏங்கி அவன் வரும் அகட்டை = மயங்கிக் கோபித்து ஏக்கமுற்றவளாய் அம்மகன் இருந்துவந்தவயிற்றை;

சிறந்த மறவர்தம்மரபிற் பிறந்தமகன் இங்ஙனம் போரிடை முதுகுகாட்டினன் என்றசொல் செவிப்புகுந்த மாத்திரையினே அவளது மனசானது மருட்சியுற்றது. பொருதிறந்து புகழை நிறுத்தாமல் இங்ஙனம் மீண்டவனைக் கண்டுகொண்டு பார்த்தலினும் உயிரை மாய்த்துக்கொள்வது நலனென்றுகருதுவதான அழற்சி மிக்கது என்க.

வேல் குத்தி அழிப்பல் என்று புகுந்தாளும் = வேல்கொண்டுகுத்தி அழித்துவிடுவேன் என்று கூறி அங்ஙனம் செய்யமுயன்றவளும்;

வெற்றிதருதற்குரிய வேற்படையிருந்தும் பயன்படாது சென்றமையிற் பகைவரைக் கோறற்குரிய அது என்னைச் சிதைப்பதாக என்று தன்னை மாய்த்துக்கொள்ளற் கிசைந்தாள் என்க.

எளிய உறுப்புக்கள் ஒருவகைக் குற்றமுஞ் செய்தில; இப்புல்லியமகனைக் கருக்கொண்டு [illegible] வயிறுதலின் அதனைக் குத்தியழித்தல்வேண்டுமெ என்று துணிந்தாள் என்க.

"[illegible] புகுந்தாளும்" என்னும் இலேசானே புகுந்தாலேயன்றிக் குத்திக்கொண்டு [illegible].

பண்டைக் காலத்துத் தாய்மாரின் வீரம் இயல்வியல்பிற்றென்பது புறநானூறு முதலிய சங்கநூல்களாற் புலனாகும். "நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்–முளரி மருங்கின் முதியோள் சிறுவன்–படையழிந்து மாறின னென்றுபலர் கூற–மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்–முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்–கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்–செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய–படுமகன் கிடக்கை காணூஉ–வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" என்று காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்னும் நல்லிசைப்புலமை மெல்லியலார் கூறினார் (புறம் 278.) "யாதுவல (அறுப்பேன) வயிறே யாதுவல வயிறே–நோகே னத்தை நின்னீன் றனனே–பொருந்தா மன்னர் அருஞ்சமம் முருக்கி–யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க–புகாமுகக் குஞ்சர மெறிந்த வெஃகம்–மதன முக்கத் தொழிய நீபோந் தனையே–அதனால்–எம்மில் செய்யாப் பெரும்பழி செய்த–கல்லாக் காளையை யீன்ற வயிறே" என்று கூறினாள்.

எந்தையும் என்னையும் போர் உற்று உயர்ந்தனர் = என் தகப்பனும் என் கொழுநனும் மாற்றாரோடு போரிடைப்புகுந்து வீரசுவர்க்கம் பெற்றனர்.

முன்னாள் நடந்த போரில் அவள் தகப்பனும், சமீபத்தில் நடந்த போரில் அவள் கொழுநனும் மடிந்தனர் என்க. மடிந்தனர், இறந்தனர் என்று கூறாது "உயர்ந்தனர்" என்றார், சுவர்க்கம் புகுந்தமையானும், புகழ்நிறுவி உம்மைக்கு உயர்ச்சிபெற்றமையானும் என்க.

போரிடை மடிவோர் வீரசுவர்க்கம் புகுவர் என்பதை "அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்–தாமாய்ந் தனரே * * * * * * * * வாடாப் பூவி னிமையா நாட்டத்து–நாற்ற வுணவி னோரு மாற்ற வரும்பெற லுலக நிறைய–விருந்துபெற் றனரால் பொலிகநும் புகழே" என்ற கழாத்தலையார் பாட்டு முதலியவற்றானுணர்க. "உரிகளை யரவ மானத் தானே–யரிதுசெ லுலகிற் சென்றனன்" என்றார் வடமோதங்கிழாரும்.

[போகெனப் பாணமணம் (மன்னர் கமழு மிளம்பூட் சேயை] பால் மணம் இன்னம் கமழும் இளம் பூண் சேயை (அருந்திய தனால்) பால் வாசனை இப்போதும் பரிமளிக்கும் அத்துணை இளமைவாய்ந்த அணிகலனை பூண்ட சிறுவனை,

பால் மணங்கமழும் என்றமையால் அச்சேயின் வயசின் சிறுமையும், அவட்கு வேறு முதிர்ந்த ஆண்மகார் இன்மையும் அவளது தனிமையும் பருவவிளமையும் பிறவும் பெறக்கிடக்கின்றன. இளமை, அருமை, பெருமை முதலியவற்றையும், தந்தை, கொழுநன் என்னும் இவர்களும் இறந்தமையான் வேறு தஞ்சமற்றிருத்தலையும், தனயனும் போரின் மாய்க்கூடும் என்பதையும் அன்னபிறவற்றையும் ஒருபொருளாக மதிக்காமல் நாட்டுநலன் ஒன்றினையே நனி விரும்பினள் என்க.

போரு என அமுழ்ந்து விடுத்த அன்னளும் = (வெற்றிபெற்று மீள்வான்) செல்வாயாக என்று (தந்தையும், கொழுநனும் இறந்த) அப்போர்க்களத்துக்கு அனுப்பிய அத்தகுதியுடையவளும்;

"அமுழ்ந்து" என்றார், அவளது அருஞ்சாநெஞ்சத்தைப் புலப்படுத்தற்பொருட்டு. வீரத்தாய் ஒருத்தி தன் மகன் புகுதிரனைப் போர்க்கு அனுப்புகின்ற மாட்சியை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் நல்லிசைப் புலமை மெல்லியலார் பின்வருமாறு வியந்து கூறுகின்றார்.–"கெடுக சிந்தை கடிதிவ ளுணிவே–மூதின் மகளி ராதல் தகுமே–மேனா ளுற்ற செருவிற் கிவள் தன்னை–யானை யெறிந்து களத்தொழிந் தன்னே–நெருந லுற்ற செருவிற் கிவள் கொழுநன்–பொருநரை விலங்கி யாண்டுப் பட்டனனே–இன்றும், செருப்பறை கேட்டலின் விருப்புற்று மயங்கி–வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇ–பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி–ஒருமக னல்லது இல்லோள்–செருமுக நோக்கிச் செல்கென விடுமே" (புறம் 279); அன்றியும் வெண்பாமாலையில் "வந்தபடை நோனான் வாயின் முலைபறித்து–வெந்திற லெஃக மிறைக்கொளீஇ–முந்தை–முதல்வர்கற் றான்காட்டி மூதின் மடவாள்–புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு" என்றுவருதல் போன்றனவற்றையும் நோக்குக.

பிறரும் = இவரல்லாத ஏனையவரும்;

தம் உறு மரபின் தாயர் என கூவிய்=தங்கட்குப் பொருந்திய பரம்பரையின் தாய்மார் என்று கூவிக்கொண்டு;

மார்பு இடை தட்டி=(வீரங்காட்டும் அறிகுறியாக) மார்பிலே தட்டிக்கொண்டு;

நெடு மொழி வழங்கி வரு சேர்வை தமிழ் மக்காள்=(தம் மேம்பாடு சான்ற) வீர வார்த்தை பேசிவருகின்ற ஒழுங்கமைந்த தமிழ் மக்களே;

இங்ஙனமெல்லாம் நெடுமொழி வழங்கிவருதலே இவரது வழக்கமும் இவ்வழக்கமே இவர் தமக்கு நேர்மையும் என்க. இவ்வடிகள் முன்னையோர் தந்நிலைகளைக் காட்டிப் புகழ்வது போல விக்காலத்தினரை இகழ்ந்து மனக்கிளர்ச்சி செய்தலை நோக்குக. "நெடுமொழி மன்னர்" "நெடுமொழி மறந்த சிறுபேராயம்" என்ற பிற கூற்றுக்களையும் நோக்குக.

நிகழ்த்துவ கேண்மின்=யாம் சொல்லுவனவற்றைக் கேட்பீர்களாக;

"நமக்கொன் றியற்புலவ" என்றும பாடமாம்.

கழுத்தை வருத்தி கருத்து பிறக்கிட உயர்ந்து ஓங்கு உச்சி உலவு இல் பல் வரையும்=(அண்ணாந்து நோக்கியும் முடிவு கடை போகாமையால் நோக்குவார்தம்) கழுத்தை வருந்துமாறு செய்து அவரது எண்ணம் பின்னிட்டு ஒடுமாறு (அத்துணை மிகுந்து) உயர்ந்தோங்கும் முடியினை யுடைய கெடுதலில்லாத பல மலைகளும்;

இதனாற் குறிஞ்சிநிலம் வருணிக்கப்பட்டது. பிறக்கு—பின்; "நனைபிறக் கொழியப் போகி", "முதிர்காய் வள்ளிபங் காடுபிறக் கொழிய" என்பன பாட்டு; "எண்பிறக் கொழிய விறந்தோய்", "துறைபிறக் கொழிய" என்பன மணிமேகலை. "எண்ணிய பிறக்கியுட் செலான்" என்றுழி யமைந்தபடி அசைச்சொல்லாய் வருதலும் உண்டு.

இருட்டு குடி இருக்கும் எழில் நிழல் படைத்து=(பகலில் இருப்பதற் கிடம்பெறாது பகலவனுக்கு அஞ்சிப் பதுங்கி அகலும்) இருளானது இனிதமர்ந்திருக்குமபடி அழகிய நிழலை உண்டாக்கி;

"தூங்கிருள்வெய் யோற்கொதுங்கிப்—புகலிருந்தா லன்ன பொழில்" என்றார் புகழேந்தியாரும்.

முல்லை உடு பூத்து=முல்லை மலராகிய நக்ஷத்திரங்களைப் பூத்து;

பூத்து—பூக்குமாறு செய்து. முல்லை மலரை மீனாகக் கூறவே நக்ஷத்திரங்களின் ஒற்றுமை தோன்றும். "உயர்ந்தகன் மேற்றிறை யுள்ளுநர் காலை" என்றோரேனும "பொருளே யுவமஞ் செய் தனர் மொழியினு—மருளறு சிறப்பினஃ துவமமாகும்" என்றமை கருதி "முல்லையுடுப்பூத்து" என்றார். இனி முல்லை உடுவை எங்ஙனம பூத்தது என்று வியந்து கூறப்பட்டதெனினும் ஒக்கும். இதனைப் பிற்காலத்தார் விபரீத வுவமை என்பர்.

கொன்றை பொன் சொரிந்து=கொன்றைமரங்கள் பொன் போன்ற பூக்களைச் சொரிந்து;

"பொற்கொன்றை" என்றார் முடித்தாமக்கண்ணியார்; "முறியிணர் கொன்றை நற் பொன்கால" என்றார் நப்பூதனார்.

பால் கடல் பரந்து=(நிரைக்கூட்ட மிகுதலிற்) பாலானது கடல்போலப் பரவி;

திருமாலுக்கு இருப்பிடமாதலின் இங்ஙனம் வருணித்தார் போலும்.

வெண்ணெய் குன்று இருந்து நெய் ஆறு பாயும்—வெண்ணெய் ஆகிய மலையிலிருந்து நெய்யாகிய ஆறு பாய்கின்ற;

இவற்றால் முல்லைமாக்களின் வளமிகுதி கூறப்பட்டது. வெண்ணெய்—உருக்காநெய். சிவஸ்தலங்களில் ஒன்று வெண்ணெய் நல்லூர் எனறும், முருகக் கடவுளுக்கு மிகவும் விருப்புடைத்தாய்க் கொங்கு நாட்டிலுள்ள ஒரு ஸ்தலம் வெண்ணெய் மலை என்றும் பெயர் பெறும்.

நீள் இடை காடும்=நீண்ட இடத்தையுடைய காடுகளும்;

பழுத்த நெல் பயிர்=முதிர்ந்த நெற் பயிரானது;

பல கோப்பு முத்தை = பலவாகக் கோவை செய்யப்பட்ட முத்துக்களை;

பல முத்துக் கோப்பை என மாற்றிக்கொள்க. முத்து ஆகுபெயராய் நெல்லை உணர்த்திற்று. நெல்லானது முத்தை நிகர்த்துத் தோற்றலின் நெற்கதிர் முத்துவடத்தை ஒத்த தென்க. நெல்லிலிருந்து முத்துப் பிறத்தலும் உண்டென்ப. "தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி—நந்து சலஞ்சல மீ னேறலை கொக்கு நளினமின்னா—கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா—இந்து வுடும்பு கதிர்முத்த மீனு மிருபதுமே" என்பது கொண்டு முத்துப் பிறக்கும் இடங்களை அறிக.

வழுத்தி வளர் உழவரை வாழ்த்தி வழங்கும் = தன்னைத் துதிக்க வளர்த்து வருகின்ற உழுதொழிலாளரை (நன்மை பொருந்துமாறு) வாழ்த்துக் கூறி அவர்க்குக் கைம்மாறு கொடுக்கும்;

உழுதொழிலின் சிறப்புக் கூறப்பட்டது.

ஒன்றுக்குப் பல கொடுத்தலின் "வழங்கும்" என்றார். உழவர் கழனியைப் போற்றி வருஞ் சிறப்புத்தோன்ற "வழுத்தி வளர" என்றும், அச்சிறப்பாற் பல பயன் பெறுகின்றார் என்பது தோன்ற "வாழ்த்தி வழங்கும்" என்றுங் கூறினார்.

"சேறமை செறுவினுட் செந்நெல் வான்முளை—வீறுடை விளைகெனத் தொழுது வித்துவார்" என்பது சிந்தாமணி; "கழனிவாழ்கென வான்முளை வித்துநர்" என்பது நைடதம்.

கரும் சேறு வண்டல் = கரிய சேற்றுடனே ஆறு வந்து பாய்தலாலுண்டாகும் வண்டலினையும் உடைய;

இதனால் விளைபயனுக்குக் காரணங் கூறப்பட்டது. சேறு வயலில் இயற்கையாக வுள்ளது; வண்டல் ஆற்றுவரத்தால் உண்டாவது. "தண்டலைப் பரப்புஞ் சாலி வேலியுந் தழீஇய வைப்பும்—வண்டலிட் டோடும்" என்றார் கம்பநாடரும்.

கதுவி மனம் கவரும் காமர் வளம் வயலும் = நோக்குவார் மனத்தைப் பற்றி வலிந்திழுத்து வசீகரிக்கின்ற அழகிய வளப்பம் பொருந்திய வயல்களும்;

இவற்றால் மருதத்தின் சிறப்புக் கூறப்பட்டது.

வான கீழ் வீழ்ந்த காட்சியின் = ஆகாயமானது கீழே விழுந்திருந்த காட்சியைப் போல;

இடை இடை கயல் முதல மிளிர்ந்து = இடையிடையே கயல் மீன் முதலாகியன (குதிபாய்ந்து செல்வதால்) ஒளிவிட்டு;

கயல் மீன் முதலியன மிளிர்தல் விண்ணிடை மீன்மிளிர்தலை ஒக்குமெனக் குறிப்பித்தாராயிற்று.

நீலம் கதிர் விரிக்கும் கோலம் கடல் மாட்டு = நீலமாகிய ஒளியைப் பரப்புகின்ற அழகமைந்த கடலுக்குப் பக்கத்திலே;

அலைவீசுதலைக் கதிர் விரித்தற்கு ஒப்புக் கூறினார்.

வான வளர்ந்து உடுவும் மழையும் பூத்தது என = அந்தவானம் வளர்தலைப் பொருந்தி நக்ஷத்திரங்களையும் மேகங்களையும் பொலிவுற விளக்கினாற் போல;

இலை இடை பூவும் இணைந்து = இலைகளின் இடையிடையிலே மலர்களும் பொருந்தி;

விண்ணிலே மேகங்களுக்கு இடையிடையில் உடுக்கள் தோற்றம் பெறுதல் போன்று புன்னை இலைகளின் இடையிடையில் பூக்கள் தோற்றம் பெறுகின்றன என்க.

குடை கவித்த புன்னையும் = குடை கவித்தாலொப்பக் கவிந்திருக்கும் புன்னைமரமும்;

வீழ் உடை பொலன் சேர் தாழையும் = விழுதுடைய பொன்மயப் பூக்கள் பொருந்திய தாழையும்;

வீழில்லாத்தாழை தென்னையாதலின் அதனை நீக்குதற்பொருட்டு இங்ஙனம் அடைகொடுக்கப்பட்டது. "வீழிறாழைக் குழவித் தீநீர்" என்றார் உருத்திரங்கண்ணனார். "வீழ்தாட் டாழை", "வீழ்தாழ் தாழைப் பூழுது கொழுமுகை", "தாழைவீழ்க் கயிற் றூசல்" என்பனவற்றையும் நோக்குக. பொலம்—ஆகுபெயர்.

இன்ன பல செறிந்து நன்னா தரு நெய்தலும் = இவை போன்ற பலவளங்கள் நெருங்கி நிறையப்பெற்று நன்மையைத் தருகின்ற நெய்தல் நிலமும்;

ஏனைக் கடல்வளங்களையும் ஈண்டே கூறிக்கொள்க.

படைத்த நல நாடு = ஆகிய இவற்றையெல்லாம் கொண்டிருக்கும் நல்ல நாடும்;

பட்டினம் = கடற்கரைப் பேரூரும்,

பாக்கம் = கடற்கரைச் சிற்றூரும்,

அடுத்த பெருநகர் = (எல்லாச் செல்வங்களும்) அடுத்திருக்கின்ற பெரிய நகரங்களும்;

அன்ன பல உடையீர் = அவற்றை ஒத்த பலவற்றையும் உடைமையாகக் கொண்டிருக்கின்றீர்;

நெறி முறை நிகழ்த்தும் = ஒழுக்க கிரமத்தைச் செய்தற்குரிய விசேடமான,

நிகர் இல் பல சுவை குறைவு அறக் கொடுக்கும் = ஒப்பில்லாத பல சுவைகளையும் குறைவற (நிறைவாக) கொடுக்கின்ற,

இருமை நிலை கொளத் தெரிவு செய் = இம்மை மறுமை என்னும் இரண்டிற்கும் வேண்டிய நிலைகளைப் பொருந்திய தகுதி செய்விக்கின்ற,

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்தின் முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருணுணர்ந்து கட்டறுத்து வீடுபெறுங் காண்", "அறம்பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே" என்பன ஈண்டு நோக்கற்பாலன.

தமிழ் மொழி நிலவுதல் உடைமையின் = தமிழ்ப் பாஷையானது (மக்களிடத்தே தாய்ப் பாஷையாக) விளங்குதல் உடைய காரணத்தால்,

அன்பு அருள் படைத்த = அன்பினையும் அருளினையுங் கொண்ட,

அன்புபெற்றோரே அருளைப் பெறுதலால் "அன்புதந்த" என்றும், இருமைக்கும் இவ்விரண்டினும் மேம்பட்ட செல்வங்கள் பிற இல்லையென்பது தோன்றப் "படைத்த" என்றும் கூறினர். "அன்பென்ப தோன்றின் [illegible] தனரல்" என்றும், "முன்பு பின்பின்றி மூவுலகத்திலும்—மன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ" என்றும் இராமாவதாரங் கூறும்.

ஈண்டு ஆற்றல் சான்று = இவ்வுலகத்தே வல்லமை நிறையப்பெற்று;

அன்பருள் படைத்தவரே எல்லாம் பெறுதற்குரியரென்று கூறப். உலகச் செயல்களெல்லாம் இவற்றின் காரணத்தால் ஆகின்றன என்க. படைவகை முதலியவும், அன்னபிறவும் அவற்றிற்கு ஆதாரங்கள் ஆகுமென்று உண்மை அறிவுச்சுடர் அவிக்கப்பெற்ற சிலர் கூறுவர். அவரை நாத்திகரினுங் கொடியோர் என்க.

உலகு எல்லாம் இன்புற ஆளும் இயல்பு நனி உடையீர் = உலகங்கள் எல்லாவற்றையும் இன்பத்திற் பொருந்துமாறு ஆட்சிசெய்யும் இலக்கணம் மிகுதியும் பெற்றவரே,

இவ்வுலகத்தில் யாண்டும் பகைமையில்லாமல் அவ்வுலகாட்சியும் கைகூடும் என்பது போதர "உலகெலாம்" என்றும்; கொடிய விலங்கு முதலியவைகளும் தங்கள் குழவிகளையும், பிறவற்றையும் நேசித்துவருதல் அன்புகாரணத்தாலே ஆதலின், அன்பினால் இன்பம் எய்தும் என்பது போதர "இன்புற ஆளும்" என்றும் கூறினர்.

எனினும் = (மேற்கூறிய செல்வங்களையும் குணங்களையும் பெற்றீர்) என்றாலும்;

கால் வேண்டினும் = (மூச்சுவிடுதற்குக) காற்றை விரும்பினீராயினும்;

மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாததாதலின் கால் முற்கூறப்பட்டது; அளபெடையும் இதனைக் குறிப்பிக்கும். இக்காலத்தார் மின்சாரத்தால் இயக்கம்பெறும் விசிறி முதலியவற்றை [illegible] நோக்கி இனிவருநாளிற் காற்றிற்கும் பிறரையே எதிர்பார்ப்பர்கொல்லோ என்று [illegible] முகத்தானே சுதந்திர முயற்சிக் கேவுகின்றார்.

இறைவனது சிருட்டி முறையின் மாட்சியை இவ்வாசிரியர் மற்றொரு தனிப்பாசுரத்தில் விளக்கியது வருமாறு:—"ஆருயிர் வாழ்க்கைக் கனைத்துப் பொழுதினுஞ்—சோர்வின்றி வேண்டுந் துணைமைசால் காற்றை—யாண்டுந் தந்தோன் வேண்டுழி வேட்கை—தணித்தற் குரிய தண்ணீர் தருஞ்சில—விடத்திற் றந்தோ னுறுவெளிச் சக்கு—வேண்டுத லவற்றினுஞ் சிலவே யாதலி—னத் தகு மரபி னவ்வவை யளித்தோ—னின்னண மாக வியன்றன வெல்லா—நுண்ணுணர்வு பெறீஇ நோக்குபவர்க் கன்றிப்—பிறர்தமக் கறிதல் சாலா தாதலி—னவ்வெலா மளித்த செவ்வி யோனைப்—பொருடரு கில்லான் போற்ற கில்லா—னருட்டுறை யில்லா னுவன செய்யா—னெனப்பழி சுமத்தி யின்னல்பெரி துறுகுந—ருடல் வளர்ச்சிக் கொள்ளுயிர் வளர்ச்சிக—கேற்றவை யல்லா வெவற்றை யும் பேணி—மாற்றருந் துயர்க்கடன் மாழ்கிப்—போற்றலறி கிலராய்ப் பொங்கியழி குநரே".

கரும்பு சுவை தரும் நீர் வேண்டினும்—கரும்பொத்த இனிய சுவையை (அருந்துவார்க்கு) கொடுக்கின்ற நல்ல நீரை விரும்பினாலும்;

தண்ணீர்க் குழாய்களை நம்பி நன்னீர்க் கிணறு, குளம் முதலியவற்றைத் தூர்த்ததனோக்கி இங்ஙனம் கூறினார். குழாய்வழி வருநீரும் தூயதன்மை யாகாவாறு வெளிப்படை.

நெல் வேண்டினும்=(உணவிற் கின்றியமையாத) நெல்லைப் பெறவேண்டுமானாலும்,

அகவலோசை நிரப்புவான "நெல" என்ற மொழியின் இறுதி ஒற்று அளபெடுத்தது. நெல்லென ஒன்றே கூறினாரேனும் ஏனைத் தானியவகைகளையும் தழீஇக்கொள்க. இவற்றைப் பயிரிடவும் விடவும் உடைகளுக்கு அதிகாரமில்லை எனபது குறிப்பு. நந்நாட்டு உணவுகளைப் பிற நாட்டாருக்குக் கொப்படைத்துவிட்டு அப்பிறர் பண்ணமைத்துத் தரும் உணவுகளை எதிர்பார்க்கின் றீர் என்றலும் சாலும். ஏனைய வகைகளைத் தழுவிக்கோடற்கும், சிறப்புடைமைக்கும், இருப் பனவற்றைப் பிறர்க்களித்துவிட்டு அப்பிறர்முகநோக்கியிருக்கும் எளிமைக்கும், அன்னபிறவற் றிற்கும் நீவிர் ஆளாகுகின்றீர் என்றலைப் புலப்படுத்துவானவேண்டி 'நெல' எனபது அளபெடுத் தது என்றும் கூறுப. ஏனையவிடங்களுக்கும் ஏற்றவாறு இங்ஙனமே கூறிக்கொள்க.

அறுவை வேண்டினும்=ஆடைகளை விரும்பினாலும்;

அறுக்கப்படுதலின அறுவையாயிற்று.

"பலபகல் வருந்திப் பாடு பட்டுப்—பருத்தி விதைத்துப் பயன்பிறர்க் களித்துச்—சிறுபொரு ளேற்ற னந்தலை விதியே—அதனால், நூல் உனுற்று நுண்ணுடை புனைஇப்—பெரும்பொருள் பெறு தல் பிறர்க்கமை வாயப்பே" என்று இந்நூலாசிரியர் கூறிய மற்றொரு பாப்பகுதியும் நோக்கற் பாலது.

ஆர் ஒளி வேண்டினும்=(இருளைப் போக்கும் தன்மை) நிறைந்த விளக்கு வேண்டுமென் றாலும்;

"ஆரொளி" என்றமையான் மின்சார விளக்கு என்பது வெளிப்படை. ஒளியென்றமை யால் நெருப்புக்கும் அப்பிறரையே எதிர்பார்க்கின்றீர் என்பது பெற்றும். விளக்கினை ஒளி முகத்தான் விளக்கிப் போந்தமையான அவ்விளக்கு முதலாயவற்றிற்கும், நெய்க்கும் அப்பிற ரையே எதிர்பார்க்கின்றீர் என்பதும் பெறப்பட்டது. அம்மின்சாரவிளக்கு ஒளியால் நிறைவு பெற்றதேயன்றிக் கண்ணுக்கு நலன்றருவ தொன்றன்று என்பது குறிப்பு. விளக்கு வைத்துக் கொள்ளவும் அறிகிலீர் என்று கூறினாராயிற்று.

கல்வி வேண்டினும்=கல்வியை விரும்பினாலும்;

நாட்டுமொழியை வளர்க்கப் பிறர் உதவுகின்றாரில்லை என்று பலர் சொல்வதை நோக்கி இங்ஙனம் கூறினார். நமது கல்வியை வளர்க்கப் பிறருதவி யாதுகாரணம்பற்றியெனக. இக் கருத்தைத் தழுவி யினனூலாசிரியர் கூறிய தனிப்பா வருமாறு:—"பலரரு முயற்சிப் பயன்பாழ் படுத்தி—நிலமபண் படுத்தி நலம்பெறு தழீஇ—புதையடி பரதுமுத லொன்றிய வாட்டுப்—பலப்பல வாடிப் பசித்துங் நாட்டின்—கூல முண்டு குலமுறை கிண்டிப்—புறமொழி பயின்று பொருந்திறை யுதவியைக்—குறியெதிர் நோக்கி வறுமை கொளீஇ—தாய்மொழி யழித்துத் தகவில ராயினீர் நீவிர். காடு கொன்று கதவுபுல னுக்கி—நாடுசிற் றில்லொடு நயந்தகலை பயிற்றும்—

தொழின்முறை கூடினி ராகிக்—காலையொடு மாலை கற்பமை சிறுரு—நூலருள் வோரு நோன் புலத் தழவுங்—தவழ்பிற தொழிலுந் தககாங் கியற்றி—யாறுத லடைஇ யருந்தமி ழாய்ந்துவரிற்—பேறுபெறு பெற்றோர் பேணுறு பொருளையும்—வீறுபெறு வேந்தர் விழைதரு பொருளையு—நோக்கல் வேண்டா நும்முறு மொழிக்கழி—வாக்கல் வேண்டா வத்தொழி லுணுக்கம்—வாக்கு தேன் புலத்துவழி மருவா தவமே—போககல் வேண்டா பொய்யுரை யன்றே—மீககுயர்த் திறையின் மேன்மைசா னகரையு—முடனபெறீஇ நன்றே யும்மின—மடன்பெறு வாழ்ககை மற்றிது வாமே".

கவின் உரை வேண்டினும் = இலக்கணம் அமைந்த உரைகளை உரைக்க விரும்பினாலும்;

எங்கள் மக்களுக்கு நாட்டுமொழிககல்வி பயிற்றல் வேண்டும், நாட்டுமொழிச சொற்களிலே நல்லுணாசசி பெறுதற்குப் பேரிலககணவசகிய அறிவைக கொடுததல் வேண்டுமென்று இககாலததாா பிறாமுகததை நோககி எதிாபாாததிருததலை இங்கெடுததுக் கூறினாா இந்நூலாசிரியர் என்க.

பிறா கல்வி, பிறா உரை என்றுமிவற்றைப் பெறுதற்கு விரும்புகின்றீா ஆதலிற் பிறர் முகம் நோககுகின்றீா எனப் பொருள்கூறுவாருமுளா.

பசுசினைப் பிறாகதவிற்று நூல், உடை எனனும் இவற்றிற்குப் பிறர்தஙகளை எதிா நோககி வருதல்போலக கலவி உரை முதலியவறறையும பிறாககு ஒப்புவிததுவிட்டு அவற்றைப் பெறுதற்கு அவாவிப் பிறாமுகம எதிாபாாககினறீா என்பது நோ.

அணிகலன் வேண்டினும் = புனைகின்ற ஆபரணஙகளை விருமபினாலும்;

நமமுடையவற்றை அநாகரீகம் பெற்றனவென்று தளளிவிட்டுப் பிறாக்குரியவற்றைப் பெறுகின்றீா ஆதலின் அவறறைப் பெறுதற்கும அவாமுகம நோககுகின்றீா என்க. உடை முதலிய எனையவற்றிற்கும இஙஙனமே கூறிககொள்க.

பிணி தவிா மருந்தே = நோயை நீககுகின்ற மருநதும்;

நாட்டுமருந்துகளைப புறககணித தொதுககிவிட்டுப் பிறாநாட்டு மருந்துகளையே பேணி வருகின்றீா ஆதலின் அவறறிறகும அவாமுகம நோககுகின்றீா எனக.

பொருநதும் அடிபுதை காப்பே = பொருநதுகின்ற பாததனை மறைததுக் காவல் செயகின்ற பாதரக்ஷையும்;

நந்நாட்டுச செருப்பு முதலியவற்றையும புறககணிதது விடுகின்றனா என்க. பாததின் அளவுககுத தககாஙகு பொருநதுகின்ற எனப பெயதுரைததுக கொளக.

குடையே = குடையும;

படையே = படைககருவிகளும;

நடையே = நடககு மொழுககமும்;

நமா அமைத்த ஒழுககஙகள் பிழையுடையன என்றகற்றிப் பிறருடையவற்றை நம்மவா எதிர்பார்த்து வருகின்றனா என்க.

பகரும் இன்னன = சொல்லுகின்ற இவைபோன்றனவாகிய;

எவற்றை வேண்டினும் = எப்பொருளகளைப் பெறுதற்கு விரும்பினாலும்;

பிறர் முகம் நோக்குதிர் = பிறருடைய முகததையே பாாததுவருகின்றீா;

எத்துணை நாட்கள இவை பெறறகு இயலும் = எவவளவு காலம் வரையிலும் இவற்றையெல்லாம் (அப்பிறர் முகநோக்குது தாவும நீவிா எளிதிற) பெறவுங கூடியதாயிருக்கும்;

பிறர் மனம் கோணு பெற்றிதரு நட்பை = அப்பிறருடைய மனமானது (அவற்றையெல்லாங் கொடுத்தலின்) மாறுபடாத தன்மையைத தருகின்ற சினேகததை;

'பொறை கொடு விடாது போற்றுவிர் கொல் = (எவை நிகழினும் பொறுக்கின்ற)' பொறுமையைக் கொண்டு (அக்கொண்டதினாலே அந்நட்பை நழுவ) விடாமற் காப்பாற்றி வருவீர்களோ;

வருதல் சாலா தென்றபடி.

இடை அறவு படின் என் ஆகுவிர் = நட்பு மாறுபட்டு அப்பொருள்கள் நமக்குவந்துசேருதல் இயலாமல்) இடையிலே அற்றுப்போனால் நீவிர் யாதுதாம் ஆவீர்;

உயிர்க்காதும், அருந்தாதும், உண்ணாதும், உடுக்காதும், ஒளிசெய்துகொள்ளாதும், கற்காதும், உரையாதும், இன்னபிறவெல்லாம் செய்யாதும் இருப்பீரோ; இருப்பின், எந்நிலைமைக்கு நீவிர் வந்துவிடுவீர் என்றபடி.

நஞ்சு எயிறு அரவு = நஞ்சுபொருந்திய பல்லையுடைய பாம்பு;

நலிவு கொடுக்கு அமை தேள் = துன்புறுத்துகின்ற விஷக்கொடுக்கைப் பொருந்திய தேள்;

நலிவு—ஆகுபெயர்.

அச்சுறுத்தி அழிக்கும் ஆற்றல் சால் வரிப்புலி — நினைப்பினும் அச்சத்தைக் கொடுத்து அழிவுசெய்யும் வல்லமை நிறைந்த இரேகைகளையுடைய புலி;

புலியைக்கண்டாலும் அக்கண்ட நினைவாற் பீதிமேலிட்டு நோய்வாய்ப்பட்டு மடிவர் என்பது கருத்தெனக்கொண்டு அங்ஙனம் அடைபுணர்த்தப்பட்டது.

தைச்சு அடிக்கு அரு செய் தகை மரன் = தைத்தலினாலே பாதத்திற்குத் துன்பத்தைச் செய்யும் தகுதிவாய்ந்த முட்களையுடைய மரம்;

தகை— ஆகுபெயர்.

இவற்றை = என்கின்ற இவைதங்களை எல்லாம்;

எச்சம் அற கொன்றும் இன்றும் நின்ற இலது = அவற்றின் பாரம்பரியமும் அற்றொழியும்படி அழித்துவந்தும் அவைகள் இன்றைக்கும் நிலைபெற்று விளங்கிவருகின்றன;

ஒருவர் நினைத்தாங்கு ஒன்றனை அழித்தல் இயலாதென்பது குறிப்பு. எச்சமறக் கொன்றுவிட்டால் பின்னர் எஞ்சி நிற்பது எங்ஙனமெனில், அறவே கொல்லப்படவில்லை அறறுவிட வேண்டிக் கொன்றுவந்தனர் என்க.

நொடியில் படியை நுங்கு பிணி பல பல = ஒரு நொடிப்பொழுதுக்குள்ளே இவ்வுலகத்துச் சீவராசிகளையெல்லாம் விழுங்கிவிடக்கூடிய அத்துணைக் கொடுமையுள்ள நோய்கள் பலப்பல;

மிடியில் கடுத்து வீட்டியும் = வறுமையைப்போலக் கடிந்து நாசஞ் செய்பினும்;

வறுமை செய் கடுப்பு தாங்குதற்கு அரியதாதலின் கொள்ளை நோயின் கொடுமையை அதற்கு ஒப்பிட்டார். வறுமையை விவரிக்குமிடத்துக் குசேலோபாக்கியானம் "பொருவாவெங் கடுங்கூற்றுயக் கொடுவிடமாய் வடவையாயப் புகுந்து வாட்டித—திருவாகின் றிடும்மிடி" என்றும், "சரித்திர மவமானம்பொய்பே ராசை தரும்நிற் கொடியதொன் றிலையே" என்றும், "தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொடிது" என்றும் பலவாறு கூறுநிற்கும்.

உயிர்கள் குறைகில = சீவராசிகள் தந்தோற்றத்திலே குறைவுபடவில்லை;

ஆதலின் = அதுகாரணத்தாலே;

நமரையும் கோறல் செய் முறை ஒன்று உண்டு என முன்னுதல் தவறு ஆம் = நம்மவரையும் பிறர் கொலை புரிதற்கு வழி ஒன்றுளது என்று நாம் நினைத்தல் தவறுடைத்தாகும்;

ஆக்கலும் அழித்தலும் இறைவனேயன்றிப் பிறரால் நமக்கொன்றும் நேர்வதில்லை என்றபடி. அங்ஙனமாயின், அரசிழுக் தடிமை புக்குப் பிறர்முகம் நோக்க நேரிடுதலும் இறையவன் விதியென்று வாளாவிருத்தல் முறையாகாதோ வெனின், ஆகாது; தந்நிலை தளருங்காலெல்லாம் முயற்சி செய்யவேண்டியது ஒருவனது கடமையாகும். ஊட்டி உறக்குவிக்கும் இறைவனே எதிர்வந்து பாலன்னங் கலத்திற் பெய்துதரினும் கைவாய் முதலியன முயற்சித்தன்றோ உட்கொள்ளல்வேண்டும். "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று—சூழினுந் தான்முந் துறும்" என்ற பெருநாவலர் "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்—தாழா துஞற்று பவர்" என்றும்

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்—மெய்வருத்தக் கூலி தரும்" என்றுங் கூறிப் போந்ததின் கருத்து என்னையென்று நுணுகி ஆராய்ந்தறிந்து தெளிக.

இசை பட வாழா எளிமை கொள் வாழ்க்கை கொடு = புகழுண்டாக வாழாத எளிமைத் தன்மையைக் கொண்ட வாழ்வினைக் கைக்கொண்டு,

இசை—புகழ். புகழாவது இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப் பயனாகி இவ்வுலகின் கண்ணே கழாது இறவாது நிற்குங் கீர்த்தி.

நசைத பெறகிலீர் விரும்பியவற்றைப் பெறமாட்டீர்,

தமக்கு நுகர்ச்சியில்லையென்பது கூறப்பட்டது.

நாடு மொழி ஆற்றல் வசை ஒழி வண்மை அறிவு ஒழுக்கம் மாட்சி இசைவிலீர் = (நமது மனசை இடமாகக் கோடற்கு) நாடுகின்ற (தூய) பாஷை, (ஆவன ஆக்கவும் போவன போக்கவும் வற்ற) வல்லமை, குற்றமற்ற கொடை, (அறியவேண்டியவற்றை அறிதற்குரிய) அறிவு, (இருமைக்கு காரணமாக ஒழுகும்) ஒழுக்கம், சிறந்த மேன்மை என்னும் இவற்றையெல்லாம் பெறமாட்டீர்;

துன்பு எ(ல்)லாம் எற்று விரைந்து அழிகுவிர் (தீயனவும் இப்போக்கைக்கு மாறுபட்டனவும் ஆகிய குணஞ்செயல்களை உடையீராதலின் அவற்றால் நிகழப்பெறும்) துன்பங்கள் எல்லாவற்றையும் சுமந்து மிகவிரைவிலே நாசமாகுவீர்,

மானம் பிழைத்து உயிர் வாழ்தலில் பெருமை கெட்டு உயிர்வாழ்ந்து வருதலினும்,

மானமென்பது குடிப்பிறந்தார்க்கமைந்ததொரு விழுமிய குணம்; தந் நிலையிற் றாழாமையும், தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் மானமுடையார் செய்கைகளாம். "கற்றூண்—பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கிற்—றளர்ந்து வளையுமோ தான்" என்பது நோக்கற்பாலது. இன்றியமையாச் சிறப்பினவாயினும் குன்ற வருப விடல். குன்றுவருபவற்றையும் தமது நிலையின் இழிந்தவற்றையும் செய்பவர் தலையினிழிந்த மயிரனையார் எனக. இவர்க்கு இருமையினும் நலனில்லை. மானங் கெடவரின் உயிர் நீத்தலே மாண்பு எனக.

[செருவிற் றன்னுயிர் தந்து தழைப்பின்] செருவில் உயிர் தானம் தந்து தழைப்பின் = (நமக்கு ஆவனவற்றை ஆக்கியும் போவனவற்றைப் போக்கியும் கோடற் குரிமையாகிய) போரிடைச் சென்று உயிர்த் தியாகஞ் செய்து தழைத்தால்,

இம்மையிற் புகழும் மறுமையிற் சுவர்க்கமும் பெறுதலிற் றழைப்புறுவர் எனக.

ஆன எவற்றையும் அடைந்து உய்குவிர் = (உங்கள் உரிமை) ஆன எல்லாப் பொருள்களையும் அடைந்து உச்சீவித்து வருவீர்கள்;

உங்கள் பரம்பரையும் நலன்பெறும் நீவிரும் புகழுடம்புபெற்றுப் பொலிந்து வருவீர் என்றபடி.

---

## (60) உழுதொழில் புரிவோர் விழுமிய ரென்றல்.

உழுதொழில் பெரிதே யுழுதொழில் பெரிதே
கழனிப் புழுதியைக் கதிருண வுணக்கி
யெருப்பெய்து விதைத்தி யின்னீர் பாய்ச்சி
நாற்றுப்பத னறிந்து வீறுபெற நட்டுக்
களையறக் கட்டுப் பயிர்வளர்த் திட்டுக்
கதிர்நலன் கண்டு குதிரிடைக் கொண்டிவ்
வாழ்க்குகி லூட்டிய வணிமண் ணிலக்கெலா

நாழித்துணை யளந்து நன்றுபுரிந் தாளு
மேழிச செல்வத் துழுதொழில் பெரிதே
யீதுபடைத் திட்ட தீதுதீ ருழுந
ரவன்மிசை யமைந்த பாணிறை புதீஇக
கள்ளியெருக் கிக்கிரி காரை முட்சொரி
வேலை நெருஞ்சில் வெங்காற் றில்லை
விளிவுசெய் வரிப்புலி விளங்குமயி ருளிய
மளியில பாநத ளவைசெறி நிலத்தை
நலநதரு விளைபுல னாக்கிய நலமேலோர்
மாரி யென்று மறுகித தெறுகனல
வாரி யென்று மாழ்கிலர் முயன்றுதஞ்
சோரி பொழிந்து தொன்றுமுக னன்றுபுரி
கொடையின ரரிவா ளைஞ்சிலகொட டென்னும்
படையினர் துஞ்சினும பன்னுவய லமையு
நடையினர் மழைநீர் நவைபெறு தியாறு
குளனேரி கோட்டகங் குண்டகல குட்ட
மின்னநிலை யீநத வின்னுயிர் மருந்தினர்
நிலமக ளகட்டு ணிலைஇய வையப
பலவெடுத தளிக்கும பான்மையர் மேன்மைசா
லீகையொன் றறிவோ ரிரப்பறி கிலலார்
மகிழ்நதிவர் வழங்கும மாண்டசெல வததை
புகழ்நதுபாத் துண்ணல் புரிவோர் தம்முட
சிலரே,
மூசசுத்தடைப் படுத்தி முன்னுந ரொன்றை
சிலரே,
மெய்யுணர் வளித்து மேம்பட வுயர்த்தல
செய்யற னெல்லாந் திறம்படச் செய்குநர்
சிலரே,
நிலனெலாந் தம்மடி நிழலுற வாண்டு
பலபுகழ் பெறீஇப பசசென் றமைகுநர்
சிலரே,
கொற்றங் காட்டிக் கொடும்போர செய்குநர்
சிலரே நொடைத்தொழில செய்குநர் சிலரே
யேவல் செய்குந ரின்ன வெவ்வா
மின்னண மாற்றி யியல்குந ரதனு
ளுழுதொழி லவரே யுயர்நதோர்
பழுதுண்டு மற்றைய பணியுடை யவர்க்கே.

(இ-ள்.) உழுதொழில் பெரிதே உழுதொழில் பெரிதே = (சூத்திரர்க்கும் வைசியர்க்கும் உரிய அறுவகைத் தொழில்களில் ஒன்றாகிய நிலத்தைக் கிளைத்துப் பயிர்செய்துண்டு வாழும், உழுதொழில் (ஏனைய தொழில்கள் யாவற்றினும் தலைசிறந்த) விழுமிய தொன்றேயாம்;

உழுதொழிற் பயனைப் பகுத்துண்டு வாழ்ந்து வருதற்பொருட்டே ஏனைய தொழில்களெல்லாம் உண்மையின் இங்ஙனம் கூறினார். "சுழன்று மேர்ப்பின்ன துலக மதனா—லுழந்து முழவே தலை" என்றார் குறளினும். "வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்—களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை—வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்—பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை—யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே" என்றார் வெள்ளைக்குடி நாகனாரும். இவற்றை ஈண்டு ஏற்குமாறு விரித்துரைத்துக்கொள்க. உழுதொழிலின் பெருமையைக் காட்டுதற் பொருட்டு அடுக்கிக் கூறினார்.

கொற்றத்தையும் கருவையும் சுற்றத்தையும் கொற்றத்தினும் அழலினும் •உழவினும் விளக்கும் பெருமைவாய்ந்த மண்மகட் புதல்வராகிய உழுநராம் வேளாளரின் சிறப்பியல் "வருவிருந் தோம்பலானை வழிநிற்ற லொழுகக்கமுகக்கங்—கரிலகத் தின்மை யென்றுங் கைக்கட னாற்றலன்றே—உரியதா மிறையி றுத்த லொற்றுமை கோடல் போற்றல்—விரவுமாள் வினைதொ டங்கல் வேளாளர் செய்கை பத்தே" என்றபடி பததுவகைத்தாரும்.

கழனி புழுதியை கதிர் உ(ண்)ண உணக்கி = வயலைப் பன்முறை உழுவதால் உண்டாகும் புழுதியைச் சூரிய வெப்பம் உண்ணவிட்டு உலர வைத்து;

பலமுறையும் உழவேண்டும் என்பார் "கழனிப் புழுதியை" என்றார். வன்மையுற்றிருந்த வயற்பரப்பைப் பன்முறை யுழுவதால் புழுதிசெய்து காயவைத்தல்வேண்டும் என்பது கருத்து. கதிருணவிடுதற் கிசைந்த காலம் கோடைககாலம் ஆதலின் அக்காலததிலே மழை பெய்தவுடன் பலகாலு முழுது புழுதியாக்கல் வேண்டுமென்று குறிப்பித்தாருமாம். இனி, உள்ளமைந்திருக்கும் நீர்க்கசிவை உணக்குமாறு ஆழ வுழுதல் வேண்டும் என்றுமாம.

எரு பெய்து வித்தி = எருவிட்டு (விட்டதன்மேல் விதைக்கற்பாலனவற்றை) விதைத்து;

முன்னரே எருவிடப்படின் எருவின் ஆற்றல் இளம் பயிருக் கேறப்பெற்று இயல்பு கெட்டழியும் ஆதலின் பின்னர் எருவிட்டு உடனே விதைத்தல் வேண்டு மென்றாரென்க. எருச்சாரம் விதைத்தற்குமுன்னரே வயலிற் கலக்கப்பெறின் பயிர் மதர்ப்புறுப் பயன்றரா தொழியும் என்பதூஉமாம்.

இன் நீர் பாய்ச்சி = (விதைகள் சீராக முளைத்துவருதற்கு) இனியதுவாய நீரைப் பாய்ச்சி;

மிகினுங் குறையினும் நோய் செய்யு மாதலின் "இனநீர" என்றார். நட்ட விதைகள முளைத்து நலந்தருதற்கு இத்துணை நீர் இவ்விப்பொழுது வேண்டுமென்பது பாய்ச்சுவோர் அறிந்து கோடல் இயல்பாகலான் வாளா "பாய்ச்சி" என்றார். காலந்துக்குத் தககாங்குதவி செய்யும் நீர் என்பது போதாற்பொருட்டுமாம்.

நாறு பதன் அறிந்து = நாற்றைப் பறித்து நடுதற்குரிய பக்குவத்தை யுணர்ந்து;

"நாறிது பதமென" என்றார் சிந்தாமணியிலும். நாறு செவ்விய பருவமடைதற்கு முன்னும் பின்னும் பறித்து நடப்படின் பயன்கொடா தாதலின் இங்ஙனங் கூறினார்.

வீறு பெற நட்டு = செழித்தோங்கி வளர்ந்து பெரும்பயன் அளிக்கும் வகையிலே நடுதலைச் செய்து;

"முடிச்சு முடிச்சாக நட்டாற் கோட்டை கோட்டையாக விளையுமா" என்பது சோணாட்டு வழக்கு. ஒவ்வோ ரலகுகளாகப் பிரிக்காமலும், பலப்பலவாகச் சேர்த்து நெருக்காமலும், மிகத் தாழ்க்காமலும் சம இடைகண்டு செறிப்பட நடப்பட்ட பயிர்கள் நற்பயனை அளிக்கு மென்க. இவ்வகை நடப்படின் பயிரும் பயனும் வீறுபெறுதற்குரியனவாம். வீறு—வீற்றுத்தெய்வமுமாம். [illegible] வீற்றுத்தெய்வமாக [illegible] கூறிக்கொள்க.

**களை அற கட்டு**=(நட்டு வளர்த்து வருகின்ற பயிர்களின் உணவினையும் பிறவற்றையும் அழித்துவருகின்ற பகைச் செடிகளாகிய) களைகளை ஆணிவேர் அறப் பிடுங்கி எறிந்து;

வேற்றுப் பயிர்களையே களையென்று கூறினர். களைதற்கு உரியதெனபது பொருள். மேற்பாகத்தை மாத்திரங் கொய்துவிடில் பின்னரும் முளைத்துக் கெடுதிசெய்துவரும் ஆதலின் "கட்டு" என்னாது "அறக்கட்டு" என்றார். "கள்" (பிடுங்கு) என்னும் பகுதியடியாகக் "கட்டு" என்பது தோன்றிற்று. களையெடுக்குங் கருவி "களைகட்டி" எனப்படும்.

பயிர் வளர்த்திட்டு=(பயன்தருமாறு வேண்டிய தொழில்களைக் கிரமமாகச் செய்து) பயிரை வளர்த்து;

வனவிலங்கு, மாடாடு, விட்டில், கிளி முதலியவற்றாலும், வெள்ளம், வெப்பம், நோய் என்னுமிவை முதலியவற்றாலும் இடையூறு நேரிடாமற் கரைகோலி வேலியிட்டுக் கண்ணை இமைகாப்பதுபோலக் கங்குலபகல் பணைப் பயிரை உழுநர் காத்தல்வேண்டுமென்று ஈண்டுக் கூறினர். நெருங்கிய பயிரைப் பெயர்த்துநடல், மதர்த்த பயிரை நுனிகொய்து வசப்படுத்தல் முதலிய வெல்லாம் ஈண்டே யடங்கும். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால்யாத்தல், காத்தல் என்னும் ஐந்தும் உழுதொழிலின் விசேட பாகங்களாதலின் இவ்வரிசைப் படுத்திக் கூறினார்.

கதிர் நலன் கண்டு=கதிர்களின் முதிர்ச்சிவளம் நோக்கி அரிந்து வைக்கோலை நீக்கித் தானியத்தை மனைக்குக் கொடுபோய்;

"குதிரிடைக் கொண்டு" என மேற்கூறுதலான் இங்ஙனஞ் சொற்கள் பெய்துரைக்கப்பட்டன. இவ்வகை சுருக்கி நடாத்துங் கவிதைகளைக் கலித்தொகை முதலாய பண்டைய பனுவல்களிற் பரக்கக் காணலாம். உயிர்மேல் வைத்த அருளைக் கருதிப்போலும் பகட்டுத் தொழிலைக் கூறிற்றிலர்.

குதிர் இடை கொண்டு=கூடுகளிலே பெய்துவைத்துக்கொண்டு;

குதிர்—நென்முதலிய வைக்குங்கூடு. களங்களில சேரினும், கூடுகளிலும் பெய்துவைப்பரென்க.

இ ஆழி துகில் உடீஇய அணி மண் நிலக்த எ(ல்)லாம=இந்த வாரிதியாகிய ஆடையை உடுத்த அழகிய அனுக்கள் செறிந்த நிலவுலகத்து மக்களுக்கெல்லாம;

ஆழி எக்கர் செய்து நிலவுலகத்தைக் காத்து வருதலின் ஆடைக்கொப்பிட்டார். இதனை வலியுறுத்தற்கே "அணி மண்ணிலகரு" எனப்பட்டது. இந்நிலம், ஆழித்துகில் உடீஇய நிலம், அணிநிலம, மண்ணிலம் எனக் கூறிக்கொள்க. அப்புவினின்று தோன்றிய காரணம்பற்றிக் கடலை அடையாக்கினர் என்பாருமுளர்.

நாழி துணை அளந்து=நாழி அளவுடைய தானியமாக அளந்து கொடுத்து;

"தினைத்துணை" "பனைத்துணை" என்றாங்கு நாழித்துணை எனக் கூறினர் என்றலுமாம். எவ்வகையாய உத்தியோகத்தரும் இவர் விளைத்த உணவு கைக்கொண்டே தீரவேண்டும். மக்கட்பிறப்பினர்க்கெல்லாம் இவரே யுணவளிப்பவர் எனபது கருத்து. வாணிபமும் ஒருவாறு ஈண்டுக் குறிக்கப்பட்டது போலும்.

நன்மை புரிந்து ஆளும்=நன்மை பொருந்துமாறு காப்பாற்றி ஆட்சிசெய்து வருகின்ற;

ஏனைய தொழிலாளர்செல்வம் சிலர்க்கே பயனாகவும் இவ்வுழவர் செல்வம் எல்லார்க்கும் பயன்தருதலின் "நன்றுபுரிந்து" என்றும், ஏனையர் ஆட்சி இவரது ஆட்சியின்றேல் இன்றாகும் என்பது கருதி "ஆளும்" என்றுங் கூறினர். ஏனையவராட்சி முன்வாங்கித் தாம்நுகர்ந்து எஞ்சியதைப் பின் ஏனையர்க் களித்தல். இவராட்சி அங்ஙனமாவதன்றென்று காட்டற்குமாம். ஏனைய தொழில்களுக்கெல்லாம் தீமை கனி மிகுதியாகவும், நன்மையினுண்மை ஐயத்துக் கிடனாகவும் இருத்தல்போலாது இவ்வுழுதொழிலில் வருவது நன்மை ஒன்றே என்பது போதர இங்ஙனம் கூறினர் என்பதூஉம் சாலப்பொருந்தும். "மேழிச் செல்வம் கோழைபடாது" என்றதனை ஒன்னையும்.

மேழி செல்வத்து உழுதொழில் பெரிதே=கலப்பையைக் கையாடிவருஞ் செல்வத்தை யுடைய உழுதொழில் பெரியதொரு தொழிலே யாகும்;

மேழி—ஆகுபெயருமாம். மேழியர் என வேளாளர்க்குப் பெயருண்மையும் நோக்கற் பாலது. உழுதொழில் நிகழ்வதற்குக் காரணமாக மேழி அமைந்திருத்தலை நோக்கி அதனைச் செல்வமென்று சிறப்பித்தார். இனி உழுநா லகபடும் பெருமை நோக்கியுமாம்.

ஈது படைத்திட்ட தீது தீர் உழுநர்=இவ்வுழுதொழிலைத் தந்தொழிலாகக் கொண்டிருக் கும் குற்றந்தீர்ந்த உழவோராவார்;

உழுதொழிலின் பெருமை தோன்ற "ஈதுபடைத்திட்ட" என்று சுட்டிக் கூறினர். "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வாமற் றெல்லாந்—தொழுதுண்டு பின்செல் பவர்" என்றார் குறளி னும. "இரப்போா சுற்றமும் புரப்போா கொற்றமு முழவிடை விளைப்போா" என்றார் இளங் கோவடிகளும்.

அவல் மிசை அமைந்த=பள்ளம் மேடுகளாகப் பொருந்திய;

பள்ளமுண்டாகுங் காரணம்பற்றியே மேடுண்டாகும் என்னும் இயைபுபற்றி "அவன் மிசை" என்றார்.

பால் நிறைபு உறீஇ=பருக்கைக் கற்கள் நிறைதலைப் பொருந்தி;

கள்ளி எருக்கு இக்கிரி காரை முள் சொரி வேலை நெருஞ்சில் வெம் கால் தில்லை= கள்ளி, எருக்கு, இகதிரி (ஒருவகை முட்செடி), காரை, முட்களைப் பக்கமெங்குஞ் சொரிகின்ற வேலை, நெருஞ்சில், வெப்பாகிய காற்றை வீசுகின்ற தில்லை;

தில்லையிற் படிந்துவரு காற்று தேகத்திற் படியவீசினால் வீக்க முண்டாகும் ஆதலின் "வெங்காற் றில்லை" என்றார். முள்ளின் நீட்சிகருதி "முட்சொரி வேலை" என்றார். கூறிய இவைகளெல்லாம் பாலினாலும் முள்ளினாலும் பால்முள்ளிரண்டினாலும் பிறவற்றாலும் உடலைத் துன்புறுத்துவனவாம். கொடுங்குணத்துக் கிசைந்தாங்கு வரிசைப்படுத்திக் கூறினர்.

விளிவு செய் வரி புலி விளங்கு மயிர் உளியம் அளி இல் பாந்தள்=கொல்லுகின்ற வரி களையுடைய புலி, பொலிந்து தோன்றும் மயிரினையுடைய கரடி, இரக்கமில்லாத பாம்பு;

அவை செறி நிலத்தை=(பள்ளமாய், மேடாய்ப், பரல்களும் கள்ளி முதலியவும், புலி முதலியவும் ஆகிய) அவையெல்லாம் நிறைந்த நிலத்தை;

இவையெல்லாம் இக்காலத்தில் இல்லை அக்காலத்தி லிருந்தன வென்பது போதர "அவை" என்றார். "ஆகாத தன்று லுணக்கவ வணமிவ் வயோத்தி" என்ற சுட்டுக்களையும் நோக்குக. "காடுகொன்று நாடாக்கிக்—குளந்தொட்டு வளம்பெருக்கி" என்றாங்கு வேளாண் மைக் கிடர்புரிவனவற்றைக் களைந்தொதுக்கிச் சார்புடையனவற்றைத் தழீஇயினா என்க.

[நலந்தரு விளைநில னாக்கிய நல்லோா] நலம் விளை தரு நிலன் ஆக்கிய நல்லோர்=நன்மை யைக்கொண்ட விளைவுகளைத் தருகின்ற நிலனாகத் திருத்திய நலன் வாய்ந்தவரும்;

குறிஞ்சி முதலிய ஐவகை நிலனைப் பண்படுத்தியவர், கொடியவற்றைப் போக்கி நல்ல வற்றை ஆக்கியவர், தீமைதரு நிலத்தை நன்மைதரு நிலனாக்கியவர் எனப் பெய்துரைத்துக் கொள்க.

மாரி என்று மறுகி தெறு கனல் வாரி என்று மாழ்கிலர்=மாரிக்காலம் என்று கருதியும், சினந்து வீசுகின்ற நெருப்பையே வருவாயாகவுடைய கோடைக்காலம் என்று கருதியும் (உழு தொழில் முயற்சியிலே புகுதற்கு) மயங்காதவராகி;

கழனியிற் பணிசெய்யாமையே தமக்கொரு பெரும்பிணி என்றும், செய்தலே பெருநல னென்றுங் கருதி நடப்பவர் என்பது குறிப்பு.

முயன்று தம் சோரி பொழிந்து தொன்று முதல் நன்று புரி கொடையினர்=(கூல முதலியவற்றைப் பெறுதற்கு வேண்டிய துறைகளிலே) முயற்சிசெய்து தங்கள் இரத்தத்தைக்

சிந்திப் படைப்புக்காலந்தொட்டு (நாட்டவர்க்கு) நன்மை செய்து வருகின்ற கொடையுடைய வரும்;

உடலானது செயலற்றுப் போகுங்காறும் உழைத்துவருவாரென்பது போதர "முயன்று தஞ் சோரி பொழிந்து" என்றும், அங்ஙனம் முயல்வது அவர்தம் பிறப்பியற்கை யெனபார் "தொன்றுமுதல்" என்றும், தீமைசெய்தல் அவர்க்குப் புலப்படா தென்பார "நன்றுபுரி" என்றும் கூறினார். தீமை செய்தாரும் இவராக்கிய செல்வத்தையே நுகர்ந்து வருதலின் "நன்று புரி" என்றாருமாம்.

அரிவாள் நாஞ்சில் கொட்டு என்னும் படையினர் = அரிவாள், கலப்பை, மண்வெட்டி என்னும் படைக்கலங்களை உடையவரும்;

பலபத்திரன் என்பான் கலப்பையைப் படைக்கலமாகக் கொண்டமைபற்றி "நாஞ்சிற் படையோன்" என்னும் பெயர் பெற்றனன்.

துஞ்சினும் பன்னு வயல் அமையும் நடையினர் = நித்திரைசெய்யினும் வீற்றுத் தெய்வ மிருத்தலாற் றுதிக்கின்ற வயற்பாங்கிலே பொருந்தியிருக்கும் ஒழுக்கத்தினை யுடையவரும்;

இரவு பகல்களை வயலகத்தே போக்கும் ஒழுக்கம் படைத்தவர் என்றபடி. கனவிலும் வயற்பணிசெய்யும் மாண்பு சான்றவர் என்றலும் ஒன்று. இனி, செத்தாலும் வயற்றலையிலே தெய்வதமா யமைந்திருந்து வருவரென்று அணிபொருந்த வுரைத்தலு மமையும்.

மழை நீர் நவை பெறாது = மழையா லுண்டாகிய நீரானது குற்றத்தைப் பெறாது;

கடல், பாழ்நிலம் முதலிய இடங்களிற் செல்லவிடுதல் நீருக்குற்ற நவையென்க. இனி மழை நீரால் நவையைப்பெறாது என்று பொருள்கொண்டு வீடுமுதலியவற்றை அழிக்கல் செய்யாது என்பாருமுளர். மழையில்லாத காலத்திற்கு நீரிலலாக் காரணத்தானே பயிர்முதலியன நவையைப் பெறாது என்றுமாம். அன்றியும் மழைக்காலத்தில் வயல்களிலே நீர்மிக்கு விளைவுகளை நவைபடச் செய்யாது என்றலும் பொருந்தும்.

யாறு குளன் வரி கோட்டகம் குண்டு அகல் குட்டம் = (பாய்தற்கும் வடிதற்கு மேற்ற) நதியும், குளமும், (நீர் வீண்போகாது சிறைப்படுத்தற் கேற்ற) வரியும், (ஆழ்ந்த விடங்களில் விளைதற்குரிய பயிர்வாழிடமாகிய) கோட்டகமும், ஆழ்ந்தகன்ற நீர்நிலையும்;

கோட்டகமென்பது பயிரோடு கூடிய நீர்நிலை.

இன்ன நிலை ஈந்த இன் உயிர் மருந்தினர் = இத்தன்மையவாகிய நீர் நிலைகளைக் கொடுத்தலினானே மக்களது இனிய உயிரைக் காப்பாற்றும் மருந்தையுடையவரும்;

பயிர்கள் நீர்நிலைகளின் உதவிகொண்டு போக்கவேண்டியவற்றைப் போக்கி ஆக்கவேண்டியவற்றை யாக்கி நலன் பெறுதலின் அந்நீர்நிலைகள் மருந்தினை நிகர்ப்ப உழுநர் மருத்துவரைப் போல்வர் என்க. மருந்து தேவாமுதமுமாம். மருத்துவ னியல்பை "நல்லவுந் தீயவு நாடி நோயு கற்—செல்லையின் மருத்துவ னியல்பின்" என்றார் கம்பநாடரும். உணவின் சிறப்பை "உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே" எனச் சீத்தலைச் சாத்தனாரும், "நீரின் றமையா யாக்கைக் கெல்லா—முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே—யுண்டி முதற்றே யுடலின் பிண்டம்—முணவெனப் படுவது நிலத்தொடு நீரே—நீரு நிலனும் புணரி யோரீண்—டுடம்பு முயிரும் படைத்திசி னோரே—[illegible]வா னோக்கும் புன்புலன் கண்ணகன்—வைப்பிற் றாயினு நண்ணி யாளு—மிறைவன் றாட்குத வாதே யதனா—லடுபோர்ச் செழிய விகழாது வல்லே—நிலனெறி மருங்கி னீர்நிலை பெருகத்—தட்டோ ரம்ம விவட்டட் டோரே—தள்ளா தோரிவட் டள்ளா தோரே" என்று குடபுலவியனாருங் கூறினர். ஏற்ப விரித்துரைத்துக் கொள்க. ஏனையவிடங்கட்கும் இவற்றை யாண்டு கொள்க.

நிலமகள் [illegible]ட்டுள் நிலஇய வைப்பு பல = பூதேவியின் வயிற்றுக் குள்ளே நிலைத்திருக்கின்ற புதையல் [illegible]கிய பலவற்றையும்;

வெட்டிக் கொத்திக் கிளைத்துப் போற்றிப் பலவகை யுணவுகளையும் நிலத்தினின்று [illegible]த்துக் கொடுத்தலின் இங்ஙனம் கூறினார்.

எடுத்து அளிக்கும் பான்மையர் = கைக்கொண்டு கொண்டவற்றையெல்லாம் உலகத்தார்க்குக் கொடுத்துக் காப்பாற்றிவரும் இயல்பினையுடையவரும்;

அவற்றை எடுத்தளிக்காது விடுவரேல் எல்லாரும் இறந்துபோவ ரென்பதுகருத்து.

மேன்மை சால் ஈகை ஒன்று அறிவோர் = மேன்மைதகவாய்ந்த கொடை ஒன்றனையே அறிந்தவரும்;

வறிஞர்க்குதவுதல் மேன்மைக் கொடையாகும். உடையில்லார்க் குடையும், உண்டியில்லார்க்கு உண்டியும், மருந்தில்லார்க்கு மருந்தும் என்றாங்குதவுதல் ஒன்றிய கொடை; உண்டி வேண்டினார்க்கு மருந்தும், மருந்து வேண்டினார்க்கு உணவும் என்றாங்குதவுதல் ஒன்றாக்கொடை என்க. "மேலுலக - மில்லெனினு மீதலே நன்று" என்பது தோன்ற "மேன்மை" என்றும், ஒன்றியது உதவுமா என்பது தோன்ற "சால்" என்றுங் கூறினார்.

இரப்பு அறிகில்லார் = யாசித்தல் என்பதை அறியாதவரும்;

உழுதொழில் நனிவளர்ந்த நாட்டில் இரப்பு இருக்காதாதலின் இங்ஙனங் கூறினருமாம். இனி, தாமிரப்பவர்க ளிப்பரே யன்றிப் பிறரிடம் இரக்கமாட்டா ரென்றுமாம். "இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின் நிலமென்னு நல்லாள் நகும்" "இலமென்னு மெவ்வ முரையாமை யீதல் - குலனுடையான் கண்ணே யுள" என்னும் குறட்பாவுக்குரிய பொருள் வேறுபாடுகள் அனைத்தையு மிங்குக் கேற்றிக்கொள்க. "நல்லா றெனினுங் கொளறீது" என்பவாகலின் இங்ஙனங் கூறப்பட்டது.

[மகிழ்ந்திவர் வழங்கு மாண்ட செல்வத்தை] இவர் மகிழ்ந்து வழங்கும் மாண்ட செல்வத்தை = ஆகிய இவ்வுழவா உள்ளக்களிப்போடு கொடுத்தருளும் மாட்சிமை பொருந்திய தானியச் செல்வத்தை;

புகழ்ந்து பாத்து உண்ணல் புரிவோர் தம்முள் = (நல்லசுவை, வலிமை, முதலியவற்றை இவ்வுணவு உடையதென்று) பாராட்டிக்கூறி (த்தென்புலத்தார் முதலியோர்க்கு) ப்பகுத்து உண்ணுதலைச் செய்துவருகின்ற மக்கள் தங்களுக்குள்ளே;

[சிலரே மூச்சுத் தடைப்படுத்தி முன்னுந ரொன்றை] சிலரே மூச்சு தடைபடுத்தி ஒன்றை முன்னுநா = சிலமக்கள் பிராணாயாமஞ்செய்து தனிமுதற் பொருளாகிய இறைவனை நினைந்து வழிபட்டு வருகின்றனா;

அட்டாங்கயோகத் தொன்றாகிய பிராணாயாம மாவது பிராண வாயுவை அதன் இயல்பிற் செல்லவிடாது இரேசக பூரக கும்பகங்களாற் றடுப்பது.

பிராணவாயு இரு மூக்கானும் ஒவ்வொரு பாரிசத்து ஈரைந்துநாழிகையாகக்கொண்டு ஒரு மாத்திரையில் நூற்றிருபத்தைந்துசுவாசமாய் ஒருசுவாசத்திலே பன்னிரண்டங்குலிப்பிரமாணம் புறப்பட்டு நாலங்குலி தேய்ந்து எண்விரலிலடங்கு மியல்பிற்று. இரேசகமென்பது மூச்சை விடுதல், பூரகமென்பது மூச்சை உட்செலுத்துதல, கும்பகமென்பது அங்ஙனஞ் செலுத்திய மூச்சை நிறுத்துதல். நிறுத்தும் வகை அகற்பம், சகற்பம் எனவிரண்டாகும். மந்திரமில்லாது நிறுத்தல் அகற்ப மெனவும், பிரணவத்துடன் காயத்திரி மந்திரத்தையுமுச்சரித்து நிறுத்தல் சகற்பமெனவும் படும். இவற்றின் விரிவுகளை யெல்லாம் கூர்மபுராணம், சூதசங்கிதை, வாயு சங்கிதை முதலிய நூல்களிலே கண்டு தெளிக.

சிலரே மெய் உணர்வு அளித்து மேம்பட உயர்த்தல் செய் அறன் எ(ல்)லா[illegible]பட செய்ஞுநா = சிலர் உண்மை உணர்ச்சியைக் கொடுத்து (இருமையினும்) மேம்படுமாறு மேலேற்றுதலைச் செய்தற்குக் காரணமாகின்ற தருமங்களெல்லாம் பகுப்புற நூல்களைச் செய்கின்றார்கள்;

திறம் - நூல்; "மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடு", "மெய்த்திறன் வழக்கென விளம்புகின்ற" என்பன மணிமேகலை.

[illegible]றுப்பெற்ற ஆன்மாக்கள் பொய்ப்பொருள் போக்கி மெய்ப்பொருள் [illegible]ண்டு பேரின்ப வீட்டை அடைதலான் அவ்வடைவிற்கேற்குமாறு அறம் படைக்கப்பட்டிருப்பது தோன்ற [illegible] உரைப்பட்டதென்க. அறத்தின் பெருமை, பாகுபாடு முதலியவற்றைத் திருவள்ளு[illegible] [illegible], மிருதி முதலியவற்றிற் பரக்கக் கண்டுகொள்க.

சிலரே நிலன் எ(ல்)லாம் தம் அடி நிழல் உற ஆண்டு பல புகழ் பெறீஇ பசச என்று அமைகுநர் = சிலர் நிலங்களெல்லாவற்றையும் தமது அடி நிழலிலே பொருந்துமாறு ஆட்சி செய்து பலவாகிய கீர்த்திகளைப்பெற்றுப் பசுமையுற்றிருக்கின்றனர்;

பரதன், சிபி, அரிச்சந்திரன், நளன், தருமபுத்திரன், கனனன் முதலியோர் புகழீட்டினமை முதலாய எல்லாவற்றையும் சிந்தித்தறிந்து தெளிக. பாரி, குமணன், கரிக்கால்வளவன் முதலியோரும் அதனுக்குரியராவர்.

சிலரே கொற்றம் காட்டி கொடும் போர் செய்குநர் = சிலர் வீரங்காண்பித்துக் கொடிய போரினைச் செய்து வருகின்றனர்;

புறங்கொடுக்காதவர் என்பார் "கொற்றங் காட்டி" என்றும், சோம்பாது மேன்மேலும் போரையே விரும்புவரென்பார் "கொடும்போர் செய்குநர்" என்றும் கூறினர்.

சிலரே நொடை தொழில் செய்குநர் = சிலர் விற்றற்றொழிலைச் செய்துவருகின்றனர்;

சிலரே ஏவல் செய்குநர் = சிலர் ஏவற்றொழில் செய்துவருகின்றனர்;

இன்ன எவரும் இன்னணம் ஆற்றி இயல்குநர் = இத்தகுதியையுடைய எல்லாரும் இங்ஙனமாகப் புரிந்து வாழ்ந்துவருகின்றனர;

உழுநர் தம்மால் உயிர்வாழ்ந்துவருவாரென்பது தோன்ற "இனன வெவரும்" என்றும், இங்ஙனம் பலதொழில்களாற் பெருமையடைகின்றனர என்பார் "இன்னண மாற்றி யியல்குநர" என்றுங் கூறினர்.

அதனால் = அதுகாரணத்தானே;

உழுதொழில் அவரே உயர்ந்தோர் = உழுதொழிலைச் செய்துவருகின்ற உழவர்களே உயர்ச்சி வாய்ந்தவராவார;

[பழுதுண்டு மற்றைய பணியுடை யவர்க்கே] மற்றைய பணி உடையவாக்கு பழுது உண்டு = வினைத் தொழில்களை உடையவர்கெல்லாம் குற்றமுணடு;

ஆதலின் உழுதொழிலாளரே உயர்ந்தோ ரென்க.

"ஆற்றங் கரையின் மரமு மரசறிய—வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—யேற்ற—முழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லைக கண்டீர்—பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்பது நல்வழி.

---

## (61) கயவர்தம் மியல்பு காண்மி னென்றல்.

ஒருதுறைப் பணிமாட் டுற்றோர் தம்மு
ளழுக்கா றுமுதலதுஞ் சினையென வடைஇப்
பழிபடாஞ் செந்நீர்ப் பதர்பல ரம்மா
கரப்போர் வில்லாக் காண்பி னுளத்தது
நன்னிலை நண்ணிய நலமே லார்சிலரே
யின்னவ ரேற்றக் காறரு ராய
முன்னவர் முதலவர்தம் முறையிருப் புணர்கிலாப்
பின்னவர் தமைக்கூஉய்ப் பேணுதல காட்டி
யன்பமர் காதற் பெருந்தகை யீரும்
மாற்ற லறியா தன்றோன் வெய்துறீஇ
நொய்தி னெய்ச்சொற் கயக்கவிராய் நுவன்று

"காண்பின்காலை" என்றார் புறத்தும்; காண்பின் உள்ளம் என்றதனைக் குறிர்ந்த மனம் என்றுகோடலும் பொருந்தும். நேர்மைபெற்ற மனமாதலின் எல்லாப்பொருளின் உண்மைத் தன்மையையும் காணவல்ல மனம் என்றுரைப்பாருமுளர்; அவ்விரண்டுமே அதனை அறிதற்குச் சாதனமாக நிற்றலின் என்க.

நல் நிலை நண்ணிய நல்லோர் சிலரே—நன்மையமைந்த செய்கைகளின் நிலையிற் பொருந்திநிற்கும் நற்குணமுடையோர் சிலராவர்;

நன்னிலையிலே எப்பொழுதும் நிலைத்திருத்தல் அருமை தோன்ற "நண்ணிய" என்று கூறினர். அழுக்காறு முதலியவற்றை அத்தீயோர்க்கு உறுப்புக்களாகவும், பிறவாகவும் அமைத்தவாறு போல இவர்க்கும் நற்குணநற்செய்கைகளை ஏற்றபெற்றி அமைத்துக்கொள்க. தீயோர் பலராகவும் நல்லோர் சிலராகவும் இருத்தலை "இலர்பல ராகிய காரண நோற்பார்—சிலர்பலர் நோலா தவர்" எனப் பொய்யாமொழியார் கூறியதனாலுணர்ந்து கொள்க.

இன்னவர் ஏற்றத்து ஆற்றார் ஆய முன்னவர் = (நற்குணநற்செய்கைகளையுடைய காரணத்தானே மேம்பாடுற்ற) இவர்தம் பெருமிதத்திற்குப் பொறாதவராகிய அத்தீயோர்;

நன்மையே செய்துவந்த இவர்க்குத் தீமைபுரிந்தழிந்த தூற்றுவர் இத்தீயோர்க்கொப்பாவர். நல்லவர் ஏற்றத்திற்கு மனம் பொறாதிருத்தலையே அழுக்காறென்ப. நல்லாரிழவு காண்டோறும் நனியுவப்பர் என்க.

[முதல்வர்தம் முறையிருப் புணர்கிலாப் பின்னவர் தமைக்கூய்] முதல்வர் தம் இருப்பு முறை உணர்கிலா பின்னவர் த(ம)மை கூய்—அத்தொழிற்றலைவர் (ஆண்டிவரறியாதவண்ணம் மறைந்து) இருக்கின்ற முறைமையை உணராத அந்நல்லோரைக் கூவி அழைத்து;

அத்தீயோர் அம்முதல்வர் இருப்புமுறை இந்நல்லோர் அறியாரென்று அறிந்துகொண்டு கூவியழைத்தாரெனவும், முதல்வர் ஆண்டிருத்தலை அத்தீயோர்தாமும் அறிந்திலரென்று தம்மைக் கருதுமாறு சூழ்ச்சியுஞ் செய்துகொண்டனர் எனவும் குறிப்பித்தற்கு இருப்பு என்றொழியாது "முறையிருப்பு" என்றார். ஈண்டு அம்முறை சிறப்பானமைக்கன்றே இருப்புமுறை என்னாது "முறையிருப்பு" என்று கூறினார் என்க. கூப்பீடு இச்செய்யுளுக்கு நிலைக்களனாயிருத்தலிற் "கூஉய்" என்று அளபெடுத்தது. தலைவர் இருப்பை அத்தீயோர் உணர்ந்துவைத்தும் உணரார்போல உரப்பக் கூவியழைத்தனராகாண் என்றலை அறிவித்தற்கும் அவ்வாறு குறிப்பிட்டார் எனறலும் ஒன்று.

பேணுதல் காட்டி = (உபசரிப்புவழியாகத் தாம் அவரை) விரும்புவதாகக் காண்பித்து;

உள்ளன்பில்லாமை தோன்றக் "காட்டி" என்றார். இவ்வாறு செய்தலை நயவஞ்சக மென்ப. "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்—கடுத்தது காட்டு முகம்" என்ற முதுமொழியைப் பிழைபடச்செய்து வென்றவராகி நெஞ்சங் கடுத்ததை முகத்திற் காட்டாத ஆற்றலர் என்பது போதரப் "பேணுதல் காட்டி" என்றார் என்றுங் கூறலாம். இவ்வுண்மை "முகத்தினினிய நகாஅ வகத்தின்னா—வஞ்சரை யஞ்சப் படும்" என்னுங் குறளாற் புலப்படும்

அன்பு அமர் காதல பெருந்தகையீர் = எம்மேல் அன்புபொருந்திய விருப்பத்தையுடைய பெரியோர்களே;

அன்பு நிலைபெறுதலினருமைதோன்ற "அன்பமர்" என்றும், அவ்வன்பு அமர்ந்தவழியும் கடுஞ்சொல் முதலியன தோன்றப்பெறிற் பயனில்லை யென்பார் "காதல்" என்றும், இவ்வன்புங் காதலுமுடையாரே பெரியராவர் எனபார் "பெருந்தகையீர்" என்றும் கூறினர். இனி ஈண்டுக் குறிப்பிட்ட இன்சொல் இழுக்குத்தரும் என்றறிக. "காதலார் சொல்லுங் கடுஞ்சொல்லுவந்துரைக்கு—மேதிலா ரின்சொல்லிற் றீதுமோ" என்னும் நாலடிச் செய்யுளும் பிறவும் ஈண்டாராயத்தக்கன.

[உம் மாற்ற லறியா தன்ஞேன்] அன்ஞேன் உம் ஆற்றல் அறியாது [illegible] வுடைய ஒருவன் உங்களின் வல்லமை இத்தன்மைத்தென்றறியாது,

களைக் கூப்பிக்கொண்டனர். உண்மையினோக்குங்கால் அவர்க்கு அவ்வாறிய இயற்கை இல்லாமையான் அவர்களின் கைகள் நழுவப்பெறுகின்றன எனவும், அங்ஙனம் நழுவவிடாது நிலைபெறச்செய்துவருகின்றனர் எனவும் குறிப்பித்தற்கு "நிலையுடைக் கையினர்" என்றார்.

நெறி பிறழ் மெய்யினர் = (தமது வசப்பட்டுச் சேராமல்) வழிமாறிச் செல்லுந்தன்மையுடையதுபோல மெய்யினைக் காணபித்த;

இனி அவர் தம்முதல்வரிடத்துக் கூறப்புகுந்த மெய்மை நெறிபிறழ்ந்ததுவாகும் ஆதலாற் கூறற்கண்ணும் மெய்தள்ளாடினர் என்றலும் சாலும்.

நா நடுங்கு உரையினர் = (துக்க நிறைவாலே தாம் கருதியவற்றைக் கூறும் ஆற்றலில்லாத) நாவானது நடுக்கமடைந்தமையாற் பலவற்றையும் நடுங்கிநடுங்கி உரைத்து;

கூறப்புகுந்த கொடுமைக்கிசைந்த வெஞ்சொற்களை உபயோகித்தற்கு நாவானது அஞ்சி நடுக்குற்றது என்றலும் பொருந்தும். புனைந்துகூறும் காரணத்தானும் பழக்கமின்மையானும், உண்மை புலனாகுமோ என்னும் ஐயப்பாட்டினானும் அங்ஙனமாயிற்று என்றலும் சாலும்.

கவிற்கே சாய் = (வெள்ளரைக் கள்ளராக்கற்பொருட்டு) முறையிடுவதற்கே சாய்ந்துக் கேட்கின்ற;

வெள்ளரைக் கள்ளராக்குந்தொழில் கயவர்க்குரியது என்பதைத் "தெரியாதார் சொல்லுந் திறனின்மை தீதாப்-பரியார் பயனின்மை செய்து-பெரியார்சொல்-கொள்ளாது தாந்தம்மைக் காவார் பிறரைக்-கள்ளராச் செய்குறு வார்" என்னும் பழமொழிச்செய்யுள் நன்குவாறு புலப்படுத்தும். "உரையினர்" என முற்கூறப்பட்டமையான் ஈண்டு "கவிற்கு" என்பதனை ஆகு பெயராக்கிப் பொருளுரைத்தாம்.

செவி படைத்து உழற்றும் செயிர் உறு தலைவர் = காதுகளைப் படைத்து (தீயோர்க்கு நலம்புரிந்தும், நல்லோர்க்குத் தீமைபுரிந்தும்) வருத்துகின்ற குற்றமுடைய தலைவர்கள்;

வணக்கத்தை முதலாகவுடைய கள்ளவேடங்களைத் தரித்துக்கொண்டு தமக்குள்ள பணிகளைச் செய்கிலராய்ச் சோம்புற்றுப் பிறரை வீணர்களைக் கூறுவாரை மதித்து வருதலும், முறையாயினவற்றைப் புரிந்துவருவாரை மதியாது வருதலும் தொழிற்றுறைத் தலைமை வகித்தாருட் பெருவழக்கு என்றபடி. "செழுங்கன்னி நிரைசோலைத் தண்டலைநீ ணெறியாரே திருடிக் கொண்டே-யெழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத கள்ளரினி யாரோ வென்றாற்-கொழுங்கள்ளர் தமமுடன்கும் பிடுங்கள்ளர் திருநீறு குழைக்குங்கள்ள-ரழுங்கள்ளர் தொழுங்கள்ள ராசாரக் கள்ளரிவ ரைவராமே" என்னும் பழமொழி விளக்கச் செய்யுளானும் இத்தீயோர் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றனர். செயற்கையாற் செயிருற்றமை தோன்றச் "செயிருறு" என்றார்.

பிறர் மனம் காணகிலா பேதையர் = தமது மனசையன்றிப் பிறர்மனசை உள்ளபடி ஆராயும் திறமையில்லாத மடமைவாய்ந்தவர்;

பிறர்தம் மனசைக் கண்டறிந்துகோடும் ஆற்றலில்லாதிருந்தும், கண்டறிந்தாரேபோன்று நடித்து நல்லோர்க்குப் பல தீங்குகளையும் கூசாமற் புரியும் கொடியோர் என்பது போதரப் "பிறர்மனங் காண்கிலாப் பேதையர்" என்றார். காணுதல் ஈண்டு மனவுணர்ச்சி மாத்திரையாய் நின்றது. அண்மையிற் பின்னின்றார் கூறும் உறுப்பு, அணி முதலியவற்றின் இகழ்ச்சியையும், சேய்மைக்கண் நின்றார்கூறும் குணநடை முதலியவற்றின் இகழ்ச்சியையும், அனைய பிறவற்றினையும் அறிந்துகோடும் ஆற்றல் இல்லாதார் என்றுங் கொள்க.

இவரே = (இத்தகைய இயல்புடைத் தலைவராகிய) இவர்தாம்;

பொருள் பெற்றமையால் பொருளுடையவராயிருத்தலினாலே;

புடை கதுவு எளிஞரை = தம்மருங்கு (கூலிவேலை செய்து உய்ந்துவருகின்ற) எழுமையுடையவரை;

தம்பணித்துறை நிற்பவரன்றித் தமது இல்லச் சார்பினில் வாழும் எளியவரும் அடங்கப் "புடைகதுவு" என்று விசேடித்தார். அத்தலைவர் புடையைச் சார்ந்து தமக்கொரு பற்றுக்கோடு என்று வந்தவர் எனப் போதரற்குக் "கதுவு" என்றார்.

அருள் அற்று ஒறுக்கி அறத்துவேர் களைகுநர் = கிருபை இல்லாமல் வருத்தித் தருமத்தின் மூலமும் கெடும்படி அழிக்கின்றனர்;

"சொற்பெருக்கு வாழ்வுவந்தாற் கண்டெரியா திறுமாந்து துன்பஞ்செய்வர்" என்றபடி. எளியரை அருளொடு பேணிவரும் தன்மையே அறத்தின்வேர் ஆகுமென நீதிநூல்கள் கூறும்.

இனியே = அப்பால்;

விண் கால் நெருப்பு நீர் மண் என்றுங்கு ஐம் பெரும் பூதத்து ஆட்சியும் = ஆகாயம் காற்று, தீ, நீர், மண் என்று சொல்லப்படும் ஐந்து பெரிய பூதங்களைத் தமது விருப்பத்தின்படி ஆளும் ஆட்சியையும்;

பெறறிலா = பெற்றாரில்லை;

அதனால் = அதுகாரணத்தானன்றே;

உலகத்து பலர் இந்நிலவுலகத்தின்மேல் (ஏற்றத்தாழ்வுடன் கூடிய) பல்லோரும்;

பிறங்கி உற்றனர் - விளங்கிப் பொருந்தி வாழ்ந்து வருகின்றனர்;

இத்தலைவர் ஐம்பெரும் பூதங்களையும் ஆட்சிசெய்தாராமாயின் தம்மால் வெறுக்கப்பட்டார்க்கு வருணனே நீர் கொடாதே, காற்றே உயிர்ப்புதவாதே என்றன்னவகை தம்மனம்போனவாறெல்லாம் கட்டளையிட்டு உலகினை நலியவைப்பர் என்றபடி. கடவுள் சீவாதார வஸ்துக்களையெல்லாம் யாவரும் எளிதிற்பெறும்படி அமைத்துவைத்திருத்தல் முன்னரும் விளக்கப்பட்டது. காற்றில்லையேல் ஆவியுமில்லை ஆதலின் அதனை உலகத்தில் எல்லாவிடத்தும், எப்போதும் நிறைந்திருக்கும்வண்ணம் அமைத்திருத்தல்காண்க. நீர் அமைப்பு முதலியனவற்றையும் அவ்வாறே ஆய்ந்துணர்க. அப்பிரதானமாகிய (முக்கியமற்ற) பொருண்முதலியவற்றையே சிலர்க்கு அளித்தும், பலர்க்கு அளிக்காமலும் இறைவன் வருகின்றனன் என்க. தந்தை மக்கள் என்னும் இவர்பாலினும் இதனைக் கண்டறிதல்கூடும்.

---

(62) இதஞ்செயுந் தன்மைய ரெனினு மவர்க்குத்
தேடிவினை செய்த றீயோர்க் கியல்பெனல்.

இரும்புகொடுத் தருநிறைப் பொன்வரிற் பெறுசிலை
விரும்புமணி நீறு முதலமேற் பொருளெனக்
கொண்டுமிகு பொன்னைக் கொடுக்குநரு மிலலை
யின்னண மியல்குவ ரேனைக் கொள்கையர்
தாமுந்த தாமுந் தகைப்பில பழிபுரி
வினைபில புணர்ந்தும் வெளிப்பட் டாங்கு
நாணின்றி யொருவனை நலிகினு நலிகுவர்
பிறர்வினை யிகழ்தலிற் பேறுந் தமசெயல
பிறரிகழ்வு பெறுதலும் பேணாது பிதற்றுவ
ரொருதொடர்ப் பலபொரு ளறறற் றோபா
வுரைபல வுரைத்தாங் குணரா மிலைமையர்
காரண மின்றிப் பற்பல கடாவுவர்
பிறர்நிலை பேணார் பற்பல பிதற்றி
யுறுதுயின் முதல வுழக்கிக் கலக்குவர்

பிறரெடை தமக்குப் பெருந்துன் பெனினு
மரிசாதி வேட்டு மலர்த்துவர் முகத்தைத்
தாய்மொழி பயிலார் தாய்மொழிப் புலமை
யாய்தவர்க கன்புசெய் தாவன புரியார்
மாய்தகை விளைசெய் மாதகட் குதவுவர்
தாயரசு வேட்டுத் தாய்நாட் டிப்பல கூறுவர்
குறிப்புணர் கிலார் கூடார் வரைகடு
வெறுப்புறீஇ எள்ளாற்று வீசுவர் நலிந்து
தொடுபிறப் புணரா ரேதகு குடைவாழ்வு
கனவினு நிலையாக கருதிவீண் முயல்குவர்
மண்ணிடை யியல்வினை மதித்தீண்
டெண்ணுற் றேகா திறந்தவர் பலரே.

---

(இ-ள்.) இரும்பு கொடுத்து அ நிறை பொன் வரில் பெறார் இ(ல்)லை = (தம்மிடத்துள்ள) இரும்பைக்கொடுத்து அதற்றுணையளவு பொன் கிடைக்குமானால் அதனைப்பெற்றுக் கொள்ளாமல் விடுபவர் (இவ்வுலகத்தில்) இல்லை;

இரும்பின் பெறுமதி பொன்விலையில் மிகத்தாழ்ந்தது. உயர்ந்த பொருளுள்ளான் அப்பொருளைக்கொடுத்து இழிந்த பொருள் கொள்ளான். ஒரோவமயம் அருமையாலேனும், ஆவசியகநிமித்தமாகவேனும் இழிந்தபொருள் வேண்டப்படுமிடத்து அங்ஙனம் கொடுத்துமாறுவதற்குச் சம்மதிப்பானாயின் இழிந்த பொருளுள்ளான் அக்கணமே அம்மாற்றலுக்கு உடம்படுவானேயன்றி மறுக்கமாட்டான் என்றபடி.

"பொன்பெற் றிந்நிறை யிரும்புகொடா ரில்லை" என்று கூறப்படிற் பொருந்தாதோ வெனிற், பொன்னைப் பெறுதற்குக்காரணமாவது இரும்பாதலினானும், உயர்ந்தபொருளை இழிந்தபொருளுக்காக இழக்காமல் இழிந்தபொருளை உயர்ந்தபொருளுக்காக இழத்தல் வழக்கமாதலினானும், இவ்வழக்கத்தையே எண்டுத்துக் கூறற்குற்றமையானும், கையிலுள்ளது இரும்பும் மனமில் விரும்பியது பொன்னும் ஆதலினாலும் பிறவாற்றானும் பொருந்தாதென்க.

விரும்பு மணி நீறு முதல — (சைவர்கள் எவற்றினும் மேம்பட்ட பொருள்களென்று) பேணிவருகின்ற உருத்திராக்கமணி விபூதி முதலியவற்றை;

வில்வம், தும்பைமலர் என்னும் இத்தொடக்கத்தனவும் அடங்குவதற்கு "முதல" என்றார். உருத்திராக்க விபூதிகளிற் சிரத்தையும், அன்பும் வேண்டுமென்பார் "விரும்புமணி நீறு" என்றார். "விரும்பு நீறுமணி" எனற்பாலதால் அசைவேலாசை பிறவாது. மணியும், நீறும் சிறப்பால் ஒற்றுமையுடையவேனும் பூண்டமணியை நெடுநாளும் பூண்டுவருதல் சாலும் என்னும் இயைபுபற்றி அங்ஙனம் கூறினார் என்றலுமாம். இனி விரும்புகின்ற அணியையுடைய நீறு எனப்பொருள்கூறினும் இழுக்காது. ஈண்டு அணியென்பது உடலுக்கும், உயிர்க்கும் அலங்காரஞ்செய்வது. அச்செய்தலைத் திருநீற்றுப்பதிகம் முதலியவற்றான் உணர்க. மணி நீறு முதலியவற்றை விரும்புகின்றவர் சைவரேயாதலின் அங்ஙனம் அடைபுணர்த்தி உரைத்தாம். பிணிநீக்குதல், ஆற்றலளித்தல் முதலிய பயன்கருதிப் பிறரும் விரும்புவர் என்க.

மேல் பொருள் என கொண்டு = (வாய்மாத்திரையான் உயர்ந்தவெனக் கூறிவருகின்ற அவற்றைச் செய்கைமாத்திரையானும்) மேலாகிய பொருள் என்றுகருதிக் கைக்கொண்டு;

"விரும்புமணி நீறு" என்றதனானே அவற்றின் மேன்மை பெறப்பட்டிருத்தலின் ஈண்டு "மேற்பொருள்" என்றதற்கு இங்ஙனம் பொருள் உரைக்கப்பட்டது. [illegible]

கொண்டு பொன்னைக் கொடுக்கின்றவருமில்லை என்ற பொருள்கூறப்படின் "அவர்தொடுக்கும் மணிமுதலியவற்றைத் தாம் பெற்றுக்கொண்டு அவற்றிற்கு மாறாக" என இசையெச்சங்கள் பல வருவித்துரைக்க நேரிடுமாதலினாலும், கூறியது கூறலாகுமாதலினாலும் குற்றமாகும் எனக.

மிகு பொன்னை கொடுக்குநரும் இல்லை — எற்றமிகுந்த பொன்னை (அக்கொண்டவற்றிற்கு மாறாகக்) கொடுக்கின்றவரும் இல்லை;

"மிகு" என்றதற்கு அளவின்மிகுதாதவென்று பொருள்கோடல் பொருந்தாது; என்னை? அளவிறப் பன்னூறுமடங்கு குறைவாகவேனும் கொடுக்குமவருக்காறின்மை ஆமாயின என்க. விபூதிமணிகளோ அரிந்தமாகநிலையின் எல்லாச் செல்வமும் பயக்குமென்றலின் அவற்றைப் பெறுதற்குத் தகுதியுடைத்தல்ல பொருள்களுள் யாதொரு சைவமும் கொடுத்து வாங்கலவேண்டு மென்க.

[நன்னனையியல்குல வேட்பாக கொள்கையர்] ... நாம் வினை கொள்கையர் இயல்குவர் இயவாறாகவே வினைய மததனரும் ஒழுகுவாகர;

வயும், உம்மும் தொக்கன. பிறமதத்திற்குரிய சின்னங்களை யெடுத்துக்கூறுமன் மணியையும், நீற்றையும் கூறியதானும், வினைகொள்கையர் என்றமையானும் இந்நூலாசிரியர் சைவ மதத்தில் அன்புடையார் என்பதையும்; கடவுள் வாழ்த்தைப் பொதுப்பட வள்ளுவனார்போன்று கூறினமையால் தெய்வமிகழுவகுறை இவரிடத்தில் இல்லையென்பதையும் புலப்படுத்தினாராயிற்று.

தமரும் தாமும் தகை இல் பழி புரி = தமக்குச் சுற்றமானவரும், தாமும் தகுதியில்லாத பாவங்களைச் செய்துவருவர்;

பாவம் என்பது புரிந்தவர் அறிதற்கு அமையும்பாலதும், அறிதற்கு அமையாப்பாலதும் என இருவகைப்படும். கட்குடித்தல், பரத்தையர் சார்பு போல்வன அறியற்பாலன. அந்தணர் அந்தராகத்திற் புலாலுணல், இராசதத்தும் வதம் போல்வன அறிதற்கமையாப்பாலன. வேறு வகையுமுண்டு. இவற்றைப் புலப்படுத்தல்வேண்டிப் "பழிபுரி" எனவொழியாது "தகையில் பழிபுரி" என்று கூறினர். யாவு புரியுமிடத்துத் தமரேனும் தாம் விளங்கத் தோன்றுதலும், தாட்டுபுரியுமிடத்து அவர்கள் அடங்கித் தோன்றுதலும் வழக்கம். பழிபுரிவினையை யெடுத்துக் கூறினமையான் "தமரும் தாமும்" என்றார். தாம் புரிபழியை மறைத்தற்கு உபகாரமாயிருப்பவர் தமராதலின் அவரை முற்கூறினார்.

வினை இயல்பு உணர்ந்தும் = தொழிலின் இயற்கையை உணர்ந்துவைத்தும்;

எல்லாரும் பாவம்புரிந்துவருவோர் என்பதைத் தாமும், தமரும் உணர்ந்தவர் என்றபடி. மக்களிற் பெரும்பாலோர் தங்கள் செய்கைகளுட் பிறரறிந்தால் கொடுந்தண்டத்தை விளைவிக்கக் கூடிய அத்தனைத் தீச்செயல்களைச் செய்தும், பெரிதும் நினைத்தும் இயலாமைகாரணமாக மறைத்தும் வருவர். அவற்றைச் சொல்லாலும், செயலாலும் பிறர்க்குப் புலனாகாது மறைத்தவரை நல்லவராக மதித்தும்; ஆக்குவோரைத் தீயவராக இகழ்ந்தும் வருகின்றனர் மக்கள் எனக. சுற்றத்தாற் சூழப்படாதவர் செய்கை வெளிப்படின் அவர்க்குத் தண்டம் பயத்தலுமுண்டு. சுற்றஞ் சூழ்ந்திருப்பின் எத்தகைய கொடுஞ்செயல்களும் மறைந்தொழிதலும் கூடும் என்பவும் பிறவும் உணர்த்தப்பட்டன.

வெளிப்பட்டாங்கு ஒருவனை நாண் இன்றி நலிகினும் நலிகுவர் = (தமர்முதலிய சுற்றம் சூழப்பெறாதான் புரிந்த இழிவுடைச் செய்கை) வெளிப்பட்டபோழ்து வெட்கமின்றி அவ்வொருவனை வருத்தினாலும் வருத்துவர்.

ஆங்கு—காலத்தின்கண் வந்தது; இடத்தையும் குறிக்கும். பிரத்தியக்கமாயவிடத்துத் தீமைபுரிந்தான் தம்மவனாயினும் ஆண்டு நலிகினும் நலிகுவர் என்றும் கூறிக்கொள்க. நினைத்த போழ்தினும், செய்த போழ்தினும் அறிந்துகொள்ளும் ஆற்றலில்லாதவர் என்பார் "வெளிப் பட்டாங்கு" என்றார். இதுகருதியன்றே ஓரோவிடத்துச் செய்தபொழுது கண்டுகொள்வதைக் குறிப்பாற் கொள்ளவைத்தார், அன்றியும் வெளிப்பட்டாலும் தம்மவர்க்குப் பெருமையொழிப

பதாய் அச்செய்கை இருக்கப்பெறின் இயன்றவரையில் மறைப்பரெனவும், கடந்து பிறர் அறியின் ஒறுக்கத் தொடங்குவர் எனவும் குறிப்பித்தற்பொருட்டு அங்ஙனங்கூறினருமாம். இவற்றாற் பழியுடையார் காவுநுணுக்கமும் புலப்படுத்தப்பட்டது. தமது பெருமைக்கு அவனை ஒறுப்பது குறைவாகுமேல இகழ்ந்தாதல், வாளாவாதல் விட்டுவிடுவர் என்பது போதர "நலிகினு நலிகுவர்" என்றார். இடம்வாய்க்கிற் கொலையும் புரிவர் என்க. "நாணிலா மன்ற பொய்மொழிக் தனரே" என்னுமிதனை "நாணின்றி" என்னுமிதற்கு ஒப்பிட்டுரைத்ததாகக்கொள்க.

பிறர் வினை இகழ்தலில் = தமக்குப் புறம்பாயினரது, செய்கையை இழிவுடைத்தென்று தாம் இகழ்ந்து வருதலைப்போலவே;

பேணும் தம செயல = (எல்லாரும் நன்கு மதித்தல் வேண்டுமென்று) விரும்புகின்ற தம்முடையவாகிய செய்கைகளை;

"தம" என்றமைமோகசிச செயலின் பொருள்களைப் பன்மையாக்கினும.

பிறா இகழ்வு பெறுதலும் பேணுது பிகாறவா பிறர் இகழ்ந்து கூறும் இகழ்ச்சியைத் தாம் பெறுவது திண்ணமாகுதலையும் கருதாது பிதற்றிவருவார;

பிறர் வினையெல்லாம இழிவுடைய தமமுடையவே உயாவுடைய என்று கூறி வருவாரை நோக்கிக் கூறியபடி. தற்புகழ்ச்சியாதலிற கூடாதெனக. தம்முடையவற்றிற்கும், பிறருடையவற்றிற்கும உள்ள வேற்றுமையை உலகம கணடு மதிக்குமென்று கூறினாராயிறறு. தம் செயல்கள் மதிக்கப்படுதற்குப் பிறா செயல்களை இகழ்தல வேண்டுமென்று கருதி முயல்குநா என்பார் "பிறர்வினை யிகழ்தலின்" என்றா. இக்கருத்தைப் "பேணுந தமசெயல பிறரிகழ்வு பெறுதலும" என்றது வலியுறுத்தாநிறகும. உணமையாகவே பிறா செயல்கள் தாழ்ந்தனவாகவும், தமமுடைய உயாந்தவாகவும இருப்பினும் மேறகூறிய செய்கையுடையாரதம் செய்கை ஏற்றம்பொருநதா என்றும குறிப்பித்தாா என்க.

ஒரு தொடா பல பொருள் அற்று அற்று ஒயா உரை பல உரைத்து = ஒருதொடர்ச்சியாகப் பேசப்பட்டுவரும் அப்பேசசினுள்ளே சம்பநதமில்லாத பலவிஷயங்கள் அறறுப்போனாலும் முடிவுபெறாது செல்லுகின்ற உரைபலவற்றை உரைத்து;

ஒரு விஷயத்திற்கு ஒரு தொடாசசி உண்டென்பாா "ஒருதொடா" என்றும், ஒரு விஷயத்திற்குரிய ஒருதொடாசசியிலே பலவிஷயங்களையும் பேசிவருபவா என்பாா "பலபொருள்" என்றும், அப்பலபொருள்களுள்ளும் ஒருபொருளேனும் முற்றுப்பெறாது கெட்டொழியு மென்பார் "அறறற்று" என்றும, முடிவுபெறாதபோது பேசசினை நிறுததவேண்டியதுவே முறையாகவும் நிறுத்தாது பேசிககொணடே செலபவர் என்பார் "ஒயா" என்றும், பொருளில்லாத சொற்கூட்டமே அவரது உரைககூட்டம் எனபார் "உரைபல வுரைதது" என்றும் கூறினர். சொல்லமைதியும், சொறறொடரமைதியும், பொருளமைதியும் அவரது பேச்சில் இல்லையென்று குறிப்பித்தற்கன்றே பலவுரைத்து என்னாராய் "உரைபல வுரைத்து" என்றனர். மடியுடையோர் பலர்கூடிக்கொண்டு அறுகிபொறாத பலப்பல பயனில்லாத விஷயங்களை மிக அன்போடு பேசியும், கேட்டும வீண்பொழுது போக்குவர். இவ்வழக்கத்தை யாணடும பரக்கக் காணலாம. இவ்வாறு செய்துவருதலாற் சிறபபொடு சீரமையும் நீங்கப்பெற்று நயனும் நண்பும் நனியழியப்பெறும் என்பது சான்றோா கொள்கை. "பயனில்சொல் பாராட்டு வானை மகனெனன்—மக்கட் பதடி யெனல்" என்பது தமிழ்மறை.

ஆங்கு—அசை.

உணரா நிலைமையர் = (அக்கூறியவற்றானே நிகழப்பெறும் பயனை இஃதென) உணர்ந்து நோக்கும் நிலைமையில்லாதவர்;

உணர்ச்சிபெற்ற பொழுது தாம் வீண்பொழுது கழித்துவிட்டோமே என்றிரங்குவர் என்க. தமக்குவரும் கேட்டை உணராத நிலைமையர் என்பார் "உணரா நிலைமையர்" என்றார். ஆணவ முதலாய மாயையிலே சம்பந்தப்பட்ட அறிவுடையவரே உணரா நிலைமையர் என்க.

காரண மின்றி பல் பல கடாவுவர் = (ஒரு காரியத்தையேனும் கருதிநிற்கும்) காரணம் சிறிதுமின்றிப் பலப்பல வினாக்களை வினவிவருவர்;

ஐயன்மீர்! தாங்கள் எவ்வூரினர், எக்காரியத்தை முன்னிட்டு இங்கே வந்தீர்கள், யாரிடத் திற்குவந்தீர்கள், வந்து எத்துணை நாட்களாயின, எப்பொழுது ஊருக்குத் திரும்புவீர்கள் என்று இத்தகைய வினாக்கள் பலவற்றையும் ஒருதொடர்புமில்லாத ஒரு நொதுமலாளரிடம் வினவுவர் என்க. வினவப்படுவோர்க்குப் பல காரியங்களும் உள்ளன என்றும், வினவுவோர்க்கு ஒரு காரிய மும் சிறிதும் இல்லையென்றும் குறிப்பித்தற்காகக் "காரண மின்றிப் பற்பல கடாவுவர்" என் ருர். இஃதெங்ஙனம் பெறப்படுமெனிற் காரணமில்லாதவர் வினவுவராயபொழுது வினவப் படுவோர்க்குப் பலகாரியமும் உளவென்பது தானே பெறப்படுமென்க. ஒரு தொழிலுமின்றிச் சோம்பித் திரிவாரே இங்ஙனமெல்லாம் வினவிவருவா என்றபடி. இனித் தமக்குவேண்டிய காரியத்துக்குரிய காரணமின்றிப் பலப்பல வினவுவாருமாம். பாகநுவெற்றிலையை ஒருவ னிடமிருந்து பெறவிழைந்தார் அவனை முற்கூறியவாறெல்லாம் முதற்கண் வினவுவர் என் றலுமாம்.

பிறர் நிலை பேணுர் = பிறர்தம் மனோநிலைமை, சரீரநிலைமை என்பனவற்றைக் கருதாத வராகி;

தம்மனசின்கண்ணே விழையப்பட்டவற்றை உடனேபெற்றுவிடுதல்வேண்டும் என்னும் நோக்கமேலீட்டாற் பிறர்தம் நிலைமையை நோக்கி அவரை விட்டுவிடாது நெருக்கிக் கேட்பர் என்பது போதரலிற் "பேணுர்" என்பதற்குக் கருதார் என்று பொருளுரைக்கப்பட்டது.

பல் பல பிதற்றி = பலப்பலவாகிய வினாக்களை (ப் பைத்தியகாரன் உழறுவதுபோல) வினவி

வினவி என்னுது பிதற்றியென்ருர், பயன்பெருமையின் என்க.

உறு துயில் முதல = பொருந்திவருகின்ற நித்திரையை முதலாக உடையவற்றை;

உழக்கி கலக்குவர் = கெடுத்து (அவர்பெறும் நன்னிலைமையை) ப் பழுதுபடுத்துவா;

தம் மனவேட்கையைப் பூர்த்தி செய்துகொளளும்பொருட்டுப் பிறர் நித்திரைசெய்தன் முதலியவற்ருற் பெறக்கூடிய சுகங்களைப் பெறவிடாது கெடுப்பர் என்றபடி.

பிறர் எடை தமக்கு பெரும் துன்பு எனினும் = (தம்முடைய பொருளைப்) பிறரெடுத்துக் கொள்வது தமக்குப் பெருந்துன்பமாய் முடிவதொன்ருய் இருபபினும்;

தம்பொருளைத் தமது உததரவின்றிப் பிறர் எடுத்தலும், உத்தரவுபெற்றும் தமது மன வன்மதியைக் குறிக்கொளளாமல் எடுத்தலும், பிறர்க்குரியதாய்த் தம்மிடம் வைக்கப்பட்டிருந்த பொருளை அங்ஙனமே எடுத்தலும், பிறர்பொருளைப் பலகாரணங்கொண்டு தாம் எடுத்தலும் எனப் பலபடி கொண்மார் "பிறரெடை" என்று கூறினர். இப்பிரிவெல்லாம் விரிக்கிற் பெருகும்.

[மரிசாதி வேட்டு மலர்த்துவர் முகத்தை] மரிசாதி வேட்டு முகத்தை மலர்த்துவர் = நீதி வழியிலே நிற்றலை விரும்பி முகத்தை மலர்த்திக்கொள்வர்;

மரிசாதி—நீதி; "மரிசாதி யாயிருந்து மனறஞ்சு வாாக்கு" என்பர் முன்றுறையனுரும். முகமலரப்பெறுதல் நீதிவழி நிற்றற்பொருட்டாதலின் "மரிசாதி" என்றும், அவர்தம்மை விரும் பாது நீதிவழியையே விரும்பினராதலின் "வேட்டு" என்றும், அவவிருப்பத்தான் மலர்ச்சியுண் டாயதன்றி அவர்பொருட்டு அன்ருதலின் "மலர்த்துவர்" எனறும், அம்மலர்ச்சியை அவர் தமக்கே காட்டவேண்டியது உலகநீதி ஆதலின் "முகத்தை" என்றும் கூறினர். இவற்ருன் முகத்தை மலர்த்துவர் என்னுமிருசொற்களையும் மாற்றியாத்தமைக்குக் காரணமும் புலனகிய வாறு தெளிக. உண்மகிழ்ச்சி இல்லையெனபது போதா "மலர்த்துவர் முகத்தை" என்ருருமாம்.

தாய்மொழி பயிலார் = தாய் மொழியாகிய தமிழ்ப் பாஷையைக் கற்றுப் புலமையை நிரப்பிக்கொள்ளாரும்;

பிற மொழியைப் பயின்றவருவர் என்றபடி. மேம்பட்டுத் தோன்றுவதற்கும், அரசாங் கத்து [illegible] ஏத்துக்கூறி வாதாடி நிறைவு பெறுதற்கும்

…வற்றிற்கும் தாய்மொழிப்பயிற்சி ஆவசியகம் வேண்டுமென்பார் "தாய்மொழி பயின்றார்" என்றார். தமிழ்மொழிப் பயிற்சியாற் பண்டைய வழக்கவழக்கங்களும், பெரியோர் கட்டி வைத்த நீதிசாஸ்திரங்களும் கைவரப்பெற்று வாதில்லாரும் விஷயத்தை வலியுறுத்துமாற்றல் நன்களையுமென்க.

தாய்மொழி புலமை ஆய் தவர்க்கு = தாய்மொழிப் புலமையைக் கற்றலையே தமது பெரும் பேறாகக்கொண்டு ஆராய்ந்துவரும் அரிய தவத்தினையுடையார்க்கு;

தவசிகள் தவத்தினைப் போற்றிவருதல் போன்று இவரும் தமிழ் ஆராய்ச்சியைப் போற்றிவருகின்றனர் என்க. தாய்மொழிப் புலமையை ஆராய்தலே தமிழர்தம் கருமமாதலினாலும்; ஆடம்பரம், செல்வமாதியவற்றைப் பெறவான்விழைந்து தாய்மொழியைப் பயிலாது பிறமொழிகளைப் பெரும்பான்மையோர் பயின்றுவருகின்றனர் ஆதலினாலும்; ஆடம்பரத்தையும், செல்வ முதலியவற்றையும் ஒரு பொருளெனக்கருதி மயங்காதவரே தாய்மொழியை ஆராய்தலிற் புகுவார் ஆதலினானும் பிறவாற்றானும் "தாய்மொழிப் புலமை யாய்தவர்க்கு" என்றார். ஆடம்பரமுதலியவற்றை நீக்கியவர் ஞானம்பூண்டு தமிழ்மொழியை வளர்த்தற்கு ஒருப்பட்டது மிக்கதோர் அருமைத்தாகும் என்பார் "ஆய்தவர்க்கு" என்றார்.

[அன்புசெய் தாவன புரியார்] ஆவன அன்பு செய்து புரியார் = வேண்டியவற்றை அன்புடைத்துச் செய்யாதாரும்;

வேண்டியவற்றைப் புரிதற்கு அன்புடையராய் இருக்கல்வேண்டுமாதலின் "அன்பு செய்து" என்றதனை "ஆவன" என்றதற்கு முன்வைத்து யாத்தனர். அவர்தம் குடும்பக் காப்பிற்கு உரியனவும்; ஆராய்ச்சிக்கு இன்றியமையாதனவும்; ஆய்ந்தவற்றைத் தமரும், பிறரும் அறிந்துவக்குமாறு செய்தற்குரியனவும் இன்னபிறவுமே அவர்தமக்கு ஆவனவாம். இனி "அன்புசெய் தாவன புரியார்" என்றதற்குக் காரணகாரிய முறைப்படியே அமைந்தபொருளாக இருக்கவும், இங்ஙனம் மாற்றிப் பொருள்கோடற்கிருந்த காரணமென்னையோவெனின், அன்பானது செய்கைவழியாகவே வரப்பெறுமாதலின் என்க. "ஆற்ற—வறஞ்செய் தருளுடையராகுமின்", "ஆற்றவுங் கற்றார் அறிவுடையார்" எனனும் பாக்களையும், "அறிவினை யுடையராவார் மிகவும் கற்றார்" என்னும் உரைநடையையும் ஆதாரமாகக்கொண்டு "அன்புசெய் தாவன புரியார்" என்றதை வலியுறுத்தினும் இழுக்காது.

மாய் தகை வினை செய் மாக்கட்கு உதவுவார் = கெடுக்கின்ற தகுதியையுடைய தொழில்களை வஞ்சமாகச் செய்துவருகின்ற சனங்களுக்கு (அவர்கள் வேண்டியவற்றையெல்லாம் வேண்டியவாறே) கொடுப்பவரும்;

ஆகிய இவர்தாம்.

மாய்தகை வினையாவது தேயம், பாஷை, நாகரீகம், மரபு, மேன்மை என்பனவற்றையெல்லாம் கெடுத்து அடிமையாக்குதற்குரிய சூழ்ச்சி. நேரே தீமை புரிவாரை ஒறுப்பரேயன்றி அவர்தமக்கு ஒன்றுங்கொடார் ஆதலின் "செய" என்றதற்கு "வஞ்சமாக" என்னும் அடை புணர்த்திக் கூறினேம். நன்மை புரிவார்போலக் காட்டித் தீமைபுரிவார் என்க. கெடுக்க நிற்றல் வேண்டி அங்ஙனம் புரிகின்றார் இவர்க்கு வன்மையில்லாமையின் எனக. இவர்தம் உதவியைப் பெற்றுக்கொண்டும் தீமைபுரிந்துவருதலின் மக்கள் என்னாது மாக்கள் என்றார். "தவஞ்செய் மாக்கள்" என்பது பாட்டு. விசேடவுரையையும் நோக்குக. "மாவு மாக்களு மையறி வினவே" என்பது தொல்காப்பியம். மாக்கள் எனப்படுவார் மனவுணர்ச்சி இல்லாதவர். "வணிக மாக்களை யொத்ததவ் வாரியே" என்பது இராமசரிதை. நலவணிகரைப்போலப் பொருள்களைச் சேமஞ்செய்யாதாரைப் பொருள்களை வீணே கடலிற்கொண்டுசேர்க்கும் வாரிக்கு ஒப்பாக்கினார் கம்பரும்.

தம் அரசு வேட்டு தாஅய் பல கூறுவர் = தம்மாட்சியைப் பெறவேண்டுமென்று விரும்பித் தாவிக்குதித்துப் பல நியாயங்களையும் எடுத்துப்பேசுவர்;

கேட்டார்க்குரியாரும் பயனும் இல்லை என்பது தோன்றக் "கூறுவர்" என்றார்.

தமிழ்நாட்டாருட் பற்பலர் இசைக்காரருக்கும், உழறுபடைப் பாகவதர்களுக்கும், கூத்தர் கூத்தியர் தமக்கும் இன்னபிறர்தமக்கும் தமதுபொருளை ஏராளமாக வழங்கியும்; தமிழ்ப்புலவரை இகழ்ந்தொறுத்தும் வருகின்றனர். கற்றாருள்ளும் பிறமொழிக்கு ஈடுபட்டு உழல்கின்றார் பெரும்பாலர் என்ப. ஆகவே இனனோர்தமக்குச் சுயவரசாட்சி கிடைக்கப்பெறின் நமது நாட்டுக்கு விளையக்கூடிய பயன் எத்தகைத்து என்பது ஆராயற்பாலது. செய்துகொள்ள வேண்டியவற்றைச் சீருறச் செய்துகொள்ளாது தாவிக்கூறுதலைக் குறிப்பித்தற்குத் "தாஅய்" என்றனபெடுத்தது.

குறிப்பு உணாகில்லார் கூடு உயர்வு உரைத்து = (ஒருவாக்குத் தங்கூற்றின்மேல் விருப்ப மூண்டோ இல்லையோ என்றுணர்ந்து கேட்குந் தகுதியுடையார்க்கு உரைத்தலும் இல்லார்க்கு வாளாவிடுத்தலு மாகிய) குறிப்பினை உணராதவராய மிக்கவுயர்ந்த விடயத்தை அவர்க்கு எடுத்துரைத்து;

"கேட்பாரை நாடிக் கிளத்தப் படுமபொருட்கண்—வேட்கை யறிந்துரைப்பார் வித்தகர்" என்பது முன்றுறையரை பாட்டு. இப்பாட்டின் விசேடவுரையினையும் நோக்கியறிக. கால தேச வர்த்தமானங்களை அறிந்துரைத்தல்வேண்டும் என்றபடி. "குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில—வேண்டுப வேட்பச் சொலல்" என்பது தமிழ்மறை. "என்குறைநீ வயவேந்தற் கியம்புதியேல் வடங்கிடந்து—பொன்பிதிர்மின் சுணங்காந்த பொம்மலிள முலையினாய—வன் புறுநல் லமயமதி லறையற்க வறைகுதியே—னனகுறைதீங் காமவாபா னட்புற்ற தன்மையினால்", "வேற்றரசர் திறைகொணரும் வேலையினுஞ் சொல்லற்க—மாற்றரசர் பால்வெகுளு மமயத்தும் வகுத்துரையேல்—தேற்றமுடை மகிவல்லோர் தேர்ச்சியிலுந் தெரிந்துரையேல்—சாற்றிலுரைத் தனவெல்லாந் தவறாகு மறிகுதியே", "பொறிசெறித்த மாண்பினராய்ப் பொருந் தலாசசெற றிருந்தியஎ—செறிதருமா ரீட்டியரு வினைவாங்கு செயலினரு—முறுபிழையுட் சிறிதுயற்றி னுறுகிடுவா வயவேந்த—ராறுதிபெற நீமொழியு மமயமறிந் துரைத்தியால்", "உளக் தனவாய் முகத்தனவா யுரிக்குமவை குறிப்பினுற்- றெளிந்துரைத்தல் சீரமைத்து" என்பன நைடதப்பாக்கள். எாபனவற்றைப் பொருத்தியுரைத்துக் கொள்க.

[வெறுப்புறீஇ நலனற்று வீகுநா நலிந்து] வெறுப்பு உறீஇ நலன் அறறு நலிந்து வீகுநர் = (இவ்வரிய விடயத்தை அவர் கேட்டிலரே என்று) வெறுப்புற்று (அவ்விடயக்கா லடையப் புகுந்த) நன்மைகெட்டுத் தம்மைத் தாமே நலிந்துகொண்டு அழிவர்;

வேலைக்காரன் தான்செய்த காரியங்களைக் கூறுதலும், அன்னபிறவும் ஈண்டடங்கும். குறிப்புணராமல் உரைத்த தம்மையே வெறுத்துக்கொள்ளாமல் அவரை வெறுத்தமை தோன்ற "உறீஇ" என்றனபெடுத்தது. நலனறுதலே அவர்தம் அழிவிற்குக் காரணமாதலின் நலிந்து வீகுனர் என்னாது "வீகுநா நலிந்து" என்றார். அங்ஙனமாயின் "நலிந்து" என்பது மிகையோ வெனின் அற்றன்று, அம்மட்டோடமையாமல் தம்மையும் நலிந்துகொள்கின்றனர் என்று அவரது அறியாமையைப் புலப்படுத்தி நிற்றலின் என்க. "எண்ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ" என்னும் இராமாயணப்பாட்டும இக்கருத்தேபற்றி எழுந்தது.

நொடி இருப்பு உணரா நோதக்க உடலவாழ்வு = நொடிப்பொழுதேனும் இருக்கல் கூடுமோவென்னும் இருப்பினை உணரப்படாத வருந்தத்தக்க உடலோடு கூடிவாழும் வாழ்க்கையை;

"நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வ—நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரி—லெழுத்தாகு யாக்கை" என்பது நீதிநெறிவிளக்கம்; "நிலையாமை சால நிலைபெற்ற தன்றே" என்பது சூளாமணி; "மின்னொக்கும் வாணாள்" என்பது பாரதம்; "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்—பெருமை யுடைத்திவ் வுலகு" என்பது குறள்; "புனலுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி" என்பது நாலடி, யாக்கை நிலையாமை ஒன்றே கூறப்படினும் இளமை, செல்வம் முதலியவற்றின் நிலையாமையையுங் கொள்க.

கல்லினும் நிலையா கருதி வீண் முயல்குவர் = கல்லைக் காட்டினும் நிலைமையுடையதுவாக நினைத்து (அறமுதலாகியவற்றிற்கு ஏதுவாகக் காரியங்களைப் பெறும்பொருட்டுச் செய்யப்படுஞ் செய்கைகளை அவற்றிற்கு மாறானவற்றை) வீணே முயன்றுவருகின்றனர்;

“கற்போற் பிரியல மென்றசொல்” என்பது அகம். அறமுதலாயவற்றைப் பயத்தலின்மையின் வீண்முயற்சியென்று கூறப்பட்டது. ஈண்டு “வீண்” என்பது ஆகுபெயர். கல்லே ஆகுபெயராக்குதலுமொன்று.

மண் இடை இயல் இவை மதித்து = உலகத்தின்கண்ணே நடைபெறும் இவற்றையெல்லாம் வரையறுத்து;

[ஈண் டெண்ணுற் றேகா திறந்தவர் பலரே] எண்ணுற்று ஏகாது ஈண்டு இறந்தவர் பலர் = ஆராய்ச்சிசெய்து (அவற்றிற்கேற்ப ஒழுகி முத்திமுதலாகிய பதவிகளுக்குச்) செல்லாது (நரகம்முதலியவற்றிற்குச் செல்லும்பொருட்டு) இவ்வுலகில் இறந்தவர் பலராவர்;

அறமுதலாயவற்றிற்கு ஏற்பனவற்றையே செய்வதாக வரையறுத்துக் கோடல்வேண்டும். அவ்வாறு வரையறுத்துச் செய்துகோடற்பொருட்டே மக்கட்பிறப்பினை எடுத்தனராதலின் “மண்ணிடை” என்றும், இவ்வுலகத்திற் பிறந்தார்க்குச் சுபாவமான செய்கை பாவகாரிய முயற்சியே என்பதுபோதர “இயலிவை” என்றும்; இவையும், புண்ணிய காரியமுயற்சியும் மனுமுதலாய நூல்களில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றனவாதலின் அவற்றுட் செய்யென விதிக்கப்பட்டவற்றைச் செய்தற்கும், ஒழியென விலக்கப்பட்டனவற்றை ஒழித்தற்கும் நிர்ணயஞ் செய்துகோடல்வேண்டும் என்பார் “மதித்து” என்றும்; நிர்ணயஞ் செய்துகொண்டபின்னர் மனசுபொருந்துமாறு ஆராய்தலும், தவறாதுசெய்தலும் வேண்டும் என்பார் “எண்ணுற்று” என்றும், அவ்வாறு எண்ணுற்றுச் செய்தாரே முத்திமுதலாகிய பதவிகளையும், செய்யாதாரே நரகு முதலியவற்றையும் எய்துவர் என்பார் “ஏகா திறந்தவர்” என்றும்; இவ்வாறு முயலாது கெட்டவர் சிலர் அல்லர் என்பார் “பலர்” என்றுங் கூறினார்.

எண்ணுற்று என்பது ஏகாது என்பதன் முதனிலையோடு முடிந்தது. எண்ணுற்றுச் செய்தார் முத்திமுதலியவற்றையே எய்துவராதலின் அங்ஙனம் பொருளுரைக்கப்பட்டது.

---

இரண்டாவது இயலாகிய பொருணெறியியல் நிறைவேறியது.

# இன்பநெறியியல்.

(உரையாசிரியர் குறிப்பு)

அறம் பொருளிரண்டினையும் அறுபானிரண்டு கவிகளால் விளக்கிய இந்நூலாசிரியர் மேலுந் தொன்முறை தழீஇ நாலிரு கவிகளில் இன்பநெறியியலைக் கூற எடுத்துக்கொண்டனர். இவ்வியல் இளம்மாணவர்கட்கியையாது காமவுணர்ச்சி பூத்த பருவத்தினர்க்கே உரியதாகும். அன்னவர் தாமும் எழுத்துஞ் சொல்லுமாய்ந்து வல்லுநராயபின் தக்க குரவர் முன்னிலையில் பொருளதிகாரத்தை ஐயவிபரீதமறக் கற்றாய்ந்து தெளிந்துகொண்டாலன்றி இன்பவியற் பகுதியின் நுட்ப திட்பங்களை விளங்கிக்கோடமாட்டார். தற்காலத்து நந்தமிழ் மாணவருட் பல்லோர் ஆங்கிலமொழிப்பயிற்சி வாசனையாலும், அம்மொழியாளர்தம் கூட்டுறவினாலும் அவர்க்குரிய பழக்க வழக்க வொழுக்கங்களில் அநாகரீகமாகிய பலவற்றை நாகரீகமானவையென்று மயங்கிக் கையாடி வருதலான் இப்பகுதி இந்நூற்கண் வந்தமை அநாவசியகமென்று துணிந்து நீக்கிவிடக் கூடுமாதலின் இங்ஙனம் சில கூறவேண்டியது ஆவசியகமாயிற்று.

மாதவ வழியால் அரிதினும் அரிய மானிடச் சென்மத்தை இந்நிலவுலகின்கண் எடுத்தார் யாவரும் முயன்றடையவேண்டிய எல்லாவற்றினும் விசேடமாகித் தலைசிறந்து நிற்பது வீடேயாம். காட்சி அனுமானம் உரை என்னும் மூன்றளவைகளானும் அளந்தறியப்படும் பொருள்களெல்லாம் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நாற்பாலுள் அடங்குமென்பது நன்மக்கள் யாவர்க்கும் ஒப்பமுடிந்த துணிபாகும். அறமும் பொருளும் இன்பத்துக்கனுகூலமாகி நிற்ப இன்பமோ வீடுதலைக்கூடற்கு அண்மையின் முதன்மையாகி நிற்குந் துணைச்சாதனமாகலின் அதன் விழுப்பம் மறுக்கற்பாலதன்று. வீடென்பது சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாதலின் இலக்கணவகையாற் கூறற்கமையாது துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதாகும். இன்பநுகர்ச்சியை அவாவும் பற்றெனப் தோன்றிலலாவிடில் துறவென்றொன்றைக் கூறற்கிடமில்லை. இதனால் மக்கட்காவசியகமாயது வீடு என்றும், அதனை அடைதல் துறவினால் என்றும், துறத்தல் இன்பப்பற்றினை யென்றும் பெற்றாமாதலின் இன்பவியலுணர்ச்சி யாவர்க்கும் ஆவசியகம் வேண்டற்பாலதென்பது தெற்றெனப் புலப்படும்.

இது கருதியே ஒப்புயர்வில்லாத தனிமுதலிறைவன் மெய்ப்புயரியலை உள்ளவாறுணர்ந்த அருந்தவக் கொள்கை அகத்தியனாரும், அவரின் மாணாக்கரான தொல்காப்பியனார் முதலியோரும் தமிழுலகம் இனிது கற்றுய்ந்த தத்துவமாராயுமாறும், பொய்ப்பொருளின் வேறாய் மெய்ப்பொருள்காணுமாறும், வீடுதலைக்கூடுமாறும் அவ்விறைவனருளால் தாமியற்றியருளிய தமிழியல் வழக்கு நூல்களின்கண் அவ்விறைவனுதவிய முதனூல்கள் கூறும் நுண்பொருள்களைத் தூலவருந்ததி நியாயமுறைபற்றி அகப்பொருள் புறப்பொருளென்றிருதிறத்தாற் பகுத்தினிதுணர்த்திக் கூறிப்போந்தனர்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் அகத்திணை, புறத்திணை, களவு, கற்பென் றின்னோரன்ன வியல்களானே இல்லறமும் பொருளும் இன்பமு முணர்த்துவதன்றி, நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்தல் என்றற்றொடக்கத்து வீட்டியனெறிக்கு மோத்துக்களுடைத்தாகாமையின் வீடுபேற் றுறுதிப் பொருணூலு மாதலின்றெனில், அற்றன்று, அஃது உலகியல் வழக்கு நூலாதலின் பெரும்பான்மையால் நால்வகை வருணத்தார்க்கு முரிய இல்லறம் பொருள் இன்பம் என்பவற்றை நேரே உணர்த்தியும், அகத்திணையியலுட் பிரிதனிமித்தங் கூறுதலானும், புறத்திணையியலுள் வெட்சி முதலாக வாகை யீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி அவற்றது நிலையாமை காஞ்சியுட் கூறுதலானும் "அறுவகைப்பட்ட பார்ப்பன பக்கமும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்தும் "காமஞ்சான்ற" என்னுங் கற்பியற் சூத்திரத்துந் துறவு மெய்யுணர்வு மவாவறுத்தலுங் கூறுதலானு வீட்டியலுறுதிப் பயனுங் கூறிற்றென்க. இருக்

குறள் என்னும் நீதிநூலை யியற்றிய பெருநாவலர் இன்பவியலை ஒருதனைப்படுத்திய தூஉம், திருவாசகமியற்றிய மணிவாசகப்பெருமான் கோவை செய்ததூஉம்; ஏனைச் சான்றோர் இன்பவியலை ஓதிச் சென்றதூஉம் மக்கள் மெய்ம்மைதேறி வீடுபேற் றுறுதிப்பயன் றலைக்கூடுமாறென்றே யுணர்க.

இத்துணைச் சிறப்புவாய்ந்த பொருளதிகாரத்தைத் தற்காலம் விரும்பிக் கற்பவர் தொகை அருகிக்கொண்டே வருகின்றது. அகத்திணைப்பாற்படும் இன்பவியலை அறவே புறக்கணிக்கின்றனர். இந்நிலவுலகின்கண்ணே தோன்றுஞ் சீவராசிகளனைத்துக்கும் ஒரு பருவ நிகழ்ச்சியிலே காமவுணர்ச்சி பிறத்தல் இயல்பேயாம். சுருங்கக்கூறில் உலகம் தோன்றிநின்றியங்கி நடைபெறு முறைமையெல்லாம் காமப்பொருட்டென்றே சொல்லலாம். காமநுகர்ச்சி என்று நிறுத்தப்படுமோ அன்றே உலகவளர்ச்சியும் நின்றுவிடுமென்றால் இழுக்கெனை? காமம் மறைவிலே துய்க்கற்பாலதாயினும் அதன் இயலைப் பக்குவர் யாவரும் ஆராய்ந்தறியவேண்டியது முறைமையன்றே! சிற்றறிவுடைய விலங்கினங்கள் தாமும் போகந்துய்ப்பதில் சுகாதாரத்துக்கேற்ற ஒவ்வொரு விதியைக் கிரமமாய்க் கையாண்டுவரவும் பொருளுணராப் பேதை மாந்தர் விதிவிலக்கு நோக்காது முறைமையும் வரம்பும் இகந்தொழுகித் தங்கள் சுகத்தையும், மனைவிமக்கள் நலத்தையும் பாழ்படுத்தி உலகத்திற்குக் கேடுசூழ்வர். (இந்நூலின் எட்டாம் செய்யுளுரையின் இறுதிப் பாகத்தை 60ம் பக்கத்தில் நோக்குக). பேதைமையே காரணமாக விபரீத விளக்கங்கொண்டு இன்பவியலைக் கற்கவும்மாட்டார், கற்றவர்மாட்டுக் கேட்கவும்மாட்டார். கற்பிக்கவல்ல மர்மசாத்திரங்களைத் தற்கால அரசினர் பரம்பவும் விடார். அரோசிகமானவை, அவமானமானவை, அயலக்கணமானவை (indecent, obscene &c.) என்று பலவாறு கூறி ஒதுக்கிவிடுவர். ஆங்கிலமொழியில் பொய் மெய் கலந்துலாவும் போலிப் போக சாத்திரங்களை (Sexual Sciences) காணுதவர்போற் கண்மூடிக்கொண்டு பரம்பவிடுவர்.

மாணவர்களே! நும்மறிவு தேறவேண்டுமாயின் தொல்காப்பிய முதலிய சிறந்த இலக்கண நூல்களின் பொருளதிகாரத்தை இகழ்ந்தொதுக்காமல் விரும்பிக் கல்மின்; அதனினும் அகப்பொருளைச் செவ்விதில் ஆராய்மின். செவ்விதில் ஆராய்தலாவது நேரே வெளித்தோன்றிக் கிடக்குந் தூலப்பொருளுடன், உள்ளுறையாய் நுண்ணிதாய் மறைந்துகிடக்குஞ் சூக்குமப் பொருளையுந் தெளியக் கற்றல். ஒருவனும் ஒருத்தியும் இன்பங்கோரிக் கூடுங்கலவியில் நிகழ்த்துங் காரணம் உலகியல் தழுவிய தூலப்பொருட்டன்மையையும் அந்நிகழ்ச்சி காரணமாக இன்னதெனப் பிறர்க்குணர்த்தவியலாது உள்ளத்தில் தோன்றும் இன்பம் வீட்டியல் தழுவிய சூக்குமப் பொருட்டன்மையையும் ஒருவாறு பொருந்துமென்க.

63. ஆரணங் கேகொ லணியிழை யேகொல்லன்
றேர்கண் டையுற் றின்புறத் தெளிதல்.

கண்ணே,
காணற் குரிய காட்சி முற்றவு
மாணக் கண்டு மகிழ்கூர்ந் தனறே
மூக்கே,
கண்டறி கில்லா வொண்ணறு மணமெனக்
கோலுங் கிழுத்து மூச்சுவிடு தற்கு
மெண்ணக் கொள்ளா திடர்ப்பட் டன்றே
நாசே,

வாழைமா பலாஅ வழங்குகனிப் பிழியு
மீந்தி னரிபலுஞ் சாந்திற் றொடுத்த
பூந்தண் டேறலும் பெண்ணைவரு மட்டுங்
கருப்புச் சாற்றிற் பாலொடு கலாஅய்ப்
போக்கறக் காய்ச்சிய புனையொலி யாழிற்
றன்வழி யொழுக்கலிற் றனைமறந் தன்றே
நாக்குந் தோளு நலமில கைபு
மெக்க முறீஇ யினையில மெலிந்த
வுள்ளமுஞ் சோர்வுற் றுளைந்தயர்ந் தன்றே
மின்னவென கீத்த பொன்னமபூங் கொம்பர்
மென்மெல வொசிகி விநட்ந தாவருக
கண்ணெளி வழிபெ கவினுற நடந்தென்
னெண்ணங் குடிகொண் டிருமருங்கு மொருங்கே
பயின்று மயக்கித்தன் பாற்படுத் திற்றே
அதுவே,
பொன்னங்குடம் பற்றிக் கன்னங்கரு முகில்சே
ரழகுக் கடறேய்ந்த தாட்டுபபல வாடிய
பழகுதமிழ்ச் கடறேய்ந்தது பாவமு துண்டு
இங்கண் மலர்ந்த திருமுகத் தகட்டிற்
பொங்குந்த ஞமபவிடைத் தளதுவெண் முத்தம்
பெறுதற் குரிய பேறறது கொல்லோ
வஞ்சமீக் குலத்தி ஞாணங் கேடுகொ
லின்னிசை செய்கோ வென்னிசை செய்கோ
வென்னப் பெரிதழிந் திளைப்பெற் றிரங்கி
வண்டுபடி மலரணி கொண்டறலைந் கொம்பர்
நிலத்தடி தோய நீல மிமைத்து
வேயொடு கோங்கில விளைதரு வள்ளியு
நாணங் கனிந்து மடமயிலிற் றச்சமுங்
காட்டி விபர்த்துக் கனிப்புத்தந் தன்றே
யானும்,
தெங்கிலை முடைஇய கிடுகுமிடை யிறப்பிடைத்
தங்கொளி கண்டு தகைசான் மணியெனு
விழைந்தோ னெருப்பெனு வெய்துயிர்த் தத்தை
விரைந்துநீர் தூஉய்கொடு மேலய்ப்பொழிந் தறிவழி
மணியா குதலறி வறிஞனிற்
றணியாப் பிணியொரீஇத் தழைத்துமகிழ்ந் தேனே.

---

இப்பாட்டு ஒருத்தலைக் காமமாகிய கைக்கிளைப்பகுதி நான்கனுண் மூன்றாவதாகிய தெளிதலும் பிரிவின்பாற்படும். இஃது அகனைந்திணைக்கும் புறம்பாவ தாயினும் காமஞ்

சான்ற தலைமகன்கண்மாட்டு நிகழ்தலின் இழிவுடைத் தாகாதென்க. புணர்ச்சி நிகழாமையின் ஒருமருங்குபற்றி நிகழுமிக்கேண்மை ஒருதலைக் காமமெனப்படும்.

இக்கைக்கிளை இயற்கைப்புணர்ச்சி காரணமாக நிற்றலின் களவென்னும் கைகோளுக்குப் பெரியதொரு சிறப்பாகும். இதனைக் கைக்கிளை என்று கூறுதற்கும் சில ஆன்றோர் மனமொவ்வார்.

ஒத்த கிழவனும் கிழத்தியும் உம்மைக்காலத்துப் பிறப்பனைத்தினும் ஒருவரை ஒருவர் இன்றியமையாதாராய்ச் செய்த நல்வினை காரணமாக அன்பான ஒரு பொழில்வயிற் றமியராய்க் கண்ணுறல் காட்சி, இவள் யாவளோவென்று தலைமகன் ஐயுறுதல் ஐயம், பலகுறிகண்டு தனக்குரியளாகும் சிறப்புடையளென்று தேர்தல் தெளிதலாம்.

ஒத்தல்—பிறப்பு முதலிய பத்தானும் ஒப்புடையராதல். அப்பத்தையும் “பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ—டுருவு நிறுத்த காம வாயில்—நிறையே யருளே புணர்வொடு திருவென—முறையுறக் கிளந்த வொப்பினது வகையே” என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தாற் றெளிக. ஈண்டுப் பிறப்பு—உயர்குடித் தோற்றம்; குடிமை—குடிப்பிறப்பிற்கேற்ற ஒழுக்கம், ஆண்மை—ஆளுந்தன்மை; ஆண்டொப்பு—தலைவிக்குப் பன்னீராண்டும் தலைவற்குப் பதினாறாண்டுமாம்; அப்பருவத்திற்றான் பெண்மையும் ஆண்மையும் பிறக்குமென்பது வேதமுடிபாகலின் அதுவும் ஒப்பெனவே படும். உருவு—ஆண்மைக்கும் பெண்மைக்கும் வேறுவேறாக ஓதிய இலக்கணமெல்லாம் நிரம்பிய வனப்புமாட்சியான மனத்தின்கட் பிறப்பதொரு தருக்கு, ஆண்பாற்குரிய விலக்கணத்தைப் “பெருமையு முரனு மாடூஉ மேன” என்பதனானும், பெண்பாற்குரிய விலக்கணத்தை “அச்சமு நாணு மடனு முந் துறுத்த—நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப” என்பதனானும் பிறவற்றானுந் தெளிக. பெருமையாவது—அறிவு மாற்றலும் புகழுங் கொடையும் ஆராய்ச்சியும் பண்பு நண்பும் பழிபாவ மஞ்சுதலு முதலியவாய் மேம்பட்டு நிகழுந் தலைமைக்குணம்; உரன்—இப்பெருமை காரணமாகப் பிறக்கும் அறிவுத்திட்பம், அச்சம்—அன்புகாரணமாகத் தோன்றும் உட்கு; நாண்—காமக்குறிப்பு நிகழ்வுழிப் படுவதோருள்ளவொடுக்கம், மடம்—செவிலியர் கொளுத்தக் கொண்டது விடாமை. காமவாயில்—புணர்ச்சிக்கு வாயிலாகிய இயற்கையன்பு; நிறை—பிறரறியாமல் நெஞ்சினை நிறுத்தல், அருள்—தொடர்பு பற்றாத இயல்பாக எல்லாவுயிர்கண்மேலுஞ் செல்வதாகிய கருணை; உணர்வு—அறிவுடைமை (உலகியலார் செய்யத்தக்க தறிதல்); திரு—பொருளுந் துய்ப்புமன்றி எஞ்ஞான்றுஞ் செல்வத் தகவிற்றாய்த்தோர் உள்ள நிறைவு.

இனிக் களவென்பது என்னையோவெனின் “களவென்ப படுவ தியாதென வினவின்—வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தன்—முளையெயிற் றமர்நகை மடநல் லோளொடு—தளைவிழ் தண்டாரக் காமன் னன்னோன்—விளையாட் டிடமென வேறுமலைச் சாரன்—மானினங் குருவியொடு கடிந்துவிளை யாடு—மாயமுந் தோழியு மருவினன் கறியா—மாயப் புணர்ச்சி யென்மனார் புலவர்” என்பதனாற் றெரிந்துகொள்க.

இவ்வகை நடைபெறும் மணத்தினைக் கந்தருவம் என்று கூறுப. “அன்பினைந்திணைக் களவென்ப படுவ—தந்தண ரருமறை மன்றலெட்டினுட்—கந்தருவ வழக்க மென்மனார் புலவர்” எனவும், தொல்காப்பியத்தில் “இன்பமும் பொருளும் அறனு மென்றாங்—கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற்—காமக் கூட்டங் காணுங் காலை—மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுட்—டுறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே” எனவும் வருவனவற்றால் இவ்வுண்மை தெளியப்படும். ஆயினும் கந்தருவம் களவினைப் போல்வதொன்றேயன்றிக் களவன்று என்றும், இவ்விரண்டும் வேறுவேறு என்றும் பலர் கொள்வர். ஆரியர் வழக்கும், தமிழர் வழக்கும் வெவ்வேறென்பதும் பழைய நூல்களாற் பெறப்படும்.

தலைமகளின் காட்சியாற் றலைமகனுக்கு நேர்ந்த ஐயம் முதலியவற்றை முதற்கண் கூறுகின்றார்:—

(இ–ள்.) கண்ணே = கண்ணானது;

காணற்கு உரிய காட்சி முற்றவும் = தான் காணுதலுக்கு உரியன இவையென்று எண்ணி வைத்த காட்சி முழுவதையும்;

மாண கண்டு மகிழ் கூர்ந்தன்று = தான் மாட்சியைப் பெறுமாறு காணுதலுற்று மகிழ்ச்சி மிக்கது;

கூர்ந்தன்று—அன்று ஈண்டு எதிர்மறையன்று; அன் சாரியை. ஏனையவற்றிற்கும் இஃதொக்கும்—தான் மாணுமாறு அக்காட்சி எல்லாவற்றையும் ஒருங்கே கண்டு மகிழ்ச்சி மிக்கதென்க; மகிழ்கூர்தலுக்குக் காரணம் மாணக் காணுதலேயாம். மாணுக்காட்சியாற் போந்தபயன் யாதுமில்லையாதலின் இங்ஙனம் கூறினார்.

காது முதலிய ஏனை உறுப்புக்கள் ஓசை முதலியவற்றை எய்துவதினும் செய்மைக்காட்சிகளை விரைந்து காணுதலானும், "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை" எனப்பாராட்டப்படுவதானும் அது முதற்கட் கூறப்பட்டது. தீயவற்றை நீக்குதற்பொருட்டே "காணற் குரிய" என்றும், உரியனவெல்லாம் காணும்பேறு கிட்டிவிட்டது என்பது போதர "மாணக் கண்டும்" என்றும் கூறினார். காட்சி என்பதுபற்றி முற்கூறப்பட்டதெனினும் இழுக்காது.

மூக்கே = மூக்கானது;

கண்டு அறிகில்லா ஒண் நறும் மணன் எ(ல்)லாம் = இதுகாறும் பார்த்தறியாத ஒள்ளிய இனிய வாசனைகள் எல்லாவற்றையும்;

"கண்டு" என்றாரேனும் "மோந்து" என்பதுவே பொருளாகக் கொள்க. "கண்டறிகில்லா" எனவே இன்னோரன்னவற்றையெல்லாம் மோந்தறிதல் வேண்டுமென்னும் அவாவுண்மை பெறப்பட்டது. இதனாற் செய்யப்பட்ட தவப்பயனுண்மை புலப்பட்டது. என்னை? "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ—மீண்டு முயலப் படும்" என்பவாகலின் என்க. இஃதேனையவற்றிற்கும் ஒக்கும்.

மோந்து இழுத்து மூச்சு விடுதற்கும் எண்ணம் கொள்ளாது இடர் பட்டன்று = முகருமாறு உள்ளிழுத்த சுவாசத்தை வெளியே விடுதற்கும் மனமிசையாமற் றுன்புற்றது;

வாசனையைச் சுவைத்துக்கொண்டே உள்ளிழுத்து வருகின்றதென்பார் "மோந்திழுத்து" என்றும்; உள்ளே கொள்ளப்பட்டதனை வெளியே விடுதற்கும், விடுங்காலத்து இழுத்தற்கியலாதற்கும் மனமில்லையென்பார் "மூச்சு விடுதற்கு மெண்ணங் கொள்ளாது" என்றும்; மூச்சுவிடாமையோடு வருங்காற்றுப் பெருகிவருதலின் அதனாலுறுமியர்ப்பாடுண்மை தோன்ற "இடர்ப்பட் டன்றே" என்றும் கூறினார். மோப்பின் மிகுதிதோன்ற "மோந்து" என்றார் பெடுத்தது.

காதே = காதானது;

வாழை மா பலா வழங்கு கனி பிழியும் = வாழையும், மாவும், பலாவும் கொடுக்கின்ற கனிகளினின்றும் பிழிந்தெடுத்த சாறும்;

பிழிந்தெடுத்தலிற் "பிழி" எனப்பட்டது. சுவைமிகுதி கருதி முதற்கட் கூறப்பட்டன. கைக்கிளையும், களவும், கற்பும் முறையே பொருந்துதல் இம்முக்கனிகளின் சாறு பொருந்திச் சுவை தருதலை ஒக்குமென்க. திணைப்பகுப்பா ளிகழ்ப்பவ ... பிற்கூறப்படுதலின் ஈண்டு வேறு பொருளைக் குறித்தனம்.

புகைமுதலியவற்றால், எனவே செயற்கையால், கனியா... பழத்தின்சுவை அத்துணைச்சிறந்ததன்றாகலிற் றானே பழுத்தபழம் என ... கனிப் பிழியும்" என்றார்.

ஈந்தின் அரியலும் = ஈச்சமரத்திலுண்டாகிய கள்

இதனாற் பாலை கூறப்பட்டது. பொருளீட்டி ... குப் பாலை உபகாரப்படுதலின் அது முதற்கட் கூறப்பட்டது.

சாந்தில் தொடுத்த பூ தண் தேறலும் = சந்தனமரத்திலே வைத்த தாமரைப்பூவின் தேனும்;

சாந்தில் என்றவிடேசானே சந்தனத்தின் முருதவுங் கொள்ளப்படும். "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே" என்றமையாற் "பூ" என்பதற்குத் தாமரை என்று பொருள் கூறினும். "தாமரைத் தண்டா தூதி மீமிசைச்—சாந்திற் றொடுத்த தீந்தேன்" என்றார் கபிலரும்.

இதனாற் குறிஞ்சித்திணை கூறப்பட்டது.

பெண்ணை வரு மட்டும் = பனையினின்றும் உண்டாகின்ற கள்ளும்;

இதனால் நெய்தற்றிணை கூறப்பட்டது. "பெண்ணைதரு மட்டும்" என்று பாடமுமாம்.

கரும்பு சாற்றில் = கரும்புச்சாற்றிலே;

இதனால் மருதத்திணை கூறப்பட்டது.

பால் ஒடு கலாய் = ஆவின் பாலொடு கலந்து;

இதனால் முல்லைத்திணை கூறப்பட்டது.

போக்கு அற காய்ச்சி = குற்றமறக் காய்ச்சி;

காய்ச்சுதலின் குறைவும், மிகுதியும் போக்குத்தருவனவாதலின் இங்ஙனம் கூறினர். விறகு, பாத்திரம் முதலியவற்றையுந் தழீஇக்கொள்க.

புனை ஒலி யாழில் தன்வழி ஒழுக்கலில் = அலங்கரிக்கப்பட்ட ஓசையையுடைய யாழைப் போலத் தன்னிடத்தே ஒழுகுமாறு செய்தலான்;

ஒலியும் புனைதற்கேற்ப அமைதலின் அங்ஙனம் கூறினார். இனிப் புனைதல் சுரப்படுத் தலுமாம்.

இவற்றால் தலைமகளது ஓசையினிமை குறிக்கப்பட்டது. இருவரும் எதிர்ப்படுதற்கு முன் எழுந்த அவளது ஓசையைச் செவியுணர்ந்து இனித்துக்கொண்டிருத்தலை யுணர்த்திற்று. இனி "அனநடை வாய்நது" என்றாங்கு உரைத்துக்கோடலும் முறைமையாகும்.

தனை மறந்தன்று = தன்னை மறந்துவிட்டது;

எப்போதும் அவ்வினியவோசை காதில் ஒலித்துவருகின்றது என்பது குறிப்பு.

நாக்கும் தோளும் நலம் இல் கையும் ஏக்கம் உறீஇ இயைகில மெலிந்த = நாவும் தோளும் நன்மையில்லாக் கையும் (முறையே சுவைக்கவும், புணரவும், தீண்டவும் பெறாமையானே) ஏகக்கம் பொருந்தி அமைதலில்லாதனவாய் மெலிந்துபோயின;

"நலமில்" என்பதனை வினையவற்றோடும் கூட்டுக. சிறப்புக்கருதிக் கையொடு "நலமில்" என்பது சேர்க்கப்பட்டது. "இயைகில" வாதலின் ஏக்கமுற்றன வென்றலும் சாலும். பிருது விப்பகுதியை மிகுதியும் பெற்றதுடலாதலிற் பரிசவுணர்ச்சியையே பெரிதென விழைதலும் இயற்கையாயிற்று.

உள்ளமும் சோர்வு உற்று உளைந்து அயர்ந்தன்று = மனமும் தளர்ச்சிபொருந்தி (அப் பொருந்திய காரணத்தால்) வருந்தி அறிவழிந்துபோயிற்று;

சோர்தல்—கட்டுவிடுதல்.

இன்ன எனக்கு ஈத்த பொன் அம் பூ கொம்பர் = இத்தன்மைகளை எனக்குக்கொடுத்த பொன்போலும் அழகிய பூக்களையுடைய கொம்பானது;

என்றதொருவடிவத்தை. ஐயப்பாட்டிற் கேதுவாய் அமைதலிற் கொம்பர் என்று கூறினர். பொன் அம்முச்சாரியைபெற்றதாகக்கொண்டு பொன்னுலாகிய பூவினையுடைய கொம்பர் என்றும் பொருள்செய்யலாம். பொன்னம்பூங்கொம்பர் என்பதனை அன்மொழித் தொகையாய்க்கொள்ளாமல் ஆகுபெயராய்க்கொள்க. "கணங்குழை" என்றதற்கு ஆசிரியா பரி மேலழகர் உரைத்த உரை நுட்பமும் ஈண்டாராயற்பாற்று. இன்னோரன்னவிடங்களில் ஆகு பெயரென்றலே இலக்கண முறைமை. "பாயின மேகலை" என்றமைக்குப் போரசிரியரெழு திய விசேடமும் கவனிக்கற்பாலது. கொம்புபோன்றி இத்தோற்றம் என்க. ஊருவும் அதுவும்

அறியப்படாதிருப்புழி ஆகுபெயரென்றலே மாபாகும். பொன்கொம்பர், பூங்கொம்பர் என்க. பொன்னை மேனிக்கும், மலரை உறுப்புக்களுக்கும் ஒப்பிடுக. இக்கொம்பரைக் கண்ணுற்றமையான் மேற்கூறியவெல்லாம் நிகழப்பெற்றனவென்க.

இனி ஆன்மாவே தலைமகனாகவும்; ஒன்றை அறிவித்தால் அறிந்துகோடும் ஆன்மனுணமே தலைமகனது கண்ணாகவும்; வேண்டியவற்றை மறைத்தும், வேண்டாதனவற்றைக் கொடுத்தும், பதியைச் சாருங்கால் பதியுடனும், பாசத்தைச் சாருங்கால் பாசத்துடனும் ஒன்றி அழுந்தவைக்கும் குணமுடைய ஆணவமலமே தலைமகளாகவும் அனையபிறவாகவுங்கொண்டு நுண்பொருள் தெளிக. வரம்பின்றிப் பெருகுமாதலின் இங்ஙனம் விரித்தல் சாலாது.

மெல மெல ஒல்கி = மெதுவாக மெதுவாக அசைந்து;

வீ நடந்தாங்கு = ஒரு பூவானது நடக்தலையுற்றாற்போன்று;

கண் ஒளி வழியே கவின் உற நடந்து = கண்ணின் ஒளிவழியாக அழகுபொருந்த நடக்கலுற்று;

என் எண்ணம் குடி கொண்டு = எனது உள்ளத்திலே குடியாக வீற்றிருந்து;

இரு மருங்கும் ஒருங்கே பயின்று மயக்கி தன்பால் படுத்திற்று = அகம்புறமாகிய இரு பக்கங்களினும் ஒன்றாய் நெருங்கிப் பழகி (அப்பழகிவரு விசேடத்தால் என்வசத்தை) த் தனது பகுதிகருள் அடங்கியொழுகுமாறு புரிந்தது;

என்றது அவளுக்கீடுபட்டுத் தன்வசமற்று அவளைப் பெறுதலே பேரின்பமெனக்கருதி மயக்கமுற்றிருந்தான் என்க.

அதுவே = மேற்கூறியவற்றை எனக்குச்செய்து மயக்கித் தன்பாற்படுத்திய அக்கொம்பு தான்;

பொன்னம் குடம் பற்றி = பொன்போலும் அழகிய இருகுடங்களைச் சுமந்துகொண்டு;

பொன்னங்குடம் தனத்தைக் குறித்தலிற் "பற்றி" எனபதற்கு அங்ஙனம் பொருளுரைத்தாம். பற்றுதல் அவண் கைக்கோடலுமாம்.

கன்னம் கரும் முகில் சேர் = மிகக்கறுத்த மேகம்சேர்ந்த;

என்றது கூந்தலை.

அழகு கடல் தோய்ந்து = அழகாகிய கடலிடத்தே முழுகி;

பெண்களுக்குக் கூந்தல் சிறந்தவழகுபயத்தலின் "கன்னங்கரு முகில்சேரழகுக்கடறோய்ந்து" என்றார்.

ஆட்டு பல ஆடி = விளையாட்டுக்கள் பலவற்றையும் விளையாடி;

பழகு தமிழ் கடல் தோய்ந்து பா அமுது உண்டு = பயின்றுவரு தமிழாகிய கடலின் கண்ணே மூழ்கி ஆண்டு அமைந்துள்ள கவி அமுதை நுகர்ந்து;

தலைமகனுந் தலைமகளுங் கூடுங்காலத்துக்கு முன்னரும், பின்னரும் வாய்ந்த இன்ப மேலீட்டினனே தலைவற்கு மனசிலே சுரக்கும் இன்பப்பாக்கள முதலியன இங்குக் குறிக்கப்பட்டன. தாய்மொழி என்பது போதரப் "பழகுதமிழ்" என்றும்; அரதனம், முத்து, பவழம், அமுதம் முதலியவற்றை யுடைமையானும், அளப்பரும் அகலமும, நீளமும், ஆழமும் பிறவும் உடைமையானும் "கடல்" என்றும்; பாக்களின் சுவைமுதலியவும், ஆராய்வின் அருமையும் பிறவும் தோன்றப் "பாவமுது" என்றும் கூறினர். வடமொழி வாணரும் கல்வியை ஆலோசனுவமிர்தம் என்ப.

திங்கள் மலர்ந்த திரு முகத்து அகட்டில் = சந்திரனை மலரச்செய்த அழகிய முகமண்டிலத்தன்னை;

முகத்திலே சந்திரனது தன்மையும், தேசும், வசீகரிப்பும் இருத்தல்பற்றி இங்ஙனம் கூறப்பட்டது. அகட்டில் என்றும் பிரிப்ப.

[பொங்குதே னாம்பலிடை] தேன் பொங்கு ஆம்பல் இடை=தேன் மிகுந்துச்சொரி கின்ற செவ்வாம்பன் மலருக்குள்ளே;

தேன் என்றது வாய்மொழியை; ஆம்பல் என்றது வாயிதழை. தேன் என்றதை அதர நீருக்கும் ஒப்பாகக்குவர்.

தயங்கு வெண் முத்தம் பெறுதற்கு உரிய பேற்றது கொல்=நிலைபெற்ற வெள்ளிய முத்தத்தை யான் (தலைமகன்) பெறுதற்குரிய செல்வமாய்ப் பெறுவேன் கொல்லோ?

வெள்ளிய முத்தொத்த பற்களைப் பெற்றுக்கொண்டது அவளது வாய், அவ்வாயுதவும் கொஞ்சுதலாகிய முத்தத்தைக் கொள்வது என்பேறுடைமையுமோ என்றபடி. முத்தம் பெறுதற்குரிய பேற்றதுவாகுமோ அவ்வுரு என்பதுவே பொருளாயினும் விளக்கத்தின்பொருட்டு இங்ஙனம் கூறினோம்.

தோய்ந்து, ஆடி, பாடி, முத்தம் பெற பேற்றதுகொல் எனக.

தனது குலமுதலாயவற்றுக்கேற்ற மானுடமங்கைகொல்லோ என்று தலைமகன் ஐயுற்றான் என்பது கூறப்பட்டது.

அஞ்சு மீ குலத்தினை ஆணங்கு வ கொல்=அஞ்சத்தக்க தனக்கு மேம்பட்ட குலத்தினையுடைய தெய்வப்பெண்ணேகொல்?

மீக்குலத்தாளை மணத்தல் தகாதாதலின் இங்ஙனம் கூறினான் என்க. இவ்வையங் காரணமாக அச்சந்தோன்றினமையின் அவனது துயர்ப்பாட்டை இனி விளக்குவர். மீக்குலமென்றது சுர பூசுர குலங்களை.

[என்னினிச் செய்கோ வென்னினிச் செய்கோ] இனி என் செய்கோ இனி என் செய்கோ=இப்பொழுது என்செய்வேன், இப்பொழுது என்செய்வேன்,

தன்னால் விரும்பப்பட்டவள் மீக்குலத்தாளாயின் அவளை விரும்பியதால் வருங்கேடு பலவாயிற்றே. ஆதலின் என்னினி செய்கோ என்று வருந்திக்கூறினன். கழுவாயில்லை யாதலின் இங்ஙனம் வருந்தினான் எனக.

என்ன பெரிது அழிந்து இளைப்பேறந்த ஓரங்கு=என்று பெரிதாக மனமழிந்து மெலிந்துவருகின்ற எளியனைப்பொருட்டு மனமிரக்கங்கொண்டு,

வண்டு படி மலர் அணி கொண்ட தலை கொம்பர்=(தேனுண்டற்பொருட்டு) வண்டுகள் வந்துபடிந்திருக்கின்ற மலர்சூடிய முடியோலுடைய கூந்தலையுடைய அக்கொம்புதான்;

நிலத்து அடி தோய நிலத்தின்கண்ணே பாதங்கள் பொருந்த,

நீலம் இமைத்த நீலமலர் போன்ற விழிகளை இமைத்து;

வேய் ஒடு கோங்கில் விளைதரு வள்ளியும்=மூங்கிலிலும் கோங்குமரத்திலும் விளைந்தலைத்தருகின்ற வள்ளிக்கொடியும்,

வேய் என்றது தோளை; கோங்கென்றது தனத்தை; வள்ளி என்றது அவற்றின் மேல் எழுதிய தொய்யிற் கொடியை, தொய்யில் என்பது மகளிர் சாலவகைச்சாந்தினால் உடலில் எழுதுங் கோலம்.

நாணம் கனிந்து (பெண்மைக்குணங்களில் ஒன்றாகிய) வெட்கம் செறிந்து;

நாணம் என்பது தலைமகன்பால் விருப்பக்குறி தோன்றுவதைக் கண்டுழி உண்டாகும் உள்ளத்தின் ஒடுக்கம்.

மடம் பிலிற்று அச்சமும் காட்டி=மடத்தன்மைதருகின்ற அச்சத்தையும் வெளியே காண்பித்து;

மடமென்பது அன்புடையார் கூறுவதைக் கேட்டும் தான் முன் கொண்ட கருத்தை விடாமை. அச்சம் என்பது அன்புகாரணமாக உண்டாகும் பயம். பயிர்ப்பும் இவற்றொடு கொள்ளப்படும்.

ஐயுற்றான் தெளிதற்கமைந்த குறிகளை ஈண்டுக்கூறினர். "வண்டே யிழையே வள்ளி பூவே—கண்ணே யலமா லிமைப்பே யச்சமென்—றன்னவை பிறவு மாங்கவ ணிகழ—நின்றவை களையுங் கருவி யென்ப" என்றார் தொல்காப்பியத்திலும். திருக்கோவையாரில் "பாயும் விடையரன் றில்லையன் னாள்படைக் கண்ணிமைக்குந்—தோயு நிலத்தடி தூமலர் வாடுந் துயரமெய்தி—யாயு மனனே யணங்கல்ல ளம்மா முலைசுமந்து—தேயு மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே" என வருங்கவி நோக்கற்பாலது.

களிப்பு தந்தன்று = மகிழ்ச்சியைக் கொடுத்தது;

காட்டிய குறிகளால் மீக்குலத்தளல்லளென்று தெளியவைத்தமையால் மகிழ்வித்தனள் என்க.

யானும் (அக்களிப்பைப் பெற்ற தலைமகனாகிய) யானும்;

தெங்கு இலை முடைஇய கிடுகு மிடை இறப்பு இடை = தென்னோலைதெற்றிய கிடுகுகள் நெருங்கிய வீட்டிறப்பிலே;

"குன்றுறழ் யானை மருங்கு லேய்க்கும்—வண்டோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த" என்றார் கடியலூர் உருத்திரங்கண்ணனாரும். "வேய்ந்த—முடைந்த." என்பது நச்சினார்க்கினியம்.

தங்கு ஒளி கண்டு = நிலைபெற்ற ஓர் ஒளியைக்கண்டு;

தகை சால் மணி என விழைந்தோன் = தகுதி நிறைந்த அரதனம் என்று கருதி அதனைப் பெறுதற்கு விரும்பினேன்;

அணிவோனைத் தகுதிப்படுத்தும் ஆற்றல்சான்ற மணி என்க.

நெருப்பு என வெய்து உயிர்த்து = அவ்வொளியை நெருப்பென்று கருதி வெய்துயிர்ப் பெறிந்து;

[அத்தை—விரைந்துநீர் தூஉய்க்கொடு மேஎய்ப்பொழிந் தறிவுழி]' விரைந்து நீர் தூஉய் •கொடுமேஎய் பொழிந்து அத்தை அறிவுழி = வேகமாகத் தண்ணீரைத் தூவிக்கொண்டு அவ்வொளியிருக்குமிடத்தை அடைந்து நிறைவாகத் தண்ணீரைப் பொழிந்து அறியும்பொழுது;

மணி ஆகுதல் அறி வறிஞனில் = இரத்தினமாக இருப்பதை அறிந்த தரித்திரனைப் போல;

தணியா பிணி ஒரீஇ தழைத்து மகிழ்ந்தேன் = எவ்வாற்றானும் தணித்தற்கியலாது பட்ட வருத்தத்தை நீக்கிச் செழிப்புற்று மகிழ்வடைந்தேன்;

இங்ஙனம் தன்மனசுக்குக் கூறித் தெளிந்துகொண்டான் என்க.

வறிஞன்றன் வீட்டிறப்பிலே ஒளி நெருப்புத் தோற்றமாயின் அவனது வீடும், பொருளும் ஒருங்கே கெடப்பெற்றுப் பெருந்துன்பத்திற்காளாவான். அவ்வாறே இவனால் விழையப்பட்டாள் அஞ்சுமீக்குலத்தாளாவளேல் இவனும், இவனது பொருளும், குலமும் நாசமுற்றுக் கெடும் எனாங்கு ஏற்ப விரித்துரைத்துககொள்க.

---

## 64. பலர்செறி குழுவினு ளொருமகள் பலவுடற் கொருதனி யுயிர்போ லுலவிய துரைத்தல்.

> தியங்குகதி ரொளிவேட்டுத் தனித்துநோன் பிருந்து
> பயன்கொண்டு மலர்ந்த பைந்தாட் பூவி
> னுமகள் புன்னகை நாடிநலன் பெற்றுக்

கல்லுங் கரையச செய்யுட் செய்யும்
பாவலர் செவிவழி யூட்டிய பனுவலைச்
சுவைதரும் பொருளார் நவையிலசொற பாவை
யிரவுபடத் தொடுத்தன ரென்செய் வோமெனப
பரவுதமிழ் வலலார் பணிந்தமை பாங்கிற்
றெனபுகன றேதகி மனதொடு வாழ்த்தி
நாநலங கனிய நன்குற நவின்று
மீங்கிவள் யாங்கன மெய்தின ளென்ன
வையங் கொண்டு பைய நபநது
கொஞசுங் குதலைச செமமொழி பெறாஅ
தோருரை யுரைககினு முத்தஞ சழககென
வுதிரும போலு மெனமுனு முனுததுச
சிறிது தெளிநது கிழியெனத தேர்நதும
வேநதர் தமககெலா மாநதொழில சிறக்கப
பலகாற பயின்று மாடியிடைப படிவம
பாாததயர்நது பிறாாற படிவவெழி லுணர்நது
முளளங கவர்நதோ ளுறுதுயில கவர்நதோ
ளொளகல செலலா வெமமறிவு கவாநதோள
வண்மை யார்நத பெணடணை நாளே
யெநநாள கொலலோ வெநநாள கொலலோ
நநநா ளாகுக வநநா ளமமா
பொருநது நாளபல வருநதிப போக்கியு
மண்நத ந நாளை மாண்புறக காட்டு
முடஙகல கண்டு மடஙகா வூககமொடு
முளளீ ட்டயின் முநதுநாள் கழிபபியு
முள்ளம பிறககிட வொருநொடி சேர்நது
வானிடை மீனொ நீல விதானத
தொண்மணிநவு காலுந தாளப பநதரிடை
மணியொன பானு மலர்வுறக் குயிறறிய
பொன்புனை யிருககை பொலியவீற றிருக்கு
மாசிளங குழாமெனு மவவுடற் கெலலா
மிருண்ட கூநதன மருண்ட விழிததுணை
யோஙகு சிறறிடை வீஙகுபெருங கோங்கு
காநதட் செங்கை கவின்றமை குமிழினை
யேநதிப பொலிவுற் றின்னடை தழீஇ
யொருதனி யுயிரோ யுலவிற் றம்மா
அதுவே,
ஒவ்வோ ருடலைக் குறுகுதொறு மவ்வுடல்
பைய வுயிர்த்துப் பச்சுற் றின்புறவுடன்
றிர்வுழி யுயிர்ப்புந் தீர்வுற்றொழியும்

கண்ணுடை யீரே காண்மின்
பெண்ணுறு சிறப்பின் பெருமித முணர்ந்தே.

---

இப்பாட்டு எண்வகை மன்றலிலே பெருந்திணைக்குரிய நால்வகையுளொன்றாகிய ஆசுரம் என்னும் மணவியலைக் குறிப்பது.

எண்வகை மன்றலாவன, பிரமம், பிரசாபத்தியம் (பிரசாபத்தம்), ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம் (அசுரம்), இராக்கதம், பைசாசம் என்பன. பிரமமாவது ஒத்தகோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பெய்தியவளை அணிகலனணிந்து தானமாகக் கொடுப்பது. பிரசாபத்தியமாவது மகட்கோடற்குரிய கோத்திரத்தான் கொடுத்த பரிசத்திரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது. ஆரிடமாவது தக்கானொருவனுக்கு ஆவும், ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பின வாகச்செய்து அவற்றிடை நிறீஇப் பொன்னணிந்து "நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீர்" என நீரிற்கொடுப்பது. தெய்வமாவது பெருவேள்வி வேட்பிக்கின்றா பலருள்ளும் ஒருவற்கு அவ்வேள்வித்தீமுன்னர் ஒருமகளைப் பூணணிந்து கொடுப்பது. ஆசுரமாவது கொல்லேறு கோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து மகட்கோடல். இராக்கதமாவது தலைமகடன்னினும், தமரினும் பெறாது வலிதிற்கொள்வது. பைசாசமாவது மூத்தோர் களித்தோர், துயின்றோர் புணர்ச்சியும்; இழிந்தோளை மணஞ்செய்தலும் பிறவுமாம்.

ஆசுரமணத்தின் இயலை "முகையவிழ் கோதையை முள்ளெயிற் றரிவையைத்—தகைநலன் கருதுந் தருக்கினி ருளரேனி—னிவையிவை செய்தாற் கெளியண்மற் றிவளெனத்—தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித்—தன்னவை யாற்றிய வளவையிற்—றென்னிலை யசுரந் துணிந்த வாறே" என்றதனானுந் தெளிக. அன்றியும் இறையனாரகப்பொருளுரையில் அசுரம் என்பது கொல்லேறு கொண்டான் இவளை எய்தும்; திரிபன்றி எய்தான் இவளை எய்தும்; இயல் சூட்டப்பட்டான் இவளை எய்தும் என இவ்வாறு சொல்லிக் கொடுப்பது" எனக்கீரனாருங் கூறிப் போந்தனர். "களவொழுக்கம் பொதுவாகலின் நான்கு வருணத்தார்க்கும், ஆயர்முதலியோர்க்கும் உரித்து. மாலைசூட்டலும் இதன்பாற்படும்" என்று கூறியிருத்தலும் ஆராய்தற்பாலது.

(இ—ள்.) தயங்கு கதிர் ஒளி வேட்டு தனித்து நோன்பு இருந்து பயன் கொண்டு மலர்ந்த பைம் தாள் பூவின் = விளங்குகின்ற சூரியனது காந்தியை விரும்பி(ப்) (மற்றொன்றனோடுஞ் சேராது) தனிமையாக விரதமிருந்து (அவ்விரத பலனாய்க்கிட்டிய) பயனைக்கொண்டு (அக்கொண்ட மகிழ்ச்சியான்) மலர்ச்சியடைந்த பசிய தாளையுடைய தாமரைப்பூவைப்போல;

தான் நிலைமையுற்றிருப்பத் தன்னைச்சுற்றி மற்றுமுதலாகியவையெலாம் வருதலின் "தயங்கு கதிர்" என்றும்; தன்னை வளர்க்கும் புனலோடும், பிறவற்றோடும் தாமரை சேராமலிருந்து வருதலின் "தனித்து" என்றும்; கதிரவனைக்கண்டே மலர்தலும், பிறவற்றிற்கு மலராதிருத்தலும் பற்றி "நோன்பிருந்து" என்றும்; மழை முதலியவற்றாற் கிரணம் மறைக்கப்படினும் அவ்வொளிபெற்று மலரும் அருமை நோக்கிப் "பயன்கொண்டு மலர்ந்த" என்றும் கூறினர். 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே" என்பவாகலிற் றாமரை எனப் பொருளுரைக்கப்பட்டது. காமகன் புன்னகை எனப் பின்வருதலை நோக்கி வெண்டாமரை என்றலும் சாலும். இல்—உவம உருபு.

காமகள் புன்னகை நாடி நலன் பெற்று = தலைமகளின் புன்சிரிப்பை விரும்பி (விரும்பிய வாற்ற அதனைப் பெறுகின்ற) நன்மையை அடைந்து;

"செங்கதிர் நோக்கிச் செய்தவ மியற்றித்—தங்குபுனன் முதலிய சார்பொடு படாது—பொன்னொளி கொண்டு பசுமுகை விரித்துச்—சேயிதழ் மலர்த்தித் தெளிநறை பிலிற்றி—வண்டொடு

பாட மகிழ்தூங்கு தாமரை—நகையும புகழும் நாணமும் வேண்டாது—தகையுஞ் சீருந் தழைப்பும் பேணாது—நாவிற் கினிய நறசுவை யுணவுங்—கண்ணுக் கினிய வண்ணக காட்சியு—மூக்குக் கினிய மூன்னுநறு மணமு—மின்ன பிறவு மென்னும் விழையாது—சுவடிக் கையும் யாழ்வருடு விரலும்—நற்றமிழ்ச சுவைபொழி நாற்றிணை முற்றவு—மொருஙகுதரு பாவெலா முரைதரு வாயும்—வெள்ளிய மேனியுங கள்ளமி லுள்ளமு—மடியார்க கருடலின் மடியா முயற்று—மள்ளாற் பழனத்து வெளளைத தாமரைப்—பள்ளியுங கொண்ட பாவையைப் பாடி—நலன்பெற்றுச சிறந்தார குலன் பெற றவரென'' என்று இநநூலாசிரியா கூறியதையும நோககுக.

கல்லும் கரைய செயயுள் செய்யும பாவலா=வனமையமைநத கல்லுததானும் கரைந துருகுமாறு அததனை உருககஞ்சானற பாடலகளைப் பாடும கவிஞாகள்;

கற்கள் பலவகைக குணமுடையன. சந்திரகாநதககல், சூரியகாந்தக்கல் என்பன முறையே சந்திரனதும், சூரியனதும தட்ப வெப்பஙகளைககிரகிததுப் புனலையும, அனலையும உமிழும். நவரததினஙகளிலே நீலம் முதலிய சில கறகள் பண்ணமைநத சிலவிராகவோசையைக கிரகித்து அனலின்மெழுகொப்பக் கட்டுவிட்டுருகாநிறகும. அசரமாய்க கடியவன்மையுடைத்தாய்க கிடககும் கலலினம் இன்னொலிப்பாவுககிததகையவாய உடையுமாயின மக்கள உள்ளம் என்படுமென்க. "உள்ளத தூய்மை யுடையோரிடை யொளிரும—வள்ள லின்னருள் வாயந்தது தணணிய—வொள்ளொளி யனபிவை யுவநதுபெற நிட்ட—துலவுறு காறறி னுண் வீழ் மழையிற—ருனே வநது தழைததுநலன புரியு—மாறறலிற போறறிய வருமபெறற் பேறது—நினைப்புழி யெலலா சேரச சோததது—கனவில் வநது நனவிலொளி சுரபபது—பாட்டென மொழிப'' எனறு இநநூலாசிரியா பிறரணடோரிடததிற கூறியசெயயுள பாட்டின அருமை பெருமைகளை நனகு புலப்படுததல காணக.

இத்தாலியதேசததுத கத்துவசாகநிரவிற்பன்னரொருவா ஒரு பேரியாற்றின் மேலிடப்பட்ட பெரும்பாலததருகில நினறு தனதை வீணையைமீட்டிச சில சுரங்களையெழுப்ப அப்பாலம அசைநது குலுஙகிப பாாததிருநத பலலாயிரவரும பிரமிககததககவாறு நடுநடுஙகத தொடஙகியதெனறும, வீணையை நிறததக குறககமும நினறதென்றும பததிரிகைகள்பல கூறியதுண்டு. நாதவியலாதியவறறை நாதாநதவிளககம முதலிய நூலகளிற கண்டுதெளிக.

செவி வழி ஊட்டிய பனுவலை=காதின வழியாகச செலுததியுணணவைத்த நூலை;

எனறது பினவரு கனனியின பேரழகு முதலாயவற்றை விரிதது மேறகூறிய இயறகைப புலவாகள பாடிய பனுவலைப பலராஜ குமாராகளும கேட்டனா என்பது.

சுவை தரும பொருள ஆா நவை இல சொல் பரவை=(ஓசை, அழகு, அணி, மதம், உதநி முதலாய) சுவையைத தருகினற விடயம நிறைநத (குன்றககூறன் முதலாய) குற்றஙகளிலலாத சொறகடலானது;

சுவைதரு சொல, பொருள ஆா சொல், நவை- இல் சொல், அச்சொல்லாகிய பரவை என்க. அழகு முதலியவும ஒவவொரு சுவை பயததலின் சோககபபெறறன. இனி நவையில்லாதது அழகுமுதலியன எனபாருமுளா.

இரவு பட தொடுததனா=(இனிப் பின்னோா பாடறகாகாவண்ணம்) வறிதாகுமாறு (மேறகூறிய பனுவலைத) தொடுததுவிட்டனா;

"தொடுததனா'' என்னு மிலேசானே யாப்புவகைகளையுங்கொள்க. பாவலர் தொடுத்தனா என்க.

[என்செய் வோமெனப் பாவுதமிழ் வல்லாா—பணிநதமை பாங்கிற்று] பாவு தமிழ் வல்லார் எனசெய்வோம் என பணிந்து அமை பாஙகிற்று=துதிக்கின்ற தமிழ்ப்புலமையிலே வல்லவராகிய புலவோர்கள் (தாம் பாடுதற்கு இனிச் சொல்லும், பொருளும், பிறவும் [illegible] பற்றி) யாது செய்வோமென்று ஏஙகித் தாழ்வுற்று அமைதலைச் செய்யுந் தன்மையுடைத்து.

"பாவுதமிழ் வல்லார்" எனபதற்குப் பிறர் எல்லாரும் தம்மைப் பாவுமாறு தமிழில் வல்லவரென்றும், தமிழே தம்மைப் பாவுமாறு புலமையில் வல்லவரென்றும், தமிழைப்பாவிப் புலமையில் வல்லவராயினோர் என்றும் பலபடியாகப் பொருள்கூறுப.

என புகன்று எத்தி மனத்தொடு வாழ்த்தி – என்று கூறி அந்நூலைத் துதித்து, அது நீடூழி வாழும்வண்ணம் மனசுபொருந்தி வாழ்த்துதலைச் செய்து;

எத்துதற்கும், வாழ்த்துதற்கும் காரணம் முற்கூறப்பட்டது. அப்பனுவலில் ஈடுபட்டனர் என்பது கருத்து.

நா நலம் கனிய நன்குற நவின்றும் = நாவிலே நன்மை முதிருமாறு நன்றாக அப்பனுவலைக் கூறியும்;

"செந்தமிழும் நாப்பழக்கம்" என்பவாகலின் இங்ஙனம் கூறினர். உச்சரிப்பு பிழைபடிற் சுவையும், பயனும் கெடுமாதலின் "நன்குற நவின்றும்" என்றார்.

ஈங்கு இவள் யாங்கனம் எய்தினள் என்ன – இவ்விடத்தே (பனுவலாற்குறிக்கப்பட்ட குணஞ்செய்கைகளையுடைய) இவள்தான் எவ்வாறு அடைந்தனள் என்று கருதி;

வருதற்கிசையாத இடம் என்பது தோன்ற "ஈங்கு" என்றும், இத்தகைத்தாயவிடத்திற்கு வரத்தக்க அத்துணைச் சிறுமையளல்லள் என்பது போதர "இவள்" என்றும், பலகாப்புக்குள்ளாகியிருப்பவள் எங்ஙனம் வருதற்குச் சாலுமென்பது போதர "யாங்கனம்" என்றும் கூறினா. "இவள்" என்றது பனுவல்வழியாக உள்ளத்திலே வேரூன்றிக்கொண்டமையைக் குறித்தது. அண்மையிடத்தாள் என்பதுபோதர "இவள்" என்று சுட்டப்பட்டாள். "யாங்கனம் வந்தனை யென்மக ளென்றே" என்பது மணிமேகலை. யாங்ஙனம் என்னுங்கால் ஓசையின்பங் குறைதலை உரைத்துய்த்துணர்க. இந்நுணுக்கம் அறியவியலாத் தற்காலத்துப் பிறர்பலரும் யாஙனமென்றுகூறிச் சுவைகெடுத்துச் செல்வர்.

மேற்கூறிய கன்னியின் உருவப்படத்தைக் கண்ணுற்ற அரசிளங்குமரரெல்லாரும் அவளாகவே கருதி இங்ஙனங் கூறத்தொடங்கினர் என்க.

ஐயம் கொண்டு = சந்தேகம் கொண்டு;

பைய நயந்து = மெல்லென்ற வகையால் நயப்புரை முதலியவற்றைக் கூறி;

முன்னறியப்படாதாள் ஆதலின் தங்கம் பெருமை [illegible] றுமாறும், அவள் தம்மை விரும்புமாறும் நயப்புரைகளைப் புனைந்துகூறினர் அ[illegible]ரரெல்லாரும் என்க.

கொஞ்சும் குதலை செம் மொழி பெறுதல் – பன்னி[illegible] பகருகின்ற குதலையாகிய செம்மைவாய்ந்த சொற்களை அவளிடமிருந்து பெறுத காரணத்தாலே;

கொஞ்சல், கொஞ்சுதல்–ஈண்டு முத்தமிடல் என்னுங் கருத்தைப் பயவாது செல்வமாகப் பேசுதல், மழலைபேசுதல் என்னும் பொருள்பயக்கும். கொஞ்சுகிளி–குதலைபேசுங்கிளி. குதலை–அறிவிலாச்சொல், மாதருடைய மொழி. மழலை, மதலை–நிரம்பா மென்சொல்; இளம் பிள்ளையின் பேச்சு. மழ–இளமை. குதலையும் வேறு மழலையும் வேறு என்னுமுண்மை "குழலிசை மடந்தையர் குதலை கோதையா–மழலையங் குழலிசை–" என்றுவருமன்னவழக்காற் பெறப்படும்.

ஓர் உரை உரைக்கினும் முத்தம் சழக்கு என உதிரும் போலும் = (நயந்துரைத்து வினவியதற்கு விடையாக) ஒரு சொல்லை உரைத்தாலும் (உரைத்த வாயில் நின்று) முத்து சழக்கென உதிரும் போலும்;

சழக்கு, சளக்கு, சளுக்கு, சல்க்கு என்றுவருவனவெல்லாம் ஒலிக்குறிப்பு. ஒரு பொருள் விழும்பொழுது உண்டாக்கும் ஒலியை அவ்வொலிக்கிசையத் தொனிக்கும் சொற்களாற் காட்டுவது உலகவழக்கு. பலவாறு நயந்துநயந்துரைத்தும் பயன்படாமையால் இங்ஙனம் கூறினர் என்க. "–சாத முண்டையார் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே" என்பது

என மூனு மூனுத்து = என்று வெளியுறுவண்ணம் வாய்க்குள்ளே யிருதுவாகச்) சொல்லிக்கொண்டு;

தனது கோபத்தையும், சிரிப்பையுங் காட்டுதற்கு இதுவுமொரு வழியாயிற்று.

சிறிது தெளிந்து கிழி என தேர்ந்தும் = சிற்றுணைத் தெளிவடைந்து (தன்னுற் காதலிக்கப்பட்டவளின வனப்புரு அமையச சித்திரிக்கப்பட்ட) படமென்று அறிந்துகொணடும்;

அககன்னியின் உருவப்படத்தைக் கண்டு அவளே எனககருதி இஙஙனமெல்லாங் கூறிய பின்னர்க் கிழி எனத தெளிநதுகொணடனர். உருவெளித தோற்றமுதலியனவும சான்றோர் செய்யுட்கண வருதலின் இதுவும புலனெறிவழக்கொடு அமைநததென்றே கொள்ளப்படும்.

"இளஙகோன் கண்ட விளம்பொற பூஙகொடி—விளஙகொளி மேனி விண்ணவா வியப்பப்—பொருமுகப் பளிஙகி னெழினி வீழ்ததுத—திருவின செய்யோ ளாடிய பாவையின்—விரைமல ரைஙகணை மீன விலோதனத—துருவி லாளனெ டுருவம பெயர்ப்ப—வோவிய னுள்ளத் துள்ளியது வியப்போன்—காவியங கணணி யாகுத லறிநது" என உதயகுமாரன் மணிமேகலையைக் கண்டு ஓவியமென மயஙகித தெளிந்தாங்கு அரசிளஙகுமாரும் அக்கன்னியின் ஓவியத தைக்கண்டு அவளென மயங்கித தெளிநதனா எனக.

வேந்தர் தமக்கு எ(ல்)லாம ஆம தொழில் சிறக்க பல் கால் பயின்றும் = அரசாதஙகளுக்கெல்லாம் ஏற்பனவாகுகின்ற (விலவிததை முதலிய) தொழில்கள் யாவும தஙகள் தஙகளுக்கே விசேடமாகுமாறு (அக்கண்ட அரசிளஙகுமாரனைவரும) பலமுறைகளிலும பயின்று தோச்சியுற்றும்;

என்றது "யானையு மிரதமு மிவுளியு முதலா—மேனைய பிறவுமவ வியல்பினி னடையுற்" றெனவிரித்தவற்றை. காலஞானஙகளையும், வில்வித்தை முதலியவற்றையுந் தழீஇகொள்க. ஒவவோரரசிளங்குமாருந தந்தமையே அக்கன்னி மணத்தல்வேண்டுமென்று இங்ஙனமெலலாம் முயன்றனா எனக.

ஆடி இடை படிவம் பாாதது அயர்நது பிறரால் படிவம் எழில் உணர்ந்தும் = கண்ணுடியிலே தந்தம் உருவஙகளை நோககி(ச) (த் தமபடிவம் தமககினியதுவாகத தோற்றுமைகணடு) சோாவுற்றுப் பிறரால் அவவுருவச் சிறப்புண்மை எடுத்துக்கூறி வற்புறுத்தப்படத தெளிந்து மகிழ்ச்சிபூத்தும்;

எத்தகைச்சிறந்த உருவுடையரேனும் ஆடியிடை நோக்குழிப் பெரும்பாலும் சந்தேகம் உண்டாகுமென்னும் இயைபே ஈண்டு விளககப்பட்டது. அழகின்மை காரணமாகத தம்மை மணமுடிக்க ஒருப்படாளோ என்னும் ஆசஙகையால அயர்ச்சியுண்டாயதெனக.

உள்ளம் கவாநதோள் = மனசினைத் தன்னிடத்தே கவாநதுகொண்டிருப்பவளும்;

அக்கன்னியைக கண்டதுமுதல் மனமானது பிறவழிச்செலலாது மோகத்தமிழ்ந்தி ஈடுபடுதலின் இஙஙனம் கூறப்பட்டது.

உறு துயில் கவாந்தோள் = பொருந்துகின்ற நித்திரையைக கவர்ந்து சென்றோளும்;

கணணுறங்கவேண்டிய கங்குற்காலத்திலும் மனமானது பிறசிந்தனை, காட்சி முதலியவற்றால் கவரப்படாதிருந்தும்; அக்கன்னியின் கலவியையே நனிவிரும்புதலானும், கலவி வாய்க்குமோ என்று ஐயம மிகுதலானும் அடையவேண்டிய நித்திரை அடைந்திலதெனக.

எள்கல் செல்லா எம் அறிவு கவர்ந்தோள் = இகழுதல் நடைபெற இயலாத எமது அறிவினை அபகரித்துக்கொண்டவளும்;

அவளையே நினைத்து அறிவுமயக்கமுற்றா எனக. அறிவின் பெருமைதோன்ற "எள்கல் செல்லா எம்மறிவு" என்றார்.

(இன்னபலவும் செய்தவளாகிய)

வண்மை ஆர்ந்த பெண்டு அனை நாள் = வளப்பம் நிறைந்த அப்பெண்ணினைத் தழுவிக்கொள்ளும் நாள்நாள்:

உள்ளங்கவர்தல் முதலாயவற்றிற்கேற்ற ஆற்றல்களின் வளப்பமே ஈண்டு வண்மை எனப்பட்டது. வேறுவகையுங் கூறலாம்.

எந்நாள் கொல்லோ எந்நாள் கொல்லோ = எந்த நாளோ? எந்த நாளோ?

அடுக்கெனக் கோடாமல் பிந்தியதை எம் நாள் என்று பிரித்தும் பொருள் செய்யலாம்.

[நந்நாளாகுக வந்நாளம்மா] அந்நாள் நந்நாள் ஆகுக - அவனது திருமணநாள் எமக்குச் சிறந்தநாளாகுக;

"ந" என்பது சிறப்பு என்னும் பொருட்டு. நச்செள்ளை, நப்பூதன், நக்கீரன் என்பனவற்றை நோக்குக. "நப்புணர்ந்தோர்" என்றதற்குப் பொருள்கூறுமாறு இதற்குப் பொருள் கூறுவாருமுளர். நம் + நாள் எனப் பிரித்துப் பொருள்செய்தலும் சாலும்.

பொருந்து நாள் பல வருந்திப் போக்கியும் = (மணநாளுக்கிடையே) உற்ற தினங்கள் பலவற்றையும் வருத்தங்கொண்டு செல்லவிடுத்தும்,

மணநாள் நியமிக்கப்படல் என்றோ? மணமுடங்கல் என்று வருமோ? எனப் பலவாறு சிந்தாகுலங்கொள்ளலின் "வருந்திப் போக்கியும்" என்றார்.

மணம் தரு நாளை மாண்புறக் காட்டும் = அக்கன்னியின் மணத்தைக்கொடுக்கின்ற நாளை (அரசிளங்குமரரெல்லாரும் இதுவென்று தெளியுமாறு) மாட்சிபெறக் காட்டுகின்ற,

முடங்கலைக்கண்ட அளவில் அக்கன்னி தந்தையே மணப்பனென்று மாட்சிமைப்பட்டனர் என்க.

முடங்கல் கண்டு = ஓலையைப்பார்த்து;

மடங்கா ஊக்கமொடு = சோம்பாத ஊக்கத்தோடு;

அக்கன்னி தம்மை மணப்பளோவென்னும் ஐயப்பாடு இடையிடையே தோன்றப்பெறினும் மனதை ஊக்கப்படுத்திக்கொண்டனர் என்க.

முள் ஈடு அடியின் முந்து நாள் கழிப்பியும் = முள்ளின்மேல் இடுதலைப்பொருந்திய பாதம் (எவ்வண்ணம் துன்புறுமோ அவ்வண்ணம்) போல மணநாளுக்கு முன்னுற்ற நாட்களைப் போக்கியும்;

மணவோலைபெற்ற தினத்திற்கும், பிரயாணநாளுக்கும் இடையுற்ற நாட்களைக் கழித்தலில் உள்ளாரும் துயரைப் புலப்படுத்த இங்ஙனம் கூறினார்.

உள்ளம் பிறக்கிட ஒரு நொடி சேர்ந்து = மனோவேகமும் பின்னிடுமவண்ணம் ஒரு நொடிப்பொழுதுக்குள்ளே (அக்கன்னி மாலைசூட்டும் மணமண்டபத்தைத்) அடைந்து;

பிறக்கிட—பின்னிட. "எண்பிறக்கொழிய விறந்தோய நின்னடி", "துணைபிறக் கொழிய" என்பன மணிமேகலை; "துறைபிறக்கொழியப் போகி", "காடுபிறக்கொழிய" என்பன பாட்டு.

வான் இடை மீன் என = விசும்பின்கண் நட்சத்திரங்கள் பூத்தனவென்று கூறும் வண்ணம்;

நீலம் விதானத்து ஒள் நிலவு காலும் தாளம் பந்தர் இடை = நீலவர்ணப்பட்டாகிய மேற்கட்டியின் கீழ் நிறுத்திய ஒள்ளிய நிலவைப்பொழிகின்ற முத்துப்பந்தரிடத்தே;

நீலவிதானத்தை வானுக்கும், தாளப்பந்தரை நட்சத்திரங்களுக்கும் ஒப்பிடுக. "நீல விதானங்கூறினார் முத்தொளி பெறுதல் நோக்கி, அஃது அக்காலத்து முத்துநோக்குவார் ஒப்புகக்கு விரித்துநோக்குப" என்றுங் கூறுப.

[மணியொன் பானு மலர்வுறக் குயிற்றிய] ஒன்பான் மணியும் மலர்வு உறக் குயிற்றிய = ஒன்பது வகை இரத்தினங்களையும் ஒளி பூத்திலகுமாறு பதித்த;

பதித்தலின் அருமைதோன்ற "மலர்வுறக் குயிற்றி" என்றார்.

பொன் புனை இருக்கை பொலிய வீற்றிருக்கும் = பொன்னால் விசித்திரமாகச் செய்யப் ஆசனங்கள் விளங்குமாறு அமர்ந்திருக்கின்ற,

இறுமாந்திருத்தலுமாம். இருப்போரது மேன்மைதோன்றப் "பொலிய" என்றார்.

அரசு இளம் குழாம் என்னும் அவ்வுடற்கு எல்லாம் = அரசிளங்குமாரர்கள் கூடிய கூட்டமாகிய அவ்வுடல்களுக்கெல்லாம்,

அவ்வரசிளங்குமாரர் இக்கன்னியைத் தம்முயிரெனக் கருதியதால் அவர்களை உடலுக்கொப்பிட்டனர். தலைமகளை உயிரென நினைத்தல் இயல்பே எனக.

"காணு மாபிற் றுயிரென மொழிப-ரணிலா மன்ற பொய்மொழிந் தனரே-யாஅங் காண்டுமெம் மருமம்பெற் றவரோ-சொல்லு மாடு மென்மெல வியலுங்-கணைக்கா னுணுகிய நுசுப் பின-மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே" என்ற பிறர்கூற்றையும் நோக்குக.

இருண்ட கூந்தல் = இருள்சான்ற கரிய கூந்தலும்,

[மருண்ட விழித்துணை] மருண்ட துணை விழி - மருட்சி பொருந்திய இரு கண்களும்;

ஆடவர்க்குழாங் கண்டமையின் மருட்சி கூறப்பட்டது.

ஏங்கு சிறு இடை = (கூந்தல் முதலியவற்றைத் தாங்குதற்கியலாது வருந்தி) வாடுகின்ற இடையும்;

வீங்கு பெரும் கோங்கு = விம்மிப்பெருத்த கோங்கரும்பொத்த தனங்களும்;

காந்தள் செங்கை = செங்காந்தள் மலர்போன்ற கைகளும்,

மாலையையளிக்கும் பெருமைதோன்றச் "செங்கை" என்றார். "நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை-தாக்கணங் கனையவ டனத்திற் றைத்தவே" என்றாங்குப் பார்ப்பவர் விழி வீச்சுப்படியுமிடங் குறிப்பான செங்கைக்கும் இடைக்கும் நாப்பண் கோங்கு கூறப்பட்டது.

கவினறு அமை குமிழ் = அழகுவாய்ந் தமைதிபெற்ற குமிழ்போன்ற மூக்கும்;

இவை = ஆகிய இவை தங்களை;

ஏர் பொலிவு உற்று இன் நடை தழீஇ = சுமந்து விளக்கம்பெற்று இனிய நடையைப் பொருந்தி;

மாலை சூட்டற்குவரும் நடையென்பது தோன்ற "இன்னடை" என்றார். இவளுக் கொத்த நடை என்றுங் கூறுப.

ஒரு தனி உயிர் உலவின்று = ஒப்பற்ற தனித்த உயிர் (அம்மண்டபத்தில்) உலாவியது;

அதுவே = அவ்வுலவியரு முயிர்தான்,

ஒவ்வோர் உடலைக் குறுகுந் தொறும் = அரசக்குழுவினுள்ளமைந்த ஒவ்வோர் உடலை கிட்டும் பொழுதெல்லாம்;

அ உடல் = அந்த உடலானது,

பைய உயிர்த்து பச்சு உற்று இன்புறும் = மெதுவாக மூச்சுவிட்டுத் தெளிந்து இன்பத்தை அடையும்,

மாலை சூட்டுவாள் என்னும் தெளிவு கருதி இங்ஙனமாய மகிழ்ச்சி எய்தப்பெற்றதெனக. அவள் வருதல் உயிர்வருதலை ஒத்தது.

தீர்வு உழி உயிர்ப்பும் தீர்வு உற்று ஒழியும் = (கிட்டிய உடலத்தைவிட்டுப் பிறிதோர் உடலைச் சார்வான்) விலகும்போது (நீக்கப்பட்ட அவ்வுடலும்) மூச்சற்று (சசெத்தபிணம் போல) அடங்கிவிடும்,

[கண்ணுடையீரே காணமின்-பெண்ணுறு சிறப்பின் பெருமிதம் உணர்ந்தே] கண்ணுடையீரே பெண் உறு சிறப்பின் பெருமிதம் உணர்ந்து காணமின் = கண்களைப் படைத்திருக்கின்றவர்களே பெண்பாலார்க்கு ஆண்பாலார் கொடுக்கின்ற விசேடத்தால் எய்தப்பெறும் மேன்மை இதுவெனத் தெளிந்துகொண்டு இக்காட்சியைக் காணுவீர்களாக.

உணராது பார்த்தலிற் பயனில்லையாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

குறமட வோர்கள் கூஉய் நகைக்குந்
குன்றத்துச் சீறூர்ப் பெருங்குடி யோனே
பொங்கிருள் விசும்பிற் பூத்தபன் மீனிடைத்
திங்கள் மலர்ந்து சிறந்தாங்
காயத் திடை விளங்கு மாயத் திரு மகளே

---

## குறிஞ்சி.

இது தலைமகன் பாங்கற்கு இவ்விடத்து இத்தன்மைத்தென உரைத்தல்.

எ—று. பாங்கற் கூட்டத்துத் தோழனை அந்நாள் எவ்விடத்து எவ்வியல்பிற்று என்று கடாவத் தலைமகன் குன்றகத்ததொரு சீறூர், அச்சீறூரகத்து உள்ளதொரு பெருங்குடியில் வந்த திருமகள்; அவளது காட்சி என்னை என்வயம் அழித்துத் தன்வயமாக்கியது, புலனும், மனனும், அறிவும், அவள்பாற் புணர்ப்புண்டு மயங்கிய; அம்மயக்கம் அவளாலன்றிப் பிறரால் விடுவித்தற் கரியதுகாண் என்று வருந்திக் கூறுகின்றது. "பாங்கர் கூட்டிய வாயில் பெட்பினும்" என்றார் தொல்காப்பியனாரும்; "ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் றன்வயின்—பாங்கின் ஞேரிற் குறித்தலைப் பெய்தலும்" என்றார் இறையனாரும். மேற்காட்டியதற்கு இவையே இலக்கணமென்றறிக.

(இ—ள்.) உடல் படும் உயிர் எல்லாம் உடலின்கண்ணே பொருந்திய சீவராசிக ளெல்லாம்;

உடலில்லா வுயிரும் இருத்தல்பற்றி இங்ஙனம் கூறினார். சீவராசிகள்—தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் எழுபிரிவினுள்ளடங்குமெனவும்; இவற்றின் யோனிபேதம் எண்பத்துநான்குநூறாயிரமெனவும் கூறுப. தேவர் பதினான்கு நூறாயிரம், மக்கள் ஒன்பதுநூறாயிரம், விலங்கு பத்துநூறாயிரம், புள் பத்துநூறாயிரம், ஊர்வன பதினொருநூறாயிரம், நீர்வாழ்வன பத்துநூறாயிரம், தாவரம் இருபதுநூறாயிரம் என்ப. அன்றியும் தேவர் பதினாறுநூறாயிரமெனவும், தாவரம் பதினெட்டுநூறாயிரமெனவும் கூறுப.

[உவந்து தம் மரபு நனி படப் புணர் கொள்கை விடற்கெளிதே கொல்] தம் மரபு நனி பட உவந்து புணர் கொள்கை விடற்கு எளிதே கொல் = தங்கள் பரம்பரை மிகுதியுந் தோன்றற் பொருட்டு மனமுவந்து கூடுகின்ற கோட்பாடு விட்டொழிதற் கெளிதாகுமோ;

இல்லையென்றபடி. மனமகிழ்ச்சி இம்மை மறுமைகளின்றியமையாததாதலின் "உவந்து" என்றும், அவ்வுவப்பின் காரணத்தினாலே பெறக்கூடிய நன்மை தமக்கேயாதலின் "தம" என்றும், அப்பேறுதான் பரம்பரை என்பார் "மரபு" என்றும், அம்மரபு மிகப்பெருகவேண்டும் என்பது எல்லாச் சீவராசிகளுக்கும் உடம்பாடென்பது தோன்ற "நனிபட" என்றும், அப்படுகைக்கு வேண்டிய செய்கை புணர்ச்சியாதலிற் "புணர்" என்றும், அப்புணர்தலும் உயிர்த்தமக் கெல்லாம் இயற்கைத்தாகிய ஒருமதம் என்பார் "கொள்கை" என்றும், அக்கொள்கையை விடுதல் துறந்தார்க்கன்றி ஏனையோர்க்கியலாது என்பது தோன்ற "விடற்கெளிதே கொல்" என்றும் கூறினார்.

பொறி வழிபட்டு நெறி முறை தவறி = மனசைப் புலன் சார்பாக ஐந்தாகிய பொறி வழியே அகப்படுமாறு விட்டு அவ்விடுகையினாலே நீதியையும், அந்நீதிபயின்ற முறையையும் புறம்பே நழுவவிட்டு;

பொறியை இயக்குவது புலனாதலின் அப்புலனின் சார்பாக என்றும், அப்புலனின் வழிப்படுவது மனசாதலின் அம்மனசைப் பொறிவழிப்பட்டதாகவும் கூறினும்.

உயிர் தன்னொடு வேற்றுமையில்லாத அறிவைக்கொண்டு தனக்கு வேண்டியவற்றை இனிது முடித்துக்கொள்ளும்; அவ்வறிவோ தனக்கு வேண்டியவற்றை மனசை ஏவி முடித்து

கொள்ளும்; அம்மனசும் தனக்காவனவற்றைப் புலனை இயக்கி நிறைவேற்றிக்கொள்ளும்; அப் புலன் பொறியுள்ளடங்கி அவற்றையெல்லாஞ் செய்து முடிக்கும். இவ்வரிசை முறையாகத் தனக்காவனவற்றைச் செய்துகொள்ளும் உயிர் இருமை நலங்களையும் இனிது துய்க்கும்.

புலன்வழியே மனசும், மனசின்வழியே அறிவும், அறிவின்வழியே உயிரும் ஈடுபட்டு வரின் பணியாளனுக்குள்ளடங்கிய தலைவனைப்போல ஆவனகெடுத்து அல்லனசூழ்ந்து அல்லற் படுதற்கேதுவாகுமென்க.

பிற்கூறிய இதனையே "பொறிவழிப் பட்டு நெறிமுறை தவறி" என்றார்.

குறுகிய தமக்கு எ(ல்)லாம் அறிவு கெட்டு அயாதல் — தம்மாட்டனுகிய எல்லாவற்றிற்கும் (ஈடுபட்டு வருநதலினாலே) அறியால் உளவாகும் பயன்கெட்டுத் தளர்ச்சி அடைதல்;

குறுகுதல்—அணுகுதல். "குறுகா நறிவுடையார்", "கோவலன் றன்னைக் குறுகின னாகி", "கோயின் மன்னனைக் குறுகினன்" எனப் பிறரும் இப்பொருட்டாதல் அறிக.

பொறிவழிப்பாட்டின கேடுகளை "பெரும்பிணி களையும்" என்ற இந்நூற் பாட்டானும் தெளிக.

"அறிவுகெட்டயர்தல்" என்றதனால் உயிரும், மனமும் ஆணவம் விரிக்கப்பட்டன.

பலவற்று இயற்கை — பல சீவராசிகளுக்கும் அமைந்தோர் இயல்பாகும்;

சில வற்றுக்கு இன்று என — சில சீவராசிகளுக்கு அவ்வாறு அயாதல் இல்லையென்று;

என்றது மனசு முதலியவற்றை அடக்கி ஆளும் அறிவை.

செப்பு வளம் நூல் நுட்பம் உணர் தெளிவினை — உரைக்கின்ற வளப்பமமைந்த உண்மை நூல்களிலே அமைந்துகிடக்கும் நுண்ணிய பொருளை (எல்லாப் பொருள்களையும் அறிந்து அறிந்தவற்றைப் பலகாலும்) ஆய்ந்து கொள்வதாற் படைத்ததெளிவினை உடையோய்;

மேற்கூறியவற்றை அனுசரிக்கின் இருமைப்பயன் கிட்டுமாதலின் அதனைச் "செப்பு வளம்" என்றார். மற்றவற்றை உரைக்கும் நூலெல்லாம் வளமைபெற்றன என்பது போதரற் பொருட்டு வளநூலென்றாருமாம். முன்னொடுபின் முரணாது சுருங்கச்சொல்லுதல் முதலாய அழகுகளும், உடம்படல் முதலாய மதங்களும், நுதலியதறிதல் முதலாய உத்திவகைகளும் பிறவும் ஆண்டாண்டுப் பொருந்துமாறு நூல்செய்தலின் அதனைக் காண்டிகையுரை முதலியவற்றின உதவிகொண்டு அறிமதான் என்பது போதர (முதன்மாணாக்கனது தன்மையுள்ள இவன் நல்லாசிரியன்பால் அதனைப் பலவிகற்ப உரைகளால் உணர்ந்தானாதல்) "நுட்பமுணர்" என்றும், தன்னொத்த மாணாக்கரோடு பயின்றும், பலரோடாக்கூட பயிற்றியும் வருதலினாலே அந் நுட்பமெல்லாம் தெரிந்துகொண்டமைபற்றித "தெளிவினை" என்றுங்கூறினார்.

இன்னுயிர் அனையை = இனிய உயிரை ஒத்தவனே;

உயிருக்கு இனிமைசேர்ந்தாங்கு தனக்குப் பாங்கன வாயத்தான் என்பது போதர "இன்னுயிரனையை" என்றார்.

உயிர் அருமையானது, அவ்வரிய உயிரும் இனியதாயமையின் மிகவிசேடமுடைத்தாகும். பாங்கனும் அத்தகையினனாதலின் "இன்னுயிரனையை" என்றானுமாம்.

என் உறு செய்கை பல் நாள் பயின்று அறி பண்பினை — எனக்குப் பொருந்திய செய்கைகள் எல்லாவற்றையும் பலகாலமும் கற்று அகக்கற்ற விசேடத்தால் இவையென அறிந்துகொண்ட இயல்பினையும் உடையாய்;

உரைப்பனவும், செய்வனவும் உள்ளத்தொடு பொருந்திவருதலைப் பலகாலமாகப் பல வாறுகவும் பார்த்துவருதல் இலக்கணமாதலின் அதுதோன்ற இங்ஙனம் கூறப்பட்டது. உறு செய்கை என்றதனாற் சொல்லுங்கூட்டப்பட்டது. கோவையாரினும் "யானன்ன பண்பனே" என்றதுவும் இது கருதிப்போலும், என்னை? வேற்றுமையின்றென்பது பெறப்பட்டதாதலின் என்க.

இதனால் கூட்டற்குரிய வழியும் பிறவுங் கூறப்பட்டன.

எவன் கொல் சொன்னே நினைத்தனை என்னு இளைக்கும் எனக்கு மகிழ் ஈத்த தனக்கு நிகர் இல்லோய்=யாது காரணத்தானோ என்னை இத்தகைய இழிந்தவனாக வாளா கருதிவிட்டனை என்று நினைந்து மனம்வருந்துகின்ற எனக்கு மகிழ்ச்சியைக்கொடுத்த நினக்கு நின்னையன்றிப் பிறர் நிகரில்லாத பாங்கனே;

தான் நினைந்தவாறே பாங்கனும் நினைந்து வேண்டியதை இனிது முற்றுவிப்பான் என்று நினைந்தகொள்கைக்கு மாறாக அவன் நினைத்து உரைத்துவிட்டான்; ஆதலின் "எவன்கொல்" என்றும், அந்நினைத்தமை வீண் என்பது போதரக் "கொன்னே" என்றும், என்னுத்தபாங்கனாய் இருந்தும இங்ஙனம் கருதினான் என்பதுதோன்ற "நினைத்தனை யென்னு" என்றும், தனக்குப் பற்றுக்கோடாகிய பாங்கனும் வேறுபட்டமையால் இனிச்செய்வது என்னே என்றிரங்கினான் என்பதுபோதர "இளைக்கும்" என்றும், இங்ஙனமாய யான் உய்யுமாறில்லை என்ற முடிவுக்குவந்த எனக்கு வருவது துன்பமேயாகவும் இன்பத்தை அளித்தாய் என்பதுதோன்ற "மகிழ்" என்றும், ஒன்றீதலே ஈகை அவ்வண்மை நினக்குரித்து என்பதுதோன்ற "ஈத்த" என்றும், எனக்கு நிகரானவன் நீ என்று இதுகாறும் எண்ணியிருந்த எனது எண்ணத்தை மாற்றி நினக்குநிகர் நீயே ஆனாய் என்பது தோன்றத் "தனக்குநிக ரில்லோய்" என்றுங் கூறினா.

இனித் தலைமகளது இயல்பு கூறப்படும்.

உருக்கி பாய்ச்சி ஒழுகிய தகைம் திரு கிளர் பாவைக்கு=(பிறலோகங்கள் அகலுமாறும், உருவாக்கற்கியலுமாறும் உலையிலேவைத்து) உருக்கி (உருவம் பதியுமாறு புனையப்பட்ட உள்ளீடில்லாத மட்குகையிலே) பாயவிட்டு (அவ்வவ்விடங்களிலே ஒழுங்குபெற்று நிரம்புமாறு) ஊற்றப்பட்ட தங்கத்தாலாகிய (கண்டாரால் விரும்பப்படுந்தன்மை வாய்ந்த) அழகுபொலிந்த பிரதிமைகரு;

திரு என்பது இலக்குமி முதலாய பலபொருட்குரிய கிளவியாயினும் இன்னோரன்னவிடங்களிற் கண்டாரால் விரும்பப்படுந்தன்மைவாய்ந்த அழகினையே குறிக்கும். யாவனொருவன் ஒரு அருமைப்பொருளைக் கண்டானோ அக்கண்டவற்கு அப்பொருண்மேற் சென்றவிருப்பத்தோடே கூடிய அழகு திருவெனப்படும். அதன்மேல அவற்கு விருப்பஞ்சேறல் அதனிற் சிறந்த உருவும், நலனும், ஒளியும எவ்வகையானும் பிறிதொன்றற்கில்லாமையால் என்க. திரு என்பது அழகெனும பொருள்பயக்கச் செய்யுளிலன்றி வழக்கினும் திருவாயில், திருக்கோயில், திருப்பணி என்றாங்குவருதல் காண்க.

ஒன்பான் மணியும் உறுப்பு செய்தென்ன=நவரத்தினங்களாலும் அவையவங்களைச் செய்துவைத்தாலொத்த;

பவளம் வாய்க்கும், முத்து பல்லுக்கும், பச்சை கூந்தலுக்கும், நீலம் கண்ணின் கருமணிக்கும், சிவப்பு செவ்வரி முதலியவற்றிற்கும, ஏனைய ஏனையவற்றிற்கும் ஏற்றவாறுருப்பாக்கிக் கொள்க.

விருப்பு உறு மேனியள்=எவரும் விரும்பத்தக்க தன்மைசான்ற உடலினையுடையவளும்;

இவளது பொனபோன்ற மேனியிலே நவரத்தினமொத்த உறுப்புக்கள் அமைந்தன; அவ்வமைப்பு விருப்புறுதற்குக் காரணமாயிற்றென்க. அவயவ இலக்கணங்களுக்கிசையவே குணஞ் செய்கைகளும் அமையுமாதலின் அவற்றையுந் தழீஇக்கொள்க.

வெருண்டு ஓடும மானின்=(யாதேனும் ஒன்றைக்கண்டவிடத்து) வெருட்சிகொண்டு (தாவிப்பாய்ந்து சேய்மைக்கட்சென்று திரும்பிப்பார்த்துப் பின்னரும்) ஓடமுயல்கின்ற மானைப் போல;

மருண்டு ஓடும் நோக்கினள்=(பயிலாதவற்றுள் யாதேனுமொன்றைக்கண்டவுடன்) திகைத்து ஓடமுயலுமாறு நோக்குகின்ற நோக்கத்தை உடையாளும்;

இதனால் அவளது நாணம், அச்சம் முதலியன கூறப்பட்டன. "மருண்ட பிணைபோல் விழியாளை" என்பது மதனநூல்.

கூந்தல் காடும் கோங்கமும் கூறையும் ஏந்தி இளைத்த இன் நடை மடவோள் = கூந்தலாகிய காட்டையும், கோங்கரும்பையொத்த தனங்களையும், ஆடையையும் சுமந்து (அச்சுமத்தலினாலே) வருந்தி மெலிவுற்ற இனிய நடையையுடைய மடப்பம்வாய்ந்தவளும்;

பெண்டன்மையைச் சிறப்பித்தல் கூந்தலும், தனங்களுமாதலின் இவையே கூறப்பட்டன. ஒன்பான்மணியும் உறுப்புக்களென முன்னர்க் கூறப்பெற்றிருப்பவும் பின்னரும் கூந்தற்காடு முதலியவற்றைக்கூறியது குற்றமாகாதோவெனில் ஆகாது; என்னை? இவற்றைத்தாங்குதலின் இளைத்தநடையாள் என்று சொல்லப்படுதலின் எனக. தனத்தைக் "கோங்கமும்" என்று ஆகுபெயர்க்கிளவியாலுரைத்ததென்னெனில் இக்காலத்தார் அவையல்கிளவிகளை இவையெனவோராமல் தனம், அல்குல முதலியவற்றையும் அவற்றின்பாற்படுத்துவராதலின் அவர் தமக்கிணங்குமாறு இங்ஙனம் கூறினார் என்க. பிறாண்டும் இந்நூலாசிரியர் இங்ஙனமாய சொற்களை இவ்வகையாகக்கூறுதலும் இதுபற்றியே என்க. இல்–இல்லுகக்கொத்த நடையுமாம்.

இயற்கையிலே மெல்லியள், மெல்லிய நடையுடையாள், இவற்றையுஞ் சுமந்திளைத்த நடையுடையாள் என்று கூறமுகத்தானே அவள்மேலன்பு சுரக்குமெனக்கருதி இங்ஙனம் கூறப்பட்டதென்றலுஞ் சாலும். "துணையிள முலைப்பாரம்–நாலுஞ் சுமந்தெந்த விதமாக நிமிர்ந்து நடந்து வந்தனள் தோகையித் தனைதூரம்" என்பது சித்திராங்கதை விலாசம். அணிகலன் முதலியவற்றைக் கூறாதுவிட்டனர் "யாரே–யழகுக்கு அழகுசெய் வார்" என்பது கருதியும், கூந்தலும் கோங்கமுமே தாங்கற்கரிய பொறையாயிருப்பக் கண்டிரங்குந் தலைமகன் பிறபொறைகளையுங் குறிக்கொண்டால் என்படுவன் என்பது கருதியும் என்க.

கோங்கம்–கோங்கிலவமரம்; ஈண்டுக் குறிக்கப்பட்டது கோங்கு, அது கோங்கம் என விகாரப்பட்டது.

அறுபடல்பற்றி ஆடையை அறுவை என்றுங் கூறுதல்பற்றிக் கூறை எனப்படுமென்ப. இக்காலத்தார் மணமகன் மணவாட்டி யுடுத்தற்கு முதற்கண்வாங்கிக்கொடுக்கும் புதுப்புடவையைக் கூறை என்பர். முற்காலத்தார் பலவகைப் புடவைகளையுங் கூறையென்று வழங்கிவந்தனர். அவர்காலத்துக் கூறைவிகற்பம் பதினேழு; அவை, கந்தை, விரிபம், கண்டை, பிடியல், வேதகம், புங்கம், பங்கம், கதரியம், துரியம், சிறில், நாகம், பாரி, பாரிதம், காம்பு, நேத்திரம், மயிரகம், வயிரியம் என்பனவாம்.

[கொந்தலரேந்திச் சேர்ந்த கையினள்] அலர் கொந்து ஏந்தி சேர்ந்த கையினள் – பூங்கொத்துக்களை ஏந்துதலாற் கனிச்சிவந்த (அத்துணை மெல்லிய) கையுடையாளும்;

அச்செம்மையின் நீட்சியும், காண்பவர் கொள்ளும் இரக்கமிகுதியுந் தோன்றற்பொருட்டுச் "சேர்ந்த" என முற்படுத்தது போலும்.

இனித் தலைமகன்றனக்கு மாலைசூட்டற்பொருட்டு மணமாலையைக் கையிலேந்தி வைத்திருந்தாற் சிவந்தகையினள் என்றுகூறி இருவர் அன்புடைமையையும் விளக்கினாராயிற்று என்றுங் கூறுப.

கூத்து அறிகில்லான் = நாடகத்தை ஒருபோதும் பார்த்தறியாத ஒருவன்;

புதுமைக்கு வியப்பும், விருப்பும் ஈணியுளவாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

பார்த்து வந்து இல் இடை மேவிய பொழுதினும் – (அந்நாடகத்தைக்) கண்டுவந்து வீட்டின் கண்ணே (நித்திரையிலே) பொருந்திய அமையத்தின்கண்ணும்;

"உவந்து" எனக் கண்ணழித்தலுங் கூடுமாதலின் "கண்டு வந்து" என அவ்விரு பொருளும் பொருந்துமாறு உரை கூறினோம். இங்ஙனமே ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிப்போதலையும் ஆண்டாண்டுக் கண்டுகொள்க.

நாடகங்கண்டான் இல்லிடை மேவிய பொழுது என்றமையாற் றுயிலுண்மை பெறப்பட்டது. அயர்ச்சியால் நித்திரையும், விழிப்புமில்லாத நடுவுநிலையே அவனது நிலை என்பது கருதி "மேவிய" என்றார். அந்நிலையின் இயல்தோன்ற "மேவிய" என்றனபெடுத்தது.

இனி, மேவிய என்னும் சொல்லாற்றலாற் பொறியடக்கிய புலன்கள் மனமிடைப் பொருந்திய பொழுதிலே எனவும் பிறவாறும் பொருள்படுதலையும் நுனித்துணர்ந்துகொள்க.

கண்டன கேட்டன மட்டும் தோன்றும் வகையில்=அந்நாடகசாலையிலே தான் கண்டு கொண்ட காட்சிகளும், கேட்டுக்கொண்ட கீதம், உரை, வாத்தியம் ஆகிய இவைகளும் மாத்திரமே அவனுக்குத் தோன்றுகின்ற முறைமைபோல;

அளியெனும்=நின்னாற் புரத்தற்குரியவனென்று தோற்றப்பட்ட யானும்;

காண்பன அன்னோன் கவின்பெறும் வடிவம்=காண்பன எல்லாம் அத்தகையானது அழகுமிக்க உருவமேயாம்;

உருவெளித்தோற்றமே ஈண்டுக் குறிப்பிடப்பெற்றது.

"பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள் புகுந்தாளை நோக்கி—மெய்ந்நின்ற கூடவாளவனே ருற நோக்கு நங்காய்—மைந்நின்ற வாட்கண் மயிலின் றெனவந்தென முன்னர்- இந்நின்றவ ளாங்கொ லியம்பிய சீதை யென்றான்", "செந்தாமரைக் கண்ணொடுஞ் செங்கனி வாயினோடுஞ்—சந்தார் தடந்தோ ளொடுந்தாழ் தடக்கைக ளோடு—மந்தா ரகலத் தொடுமஞ் சனகுன்ற மென்ன—வந்தா னிவனாகு மவ்வல்வி லிராம னென்றாள்", "பெண்பா லுருநா ளிதுகண் டதுபேதை நீயீண்—டெண்பாலு மிலாததொ ராணுரு வென்றி யென்னே—கண்பா லுறுமாயை கவற்றுதல கற்ற நம்மை—மண்பா லவரேகொல் விளைப்பவர் மாயை யெனறான்", ஊனறு முணர்வப் புறமொன்றினு மோட லின்றி—யான்று முளதா நெடிதாசை கனற்ற நின்றாய்க—கேன்று னெதிரே விழிநோக்கு மிடங்க டோறுந்—தோனறு மனையா ளிதுதோன றிததாகு மென்றான்", "அன்றாளதுகூற வரககனு மனன தாக—நின்றானவ விராமனைக் காண்குறுநீரெ னென்று—னெந்நா ளவனென்னை யித்தீவரு மின்னல் செய்தா—ணநநாளன் முதல்யானு மயாததில னுத மென்றாள்" எனனும் இராமசரிதைப் பாககளால் அது புலப்படுமெனக.

கேட்பன அன்னோன் தீம் தேன் கிளவி=யான் கேட்பனவெல்லாம் அததகையானது தித்திப்பாகிய தேனொக்க வார்த்தைகளே;

உரைப்பன அன்னோன் விழுப்பத்து ஒழுக்கம்=யான் உரைப்பனவெல்லாம் அத்தகையானது மேன்மைதக்க ஒழுககஙகளே;

ஆங்கு என்பது அசை.

கண்ணும் காதும் வாயும் அவன் அன்றி நண்ணில ஆதலின்=கண்ணும், காதும், வாயும், அவனது காட்சியையும், உரையையும், ஒழுக்கத்தையுமேயன்றித் தமக்குப் பற்றுக்கோடாகப் பிறவொன்றனையுஞ் சார்ந்தில, அதுகாரணததானே;

நாடும் எனது உயர் உள்ளமும அவன் சீர் உள்ளி உடைந்தன்று=புலன்களின் வழியே சென்றறிந்துகொண்ட என்னுடைய உயர்ச்சிவாய்ந்த மனமும் அவனது பெருமைகளையே நினைத்து(த்) (அவனைப் பெறுதற்கு விழைந்தும் கிடைக்கப்பெறாமையானே) தளர்ச்சியடைந்து விட்டது;

புலன்வழிச் சார்ந்தாலும் நலனையே மனமபெற்றது என்பது தோன்ற "நாடு மெனது உய ருள்ளமும்" என்றும், பாஙகனால் அவனை எய்தலாகும என்றமையும் வீணாயிற்று என்பது தோன்ற "உடைந்தன்று" என்றும் கூறினர். பாங்கன் தலைவற்குச் சார்பாகவருதற்கு முன் னரே அவ்வுடைதல் பொருந்திற்று என்பது போதர இறந்தகாலத்திற் கூறினருமாம்.

ஆடை நீர இன்றி அமையா வாழ்க்கையில்=உடையும் நீரும் இல்லாமற் பொருந்தாத மக்கள் வாழ்க்கையைப்போல;

"நீரின் றமையா வுலகம் போலத்—தம்மின் றமையா நந்நயந் தருளி" என்றார் கபிலரும்; "நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்—வானின் றமையா தொழுக்கு" என்றார் குறளி னும். ஆடை என்றமையான் மக்கள்வாழ்க்கையை உணர்த்திற்று.

தான் இன்றி அமையேன் என கருதவைத்தோன் = அவள் என்றும் புணர்ந்தாலன்றி யான் வாழ்க்கையொடு பொருந்தமாட்டேன் என்று யான் நினைக்குமாறு வைத்தவளும்;

இன்ன பல ஈத்த இயல்பு தவழ் ஆற்றல் தன் அகத்து அடக்கிய மின்னு பூ கொடியோள் = இத்தகையனவாகிய பலவற்றையும் எனக்குக்கொடுத்த இயற்கையமைந்த வல்லபத்தைத் தனக்குள்ளே அடக்கிக்கொண்டிருக்கின்ற மின்னலைப்போன்றொளிரும் பூங்கொடியைப் போன்றவளுமாகிய அத்தலைமகள்;

பெண்டன்மையின் சிறப்புததோன்றத "தன்னகத் தடக்கிய" என்றார். மின் என்னும் இலேசானே முகில் மின்னலையும், இடியையுந் தன்னகத்தடக்கியவாறொப்ப மேற்கூறிய ஆற்றலையும் தன்னகத்தடக்கியுள்ளாள் என்றுவமையும் பொருள்பலவற்றையுந் தழீஇக்கொள்க.

இதுகாறுந் தலைமகளது இயல் கூறப்பட்டது.

கரு விரல் குரங்கு இனம் = கரிய விரல்களையுடைய வானரக்கூட்டங்கள்;

கல நீர் சுனையில தெள் நீர் ஆடி = கல்லிலேயுள்ள நீரினையுடைய சுனையின்கண்ணே பொருந்திய தெளிந்த சலத்திலே ஸ்நானஞ்செய்து;

கல்லின் வழியாக ஊற்றில் வந்தநீர், சுனையிலுள்ளநீர், தெளிந்தநீர் என்க.

பூ சினை வேங்கைக்கு = பூக்களையுடைய கொம்புகள் பொருந்திய வேங்கைமரத்திற்கு;

[குவியிலைத் தேக்கிற் குளிர்நீ ராட்டி] தேக்கு இலை குவியில் குளிர நீர் ஆட்டி = தேக்கினது இலைக்குவியிலே கொண்டுவந்த குளிர்ந்தநீரால் அபிடேகஞ்செய்து;

குவிவு—நடுவிற்பள்ளமுண்டாகச்சூழ்ந்த மருங்கினை ஒடுங்க நெருக்கித் திரட்டிப் பாத்திர வடிவாகக்கோலப்பட்டது. இலைகளாற் கோலப்படும் பாத்திரம் தொன்னை எனப்படும்.

பாறை வயிற்று உரிஞ்சிய பை சாந்து அப்பி = கற்பாறையின் இடமாகத் தேய்த்தெடுத்த பசிய (ஈரம்புலராத) சந்தனக்குழம்பைப் பூசி;

சந்தனமரக்கிளைகள் வீசுகின்ற காற்றினால் அசைக்கப்பட்டுக் கற்பாறையில் உரோசுவதாலுண்டாகும் குழம்பென்க. குரக்கினத்தாற் பாறையில் அரைக்கப்பட்டதுமாம.

அகில புகை ஊட்டி = அகிற்புகையால் தூபங்கொடுத்து;

யானை முதலியவற்றால் ஊறுவராதபடி குறவர் மூட்டும் நெருப்பை அப்புகைக்கு ஒப்பிடலாம்.

மலர் தூஉய் போற்றி = குறிஞ்சி முதலாய பூக்களைத் தூவிப் போற்றிசெய்து;

அக்குரங்குகள் இருந்தபான்மை போற்றிசெய்வார் நிற்கும் நிலையினைப் போன்றதென்க.

தேனும் தினையும் கிழங்கும் படைஇ = தேனையும், தினையையும், வள்ளி முதலாய கிழங்குகளையும் நிவேதித்து;

தினை அரிசிகொண்டு பல்வகையுணவும் பாகஞ்செய்யப்படுமாதலின் தினைமா என்னாது தினை என்றனர்.

முருகு ஏற்று ஆட்டம் முயறல் கண்டு = முருகத் தெய்வத்தைத் தங்கள் உள்ளத்திலே ஏற்றுக்கொண்டு ஆட்டம் முயல்வதைப் பார்த்து;

முதனாள் குறவர்கள் முருகயர்தலைக் கண்டிருந்த குரக்கினம் தாங்களும் அங்ஙனமே செய்தன என்க. வள்ளியைக் களவிற் புணரவந்த முருகன் குறவாவருதலை நோக்கி வேங்கை மரமாகிநின்ற காரணத்தால் வேங்கைக்குப் பூசனைபுரிதலும் இயல்பாயிற்றென்க.

ஆங்கு உள குற மடவோர்கள் = அவ்விடத்துள்ள குறச்சாதியினராகிய மடப்பம்வாய்ந்த பெண்கள்;

கூஉய் நகைக்கும் குன்றத்து சிறு ஊர் பெரும் குடியோள் = கூவிச்சிரிக்கின்ற குன்றத்துள்ளதோர் சிற்றூரிலேயுள்ள பெருங்குடியிற் பிறந்தவளாவாள்;

[பொங்கிருள் விசும்பிற் பூத்தபன் மீனிடை] இருள் பொங்கு விசும்பில் பூத்த பல் மீன் இடை = இருண்மிகுகின்ற ஆகாயத்தின்கண்ணே தோற்றும் பல நட்சத்திரங்களுக்கு நடுவிலே;

திங்கள் மலர்ந்து சிறந்தாங்கு = சந்திரன் உதயமாகிச் சிறப்படைந்தவாறேபோல;

ஆயத்து இடை விளங்கும் மாயம் திருமகள் = மகளிர் கூட்டத்தின் நடுவிலே சிறந்து தோன்றும (என்னை மயக்கும்) மாயத்திலவல்ல அழகிய மகளே;

மாயத்திருமகள், மின்னுபூங்கொடியோள், குன்றததுச சீறூர்ப் பெருங்குடியோள் எனக.

இனி இப்பாட்டிற் கிடக்கும இறைச்சியைக் கூறுதும். இறைச்சி என்பது கூற வேண்டியதொரு பொருளின்புறத்தே புலப்பட்டு அதற்குபகாரப்படுவது.

இறைச்சி—கருப்பொருட்கு ஏயம்.

உள்ளுறையில அடங்குமாறு போன்றுவரும் இறைச்சியும் உண்டென்ப. "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே". "இறைச்சியிற பிறக்கும் பொருளுமா ருளவே—திறத்தியன மருங்கிற றெரியு மோர்க்கே" எனபன தொல்காப்பியம்.

இறைச்சி: குரக்கினம புனலாடி, அபிடேகஞ்செய்து, தூபங்கொடுத்து, மலர்தூவி, வேங்கையைப்போற்றி, முருகேறறூட்டலைக்கண்ட குறமங்கையர் நகையாடாநிறபர் என்றது; காப்பன காத்துக் கடிவன கடிந்து மனபதை ஓம்புதலை மேறகொண்ட என்னுள்ளத்துள் ஒரு மகள் புகுந்து தங்கி என்னை ஆட்டுதலை அறிந்தீர் நகையாடி அழுங்கச்செய்தலை எனபதாம.

திணை—குறிஞ்சி; கைகோள்—களவு; கூற்று—தலைவன் கூற்று; கேட்போர—பாங்கன்; இடம—தலைமகன இலலம்; காலம—நிகழ்காலம; பயன—பாங்கனிடத்துரைத்தல்; முன்னம (கருத்து)- தலைமகளை கூட்டங் ஈப பெறுதல்; மெய்ப்பாடு—வருத்தமபற்றிய இளிவரல்.

---

(66) பூத்தரு புணர்ச்சியா லறத்தொடு நிற்பாற் றாமை துரைப்பாழி மலைவளங் [illegible]

வான்படா மரனெலா நிற [illegible] செய்
பூசிய பல்வரைக் கோவலர் [illegible] தெகென
பசலைய வடிவிற சிறியவும [illegible]
மாகி விளங்கு மகடெலவப லாடசிபு
நரைநிற வுடையோர கொவவினைத தொடாபாற
புலைநிறை கதுவிப புலன்மைய குறீஇச
சாலெறி தருவிய தண்ணளி சாந்து
கெளிகாய கலையும பொதாபுரை மலையிடைச
செறைகைக குறிய சேய்நெறிப புகக்குழி
பிருளவது போனனுநன் இருமாடு போகுழி
விடிவது போனறு விடிநதிலங்க வியபபும
வெறறிலை பொதகு விளங்குசிற றிலையு
முருளபடட பசசை பொனறிய முதகின்
கோப்பெனத் தூங்குங் குறுமிளகு படர்ந்து
பாத்த மரனெலாங் காட்சிதரு மாடசியும
பேஎய்த் தேரிற பிறங்கு கானற

றேற்று புனலிற றுலங்குமழை யணியைத்
தோற்றுது மறைக்குந் தோற்றமுங் கதுமென
மேலிருந்து விழுமென வெருட்டல்செய் பிளவுக்
கூர்ங்கல் வழித்தெனக் கொட்டென வின்ன
பலவெனக் காட்டும் பண்பு மேறுவோ
ரிறங்குவோர் வெய்துயிர்ப வெய்தவுங் கீழுறுஞ்
சேட்குற வீழ்ந்ததன் பிசைபயவும் புரீஇ
யேறியு மிறங்கியுஞ் சுற்றியுந் திரும்பியு
மாறியுஞ் சுழன்று மயங்குநெறி நெடுகவும்
புறப்பட்ட விடத்தையே நெறிப்படுக் காட்டுஞ்
சூழ்ச்சியு மெடுத்த வீசியெறிந் தாங்கு
வீழ்ந்து கிடந்து விளங்குபாறைக் கற்களி
னாழ்ந்துபடு குழியெலா மவலினை யோன்செய்
செய்கையிற் றிகழ்ந்தெனச் சிறந்திட வொல்லென
வீஇ முருவி மேவு கறகளைக்
குறுமண லாக்கிக் கொடுகருங் கோலமுங்
கூடிப்பொலிந் திலங்குங் குறிஞ்சிசா ணமைந்து
வெறுபமை மழையின் வெய்யோன் செங்கதிர்
ஊடுசென் றவற்றை யொள்ளிய வெள்ளி
பீடுகெழு பொன்மணி தம்மிற் பிறங்குங்
கோடுக ளாக்கியுங் கொள்ளைவண் டொலிக்கும்
பன்னிற மலரினும் பல்லவந் தம்மினும்
மென்பனித் துளிமிசை மேலைப்பாய்ந் தவற்றை
முத்தென மணியென முளரிகெழு பவளக்
கொத்தென மருட்டல்செய் கோலங் கூட்டியும்
வருமமை யத்துநீ மகண்முக நோக்கித்
"தூஞ்சம ரிருளெலாந் தொலைந்தழிந் தன்றே
குக்கூ வென்றது கோழியும் பல்கட்
டோகைவிரித் தகவின மஞ்ஞையும் பைஞ்சிறைப்
பறவைகள செவிநுகர் பயனும் விளைத்தன
நீயே,
உண்ணவு முண்ணா யுடுக்கவு முடாஅய்
புனையவும் புனையாய் புலன்வேறு படுத்தனை
யினையை யாயினு மெங்குறு மகளே
மனைக்குவிளக் காகிய மங்கலக் கொடிச்சி
தனக்குநிக ரில்லாய் வைகறை தன்னினு
மெழாஅ யாகி யிருந்தேங்கி விம்மிக்
குறுக வுயிர்த்துக் குணம்பிறி தாகினை
யிணங்கிலை" யென்றுரைத் தணங்குற் றனளென்
றுண்மை காணா தலைந்தன ருறீஇக்

கட்டினுங் கழங்கினு மொட்டியோ ருணர்த்த
நறையும் விரையு நாண்மலர்த் திரளுங்
குறைவற வோச்சியுங் குடந்தம் பட்டுப்
பரவியுந் தூயும் பல்வேறு கடவுளர்
புறந்தரு கில்லார் போக்கறு கில்லாய்
வருந்துதி மன்னோ மதலைமொழி கேட்டிசின்
வேய்சூழ் வேலிச் செந்தினைப் பைங்கதிர்
மாவும் புள்ளும் வெளவா தோச்சிப்
படுசுட ரமையத் தெம்மிற் படர்ந்து
குறுகுதிர் மாயோ யிறுகொள் கென்ன
விடுத்த ஞான்றியா மடுத்தநுஞ் சொற்கொடு
மேனயின மாக வாங்கமைந்து விளங்குங்
காட்சி முற்றவுங் கண்களித்து நோக்கி
யெம்மையு மறந்தினி திருந்தே முரன்மிசைப்
பணைபடு துண்டம் பதித்தாங் கமைகான்
முறச்செவிச் சிறுகட் பெருவடி வியானை
யநதூம் பொத்த வணர்துதிக் கைக்கா
யிடையறவு படாது சோளவெனப் பொழிதலின்
வாரிமழை பெறீஇச் சிலம்புஞ் சிலம்புறச்
சிலம்பி யதன்வளஞ் சேர்த்தெடீஇ நறவ
மருந்தி நாண்மல ரமைவரச் சூடிப்
பொருந்துசாந் தரைத்துக் குழம்புகொடு பூசி
விரைந்தலை பரப்பிக் கரைந்துகக் கரையு
மொலிலென வோடு மொள்ளருவி நீத்தத்
தல்லலடைந் தேகி யநகரை சார்ந்து
மயில்கூத் தாடுங் குயினகடு கீண்டுவளர்
காமபே யடுக்கற் படியெனக் கிடக்கும்
பாம்பினை வருத்த வதன்மிசை யேறிய
படர்தரு மாமாக் குழூஉத்திர டுடுமென
வருவியின் வீழ்தர வாழ்ந்துபடு பாறைமிசை
வீழ்ந்துதுடித் தயர்ந்து வெய்துயிர்க் தடங்க
வரையமை மந்தி மரன்முறி யோட
வாலவெண் கவரி மாவயற பாய
நெற்றரு வேட்கையிற் கைக்கொடு வாங்கி
விடுதலு மொருபான் மற்றொரு பாலிற்
பொன்சொரி மலரொடு பொலிந்துதழை வேங்கையைப்
புலியெனச் செத்துத்தன் பொருந்து காதற்
பிடிமருண் டிரங்கிப் பெரும்பே துறீஇக்
கன்றுகை யணைத்துக் குன்றுபுடைக் கதுவலைக்
கொடுங்கூர்க் குறுங்கல் களிறெனக் கொடுபாய்ந்து

நெடுங்கை வருந்தி நின்றழிந் திரங்கும்
வரிப்புலி கண்டு மயங்கிவெரீஇ யாற்றலு
மிருந்த பின்னர் மருந்தன வன்னுப்
மலர்கொய் வேட்கை பிடர்பிடித் துந்தலிற்
றெண்ணீர்ச் சுனையிற் கண்ணீர் நீல
மேந்துவிளக்க நோக்க காந்தட் கைமலர்
கோழரைச் சாந்தின் பூங்கேழ்க் குளிர்தழை
யின்னபல கொய்து நன்னீர்ப் பாறைமிசை
நிரல்படப் பரப்பி நீடுகழைக் கூர்த்த
ஊசிகொடு துயின்று வீசிமணநா கநலப்
பொன்செய்பா வைக்குப் புனைந் தவிழா யாடிக்
கூடுவண் டார்ப்பக் குறிஞ்சி பாடி
யோடுநீ ரருவி யாடிவரு போழ்து
கண்ணொளி கவருங் காட்சித் தியல்வினை
யெண்ணொளி கவரு மேமஞ் சான்றது
வண்ணமலர் வகைபிறி தின்றென மாண்ட
தெண்ணுறும் விரையெலா மொருவழிக் கொண்டது
மாலைநம் வேங்கை மரனடித் தூங்கிக்
காலி னசைந்து கவினொளி பரப்பிவரு
மாட்சிக் கென்னும் பொருஅ ளாகி
யுலகம்போற் றுறூஉ மொருமட மங்கை
கலன்றிகழ் மங்கலக் கழுத்தணி யாங்கின
ளதுகண் டியானு மறைதலிற் போகத்
பயன்சிறிது மின்றெனப் பார்த்துவெறி தமைந்தேன்
அவ்வழி,
கட்டழ கியற்கையன் கரும்பூறு சொல்லினன்
வட்டுடை யன்னே கைபிடி வாளின
னெட்டிரண்டு நிரம்பா விளமைய னறத்துவழி
யொழுக்கம் பூத்த வுயர்குலத் தன்னே
பிறவொன்று பேணுப பெருநெசெல வன்னே
கலவிற் றிண்ணியன் காதனிறை கண்ணினன்
மையனனி தழும்பிய நடைகொடு மரீஇத்
தையா லென்மலர்த் தாரணிந் தனையான
மனைக்குவிளக் காகென மகிழ்ந்துசில கூறவு
நாண்டலை யேறிச் சென்னி தாழ்த்தி
யிதழிணை பொருத்தி யெழில்புனை பாவையி
னென்னு மொல்காது திருந்தே மாங்கவ
னதுகண்டு பின்ன ராவன பெறுவலெனப்
புன்னகை காட்டிப் போந்தன னொருநாள்
புனிலிடைக் காத்துப் பொற்றோ ளணைந்தனன்

போகெனக் கயந்தும் போகா னின்மகள்
வெறுக்குந னென்னுமுன் றன்னுயிர் வீத்திடு
மெவன்கொல் செய்கோ வென்னுயி ரன்னாய்
நீநின் னிளமையி னோர்துயர் நிகர்ப்ப
யானுங் கொண்டிட னீருமர பாகும்
வழக்கெனக் கொளீஇ வாரா நெஞ்சத்தனுஞ்
செய்குவை கொலோ சோர்புறி னிலலே
னின்னுரை கேட்டொறு நெக்குளங் கலங்குநம்
வெள்ளமிசைப் பொங்குநீர் பள்ளம் பாய்ந்த
வெள்ளளவு மொண்ணு தென்றுபுரி கட்டளை
கொள்ளப் புலனுகர் கோதுகளைந் தோரை
வெப்புறீஇ வேட்கை விரைந்தூட்டி வாட்டுங்
குறிஞ்சி புக்குக் கொடுங்குரற் செந்தினை
காக்கவென விடுத்தனை காமர் வண்டுறுங்
கண்பல மலர்ந்து காட்சிக் கினிய
போதையும் பைஞ்சிறைச் சொல்வாய்க் கிளியும்
போகுவரைப் பிடியு மோகைகொடு காதல்
வாகைபெறு கடவுளர் வரைவிழாக் கோட்டு
மாட்சி யான்று காட்சியுஞ் சான்ற
செம்மணி பூத்த செழுந்தளிர்க் காந்த
ணறுமலர் பூத்த பொறைசினைக் குறிஞ்சி
தங்கம் பூத்த பாங்கமை வேங்கை
மலைமணப் பதுபோ லகிலுஞ் சாந்தமும்
வரைநெருப் புறீஇ விரைபரப் பியவே
காவிற் காமப் கடுகிப் பொருதலி
றுச்சிமிசைத் தூங்கு மொண்சுடர்த் தேனிறால்
சொட்டுச் சொட்டுச் சொட்டெனச் சொட்டுந
மெல்லென வருவிகள் செல்குந நீலத்
தாய்மலர் காட்டி யணிகூட் டுநகனை
யூதைபுகுந் துள்ளத் தொன்றுதன் மேய
தில்லெலா மியல்பு மேல்வைமனங் கவரு
மவ்விய லொருவனு மாங்கடைந் தின்பச்
செவ்வியல் காட்டி மின்னெனச் செல்குநன்
ஆங்கு,
நின்னிளம் பேதையு மோதுசுழற் பட்ட
துரும்பெனச் சுழன்று சோர்வுற் றனளே
நீயும்,
புனஞ்செய் காவல் போதறவிர்த் தெமியமை
மனஞ்சிவந் திருள மனைச்செறித் தனையே
யூரவர் கொளுத்தி யோச்சுவெம் பகழியு

நும்மனோர் கடுத்து நுவன்றுகுத்து வேலு
மிளையண் மெல்லிய ளெனுதிடர்ப் படுத்திய
புலிக்குழாத் திடையிற் புக்குழன்று மருளும்
மானு கியளே வண்டமிழ்க் கொடிச்சி
யூமன் கனவி னுரைப்பறி கில்லை
னிவள்படு துயர்கண் டென்னுமாற் றாது
மலைமான் பறவை விலங்குமுத லழுங்கி
யிரங்குகின் றனவே யிஃதறிந் திலைகொ
னிகழ்ந்தது பிழையே னீபொறுத்
தகங்குளிர்ந் தருளிப் புரத்தனல் லறமே.

---

இச்செய்யுள் தலைவியினது வேற்றுமைகண்டு வருந்தியசெவிலிக்கு அறத்தொடுநிற்கும் பாங்கிகூற்றாக ஆரியவாசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர்பாடிய குறிஞ்சிப்பாட்டின் முறைமையைத் தழுவிநடப்பது.

இதன்கட் கூறப்படும் துறைவிளக்கம் வருமாறு:—

முன்னர்த் தலைமகனால் இயலிடங்கூறக் கேள்வியுற்ற பாங்கன் கேட்டவாறே சென்று தலைமகளைக் கண்டுவந்து தலைமகனை நனி வியந்தான். வியக்கப்பட்ட தலைமகனும் முதனாளிற் கண்டுகூடியவாறே தலைமகளைப் பொழிலிடைகண்டு புணர்ந்து வந்தான். ஆங்குத் தலைவியின் இன்னுயிரொத்த தோழி ஒருத்தி உண்டென்றுணர்ந்துகொண்டு அவளைக் குறையிரந்து அவளது உதவிகொண்டு தலைவியை இரவிலும், பகலிலும் குறித்த குறியெதிர்க்கண்டு கூடிவருவானாயினான்.

இவனது களவொழுக்கம் ஊர்க்குள் அரும்பி அலராயது. தன்னை வேட்டு இரவில் வரும்வழியில் அரவு, புலி முதலியவற்றால் ஏதங்கள் பல விளையுமே என்னும் அச்சம் தலைவியை வருத்தலுற்றது. அன்றியும பெற்றோர் வேற்றுவரைவிற்கும் முயல்வாராயினர்.

இன்னவற்றால் தலைமகளுக்குக் கவலைகள் பலப்பலவாயின. இவ்வமையத்திலே தலைமகளை வரைந்துகொள்ளுமாறு தோழி தலைமகனைப் பலபடி வேண்டியும் அவன் களவொழுக்கத்திலேயே கருத்துடையவனாயினான். அது காரணத்தால் தலைவிக்கு ஆற்றாமைமிக்குப் புனல் விளையாடல், பூக்கொய்தல், அணிதல், உடுத்தல்,உண்ணல்,உறங்கன் முதலியவற்றுள் ஒன்றினும் புலன்செல்லாது பித்துப்பிடித்தவர்போல நிலையிற்றிரிந்த தோற்றமுடையவளாயினாள். இவ் வேற்றுமையுணர்ந்த செவிலி பல்லாறுபுரிந்தும் பயன்படாமையால வேலனையிரந்து வெறியாட்டயர்தற்கு உடன்பட்டாள். இஃதறிந்த தோழி இனி இக்களவைக் கரந்துவைத்துவருதலிற் போந்தபயன் ஒன்றுமில்லையெனத் துணிந்து செவிலிக்கு அறத்தொடு நிற்கின்றாள். (அறத்தொடு நிற்றலாவது தலைவி கலுழ்தற் காரணம் முதலியன கூறல்.)

(இ—ள்.) வான் படர் மரன் எ(ல்)லாம் நிலன் படா தகை செய் உச்சி=விண்ணை அளாவித் தொடர்ந்துசெல்லும் அத்துணை உயர்ந்த மரங்களெல்லாம் மண்ணை அளாவிப் படர்ந்து செல்லுந் தகுதியைச்செய்கின்ற சிகரங்களையுடைய;

மரங்களெல்லாம் இயற்கையில் உயர்ந்தன என்பார் "வான்படர் மரனெலாம்" என்றும், மலை உச்சியில் நின்றுபார்க்கும்போது அவையெல்லாம் நிலத்தொடுபடர்ந்திருப்பன போன்று காணப்படுகின்றன என்பார் "நிலன்படர் தகைசெய்" என்றும் கூறினார். நிலன்படர் தகை செய்வது உச்சியின் உயர்ச்சியாதலின் அங்ஙனம் கூறினருமாம்.

பல் வரைக்கு ஒவ்வ படி தொடுத்த என = பல சிறுமலைகளுக்குப் பொருந்தும்படியாகப் படிகள் தொடுத்துவைத்தாற்போன்று;

பல் வேறு வடிவில் சிறியவும் பெரியவும் ஆகி விளங்கும் அம் நெல் வயல் ஆட்சியும் = பலவகையாய் வேறுபட்ட வடிவுகளிலே சிறியனவும், பெரியனவும் ஆகி விளக்கமுறுகின்ற அழகிய நெல்வயலினது ஆளுந்தன்மையும்;

பல்வேறு வடிவு என்றது சதுரம், வட்டம், ஆய்தம், முக்கோணம், சிலை, துடி, முழா, எறும்பு, கூன், குறள் முதலான வடிவுகளை. இவை சிறியவும, பெரியவுமாகி வரைக்குப் படியமைத்தாங்கு விளங்குகின்றன எனக.

நல் அறிவு உடையோர் தொல்வினை தொடர்பால் = நல்லறிவுச்சுடரைப் பூர்வ சென்மத்தின் நல்வினைத்தொடர்பால இயற்கையாகப்பெற்ற ஒருவர், அச்சென்மத்திலே இடையிடையிலேசெய்த தீவினைச்செய்கையும் உண்மையின் அது காரணமாக வந்த அத்தீவினைப்பயனின் தொடர்ச்சியாலே;

புல் அறிவு கதுவி புலன் மயக்கு உறீஇ = (அற்பச்செய்கைகளைச் செய்தற்குரிய) எளிய அறிவைப்பொருந்தி (அதுகொண்டு பலதீமைகளையும் செய்து) புலனமயக்குற்று;

காணப்படாத அறிவை புலன்மயக்குறுதன் முதலியவற்றானே காணுதல் சாலுமாதலின் "புல்லறிவு கதுவிப் புலன்மயக் குறீஇ" என்று கூறினார்.

சான்றோர் அருளில் தண் அளி சார்ந்து தெளிந்தாங்கு அமையும் பெரும் புரை = (சாபானுக்கிரக வல்லமைநிறைந்த) பெரியோர்கிருபை காரணமாகித் தண்ணியபாதுகாப்பை அடைந்து தெளிவுற்றது போன்று பொருந்திய பெரிய துவாரங்களையுடைய;

நல்லறிவுடையார் போன்று மலையிலே ஒளியுங்காலும் பெற்றுச்செல்பவர் தீவினைத் தொடர்பால் புல்லறிவெய்தி மலையிடைப் புரைநெறிப் போந்து இருளிற் சிக்கிமயங்குமாறு கலங்குதலும, பின்னர் சான்றோர் தண்ணளியுற்றாங்கு வெளிநெறிப் போந்து விளங்குமாறு தெளிதலும் என்க. இதனை ஏற்ப விரித்துக்கொள்க.

மலை இடை செல்கைக்கு உரிய சேய் நெறி = மலையிடையிலே செல்லுதற்குரிய நீண்ட பாதையிலே;

புக்கு உழி இருள்வது போன்று நன்கு இருண்டு = உட்புகும்போது இருள்வதுபோல் நன்றாக இருண்டும;

போகு உழி விடிவது போன்று விடிந்து இலங்கு வியப்பும் = அந்நெறியைக் கடந்து புறத்தேசெல்லும்போது கங்குல் விடிந்து (சூரியனுதித்தாலொப்பப்) பிரகாசிக்கின்ற ஆச்சரியமும்;

உள்ளே செல்லச்செல்ல இருளின் மிகுதியும், வெளியே செல்லச்செல்ல ஒளியின் மிகுதியும் காணப்பெறுதலின் இங்ஙனம் கூறினார். இவ்வியல்பு மலைகளை ஊடறுத்துச் செல்லும் புகையிரதப்பாதைக் குழாய்வழிப் போந்துளார்க்கு நனி விளங்கும். கதிருதயங் கூறப்பட்டமையிற் செல்லுகை பகலாயிற்று.

வெற்றிலை ஒத்து விளங்கு சிறு இலையும் = வெற்றிலையைக் கண்டாலொத்து விளக்கமுறுகின்ற சிறிய இலையையும்;

வெற்றிலை யொத்த தோற்றமுடையது, அதனிற் சிற்றளவினது என்க. சிறு வெற்றிலை ஒத்து விளங்கு இலையும் எனக் கண்ணழித்துப் பொருள்கோடலும் சாலும். சிறு என்றமையின் முற்றிய சிறு வெற்றிலையின் தோற்றத்தையே இதனுக் கொப்புக்கூறினார் என்று கொள்க.

உருள் பட பச்சை ஒன்றிய முத்தின் கோப்பு என = திரட்சி பொருந்துமாறு பச்சைநிறம்வாய்ந்த முத்தினது கோவையென்னும்படி;

பச்சை யொன்றியமுத்தின் - இல்பொருளுவமை.

தூங்கும் குறு மிளகு படர்ந்து யாத்த மரன் எ(ல்)லாம் காட்சி தரு மாட்சியும்=தூங்குகின்ற சிறியமிளகு படர்ந்துசுற்றிய மரங்களெல்லாம் காண்பாரகினிய காட்சியைக் கொடுக்கின்ற மாட்சியும்;

பேய் தேரில் பிறங்கு கானல் தோற்று புனலில் துலங்கும் மழை=பேய்த்தேரினையும், விளங்குகின்ற கானற்கண்ணே புலப்படுகின்ற நீரினையும் போன்று விளக்கமுறுகின்ற வெள்ளிய மேகங்கள்;

அணியரை தோற்றாது மறைக்கும் தோற்றமும்=சமீபத்திற் செல்வாரையும் பக்கத்திற் செல்வாரகுத் தோன்றவிடாமல் மறைக்குந் தோற்றப்பாடும்;

உம்மை தொக்கது.

கதும் என மேல் இடிந்து விழும் என வெருட்டல் செய் பிளவு கூர் கல்=திடீர் என்று அடிப்பக்கத்திற் செல்வார் தம்மேலே இடிந்து விழுநதுவிடுமென்று கருதுமாறு அச்சத்தைச செய்கின்ற பிளவினையுடைய கூரிய கற்கள்;

வழித்து என தொட்டு என இன்ன பல என காட்டும் பண்பும்=வழித்துவிட்டாலெனவும், தோண்டிவிட்டாலெனவும், இன்னபலவாறு செய்துவிட்டாலெனவும் காண்பிக்குந் தன்மையும்;

[ஏறுவோ-ரிறங்குவோர் வெய்துயிரப் பெய்தவுங் கீழுருண்-டெங்குற வீழ்ந்துதுன் பியையவும் புரீஇ-யேறியு மிறங்கியுஞ் சுற்றியுந் திரும்பியு-மாறியுஞ் சுழன்று மயக்குநெறி]

ஏறுவோர் வெய்து உயிர்ப்பு எய்தவும்=ஏறிச்செல்வோர் ஆற்றாமைகாரணமாகப் பெருமூச்சடையவும்;

இறஙகுவோர் கீழ் உருண்டு எங்குற வீழ்ந்து துன்பு இயையவும் புரீஇ=கீழே இறங்குவோர் அச்சமிகுதியானே உருண்டு எஙகுமாறு விழுந்து துன்பததை அடையவும் புரிநது;

ஏறுவோர் இறங்குவோர் ஆகிய இருபாலாரும் அச்சமிகுதியால் இங்ஙனம் விழுந்து துன்படைவர் எனினும் அமையும்.

ஏறியும் இறங்கியும் சுற்றியம் திரும்பியும் மாறியும் சுழன்றும் மயக்கு நெறி=மேலேறியும், கீழிறங்கியும், நேரே செல்லாது வளைந்தும், பின்னாத்திரும்பியும், இவவகையாகச்செய்து வந்தவற்றோடு மாறுபட்டும், சூழ்ந்துசென்று சுழன்றும் (இவவாறமைந்திருததலினுனே தன்னிடைச் செல்வோரை) மயக்கஞ்செய்து மருட்டு நெறியானது;

ஏறுவோரை வெய்துயிர்க்கச்செய்யும் நெறி; இறஙகுவோரைத் துன்புறுத்துநெறி; ஏறியும், இறங்கியும், சுற்றியும், பிறவாறும் அமைந்து மயககும் நெறி எனக.

'நெடுகவும் புறப்பட்ட இடத்தையே நெறிப்பட்டு காட்டும் சூழ்ச்சியும்=நெடுகச் சென்றும் தன்னிடைச் செல்வோர்தமக்கு அவர்புறப்பட்ட இடத்தையே ஒழுஙகுபட்டுக் காண்பிக்கும் தந்திரமும்;

எடுத்து வீசி எறிந்தாங்கு வீழ்ந்து கிடந்து விளங்கு பரூஉ கற்களின்=கையினுல் எடுத்து நெடுகச்செல்லுமாறு வீசியெறிந்து குறிப்பிட்ட அவவிடததில் விழுந்திருந்தாலொத்து விளங்குகின்ற பெரிய கற்களிலே;

அழுந்து படு குழி எ(ல்)லாம்=(நீர் வீழ்ச்சி முதலிய காரணங்களாலுண்டாகிய) அழுந்தப்பட்ட குழிகள் எல்லாம்;

அவ் வினையோன் செய் செய்கையில் திகழ்ந்த என சிறந்திட=அழகிய சிற்பாசாரியன் செய்த கைத்தொழில் வன்மையானே விளங்குகின்றன என்று கூறுமாறு விசேடமடைந்திட;

ஒல் என வீழ் அருவி=ஒல்லென்னும் ஓசைபட அக்கற்களிலே விழுகின்ற அருவியானது;

மேவு கற்களை குறு மணல் ஆக்கிக் கொடுக்கும் கோலமும் = தனது செய்கையிற் பொருந்துகின்ற கற்களைச் சிறிய மணலாகச் செய்துகொடுக்கும் அழகும்;

கூடி பொலிந்து இலங்கும் குறிஞ்சி சால் நமது வெற்பு = பொருந்திப் பொலிவுற்று விளக்கமுறும் குறிஞ்சியொழுக்கம் நிறைந்த நமது வாழ்க்கைக்குரிய மலையிலே;

அமை மழையில் = (உச்சியினும் பக்கங்களினும்) பொருந்தியிருக்கின்ற மேகங்களில்;

வெய்யோன் செம் கதிர் ஊடு சென்று = சூரியனது சிவந்தகிரணங்கள் நடுவிற்புகுந்து;

சூரியகிரணம் மலையைமூடியுள்ள மேகங்களிற் படிந்து என்றபடி.

அவற்றை ஒள்ளிய வெள்ளி பீடு கெழு பொன் மணி தம்மில் பிறங்கும் கோடுகள் ஆக்கியும் = அம்மலைகளை வெண்மை வாய்ந்த வெள்ளியும், பெருமை நிறைந்த பொன்னும், இரத்தினங் களும் ஆகிய இவைதங்களைப்போல விளங்கும் மலைகளாகச் செய்தும்;

வெண்மையை வெள்ளிகாட்டலின் மணியையும் அவ்வெண்மைதரு முத்தென்றல் பொருந்தாது.

மலையிற்படிந்துள்ள மேகங்களிலே சூரியகிரணம் பாய்தலின் வெள்ளி, பொன், மணி முதலியவற்றுருவுகிய மலைகள்போலத் தோற்றம்பெறுதலான இங்ஙனம் வருணித்தார். சூரிய கிரணம் மேகமபோன்ற புனல்செறி பொருள்களிற் படியுங்காற் பல் நிறங்களையுங் காட்டும். வானவில்லை நோக்குழி ஏழுபிரதான நிறங்களைக் காணலாம். இந்நிறங்கள் சூரிய கிரணங்களுக் கியல்பாயுள்ளனவென்றும், பூக்கள் முதலியன எந்நிறக் கிரணத்தை அதிகமாகக் கிரகித்துக் கொள்ளுமோ அந்நிறத்தோற்றமே பெறுமென்றுங் கூறுப. சூரியன இவர்ந்துசெல்லும் ஒற்றையாழித்தேர் ஏழுகுதிரைகள் பூட்டப்பெற்றதென்று பண்டையோர் சொல்லிவந்த கூற் றின் கருத்தும் ஆராயற்பாலது.

கொள்ளை வண்டு ஒலிக்கும் பல் நிற மலரினும் பல்லவம் தம்மினும் மெல் பனி துளி மிசை மேஎய் பாய்ந்து = மிகுதியாகிய வண்டுகள் சப்திக்கின்ற பலநிறப் பூக்களிலும் பலதளிர் களிலும் வாய்ந்திருக்கும் மெல்லிய பனித்துளிகளின்மேலே (அக்கதிரவன கிரணங்கள்) சென்றுபாய்ந்து;

கொள்ளைவண்டு—தேனைக் கொள்ளையாடி (த்திருடி) உண்ணும் வண்டு என்றுமாம். கதிரவன்கிரணங்கள் சென்றுபாயும் கடுப்பின்மிகுதிதோன்ற "மேஎய்" என்றளபெடுத்தது. மலர்முதலியனவெல்லாம் பன்னிறத்தோற்றம்பெறும் வியப்பை விரைந்துபுலப்படுத்தி நெஞ் சின்கண் நீண்டு பதியவைத்தற்குமாம.

அவற்றை = மலரும் தளிர்களுமாகிய அவைதங்களுக்கு;

அவறறை என்பது "அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானே", "தௌவையைக் காட்டி விடும்" எனறாங்கு வந்த உருபுமயக்கம்.

முத்து என மணி என முளரி கெழு பவளம் கொத்து என மருட்டல் செய் கோலம் கூட்டியும் = முத்து எனவும், நீலமணி எனவும், செந்நிறம் விளங்கப்பெற்ற பவளக்கொத்து எனவும் கண்டாரை மயக்கும் ஆற்றலைக்கொண்டு செய்துவருதற்கேற்ற கோலங்களைக் கூடுமாறு செய்தும்;

மணியை நவரத்தினமென்றல் பொருந்தாது; முத்து, பவளம் என விதந்து கூறப்படுதலின்.

வரும் அமையத்து = இககாட்சியெல்லாம ஒருங்குபொருந்திவருகின்ற வைகறைப்பொழு திலே;

ஞாயிற்றின் கிரணங்கள் இங்ஙனமெல்லாம் செய்தனவென்று கூறுதலின் வைகறைப் பொழுது கூறப்பட்டது. வைகறை விடியலுக்கு முன்னுள்ளபொழுது. "வைகறை யாமத்து வாரணங் கழிந்து", "வான்கண் விழியா வைகறை யாமத்து" என்பன இலப்பதிகாரம்.

குறிஞ்சி—கூதிர் யாம மென்மனார் புலவர்" என்றதற்கேற்ப ஐப்பசியும், கார்த்திகையு மாகிய கூதிர்ப்பருவத்தின் இடையாமமே சிறுபொழுதாக இருப்பவும்; மருதத்திற்குரிய வைகறையைக் கூறியது குற்றமே எனில், அற்றன்று; என்னை? அக்காலத்துத் தட்பவெப் பங்களுக்கேற்ற தன்மை மனசில் நிகழப்பெறின் அதுபொழுது புணர்ச்சி தோன்றப்பெறும் என்பதுவே கருத்தாகலானும்; இதுகருதியே "திணைமயக் குறுதலும்" என்றற்றொடக்கத்துச் சூத்திரங்கள் எழுந்தனவென்பது நுண்ணறிவாளர் தமக்கெல்லாம் ஒப்பமுடிந்த துணிபாதலா னும்; நக்கீரரும், ஐந்திணையுள்ளும களவு நிகழப்பெறும் என்ற நுணுக்கம் இத்தகையவற்றால் ஆதரிக்கப்படுதலானும்; "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" என்றாங்கெழுந்த சூத்திரத்தினுட் பொருள் இதுபொழுதே தெற்றெனை வெளிப்படுதலானும் பிறவாற்றானுமென்க.

"துனை இய மாலை துன்னுதல் காணூஉ" எனக் குறிஞ்சிக்கு மாலைவந்தமையும் நோக்கற் பாலது.

நீ மகள் முகம் நோக்கி = செவிலித்தாயர் ஆகிய நீவிர் தலைமகளின் முகத்தைப்பார்த்து;

எம் குறு மகளே = (நற்றாய் முதலிய) எங்கட்குரிய குறியமகளே;

நற்றாய் முதலியோரா பெருமையும், அவர்தமக்கு இஃவியலபினள் வந்து பிறந்தனளே என்றுகருதும் சிறுமையும் தோன்ற "எம்" என்றும்; இங்ஙனம புலன்வேறுபடுத்தற்குரிய பருவம்பெறாதாள் இங்ஙனமாயினளே என்று கருதிய வியப்பும், கொதிப்பும் பெறுதலைப்புலப் படுத்தக "குறுமகளே" என்றும் கூறினார். எம்மகளே, குறுமகளே என்க.

மனைக்கு விளக்கு ஆகிய மங்கலம் கொடிச்சி = இல்லத்திற்கு இல்லறத்தை வளர்க்கவந்த விளக்கொத்த நன்மையமைந்த குறமகளே;

கொடிச்சி—குறிஞ்சிநிலப்பெண், குறத்தி.

தனக்கு நிகர் இல்லாய் = தன்னை ஒப்பப் பிறிதொருவரில்லாச் சிறப்புடையவளே;

செவிலி அழைத்தும் தலைமகள பேசாது மவுனமாயிருந்தமையைக காட்டுமாறு இங்ஙனம் பன்முறையும் விளித்தாள்.

"எங்குறு மகளே * * * தனக்குநிக ரில்லாய்" என்னும் (50–52) அடித்தொடர்கள் உரையை நெறிப்படுத்துமாறு ஒருங்குகூட்டி இங்ஙனம் வைத்துப் பொருளுரைக்கப்பட்டன.

"மங்கலக் கொடிச்சி" என்றமையாற் றலைவியினது இன்றியமையாமை விளக்கப் பட்டது.

துஞ்சு அமர் இருள் எ(ல்)லாம் தொலைந்து அழிந்தன்று = நித்திரை செய்தற்பொருட்டு ஈண்டிப் பொருந்திய இருள எல்லாம் சென்று முடிவாயது;

கதிரவன்மூலமாகப் பகலைக்கொடுத்து எல்லாச்சீவராசிகளையும் முயலுமாறும், இருளைக் கொடுத்துத் துஞ்சுமாறும் செய்துவருகின்றான் இறைவன் என்பது போதரத் "துஞ்சம ரிருள்" என்றார். விடியலினமிகுதியைக காட்டுதற்பொருட்டுத "தொலைந்தழிந் தன்றே" என்றும் கூறினார். "முன்னனைத் தெழுத்தே" என்றாங்கு "இருளெல்லாந் தொலைந்தழிந் தன்று" என்பதும் மயங்கிற்று.

[குக்கூ வென்றது கோழியும்] கோழியும் குக்கூ என்றது = கோழிகளும் குக்கூ என்று கூவின;

இவ்வண்ணமே அள்ளூர்நன்முலனாருங் கூறுதலின் இவவடி மேற்கோள் எனக.

[பல்கட்—டோகைவிரித் தகவின மஞ்ஞையும்] மஞ்ஞையும் பல் கண் தோகை விரித்து அகவின = மயில்களும் பல கண்களையுடைய (சுருககப்பெற்ற) தோகையை விரித்துககொண்டு ஆடின;

அகவின—கூவின எனறுமாம். கோழிகூவும் வைகறைமுதலிய யாமங்களிலே மயில் களுங் கூவுதல் இயற்கை. ஆயினும் அங்ஙனங்கூவுழியெல்லாம் தோகையை விரித்துக்கொண்டு ஆடுவதன்று. "கன்ன ரூமலர்ப் பொதும்பரிற் களிமயி லகவும்" என்பது நடைதம், "கான

மயிலாடக் கண்டிருந்த வான்கோழி.........தானுந்தன் பொல்லாச் சிறகைவிரித் தாடலுற்றதே * * * '' என்றாங்கு மயின்முதலியன ஆடும்பொழுது தஞ்சிறகை விரித்துக்கொள்வது வழக்கம். இனி மயில்கள் கார்முகிலைக் கண்டவிடத்தே களிப்பெய்தி ஆடுதல் வழக்கமாதலின் வைகறையாமத்தினும் கார்முகில காணப்பெறுமோவெனிற் கூதிர்க்காலமாதலின் எப்பொழுதினும் பெறுமென்க.

[பைஞ்சிறைப்-பறவைகள் செவிநுகர் பயனும் விளைத்தன] பை சிறை பறவைகளும் செவி நுகர் பயன் விளைத்தன = பசிய சிறகுகளையுடைய பட்சிசாலங்களும் (செவிக்கொண்டு களிக்கும் பிரயோசனமிருந்த இன்னிசைகளைப் பாடுவதால் அப்பாடுதலைக்கேட்ட) செவிகள் துய்த்தற்குரிய நல்லின்பத்தை உண்டாக்கின;

இவ்வஃறிணையுயிர்களெல்லாம் இன்பத்தை விளைவித்துவரவும், உயர்திணையளாகிய யட்டும் துன்பத்தை விளைத்துவருகின்றாய என்று குறிப்பித்தானுமாம்.

நீயே = (இங்ஙனமாகவும்) நீதான்;

[உண்ணவு முண்ணா யுடுக்கவு முடாஅய்-புனையவும் புனையாய் புலன்வேறு படுத்தனை] புலன்வேறு படுத்தனை உண்ணவும் உண்ணாய் உடுக்கவும் உடாய் புனையவும் புனையாய் = நின்னறிவினை வேறுவிடயத்திற் செலுத்தினையாகி (அச்செலுத்திய காரணத்தானே) உண்ணுகின்றாயுமில்லை, உடுக்கின்றாயுமில்லை, (ஆபரணங்களை) அணிகின்றாயுமில்லை;

உண்ணல், உடுத்தல், புனைதல்களை அறவே ஒழித்தனளல்லள்; வேண்டிய அத்துணையளவு செய்கின்றாளில்லையென்பது கருத்து. அங்ஙனம் உண்ணாமை முதலியவற்றாலுளவாகுங் கொடுமை தோன்றற்பொருட்டு "உண்ணவும்", "உடுக்கவும்", "புனையவும்" என்னும் அடைகள் புணர்த்தப்பட்டன.

இனையை ஆயினும் = இத்தன்மைகளை உடையவளாகினை என்றாலும்;

வைகறை தன்னினும் எழாஅயாகி = இந்த விடியற்காலத்திலேனும் துயினீத்தெழாதவளாகி;

உண்ணாமைமுதலியவற்றை மேற்கொண்டு புலன்வேறுபடுத்திய செய்கைகளை "இனையை" என்றது குறித்தும். "எங்குறு மகளிர்" என்றதனை ஈண்டுக் கூறினும் அமையும்; என்னை? அவற்றையெல்லாம் செய்யாயெனினும் இவ்வைகறையில் எழுதலாவது செய்தல் கூடாதா என்றதைப் புலப்படுத்தி நிற்றலினென்க. இதனோடு இதனையடுத்து மேலிருந்தனவற்றையுஞ்சேர்த்துக்கொள்ளலாம். வைகறையில் துயில்நீத்தெழாதாக்கு நல்லாவாக்கமும் ஓய்வுற்றறியும் எனபவாகலின் இஃதொன்றையேனுஞ் செய்தி எனறாள என்க.

இருந்து ஏங்கி விம்மி குறுக உயிர்த்து குணம் பிறிது ஆகினை = விழித்திருந்து திகைத்துப் பொருமி மெல்லெனமூச்சுவிட்டுக் குணம்வேறுபட்டனை;

இருந்து-உட்கார்ந்துமாம். இருள் புலர்ந்தவிடியும் காலமாதலின் உட்கார்ந்திருப்பினும் கண்டுகொள்ளலாமென்க. தலைமகனை இனி எவ்வாறு அடைதல் கூடுமென்று ஏங்கினள்; அவ்வேக்கங்காரணமாகப் பொருமலுண்டாயிற்று; பொருமல்காரணமாகப் பெருமூச்சுவிடிற செவிலி அறியுமென்றஞ்சிக் குறுகவுயிர்த்தனள்.

இணங்கிலை என்று உரைத்து = இயல்போடு பொருந்துகின்றாயில்லை என்றுகூறி;

நல்வழிக்கு நாளடைவில் திருந்திவருவாளென்று காத்திருந்தமை இக்கூற்றாற்புலப்படுத்தப்பட்டது.

(பாங்கி செவிலியை நோக்கி "நீ தலைவிக்கு 'எங்குறுமகளே * * * * * இணங்கிலை' என்று கூறினாய்" என்றனள் என்க.)

இணங்காத்தன்மையால்;

அணங்கு உற்றனள் என்று = தெய்வத்தாற் பீடிக்கப்பட்டனளோ என்றுகருதி;

அணங்கு-வருத்துந்தெய்வம்.

மாயோய் = பெண்ணே;

கரியாளே என்றுமாம். முல்லைப்பாட்டு 21ம் அடி "பருவர லெவ்வங் களைமா யோயென" என்றதன்கண்ணுள்ள "மாயோய்" என்பதற்கு "மாமை நிறத்தையுடையோளே" என நச்சினார்க்கினியர் பொருள்கூறினார்.

வேய் சூழ் வேலி செம் தினை பை கதிர் = மூங்கில்சூழ்ந்த வேலியையுடைய புனத்தின் கண்ணே செவ்வியதினையினது பசிய கதிர்களை;

செந்தினை—தினையின் விசேடமுமாம். "பைங்கதிர்" என்றார் முற்றுங்காறும் காவல் செய்துவருதல் தலைமகளின் கடமையென்பது தோன்றற்பொருட்டென்க.

மாவும் புள்ளும் வௌவாது ஓச்சி பகு சுடர் அமையத்து எம் இல் படர்ந்து குறுகுதிர் = விலங்கும், பறவையும் கவர்ந்துசெல்லாமல் அவற்றையோட்டிப் புனங்காத்துக் கதிரவன் அஸ்த மிக்குங்காலத்திலே எமது இல்லத்தைச்சென்றடைவீராக;

"நறகோட் சிறுதினைப் படுபு ளோப்பி—யெற்பட வருதிய ரெனநீ விடுத்தலில்" என் பது குறிஞ்சிப்பாட்டு. "படுசுடரமையம்" குறிஞ்சிக்கு வந்தது. இவ்வாறே குறிஞ்சிப்பாட்டில் 230ம் அடி "துனைஇய மாலை துன்னுதல் காணூஉ" எனவந்தமை காண்க. "நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப" (தொல. அகத்திணையியல், சூ. 12.) எனவே காலமிரண்டும் பெறும் எனக்கூறினாராயிற்று.

இது கொள்க என்ன = இத்தொழிலைக் கைக்கொள்வீராக என்று;

கொள்கவென விகாரம்.

விடுத்த ஞான்று = எங்களைப் போகவிட்ட அந்த நாளிலே;

யாம அடுத்த நும் சொல் கொ(ண்)டு = யாங்கள் பொருந்திய உமது சொல்லை ஏற்றுக் கொண்டு;

யாம் என்பது தலைமகளையும், பாங்கியாகிய தன்னையும் குறிக்கும். செவிலியிட்ட கட்டளை யும் இப்பிரிவாதற்கேயாம. "நும" எனபது நமரையையும அடக்கியது. இன்னோரன்ன வற்றை வழுவெனக்கொள்ளற்க. வேறு விதிகளுமுண்டு; விரிக்கிற்பெருகும்.

மேயினம் ஆக = (புனங்காத்தற்பொருட்டு ஆண்டு யானும், தலைவியும) சென்றேமாக;

("ஆங்கமைந்து விளங்கும்—காட்சி முற்றவுங் கண்களித்து நோக்கி—யெம்மையு மறந்தினி திருந்தேம" என்ற 63–70ம அடிகள பின்னாககூட்டபபடும.)

ஒரு பால = ஒரு பக்கத்திலே;

உரல மிசை பனைபடு துண்டம் பதித்தாங்கு அமை கால் = உரல்களுக்கு மேலே (நுனியு மடியுந் தறிக்கப்பட்ட) பனந்துண்டங்களைப் பதித்துவைத்தாலொத்துப் பொருந்திய கால்களையும்;

முறம் செவி = சுளகொத்த செவிகளையும்;

முறத்தைப் புடைத்துக்கொண்டிருப்பதுபோல் செவிகளிரண்டையும் அசைத்துக்கொண் டிருக்குமெனக; என்னை? செவிக்குவமையாகிய முறத்தின்றொழிலதுவாகலின்.

சிறு கண = சிறிய கண்களையும்;

பெரு வடிவு யானை = பெரிய உருவத்தினையுமுடைய களிறானது;

நெல் தரு வேட்கையில் = (தனது பிடிக்கு) நெல்லைக்கொடுவந்து தருதற்கெழுந்த விருப் பத்தால்;

(90ம் அடியிலுள்ள "நெற்றரு வேட்கை" என்பது ஈண்டுக் கூட்டப்பட்டது.)

அம் தூம்பு ஒத்த அணர் துதிக்கைத்தாய் = (நீர்வந்துவிழும்) அழகிய கல்தூம்பை யொத்து மேலெடுத்த துதிக்கையையுடையதாய்;

எடுத்தசெவியை அணர்ச்செவியென்று வழங்குதல்போல அணர்துதிக்கை என்றார்.

இடை அறவுபடாது சோ என பொழிதலின் = இடையிலே ஓய்ந்துவிடாது மேகம் சோ என்னும் ஓசையுண்டாகப் பொழிந்துவருதலான்;

வாரி மழை பெறீஇ = உண்டாகிய வருவாயாகும் மழைநீரைப் பெற்று;

தனக்கமைந்துள்ள மதவூற்றுப்பெருக்கோடு இதனையும் பெற்றதென்க.

சிலம்பும் சிலம்புற சிலம்பி = மலையும் அசையுமாறு ஒலித்தலைச்செய்து;

அதன் வளம் சேர்த்து எடீஇ = அம்மலைக்குரிய வளங்களையெல்லாம் ஒருங்குசேரத் திரட்டியெடுத்து;

எடுக்கும் விரைவு தோன்ற "எடீஇ" என்றனரெடுத்தது. "தலையு மாகமுந் தாளுந் தழீஇயத—னிலைநி லாதிறை நின்றது போலவே—மலையி னுள்ள வெலாங்கொண்டு மண்டலால்" என்பதிராமாவதாரம்.

நறவம் அருந்தி = ஆண்டமைந்த கள்ளைக்குடித்து;

"அருந்தி" என்றாரேனும் அளாவிற்றெனபதே கருத்தாகக்கொள்க. "வாக்கு தேனுகர் மாக்களை மானுமே" என்றார் கம்பரும.

நாள் மலர் அமைவர சூடி = அன்றலர்ந்த பூக்கள் எல்லாவற்றையும் பொருந்துமாறு சூடிக்கொண்டு;

பொருந்து சாந்து அரைத்து குழம்பு கொ(ண்)டு பூசி = தன்னிடத்திலே பொருந்திய சந்தனமரத்தை (த்தனது இருமருங்கினும் அமைந்துள்ள பாறைகளிலே அலைகளாகிய காங்களைக்கொண்டு) அரைதது அதனாலுண்டாகும் குழம்பைக்கொண்டு மெய்யெல்லாம் பூசிக்கொண்டு;

[விரைந்தலை பரப்பிக் கரைந்துகக் கரையும்] விரைந்து அலை பரப்பி கரையும் கரைந்து உக = விரைவினோடு அலைகளை விரிதது இருமருங்குக்கரைகளும் கரைந்து உதிரவும்;

கரைந்து—ஒலித்து, இரைந்துமாம்.

ஒல் என ஓடும் ஒள் அருவி நீத்தத்து அல்லல் அடைந்து எகி = ஒல் என்னும் ஓசையைச் செய்துகொண்டு விரைந்துசெல்கின்ற ஒள்ளிய நிறம்வாய்ந்த அருவியின்வெள்ளத்தைக் கடந்து செல்லும் ஆற்றலில்லாத காரணததானே துன்பமுற்றும் அவாவின்மிகுதியாற் சென்று;

பிடிக்கு நெற்றருவேட்கை மிககூர்ந்தமையின் அங்ஙனம் சென்றதென்க.

அக்கரை சார்ந்து = யாற்றின் மறுகரையை அடைந்து;

ஆறுதல்பெற்றமை தோன்றச் "சார்ந்து" என்றார். இக்கரைமாட்டு அஃறின்மையின் அங்ஙனமெல்லாம் அரிதினமுயன்று அககரை சார்ந்ததென்க.

மயில் கூத்து ஆடும் குயின் அகடு கீண்டு வளா காம்பு = (கார்மேகத்தைக்கண்டு களிப்பு மிகுதியால்) தோகைகள கூததாடுகின்ற (அசசோலையின் உச்சியிலுள்ள) மேகங்களின் வயிற்றைக்கிழித்துக்கொண்டு வளாகின்ற மூங்கிலானது;

அடுக்கல் படி என கிடக்கும் பாம்பினை வருத்த = மேல் எழும்பிய மலைப்பகுதிக்கு ஏறிச் செல்லும் படியொப்ப அமைந்துகிடககும் பாம்பினைத் தாக்கிவருத்தவும்;

அதன் மிசை ஏறி படர்தரும் ஆமா குழூஉ திரள் துடும் என அருவியின் வீழ்தா = அப்படியெனக் கிடக்கும் பாம்பின்மேலே ஏறிச்செல்லும் காட்டுப்பசுவின் கூட்டம் துடும் என்னும் ஓசையுண்டாக ஆற்றில் விழும்படி; (அப்பாம்பானது;)

ஆழ்ந்துபடு பாறை மிசை வீழ்ந்து துடித்து அயர்ந்து வெயது உயிர்த்து அடங்க = ஆழ்ந்துபட்ட பாறைமேலே விழுந்து அவ்விழுகை தாக்குதல் ஆற்றாது துடிப்புற்று மெய் சோர்ந்து பெருமூச்செறிந்து உணர்ச்சிகெட்டு இறந்தாலொத்தடங்கியிருக்கவும்;

வரை அமை மந்தி மான் தாவி ஓட = மலையிருந்த மந்திகள் (இவற்றால் அச்சமுற்று) மரங்களைப்பற்றி ஏறிச்செல்லவும்;

வால் வெண் கவரிமா அயல் பாய=வாலிலே வெண்மைநிறம்பொருந்திய கவரிமான்கள் ஆண்டிருந்து அயலிடங்களிற் பாய்ந்துசெல்லவும்;

மந்தியின் ஓட்டங்கூறியவர் கவரியின் பாய்ச்சலைமட்டும் கூறியதால அதின் ஓட்டம் காணற்கரிய வேகமுடைத்தெனப் புலப்படுத்தினூா

கை கொடு வாங்கி விடுதலும்=துதிக்கையால் எட்டிப்பிடித்துக்கொண்டு வளைத்து நெல்லை எடுத்துக்கொண்டு விடுதலும்;

களிறு நெற்கொடுநருவேட்கையின் நீத்தத்தைக்கடாது அக்கரைசார்ந்து காம்பை வளைத்துவிட்டது. வளைத்துவிடப்பட்ட காம்பு அடுக்கற்படியெனக்கிடக்கும் பாமபினைத் தாக்கி வருத்திற்று. தாக்கப்பெற்றபாம்பு பாறைமிசைவிழுந்து துடித்து அடங்கிற்று. அப் பாம்பின்மேற் படரும் ஆமாக்கள அருவியில் விழுந்தன. இவற்றைக்கண்ட மந்திகள மரங்கள் மேற் சென்றன. கவரிமான்களும் அயற்புறம் பாய்ந்தன என்க. இந்நிகழ்ச்சி அவ்வரையின ஒருபகுதியில் நடந்ததென்க.

ஈண்டுக் கிடந்த உள்ளுறை வருமாறு:—

களிறு தலைமகனாகவும, பிடி தலைமகளாகவும், நெற்றருவேட்கையில் அருவிதாண்டி அல்லலுற்றமை களவுப்புணர்ச்சியாலாகும் இன்பத்தைத் தலைமகளுக்கு அளிக்கவருபோழ்து உற்ற ஊறுகளாகவும, நெல்லை வாங்கிவிடுதல் களவாலின்பமெய்தற கியலாமைகண்டு அதனை விட்டுவிடுதலாகவும், பாம்பும், ஆமாவும் தாக்கப்பெறுதல் ஏதிலாட்கூறும அம்பலும், அலரும் அறத்தொடுநிற்றலாற்றுக்குண்டு சிதறிப்போந்தனவாகவும் கொள்க.

இதனை இறைச்சியின்பாற் படுப்பாருமுளர். அது பொருந்தாதென்பது உய்த்துணரற் பாலது.

மற்று ஒரு பாலில்=பிறிதொருபக்கத்திலே;

என்றது இக்கரையை.

பொன் சொரி மலரொடு பொலிந்து தழை வேங்கையை புலி என செத்து=பொன்னைச் சொரிந்தாலொத்த மலரொடுவிளங்கித்தழைத்த வேங்கைமரத்தைப் புலியென்று கருதி;

செத்து—சந்தேகப்பட்டு. இங்ஙனம் வேங்கையைக்கண்டு இது புலியோ பிறிதொன்றோ என்று ஐயப்படாமல புலியென நினைந்துகொண்டமையால் கருதி என்று பொருள் உரைக்கப் பட்டது.

தன் பொருந்து காதல் பிடி மருண்டு இரங்கி பெரும் பேது உறீஇ=களிற்றின் காதலுக் குரிய பெண்யானை மருண்டு வருந்தி மிக்க மதிமயக்கமுற்று;

பேது—மதிமயக்கம். மயக்கின் நீட்சியும் பிறவுந்தோன்ற "பெரும்பேதுறீஇ" எனப் பட்டது. அளபெடையும இதுகருதிப்போலும.

கன்று கை அணைத்து குன்று புடை கதுவலை=தனது கன்றைத் துதிக்கையால் அணைத் துக்கொண்டு சிறுமலைகளின பக்கத்திற்சென்று பொருந்துதலை;

கொடும் கூர் குறுங்கல் களிறு என கொ(ண்)டு பாய்ந்து நெடும் கை வருந்தி நின்று அழிந்து இரங்கும் வரி புலி கண்டு=வளைந்த கூருள்ள சிறியகல்லை யானையென்று உட்கொண்டு பாய்ந்து அதனை அறைந்தமையானே நீண்ட கை வருந்தி நிலைபெற்று மனமழிந்து துன்புறும் வரிகளையுடைய புலியானது கண்டு;

அறையுங்காலையிற் கைநீண்டு நகம் முதலியன விரியப்பெறும் இயல்புநோக்கி "நெடுங் கை" என்றூா.

மயங்கி வெரீஇ அரற்றலும்=மயக்கங்கொண்டு அஞ்சிச் சத்தித்தலும் ஆகி;

வேங்கைமரத்தைக் கண்டயானை புலியென்றஞ்சிக் கன்றிணைத்துக் குன்றுபுடைச்சென் றது. கூர்ங்கல்லை யானையென்றுகருதி அறைந்துவருந்தியபுலி அப்பிடியைக்கண்டும் வருந் திற்று என்க.

கண் ஒளி கவரும் காட்சித்து = (பிரகாசமிகுதியாற்) கண்ணொளியைக்கவர்ந்து கூசெய்விக்கும் அத்துணை ஆற்றல் நிறைந்த அழகினையுடையதும்;

இயல் வினை எண் ஒளி கவரும் ஏமம் சான்றது = மாலையாகும் இயல்புக்குரிய வினை தன்னை எண்ணுவோர்தம் எண்ணிக்கையைகவர்ந்து இன்பத்தைத் தரவல்ல ஆற்றல்சான்றதும்;

வண்ணம் மலர் வகை பிறிது இன்றென மாண்டது = சிறந்தபூவகைகள் வேறொன்றில்லையென்று சொல்லத்தக்க அத்துணைமாட்சியுள்ளதும்;

எனவே எல்லாவகைப்பூக்களையுந் தனபாலடக்கியுள்ளது என்றபடி.

எண் நறு விரை எ(ல்)லாம் ஒரு வழி கொண்டது = எண்ணக்கூடிய நறிய வாசனைகளையெல்லாம் ஓரிடமாகக் கொண்டதும்;

எல்லாவகை மலர்களும் அடங்கினமையின் எல்லாவகை வாசனைகளும் பொருந்தியவென்க.

மாலை நம் வேங்கை மான் அடி தூங்கி = ஆகிய ஒரு மாலையானது நமது வேங்கைமரத்தின் அடியிலே தூங்கலுற்று;

காலின் அசைந்து கவின் ஒளிபரப்பி வரு மாட்சிக்கு = காற்றில் அசைந்து அழகிய தோற்றம் சிறந்து ஒளிவிரிந்து வருகின்ற மாட்சிமைக்கு;

என்னும் பொருள் ஆகி = சிறிதும் ஆற்றாதவளாகி;

உலகம் போற்றுறூஉம் ஒரு மடம் மங்கை = உயர்ந்தோர் எல்லாரும் துதித்துவருகின்ற நற்குணநற்செய்கைகளையுடைய ஒப்பற்ற மடப்பம்வாய்ந்த நமது தலைமகளானவள்;

கலன் திகழ் மங்கலம் கழுத்துக்கு அணி ஆகினள் = அணிகள்பலவும் விளங்குகின்ற மங்களாகரம்பொருந்திய தனது கழுத்துக்கு ஆபரணமாகப் பூண்டுகொண்டாள்;

அது கண்டு யானும் = அங்ஙனம் அணிந்ததைக்கண்ட யானும்;

அறைதலில் போந்த பயன் சிறிதும் இன்று என பார்த்து = (இனி யாதொன்றையும்) கூறுதலாற் போந்தபயன் சிறிதேனும் இல்லையென்றாய்ந்து நோக்கி;

சென்றது கருதலாற் போந்தபயன் ஒன்றேனு மின்றென்பது கூறப்பட்டது.

வெறிது அமைந்தேன் = வாளா இருந்துவிட்டேன்;

மனத்தகத்தும் ஒன்றும் கொண்டிலேன என்பாள் "வெறிதமைந்தேன்" என்றாள்.

அவ்வழி அப்பொழுது;

அம்மா அம்மாய் என்றுமாம்.

கட்டழகு இயற்கையன் – பேரழகுடைந்த தன்மையனும்;

கரும்பு ஊறு சொல்லினன் = கருப்புச்சாற்றின் ஊறலொத்த இனிய சொல்லினனும்;

வட்டுடையன் = முழந்தாள் அளவுங் கட்டிய உடையினையுடையானும்;

வட்டுடை—முழந்தாள அளவும் உடுக்கும் ஒருடை விசேடம்; குறவர்குலத் தலைவனாதலின் இங்ஙனம் கூறினார்.

கைபிடி வாளினன் = கையிற்பிடித்த வாளினையுடையவனும்;

எட்டு இரண்டு நிரம்பா இளமையன் = பதினாறு வயசுதானும் நிரம்பப்பெறாத இளமைவாய்ந்தவனும்;

எட்டிரண்டு—ஆகுபெயர்.

அறத்து வழி ஒழுக்கம் பூத்த உயர் குலத்தன் = வருணாச்சிரமத்திற்குத் தக்காங்கு ஒழுக்கம்விளங்கிய உயர்ந்தகுலத்தவனும்;

தமக்கொத்தவற்றைக் கடைக்கொண்டும், ஒவ்வாதனவற்றைக் கொள்ளாதொழித்தும் வருபவர் போலாகாது அறத்துவழி ஒழுக்கம்பூத்த உயர்குலத்தினன் இவன் என்க.

குலப்பெருமை படைத்தாருள் ஒழுக்கமிலாரும், குலப்பெருமையில்லாருள் ஒழுக்க முள்ளவரும் இருந்து வருதல் உலகத்தியல்பு. இவனுக்கோ குடிப்பிறப்பும், ஒழுக்கமுமாகிய இருவகைப்பெருமையும் ஒருங்கமைந்துள்ளனவென்க.

பிற ஒன்று பேணா பெரும் செல்வன் = தனக்குரியனபோகப் பிறர்க்குரிய ஒன்றையும் விரும்பாத அத்துணைப் பெருமைவாய்ந்த செல்வத்தையுடையவனும்;

எனவே இவளது புணர்ச்சிமட்டும் அவனால் வேண்டப்பட்டதென்க.

கல்வில் திண்ணியன் = கல்லைப்பார்க்கினும் வன்மைபடைத்தவனும்;

"அரசரினுயர்ந்தோரந்தணர" என்றாங்குரைக்கப்பட்டது. எதுப்பொருளுங் கொள்ப. "கற்காணுந் திண்மையான்" என்பது இராமாவதாரம்.

காதல் நிறை கண்ணினன் = அன்புகாரணமாகிய விருப்பம்நிறைந்த கண்ணையுடையவனும்;

கண்ணால் உள்ளக்குறிப்பை அறிந்துகோடல் சாலுமாதலின் இங்ஙனங்கூறப்பட்டது.

மையல் களி ததும்பிய நடையொடு மரீஇ = ஆகிய ஒருவன் காமமயக்கம் மிக்குத்ததும் பித் தோன்றும் ஒழுக்கத்தோடு (யாங்கள் இருந்த இடத்தை) அணுகி;

அழகு, மென்சொல், உடை, வாள், இளமை, ஒழுக்கம், உயர்குலம், பிறவேண்டாப் பெருஞ்செல்வம், திண்மை என்னும் இவற்றையெல்லாம் ஒருங்குபெற்றோனாகிய ஒருமகன் காதல் நிறை கண்ணினனாய் மையல்ததும்பிய நடையோடு யாங்கள் அமர்ந்திருந்த இடத்தை அணுகினான் என்க. மாலைக்குளவாகுங் காரணங்களையும் விரித்துரைத்துக்கொள்க. வந்த அவ்வொருவன் தலைமகளைநோக்கிப் பின்வருமாறு கூறினன் என்க.

தையால் = பெண்ணே;

என் மலர் தார் அணிந்தனையால் = எனது மலர்மாலையை (உனக்குப் பொருந்துமாறு நீ) அணிந்துகொண்டனை, அதுகாரணத்தானே;

மாலையை அணிந்துகொண்டதுவே மணமுடித்துக்கொண்டதற்குச் சமமாயிற்றென்க.

மனைக்கு விளக்கு ஆக என மகிழ்ந்து சில கூறவும் = எனது கிரகத்துக்கு (இல்லறத்தை விளக்கும்) விளக்காருக (மனைவியாருக) என்று மகிழ்ச்சிகொண்டு இன்ன சிலவார்த்தைகளை (எங்கள் முன்னிலையில்) எடுத்துக்கூறவும்;

நாண் தலை ஏறி சென்னி தாழ்த்தி = (அவன் கூறிய சொற்களை யாங்கள்கேட்ட காரணத் தானே) நாணம் மிகுதிப்பட்டுத் தலையை வணக்கி;

இதழ் இணை பொருத்தி = இதழ்களை ஒன்றொடுமற்றொன்று கூடுமாறு சேரப்பொருத்தி;

அவனது சொற்கள் மையல் நகைப்பை உண்டாக்கவல்லன என்பதுதோன்றவும், அது காரணத்தால் தங்கள் ஆற்றலால் அங்ஙனம் பொருத்திக்கொண்டனர் என்பது தோன்றவும் "இதழிணை பொருத்தி" என்று கூறினார்.

[எழில்புனை பாவையி னென்னு மொல்கா திருந்தேம்] புனை எழில் பாவையின் என்னும் ஒல்காது இருந்தேம் = அலங்கரித்துவைத்த அழகுவாய்ந்த பொற்பாவையைப்போன்று ஒரு சிறிதும் அசையாதிருந்தேம்;

தன்னையும், தலைவியையுந்தழுவித் தானேகூறுதலிற் பாவையென வாளாகூறப்பட்டது. அழகுவாய்ப்பதும் ஓரியற்கையாதலின் எழிற்பாவை எனப்பட்டது. "அரசரிற் பெரியார் அருமறையந்தணர" என்றாங்குரைகொண்டு பாவை இடத்தானும், பிறர்முயற்சியானும் அசைதலுங் கூடும். யாமோ அங்ஙனமுமசைந்திலேம் என்றுரைப்பாருமுளர்.

ஆங்கு அவன் அது கண்டு பின்னர் ஆவன பெறுவல் என = (அங்ஙனம் யாங்கள் ஒல்கா திருந்த) அவ்வமயத்திலே (மனைக்குவிளக்காகெனக் கூறிமகிழ்ந்த) அவன் எங்களது நாண் மிகுதியைக்கண்டு (இதுபோது இன்னநிலையுடையீராதலிற்) பின்னர்த் தனக்கு வேண்டியவற் றைப் பெற்றுக்கொள்வன் என்று கூறி;

புன்னகை காட்டி போந்தனன் = சிறுநகை காட்டிவிட்டுச் சென்றான்;

இதனாலும் "பூத்தருபுணர்ச்சி" கூறப்பட்டது.

ஒரு நாள் புனல் இடை காத்து பொன தோள் அணைந்தனன் = (அப்புன்னகை காட்டிச் சென்ற தலைமகன்) பின்னொருநாள் அருவியின் வெள்ளப்பெருக்கிற் (சிக்குண்டுதவித்த தலைமகளை இறவாவண்ணம்) காத்து (அககாத்த காரணத்தால் அவளது) பொன்னொத்த தோளை அணைந்து சென்றான்;

இதனாற் "புனறருபுணர்ச்சி" கூறப்பட்டது.

போக என சயந்தும் போகான் = (இங்ஙனம் நீவருதல் தகாது, பழியாகும் ஆதலிற்) போவாயாக என்று கசந்துகூறியும் போகவும்மாட்டான்;

பூத்தருபுணர்ச்சியானும், புனறருபுணர்ச்சியானும் நட்பு மிகுதிப்பட்டமையின் அவன் அடிக்கடி எங்களைவந்து சூழ்ந்துகொள்கின்றான், போவாயாக என்று கசந்துகூறியும போகா தானுயினான் என்றாள் என்க.

நின் மகள் வெறுக்குநள் என்னும் முன் தன் உயிர் வீத்திடும் = நினது மகளாகிய தலைவி உன்னை வெறுகின்றாள் என்று கூறமுன்னர்த் தன்னுயிரையும் விட்டுவிடுவான்;

தலைமகன்மேல் அன்புகொண்டு அவளது எண்ணத்தை நிறைவேற்றற்பொருட்டு எனது தலைவி என்னாது "நின்மகள்" என்றாள. சொல்லும் விரைவுதோன்ற "வெறுக்குநள் என்னு முன்" என்றும், இறந்துவிடுவான் என்னும் தெளிவுதோன்ற "வீத்திடும்" எனறும கூறினாள்.

அவனதுபுணர்ச்சியை விலக்கினால் இனி மடலேறுவான் என்று அச்சுறுத்தியபடியுமாம்.

எவன் கொல் செய்கோ (இச்சங்கட்டத்திற்கு இனி) யாதுதான் செய்வேன்;

நீதான் ஒருவழியைக கூறு என்றபடி.

என் உயிர் அன்னாய் = எனது உயிரைப்போன்ற தாயே;

அனனாய்-அனையவளேயுமாம்.

இது குற்றமாயின் என்னை ஒறுக்காதே எனபது தோன்ற "என்னுயி ரன்னாய்" எனப் பட்டது. இனி உனக்குத் தீங்குசெய்யேன் என்றதூஉமாம். உடலையோம்புதலும் உயிரின் பொருட்டாதல்போல என்னை ஓம்புதலும் நின்னை ஓம்புதற்பொருட்டு என்றாள என்பது கருதது.

நீ நின் இளமையில் நேர் துயர் ஒப்ப யானும் கொண்டேன் = நீ நினது இளமைப் பருவத்திலே அடைந்த துன்பததையொக்குமாறு யானும் அடைந்தேன்;

என்றது தலைமகளின் நற்றாய் தலைமகளாயிருந்தகாலத்தில் நீ தோழியாயிருந்து இவ ளைகயொத்த துன்புற்றனையன்றே, யானும் இதுபோது அவ்வண்ணமே துன்புறுகின்றேன் என்றபடி.

உய்யும்வாயில் பிறிதொன்றும் இல்லாமைபற்றி உள்ளம் திண்ணிதாகி இங்ஙனம் கூறி னள் தோழி என்க.

ஈது மரபு ஆகும் வழக்கு என கொளீஇ = இங்ஙனம் நிகழ்ந்தமுறை தமிழ்நாட்டினர்தம் மரபுக்குளதாகும் வழக்கமென உட்கொண்டு;

கொள்ளுதலின் அருமைதோன்றக் "கொளீஇ" என்றளபெடுத்தது.

வாளா நெகிழ்த்தலும் செய்குவை கொல்லோ = சும்மா விட்டுவிடுதலும் செய்வாய் கொல்லோ;

உடனே விட்டுவிடிற் படிற்றொழுக்கம் மிகுதிப்படுமாதலின் நாளடைவில் ஒறுப்பின் கொடுமை குறைந்துகொண்டேவரும் என்பதுபோதர "நெகிழ்த்தலும்" என்றும். [illegible] செய்தலும் ஐயம் என்பதுதோன்றக் "கொல்லோ" என்றும் கூறினாள்.

சேர்பு அறிகில்லேன் = (இக்களவொழுக்கத்தினால்) எய்தும்முடிவு யாதாகுமோ தெரிகிலேன்;

[நின்னுரை கேட்டொறு நெகுதளங் கலங்குநம] நின் உரை கேட்டொறும் உளம் நெக்கு கலங்குநம = உனது வார்த்தையைக் கேட்கும்போதெல்லாம் மனக்கட்டு அவிழப்பெற்று நிலைகலங்கி வருகின்றேம்;

[வெள்ளமிசைப் பொங்குநீர் பள்ளம் பாய்தல்] மிசை பொங்கு வெள்ளம் நீர் பள்ளம் பாய்தல் = மேலிடத்தே பொங்கிப்பெருகுகின்ற வெள்ளப்புனல் பள்ளத்திலே பாய்ந்துசெல்லுதல்;

எள் அளவும் ஒண்ணாது என்று புரி கட்டளை கொள் = எட்டுணையேனும் சாலாது என்று சொல்லுகின்றவிதியை ஒப்பாகக்கொண்ட;

அப்புலன் நுகர் கோது களைந்தோரை — அந்தப்புலன்களால் விஷயத்தை அறிவுநுகர்ந்து வரும் குற்றத்தை நீக்கிய சான்றோரையும்;

வெப்பு உறீஇ வேட்கை விரைந்து ஊட்டி வாட்டும் — காமவெப்பத்தை மூட்டி (அவரது நெஞ்சத்தை இளக்கவைத்து) ஆசையை வேகமாகக் கொள்ளுமாறு செய்து வாட்டும் ஆற்றன் மருந்த;

திண்ணிய அவரது நெஞ்சத்தை இளக்கி விரைந்துவாட்டும் ஆற்றலைப்புலப்படுத்த "உறீஇ" என்றனபெடுத்தது.

குறிஞ்சி புகுந்த கொடும் குரல் செம் தினை காக்க என விடுத்தனை — குறிஞ்சி நிலத்துட்சென்று பொறைமிகுதியால் வளைந்தகதிர்களையுடைய செம்மையாகிய தினையையுடைய புனத்தைக் காப்பீராக என்று கட்டளையிட்டு எங்களை விடுத்தனை;

தலைமகளது இல்லமும் குறிஞ்சியாதலிற் குறிஞ்சி புகுந்த என்றல் சாலாதே என்னிற் சாலும்; என்னை? காமக்காட்சியின்றேற்றம் இல்லத்திற் பெரும்பான்மையும் இன்மையாலும், புறஞ்சென்று வந்தாற்கே ஆண்டும் இன்பந்துய்த்தற்கு இடமாகுமாதலினானும் பிறவாற்றானும் என்க.

"காமினென் றேவினை" என்றும் பாடமாம்.

காமர் வண்டரும் = இன்பத்தை மிகுவிக்கின்ற இனிய வண்டினங்களும்;

கண் பல மலர்ந்து காட்சிக்கு இனிய தோகையும் = கண்கள் பலவற்றையும் கவின்பெற மலர்த்துவதாற் காண்பவர் காட்சிக்கினிமைதரும் தோகைகளையுடைய மயிற்கூட்டங்களும்;

[பைஞ்சிறைச் சொல்வாய்க் கிளையும்] சொல் வாய் பை சிறை கிளையும் = மக்களுக்கொப்பச் சொல்லுமவாயினையும், பசிய சிறகுகளையுமுடைய கிளிக்கூட்டங்களும்;

[போகுவரைப் பிடியும்] வரை போகு பிடியும் - மலை அசைந்துநடந்தாலொப்பச் செல்கின்ற யானைகளும்;

களிற்றினைக் கூறாதுவிட்டமை கற்புமிகுதியைக் காட்டுதற்குப் போலும்.

ஓகை கொ(ண்)டு = களிப்புக் கொண்டு;

காதல் வாகை பெறு கடவுளர் வரை விழா கோட்கு = காதல் பெறுவித்தலிலே வெற்றி பெற்ற காமக்கடவுளுக்கு உரிமைசெய்யும் விழாக்கோளுக்கு;

வரைவிழாக்கோள்—குறிஞ்சிக்குச்சிறந்த உரிபொருட்குற்ற அடையாகக் கொள்வாருமுளர். ஈண்டு வரை ஆகுபெயர். பிறவுங் கூறுப.

மாட்சி ஆன்று காட்சியும் சான்ற = (குணஞ்செய்கைகளுக்குரிய) பெருமிதம் நிறைந்தனவாய்த் தோற்றம் நிறைந்தன;

[செம்மணி பூத்த செழுந்தளிர்க் காந்தள்] செழும் தளிர் காந்தள் செம் மணி பூத்த = செறிய தளிர்களையுடைய காந்தளெல்லாம் செம்மைவாய்ந்த அரதனங்களைப் பூத்தன;

காந்தளின்பூக்கள் தோற்றத்தால் அரதனங்களை ஒத்திருத்தலின் அங்ஙனம் கூறினர். தளிர்த்தே பூக்கவேண்டுமாதலின் அதனை முதலொடுசேர்த்துக் கூறினர். இனி உயிருடைமையும், தோற்றங்காட்டுவதும் அதனுற்பெறப்படுதலின் அங்ஙனம கூறினருமாம்.

[நறுமலர் பூதத பொறைநசினைக் குறிஞ்சி] சினை பொறை குறிஞ்சி நறு மலர் பூத்த= கிளைமுதலியவற்றாற் பாரிககப்பெற்ற குறிஞ்சிமரங்கள் நறியபூககளைப் பூத்தன;

[தஙகம் பூதத பாஙகமை வேஙகை] பாஙகு அமை வேஙகை தஙகம் பூத்த=மருங்குகளிற் பொருந்திய வேஙகைமரஙகள தஙகததையொதத மலாகளைப் பூததன;

பூக்களின் நிறம் தஙகமயமாகததோற்றலின் அஙஙனம் கூறினா. செவ்வேள் வேங்கை யாய்நின்று களவுப்பயன்றுய்தத பெருமைதோன்றக குறிஞ்சியைக கூறியவர் "பாஙகமை வேஙகை" என்றா எனறுஙகூறுப.

[மலைமணைப் பதுபோ லகிலுஞ் சாந்தமும்–வரைநெருப் புறீஇ விரைபரப் பியவே]

அகிலும் சாந்தமும்=அகிற்கட்டைகளும் சந்தனக்கட்டைகளும;

வரை நெருப்பு உறீஇ=பூததமூஙகிலகள ஒனறுடனொனறு உராஞ்சுதலாலுண்டாகிய நெருப்பிடைப்பொருநதி;

வரைநெருப்புத் தாவிப்போய் அவற்றையெரிகரும் விரைவுதோன்ற "உறீஇ" என்றன பெடுத்தது.

மலை மணப்பதுபோல் விரை பரப்பியவே=மலைதான் இயற்கையாகப் பரிமளிப்பது போன்று நறிய வாசனையைப்பரபபின;

காலில் காமபு கடுகி பொருதலின்=மிகுந்துவீசுங்காற்றினல் அசையப்பெற்ற மூஙகிலானது விரைநதுசென்று தாககுவதால;

உசசி மிசை தூஙகும ஒள சுடா தேன் இறால்=மலையின்சிகரததிலே தொங்கிக்கொண்டிருக்கும் ஒள்ளிய கதிரையொதத தேனீககள ஈட்டிய தேனையுடைய கூண்டுகளானவை;

சொட்டு சொட்டு சொட்டு என சொட்டுந=(அவற்றின் அகத்தமைந்ததேனைச) சொட்டுசசொட்டுச்சொட்டெனறு துளிககின்றன;

சொட்டு–துளி; சொட்டுதலின் மிகுதிதோன்ற அடுக்கிக்கூறப்பட்டது.

[மெல்லென வருவிகள செல்குந] அருவிகள் மெல் என செல்குந=அருவிகள் (மருஙகெல்லாம நீாநிறைநதிருததலின் ஓடற்குரியவழியின்றி) மெலலென்று செல்கின்றன;

[நீலத்–தாய்மலர் காட்டி யணிகூட் டுநசுனை] சுனை நீலத்து ஆய் மலா காட்டி அணி கூட்டுந=தடாகஙகள் ஆராய்நத நீலமலாகளைககாணபிதது (ககாண்பவர் காட்சிக்கு) அழகை வளர்க்கின்றன;

[ஊதைபுகுந் துள்ளத் தொன்றுதன் மேயது] ஊதை உள்ளத்து புகுந்து ஒன்றுதல் மேயது=ஊதைககாற்றுனது மனசிலேபுகுந்து பொருநதுதலுற்றது;

எனவே வேட்கை மிக்கூர்ந்ததென்றாயிற்று.

இவ எ(ல்)லாம் இயலும் எல்லை=இக்கூறியவையெல்லாம் ஒருங்கே நிகழ்ந்துவரும் பொழுது;

இவற்றுள் ஒன்றே சாலுமாகவும் இவவெல்லாஙகூடி வருத்துவான்றெடங்கின எனற படி.

[மனங கவரு–மவவிய லொருவனும்] மனம் கவரும் அவ இயல் ஒருவனும்=மனசினைக் கவர்ந்துசெலலும் அழகையுடைய ஒப்பற்ற அந்தமகனும்;

ஆஙகு அடைந்து இன்பம் செவ இயல் காட்டி=அவவிடத்தையடைந்து இன்பமயமாகிய சிறந்த ஒழுக்கத்தைதக காண்பித்து;

காம வயததனுயிருந்தபோதும் உயர்ந்தோக்குரிய விழுமிய குணஞ்செய்கைகளை உடையான் என்று குறிப்பித்தான், செவிலி வினவாதிருத்தற்பொருட்டென்க.

மின் என செல்குநன் = மின்னல் தோன்றிமறைவதுபோல விரைந்துசெல்வானாயினன்;

ஆங்கு = அவ்வமையத்து;

நின் இளம் பேதையும் = நினது இளம்பருவப் பேதைமகளும்;

மோது சுழல்பட்ட துரும்பு என = (பலவழியானும்) தாக்குகின்ற சுழல்காற்றில் அகப்பட்ட துரும்புபோல;

சுழன்று சோர்வு உற்றனள் = சுழற்சியடைந்து சோர்வெய்தினள்;

நீயும் = நீதானும்;

[புனஞ்செய் காவல் போதறவிர்த் தெமியமை—மனஞ்சிவந் திருள மனைச்செறித் தனையே]

மனம் சிவந்து இருள = மனசு துனபத்தாற் கன்றிச் சிவந்து இருளடையுமாறு;

எமியமை = (நம்மையன்றித்) தமியேமாயிருந்த எங்களை;

"எமியேந் துணிந்த..................அருவினை" என்ற கபிலரின் குறிஞ்சித்தொடருக்கு "நம்மையன்றித் தமியேமாய் நாங்களே துணிந்த..... ......செய்தற்கரிய இக்களவு மணம்" என்று நச்சினார்க்கினியர் கூறிப்போந்த உரையை நோக்குக.

புனம் செய் காவல் போதல் தவிர்த்து = தினைப்புனத்தின்கண்ணே செய்யும் காவற்றொழிற்குப் போதலை ஒழித்து;

மனை செறித்தனை = இம்மனையகத்து (ச்சிறைசெய்தாலொப்பச்) சேர்த்துவைத் தனையே;

ஊரவர் கொளுத்தி ஒச்சு வெம் பகழியும் = ஊரின்கண்ணுள்ளார் பொருந்தமூட்டிச் செலுத்துகின்ற (அவதூறுகளாகிய) கொடிய அமபுகளும;

சேயர் என்பதுதோன்ற அவர்கூற்றுககளைப் பகழிகளொபபிட்டார.

நும்மனோர் கடுத்து நுவன்று குத்து வேலும் = நும்மையொத்தார் கோபித்து இடித்துக் கூறிக் குத்துகின்ற பழியாகியவேல்களும்;

அணுக்கத்தினர் என்பதுதோன்றவும், நெடிதுகூறுவர் என்பதைப் புலப்படுத்தவும் அவர் கூற்றுக்களை "வேல்" என்றார்.

இளையள் மெல்லியள் எனாது இடர்ப்படுத்திய = (பகழியும், வேலும் தாககற்கிலக்காகி நின்ற இத்தலைமகள்) மிக்க இளம்பருவத்தினள், மெல்லியதன்மையுடையவள் எனறுகருதாமல் துன்புறுத்துவனவாயின;

அவ்விருபாலார் கொடுமைகளும் அன்னார் கூற்றுக்களின்மேல் ஏற்றிக் கூறப்பட்டன.

[புலிக்குழாத் திடையிற் புக்குழன்று மருளும்—மானா கியளே வண்டமிழ்க கொடிச்சி]

வண் தமிழ் கொடிச்சி = வளப்பமவாய்ந்த தமிழாக்குரிய ஒழுககம்பூண்ட கொடிச்சியாகிய நின்மகள்;

என்றது இலக்கணத்தோடுபொருந்திய களவுப்புணர்ச்சியை. ஈண்டுத்தமிழ் இனிமைப் பொருட்டென்று வேண்டியாஙகுரைப்பாருமுளர்.

புலி குழாத்து இடையில் புக்கு உழனறு மருளும் மான் ஆகியளே = புலிககூட்டத்தினிடையே அகப்பட்டு வருந்திமயங்குகின்ற மானையொததனள;

இறந்துபடுவள் என்று குறிப்பித்தாளென்க. உடன்போக்கிற்கொருப்படாது நும்மிடையிற் சிக்குண்டு மருள்கின்றாள் என்பதுபோதரப் "புலிகுழாத் திடையிற் புககுழன்று" என்றனள்.

ஊமன் கனவில் உரைப்பு அறிகில்லேன் = (யானும்) ஊமையன்கண்ட கனவினை(ப்) (ச்சொல்லவியலாத்தன்மை) போன்று ஒன்றும் உரைத்தற்கு இயலாதிருக்கின்றேன்;

"துஞ்சுமன் கண்ட கனா" என்றார் பிறரும்.

[இவள்படு துயர்கண் டென்று மாற்றுது—மலைமான் பறவை விலங்குமுத ...
... துணையே]

மலை மரன் பறவை விலங்கு முதல = மலை, மரம், பட்சிசாலம், விலங்குமுதலாகிய எல்லாம்;

இவள் படு துயர் கண்டு என்னும் ஆற்றுது = இத்தலைவிபடுகின்ற துன்பத்தைக்கண்டு சிறிதேனும் பொறுக்காது;

அழுங்கி இரங்குகின்றனவே = நெஞ்சழிந்து வருந்துகின்றனவே;

சிற்றறிவுயிர்களும், உயிரிலாப் பொருள்களும் கண்டிரங்குவனவாகவும் பேரறிவுடைய நாம் வாளாவிருத்தல் தகுதியன்றென்றவாறு.

இஃது அறிந்திலை கொல் = இத்தன்மையை நீ அறிந்தில்லாய்போலும்;

அறிந்தனையாயின் இங்ஙனம் பிறிதுமுயலுதலைப் பேணுய் என்றபடி.

நிகழ்ந்தது பிழையேல் = (கூறிவந்தபடி இங்ஙனம்) சம்பவித்தகாரியம் குற்றமேயானல்;

நீ பொறுத்து அகம் குளிர்ந்து அருளி புரத்தல் நல் அறனே = தாயே நீ (அக்குற்றத்தைப் பாராட்டாமற்) பொறுத்து மனங்குளிர்ந்தருள்செய்து (குற்றஞ்செய்தவளாகிய தலைமகளையும், செய்ததுகண்டு தடாமல் வாளாவிருந்து குற்றத்திற் பங்குபற்றியவளாகிய என்னையும்) காப்பாற்றிவருதல் நற்றருமமேயாம்;

குற்றத்தைமன்னித்து அவ்வளவோடு தங்களை நீக்கிவிடாமல் மேல் நடக்கவேண்டியவற்றையும் ஆலோசித்துத் தக்காங்குசெய்யவேண்டுமெனபாள் "புரத்தனல் லறனே" என்றாள்.

---

(67) ஆயிழை கணவனெ டருஞ்சுர முன்னிய
வாயிலிற் பாலை வனத்தியல் புரைத்தல்.

மாரனிலை யூழ்த்து வறிதுவெளி காட்ட
நிலன்வெப் பொறுப்பாற புறபோர்வை நீத்துப்
பரப்பிய சுடுமட் புழுதியை வெங்கா
லெடீஇ வீசி யெங்கும தூவ
வேர்வந் தழறறி முன் விரவுதுயில் களைதலிற்
பிறறுயில பேணிப பெரிதுகண் ணெரிவு
முடமபு நோவு முளளத் தயர்வு
மாக்கள் கொண்டு மாழ்கி வருநத
வறிவுச் செயலு மாருடற் செயலு
நினைத்தாங் குஞற்று நேர்மைகெட் டொழிய
நீர்நிழல விருபபு நீள்கால் வேட்கையும்
வேர்செய் வெய்யில் வெறுப்பு மெய்த
வேருங் கயக்கு மேனிநிலை யழிக்க
வாருங் காத லவ்வினை யோரு
மோரும் புணர்ச்சிக் கொருப்படா தொருவ
வரைவாழ் வேயினம் மாணுப் புல்லிய
ரினக்கூட் டென்ன விணைந்துதீ யெய்த
வுணங்குபொரு ளெல்லா முள்ளொரீஇ வெளிவரத்

கேட்டக் கேடிலான் றிருந்திழை யருமருந்
தன்னவர்ப் பிரிவையு மகங்கொளார் செய்தகைமை
நாட்டிவழிப் படர நலனுசால் குறிஞ்சிச
சாந்தும் விரையுந் தண்ணா று மலரும்
யாண்டும் பொலிய வீண்டுபன்னச சிவிறியுங்
கைபமர் குடையுங் காலகநவு செருப்பும்
வெளிப்புற னொளா மிருக்குமலிந் திலங்க
வகத்துப் பள்ளியி லன்புடைப் கிளாப்ப்
புறத்துப் பள்ளியிற் புரிவேட்கை கொள்ள
வடிகொ நெறு முறையா வாகங் கழீஇ
நொடிக்கொரு முறையா நுண்ணுடை மாற்றுங்
காமுநர் வேட்டுக் களிக்குநலப் பள்ளிக
டனிமைகொடு வருந்தத் தண்ணளி வேந்த
ணாட்சியற்று மறைந்த வல்வமை யத்துக
குறும்பரிடை வந்து குழுமிக் கொடுமை
புரிந்தாட்சி செய்யும் பொலிவிற் றென்னக்
கார்முத லாகிய கோல்பிடித் தாண்ட
சீரிய முல்லை முதலிய திருநில
னெல்லா மடங்க நைற்றுவந்து பாலை
வேனி லோச்சி வியனரசு புரியத்
தங்கக் கிண்ணத் தகைமலர் காட்டெழிற்
கோங்கமு மாங்கெரிந் தொண்பொறி வீசிப்
பாங்கெலாம் வெதுப்பும் பகையால் கள்ளிபி
னகில்புடை வீழ்ந்தெரிந் தாநறும் புகைச்செறி
வெரிவெப பாற்று வெழிலிழிலின் வீழ்ந்து
மயங்கிய புரண்டு மறுகிய படர்தலிற்
றோன்றக் குராவும் பாவையை யின
மராவும் பிறபல மரங்களு மலர
வராவொத் தமைஇய வலகுலார் வருந்தப்
பிரிந்துவரு வோரையும் பெற்றவெறு வயிறு
கொதித்தழன் றேங்கவு மதித்தில ராகிக்
காமங் கனிந்த காளையர் தம்முட
னுடன்போக் கதற்குடன் பட்டோர் தம்மையு
மிடையூறு செய்து குறையாட் டயரும்
வறந்தவன் னெஞ்சுடை வன்கண் ணோரையும்
வேற்குத்தி வருத்து நோன்புகொண் டனபோன்
முட்குத்தி வருத்தும் வேலையும் புகையெழக்
காய்ச்சி யொழுக்கி யோட்டிப் படா
விட்டசெம் பிரும்பின் வெப்புற் றழற்று
மண்ணு மாண்புற வழியெதிர் நீர்நிலை

நண்ணுபொரு ளிழந்து நடுக்குறு வோரின்
வறந்து தோன்ற மாவு மாக்களும்
நாவு வறந்து நண்ணு கானலை
மயங்கி நீரென முயன்றுபெற வோடித்
தியங்கி யேங்கித் தெருளாற் றுழல
வுழவர் முதலோ ருளநனி வாட
வுமணர் முதலோ ருளங்களி கூரக்
குளிர்கெட வாட்டிக் கொதிப்பர சாளப்
பகலுஞ் சூடுறீஇப் பருத்து விரிய
விரவுந் தண்மைச் சிறுமையிற் சுருங்கப்
பொருமரக் கதவு முதல பொருந்திய
நீரறுசு சுருங்கி நிலைக்கச் சுரிமுக
மரனடி முதலிய வண்ணீ ரிடையிற்
புலனடக்கு வோரிற் பொருந்தி யமைய
மாரியி னலனையுந் துன்பையும் பெறுவா
னெறும்பு முயல் வெய்தி வருந்த வீக்கள்
வண்டொடு தேனுண்டு மாழ்கிக் களிக்கப்
பின்னிலை பேணாத் தந்நிலை மறந்து
பொன்னிலை தொலைக்கும் புல்வி யோரின்
மின்னவி ரோடை விபன்மதக் களிறறி
னின்னடை தழீஇய வென்னுயி ரண்ணால்
நீயே,
எளியேன் றன்பொருட் டிருமுது குரவரு
மளியார் பாங்கனு மநநல நாடுந
துளிவிர லெடுத்தெறிந் தேங்கியழுது விம்ம
நிலன்படாத் திருவடி பாற்பட்டுச் சேந்து
புண்ணுறுற் றினைவுறப் போந்தநீ கருதி
லென்னைநின் னிணையடிக் கெய்துசெருப் பாக்கினு
முன்னுதவி பெரிதா லுளங்களிந் தேங்குவல்
பின்னுசடை தூங்கிப் பெரிதுபெயர்ந் தால
வன்னந் தன்னையு மழகுபிடி தன்னையு
மென்னையென் றிகழு மின்னடைப் பொன்னே
மானே தேனே மலைதரு மருந்தே
கரும்பே விருந்தே கட்டழ குடையாய்
கண்ணே வண்டெனக் காதல்கூர் காட்சிப்
பெண்ணே யகனைந திணைப்பொருட் பெரும்பய
னெனக்களிக்க வெய்திய வின்றமிழ்ச் சுவையே
யாழ்கட லருந்திய வக்குறு முனியி
னேழ்தமிழ்க் கடலிசை யின்பெலா மணந்தின்
டொருவழிப் படைத்த வன்புடைக் குயிலே

வரைவழி யொரீஇ வாட்டுச்சுரன் படரு
மயிலை யயில்வேல் வள்ளறோள் வேட்டுப்
பயன்பெறு வள்ளியிற் பற்றெனக் களித்து
விழிக்குத் துணை செய்து வழிக்குத் துணை யாகிய
மாமணி விளக்கே மகிழ்வும் பாவாய்
பற்று நீங்கிய பண்போ னடித்துணைப்
பற்றொன்று பற்றிய பிறபற் றொரீஇ
நிலைத்த பயனடை தூன்போல நீத்தய ரின்புகொள
புலத்துறை முற்றிய புலவோர் போன்று
நலத்தகை நலவாய் பொலிவிலா நாடுக்
தனக்குநிலன் றராத குறிப்பிழுக லாகிய
தமக்குடம் பாக்கமை தகைமைமாந் துய பொறுத்து
வரிபெறிவு படையு வாய்மயில பாவைச
செய்புநக்க விட்டாயநர் செந்நிலன் மறுகி
வெடிமிழை பருப்பாய சிறுமெல் லடியைப்
புன்செயக குறுநகிரட் பரற்பகை பொருதுமற
திருப்பையுயிர் செம்மலேய்ப்ப பொக்குளீர்
வேலைக் கெம்முளா குதத்திவெளி யாக்கி
நெருப்புமிழ்த்த தாக்கு நைந்நுமைந் துருகி
யுய்பென் றுயிர்க்கு முயிர்ப்பா ளுழன்றும்
காணறரு துன்பும் மேனி யிளைப்புந
கண்ணுறு வருதநின் காதற தூசெய்யுங்
கைம்மா றுண்டுகொல காதற்கட லமுதே
நீஇர் பிரிந்து நிலைகுலை பீளின்
யாயருந் தமரு மாழ்துயர்க் கடலுறப்
பாங்கி யேங்கிநீ பயிவிட னெலலாங்
கண்ணி ராட்டி யுள்ளிர் மாற
வென்னையே பொருளென வெப்பிலா
நன்னுதல் வேய்த்தோ ணறுந்தா ரோயே.

---

துறைவிளக்கம்—இப்பாட்டு உடன்போக்கு என்னும் பகுதிக்குரிய பலவியற் பகுதிகளினுள்ளே "தேம்படு கோதையைத் திறலடு வேலோன—பையக்கொண் டேகல் பயங்கெட வுரைத்தல்—மையமர் கண்ணியை வழியயா வகற்றல்" ஆகிய சிலவற்றை நேர்வெளியாகவும், அவைகொண்டு அவாவிக்கோடற்கூடிய முன்பின்னிகழ்ச்சிகளாகிய பிறசிலவற்றைக் குறிப்பு வழியானும் உணர்த்துவது.

பாங்கி அறத்தொடுநின்றமைக்குச் செவிலிமுதலியோர் ஒருப்படாமல் வெறுப்புக்காட்டித் தலைமகளுக்கு அயன்மணம்பேச முயன்றும், தலைமகனை இரவுக்குறி பகற்குறிகளிலே தலைமகன் காணுவண்ணம் அவளைக் காவற்படுத்தியும், இவ்வொழுக்கம் ஊரில் அரும்பி அலராகிவருதலின், தலைமகளுக்கு ஆற்றாமைமிக்குத் துயரம்பெருகி வருதலால் "இனி இவள் இறந்துபட்

வுங்கூடும்" என்றுணர்ந்தபாங்கி பெரிதுங்கவன்று வருந்தி மனமுருகிப் பண்டு தலைமகன் பயின்றுவந்த குறியிடத்துச்சென்று அவனைக்கண்டு தலைமகளின் நிலைமையெல்லாவற்றையும் விரித்துரைத்துத் தளர்ந்தழுதாள்.

அவளது அழுகைகேட்ட தலைமகன் மனமுடைந்திரங்கிப் பலபடிசூழ்ந்தும் ஒன்றுந் தோன்றாது தலைமகளை உடன்கொண்டு செல்லக்கருதிக் கூறினன். அக்கூற்றையுணர்ந்த பாங்கியும் மகிழ்ச்சிமிக்கு விடைபெற்றுத் தலைமகளிடஞ்சென்று தலைமகனது எண்ணத்தை வெளியிட்டாள். அதுகேட்ட தலைமகள் தனதுநாணுக்கு இரங்கியும் நாணினுஞ்சிறந்தது கற்பெனத் தெளிந்து தலைமகனொடு போதற்குடன்பட்டாள். ஒருப்பட்டதும் உடனே அவள்வெளிச் சேறற்கு வேண்டுவனவற்றைப் பாங்கிபுரிந்து ஒருவருமறியாவண்ணம் இரவுக்குறியிடத்தே அவளைக்கொண்டுசென்று தலைமகன்பால் விடுத்து அவனைநோக்கி மறைநிலைதிரியினும், கடன் முழுதும் வற்றினும் நினக்குத் தெய்வந்தராநின்ற இவளிடத்து நின்னருள் திரியாமற்பாது காப்பாயாக என்று ஓம்படைசாற்றிச் சென்றனள். சென்றபின் தலைமகன் தலைமகள் இருவரும் அருஞ்சுரத்துவழிச் செல்வாராயினர். செல்லுகையில் தலைமகன் தன்பொருட்டுப் பெற்றோர் முதலியோரை ஒருவி வெப்பமிகுந்து முட்களஞ்செறிந்து பருக்கைமலிந்தபாலையிற் றிருப்பாதம் வருந்துகிறானே என்றுகருதிச் சில உபசாரவார்த்தைகளைத் தலைமகள்கூற அவற்றைக்கேட்ட தலைமகனுக்கு அவளதுபெருமையும், சுற்றத்தைப்பிரிந்தமையும், சுரத்தின்கொடுமையும், வழிச் செல்லுந்துன்பமும் உள்ளத்திற்புலப்பட அவற்றையெல்லாம் எடுத்துக்கூறி மனமுருகி அவளை ஒருவாறு தேற்றினன்.

(இ-ள்.) மரன் இலை ஊழ்த்து வறிது வெளிகாட்ட = மரங்களெல்லாம் இலைகளையுதிர்த்து வறிதாகிய வெளியிடத்தைக்காட்டவும்;

ஊழ்த்து செவ்வியழிந்து; எனவேபுலர்ந்துதிர்ந்து என்னும்பொருளைக் கொடுக்கின்றது. "அருவி தந்த பழம் * * * * ஊழ்த்து" என்றார் பட்டினப் பாலையாசிரியர். வெறிது, வறிது, என்பன ஒரு பொருட்கிளவிகள். கோடைக்காலத்து வெப்பம் மரங்களின் இலைகளைப் பதனழித்துதிர்த்தலின் அவ்விலைகளான் மறைப்புற்றிருந்த இடங்கள் வெளியாகின என்க. மரன் + நிலை எனக்கண்ணழித்துப் பொருள்செய்தல் பொருந்தாது.

நிலன் வெப்பு ஒறுப்பால் புல் போர்வை நீத்து பரப்பிய சுடு மண் புழுதியை = நிலனது வெப்பத்தின்கொடுமையால் (தட்பத்துக்காற்றாது முன்னர்ப்போர்த்திருந்த) புல்லாகிய போர்வையை நீக்கி வெளிப்பரப்பிய சுடுமண்ணாலாகிய புழுதியை;

வெம் கால் எடீஇ வீசி எங்கும் தூவ = (சூரியகிரணக்கொதிப்பால்) வெப்புற்றகாற்றானது எடுத்தெறிந்து யாண்டும் தெளிப்பவும்;

தண்மையும், வெம்மையும் காற்றுப்படிந்து வளர்பொருள்களின் நிலைமைக்கேற்றவாறாகும். குளிர்ந்தமழைத்தூவலை வீசியகாற்று இங்ஙனம் சுடுமட்புழுதியையும் வீசிற்றென்க.

வேர் வந்து அழற்றி முன் இரவு துயில் களைதலில் = வேர்வையானது உடம்பை வெதுப்பி முற்பொழுதிற் பொருந்துகின்றநித்திரையை நீக்கிவிடுதலினாலே;

பின் துயில் பேணி = இரவின் பிற்பொழுதிலே நித்திரையை விரும்பிச்செய்து;

முன் பின் என்றது இரவின் முற்பிற்பாகங்களை.

பெரிது கண் எரிவும் உடம்பு நோவும் உள்ளத்து அயர்வும் மாக்கள் கொண்டு மாழ்கி வருந்த = அதிகமான கண்ணெரிவும், மெய்வருத்தமும், மனச்சோர்வும் ஆகிய இவற்றை மக்களெல்லாரும் அடைந்து மயங்கிவருந்தவும்;

அறிவு செயலும் ஆர் உடல் செயலும் நினைத்தாங்கு உஞற்றும் நேர்மை கெட்டு ஒழிய = அறிவுப்பகுதியால் நடத்தும் செயல்களையும், ஆற்றல் நிறைந்த உடலைக்கொண்டு புரியுஞ்செயல்களையும் நினைத்தபடியே செய்துமுடிக்கும் ஒழுங்குகெட்டு அம்மக்கள் (அயர்ச்சிகாரணமாக அவற்றிடைச்செல்லாது) நீங்கவும்;

**நீர் நிழல் விரும்பும் நீள் கால் வேட்கையும் வேர் செய் வெய்யில் வெறுப்பும் எய்த**=நீர் நிலையோடுகூடிய நிழலின்கண்ணிருத்தலிலே விருப்பமும், நீடித்த காற்றுவீசுதலிற் பிரியமும், வேர்வையைச்செய்கின்ற வெய்யிலின்மேல் வெறுப்பும் அடையவும்;

நிழலில்லாவிடின் நீர்நிலையும் வெப்புசெய்யுமாதலின் "நீர்நிழல்" என்றும், ஆங்குக் காற்று வீசப்பெறுவிடிற் பயனில்லையென்பது போதர "நீள்கால் வேட்கை" என்றும் கூறினர்.

**வேரும் கயக்கும் மேனி நிலை அழிக்க**=வேர்வையும், சோர்வும், மக்கள் உடம்பின் நிலைமையைக்கெடுக்கவும்;

வேர்வை முதலியன உடம்பின் அபிமானத்தை வெறுக்கச்செய்தலின் இங்ஙனம் கூறினர்.

**ஆரும் காதல் அவ் இளையோரும் ஒரும் புணர்ச்சிக்கு ஒருப்படாது ஒருவ**=நிறைந்த காதலையுடைய அழகிய வாலிபர்களும், யுவதிகளும் (அவர்கள் இயல்பாக எப்பொழுதும்) கருதுகின்ற புணர்ச்சியிடத்தே மனமலையாது விட்டகலவும்;

ஆடவர் தம்மைவிழைதல் வேண்டுமென்று மடவோரும், மடவோர் தம்மைவிழைதல் வேண்டுமென்று ஆடவரும் கருதிவருதல் இயல்பாகலின் அவ்வியல்புக்கு மாறாகக் கோடை வந்து வேரும், கயக்கமும் கொடுத்து மேனிநிலைமையை அழித்துவிட்டமையான் அவ்விருபாலாரும் புணர்ச்சியைவிரும்பாதார் ஆயினர் என்க. பருவத்தின் இயல்பும், மணந்தபுதுமையும், அன்பின்பழமையுந்தோன்ற "ஆருங் காதலவ்விளையோரும்" என்றும், அவர்தம் கருத்திற் புணர்ச்சியே மிகுதிபற்றியிருக்கும் எனபதுதோன்ற "ஒரும் புணர்ச்சிக்கு" என்றும், நெருங்குவதற்குத்தானும் ஒருவரைமற்றொருவர் விடுகின்றாரில்லை என்பதுதோன்ற "ஒருப்படாது" என்றொழியாது "ஒருப்படா தொருவ" என்றும் கூறினர். இளையோரே இங்ஙனமாயின் ஏனையோர்பாடு பேசவும் வேண்டியதில்லையென்பது குறிப்பு.

**வரை வாழ் வேய் இனம்**=மலையிலே வளர்ந்துவருகின்ற மூங்கிற்கூட்டங்கள்;

வரை என்னும் பெயரை மலையானது தனக்கு ஆக்கிக்கொள்ளுமாறு அமைந்த வேயினம் என்க. முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற்றிரியுங் காரணத்தாற பாலையாகும் பான்மை தோன்ற வேய் கூறப்பட்டது. இனி, குறிஞ்சிக்குரிய புணர்ச்சியைப் பிரித்தற்கே கோடை வந்திறுத்தலின் "வரைவாழ் வேயினம்" என்று குறிப்பித்தாருமாம்.

**மாணா புல்லியர் இனம் கூட்டு என்ன இணைந்து தீ எய்த**=(நற்குண நற்செய்கைகளிலே) மாட்சிமைபெறாத சிறுமக்களின் இனக்கூட்டம் என்று சொல்லத்தக்கவண்ணம் தம்மிற் பொருந்தி (ப்புல்லியர் இணைதலால் எங்ஙனம் தீமையுறுவரோ அங்ஙனமே) நெருப்புற்றழியவும்;

தீ எய்தலின்பயன் அழிதலாதலின் அங்ஙனம் விரித்தாம். "தீயெய்த" எனபதை காரணார்த்தபதமாக்கிக்கொண்டு ஏற்றவாறு பொருள்கூறிக்கொள்க. நலமிலார் சேர்க்கையால் கேடுண்டென்பது குறிப்பு.

**உணங்கு பொருள் எல்லாம் உள் நீஇ வெளி வர**=காய்ந்து வளமுறவேண்டிய பொருள்களெல்லாம் (மழையினனைந்து பதனழியாமற் சேமித்துவைக்கப்பட்டிருந்த) உள் இடங்களைவிட்டுப் புறம்பே வந்துசேரவும்;

பொருளுடையார்செய்கை பொருளின்மேலேற்றிக் கூறப்பட்டது. "காய்ந்துவளங் கொள்பொருள் கடுகவுள் விரைய" என்று முதற்பாட்டிற் கூறப்பட்டது. ஆண்டுக்கூறிய தொடரிலுள்ள "விரைந்து" என்பதை ஈண்டுங்கூட்டிப் பொருள்கொள்க. சுருங்கக்கூறி எற்புழியெல்லாம் எடுத்தாளவைப்பது இயற்புலவர்தம் இயற்கையாகும். இங்ஙனமே நச்சினார்க்கினியரும் சிந்தாமணியுள்ளும் பொருள்கொண்டு, கொண்டமைக்கேற்ற இன்றியமையாமையையும் காட்டினமை ஈண்டு ஆராயற்பாலது. இப்பகுதியும் மாட்டின்பாற்படும். வான்சிறப்புக் கூறியதற்கு முரணுகி ஈண்டடங்குவன எல்லாவற்றையும் ஈண்டேயடக்கிக்கொள்க. இங்ஙனமே ஈண்டைக்கு முரணுயவற்றுள் ஆண்டைக்கேற்பன எல்லாவற்றையும் ஆண்டேயடக்கிக் கொள்க

மேனையவற்றையும் ஏனையவிடங்களில் ஏற்புழியறிந்து இயைத்துக்கொள்க. அவற்றையெல்லாம் ஆண்டாண்டுக்கூறின் விரியுமாதலிற் கூறிற்றிலம்.

தேட்டம் தேடுவான் திருந்து இழை அரு மருந்து அன்னவர் பிரிவையும் அகம் கொள்ளார்=பொருளை ஈட்டும்பொருட்டு (அத்தேட்டத்தையே பெரிதாகமதித்துக்கொண்டு) திருத்தமுற்ற ஆபரணங்களையுடைய பெறுதற்கரிய தேவாமிர்தம்போன்ற தங்கள் தலைவியரைப் பிரிந்துபோதலையும் ஒருபொருளாக மனசில் உட்கொள்ளாதவர்களாகி;

சேய்த்து அமை நாடு வழி படர=(ஆடவர்கள்) தூரத்தேயுள்ள நாட்டை அடைதற்குரிய சுரவழியிலே செல்லவும்;

பொருளின்றி அறம்புரிதலும், புகழீட்டலும் அமையாவாகலின் இங்ஙனம் பிரிந்தனர் என்க.

நலம் சால் குறிஞ்சி சாந்தும் விரையும் தண் நறும் மலரும் யாண்டும் பொலிய=நன்மை சான்ற குறிஞ்சிநிலத்திற்குரிய சந்தனம் (இதற்கும், ஏனையநிலங்களுக்குமுரிய) வாசனைப் பொருள், குளிர்மையுள்ள இனிய பூக்கள் என்னும் இவைகள் எல்லாம் எவ்விடத்தும் மலிந்து விளங்கவும்;

புணர்ச்சியே உலகவளர்ச்சிக்கு விசேடகாரணமாதலின் அப்புணர்ச்சிக்குரிய ஒழுக்கம் பூண்டது குறிஞ்சியே என்பார் "நலஞ்சால் குறிஞ்சி" என்றார். வேனிற்காலத்து வெப்பத்தைத்தணிப்பான் யாவரும் தண்மைசான்ற சந்தனக்கலவைபூசி விரைதூஉய் மலரணிந்திருப்பரென்னும் இயற்கைச்சுவையை எடுத்தோதினார் இந்நூலாசிரியர் என்க. வேரும் மயக்கமும் மாறி மேனிநிலை ஒருவாறுகோடற்கு இவையே தக்கசாதனமாதலின் இங்ஙனம் கூறினர். அவ்விளையோரிற் காமஞ்சான்றவர்செயல் கூறப்பட்டதென்று பலகூறி வேறுபொருள் கட்டுவாருமுண்டு.

ஈண்டு பனை சிவிறியும் கை அமர் குடையும் கால் கதுவு செருப்பும் வெளிப்புறன் எல்லாம் மிகுத்து மலிந்து இலங்க=நெருங்கிய பனையோலைவிசிறியும், கையிற்பொருந்துகின்ற குடையும், காலிற்றொடுக்கின்ற செருப்பும் என்னுமிவைகளெல்லாம் புறவெளிகளெல்லாவிடங்களினும் மிகுதியாகிநிறைந்து விளங்கவும்;

விசிறி—சிவிறியென மாறியது நிலைமாறுவிகாரம். வீட்டுக்குட் செருப்பினைக்கொண்டு சேறல் ஆசாரகெடுதியாதலின் "வெளிப்புறன்" என்றும்; நிழலுள்ளவிடத்தும் சுருக்கிக் கையில்வைத்துக்கோடல் வழக்காதலிற் "கையமர் குடை" என்றும்; கையாலெடுப்பது மரபில்லையென்பதும், அளவின் பொருத்தத்திற்கேற்ப அணிந்துகோடல்வேண்டும் என்பதும் போதரக் "கால்கதுவு செருப்பு" என்றும் கூறினார்.

அகத்து பள்ளியில அன்பு செய்கிலராய்=வீட்டின் உள்ளே அமைந்திருக்கும் பாயல்களிலே (துயில்வதற்கு) விருப்பங்கொள்ளாராகி;

வியர்வை, புழுக்கம் முதலியவற்றால் அறையுட்படுக்கை விரும்பிலர் என்க.

புறத்து பள்ளியில் புரி வேட்கை கொள்ள=(காற்றுவந்து உலாவுதற்கேற்ற)வெளிப்புறங்களில் அமைந்தபடுக்கைகளின் மிகுந்தவிருப்பங் கொள்ளவும்;

புரி=ஆசை, ஆதலின் மிகுந்தவிருப்பம் என்றும். புரி வேட்கை-நித்திரைசெய்யும் விருப்பமெனக்கொள்ளினும் அமையும்.

அடிக்கு ஒரு முறையா(க) ஆகம் கழீஇ=(அடிபெயர்த்துவைக்கும்போதெல்லாம் வியர்வைமுதலியன தோன்றி மேனிநிலைமையைக் கெடுத்தலின் அங்ஙனம் கெடாவண்ணம்) அடியெடுத்துவைக்கும ஒவ்வொருமுறைக்கும் ஒவ்வொருமுறையாக (நீர் முதலியனகொண்டு) உடம்பைக்கழுவி(ச்சுத்திசெய்து);

நொடிக்கு ஒரு முறையா(க) துண் உடைமாற்றும்=(புழுதிமுதலியமாசுகள் படிதலானும், வியர்வைமுதலியன மிக்கூறித் தோய்தலானும்) கணப்பொழுதுக்கு ஒரு முறையாக நுண்ணியவேலைப்பாடமைந்த உடைகளை மாற்றிவருகின்ற;

## இன்பநெறியியல்.

"நுண்ணுடை" என்றார் அவரது அலங்காரமுதலியவற்றின் மேன்மைதோன்றற்கு.

காமுகா வேட்டு களிக்கும் நலம் பள்ளிகள் = காமத்திலே மனப்பற்றுடையோர் முன்னர் விரும்பிக் களிப்புக்கோடற்கு இனிதாயிருந்த நன்மையைத்தருகின்ற பாயல்களெல்லாம்;

வேட்கை-புணர்ச்சிவேட்கை. புணர்ச்சியின் நலத்தையளிக்கும் பள்ளிகள். களிக்கு மென்ற இலேசினானே கள்ளுதலும் கொளளப்படும். காமுகா பளளிகள், அவர் வேட்கும்பள்ளிகள், அவர் களிக்கும்பள்ளிகள, நலப்பள்ளிகள எனக.

தனிமை கொ(ண)டு வருந்த = (இககாமுகரது சேர்க்கையைப் பெறாமையானே) தனிமை கொண்டு வருந்தவும்;

அப்பள்ளிகள விளக்கம்பெற்றில என்பது கருத்து. காமுகர்க்கும் பள்ளியின்கண் நுகரும் புணாச்சியில் வெறுப்புண்டாயதென்பது குறிப்பு.

தண் அளி வேந்தன் ஆட்சி அற்று மறைநத அ அமையத்து = தண்ணிய கருணை கொண்ட அரசன் (தான் ஆண்டுவந்த நாட்டின்) ஆட்சி அறுதியாகி நாடுவிட்டகன்றுபோன அப்பொழுதிலே;

அவனது ஆட்சியிலே நாட்டுககிருந்த நன்மைதோன்றத் "தணணளி வேநதன்" என்றும், அததகைய ஆட்சி அறுதல் நாட்டின் மாட்சியறுதலாதும என்பதுதோன்ற "ஆட்சியற்று" என்றும், அவன்பதவியைப் பலரும் அவாவி அவனுககுக காவாகப் பலதீங்கிழைதது அவனை ஓட்டினார் என்பதுதோன்ற "மறைந்து" என்றும, அவனது மறைவுகண்டதும் பிறர் ஆட்சி செய்ய உடனேமுற்பட்டனர் என்பதுபோதா "அவவமை யத்து" என்றும் கூறினார்.

குறும்பா இடை வந்து குறுகி கொடுமை புரிந்து ஆட்சி செய்யும் பொலிவிறறு என்ன = குறுநிலமனனா நடுவிலேதோன்றி (அநநாட்டைககைப்பற்றி) கொடுமைசெய்து ஆணடுவரும் பொலிவினையுடைததென்று கூறுமாறு;

குறும்பு-பாலைநிலத்தூர், குறும்பர்சாதி, பொல்லாஙகு. குறும்பர்-குறுநிலமன்னர், வேட்டுவச்சாதிமன்னா, பொலலாஙகுசெய்யும் மனனா. "குறும்பு" என்றமைககேற்பக கொடுமைபுரிந்தானுதலைக் கூறினா.

பாலை = பாலைநிலனானது;

கார் முதல் ஆகிய கோல் பிடிதது ஆண்ட சீரிய முல்லை முதலிய திரு நிலன் எல்லாம் = கார்காலததை முதலாகவுடைய காலஙகளை ஆட்சிசெயயுஞ் செஙகோல்களாகக் கைக்கொண்டு ஆட்சிபுரிந்த முல்லைநிலததை முதலாகவுடைய செல்வமிகக நிலன்களெல்லாம்;

கார்முதலாகிய கோல்கள, கூதிா, இளவேனில், முதுவேனில், முன்பனி, பின்பனி என்பன. முல்லைமுதலாகியநிலஙகள குறிஞ்சி, மருதம், நெயதல், பாலை என்பன. இநநிலஙகள் கார்முதலாகிய காலங்களையோச்சி இருததன்முதலாகிய ஏழுககஙகளைப் பாப்பிவருதலிற் "கார்முத லாகிய கோல்பிடித்து" என்றா. காாமுதலியவறறைக கூறியவிலேசானே மாலைமுதலிய சிறுபொழுதுகளையும் எற்றவாறெடுப்பிட்டு உரைததுககொள்க. நிலஙகளை அரசராகவொப்பிட்டுக் கம்பநாடரும் "மருதம்வீற் றிருககு மாதோ" என்றுகூறியுள்ளாா.

[மடங்க வேற்றுவந்து பாலை—வேனி லோசசி வியனரசு புரிய] (பாலை முற்கூட்டப்பட்டது) மடங்க ஏற்று வந்து வேனில் ஓச்சி வியன் அரசு புரிய = அடஙகுமாறு எற்று அவற்றின ஆட்சியிடத்துத் தான்வநதுபுகுநத வேனிற்காலமாகிய கொடுஙகோலைச செலுத்திப் பேரரசு புரியவும்;

கார்முதலிய செங்கோல்பிடித்தாண்ட முல்லைமுதலியவற்றை ஓட்டி வேனிலாகியகொடுங்கோலைப் பாலையோச்சுவது தண்ணளிவேந்தன் ஆட்சியறவொடுஙகக் குறுநிலமன்னன் கோலோச்சுதலை ஒக்குமென்க. வேனிலின்வெப்பம் தாஙகரிதாகுமெனபது குறிப்பு.

தங்கம் பின்னைத்து தகை மலா காட்டு எழில் கோங்கமும் = தங்கத்தாற்செய்த பின்னைத்தின்று தகுதிகொண்டமலரைக் காட்டுதலான் அழகுபடைத்த கோங்கமுமானும்;

கோங்கமலர் தங்கக்கிண்ணத்தையொத்தலின் இங்ஙனம் கூறப்பட்டது. தங்கக்கிண்ணத்தை ஆகுபெயரென்று பொருள்கொள்வாருமுண்டு.

ஆங்கு எரிந்து ஒண் பொறி வீசி பாங்கு எ(ல்)லாம் வெதுப்பும் பசை இல் கள்ளியின் = அப்பாலைநிலத்து வெப்பமிகுதியால் எரிதலையுற்று ஒள்ளிய தீப்பொறிகளைச்சிதற எறிந்து பக்க விடங்களெல்லாவற்றையும் வெதுப்பிவருகின்ற ஈரம் (பால்) இல்லாக் கள்ளியிலுண்டாகிய;

கள்ளியின் இயற்கைவெப்பமும், வேனில்காரணமாக எரிந்துவெதுப்பும் வெப்பமும் ஒன்றுபட்டன என்க.

அகில் புடை வீழ்ந்து எரிந்த அம் நறும் புகை செறிவு = அகிற்கட்டைகள் பக்கத்திலே வீழ்ந்து எரிந்தகாரணத்தால் உண்டாகிய அழகிய நறும்புகையினீட்டம்;

கள்ளிமரங்கள் எரிதலின் அவற்றகத்துள்ள அகில்களும் அவ்வெரியாற்றுக்குண்டு பக்கத்தில்வீழ்ந்தெரியப் புகைசெறிந்தது என்க.

எரி வெப்பு ஆற்று எழிலி நிலன் வீழ்ந்து மயங்கி புரண்டு மறுகி படர்தலின் தோன்ற = எரியின் வெப்பத்திற்கு ஆற்றாதனவாகிய மேகங்கள் நிலத்திலேவீழ்ந்து (வெப்பத்திற்கும், வீழ்கைக்குஞ் சோர்ந்தனவாய்க)கலக்கமுற்றுப் புரண்டுசுழன்று ஊர்ந்துசெல்வனபோன்று தோன்றவும்;

குராவும் பாவையை ஈண = குராமரமும் பாவைபோன்ற மலர்களை மலர;

மராவும் பிற பல மரங்களும் மலர = மராமரங்களும், வேறுபலமரங்களும் மலர்களை மலர;

அரா ஒத்து அமைஇய அல்குலார் வருந்த பிரிந்து வருவோரையும் = பாம்பின் படத்திலக்கணம் ஒத்தமைந்த அல்குலையுடைய தலைவியர்மனம் வருந்துமாறு (பொருளீட்டன் முதலியவற்றையுட்கொண்டு அவர்தம்மைப்) பிரிந்துவரும் தலைமகர்களையும்;

பெற்ற வெறு வயிறு கொதித்து அழன்று ஏங்கவும் மதித்திலர் ஆகி = (தங்களைப்பெறுதற்குத் தவஞ்செய்து வருந்திப்) பெற்று வெறிதாகியவயிறு (தம்பிரிவு காரணமாக ஆற்றாதனவாய்க) கொதிப்புற்று அழற்சியெய்தி ஏக்கங்கொள்ளவும் (அதனையும் பொருட்படுத்தி) நினையாதவர்களாகி;

இவரைப்பெற்றமையான் ஒருபயனும் எய்திலராய்த் துன்புகவே காரணமாகி வீண் போயினமையின "வெறுவயிறு" என்றும், பெற்றவயிற்றைக் குளிரவைக்கவேண்டியது முறைமையாகவும அங்ஙனஞ்செய்யாது அதற்குமாறாகக் கொதிக்கவைத்தனர் என்பது தோன்றக் "கொதித்தழன றேங்க" எனறும் கூறினார். பெறுதல் இவரால் நலன்பெறுதற்பொருட்டு என்பது தோன்றப் "பெற்ற" என்றார். உயாதிணையில் உதித்தனரேனும, அஃறிணைப்பொருளினும் தாழ்ந்தவராவா என்பதுதோன்ற "மதித்திலா" என்றார்.

காமம் கனிந்த காளையா தம்முடன் = காமம் முதிரப்பெற்ற காளைபோன்ற ஆடவர்தங்களோடு;

காளையர்-கட்டிளமைப் (பதினாறுவயதுக்குட்பட்ட) பருவத்தினருமாம். பாலைநிலத்தலைவனையும் காளையென்ப.

காமம் கனியப்பெற்றார்க்குச் செய்வனவும், தவிர்வனவும் புலப்படா. இவாதுபிரிவு பெற்றோர்முதலிய பலரையும் மயக்கிக்கலங்கவைத்தலின் இங்ஙனம் கூறினார்.

உடன போக்கு அதற்கு உடன்பட்டோர் தம்மையும் = கூடிச்சேறற்கு ஒருப்பட்ட தலைவியர்தங்களையும்;

இடையூறு செய்து சூறையாட்டு அயரும் வறந்த வல் நெஞ்ச உடை வன்கணரையும் = (வழிவருவாரை மறித்துத்) துன்பஞ்செய்து கொள்ளையடித்தலை(த்தக்தொழிலாக)ப்பயின்று வரும் பசையற்றுவலித்த நெஞ்சத்தையுடைய பாவிகளாகிய வேடர்களையும்;

வேல் குத்தி வருத்தும் கோடன்பு கொண்டன போல் = வேலினாற்குத்தித் துன்புறுத்தலை ஒருவிரதமாகக்கொண்டவை போன்று;

வருத்துதற்குத் திடசித்தங்கொண்டாற் போன்றன என்க.

முன் குத்தி வருத்தும் வேலை = முன்னாலே குத்தி வருத்தஞ்செய்கின்ற வேலமரங்களும்;

முட்குத்தின் கொடுமை வேற்குத்துக்கொப்பாகியதென்க.

புகை எழ காய்ச்சி ஒழுக்கி ஓட்டி படர விட்ட செம்பு இரும்பின் = (எரிப்புமிகுதியாற்) புகையெழுமாறு உருக்கிவார்த்து ஓடிப்படருமாறு செய்துவிட்ட செம்பினையும், இரும்பினையும் ஒத்த;

சூட்டின்மிகுதியைக் காட்டுமாறு செம்பிரும்புகளை எடுத்தோதினர்.

வெப்பு உற்று அழற்றும் மண்ணும் = சூரியவெப்பம் பொருந்தி (நடக்குஞ்சீவராசிகளை) அழற்றிவருகின்ற மண்ணும்;

உடன்போக்கு மேற்கொண்டாரையும், தலைவியரைப்பிரிந்து பொருளீட்டச் செல்வோரையும், சூறையாட்டயர்வோரையும் வருத்தும் மண்ணென்க.

மாண்பு உற வழி எதிர் நீர்நிலை = (ஆற்றிடைச் செல்வோர் நீர்வேட்கையையும், களைப்பையும் போக்கி) மாட்சி பெறுதற்கென்றே வழியெதிரிற் பொருந்திய நீர்நிலைகள்;

என்றது கூவல்களை.

நண்ணு பொருள் இழந்து நலிந்தவர் போன்று = (முற்பிறப்பிற்செய்த நல்வினைகாரணமாக) வந்துபொருந்திய பொருளை (அப்பிறப்பிற்செய்த தீவினைகாரணமாக) இழந்து (அவ்விழவைச் சகிக்காது) மெலிவுற்றவர்போல;

வறந்து தோன்ற = வறட்சியுற்றுத் தோன்றவும்;

மாரியில் நீர்பெருகிக் கோடையில் வற்றிப்போதல் நல்வினைதீவினைப் பயனொத்தனவென்க. இனி, கடவுளர் கருணைபோன்றது கூவற்புனல் என்றும், தீவினைபோன்றது வெப்புச்செய் வறட்சியென்றும் பிறவாறுங்கூறுப.

மாவும் மாக்களும் நா வறந்து நண்ணு கானலை = விலங்குகளும், பகுத்தறிவில்லாமனிதரும் நாவறக்கப்பெற்று(ப்) (ச்சேய்மையிற் றங்கண்முன்னே) பொருந்தியிருக்கும் பேய்த்தேரை;

மக்களென்னாது மாக்கள் என்றமையானும், தோன்றுவது கானலெனத் தேர்ந்துகொள்ளும் நுண்ணறிவின்றி நீரென மயங்கினமையானும் "பகுத்தறிவில்லா" என்ற அடைகொடுத்தாம்;

[மயங்கி நீரென முயன்றுபெற வோடி] நீர என மயங்கி முயன்று பெற ஓடி = (பருகுவதற்கேற்ற) நீரென்று மாறுபடக்கருதி முயற்சிசெய்து (அதனைப்) பெறுமாறு ஓடி;

தியங்கி ஏங்கி தெருள் அற்று உழல = மயங்கி ஏக்கமுற்றுத் தெளிவின்றி உலைந்துதிரியவும்;

நீர்கிட்டாமையானே தியக்கமும், தியக்கத்தால் ஏக்கமும், அவ்விரண்டினாலும் (நீர்கிட்டுவதானே தாகந்தணிந்து கொள்ளலாமென்று முனனர்க்கருதினைமயான் அமைந்த) தெளிவுகெடுதலும், அக்கெடுதியால் உழற்சியும் நேர்பட்டன என்க.

உழவர் முதலோர் உளம் நனிவாட = உழவர் முதலாயினோர்தம் மனசு மிகச்சோரவும்;

மருதநிலத்திற்கு ஆறுபெரும்பொழுதுகளும் உண்மையின் அந்நிலத்தார்மனசும் இங்ஙனே கோடை நீடுங்கொல்லோவென்று வருந்தியதென்க.

உமணர் முதலோர் உளம் களி கூர = உப்புவாணிபர் முதலோர்தம் மனசு களிப்பு மிகக்கொள்ளவும்;

உப்பு விளைவித்தற்கும் சேயவர்ய நாடுகளுக்குக் கொண்டுசேறற்கும் கோடைநீட்சி நலன் றருதலின் அவருளம் களிகூர்ந்ததென்க. இவ்விரண்டடிகளும் வான்சிறப்புரைத்த பாட்டின் முரணுமைமாற்றி அமைப்பட்டன, இவற்றுனும் இந்நூலாசிரியருக்கு மாட்டேற்றுக்கூறியது பொருந்துதல் காண்க.

[குளிர்கெட வாட்டிக் கொதிப்பு அரசாள்] கொதிப்பு குளிர் கெட வாட்டி அரசு ஆள = வெப்பமானது குளிர்கெட்டொழியுமாறு அதனை வாட்டியோட்டிவிட்டு அரசாட்சிசெய்யவும்;

பகலும் சூடு உறீஇ பருத்து விரிய = பகற்பொழுதும் சூட்டின்மிகுதியாற் பருமையுற்று விரிந்துதோன்ற;

நீர்ப்பிடிப்புள்ள மரத்துண்டங்கள்போன்ற சிலவகைப்பொருள்கள் குளிருக்குப்பருத்துச் சூட்டுக்குச்சுருங்கும். நெய், இரும்பு போன்ற பிறசிலவகைப்பொருள்கள் இதற்குமாறாகக் குளிருக்குச்சுருங்கிச் சூட்டுக்குவிரியும். சகடக்காலின் இரும்புப்பட்டம் காய்ச்சும்பொழுது விரிந்தும், நீர் ஊற்றப்பெற்றபொழுது சுருங்கியும்போதலைக் காண்க. பின்னையதையொட்டி இந்நூலாசிரியர் கூறியவருணனை கோடைக்காலத்துப் பகற்பொழுது இயல்பிலே நீடித்திருக்குந் தன்மை பற்றிப் பொருத்தமுடையதாயிருத்தல் காண்க.

இரவும் தண்மை சிறுமையில் சுருங்க = இராக்காலமும் குளிர்மைக்குரிய சிறுமையாற் சுருங்குதலைப் பொருந்தவும்;

பொரு முகம் கதவு முதல பொருந்திய நீர் அற்று சுருங்கி நிலைக்க = ஒன்றோடொன்று பொருந்துமிடத்தையுடைய கதவுகளை முதலாகவுடையவெல்லாம் (மழைக்காலத்திலே தடிப்புற்றிருத்தற்குக் காரணமாகப்) பொருந்தியிருந்த நீர் அற்றுப்போதலிற் சுருக்கங்கொண்டு (இயல்பிற் பொருந்திநிற்கவேண்டிய) நிலைமையினிற்கவும்;

[சுரிமுகம்-மரனடி முதலிய வண்ணீரிடையிற்-புலனடக்குவோரிற் பொருந்தியமைய] புலன் அடக்குவோரில் மரன் அடி முதலிய வள் நீர் இடையில் சுரிமுகம் பொருந்தி அமைய = மெய்புலனடக்கம் புரியும் பெரியோரைப்போன்று மரங்களின் அடிமுதலிய பாகங்களிலே வளப்பம்வாய்ந்த குளிர்ச்சிபொருந்திய இடங்களிலே நத்தைகள் ஒன்றுபட்டு ஆண்டுத் தங்கிவரவும்;

மாரியிலே இல்லெல்லாமூர்ந்த இவை கோடையிலே இங்ஙனமாயின என்க.

மாரியில் நலனையும் துன்பையும் பெறுவான் = மழைக்காலத்திலே நன்மையையும், துன்பத்தையும் அடையும்பொருட்டு;

நலன்பெறுதல் துன்பத்தின்றுவக்கத்தானும், துன்பம்பெறுதல் இன்பத்தின்றுவக்கத்தானும் கூடும் என்க. என்னை? "இன்பந் துவக்கிற் றுன்பம் பயக்கும்", "துன்பந் துவக்கி னின்பம் பயக்கும்" என்பன காஞ்சியாகலின் என்க.

எறும்பு முயல்வு எய்தி வருந்த = எறும்புகள் (மாரிக்குவேண்டிய உணவுகளைக் கோடையிலே இடையறவுபடாது ஈட்டிவரும்) முயற்சியை மேற்கொண்டுவருதலினால் மெய்வருந்தவும்;

முயல்வெய்துங் காரணத்தால் எய்திய வருத்தமாதலின் அதனை மெய்வருத்தம் என்றும். மாரிக்குவேண்டிய உணவுகள் சேகரமாதலின் மனசுக்கு மகிழ்ச்சியேயன்றி வருத்தமுண்டாவதில்லை என்க.

[ஈக்கள்-வண்டொடு தேனுண்டு மாழ்கிக் களிக்கப்-பின்னிலை பேணாது தந்நிலை மறந்து-பொன்னிலை தொலைக்கும் புல்லியோரில்] பின் நிலை பேணாது தம் நிலை மறந்து பொன் நிலை தொலைக்கும் புல்லியோரில் = முதுமைப்பருவம் வரும்பொழுது வேண்டற்பாலனவற்றை விரும்பிச் செய்துகொள்ளாது தங்களது நிலைமையையும் மறந்துபோய்ப் பொருளினாலுண்டாகும் நன்மையமைந்த நிலைமையை அழித்துவரும் கீழ்மக்களைப்போன்று;

பின்னிலை என்பது பொருள்முதலியவற்றை ஈட்டுவதற்கு இயலாது துய்ப்பதற்கு வேண்டிநிற்கும் முதுமைப்பருவம். அதனை முச்சிநிலையென்றுங் கூறுப. அவவுரை ஈண்டைக்கேலாமை ஆராய்ந்தறிந்துகொள்க. பின்னிலையைப் பேணவேண்டியதே அவர்தம் நிலைமையாகவும், அதனை மறந்துபோயினார் என்க. மறந்தமையாற் பொன்னிலை தொலைத்தற்கு முற்பட்டார் என்க. பின்னிலைபேணாது என்றமையான் முன்னிலையிலேயே இங்ஙனமாயினர் என்க. என்றது ஈட்டற்கிசைந்த இளமைப்பருவத்திலே ஈட்டாமல் அழித்தற்கு முற்பட்டனர் என்றவாறு.

பொன்னின் நிலையாவது அறனும், இன்பமும் அடைந்து வீடுபேறெய்துவதற்குக் காரணமாகவிருத்தல். அதன் நிலைதொலைத்தலாவது கொலை, களவு, காமம், பொய் என்னு மிவற்றை முதலாகவுடைய மறங்களைவளர்த்து இம்மையிற்பழியும், பழிபெறுமாற்றாற் றுன்பமும், மறுமையில் இவைகாரணமாக நரகும் பெறுதல். தந்நிலை மறத்தலாவது தமக்குரிய பொருண்முதலியவற்றின் சிறுமையைநோக்காது பெருமிதச் செலவுக்குள்ளாதல். இதனால் எறும்பின் அடக்கமும் பிறவும் கொள்ளப்படும்.

வண்டு ஒடு ஈக்கள் தேன் உண்டு மாழ்கி களிக்க = வண்டுகளுடனே ஈக்களும் தேனையுண்டு (அளவுகடந்துண்டதனாலே) மயங்கிக் களிப்பெய்தவும்;

பிணனிலையைப் பேறுதாராய்த் தந்நிலைமையைமறந்து பொன்னிலைதொலைக்கும் புல்லியோர் வண்டொடு ஈக்களுக்கொப்பாவர் எனினும் இலேசானே, பின்னிலைபேணித் தமது நிலையை நினைந்து பொன்னிலையைப்பெறும் பெரியோர் எறும்பிற்கொப்பாவர் என்பதுபெற்றாம். இங்ஙனமே பொருள்கோடல் பண்டைய உரைநடைவழக்கு. "பிறவிப் பெருங்கடனீந்துவர் நீந்தார்—இறைவனடி சேரா தவர்" என்பதையும், அதன் உரையையும் நோக்குக.

மின் அவிர் ஓடை வியன் மதம களிற்றின் இன நடை தழுவிய என் உயிர் அண்ணல் = மின்னலைப்போற் பிரகாசிக்கின்ற முகபடாமணிந்த பெருமைவாய்ந்த மும்மதயானையினது இனிய நடையைத்தழுவிய எனது உயிரொத்த நாயகனே;

பிராணநாயகன் என்றபடி; தன்னை உடலாகவும், தலைமகனை உயிராகவுங்கணித்துக் கூறினாள். உயிரில்லாவுடல் இயங்காவாறேபோலத் தலைமகளுந் தலைமகனையின்றி இயங்கமாட்டாள். உடலைப் போற்றுவதெல்லாம் உயிரின் நலமாவதுபோலத் தலைமகளைப்போற்றுவதெல்லாம் தலைமகனின் நலங்கருதியேயாகும். உயிர் செய்துகொள்ளும் இன்பமெல்லாம் உடலுக்கேயாதல்போலத் தலைமகன் செய்துகொள்வதெல்லாம் தலைமகளுக்கேயாகும். உடலையெடுக்காத உயிர் இன்பமெய்தற்கியலாததுபோலத் தலைமகளையடையாத தலைமகனும் இன்பத்தையெய்தமாட்டான். உடலுக்கு ஊறுவராமற் காப்பதும், உடலுக்குவந்த ஊற்றைத் தனக்குவந்த ஊறாகக் கருதுவதும் உயிர்க்குரிய செயலாதல்போலத் தலைமகளுக்கு ஊறுவராமற் காப்பதும், அவளுக்குவந்த ஊற்றைத் தனக்குவந்த ஊறாகக் கருதுதலும், தலைமகன் செயலாகும் என்றின்னவாறு ஏற்ப விரித்துரைத்துக்கொள்க. உயிர் என்றமையால் அன்பினுயர்ச்சியும், அண்ணல் என்றமையாற் பெருமையினுண்மையும் உணர்த்தப்பட்டன.

நீயே = நீதான்;

எளியேன் தன் பொருட்டு = எளியவளாகிய என் நிமித்தமாக;

தலைமகனது அன்பின்மிகுதியே தலைமகள் தன்னை எளியளென்று கருதநேர்ந்தது.

இரு முது குரவரும் = இரண்டாகிய முதுமைவாய்ந்த பெற்றோரும்;

இருகுரவர், முதுகுரவர் என்க. "தாயினிற் சிறந்த தெய்வ மிலையுயர் தந்தை தன்னினுயர்ந்த குருவு மில்லை யென்னின்மற் றிவர்க டாளிற்—றாய்மலர் தூவி நாளுந் தொழுதிடு மறிஞர் தாமே—யாய்கதிர் பரப்பும் பொன்னாட் டமரரா யினிது வாழ்வார்" என்பது கூர்மபுராணமாதலின் இவ்விருவரும் முதற்கட் கூறப்பட்டனர்.

அளி ஆர் பாங்கனும் = அன்புநிறைந்த தோழனும்;

இருவர்மாட்டுங் கிருபைவைத்துள்ள பாங்கனும் என்றுமாம். "—துன்னிக்—கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட—விலங்கிற்கும் விள்ள லரிது" என்பவாகலின், ஈண்டுநோக்கடுப்பப் பாங்கன் கூறப்பட்டனன்.

அ நலன் நாடும் = அந்த நன்மையமைந்த நாடும்;

"அந்நல னாடும்" என்றார் தலைமகனது இருப்பால் அதுபோது நன்மைபெற்றிருந்து அவனதுபிரிவால் இதுபோது தீமையுற்றது என்பது போதரற்பொருட்டென்க. "அவ்வயோத்தி யிவ்வனம்" என்றார் கம்பநாடரும். அம் + நலன் + நாடு எனப்பிரித்து அழகிய நலனமைந்த நாடு என்றுங்கூறலாம். நாடு ஆகுபெயர்.

துளி விரல் எடுத்து எறிந்து ஏங்கி அழுது விம்ம=(துன்பமிகுதியாற் கண்களினின்றும் துளித்த நீர்த்) துள்ளியை (விரலால்வழித்து) எடுத்துவீசித் திகைத்து ஓலமிட்டுப் பொருமா நிற்கவும்;

ஏங்குதல்—என்செய்வோமென்று திகைப்புறுதல்; அழுதல்—அத்திகைப்புக் காரணமாகச் சத்தமிடுதல்; விம்முதல்—சத்தமிட்ட அயாச்சியும், துன்பத்தினுயர்ச்சியும் ஒன்றுபட்டமையான் நேரிடும் பெருமூச்சொடுகலந்த புலம்பாலழுங்கல்.

நிலன் படா திரு அடி பரல் பட்டு சேந்து புண் உற்று இனைவு உற=வெறுநிலத்திலே மிதித்தறியாத நல்லிலக்கணமமைந்த பாதமானது (தொடுதோலின்றிப் பாலைவனத்தில நடத்தலாற) பருக்கைக்கற்களாற் றாக்கப்பட்டு(க) (அத்தாக்கலாற்) கன்றுதலுற்று(ப்) (அக்கன்றுதலின் மிகுதியாற) புண்பொருந்தி வருத்தமடையவும்;

இவனது அடிவைத்த இடத்தில் எண்பெருஞ்செல்வமும் பொங்குமென்றாள் என்பது தோன்றத் "திருவடி" என்றும், அத்தகைய பாக்கியமடைத்த அடியை இப்பாலைநிலன் வருத்துவதென்னகொடுமை என்றாள் என்பதுதோன்றப் "பரற்படு" என்றும், அப்படுகையாற் பாதம் கன்றியதே என்றுகவன்றனள் என்பதுபோதரச் "சேந்து" எனறும் கூறினார். நிலன் படாத என்றமையால் அவனது வளர்ச்சியின் அருமைபெருமைகளைப் புலப்படுத்தினாளாயிற்று.

போந்தது கருதில்=(இங்ஙனமாகவும் என்னொடு உடன்போக்குக்கு ஒருப்பட்டு) வந்தமையை நினைத்தால்;

என்னை நின் அடிக்கு எய்து செருப்பு ஆக்கினும்=(எளியவளாகிய) என்னை நினது திருவடிக்குப் பொருந்துகின்ற செருப்பாம்வண்ணம செய்தாலும;

உன் உதவி பெரிது ஆல்=(அச்செயலைப்பாரகிலும் உடன்போக்குக்கு இசைந்துசெல்லலாகிய) நினது உதவி பெரிதாகவேயிருக்கின்றதால்;

பாலையின்வெப்பமும், பரற்செய்பருவரலும் தலைமகனடியைத் தாக்காவண்ணம் தன்னை அவன்காலுக்குச் செருப்பாக்கிக்கொள்ள நினைத்தாள். அந்நினைவு செய்கைக்குவரினும் அவன் செய்தவுதவி 'நனிபெரிதும், தன்செயல் நனிசிறிதுமாகவே இருக்குமென்று கருதினள் என்க. "காலுக்குத் தோற்செருப்பாவேன்" என்பது உலகவழக்கு.

உளம் கசிந்து ஏங்குவல்=நெஞ்சம் உருகி இரங்குகின்றேன்;

என்னை மகிழ்விக்குமாறு நீ எத்துணைமகிழ்ச்சியைச செய்யினும் யான் அத்துணைமகிழ்ச்சியையும் ஒதுக்கி இரக்கமேயுறுவல் என்பதுபோதர "ஏங்குவல்" என்று கூறினாள்.

தலைமகள் இங்ஙனம் கூறியவற்றையுட்கொண்ட தலைமகனது கூற்று இனிக்கூறப்படும்.

பின்னு சடை தூங்கி பெரிது பெயர்ந்து ஆல=பின்னியசடையானது தாழ்ந்து பெரிதாக இடம்பெயர்ந்து அசைய;

ஆலல்—ஆடுதல்.

அன்னம் தன்னையும் அழகு பிடி தன்னையும் என்னை என்று இகழும் இன் நடை பொன்னே=அன்னத்தையும, அழகியபெண்யானையையும் (இவைநடக்கும நடைதான்) எத்தகைத்தென்று இகழ்ச்சிசெய்யும இனிய நடைவாய்ந்த திருமகளே;

இவளது நடையினிமைக்கு அவற்றினடை ஒப்பாகாதென்க. உடன்போக்காதலின் நடையும், அந்நடையால் இகழப்பெறும் செயலுங கூறப்பட்டன.

மானே=(நோக்கால்) மான்போன்றவளே;

தேனே=(அறம்பொருளின்பம் எனபவற்றை நுகர்தற்குச் சாதனமாயிருத்தலினலே) தேன்போன்றவளே;

சொல்லினிமையானே தேன்போன்றவளே என்றுமாம்.

மலை தரு மருந்தே=மலைதருகின்ற மருந்துபோன்றவளே;

என்றது இயற்கைப்புணர்ச்சி தந்தவளே என்றவாறு. மருந்து கூறப்பட்டமையாற் றேனுக்கு முற்காட்டிய உரைகூறினும். மருந்து—தேவாமுதமுமாம்; அதற்குக் கடலிற்பிறவாத மருந்தே என்றுகூறிக்கொள்க.

கரும்பே = (இயற்கைச்சுவை மிகுதியாற்) கரும்பையொத்தவளே;

விருந்தே = (தான் நுகருமாறு ஏற்பட்டுப் பெருமகிழ்ச்சி தருதலால்) விருந்துபோன்றவளே;

கட்டழகு உடையாய் = (என்னெஞ்சத்தைப் பிறிதொன்றின்பால் விடாது நின்மாட்டே அமைந்திருப்பக் கட்டிவைக்கும்) பேரழகுடையவளே;

அழகெல்லாம் தன்பாலேயடங்கக் கட்டிவைத்தாலொத்த அழகுடையாய் என்றுமாம்.

கண்ணே வண்டு என காதல் கூர் காட்சி பெண்ணே = நினதுகண்ணே வண்டாமென்று காட்டிக் காதன்மிகுவிக்கும் காட்சியினையுடைய பெண்டன்மை வாய்ந்தவளே;

அகன் ஐந்து திணை பொருள் பயன் எனக்கு அளிக்க எய்திய இன் தமிழ் சுவையே = நடுவண் ஐந்திணைக்குரிய பொருளின்பிரயோசனத்தை எனக்குக்கொடுத்தற்பொருட்டு (இவ்வுலகிற் பெண்ணுருவெடுத்து) வந்த இனிய தமிழ்மொழிக்குச் சுவைபோன்றவளே;

அகன்—அகத்திணை. ஐந்திணை—குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பவையும்; அவற்றிற்குரிய புணர்ச்சி, பிரிவு, இருத்தல், ஊடல், இரங்கல், என்பவையும்; அவற்றின் நிமித்தமுமாம். இவ்வைந்திணை கைக்கிளைக்கும், பெருந்திணைக்கும் இடைப்பட்டிருத்தலின் "நடுவணைந்திணை" என்றுவிரித்துக்கூறினும். ஆசிரியர் நச்சினார்க்கினியரும் "அகனைந்திணையும்" என்பதற்கு "நடுவணைந்திணைக்கண்ணும்" என்றுபொருள்கூறிப் போந்தமையறிக. ஆசிரியர் தொல்காப்பியனாரும் ஐந்திணையைக் குறிக்கும்போது "நடுவணைந்திணை" என்று கூறுவதும் நோக்கற்பாலது. திணையென்பது ஒழுக்கம்; திணையாகிய பொருள் என்க. பொருள் என்றவிலேசானே முதல், உரி, கருப்பொருள்களும் கொள்ளப்படும். இவையே அவ்வொழுக்கத்தை நடாத்திவருதலினாலும்; இறைச்சி, உள்ளுறை, இருவகைக்குறி என்பவற்றுக்கும் அப்பொருள்கள் இனிதாகலானும் என்க. இவற்றின்விரிவைத் தொல்காப்பியத்துப் பொருளதிகாரத்திலே அகத்திணைமுதலிய இயல்களுட்காண்க. பொருட்பயனாவது இன்பதுன்பங்கள்.

இன்பம் என்றது புணர்தலானும், அதன்னிமித்தத்தானும் எய்தப்பெறும் உள்ளப்பொலிவு; துன்பம் என்றது பிரிதல், ஊடல், இரங்கல் என்பவற்றானும் அவற்றினிமித்தங்களானும் எய்தப்பெறும் உள்ளச்சோர்வு. இருத்தல் தலைமகட்கேயுரியது. தலைமகள் தலைமகனுக்குரிய அறம்பொருளின்பங்களை இனிதுமுடித்தற்குச் சாதனமாகிய போகியப்பொருளாதலின் "எனக்களிக்க வெய்திய" என்றார். நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்—வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது—காதற் காமங் காமத்துச் சிறந்தது—விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி—புலத்தலிற் சிறந்தது கற்பே யதுதா—னிரத்தலு மீதலு மிவையுள் ளீடாப்—பரத்தையுள் ளதுவே பண்புறு கழறு—ஞ்ஞேண்புதி தூண்ட பரத்தையிற் சிவப்புற—நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே—கேளணங் குறயனைக் கிளந்துள சுணங்கறை—சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே, அதனால்—அகற வறியா வணியிழை நல்லா—ரிகறலைக் கொண்டு துனிக்குந் தவறிலசித்—தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழாய் வந்திலார்—கொள்ளாரிக் குன்று பயன்" என்னும் குன்றம்பூதனார் பாட்டால் வடமொழிமுதலிய எல்லாமொழிகளுக்கும் இவ்வைந்திணை உரித்தாகாது தமிழுக்கே உரித்தாமென்பது பெறப்படுதலின் "இன்றமிழ்ச் சுவையே" என்றார்.

ஆழ் கடல் அருந்திய அகுறு முனியின் எழ் தமிழ் கடல் இசை இன்பு எ(ல்)லாம் மணந்து ஈண்டு ஒரு வழி படைத்த அன்பு உடை குயிலே = ஆழ்ந்த கடலையுண்டருளிய அந்த அகத்தியமுனிவன்வகுத்த இலக்கணமுறைப்படி அமைந்த எழாகிய சுரங்களையுடைய தமிழ்க் கடலாகிய இராகத்தாலுண்டாகும் இன்பத்தையெல்லாங்கலந்து இம்பரிலே ஒருவழியாகப் படைத்திட்ட என்மேல் அன்புவாய்த்த குயில்போன்றவளே;

இயல், இசை நாடகமென்னும் முத்தமிழையுஞ்சீர்ப்படுத்தி இலக்கணம்வகுத்த மாதவ முனிவர் அகத்தியராதலின் அவரை இங்ஙனம் குறிப்பிட்டார். ஏழ் இசை, தமிழ் இசை, கடல் இசை, என்க.

வரை வழி ஒரீஇ வாட்டு சுரன படரும் மயிலே =(நடந்து சேறற்கு இனிதாயமைந் துள்ள) மலைப்பாதையை விட்டு நீங்கி (த்தனைத்தோ அடைவாரெல்லாரையும்) வருத்துகின்ற பாலை நிலப்பாதையிலே (என்பொருட்டுப்) படர்ந்துசெல்லும (வாடிய) மயில்போலுஞ் சாயலையுடைய வளே;

பாலையை வாட்டுசுரன் என்றமையான் மலையானது மயிலைமகிழ்விக்குந் தன்மைத்தென் பது பெறப்பட்டது. தன்னைவேண்டித் தொடர்ந்துவருதலின் அம்மகிழ்ச்சியைத் துறந்து வாட் டத்தைப்பெற்றனள் எனபதுகுறிபபு. எத்தகையமகிழ்சசி எய்தப்பெறினும் தன்பொருட்டுத் தலைமகன் காலவருந்தி இளைத்தமைகருதப் பெரிதும உருகியேங்குவலென்று தலைமகள் முன் னாக்கூறியதை உட்கொண்டதலைமகன அவளது உட்கோளை மாற்றுதற்பொருட்டே பொனனே, மானே, தேனே, மருந்தே, கரும்பே, விருந்தே, கட்டழகுடையாய், பெண்ணே; தமிழ்ச் சுவையே, குயிலே, என்றின்னவகையாக விளித்து அவளது உளளத்தைக் குளிரவைத்தான். குளிரவைத்தவன் தனருல அவள் எய்திய ஙயரபபாட்டை மெல்லென விரிக்கததொடங் கினன. இங்ஙனம் கூறுவதால் அவ்விருவரும புணாசசிகருதியே வருந்தினரென்று தெளிந்து கொண்டு ஒருவரான்மற்றொருவர் துன்பத்தையெய்தினர் என்றுட்கொண் வருந்துதலை யொழித்தக் கடமையெனறு தேறி இன்பமெய்துவா என்க. இதனுன்றே தலைமகனுக்குப் பின்னர்த் தலைமகள்கூற்றைறக் திரும்பவுங்கூறுது இந்நூலாசிரியர் சென்றனர் என்க. சென்ற மையின்கருதது இருவருங்கொணட துன்பமிகுதியை ஒழித்து இன்பமெய்திச் சென்றனர் என்பதாகும். இன்னும வேண்டியவளவு இவவாறே விரிததுரைததுக்கொள்க.

அயில் வேல் வள்ளல் தோள் வேட்டு பயன் பெறு வள்ளியில் = கூரிய வேற்படையை யேந்திய வள்ளலாகிய முருகனதுதோளை அணைதலைவிரும்பியவாறே பயனைப்பெற்ற வள்ளி நாயகியாரைப்போல;

பற்றலரையழித்திடும் ஆற்றல் தோன்ற "அயில்வேல்" என்றும், அன்புசெய்வார்க்கு வரையாதுகொடுக்கும் வண்மைதோன்ற "வள்ளல்" என்றும் கூறினர். வள்ளிநாயகியாருடன் நகையமாந்தது உலகிற்கு இல்வாழ்க்கையை விளக்குதற்கென்க. திருமுருகாற்றுப்படையில "ஒருமுகம்,-குறவா மடமகள் கொடிபோல நுசுப்பின்-மடவரல் வள்ளியொடு நகையமாந் தன்று" என்றதொடருக்கு நச்சினார்க்கினியர் விசேடவுரையிற் "காமநுகர்ச்சியில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான், உலகில இல்வாழ்க்கை நடத்தற்கு என்றுணர்க. அது, 'தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்" என்பதனுட் "பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத் தோர்-விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ' என்பதனானுணர்க" என்று கூறிப் போந்தமையை நோக்குக.

பற்று எனக்கு அளித்து = (பெற்றதன்மேன் மனசின்) விருப்பத்தை எனக்குக்கொடுத்து;

பெற்றுக்கொண்ட நின்னையேவிருமபுமாறு செய்தனை என்றபடி. வள்ளியைப்பெற்ற முருகனுக்கும அவண்மேற்பற்றுண்மை புராணங்களால் அறியற்பாலது.

விழிக்கு துணை செய்து வழிக்கு துணையாகிய மாமணி விளக்கே = (நின்னைக் காணுது வருந்திய எனது) கண்களுக்கு (இனிய காட்சியையும் அதனான மகிழ்ச்சியையுங்கொடுத்து) உதவிபுரிந்து (உடன்போக்குவழிக்கு யான் தனிமையிற்செல்லாது) துணையாகிய பெரிய மணி விளக்கொத்தவளே;

புணர்ச்சிபெறுது தேடித்தேடியும் காணக்கிடையாது அலமந்தவிழிக்கு இதுபோது களிப்புநல்கலின "விழிக்குத்துணை செய்து" என்றும, முலைவிலைகொடுத்தற்காகப் பொருள் வயிற்பிரிந்திருந்தாற் றனிவழிச்சென்று வருந்தவேண்டுமாதலின் இவ்வுடன்போக்கால் அவ் வருத்தமும் நீக்கப்பட்டமைபற்றி "வழிக்குத்துணை யாகிய" என்றும் கூறினன். தனிமையிற்

சேறலால் உளவாகுந் துன்பமாகிய (கதிரவனாலும் அகற்றற்கரிய) இருட்டை இவன்போக்கி இன்பஞ்செய்தலின் மணிவிளக்கென்றொழியாது "மாமணி விளக்கே" என்றானுமாம்.

மகிழ் பூம் பாவாய் = களிப்பைச்செய்கின்ற அழகிய பாவைபோன்றவளே;

உடன்போக்கின் பெருமைதோன்றாதிருந்து வருந்தியதலைமகள் தான் இங்ஙனம் வாராவிடிற் றலைமகன் முலைவிலைகொடுத்தற்குப் பொருளீட்டுமாறு தனிமையிற்செல்லவேண்டி வருமென்பதையுணராது மகிழ்ச்சியும், வியப்புமெய்திச் சித்திரப்பாவையின் அத்தக அடங்கியிருந்தனள் என்பது ஈண்டுவிளக்கப்பட்டது. பாவை அழகிற்கும், அசைவின்மைக்கும் ஒப்பாகும்.

[பற்று நீங்கிய பண்போன் அடித்துணைப்-பற்றொன்று பற்றி] பற்று நீங்கிய பண்போன் துணை அடி பற்று ஒன்று பற்றி = இயல்பாகவே பாசங்கள் நீங்கப்பெற்ற தன்மையையுடையோனாகிய கடவுளது இரண்டாகிய பாதங்களின் மேல்வைத்தவரும் அன்பொன்றினையே விடாது பிடித்துக்கொண்டு;

அடித்துணை என்பது துணையடி என மாற்றப்பட்டது.

பிற பற்று ஒரீஇ = ஏனைய பாசங்கள் எல்லாவற்றினையும் நீக்கி;

பிறபற்றுநீங்க இறைவனடிப் பற்றொன்றும் வேண்டுமென்க.

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்-பற்றுக பற்று விடற்கு" என்பது குறள்.

நிலத்து படை துன்பு எ(ல்)லாம் நீத்து உயர் இன்பு கொள் = பூவுலகில் உண்டாகும் துன்பங்கள் எல்லாவற்றையும் அகற்றி மேலாகியபேரின்பத்தைக் கொண்ட;

புலம் துறை முற்றிய புலவோர் போன்று = புலத்தினைப்படைத்திட்ட நற்பயன்முதிர்ந்த சான்றோர்போன்று;

புலத்துறைமுற்றலாவது ஐம்புலவடக்கஞ்செய்து முற்றுப்பெறல். புலத்துறைமுற்றினார்க்கு நிலத்திடைப்பெறுதற்குரிய விருப்புமுதலியன இலவே. அதனால் வெறுப்புமில்லையாகித் துன்பிலராவர் என்க. "வேண்டுதல் வேண்டாமை யிலானடி" சார்ந்து அச்சாரப்பெற்றான் தன்மையையெய்தினார் என்க. புலவோர்-அறிவாளிகள். அறிவுடைமையின்பயன் இதுவே யாகலிற் புலவர் என்று இவர் கூறப்பட்டனர்.

நலம் தகை நல்லாய் = நன்மையமைந்த தகுதியையுடைய மடவரலே;

"நல்லாய்" என்பது "கருங்கண்ணன்" என்றாங்கு இடுகுறியளவாய் நின்றது. "தகை" நடுவுநிலைமை. அதுவே யாவர்க்கும் நலன்பயத்தலின் "நலத்தகை" எனப்பட்டது. நல்லாய் என்றதற்குப் பொருள்விளங்க இங்ஙனம் அடைகொடுத்தாருமாம். மிகைபடக்கூறுதல் நேருமாதலின் இடுகுறியளவாய் நின்றதெனப்பட்டது. பெற்றோரினும், நாணம்முதலியவற்றினும் கற்பே சிறந்ததெனக் கண்டுகொண்டு உடன்போக்குக்கொருப்பட்டனள் ஆதலின் "நலத்தகை நல்லாய்" என்று கூறப்பட்டனள்.

பொல்லேனை ஈர்த்து = பொல்லாக் குணஞ்செய்கைகளை உடையவனாகிய என்னைப்பின் றொடர்வதற்கு விருப்பங்கொண்டு;

பொல்லேன் என்றான்; பொருளீட்டி முலைவிலைகொடாமல் உடன்போக்கைவிரும்பியதாலும், அப்போக்காலே தலைவிக்கு நடைவருத்தமுதலியனவும், தன்னிளைப்பு உணர்ந்துகோடற்றுயரமும், தாய்தமர்க்கு உளவாகுந்துயரமும் ஏற்படுத்திய பொல்லாங்கையுங்கருதி என்க.

தனக்கு நிலன் தராது = (பாலையொழுக்கமாகிய) தனக்கு நிலப்பகுதியைப் பகுத்துத் தந்திடாமல்;

குறிஞ்சி முதல் ஆகிய = குறிஞ்சியை முதலாகவுடைய நான்கு ஒழுக்கங்களும்;

நான்கு ஒழுக்கமாவன புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல் என்பனவாம். இவற்றை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ப. பிரிதலைப் பாலையென்ப.

தமக்குள் பாத்து அமை தகைமைக்கு = தங்களுக்குள்ளேயே நிலத்தை நான்கு கூறாகப் பங்கிட்டுக்கொண்ட தன்மைக்கு;

குறிஞ்சி, மலையையும், முல்லை காட்டினையும், மருதம் வயலையும், நெய்தல் கடலையும், அவ்வவற்றைச்சார்ந்த இடங்களையும் பகிர்ந்துகொண்டன. இறைவனே இங்ஙனம் பகுத்துக் கொடுத்தான். "நடுவ ணைந்திணை நடுவண தொழியப்-படுதிரை வையம் பாத்திய பண்பே" என்பது தொல்காப்பியம். இறைவனால் அருளப்பட்ட பகுப்பு குறிஞ்சிமுதலாயவற்றின்மேல் ஏற்றப்பட்டது. ஊழான்வந்தவற்றைப் பிறர்செய்தவாகக்கோடல் குறிக்கப்பட்டது.

பொருது வயிற்று எரிவு படைஇய பாலை = பொறாமைகொண்டு (அக்கொண்டமையான்) வயிற்றெரிவுபடைத்த பாலையாகிய;

பாலையானது முல்லைகுறிஞ்சிகளைத் தனது வயிற்றெரிவுகாரணமாக அழித்துத் தனக்குரிய வாக்கிக்கொண்டது. "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து-நலவியல் பழிந்து நடுங்குதுய ருறுத்தும் பாலையென்பதோர் படிவங் கொள்ளும்" என்று கூறுமற் பாலையின்மேல் அவ்வழிப்பு ஏற்றப்பட்டது.

பாலைக்கு வெப்பம் வாய்ந்தது இயல்பாயிருக்கவும், பிறவற்றினால் நேர்ந்ததென்று கூறி வருணித்திட்டார் இந்நூலாசிரியர் என்க. பாலையானது நடுவணது என்பதுபோதர "வயிறு" என்றும், அதனியற்கை வெப்பஞ்செய்தல் என்பதுபோதர "எரிவு" என்றும், ஏனையநானகும் தமக்கும், உலகிற்கும் பயன்பெறும் வாய்ப்புற்றன இதனுக் கஃதின்றென்பது போதர "வாய்ப்பில்" என்றும் கூறினார்.

[செப்புருக்கி விட்டாங்குச் செந்நிலன் மறுகி-வெப்பிழை பகுவாய்] செம் நிலன் செம்பு உருக்கி விட்டாங்கு வெப்பு மறுகி இழை பகுவாய் = சிவப்புநிறம் வாய்ந்த நிலமானது செம்பினை உருக்கிப்பாயவிட்டாற்போன்று வெப்பஞ்செய்து சுழற்சியெய்துதலினால் ஆண்டுளவாகச் செய்த பிளவுகள்;

பாலையாகிய நிலன்; செந்நிலன் என்க.

சிறு மெல் அடியை புண் செ(ய்)ய = சிறிய மிருதுவாகிய பாதத்தைப் (பிடித்துத் தடுத்து உள்ளழுத்திவருதலினானே) புண்படுத்தவும்;

[குறுகு திரட் பாற்பகை பொருதுமற்-றிருப்பையுதிர் செம்ம லேய்ப்ப மொக்குணீர்-வேலைத் தெம்முள் குத்திவெளி யாக்கி] குறுகு பரல் திரள் பகை பொருத மொக்குள் நீர் தெவ் வேலை முள் குத்தி வெளியாக்கி இருப்பை உதிர் செம்மல் ஏய்ப்ப = வழியில் முற்படுகின்ற பருக்கைக்கற்களின் கூட்டம் பகைபொருதலிற் றாக்குவதாலுண்டாகிய கொப்புளங்களிலமைந்த நீரைப் பகையாகிய வேலமரத்தினதுமுள் குத்திவெளிப்போகச்செய்தலினாலே (பாதங்களில் நீரற்றிருந்த அக்கொப்புளங்கள்) இருப்பைமரத்தினது உதிர்ந்துவாடிய மலர்களின் தோற்றத்தை யொக்கவும்;

மொக்குள்-குமிழ்வடிவாகிய கொப்புளம்; வேலைமுள்குத்தி நீரைவெளியேற்றுதபோது இருப்பையின்மொக்குளை யொத்ததென்க. செம்மல்-வாடியபூ.

நெருப்பு மிதித்து ஆங்கு நைந்து நைந்து உருகி = நெருப்பின்மேலே அடிவைத்து நடந்தாற்போலும் (இப்பாலையில் நீ நடந்துவருதலினால்) வருந்தி வருந்தி மனமுருகி;

உய் என்று உயிாக்கும் உயிர்ப்பான் உழன்றும் = உய் என்னும் ஒலியுண்டாகச் சுவாசிக்கும் மூச்சினாற் சுழற்சியடைந்தாய் என்றாலும்;

கான் தரு துன்பும் = இச்சுரமானது (நடத்தலினானே) கொடுக்கின்ற துன்பமும்;

மேனி இளைப்பும் = (அத்துன்பங்காரணமாக) உடம்பு இளைத்த இளைப்பும்;

மேனி என்றமையால் நிறம் கருகின்மையும் கொள்ளப்படும்.

என்னது = (என்னும் இவற்றையெல்லாம் ஒருபொருளாக [illegible]) மதிக்[illegible]

வந்த நின் காதற்குச் செய்யும் கைமாறு உண்டு கொல் = (என்னுடன் உடன்போக்கிற்கிசைந்து) வந்த நினதுபேரன்பிற்கு (யான்) செய்யத்தக்க பிரதிநன்றியும் உளதேயோ?

வருந்தற்குக் காரணம் காதலாதலின் இங்ஙனம் கூறப்பட்டது. உம்மை தொக்கது.

காதல் கடல் அமுதே = காதல் என்கின்ற கடலிற்பிறந்த அமுதமே;

இதனையும், "நலத்தகை நல்லாய்" என்பதனையும் "மகிழ்பூம் பாவாய்" என்றதற்குப் பின்னாக் கூட்டுக. இவற்றிற்குக் காரணம் விரிக்கிற் பெருகும்; உய்த்துணர்ந்துகொள்க.

நீர் பிரிந்து நிலை குலை மீனின் = நீரைநீங்கி (உயிரொடு வாழ்ந்துவந்த) தன்மையினது நிலைகுலைந்த மீனைப்போல;

நீரின் இன்றியமையாமை தோன்ற "நீஇர்" என்றளபெடுத்தது.

யாயரும் தமரும் ஆழ் துயர் கடல் உற = நின்னுடைய தாயரும், சுற்றத்தாரும் ஆழ்ந்த துயராகிய கடலுள் அமிழ்ந்தவும்;

மீட்சியின் அருமைதோன்ற "ஆழ்துயர்க் கடல்" என்றார். ஆழ்கடலொத்தது துயரெனக. செவிலிமுதலியோரை உள்ளடக்குவதற்காக "யாயர்" என்றார். இவளது இன்றியமையாமையைக் காட்டுதற்கே அன்னாரை நீர்பிரிந்த மீனுக்கொப்பிட்டார்.

பாங்கி ஏங்கி நீ பயில இடன் எல்லாம் கண்ணீர் ஆட்டி உள் நீர் மாற = (நினது) தோழியானவள் (நின்பிரிவுக்காற்றாளாய்) இரங்கி நீ பழகி (விளையாடி) வந்த இடங்களெல்லாவற்றையுங்கண்டு கண்டு கண்ணாலே நீராட்டித் தனதுநெஞ்சத்தின் நிலைமை மாறுதலடையவும்;

பயிலிடன் என்றமையால் விளையாட்டுப்பொருள்களையும் தழீஇக்கொள்க.

என்னையே பொருள் என எய்தினை = என்னையே ஒருபெரும்பொருளாக நன்குமதித்து என்னுடன்போதற்கு அடைந்தாய்;

நல் நுதல் வேய் தோள் நறும் தாரோய் = நன்மையமைந்த நெற்றியையும், மூங்கிலையொத்த தோளினையுமுடைய நறிய மலர்மாலையணிந்தவளே;

இவ்வடியையும் "காதற்கடலமுதே" என்றதற்குப்பின் கூட்டிக்கொள்க.

தலைவி கூற்றாகிய முற்பாகத்தை "என்னுயி ரன்னால் * * * * * * உளங்கசிந் தேங்குவல்" என்றும், தலைமகன் கூற்றாகிய பிற்பாகத்தை "இன்னடைப் பொன்னே * * * நறுந்தாரோய் * * * * எய்தினை" என்றும் முடிக்க.

---

(68) ஆய மகளி ராடிய குரவையு
மாயோன் மேய முல்லையு மகிழ்த்தல்.

கண்டோர் மறக்கொணாக் காமர் காட்சித்
திருட்டுப் புகுந்திருக்கு மியல்பிற் றெளிசெலா
மருட்கைத் தோவிய ரருட்டுறைப் பாவலர்
கருத்து முற்றவுங் கவர்கோண் மாட்சித்து
வெள்ளிடை கொளாது மேவு மாக்களைத்
தள்ளுவ போன்று தழைசெறி மாநெலாம்
விண்ணளவு கவரும் விளக்கஞ் சான்றது
நிற்பது போன்று நீளிடைச் செல்லும்
பொற்பமை யிசைவும் புள்ளுப்பறப் பென்ன

நிலத்திடைப் பறக்கு நிமிர்செவி முயலு
நீள்வாற் குரங்கு நிணம்விழை புலியுங்
கருமயிர்க் கமபலங் கதூஉ முளியமுஞ்
செவ்வாய்ச கிள்ளையு மின்மினி விளக்கத்
திழையெழிற் குடம்பையி னிருக்கைக் குரீஇயுங்
கணவாய் நாக்குக் காட்சிப் பூவையு
நெடுஞ்சிறைக் கொடுமூக்கு நீள்பிண வல்சிப்
பருந்துங் காலசீத தந்நுண் மண்ணுறை
புழவுண் கோழியும் பேடுபயிர் புறவு
மினன பிறவு மெய்திய செல்வக்
கானத்து வளனெலாங் கவினி நலன்பெறக்
கடறகரை மாட்டுக் கருநீ ரிடையிற்
றெண்மணல் பரப்பியாங் கிமைசின் மழையு
மெண்ணுவடி வெலலா மிலங்கக் காட்டிப்
பலவயிற படர்நத பானிற மழையும்
வடந்தை தள்ள வழிவழிப போந்து
மூடுபனி யென்ன மொய்புழுதி யென்னத்
தோற்றம் பெறறுத் துன்னுதிசை வரையின்
மாறறம் பெறறு வானிடங் கவர்நதாங்
கேறறம பெற்றுக் கறுப்பும் வெளுப்பென
விருண்டு நிலத்திடை யிருட்டுசசுவர் குழைத்து
வைதது நிரலபட வுயர்த்தியாங் கிருட்டிக்
விண்ணின் வநது வெடிபடச் சிரித்துக்
கண்முன் வநது கடுஙகுர லார்த்தென
மினனி யிடிசெய் தின்மழை பொழியுங்
கார்தொடங் கின்றே காதொடங் கின்றே
கருததறி விககா கையுறுப பிலலா
திருததம பெறாஉஞ் சிறபபறி வில்லா
பெயர்நதுபெறற கொண்ணு பிறகாப பில்லா
வினை விபல விமபருயிர்ப பொருளொலா
மன்னுவெப பொறுப்பான் மரீஇ யின்ன
னனனர்கெட டழிநதென முன்னிக் கையிக்
கிடவெடுத் தென்னத திருவில வெலஇக
கறுபபுக்கொண் டென்னக் கடுவிற் கரீஇ
நகைப்புவழி நெருபபு நனிவிட் டாஅங
கிடிப்புவழி மின்னிய பலஉறுளைத் தூம்பிற்
பொழிநீர்க கணையிற் சுணமழை பொழீஇ
வெபபுவழிப பெற்றுக் கான்மறை புழுதியை
யுடைநிலக் குதவிக் காறாய் தீர்க்கி
வெரியழித் தோட்டி விழுநிலங் குழைத்து

வானோக்கு புள்ளின் மேனோக்கி யுருகி
யியற்கைக இன்னரு ளெய்திவர் தென்னக்
கார்பெயல் சிறப்பக் கருங்குயில் பனிப்பப்
புற்றத் தீயல் புறப்பாடு கொள்ள
வாங்கிடிக் கஞ்சிய வராப்புகுந் தடங்க
வோங்குவழி யெல்லாந் தேங்குபுன லோட
முதையலங் கானத்து மூடிய விதையெலாம்
புதைதலை காட்டிப் புறப்பாடு கொள்ள
முளிசரு குதிரக் கார்தொடங் கின்றே
அதனால்,
பிறபொருள் படினே யவ்வயிற் சிலிர்க்கு
மள்ளற்கூர்ங் கோட்டி னவ்வே றானின்
மிடற்றுறு தெண்மணி மெல்லெனக் கறங்க
வீருட லோருயிர் மேஎய் விழையுங்
குடத்தொகை சுட்டிக் கொள்பெயர் நல்லான்
குடம்புரை செருத்தல் கோடற் சுரைநிரை
தீம்பால் சுரந்து வழியெலாஞ் சொரிந்து
தாம்பசை கன்றுக் கூட்ட விரைந்து
மன்றுவந்து படர்ந்தும பறிப்புறக் கோற்கைத்
தொன்றுவரு தொடுதோற் காலமை புறவுக
குடியுடைக கோவலர் குலவிளக காருநர்
சேறுண் செவ்வுடைக் காருறழ் மேனியர்
நீர்நிலை யக்கரைத் தாஅய்த தாஅய்ச்
சேறற் குடைநதசிற் றுழிசில் லோசசுநர்
பூவர சுதவிய பொற்பூ வகவிதழ்
கொடுமணி குயிற்றிய குழையமர் காதினர்
மணிவிர லாழி யணீஇ மகிழ்குந
ரவ்விலைச சுருளிற் பெறுமிசை வெறிதென
வதன்மருங்கு துளையிட் டலங்க வூதி
வெறுத்தய றெங்கின் விளங்கோலை கொண்டு
சமைத்தகுழ லூதுந் தகைமைச சிறுருட
ளுடல் வேட்டவர் புறநதொடர்ந தோடுங்
கலங்குவிழி யாட்டிடைக் கரவுகொடு புக்கு
மென்மெல விருநது கலலாக் கோவலர்
மடிவிளிக்கு மருளாச் சூழ்சசிக் குறுநரி
யாஅங் கொன்றி னணிமணி களைஇ
மிடற்றிடைக் கௌவி விரைந்துவா லோச்சி
யடித்தடித்துக் கொடுபோ யரும்புத ரடையும்
வைகறை யாமத்து வால்வளைக் கையின *
ரயிர்வுற் றுழைப்பின மஞ்சிப்பாய்ந் தோடத்

தேய்கான் மத்தொலி சென்றுசெவி புடைக்கத்
தயிர்கடை யாய்ச்சியர் தம்மிடைக் குறுகிக்
குந்தி யிருந்து கூடுவிழி மூஉய்
முணுமுணுத் தன்னவர் போதன்முற் றியபின்
றயிர்த்துமி நக்கி வெண்ணெய் சுவைத்து
முன்கா னக்கித் தன்னுடல் கழீஇப்
புன்மைநிலன் மறைஇ மான்பாய் புலியென
வோடெலி கண்டு துடுமெனப் பாய்ந்து
மிடற்றிடைக் கௌவி வீத்துத் தனிவிடூஉப்
புரட்டி நோக்கிக் கொடுபோந் தருந்தி
நெருப்பவி யடுப்பக நிரைத்துத் துஞ்சி
விருப்பொடு வெளிப்படூஉந் தன்னைக்கண் டாங்கு
வெள்ளெனக் குரைஇ விரைந்துவரு ஞமலி
மரககாப் படையுமுன் மறிப்பது காணுபு
நின்றுபின் னோக்கி நெருக்கிய பூஞை
வென்றிகொடு மெல்லெனத் தன்னிலை மேவுங்
கன்றுபா லருத்தக் கசிந்தான் பயிர்த்தலு
மவ்விய னடைமா ரதன்கன் றரற்றல்கேட்
டிடைச்சியர் பிணித்த தாம்பியாப் பவிழ்ப்ப
ஆங்கு,
துள்ளிப்பாய்ந் தோடித் துன்னிய கன்று
முட்டித் தாக்கி மடிப்பா லருந்துழி
வான்மே னிமிர்த்து வளைப்புற நக்குபு
பூஞையொடு ஞமலி பூங்குருளை வெருட்டி
முத்தாடு முறையின் மோந்துபால் சுரந்து
மொய்யென் றுயிர்த்து விழிமூஉ யின்புறாஉம்
ஆங்கு,
கார்கோ லோச்சிக் கலக்குவெப் பறுத்து
வாகை சூடிய வளஞ்சான் முல்லைக்கு
முடிமங் கலத்தின் முதலமை விழாக்கோள்
கவின்பெறு கானங் களிப்புற் றயர்தலின்
மரன்செடி கொடிமுத லாகிய வெல்லாம்
பொருந்துமா சகலப் பொலிந்தா டியவே
தெற்றியெனச் சுவரெனச் செறிகன் னிலனெனக்
சிறுகட் களிறென வெருமையெனச் சிறந்து
முற்றிய வியற்கைச் சிறுகற் பாறைமிசைப்
பன்னிற மலரும் வண்டுருங் கோபமு
நிரல்படப் பரந்தெழி னிலவோ வியப்படவு
மாங்காங்குப் போர்த்த வமைதியி னிலகிய
நீலம் விரித்து நிழலொளு பான்மணிக்

கோப்பிடைத் தூங்கலின் முசுண்டையு மெற்றியும்
பகன்றையு மவரையும் பந்தர்செய் தலர்ந்த
நீர்நிலை மிசையு நேர்கரை மிசையும்
வரம்பிகந தழகிய மலர்மலர்ந் தனவே
கோம்பிக் கஞ்சி யிலையின் மராத்துக்
காய்ந்த சினைமிசை யிருப்பக் கண்டது
மெலமெலன வேறிக குருந்திபுண் விழைவாற்
றவறூது கௌவித் தம்மிசை யூர்தலிற்
றும்பறந துடலந் தரூஉ மயிலினங்
கண்ணு வாகிக் களிப்புறீஇ யகவின
பழக்குழற் கொன்றை பொற்றார் பயந்தன
யீரம் மடவோர் பசலை பிலிற்றிய
காடுநகைப் பதுபோற் கவின்கொடி முல்லை
மூடுமுகை யவிழ்த்து மொய்மணங் கஞற்றிய
மணிகொழுந்து கான்று வயங்குறு பட்டின்
பொட்டெனக் கோபம் பொலிவுகொடு பூத்த
நாயேய யாடே பட்டுயிர் புழுவே
பெண்கே யின்னன மீக்கோ ளறுவைமுத
னன்ன ரார்நத பொன்னுடை நலகிய
துருககமும் புழுகு மணவிரை சொரிந்த
கருக்கை வெண்பற் கானவர் தோற்றத்துக்
குரங்கின நகைச்சுவை மிகைபடக் கொடுத்த
வான்முர சார்த்து வாடையொடு களித்த
மலர்வாய் வைத்துக் களிவண் டிசைத்த
பூசொரி மழையும் பூம்பொடி மழையும
மாரி மழையொடு தேன்மழை பொழிந்த
வண்டர் பாடி மகிழீன் கொன்றை
கோவலர் தமக்குக் குயிற்குழ லீந்த
குழல ரிசைத்தமிழ் கூர்ந்து பொழிந்தன
ரிவ்வெலா மியைநத வியல்பெறு முலலை
பூண்ட கற்பினர் பொருமி யுருக்க
வெவ்வுவிழி மழையொடு விராஅய் விளங்குநர்
அவ்வயின்,
முல்லை சான்ற புறவத் தாய்ச்சிய
ரெல்வலைக் கையின ரிழைநார்ச் சுமட்டுமிசைப
பரூஉவடிக் குறுவாய்ப் பைநெய் யுண்டிருண்
டிலகு தாழியி னினஞ்சிறுத் தமைய
காட்டிற் றிரிந்து நறுநெய் நொடித்தாங்
கிட்டிய செல்வத் தேந்து மிழையின
நிலைமின்ன வேய்ந்து விளைசிம் பாப்பி

நிலம்புகு வீழ்த்தா ணிறுவி நிலம்படா
வீஇ ழூசன் மேளய் விளங்கித்
தாஅழ்ந் தோங்கிக் கவிந்தமனை பறவை
பலவிழைந்து காக்கும் பானிறை யாலத்
தியற்கைவனப் பெய்திப வின்னிழ லகத்துட்
செயற்கைவனப் பறியாச் செயிரறு கற்பின
ரநதமென் னடையென வவ்வெழிற் பிடியெனப்
புக்கனர் புக்தப் பொலன்செய் பூங்கொடி
கைக்கொள வுயிரையுங் கருதிலன் கட்கெதிர்
கூற்றுடன் றன்ன கூர்ங்கோட் டெருத்துட
னேற்றுவென் றின்சொற் பெருங்கட் டோகைச்
சிற்றிடைச்சி செங்கைத் திருத்தார் வாகை
பெற்ற பெருமக னிவளுடன் றீம்பா
லளாவிய பைநதேன் போன்றமைந் திருநட
ருலகிற் கென்ன வுவநதினிது வாழ்கெனக்
குரவைநன் காடிக கொற்றம் பாடி
விரையும் புகையும் விளைத்துமலர் தூவி
மாசக லன்பின் மனததிடை யுள்கினர்
பேய்சசி தரும்பா லுயிரொடு பருகி
யாய்சசியர் மனைதொறு மளைகவர்ந் தருந்தி
யுடுகைை கைகடுகாண் டிடுக்க ணுறுத்தி
யுரல்யாப் புறீஇ பொண்குழ விசைத்துக்
குன்றுகுடை கவித்துக கோநிரை காத்து
நலலாள கூறை நலமபெற வளர்த்துப்
பொருதுநூற றுவரைப பொன்னுல கேற்றி
வரமிகு மைவர் மனககலக ககற்றி
முலலைத் திணையி னெலலைக் கடவுளா
யமர்ந்துபால சொரியு மானிரை முதலா
வளம்பல விளைக்கும் மாவளர் மார்பத்
தண்டுழாய் புனையுந் தடந்தோட்
கொண்டல் வண்ணன் குரைசே வடிக்கே.

---

முல்லைத்திணையின் வளப்பங்களைக்கூறிவரும் இப்பாட்டில் அமைந்ததுறைவிளக்கம் வருமாறு:—

பருவமெய்திய ஆயர்தலைமகள் ஒருத்தியைச் சுட்டிக்காட்டி இவளை மணக்கவிழைவோன் இக்கொல்லேற்றை அடக்கிக்கோடல்வேண்டுமென்று அன்னவள்பெற்றோர் அமைத்திட்டும், அங்ஙனஞ்செய்தற்குப் பொதுவர்பலர் முயன்றும் இயலாமல் அஞ்சியும், காயப்பட்டும் பின்வாங்க விறன்மிக்க ஒருபொதுமகன் முன்னேறி அக்கொல்லேற்றை [illegible] அதுகண்ட பொதுவரெல்லாரும் அத்தலைமகளை அவனுக்கு மணம்புரிவித்து

அத்தருணம் ஆங்கமைந்த இடைச்சியர் எல்லாரும் ஒன்றுகூடி ஓர் ஆலத்தடிநிழலிற் புக்கு அத்தலைமகனின் வீரப்பிரதாபங்களையும், அவன் கொல்லேற்றை அடக்கித் தலைமகளை எய்திய திறமையையும் புகழ்ந்து பாராட்டி அவ்விருவரும் பாலொடு தேன்கலந்தாங்கு அன்பு கூர்ந்தளவளாவி இருபெருஞ்சுடரென்ன உலகிற்கின்றியமையாதவராகி வாழும்வண்ணம் தங்கள் முல்லைநிலத்துக்கடவுளும், குலதெய்வமுமாகிய திருமாலை மலர்தூஉய்ப் பரவிக் குரவை யாடி நன்குறப் பாடியுள்கினர் என்பதாம்.

ஏறுகோடல், வில்லேற்றல், திரிபன்றியெய்தல் முதலியனசெய்து மகட்கோடலைக் கைக்கிளையுள் ஒன்றென்ப. இஃது எண்வகை மணத்தினுள் ஆசுரம் என்பதின்பாற்படும். "ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெய—ராவயின் வரூஉங் கிழவரு முளரே" என்றார் தொல்காப்பியனார், ஆதலின் ஆயரும், ஆய்ச்சியரும் தலைமக்களாயினர் என்க.

தலைமகனுந் தலைமகளும் அன்புற்று வாழ்கவென்று திருமாலைப் பரவுதலின் இது புறநிலை வாழ்த்தாயிற்று. "ஆலயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்" என்பது தொல்காப்பியம். "கண்ணுதலோன் காப்பக் கடணமேனி மாலகாப்ப—வெண்ணிருதோ ளெந்திழையா டான்காப்பப்—பண்ணியனூற்—சென்னியாக களிக்குந் தெய்வநீ—நாளுக நாளும் மண்மிசை யானே" என்பது மேற்கோள். "இதுவுந் தலைவன குறிப்பின்றித் தெயவத்தால் அவனை வாழ்விக்கும் ஆற்றலுடையார் கண்ணதாகலிற் கைக்கிளைக்குப் புறனுயிற்று" என்று நச்சினார்க்கினியர் கூறினர்.

நுண்பொருள் கோடுமிடத்து ஆயர்தலைமகளை ஆனமாவாகவும், ஈன்மழுதிர்ச்சினையக் கொல்லேறாகவும், பொதுவர்தலைமகனைப் பதியாகவும் பொருத்தி நோக்கித் தெளிக. இம்முறையாகவும், 63-ம் செய்யுளுரையில் 307-ம் பக்கத்திலே காட்டியவாறாகவும், அன்னபிற வகைத்தாகவும் நுண்பொருள்கோடல் அகப்பொருட்டுறைகளில் சிலவற்றுக்குமாத்திரமே அமையுமென்றும், ஏனைய எல்லாவற்றுக்கும் பொதுப்படத் தலைவன், தலைவி, தோழன், தோழி, எனவருமவற்றை முறையே பதி, பசு, சத்தி, ஆன்மபோதமென்று இசைவுறப்பொருத்தி நுண்பொருள் கோடல்வேண்டுமென்றுந் தெளிந்துகொள்க.

பொருளதிகாரத்திற் சொல்லப்படும் தலைவன், தலைவி, கலவி, புலவி, கந்தருவமண முறைகள் என்பனவெல்லாம் தமிழர்க்குரிய பழய வழக்கங்களையே காட்டுவனவென்று சிலர் கூறுப. அவர்கூற்று எட்டுணையும் பொருந்தாது. பொருந்துமென்பாராயின், சிவாநுபூதிச் செல்வர்களுடைய தேவாரங்களிடத்தும், சிவதருமங்களை விளக்கும் பிற திவ்விய நூல்களிடத்தும், கோவை, உலா என்பனபோன்ற பிரபந்தங்களிடத்தும் அப்பொருட்டுறைச் செய்யுட்கள் விரவிவந்தமை எம்முறை பற்றியென்று கடாவி விடுக்க. அன்றியும், நக்கீரர் "களவொழுக்கம் உலகத்தின்பமன்று, இத்தலைமகனும் உலகத்துத் தலைமகனல்லன்" என்று கூறிப்போந்தமையின் கருத்தும் ஆராய்ந்துணரற்பாலது.

(இ—ள்.) கண்டோர் மறக்க ஒண்ணு கவின் உயர் காட்சித்து = (தன்னை ஒருமுறை) கண்டவர்கள் எல்லாரும் ஒருபோதும் மறந்துவிடக்கூடாத (அதனைச்) சிறப்புமிக்க தோற்றப் பொலிவினையுடையதும்;

செவிகொடு கேட்போர்க்கு அருமை புலப்படுதல் அரிது என்பதும், கண்கொடு காணார்க்கு அதுவும் இன்றென்பதூஉம் குறிப்பு. கண்டோர்—உம்மைதொக்கது. இத்தொக்க விலேசானே ஏனையகாலங்களுங் கொள்ளப்படும்.

இருட்டு புகுந்திருக்கும் இயல்பிற்று = (பகலிலே கதிரவனாலும், இரவின் சிலபகுதிகளிலே உடுக்கள், நாள், மதிமுதலியவற்றாலும் அலைப்புறுதலைத் தீர்த்துக்கோடற்கினிதாக) இருள் எல்லாம் ஒருங்குகூடி உள்ளேசென்று குடியிருக்கும் இயற்கையையுடையதும்;

ஒளி செ(ல்)லா மருட்கைத்து = எத்தகையவற்றின் ஒளியும் உட்புகமுடியாத அத்துணை மயக்கத்தையுடையதும்;

ஓவியர் அருள் துறை பாவலர் கருத்து முற்றவும் கவர் கோள் மாட்சித்து = சித்திரகாரரும், அருட்டுறையிற்சேறும் பாவலரும் ஆகிய இவர்களுடைய எண்ணங்கள் முழுவதையும் கவர்ந்துகொள்ளுந்தலையுடைய மாட்சிவாய்ந்ததும்;

ஓவியரினும் பாவலர் மேம்பட்டவராதலின் அவர்தமக்குள்ள விசேடத்தை அடையாக்கினர். அவர்தம் கருத்துமுழுதும் இதனில் ஈடுபடாவிடத்துப் பயனிலலையாதலின் இங்ஙனம் கூறினர். சிரமத்தின் மிகுதிதோன்ற ஓவியர் முற்கூறப்பட்டனர்.

[வெள்ளிடை கொளாது மேவு மாக்களைத்–தள்ளுவ போன்று தழைசெறி மரனெலாம்–விண்ணளவு கவரும் விளக்கஞ் சான்றது] மேவு மாக்களை தள்ளுவ போன்று வெள் இடை கொ(ள்)ளாது தழை செறி மரன் எ(ல்)லாம் விண் அளவு கவரும விளக்கம் சான்றது = தன்னிடத்திலேபொருந்திய மக்களை (உள்ளகத்திலே செல்லவிடாமற்பிடித்து) த்தள்ளுவனபோன்று வெற்றிடம்பெறுமல் தழைத்துநெருங்கிய மரங்களெல்லாம் விண்ணகப்பரப்பினை அகப்படுத்திக் கொள்ளுதல்போன்று (அத்துணை உயர்ந்தோங்கிய) விளக்கத்தினுல நிறைவுறப் பெற்றதும்;

செறிதலைத் தள்ளுவதற்கும், தழைத்தலை விண்ணளவு கவர்தற்கும் காரணங்களாக்கிக் கொள்க. வந்து நோக்குவாரைப் பிரமிததுநிற்குமாறு செய்யும் மரச்செறிவு படைத்தது; அது விண்ணளவு கவரும் மரனுர்ந்து விளக்கஞ்சான்றது என்க. மரங்களின்செழுழில் காட்டின்மேலேற்றிக் கூறப்பட்டது.

நிற்பது போன்று நீள் நெறி செல்லும் பொற்பு அமர் இரலையும் = (காண்பவர்தங் கருத்திற்கு) நிற்பது என்று கருதுமாறு மயக்கி (நில்லாமல்) நீண்ட (சேய்மைகண்ணுள்ள) பாதையில் விரைந்தோடிச்செல்லும் அழகுபொருந்திய மான்களும்;

மிகுந்த விரைவுடைய ஓட்டமாதலின் கட்புலனுக கமைந்திலது என்றபடி.

புள் பறப்பு என்ன நிலத்து இடை பறக்கும் நிமிர் செவி முயலும் = (விண்ணிடை விரைந்துபறக்கும்) புள்ளினது பறத்தலை இவற்றின்செல்கை ஒக்குமென்று கூறும்வண்ணம் நிலத்திடத்திலே பறந்துசெல்கின்ற நிமிர்ந்தசெவிகளையுடைய முயல்களும்;

ஊறுசெய்வனவற்றின் அரவத்தை முன்னறிந்துகோடற்கு நிமிர்ந்தசெவியுடைமை கூறப்பட்டது. இவவிலேசினுனே விழியமைப்புங்கொள்ளப்படும். "அறிவின் மாக்கடமளிப்புக் கருதிக்–கோடு முதல கொடுத்தாங்கு" என முன்னாக்கூறப்பெற்ற இறையின் உண்மைத் தன்மையை ஈண்டுங்குறிப்பித்தார்.

நீள் வால் குரங்கும் – நீண்ட வாலினையுடைய குரங்குகளும்;

நிணம் விழை புலியும் = மாமிசத்தை விரும்பியுண்ணுகின்ற புலிகளும்;

தான் கொன்றவற்றிற் சுவையுள்ளபகுதிகளையே விழைந்துண்டு எஞ்சியவற்றைப் போகட்டுச்செல்லும் என்பதுதோனற "நிணம்விழை" என்று கூறினர்;

கரும் மயிர் கம்பலம் கதூஉம் உளியமும் = கருநிறம்வாய்ந்த மயிர்த்தோலாகிய கம்பளியைப்பொருந்திய கரடிகளும்;

செவ்வாய் கிள்ளையும் = சிவந்த வாயையுடைய கிளிகளும்;

கிளக்குஞ் சிறப்புக்கருதி வாயொன்றே சிறப்பிக்கப்பெற்றது.

[மின்மினி விளக்கத்–திழையெழிற் குடம்பையி னிருக்கைக் குரீஇயும்] இழை எழில் மின்மினி விளக்கத்து குடம்பையின் இருக்கை குரீஇயும் = இழைத்த அழகிய மின்மினியாகிய ஒளியைக்கொண்ட கூட்டிலே (குஞ்சுகளை வளர்க்குங்காறும்) இருத்தலைமேற்கொண்ட பறவைகளும்;

தேங்காய்மட்டைத்தும்பு, பன்னுடைச்சிம்பு முதலியவற்றைத்தேடி எடுப்பதும், அவற்றுனே கூண்டிழைப்பதும் ஓர் அழகு என்பதுதோன்ற "இழையெழில்" என்றும், அவ்விழைத்தகூடும் ஓரழகுடையது என்பதுதோன்றக் "குடம்பை" என்றுங் கூறினர். எழில்

என்பதைத் தாப்பிசையாக இரண்டிடத்துங்கூட்டிப் பொருள்கொள்க. "கூட்டி னுய்க்குங் குரீஇக குழாமரோ" என்றார் கம்பரும்.

[கணவாய் நாக்குக் காட்சிப் பூவையும்] கணவாய் காட்சி நாக்கு பூவையும் = கணவாய்மீனை யொத்த தோற்றப்பொலிவுவாய்ந்த நாக்கினையுடைய நாகணவாய்ப் புட்களும;

பேச்சின் சிறப்புத்தோன்ற நாவினுககடைகொடுத்தார்.

நெடும் சிறை கொடு மூக்கு நீள் பிணம் வல்சி பருந்தும் = நீண்ட சிறகினையும், வளைந்த மூக்கினையும், நாட்சென்று அழுகிககிடந்த பிணவுணவினையும உடைய பருந்துகளும்;

நீள்—நீளிடையுமாம்.

"எங்கில மருங்கிற் பூவும் புள்ளும்" என்றவிதியாற் பருந்தினையுங்கொள்க. முன்னும் பின்னும் வருவனவற்றுக்கும் இதுவே விதியாகும். பிரிவுகாரணமாக முல்லையும், குறிஞ்சி காரணமாகப் பாலையும் அமைந்த இயைபுநோககியும; பிறவாறும் இங்ஙனமெல்லாம் மயங்கிய வென்க. இனி "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து—நல்லியல் பழிந்து நடுங்குதுயருறுத்தும்" பாலையாகும் என்பவாகலிற் பருந்துங் கொள்ளப்பட்டதென்றும கூறுப.

கால்சீத்து அம் நுண மண் உறை புழு உணூஉண் கோழியும் = நிலத்தின் மேற்பகுதியைத் தள்ளுதலினனே (அத்தள்ளப்பட்ட இடத்திலுள்ள) நீரகசிவுள்ள நுண்ணிய மணற்கண்வாழ்கின்ற புழுவையும் தமக்கு உணவாக உண்டுவருகின்ற கோழிகளும்;

புழு—உமமைதொககது; இவ்விலேசானே ஆண்டும், மேலிடத்துமுள்ள தானியங்களும், எறும்பு முதலியனவும் கொள்ளப்படும் என்க. புழுவுண்ணுதலின் விழைவுதோன்ற அஃதொன்றேகூறப்பட்டது.

பேடு பயிர் புறவும் = அன்பார்ந்த பேடுகளைக் கூவியழைககும் புறாக்களும்;

இன்ன பிறவும் = இவைபோன்ற பிறபலவுங்கூடி;

எய்திய செல்வம் கானத்து = பொருந்திய (திணையியல்பான் அமைந்த) செல்வத்தைப் பொருந்திய கானகததின்கண் அமைந்த;

வளன் எ(ல்)லாம் கவின்று நலன் பெற = வளப்பங்களெல்லாம் அழகுற்று நன்மையைப் பெறுமாறு;

கடல் கரை மாட்டு கரு நீர் இடையில் தெள் மணல் பரப்பியாங்கு இயை சில் மழையும் = கடற்கரையின்பாங்கரிலே (பாய்ந்துள்ள) கரிய நீரின் இடையிடையே தெளிவாகியமணல்கள் பரப்பியிருத்தலைப்போன்று பொருந்திய சிலவாகிய வெள்ளிய மேகங்களும்;

"தெண்மணல்" என்றமையானும், "பானிற மழை" எனப் பின்னாக்கூறப்படுவதானும் மழைக்கு இங்ஙனம் அடைகொடுத்தாம். கருநீரெல்லாம் ஆகாயத்திற்கும், அவற்றிடையிடையே பரந்துள்ள மணல்களெல்லாம் சிலவெண்மழைக்கும் ஒப்புககூறப்பட்டன.

எண்ணு வடிவு எல்லாம் இலஙக காட்டி பல் வயின் படர்நத பால் நிற மழையும் = நினைக்கின்ற வடிவஙகள் எல்லாவற்றையும் (அந்நினைந்தவாறே) விளஙகக்காட்டிப் பலவிடஙகளிலும் படர்ந்தமைந்த பால்போலும் வெள்ளிய மேகஙகளும;

எண்ணுவடிவெல்லாம் இலங்கக்காட்டும் மழை; பல்வயிற்படர்ந்த மழை என்க.

வடந்தை தள்ள வழி வழி போந்து = வாடைககாற்றுனது தள்ளுவதினாலே (அதன் போக்குச் செல்லும்) வழிவழியே சென்று;

வாடை கூறப்பட்டமையானே தெற்கின்கண் அமைந்த அவ்விருவகை மழைகளும் இங்ஙனமாகிய என்க.

மூடு பனி என்ன மொய் புழுதி என்ன தோற்றம் பெற்று = (முன்னர்க் கருநீரிடையின் மணல்போன்றும், எண்ணுவடிவுபோன்றும் காட்டியமேகங்கள் பின்னர்) கவிந்த பனியெனவும், நெருங்கிய புழுதியெனவும் (அவற்றைக்கண்டார் கருதுமாறு) தோற்றப்பொலிவினையடைந்து;

துன்னு நிறை வரையில் மாற்றம் பெற்று = (மூடுபனியையும், புழுதியையும்போன்ற தோற்றங்களை முன்னர்ப்பெற்ற மேகங்கள், பின்னர்) நெருங்கிய நிறைகளிலுள்ள கரிய மலைகளின் உருவங்களைப்போன்று மாறுதலையடைந்து;

வான் இடம் கவர்ந்து ஆங்கு ஏற்றம் பெற்று = ஆகாயத்தின் இடமுழுவதையும் வௌவிக் கொண்டு (அக்கொண்டமையால்) அங்ஙனம் பெருமையுற்று;

கறுப்பும் வெளுப்பு என இருண்டு = கரியநிறந்தானும் வெளிதாகுமென்று சொல்லுமாறு இருட்சியுற்று;

"கறுத்தமழை முகில்வெளிக்குங் கருகுமேனிக் கண்ணன்" என்றார் பெரியாரும்.

[நிலத்திடை யிருட்டுச்சுவர் குழைத்து—வைத்து நிரல்பட வுயர்த்தியாங் கிருட்டி] நிலத்து இடை இருட்டு குழைதது நிரல்பட சுவர்வைத்து உயர்த்தியாங்கு இருட்டி = நிலத்தின்மீது இருட்டினை (த்தண்ணீரால் இளக்கி)க்குழைத்து வரிசைப்படும்வண்ணம் சுவர்வைத்து உயர்த்தி விட்டாற்போன்று இருளுதலைச்செய்து;

இருட்டுச்சுவர் வைத்தல் இல்பொருளுவமை. இருட்டின் மிகுதியையும், சேறற்கியலா மையையும் புலப்படுத்தவேண்டி இஙஙனம் கூறினா.

[விண்ண் விரைந்து வெடிபடச் சிரிததுக்—கண்முன் வந்து கடுங்குர லார்த்தென—மின்னி யிடிசெய் தின்மழை பொழியும்] விண் விரைந்து கண் முன் வந்து வெடிபட சிரித்து கடுங் குரல் ஆர்த்தென மின்னி இடிதது இன் மழை பொழியும் = கரிய விசும்பானது விரைந்தோடிக் கண்ணுக்குமுன்னர் வந்துநின்று வெடியுண்டாகுமாறு நகைததுக் கடியகுரல்காட்டி ஆரவாரித் தாற்போன்று மின்னுதலைச்செய்து இடித்துப் பெருமைவாய்ந்த மழையைச் சொரியும்;

அம்மேகங்கள் சிரித்தாங்கு மின்னி ஆர்த்தாங்கிடித்து வியன் மழையைப் பொழியும் என்க. மழையின் இன்றியமையாமைதோன்ற "இன்மழை" என்றார்; என்னை? இன்பமே உயிர்கட்கு இன்றியமையாததொன்று ஆகலின் என்க;

கார் தொடங்கின்றே கார் தொடங்கின்றே = கார்காலம் தொடங்கியதே, கார்காலம் தொடங்கியதே;

தொடக்கத்தின் பெருமைதோன்ற அடுக்கப்பெற்றது. தொடங்கின்று என்பது விகாரம். நடந்தன்று என்றாங்குச் சாரியையாகக் கோடல் அமையுமாயினும் மறை காட்டவேண்ட லின் விகாரமெனக் கோடலே சிறப்புடைத்தென்க. இன்ன மேற்கோள் பலப்பலவுண்டு; விரிக்கிற் பெருகும்.

கருத்து அறிவிக்கா = தங்கள்கருத்தை (ப்பிறர் அறிந்துகொள்ளும்வண்ணம்) அறிவிக் கும் ஆற்றல் இல்லாதனவும்;

மக்கள் தாமாகவே நுணுகி அறிந்துகொண்டாலன்றித் தம்மிற்புலப்படுத்தும் வகையில் லாதனவென்க.

கை உறுப்பு இல்லா = (வேண்டியவற்றைத் தாமாகவே செய்துகோடற்குரிய) கையாகிய உறுப்பில்லாதனவும்;

திருத்தம் பெறூஉம் சிறப்பு அறிவு இல்லா = திருந்திவருதலைப் பெறுதற்குரிய சிறப்பு வாய்ந்த பகுத்தறிவில்லாதனவும்;

ஐயறிவின் உயர்ந்தது அதுவாதலின் இங்ஙனம் கூறினார்.

பெயர்ந்து பெறற்கு இயலா = (தமக்குவேண்டியவை இருக்கின்ற இடத்திற்குச்) சென்றடைந்து அவற்றைப்பெற்றுக்கொள்ள இயலாதனவும்;

பிற காப்பு இல்லா = (தமக்குற்ற ஊறுகளைத் தாமே களைந்துகொள்ளவேண்டுமன்றி) வேறு காவற்றுணையில்லாதனவும்;

இன்ன இயல இம்பர் உயிர்ப்பொருள் எ(ல்)லாம் = இக்கூறிய தகுதியின்மைபோன்ற பலதன்மைகளையுடைய இவ்வுலகத்துச் சீவராசிகளெல்லாம்;

ஓரறிவுமுதல் ஐந்தறிவீருகவுள்ள சீவராசிகளே இங்ஙனம் கருதப்பட்டன.' அவற்றிற் கேற்குமாறு பொருத்திக் கூறிக்கொள்க. செய்யுளாதலிற் பொதுப்படக் கூறினர் என்க.

மன்னு வெப்பு ஒறுப்பால் இன்னல் மரீஇ=நிலைபெற்ற வெப்பமானது வருத்தும் வருத்தத்தினாலே துன்பமடைந்து.

"மரீஇ யின்னல" என்றது இன்னல மரீஇ என மாற்றப்பட்டது.

நன்னா கெட்டு அழிந்த என முன்னி=(அவைகள் பெற்றுவந்த) நன்மையெல்லாம் கெட்டுவிணாயின என்று நினைத்து;

கையில் வில் எடுத்து எ(ன்)ன திருவில எடீஇ=(போர்புரிந்து அவவெப்பத்தை யழிக்க) வில்லைக் கையில் எடுத்தாற்போன்று இந்திரதநுவை எடுத்துக்கொண்டு.

திருவில—இந்திரவில; 167, 557, 601, 682, 719, 799 எனனும் சிந்தாமணிச் செய்யுட்களைக் காண்க. "திருவில விட்டுத் திகழ்தரு மேனி" என்பது சிலப்பதிகாரம்.

கறுப்பு கொண்டென்ன கடுவில் கரீஇ=(அவவெப்பின் மேல) வெகுளி கொண்டாற் போன்று நஞ்சினுங்கருத்தலுற்று;

"கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள", "நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப" என்றமையான அவ்விருபொருளும் கொள்ளப்படும். கருத்தல—இருளுதல. "கருத்தல் வெள்ளை கனமணல நீறு" என்றார் பெரியாரும்.

நகைப்பு வழி நெருப்பு நனி விட்டாங்கு (கோபங்காரணமாக வந்த) சிரிப்பினவழியாக்க கோபாக்கினியை மிகுதியும் வெளிவிட்டாற்போன்று,

இடிப்பு வழி மின்னி — இடித்தலின வழியாக மினனுதலைச்செய்து;

"இடிப்புவழி மினனி" யென்றாரேனும, இடித்து மின்னி என்பதுவே கருத்தாகக் கொள்க. மின்னுதலுக்குக்காரணம இடிப்பேயாதலின அதுமுறகூறப்பட்டு மின்னை வழியாக்கியது என்க.

பல துளை தூமபில் பொழி நீர கணையில்=பலவாகிய துவாரங்களையுடைய தூம்பி லிருந்துவரும் நீராகிய கணைகளைப்போன்று;

தூம்பு—உட்டுளை, குழாய. அந்நீர கணைகளைப்போன்று சொரிதலின் அங்ஙனம் கூறப் பட்டது. "......தானையாம புயலைப்—பொன்னகா விடுப்பக் கடலவை வரன்றிப் பொருதலி னெ பகணைப் புனலபோய்......" என்றார பிறரும.

கணம் மழை பொழீஇ=திரளாகிய மழையைப்பொழிந்து;

வெப்பு வழி பெற்று கால மறை புழுதியை=உஷ்ணத்தின்வழியாகவடைந்து காற்று மறைத்துவைத்திருந்த புழுதியை;

சூடுமிகுதியானே புழுதிகளகிளம்பிக் காற்றுடன ஒன்றுபட்டிருந்தன என்பதுவே ஈண்டு விளக்கப்பட்டது.

உடை நிலக்கு உதவி=(அப்புழுதியை இழந்தமையானே) மனசுடைந்த நிலத்திற்கு அதனைக் கொடுத்து;

அறசெயல் போறலின் "உதவி" என்றார். ஈறுகெட்ட பெயரெச்சமாக்கினும் அமையும். உடைந்த—தோற்ற என்றுமாம். "போககுடைந்தான்" என்பதையும் நோக்குக.

கால் தூய்து ஆக்கி=(புழுதியொடுகலப்புற்று அசுத்தமாயிருந்த) காற்றைச் சுத்தப் படுத்தி;

களவுப்பொருளாகிய புழுதியையெடுத்து மண்ணுக்குதவிக் காலைத் தூய்தாக்கிற்று என்க. என்றது புழுதியடங்கிற்று என்றவாறு.

[illegible] ஒட்டி=வெப்பத்தை (இன்மையாகும்படி)கெடுத்து (பிறிதிடம் போகு

தான் கேடுவிளைத்ததுமன்றிக் காலையும் கெடுத்தமையின் இங்ஙனம் அதனைச்செய்தது என்க. "அழித்து" என்றதற்கு உயிர்ப்பொருள்களையும், காலையும் கெடுத்துவருகின்ற அத்தொழிலை அழித்து அதனையோட்டி என்றும் பொருள்கோடலும் அமையும்.

விரி நிலம் குழைத்து = (வெப்பத்தெறுதல் காரணமாக வெடித்து) விரிவுற்றநிலத்தை ஒன்றுபடக்குழைத்து;

வான் நோக்கு புள்ளின் மேல் நோக்கி உருகி = மழையையெதிர்பார்த்து (விசும்பை எதிர்நோக்கியிருக்கின்ற வானம்பாடிப்புள்ளினமேலே (கிருபைமிக்க திருக்கடைக்) கண் கனித்து நெஞ்சுருகுதலைப்பெற்று;

வானம்பாடி- கமபுள், கலிங்கம், காருணி, சாதகப்புள், தற்பாடி, மேகப்புள் என்னும் பலபெயர்பெறும்.

இயற்கைக்கு இன் அருள் எய்திவந்தெனன = இயற்கையாகிய தெய்வத்திற்கு இனிமையாகிய திருவருள் பொருந்திவந்ததென்று கூறுமவண்ணம்;

கார் பெயல் சிறப்ப = மேகங்களினது பெய்கை சிறப்படையவும்;

கரும் குயில் பனிப்ப = அச்சிறப்பானே கரிய குயில்கள் அச்சத்தை அடையவும்;

புற்றத்து ஈயல் புறப்பாடு கொள்ள = புற்றகத்திருந்த ஈசெலகள் (மழைப்பெயலான் மணங்குளிர்ந்து) வெளிப்படுதலைக் கொள்ளவும்;

ஈயல்—சிறகுமுளைத்த கறையான்; அதனை ஈசல், ஈசெல் என்றும் வழங்குப.

ஆங்கு இடிக்கு அஞ்சிய அரா புகுந்து அடங்க = (ஈசெலலின் வெளிப்பாடு காரணமாக வெறிதாகிய அப்) புற்றின்கண்ணே இடிக்கு அச்சங்கொண்ட பாம்பு புகுந்து அடங்கியிருக்கவும்;

அச்சமிகுதியால அடங்குதலும், அடங்கியபின புறத்துள்ளார் எத்தகையவச்சங்காட்டினும் அது அடங்கியவாறே பதுங்கியிருந்துவிடுமெனபதும குறிப்பு.

ஓங்கு வழி எ(ல)லாம தேங்கு புனல் ஓட = மேலோங்கிச்செல்லும வழிகளெல்லாவற்றினும் (முன்னிருந்த நீரோடு பினவந்த மழைநீரும கலத்தலானே) தேங்கப்பெறும் புனலானது பரந்தோடவும;

முதையல் அம கானத்து மூடிய விதை எ(ல்)லாம் புதை தலை காட்டி புறப்பாடு கொள்ள = பாழாகிய காட்டினகத்திலே (காற்றுவீசிய புழுதியினுன்) மூடப்பெற்றிருந்த விதைகளெல்லாம தமமகத்துப்புதைந்துள்ள முளைகளை வெளிக்காட்டி வெளிப்படவும;

முதை—காடுவெட்டிச சுட்டகொல்லை; முதையல்—முதுகாடு, சுடுகாடு; இங்ஙனம் மழை காணுமல் வரட்சிபெற்றிருந்த நிலைமையைக்குறிக்கின்றது.

காற்றானது விதைகளைப் பாழிடங்களிற் கொணடுய்க்குமானுல் அவை வாளா பயனற்றழிந்துவிடும; அங்ஙனம செயயாது புழுதிகொணடு மூடியும, வேறறிடத்துக்குயத்தும் விடுவதால் அதின் இயறகைசசெயல விதைகளுக்கு நலத்தையே விளைப்பதுகாட்டி இறைவனது ஆற்றல்சான்ற மாட்சித்திறனை விளக்கும்.

முளி சருகு உதிர = காய்ந்த சருகுகள் உதிரவும;

முளிந்ததே சருகாதலிற் றனித்துச் சருகென்றுவது, முளியிலையென்றுவது கூறுமற் சருகுக்கு முளியென்னும அடைகொடுத்தது மிகையேயொன்னிற், சாத்தனுர்முதலிய பண்டைப் பெரியாரும் இங்ஙனமே கூறிச்சென்றமைனய நோக்கியுணர்க.

கார் தொடங்கின்றே = கார்காலத்தொடங்கிற்று;

அதனுல் = அதுதொடங்கிய காரணத்தால்;

பிற பொருள் படின் அ வயின் சிலிர்க்கும் அன்னல் கூர் கோட்டின் அழகுற = பிற பொருள் யாதேனுமொன்று தன்மேற்படின் பட்ட அவ்விடத்தைச் சிலிர்த்துக்கொள்கின்ற இயல்புவாய்ந்த சேறுபொருந்திய கூரியகொம்பினையுடைய அழகிய எருதானது,

# இன்பநெறியியல்

பகுதியின் இயல்புதோன்ற "அன்னற்கூர்ங் கோட்டின்" என்று கூறப்பட்டது.

ஆனின் மிடறு ஆடு தெள் மணி மெல் என கறங்க=பசுவினது கழுத்திலே கட்டப் பட்டு அசைகின்ற தெளிந்த ஓசையையுடைய மணியானது மெல்லென்று ஒலிக்கவும்;

ஆனின் காதலைப் புலப்படுத்த "மெல்லெனக் கறங்க" என்று கூறினர்.

ஈர் உடல் ஓர் உயிர் மேஎய் விழையும்=அவற்றின் இரண்டு உடல்களும ஓர் உயிரையே பொருந்தியவாறு விருப்பங்கொள்ளும்;

அத்துவிதமாகி இன்புற்றனவென்பது கருத்து. மேவுதலின் மிகுதிதோன்ற "மேஎய்" என்றளபெடுத்தது.

குடம் தொகை சுட்டி கொள் பெயர் நல் ஆன்=இவ்வளவுகுடம் பால்கறக்குமென்று சுட்டிக்கூறப்படுங் காரணத்தானே கொண்ட பெயரையுடைய நன்மையமைந்த (மேய்புலத்தி னின்று வரும்) பசுவானது;

கொட்டில்வந்தடையும் என்றமைநோக்கி மேய்புலத்தினின்று என்று விரிக்கப்பட்டது; குடஞ்சுட்டு—பசுப்பொது; அன்றியும நற்பசுவைப் பத்திரை எனறும், குணமில்லாப் பசுவைச் சுதை என்றும், கன்றுததாயப்பசுவை வற்சலம் என்றும், ஒரீற்றுபபசுவைக கிட்டி என்றும், மலட்டுப்பசுவை வற்கை என்றும் வழஙகுப.

குடம் புரை செருத்தல் கோடல் சுரை நிரை=குடத்தையொத்த தனதுமடியிலுள்ள காந்தட்பூப்போன்று வரிசைகொணட காம்பிலிருநது;

கோடல்—மெய்யுவமம். நிரை என்றூா அக்காம்பின் வரிசையமைப்புத தோன்றற் பொருட்டு.

தீம பால் சுரந்து வழி எ(ல்)லாம் சொரிந்து=மதுரயாகிய பால் சுரக்கப்பெற்று அப் பெற்றமையானே வரும வழிகள் எலலாவற்றினும் உகுததது;

கனறினை ஊட்டுதற்குக் கொணடவிழைவே அசசொரிதற்குக் காரணமாயிற்று.

தாம்பு அசை கன்றுக்கு ஊட்ட விரைந்து மன்று வந்து படாந்தும்=கட்டியதாம்பினை அசைககினற தனதுகன்றுககுப் பாலூட்டவிரைநது தொழுவததைவநது சேரினும்;

புதிதாகக கட்டப்பட்டமையாலும், விளையாட்டில் விருப்பங்கொள்வதாலும் தாம்பசைத் தல் கன்றுக்கு இயற்கையாயிற்று. இழுததறகும் ஆறறலிலலாத அததுணையிளமைததென்பது தோன்றத "தாம்பசை கன்று" எனப்பட்டது.

பறி புறம் கோல் கை தொன்று வரு தொடு தோல் கால் அமை புறவு குடி உடை கோவலா குலம் விளக்கு ஆருகா=பனையோலைப பாயைககொணட முதுகினையும், கோலைத் தாங்கிய கரத்தினையும், பழமையாக அணிநதுவருகின்ற செருப்புப்பொருநதிய காலினையும் உடைய முல்லைநிலத்தைத தஙகள் இருபபிடமாககொண்டுடைய இடையாதம குலததின (மாசிருளையகற்றி விளககவந்த) விளககொப்பாரும,

கால் அமை என்பதை அமை கால் என்று மாற்றிக்கொள்க. மரபுத்தொடர் அற்றொழி யாமல் விளக்குவான்பிறநத வழிததோன்றல்களாகலின விளககுக கொப்பிடப்பட்டனர். மழை வெப்பங்களைத் தாஙகுதற்குப் பனையோலைப்பாய் வேணடப்பட்டது. "பறியோலைச் சயனததர்" "மறித்தழுத் தொகுத்த பறிப்புற விடையன்", "பறிப்புறத திட்ட பாலுடை யிடையன்" "பறியோலை மேலோடு கீழா விடையா" என்பன ஆராயற்பாலன.

சேறு உண் செவ் உடை கார் உறழ் மேனியர்=சேறுண்டு மாசபடிந்த சிவந்த ஆடை யினையுடைய மேகத்தோடுமாறுபட்ட கரிய நிறம்பொருந்திய தேகத்தையுடையவரும்;

மேனியின் நிறத்தையும், அழகையும் உணர்ததக் கார் ஒப்புக்கூறப்பட்டது

[illegible] அக்கரை தாஅய் தாஅய் சேறற்கு=நீர்நிலைகளின் அக்கரைப்பக்[illegible] [illegible]ற்பொருட்டு

உடைந்த சில் தாழி சில் ஓச்சுநர் = (மோர், நெய்முதலியன வைத்திருந்து) உடைந்த சிறிய தாழிச்சிலவினை வீசுகின்றவரும்;

நீர்நிலையைக்கடந்து அக்கரையிற் போய்விழும்படி உடைந்ததாழியோட்டைத் தாவித் தாவிச் செல்லும்வண்ணம் எறிபவர் என்க.

பூவரசு உதவிய பொன் பூ அகம் இதழ் கொ(ண்)டு மணி குயிற்றிய குழை அமர் காதினர் = பூவரசுதந்த அழகியமலரின் உள்ளிதழைக்கொண்டு சிவப்புக்கல் ஒப்பப்பதித்த தோடுபொருந்திய காதினையுடையவரும்;

[மணிவிர லாழி யணீஇ மகிழ்குநர்] மணி ஆழி விரல் அணீஇ மகிழ்குநர் = (மேலும் அலவகவிதழ்கொண்டு சமைக்கப்பெற்ற) சிவப்புக்கன மோதிரத்தை விரலினிடமாக அணிந்து (அவ்வணிதல் காரணமாக) மகிழ்ச்சியடைபவரும்;

மணிவிரலாழி — அழகிய விரன்மோதிரமுமாம்.

அ இலை சுருளில் பெறும இசை வெறித்து என = அப் பூவரசின் இலையைச் சுருட்டியமைத்து ஊதுகின்ற குழலிற்பெறும இசையானது பயன்றற்றதெனக்கருதி;

அதன மருங்கு துளை இட்டு அலங்க ஊதி — அச்சுருளினபக்கத்திலே துளையியற்றி (அத்துளையை விரற்கொடு மூடியுந்திறந்தும) ஓசை அசைந்துவெளிவருமாறு ஊதி;

வெறுத்து = அவ்வூதுதலினும் வெறுப்புற்றவராய;

அயல் தெங்கின் விளங்கு ஓலை கொண்டு சமைத்த குழல ஊதும் தகைமை சிறார் உடன் = பக்கத்தில நின்ற தெங்கினகண்ணேவிளங்கிய ஓலையைக்கொண்டு செய்தகுழலை ஊதும் அழகியசிறுவருடனே;

பச்சோலை என்பது தோன்றத "தெங்கின் விளங்கோலை" எனப்பட்டது.

ஆடல் வேட்டு அவர் புறம் தொடர்ந்து ஓடும = விளையாட்டயாதலைவிரும்பி அவர்தம் பக்கத்தைத் தொடர்ந்து ஓடிச்செல்லும;

இதனோடு ஆடுதற்குச் சிறார்வேட்டிலராய்ச்சென்றும், இதுவோ அவரைப் பின்றொடர்ந்து செல்லும என்பது கூறப்பட்டது.

கலங்கு விழி யாடு இடை = கலக்கமுற்றிருப்பதுபோல் இயற்கையின் அமைந்துள்ள விழியினையுடைய யாட்டுக்குழவினுள்ளே;

கரவு கொடு புகக = (கோவலர் அறிந்துகொள்ளா அத்துணை) வஞ்சமாகப் புகுந்து;

யாட்டினங்கள் அறியாதவண்ணமுமாம.

மெல் மெ(ல்)ல இருந்து = மிகமெதுவாக அமர்ந்திருந்து;

கல்லா கோவலர் = (தந்தொழிலன்றிப் பிறவொன்றுங) கற்றுக்கொள்ளாத இடையர்கள்;

மறைந்துபதுங்கி நரிவந்திருக்கும் கரவுமுதலியனவற்றை அறிந்துகொண்டிலர் என்பது போதர அங்ஙனங் கூறினருமாம. "வழூஉச்சொற் கோவலர்" என்றாங்கு வருவனவும் ஆராயற்பாலன.

மடி விளிக்கு மருளா சூழ்ச்சி குறுநரி = வாயைமடித்துக் கூப்பிடும் ஒலிக்கு மருட்சியடையாத தந்திரம்வாய்ந்த குள்ளநரியானது;

மடி விளி — வாயிதழைக் குவித்து ஊதும் "வீளை" எனப்படும் அழைப்பாகிய குறிப்பொலி. "மடிவிளிச — சிறுதலைத் தொழுதி யேமாத் தல்கும" என்றார் இடைக்காடரும்.

ஆங்கு ஒன்றின் அணி மணி களை இ = அவ்விடத்தில ஓரியாட்டின்கழுத்திற் கட்டப்பட்டிருந்த மணியை அறுத்துநீக்கி;

"நீக்கி" என்றவிலேசானே ஓசையுறாது என்றலுங்கொள்ளப்படும். [illegible] மஞ்சர்" என்றமையான், அவர் வீளைசெய்தமையுங் கொள்ளப்படும். [illegible] மிகுதியாலே தனதிருக்கை அவரால் அறியப்பெற்றிலது என [illegible]

# இன்பவிநறியியல்.

பல் ஆங்கு அமைதியினிருந்த நரி, குழிச்சிநரி, குறுநரி என்க. குறுநரி—நரியின் ஒருவகைச் சாதி விசேடம். ஆடுகள் வெருட்சியுறுதலும், இடையர் அறிந்துகொள்ளாதலும் இருந்துவருதற்கு இங்ஙனமெல்லாம் செய்தது அஃதென்க.

மிடறு இடை வெளவி = கழுத்திலே (மெதுவாகக்) கௌவிக்கொண்டு

விரைந்து வால் ஓச்சி = விரைவாக வாலால் அதனை வீசி;

அடித்து அடித்து கொடுபோய் அரும் புதர் அடையும் = அடித்தடித்துச் செலுத்திக் கொண்டுபோய் பிறர்சேர்வதற்கரிய புதரின்கண்ணே சேரும்;

அதனை இடையர் அடித்தோட்டிக் கொண்டுசெல்லுமாறு இதுவும் கொண்டுசென்றது; யாடும் தன்னையிடையனென்றே கருதுமாறு கொண்டேகிற்று அக்குறுநரி என்க.

[வைகறை யாமத்து வால்வளைக் கையின—ரயர்வுற் றுழையின மஞ்சிப்பாய்ந் தோடத்—தேய்கான் மத்தொலி சென்றுசெவி புடைக்கத்—தயிர்கடை யாய்ச்சியர் தம்மிடை] உழை இனம் அயர்வு உற்று அஞ்சி பாய்ந்து ஓட தேய் கால் மத்து ஒலி சென்று செவி புடைக்க வைகறை யாமத்து தயிர் கடை வால் வளை கையினர் ஆய்ச்சியர் தம இடை = பெண்மான்கள் துன்படைந்து அச்சங்கொண்டு பிறிதோரிடத்திற்குப் பாய்ந்தோடும்வண்ணம் தேய்ந்த காலையுடைய மத்தினொலியானது போய் அதன்செவியின்மேல் தாக்கும்படி விடியற்காலையிலே தயிர்கடைகின்ற வெள்ளிய வளையலணிந்த கையினராகிய ஆய்ச்சியர்தம் பக்கத்திலே;

தயிர்கடையொலியைப் புலியின்குரலென்று அயிர்த்தயர்ந்த உழையினம் பாய்ந்தோடிற் றென்க. "ஆய வெள்வளை" என்றார் கம்பநாடரும். "வால்வளை" சங்கினாற் செய்யப்பட்ட வளை. "........வாலவளை வாய்விட் டாரப்ப—மெலவிரற் காந்தள் சேப்ப வெண்டயிர் கடையு மோதை—கொல்புலி முழக்க மென்னு வயின்வெருஉங் குமிறு மாதோ" என்பது நைடதம். வளைக்கையினர் என்றதை வளையொலிகதுவகையினர் என்றும் விரிக்கலாம், ஆயின் அவ்வொலி மதவொலிக்கு உள்ளடங்கியதாதலின் அவ்விரிவு அநாவசியகமாகும்.

குறுகி குந்தி இருந்து = அடைந்து குந்திக்கொண்டிருந்து;

கூடு விழி மூடிய் = இரண்டிதழும் பொருந்துகின்ற கண்ணைமூடிக்கொண்டு;

முணு முணுத்து அன்னவர் போதல் முற்றியபின் = (தயிர்முதலியவற்றை உண்ணப் பெறாமையானே) முணுமுணுத்து அவ்வாய்ச்சியர் (தயிர்கடைந்த வெண்ணெய்யையும், மோரையும் சேமித்துவைத்துச்) சென்றதன்பின்னர்;

பூனை கண்ணைமூடிக்கொண்டு குடுகுடுவென்றதொரு வகையாக எழுப்பும் ஒலியையே ஈண்டு முணுமுணுப்பென்று குறிப்பித்தார். "போதன்முற்றியபின்" என்றது பிறபணி புரிதற்கு வேண்டியவண்ணம் மோர்முதலியவற்றைச் சேமித்துவைத்துச் சென்றபின் என்றவாறு.

தயிர் துமி நக்கி வெண்ணெய் சுவைத்து = (கீழே வீழ்ந்துகிடக்கும்) தயிர்த்திவலைகளை நாவினால் நக்கி (ஆங்காங்குள்ள) வெண்ணெய்யையும் (அவ்வாறே நக்கி) உருசித்து;

வெண்ணெய்மேல் அதற்குள்ள விருப்பமிகுதியைக் காட்டுதற்குச் "சுவைத்து" என்றார்.

முன் கால் நக்கி தன் உடல் கழீஇ = முன்காலை நாவால் நக்கி (அந்நக்கிய எச்சில்கொண்டு) உடம்பின்கண்ணுள்ள அழுக்கெல்லாம் போமாறு கழுவி;

பூனைக்கு இங்ஙனம் உடலைத் தூய்மைசெய்துகோடல் மரபென்க.

புன்மை நிலன் மறைஇ = மலத்தை நிலத்திலே (குழியாகத்தோட்டிட்டு மண்கொண்டு) மறைத்து;

நாற்றமுற்று தலைக்குன்ற மலமாதலானுக்கி அதற்குப் புன்மை என்றொருபெயர் கூறி

பூனையாய புலி எனவும் எலி கண்டு ஓடும் என பாய்ந்து = (தன்னைக்கண்டு அஞ்சி [illegible]) பூனையாகிய புலியென்று கூறும்வண்ணம் (தன்னைக்கண்டு அஞ்சி) [illegible] [illegible] பாய்க;

## உலகியல் விளக்கம்

பதுங்கிய நிலைவிட்டு அரவமின்றிப்பாய்ந்து மேல்வீழ்ந்தமுக்கி னெவ்வுழும் புறகசு மொலியே இலஙணம் குறிக்கப்பட்டது.

மிடறு இடை கௌவி வீத்து தனி விடூஉ புரட்டி நோக்கி கொ(ண்)டு போந்து அருந்தி = கழுத்தினிடமாகப் பற்றிப்பிடித்து அதன் உயிரைநீக்கியபின்னாத் தனித்துப்போகவிட்டு(ப்) (க்காலினுலே) புரட்டி (உயிர் நீங்கியிருத்தலை) ப்பார்த்து(க) (ஒரு மறைவிடத்திற்) கொண்டு போய் உண்டு;

இற்புலியென்னும் வழக்காறுண்மையிற் பூஞையைப்புலிக்கும், புலியஞ்சுமானை எலிக்கும் ஒப்பிட்டார்.

நெருப்பு அவி அடுப்பு அகம் நிரைத்து துஞ்சி = நெருப்பவிந்த அடுப்பின உட்புறத்தி லுள்ள சாம்பர்களை ஒளவாக அமையுமாறு வரிசைப்படுத்தி (அப்படுத்திய படுக்கையிலே) நித்திரைசெய்து;

கார்காலமாதலின் ஆண்டுத் துஞ்சியதென்க.

விருப்பொடு வெளிப்படூஉம் தன்னை கண்டாங்கு = (துஞ்சுதலில் விருப்பொழிந்து புறன்போதற்குககொண்ட) விருப்பத்தோடு வெளிப்பட்டுவருகின்ற தனனைக் கணடவுடனே;

வெள் என குரைஇ விரைந்து வரு ஞமலி = வெள்ளென்று குரைத்து வேகமாக ஓடிவரு கின்ற நாயானது;

மரம் காப்பு அடையுமுன மறிப்பது காணுபு = மரமாகியகாவலைத் தானடைவதற்கு முன்னரே தன்னைவந்து மறித்துககொணடதைக் கணடு;

மரக்காப்பு–மரத்தின்கண்ணுள்ள காப்பு என்றுமாம். மரத்தைக்கிட்டி அதன்மேல் இவர்ந்துகொள்ளுமுன் ஞமலி மறித்துவிட்டதென்க.

நின்று பின் நோககி நெருங்கிய பூஞை வெற்றி கொடு மெல் என தன் நிலை மேவும் = (மறிபட்ட அவவிடத்திலே) நின்று பின்னுற்றிருமபி (ஞமலி வெருளும்படிசினஙகொண்டு வெறிக்கப்) பார்த்து நெருககியபூஞையானது வெற்றிபெற்றதாய் மெலலென்று தனது இருப் பிடத்தை அடையும்;

ஆற்றலொடு நோக்கினமையால் ஞமலி அஞ்சியோடிற்றென்க.

கன்று பால் அருத்த கசிந்து ஆன பயிர்த்தலும் = கன்றைப் பாலூட்டவேண்டி உள்ளங் கசிந்து பசுவானது அழைத்தலும்;

அ வயின் அடைமார் அதன் கன்று அரற்றல் கேட்டு = அப்பசுவிருக்கும் இடத்தைச்சேர் தற்கு அதன்கன்று கதறுவதைச செவியுற்று;

இடைச்சியர் பிணித்த தாமபு யாப்பு அவிழ்ப்ப = இடைப்பெண்கள் கன்றைப்பிணித் திருந்த கயிற்றின்கட்டை அவிழ்த்துவிட;

பால் கறத்தற்குக் கன்றை இழுத்துககோடல் மரபாதலின் அதின்கழுத்துப்பிணிப்பை அவிழ்க்காமல் கணுவின்யாப்பை அவிழ்த்தனர் என்க.

ஆங்கு = அவிழ்ப்புண்ட அப்போது;

துள்ளி பாய்ந்து ஓடி துன்னிய கன்று = துள்ளிப்பாய்ந்து விரைந்தோடிப் பசுவை யடைந்த கன்றானது.

முட்டி தாக்கி மடி பால் அருந்துழி = மோதியிடித்து (அவ்விடிப்பால்) மடியின்கட் சுரக்கும் பாலை உண்ணும்பொழுது;

வால் மேல் நிமிர்த்து வளைப்பு உற நக்குபு = அக்கன்று வாலை மேலேநோக்க உயர்த்த அதன் நுனி வளைவுபொருந்துமாறு (பசுவானது) நக்கி;

பூஞையொடு ஞமலி பூ குருளை வெருட்டி = (ஆங்குப் பாலூட்டுதல் காரணமாகப் பக்கத் தில்வந்து சூழ்ந்திருந்த) பூஞையோடு நாயின் அழகியகுட்டிகள் (கன்றின் அண்மையில் வரா வண்ணம்) அவற்றை வெருட்டியோட்டி;

மூத்து ஆடு முறை இல் மோந்து பால் சுரந்து மொய் என்று உயிர்த்து விழி மூடிய இன் புறூஉம் = (கன்றின்மேலே தனதுமுகத்தைப் பொருந்தவைத்துக்) கொஞ்சுவதுபோல மோந்து பாலைச்சுரந்து "மொய்" என்று ஒருவகையோசையுண்டாகுமாறு மூச்சுவிட்டுக் கண்களைமூடிக் கொண்டு இன்பத்தையடையும்;

ஆங்கு = இங்ஙனமாய பலநிகழ்ச்சிகளும் நிகழ்ந்துவருகின்ற அவ்வியத்திலே;

கார் கோல் ஓச்சி கலக்கு வெப்பு அறுத்து வாகை சூடிய வளம் சால் முல்லைக்கு = காராகிய (தண்ணிய செங்) கோலையோச்சி (உலகத்தை)க்கலக்கிய (பாலைக்குரிய) வெப்பமாகிய கோலை (இயங்காதவண்ணம) அற்றுப்போகச்செய்து வெற்றிமாலையையணிந்த வளம்மிக்க முல்லையென்ற திணைக்கு;

முடிமங்கலத்தின் முதல் அமை விழாக்கோள் — முடிசூட்டுதலாகிய மங்கலக்கொண்டாட் டத்தின்கண்ணே முதன்மையாக அமைந்துவரும் விழாவெடுத்தலை;

இதனை உழிஞைத்திணையின் பாற்பட்ட மண்ணுமங்கலமென்ப. "குடுமி கொண்ட மண்ணுமங்கலமும" என்றார் தொல்காப்பியனாரும். (பொருளதிகாரப் புறத்திணையியல் 13-ம் சூத்.) இதுவும புறத்தோன மண்ணுமங்கலம, அகத்தோன் மண்ணுமங்கலம் என இருவகைப் படும். "முடிமங்கலம்" என்றமையானும, "வெப்பறுத்து" என்றமையானும் இங்ஙனம் கூறினும். இனிச் "சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலம" என்று கூறுதலுஞ்சாலும். "அரசர்க்குச் சிறப்பெய்திய மிக்கபுகழை எய்துவிக்கும் முடிபுனைந்து ஆடும நீராட்டுமங்கலமும்; இதனைப் பிறந்தநாளின பின்வைத்தார் புனைந்தநான்றுதொடங்கி யாண்டுதோறும் இது வருமென்றற்கு. குறுநிலமன்னர்க்கேயாயின் அவர்க்குரிய பட்டத்தோடுகூடிய மண்ணுமங்கலமுங் கொள்க; 'அளிமுடியாக் கண்குடையா ளருகிநாள் வேய்ந்த—வொளிமுடி பொன்மலையே யொக்கு— மொளிமுடிமேன்—மந்திரத்தா லந்தணா வாக்கியநீ ரமமலைமே—லந்தரத்துக் கங்கை யனைத்து' எனவரும். இதனானே யானையேறிச்சென்றெதன்று எழுதும் நாண்மங்கலமும் பெறு தும்" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியதுவும ஆராய்ந்தறிக.

கவின் பெறு கானம் களிப்பு உற்று அயர்தலின் — மேற்கூறியவற்றானே அழகைப் பெற்ற காடானது களிப்பைப்பொருந்திச் செய்தலைப்போலவும்;

கள்ளுண்மையிற் களிப்புமாம்; கானம் முல்லைக்கு விழாக்கோள் அயர்தலின் கூண்க.

மரன் செடி கொடி முதல ஆகிய எல்லாம் = மரம், செடி, கொடி என்னும இவைமுத லாய எல்லாம்;

பொருந்தா மாசு அகல பொலிந்து ஆடிய = கோடையிலே தம்மிற்சேர்ந்து நிறைந்திருந்த (புழுதிமுதலிய) கறைகள அகலும்படி ஆடித் தோற்றம்பெற்றன;

ஆடிப் பொலிந்தன என்றுமாற்றுக.

தெற்றி என சுவர் என செறி கல் நிலன் என சிறு கண் களிறு என எருமை என = திண்ணையெனவும், சுவரெனவும், நெருங்கிய தளமெனவும, சிறிய கண்ணையுடைய யானையென வும், எருமையெனவுங் கூறும்வண்ணம்;

[சிறந்து—முற்றிய வியற்கைச் சிறுகற் பாறைமிசை] இயற்கை சிறந்து முற்றிய சிறு கல் பாறை மிசை = இயற்கைத்தன்மை சிறந்து (தொழிற்பாடு) முற்றுப்பெற்ற சிறியகற்பாறை களின் மீது;

சிறிய கற்களாலாகிய பாறை என்றுமாம். இப்பாறைகள் தெற்றிமுதலியவற்றின் தோற்றம் பெற்றிருந்தனவென்க.

பல் நிறம் மலரும் வண்டும் கோபமும் நிரல் பட பரந்து = பலவகையான நிறங்களைக் கொண்ட பூக்களும, வண்டுகளும், தம்பலப்பூச்சியும் ஆகிய இவைகள் [illegible] பரந்து [illegible];

எழில் நிலவ ஒவியம் படம் ஆங்கு ஆங்கு போர்த்த அமைதியின் = இவ்வியல் அழகு விளங்குகின்ற சித்திரிக்கப்பெற்ற தன்மையவாய்ந்த படங்களை அவ்வவ்விடங்களிலே போர்த்துவைக்கப் பெற்ற இயல்பிலே விளங்கின;

நீலம் விரித்து நிழல் ஒன்பான் மணி கோப்பு இடை தூக்கலின் = நீலநிறம்பொருந்திய ஆடையை மேற்கட்டியாக மேலேவிரித்து அதனகீழ் ஒளிவிடுகின்ற நவரத்தினமாலைகளை இடையிடையே தூக்கிவைத்தாற்போன்று;

நீலம்–நீலமணிபோன்ற ஆடையுமாம்.

முசுண்டையும் எற்றியும் பகன்றையும் அவரையும் பந்தர் செய்து அலர்ந்த = முசுட்டை, எற்றி, பகன்றை, அவரை என்னும் இவைகள் பந்தலைசெய்து (பன்னிறமலர்களையும்) பூத்தன;

எற்றி–ஒருவகைக்கொடி; பகன்றை–சீந்தில் என்றும், பெருங்கையால் என்றும் வழங்கப்படுங்கொடி.

நீர் நிலை மிசையும் நேர் கரை மிசையும் வரம்பு இகந்து அழகிய மலர் மலர்ந்தன = நீர் நிலைகளுக்குமேலும், (நீர் நிலைபெறுமாறு கட்டப்பட்ட) நேரிய கரைகள்மேலும் எல்லைகடந்த அழகியபூக்கள் பூத்தன;

கோம்பிக்கு அஞ்சி இலை இல் மரத்து காய்ந்த சினை மிசை இருப்ப கண்டு = (தமக்குப் பகையாகிய) பசசோந்திக்குப்பயந்து இலையில்லாத மரமரத்தின பட்டகொம்பரின்மேல் இருப்பதை அப்பச்சோந்தி கண்டு;

தம்பால் இரத்தம் கவர்ந்துண்ணவரும் பசசோந்தியைத் தாம் எளிதிற் கண்டுகோடற்கு இனிதாமாறு இலையுதிர்ந்த மரமரத்தின் பட்டகொம்பரில் இருந்த மயிலின இருக்கையை ஒந்தி கண்டுகொண்டதெனக.

அது மெல என ஏறி குருதி உண் விழைவால் = அது மெதுவாக ஏறி இரத்தம்குடிக்கும் விருப்பத்தால;

தவறாது கௌவி தம மிசை ஊர்தலின் = பிடிதப்பாமற் கௌவித தங்கள்மேல் ஊர்ந்து வருதலினால்;

தாம பறந்த உடலம் தருஉம மயில் இனம் = தாஙகள் பறப்புற்றுத் தஙகளுடலை ஓந்திக்கு (உணவாக)த்தருகின்ற மயிற்கூட்டஙகள்;

கணனோ ஆகி சரிபபு உறீஇ அகவின – (தஙகள் குலத்துக்கிருந்துவரும் துனபத்தை ஒருபொருளாக மதிக்காது) கருதாமல மகிழ்ச்சிகொண்டு ஆடின;

பழம குழல கொன்றை பொன் தார பயந்தன = பழமாகிய குழலையுடைய கொன்றை யானது பொனனாகிய மாலைபோனற பூக்களையீன்றன;

பீரம மடவோர பசலை பிலிற்றிய = பீர்க்குகள் (கணவரைப் பிரிந்திருந்து வருந்தும்) மடவோரின் மேனியிலுண்டாகும் பசலைநிறம்போன்ற மலர்களைப் பூத்தன;

[காடுநகைப் பதுபோற் கவின்கொடி முல்லை–மூடுமுகை யவிழ்த்து மொய்மணங் கஞற்றிய] கவின கொடி முல்லை காடு நகைப்பது போல மூடு முகை அவிழ்த்து மொய் மணம் கஞற்றிய = சிறந்த முல்லைக்கொடிகளானவை கானகம் சிரிப்பதுபோல மூடியிருந்த அரும்புகளை விரித்துப் பொருந்திய நறியவாசனையைப் பரிமளித்தன;

மணி கொழுந்து கான்று வயஙகுறு பட்டின் பொட்டு என கோபம் பொலிவு கொண்டு பூத்த = ஆதனத்தின் கிரணங்களைப்பொழிந்து விளக்கத்தைப்பெறுகின்ற பட்டினால் கத்திரிக்கப்பட்ட பொட்டைப்போன்று தம்பலப்பூச்சிகள் விளக்கங்கொண்டு மலிந்தன.

அப்பூட்டினை இக்காலத்தார் "வெல்வெற்" என்று வழங்குவர்–[illegible] ஒரு வகைக்கொடியுமுள்ளது.

நாயே யாடே பட்டு உயிர் புழுவே எண்கே இன்னன=நாயும், யாடும், பட்டுநூலைத்தரு கின்ற புழுவும், காடியும் இவைபோன்ற பிறவும்;

மீக்கோள் அறுவை முதல் நன்னர் ஆர்ந்த பொன் உடை நல்கிய=போர்வை, கூறை முதலாகிய நன்மைநிறைந்த அழகிய உடைகளைக்கொடுத்தன;

மீக்கோள்-மேற்போர்வை.

துருககமும புழுகும் மணம விரை சொரிந்த=கத்தூரிமிருகமும், புழுகுபூனையும் பரி மளிக்கின்ற வாசனைப்பொருள்களை அளித்தன;

புழுகு-ஆகுபெயர்.

கரும் கை வெள் பல் கானவா தோற்றத்து குரங்கு இனம்=கரிய கையினையும், வெள் ளிய பல்லினையும், வேடுவர்போன்ற தோற்றத்தினையும் உடைய குரங்குக்கூட்டங்கள்;

"கருங்கை"-வலியகை என்றல் ஈண்டுச் சாலாது, "வெண்பல்" என்றதோடு முரணுதலி னென்க.

நகை சுவை மிகை பட கொடுத்த=ஆசிய (அவமதிப்புச்சிரிப்பு) ரசத்தை மட்டுக்குமிஞ் சக கொடுத்தன;

வான் முரசு ஆர்த்து=மேகங்கள் இடியாகியமுரசத்தை அதிர்த்து;

வாடை ஒடு களித்த=வாடைகாற்றுடன்சோந்து களிப்புற்றன;

மலர் வாய் வைத்து களி வண்டு இசைத்த=மலரிலே வாயைவைத்துக் கள்ளுண்ட களிப்பை எய்தியவண்டுகள் பாடின;

பூ சொரி மழையும் பூ பொடி மழையும்=பூக்கள் சிந்தி வீழ்கின்றமழையும், மகரந்தங் களின் மழையும்;

மாரி மழையொடு தேன் மழை பொழிந்த=மாரிக்காலத்திற் பெய்யும்மழையுடனே தேன்மாரியும் கலந்துபொழிந்தன;

வண்டர் பாடி மகிழ் ஈன் கொன்றை=வண்டுகள் பாடுதலானே மகிழ்ச்சியுற்ற கொன்றைகள்;

மகிழ்-கள்ளுமாம். வண்டர்க்குக் கள்ளீந்தகொன்றை. இவவிலேசினுனே கொன்றை யுங் கள்ளுண்டவென்று கொள்ளப்படும், ஆதலினன்றே வண்டுக்குக குழலீயாது அதனைக கோவலர்க்கீந்தவென்க.

கோவலா தமக்கு குயில் குழல் ஈந்த=இடையர்கள் ஊதிக் களிப்பையளிக்குமாறு அவர்தமக்குக் குயிலுதலுற்று இசையூறுதற்கேதுவாகிய பழமாகியகுழலை ஈந்தன.

குயில்போல் இசைக்குங்குழலுமாம். வண்டாபோல நீவிருங்குழலூதி மகிழ்வீர்களுங்கள் என்று அவர்க்குக்கொடுதத என்றுமாம.

குழலர் இசை தமிழ் கூர்ந்து பொழிந்தனர்=குழலை அங்ஙனம் கொன்றையிடமிருந்து பெற்றுக்கொண்ட கோவலர் இசைத்தமிழ்ப்பகுதிகளை அக்குழலின்வழியாக மிகுப்பொழிந் தனர்;

இவ எ(ல்)லாம் இயைந்த இயல்பு பெறு முல்லை பூண்ட கற்பினர்=கூறிய இச்சிறப்பு களையெல்லாம் (கேட்டல், காணல, மணத்தல், சுவைத்தல, உறுதல் என்னும்வழியாக) அடையப் பொருந்திய பொருத்தங்கொண்ட முல்லையொழுக்கமாகிய இருத்தலை விரதமாகப்பூண்ட கற்பினை யுடைய மங்கையர்கள்;

கணவர் கூறியவற்றை விரதமாகக் கொண்டொழுகுங்கற்பினர் என்க.

பொருமி உகுத்த வெவ்வு விழி மழையொடு விராஅய் விளங்குநர்=அழுதுசிந்திய வெதும்புகின்ற விழியிலிருந்துவந்த மழையொடுகலந்து தோற்றம்பெற்றனர்;

துன்பக் கண்ணீர் என்பதுபோதர "வெவ்வுவிழி" என்றார். மழைத்தொகுதி கூறிய விடத்து இதனையுஞ்சோதநிலா மகிழ்ச்சிகொள்ளவேண்டிய ஆண்டுவிழாக்கோள் ஆதலின் என்க.

அவ்வயின் = அவ்விடத்திலே;

முல்லைசான்ற புறவத்து ஆய்ச்சியர் = முல்லைத்தன்மை நிரம்பப்பெற்ற காட்டகத்துள்ள ஆயமாதர்களும்;

மதுரைக்காஞ்சியில் "முல்லை சான்ற புறவு" என்றதற்கு இந்நிலத்திற்குரிய உரிப்பொருளமைந்த காடு என்றும், சிறுபாணாற்றுப்படையில் "முல்லை சான்ற முல்லைப்புறவு" என்றதற்குக் கணவன் கூறிய சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்து ஆற்றியிருந்த தன்மையமைந்த முல்லைக்கொடி படர்ந்த அழகிய காடு என்றும், "முல்லை சான்ற கற்பு" என்றதற்கு முல்லை சூடுதற்கமைந்த கற்பு என்றும் உரையாசிரியர் கூறியபோந்தமை நோக்கற்பாலது.

எல் வளை கையினர் — ஒளிவாய்ந்த வளையல்களணிந்த கையுடையாரும்;

இழை நார் சுமடு மிசை பருஉ அடி குறு வாய் பை நெய் உண்டு இருண்டு இலகு தாழியின் இனம் சிறந்து அமைய = பன்னாரினாலே திரித்து அமைக்கப்பட்ட சும்மாட்டின்மேற் பருமையாகிய அடியினையும், சிறிய வாயினையுமுடைய பசியநெய் பெய்துவைத்தமையால் அதனையுண்டு இருட்சியுற்று விளங்குகின்ற தாழிகளின் கூட்டம் முறையே சிறியனவாகப் பொருந்துமாறு அமைந்திட,

நாட்டில் திரிந்து நறு நெய் நொடித்து ஆங்கு ஈட்டிய செல்வத்து ஏந்தும் இழையினர் = (அவற்றைத் தலைமீது சுமந்துகொண்டு) நாட்டிலேதிரிந்து நறிய நெய்யைவிற்று அவ்விற்றலால் அங்கேபெருக்கிய திரவியத்தைக்கொண்டு வாங்கித்தரித்துக்கொள்ளும் ஆபரணங்களையுடையவரும்,

இலை மிசை வேய்ந்து — இலைகளை மேலே வேய்ந்து;

கூழ் கிளை பரப்பி (உத்திரமுதலியன போன்று) அதன்கீழ் கிளைகளைப்பரவவைத்து;

நிலம் புக்க வீழ் தூண் நிறுவி — நிலத்தகத்துப் புக்கு (வேரூன்றிய) வீழாகிய தூண்களை நிறுத்தி,

நிலம்படா வீழ் ஊசல் மேவிய விளங்கி = நிலத்திற்படாது அசைதலைக்கொண்ட வீழாகிய ஊசல்களைப் பொருந்தி விளங்குதலுற்று,

ஊசலாடும் அருமைகாட்ட "வீழ்" எனறளபெடுத்தது.

[தாழ்ந்து தோங்கிக் கவின்தமனை] ஓங்கி தாழ்ந்து கவிந்த மனை = மிகவுயர்ந்து தாழ்வுற்றுக் கவிந்திருக்கின்ற மனையாகிய,

உயர்ந்தமை தாழ்ந்திருக்கும் வியப்பைப் புலப்படுக்க அளபெடுத்தது.

பறவை பல விழைந்து காக்கும் பால் நிறை ஆலத்து = பறவைகள்பலவற்றையும் விரும்பிக்காத்துவரும் பால்நிறைந்த ஆலமரத்தின்,

இயற்கை வனப்பு எய்திய இன் நிழல் அகத்துள் = இயற்கையழகு பொருந்திய இனிய நிழலின்கண்ணே;

செயற்கை வனப்பு அறியா செயிர் அறு கற்பினர் = செயற்கையழகை இதுவென்று அறியமாட்டாத குற்றமற்ற கற்பினையுடையவராகிய மங்கையர்கள்;

என்றது சுமங்கலிகளை. இவ்வடியை "ஏந்தும் இழையினர்" என்ற 168-ம் அடிக்குப் பின் சேர்க்க. புகுதலின் பெருமைதோன்ற இஃது ஈண்டுக் கூறப்பட்டதெனக.

அந்த மென்னடை என அ எழில் பிடி என புக்கனர் = அந்த அன்னப்பேட்டின் நடை என்றும், அந்த அழகுபொருந்திய பெண்யானையின் நடை என்றும் தோற்றம்பெற்றுப் புகுந்தனர்;

ஆலத்து நீழலில் ஆய்ச்சியரும், இழையினரும், கற்பினருமாகிய மங்கையர் மென்னடையெனப் பிடியெனப் புக்கனர் என்க. மென்னடை—அன்னம்; இனிதாக நடக்குமன்னம் மென்னடை எனவும், இனிதாகப் பாடுமன்னம் காதம்பம் எனவும் வழங்கப்படும். அந்த—சேய்மைச்சுட்டுப்பொருளிற் பெயர்ச்சொற்கு முன்வந்த இடைச்சொல். அந்த மென்னடை—அழகிய அன்னமுமாம்.

புக்கு = அவர் அரங்கம் புகுந்து;

பொலன் செய் பூ கொடி கை கொ(ள்)ள உயிரைப் கருதிலன் = அழகிய பூங்கொடி போல்பவளாகிய இவளைக் கைப்பற்றும்பொருட்டுத் தன்னுயிரையும் ஒருபொருளென மதிக்கானாகி;

கட்கு எதிர் கூற்று உடன்று அன்ன கூர் கோட்டு எருத்தொடு ஏற்று = கண்ணுக்கு முன்னே (வடிவங்கொண்டு) கூற்றுவன் பகைத்தாலொப்ப எதிர்க்கும் கூரியகொம்பையுடைய ஏற்றினோடு எதிர்த்து;

சட்கெதிர் கூற்றுடன்றன்ன—என்பது இல்பொருளுவமம்.

வென்று = வெற்றிபெற்று;

என்றது ஏற்றை அடக்கித் தழுவுதலை.

இன் சொல் பெரும் கண் தோகை சிறு இடைச்சி செம் கை திரு தார் வாகை பெற்ற பெருமகன் — இனியசொல்லையும், பெரியவிழியையும் உடைய மயிலினது சாயல்படைத்த சிறிய இடையை உடையவளாகிய இவளது சிவந்தகையிலே பொருந்திய அழகியதொடையாகிய வெற்றிமாலை அணிதலைப்பெற்ற பெருமைவாய்ந்த இம்மகனாவான்;

"சிற்றிடைச்சி" என்பது குலத்தினையும், உறுப்பினையுங் குறிக்கும்.

"கொலலேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்—புல்லாளே யாய மகள்; அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை—நெஞ்சிலார் தோய்தற் கரிய வுயிர்துறந்து—நைவாரா வாயமகள் தோள்; வளியா வறியா வுயிர்காவல் கொண்டு—நளிவாய் மருப்பஞ்சு நெஞ்சினார் தோய்தற்—கெளியவோ வாயமகள் தோள்; விலைவேண்டா ரெம்மினத் தாயர் மகளிர்—கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்—முலையிடைப் போலப் புகின்" என்று கூறப்படுதலின் ஏறு தழுவினானுக்கே மாலைசூட்டுவான்வேண்டி அதனைத் தாங்கியதாற் சிவந்தமைதோன்றச் "செங்கை" என்றும், அது மணம்பெறற்குரியவர்க்கே சூட்டப்படும் இயல்புகருதித் "திருத்தார்" என்றும் கூறினார். இவ்வேறுதழுவுதலைத் "தளிபெறு", "கணாக", "மெல்லிணர்க்", "மலிதிரை", "அரைசுபட", "கழுவொடு" என்றற்றொடக்கத்து முல்லைக்கலிப்பாக்களிற் பரக்கக் கண்டுகொள்க.

இவளுடன் = இந்தத் தலைமகளுடனே;

தீம் பால் அளாவிய பை தேன் போன்று அமைந்து = மதுரமாகிய பால்கலந்த பசிய தேனைப்போன்று (ஒருவரிலொருவர் அன்புபூண்டவராக இல்லறநெறியிற்) பொருந்தி;

[இருசுடர்—ருலகிற் கென்ன வுவந்தினிது வாழ்கவெனா] உலகிற்கு இரு சுடர் என்ன உவந்து இனிது வாழ்க எனா — இவ்வுலகத்திற்குக் கதிரவனும், தண்மதியுமாகிய இரண்டுசுடர்களும் எங்ஙனம் இன்றியமையாதனவோ அங்ஙனமே நமக்கும்பிறர்க்கும் இன்றியமையாதவராய் இனிது வாழ்கவென்று;

"அஞ்சுடர்நீண் வாண்முகத் தாயிழையு மாறிலா—வெஞ்சுடர்சீர் வேலானும் போதரக் கண்—டஞ்சி—யொருசுடரு மின்றி யுலகுபா ழாக—விருசுடரும் போந்தனவென் றார்" எனத் தலைமக்களிருவரையும் இருசுடராக்கொப்பிட்டமை காண்க. செங்கதிரைத் தலைமகனுக்கும், தண்கதிரைத் தலைமகளுக்கும் ஒப்பாக்குக.

குரவை நன்கு ஆடி கொற்றம் பாடி = குரவைக்கூத்தை நன்றாகுமாறு ஆடி (அத்தலைமகனது) வெற்றியையும் பாடி;

ஆடிப் பாடி வாழ்கென என்க. இனித் திருமாலுக்கேற்றினும் இழுக்காது.

குரவை—எழுவரேனும், ஒன்பதின்மரேனும் கைகோத்துநின்று ஆடுங்கூத்து. "குரவை யென்பது கூறுங் காலைச்—செய்தோர் செய்த காமமும் விறலு—மெய்த வுரைக்கு மியலபிற் றென்ப", "குரவை யென்ப தெழுவர் மங்கையர்—செந்நில மண்டலக் கடகக் கைகோத்—தந்நிலை கொட்பநின் றாட லாகும்" என்று வருவனவற்றை நோக்குக. இதன்விரிவை ஆய்ச்சியர் குரவையுட் கண்டுகொள்க.

விரையும் புகையும் விளைத்து மலர் தூவி மாசு அகல் அன்பின மனத்திடை உள்கினர் = வாசனையூட்டி நறிய புகைபுகைத்து மலர்களைத்தூவிக் குற்றமற்ற அன்பார்ந்த சிந்தையின் கண்ணே மனமார நினைத்தனர்.

(மலர் தூவி உள்கியது யாவரை என்னில்.)

பேய்ச்சி தரும் பால் உயிரொடு பருகி = (கஞ்சனால் ஏவப்பட்டுவந்த பூதனையென்னும்) அரக்கி (நஞ்சுகலந்து) ஊட்டிய முலைப்பாலுடன் அவளுடைய உயிரையுங்கவர்ந்து குடித்து;

ஆய்ச்சியர் மனைதொறும் அளை கவர்ந்து அருந்தி = இடைப்பெண்களின் வீடுதோறுஞ் சென்று (ஆங்காங்குள்ள) வெண்ணெய்யைத் திருடியுண்டு;

அளை என்பது தயிர், மோர், வெண்ணெய் முதலியவற்றைக் குறிக்கும் பொதுச்சொல். அளைக்கள்வன் என்றும் திருமாலுக்கு ஒருபெயருண்டு. "வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடை யிட்டத னோசை கேட்கு—கண்ண பிரான்கற்ற கல்வி தனைக் காக்கிலே மோமுன் மகனைக் காவாய்—புண்ணிற் புளிப்பெய் தாலொக்குந் தீமை புரைபுரை யாலிவை செய்ய வல்ல—வண்ணற் கண்ணனோ மகனைப் பெற்ற யசோதை நங்கா யுன் மகனைக் காவாய்" என்றார் பெரியாரும்.

உடுக்கை கைக்கொண்டு இடுக்கண் உறுத்தி = (பொய்கையில் நீராடும் ஆயமங்கையர்தம் வஸ்திரங்களைக் கரந்து) கைப்பற்றி(த) (குருந்தமரத்தின் மேலேறி ஆங்குக் கட்டிவைத்து அவர்கள் வேண்டவுங்கொடாது) துன்பத்தைச்செய்து;

"இதுவென் புகுந்தது இங் கந்தோ இப் பொய்கைக்கெவ் வாறு வந்தாய்—மதுவின் றுழாய்முடி மாலே மாயனே யெங்க ளமுதே—விதியின்மை யாலது மாட்டோம் வித்தகப் பிள்ளாய் விரையேல்—குதிகொண் டரவின் னடித்தாய் குருந்திடைக் கூறை பணியாய்" என்றா நாச்சியாரும்.

உரல் யாப்பு உறீஇ = (பலவகையான லீலைகளையும் ஆய்ச்சியர்தம் வீட்டிற்புக்குச் செய்யாதிருக்குமவண்ணம் அசோதை உரலொடு சேர்த்துக்கட்டிய கட்டுக்குட்பட்டு;

"ஆய்ச்சியர் சேரி யளை தயிர் பாலுண்டு—பேர்த்தவர் கண்டு பிடிக்கப் பிடிப்புண்டு—வேய்த் தடந் தோளினார் வெண்ணெய்கொண் மாட்டாமற்—காப்புண் டழுதானை யின்றுமுற்று மடி யுண் டழுதானை யின்றுமுற்றும" என்றார் பெரியாரும.

ஒண் குழல் இசைத்து = ஒளிய குழலை (ப்பசுக்கூட்டங்களின் முன்னர்) இசைத்தூதி;

குன்று குடை கவித்து கோநிரை காத்து = கோவர்த்தனகிரி என்னும் பருவதத்தைக் குடையாக எடுத்துக் கவித்துக்கொண்டு (கன்மழையினின்றும) ஆநிரைகளைப் பாதுகாத்து;

பண்டொரு காலத்தில் ஆயர்கள் கோபாலர் இந்திரனுக்குச்செய்துவரும் யாகாதிகிருத்தியங்களைச் செய்யவிடாது தடுத்தகாரணத்தால் இந்திரன் கோபங்கொண்டு காளமுகியென்னும் மேகத்தையேவிக் கன்மழைபொழிவிக்க அதனாற் கோபாலரும், ஆநிரைகளும் துன்புறுமற் கண்ணபிரான் கோவர்த்தனகிரியைக் குடையாக எந்திப்பாதுகாத்ததை குறிக்கப்பட்டது.

நல்லாள் கூறை நலம் பெற வளர்த்து = நன்மையமைந்தவளாகிய திரௌபதியின் ஆடையை (த்துச்சாதனன் உரிந்தும், உரிபட்டுமானபங்கம எய்தாமல்) வளரச்செய்து;

பொருது நூற்றுவரை பொன்னுலகு ஏற்றி = (திரியோதனாதியராம், நூற்றுவரையும் அமர்செய்து வானுலகுக்கேற்றி;

பொருது நூற்றுவரை—நூற்றுவரைப் பொருது என்றுமாற்றுக.

வரம் மிகும் ஐவர் மனம் கலக்கு அகற்றி = வரத்தின்மிக்க பஞ்சபாண்டவரின் மனக் கலக்கத்தை நீக்கி;

"மமஜீவ: பாண்டவ:" என்றார் கீதையிலும்.

முல்லை திணையின் எல்லை கடவுளாய் அமர்ந்து = முல்லைத்திணையாகிய நிலத்தின் எல்லையைக் காத்துவரும் கடவுளாக வீற்றிருந்து;

பால் சொரியும் ஆ நிரை முதல் ஆ(கிய) வளம் பல விளைக்கும் = பால்சொரிகின்ற பசுக் கூட்டங்களை முதலாகவுடைய வளப்பங்கள் பலவற்றையும் விளையச்செய்கின்ற;

மா வளர் மார்பன் = இலக்குமிதேவியார் வளருகின்ற மார்பையுடையவனும்;

தண் துழாய் புனையும் தடம் தோள் கொண்டல் வண்ணன் குரை சே அடிக்கே = குளிர்ச்சிபொருந்திய துளசிமாலையணியும் விசாலித்த புயங்களையுடைய மேகநிறத்தவனுமாகிய கண்ணபிரானது (ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த (செந்தாமரைபோலும்) சிவந்த திருவடிக்கு;

திருவடிக்கு மலர் தூவிப் போற்றி வாழ்கென உள்கினர் என்க.

---

(69) மாலைத் திறந்த மகிழ்நனை நினைந்த
சேலமை நெய்தற் றிறமுமாய்த் துரைத்தல்.

செய்யெனப் பாவையெனத் திகழ்பால் வெள்ளியெனக்
கயலெனப் பரிக்குந் திண்மையெனத் தவளமய
பாம்பெனப் பறவையெனப் பல்வியெனா மரமென
மாவென வின்ன வகையென வொருவகைத்
தோற்றங் காட்டுஞ் சுவைவிழிக் குதவு
நீருடற் பொருளையும் யாருமன் னிலத்தந
தூரிஇக்கொடு வந்து மறைத்த துழைபடு
மாண்சிதை கலன்முத லாகிய பொருளையும
பசப்புற விப்பியும் பைந்தா மரையின்
முகையெனப் புறத்துத் தோற்றங் காட்டி
வலம்பட மாக வளைஇ வரையுறலுக்
திரிதருங் குழிந்து நிகழ்பன் னிறமெலாம்
விழுங்கிய பளிங்கென விளங்கு தோற்றத்
தின்முது கிளைபெருநாரன் றியங்கு வளையு
மொத்த பிறவு முயிர்த்தபன் முத்துங்
கொத்துப் பவழமுங் கோலக்குருஉ மணியு
மின்ன தம்மையுந் தெறுந வரைஇக்
குறுக வுயிர்த்துப் படுபுதுயில பயிலு
நிலத்திரை விரிதருக் கோலக்கண் கவருங்
கடலினைக் கொண்டல் கடுகி பெற்றற்
சுகம்பொறு துவர்ப்பு நீஇ போவென் றாற்றி
மலையென வெரீஇ மழையெனக் கருகிக்

கருகுமை யிடைப்பெய் வெண்பொடிக் குழம்பின்
முரிந்துகீழ் வீழ்ந்து நுரைத்தழி யோரலை
கல்லடித் தாங்குக் கரைகொடு சேர்க்குமுன்
குலனென வீரலை குதித்துத்தாஅய்ப் பாஅய்ந்
தெற்றிக்கரை கரையா தெககர்செய் திலங்கும்
நாப்பண் வகிர்ந்த விருப்பைநல் வித்தின்
மூக்குடைக் காக்கை கரையருகு நின்று
மீன்கொத்து வேட்டு மெல்லென நோக்குழீஇ
யலைமேற் கதுவி யலைத்தொறும் வருந்திப
பின்னர்ப் போந்து முன்னர்ப் புகூஉம
பாஅல் போன்றும் படர்நிலாப் போன்றும்
விரித்த வெண்டுகிற் பரப்புப் போன்றும்
வெண்சுதை யூற்றிய விளக்கம் போன்றும்
மண்ணணி பரந்து மலிந்த பரப்பிடைச்
செல்லா விடத்துச் சேர்ந்திடர்ப் படவிற்
கலன்சென்று புதைந்து கவிப்பற் றமையு
மூன்றுமுத லிணைத்த வுவருணைக் கூர்முனைப்
பராவடி மரத்துமிசை யூர்ந்துநுனி யாழிகொள்
கண்டற் கழிபிடூஉக் கடனீர் தள்ளிப்
பள்ளஞ் செய்துபின் வெள்ளம் பாய
நிலைத்தாங் கேகு நெஞ்சக் கல்வின
ருருண்ட நோக்கின ரிருண்ட மேனிய
ருப்புப் பொரிந்திடை யிலங்குறாஉ முதுகினர்
காழ்த்துவரி மழுங்கித் தோறபொரி யுரிவைக்
கையினர் கயிற்றுமுடி வலையினர் நீரிடை
யெல்லைகண் டாங்காங் கிடுபெயர் மரபினர்
பன்மீன் வேட்டப் பயனசால் வளத்தினர்
பேய்வாய்க் கொள்ளியிற் றிமில்பிறங்கு விளக்கின
ரிரவுக்கடல் வாழ்க்கைய ரலைபுட னெழுந்துவிழு
புணையினர் பெண்ணை சுற்றிய வடியிடைத்
தாழை படுத்துத் தலைவிரித்து மலர
வுள்ளகப் புறனெலா முடக்காற் புன்னை
கவிந்துகுடை நிழற்றக் களிவண் டீட்டமு
மாமலர் நாற்றமும் பன்மீன் முடையு
நாறிக்கவின் பரப்பு நலஞ்சா லிருக்கையர்
கடற்காப்புக் கடவு ளடிக்காப் பகத்தின
ருப்பொடு மீன்கொண் டூர்தொறுந் திரீஇ
நொடித்துப் பிறபொரு ளுகரு மியற்கையர்
குடியிருப் புடைய மிடியிருப் பறியா
நெய்தல் சான்ற நெய்தற் றண்புலம்

அதுவே,
புன்னைக்குடை தரூஉம் புள்ளிநிழ லசைஇச்
சினைக்கயிறு தொடுத்த நடுவுடை நீள்கோற்
புலவுநாறி யுணங்கும் விழிமீன் கொள்வான்
கரந்துவரு புள்ளெலாம் விரைந்தலைத் தோட்டியும்
பாவை வனைந்து பல்லாட் டயர்ந்தும்
வளைமுத லாகிய வகையினங் கொண்டு
பெயரும் வடிவும் பிறங்குற மணன்மே
லிணைத்து மகிழ்ந்தும் வண்ட லிழைத்துங்
கைதையும் புன்னையுஞ் செருந்தியு நீலமுங்
கவினச் சூடியுங் களித்துநீ ராடியும்
பாடியு மோடியும் பசந்துங் கூடியு
மின்னண மாய வின்பெலாந் துய்க்கு
நன்ன ரார்ந்த வளஞ்சா லியல்பிற்று
அவ்வயின்,
மாலைவந் தன்றே மாலைவந் தன்றே
மருவுந ரினிப்புற மருவலர் துனிப்புற
மயக்கி வாட்டும் மாலைவந் தன்றே
கலங்கரை விளக்க மொளிக்கை நீட்டி
நிமிர்ந்துமே னின்று நெஞ்சங் குழைஇக்
கடலிடைப் பட்டுக் கரைகாண் கிலவா
யுடன்று வருந்தி யோடுபல கலங்களை
யீங்குவரு கென்ன விருந்தெழுந் தழைத்தன்
றேடு மடல்வழிப் பாளைவழிப் பிழியுங்
கற்றவ ரோடு கற்பிலர் தமக்கு
மெல்லார் தமக்கு நுங்கின் சேறும்
பழத்தின் கனியுஞ் சுடுசுவைக் கிழங்கு
முரைப்பரும் பொருள்கொள வுடல முழுவதூஉங்
கைம்மாறு வேண்டாது களிப்புறீஇ நல்கும்
பெண்ணைமட னுனியொடு பெரிதொன்று படீஉ
வுள்ளீ டிலாது தோலுரிந்து போந்த
பிரத்து நெற்றி னார்த்தொடைக் குடம்பையுட்
குரீஇ யூசல் கொண்டலொ டாடுந
புள்ளெலாம் பார்ப்புக் கிரைகொடு கூண்டுட்
புக்கன பன்மல ருகுத்துமணங் கமழ்ந்தன
நடுவழி யிடையொரீஇக் கரந்துமறை வோரின்
ஞாயிறும் பல்கதிர் மெல்லெனச் சுருக்கிக்
குடகட லிடைப்போய்க் குதித்தொளித் தன்று
வெள்ளிய மழையும் விளங்கு வானமு
மாலையிடை மயங்கிச் சிவந்தவள் ளுடுப்பன்

னெருப்புநகை காட்டி யுருக்கி யழிக்குந
தெற்றிச்சுவர்ப் புரையிற் புன்னைநெய் விடேஉ
வேற்றிய விளக்கெலா மாலையொ டலகிய
விருடிரண் டொருவடி வெடுத்தார்த் திம்மென
வச்சுறுத்தி யாங்கமை யாழியலை யெற்றி
நெஞ்சந் திகைப்ப நெருங்கிச்சீ றின்று
சான்றோ ரிடைச்சார் புறீஇய போழ்தாண்
டான்ற பொருளி னமைதிதெளிந் தாங்கு
ஞாயிறொடு கலந்த ஞாலம் பிரிந்து
பொருளி னிலைமையும் பொருந்திய பண்பு
மருண்டு காணு வாகி நல்லன
களைஇப் புல்லிய கதுவிமயங் கின்று
கற்புடைக் குயிற்கு வழியிடைக் கண்டா
னற்றுணை காட்டி வேற்றுவழி யேற்றாங்கு
ஞாயிறு கரந்து திங்கள்வடி வெடுத்துக்
கலத்தடிக் கொண்ட கனன்மெல் லென்ன
வகத்துநீ ருட்புகூஉ வழற்றலசெய் தாங்கு
வஞ்சம் புரிவான் வெளிப்பட்டு வந்தன்
றெளியே ணுதலி னெனக்கிவை வந்தெனப்
புன்னையுங் குருகு பூக்குங் கைதையு
நெய்தலு மடம்புஞ் செருந்தியு மகிழ்கொள்
கைதவ மாக்கள் காட்சியின் மலர்ந்த
பகைதெறப் பட்ட வேந்தற்கு முன்ன
ரினிய வாகிய வின்னு வாகி
முரண்ட போன்று மழையொடு கூடிய
காலே பின்னர்க் கோடையொடு கூடி
யேற்றுநலிந் தாங்கு மிவையு நலிகுந
கலன்மிசைச் சென்றோர் கடலிடை விழுந்தாங்
கெல்லோ டிருந்தனென் னிருள்புகுந் தென்னுந்
தெருள்காண் கிலாது திகைத்து மயங்கினென்
வருது மென்ற நாளும் பொய்த்த
வருவழி நோக்கிய விழியும் பூத்த
வான்றொடு மலைகுடைந்த தாங்கமை யில்லு
மெனக்குச் சிறிதாகி மனங்கலக் கின்றே
யின்பிற் சுருங்கினென் றுன்பில் விரிந்தனென்
பேய்ப்புக் கிருந்த மேனி போன்று
பசலைபுக் குண்டன்று மாமைக் கவினெலா
மவரோ கொடியரு மல்லர்த் தணவறீஇ
வாட்டுந் திங்களுங் கானலுங் கொடியவல
நாட்டு மடவோர் நந்நோ யறியாத்

தமக்கொன்று சாற்றிப் பிறர்க்கொன்று சாற்றுநர்
மகப்பெறு துயரம் பெற்றவட் கன்றி
மலடிக் குணர்த்துதல் வாய்க்கா தங்ஙனம்
பிரிதுய ரறியாப் பிறற்று பேதையர்க்
கென்னுறு துயரம் யாங்கன முணர்த்துவ
ருழு முணர்கில ருணர்த்தவு முணர்கிலர்
அவர்தாம்,
முல்லை பூண்டில னெய்தல் பூண்டன
னெனவலர் தொடுத்தெனை யந்தோ வருத்துந
காதலி னலமே யாருயி ருண்ணுங்
கூற்றிற் கொடியாக் கொடியோர் மன்ற
வட்டிலுட் புகுமுன் றுங்குவந் தெய்திக்
குறுநகை யோயே யின்றமே உ முண்டிக்
திறன்கூறு கென்று விறுஅய்ப பன்மலர்ப
பள்ளியிற பொய்த்துயில் பயில்குவர் பன்முறை
யெடுப்பியு முணரா திருப்ப ரிருநதாங்
குணர்நதனர் போன்றெழீஇ விழிதுடைத் துண்பான்
விழைநது வருகுவ ரின்சுவைத் தெனவுணீஇக்
கலகல நகைத்துக காதல் கழறி
யுள்ளங் கொள்ளை கொள்குவர் சிறுசி
ணட்டுப்பல வாடி யன்புவளர்த் தின்பெலா
மூட்டுவர் நீழலி னொருஙகமைந திருப்பர்
பூணுந தூசுந் தாரும் விரையு
மின்சுவைப் பண்ணிய வகையு மிவையென
வெறுது நெஞ்சத் துட்புகுந் தறிநதாஙகுத
தாமே புணர்நது தருகுவர் வேட்டன
வின்னவர்ப் பிரிநத வேழையெனக் கநதோ
வீடே கொடும்புலிக காடா கின்றே
யணிசெய் பணியே பிணியா கின்றே
யுணவே யுயிருண்ணுங் கூற்றா கின்றே
தங்கநூ லுழைஇய தகதகப் பட்டுடை
காண்டொறும் பொறாஅக் கண்கள் சிவக்குந
வுள்ள முடைஇ வெள்ளிடை யாகின்று
மகிழ்ச்சியின் மலர்ந்து விமமுறுப் பெல்லா
மஞ்சுவ போன்றுள் ளடைஇப பதுங்குந
வேளை யாஅ னென்னு மறிகிலென்
பிரிபொன் றுண்டெனு பிரிபுதுய ரிதுவெனு
முன்னறிந் துன்னேற் பேதையே னவர்தா
மோரடி வைத்தற் கொருப்படு வேன்கொல்
விழ்த்துணை பிரிப்பிய வின்னுயிர்க் கள்வரைக்

கண்முன் கண்டிவை கழறிக்கண் ணீரிற்
றிருவடி கழீஇயென் சிற்றுயிர் செகுப்பல்
பிரிபுதுய ருணர்த்தாது பெரிதுகரந் துறைந்த
தோழி யோவென் னின்னுயிர்த் துணைவி
வாழி யூழியவ் வண்மைசெய் தோளே
பசிக்குத விலலா வுணவி னவர்நலன்
பின்னு முன்னும் பெறுதலி னென்று
மீதறி வில்லாப் பேதையேன் புல்லுயி
ரவர்தோ ளணைதல்வேட் டகறலுஞ் செய்யாது
நெஞ்சும் பின்றொடர்ந் தாங்குநிலை பெறாது
வெள்கி யென்னையு மேவா தொழிந்தன்
றறன்வளர் கொள்கை சுமந்தாங் கடைந்தோர்
திறனன் றம்மா சேர்புதெரி கில்லே
னெனக்குத்துயர் செய்த றமகினி தாக்குநர்
தம்மையினி யுள்ளே னாதலி னினியே
கறுப்புறா கடலும் வெறுப்புறீஇக் கண்ணி
றிங்களும் மாலையுந் தெளிநீர்க் கொண்டலு
மலையா தொழிக மங்கையெனக் கொண்டில
நிலையா வுயிரொடு பொறுநெஞ் சேனை
யவர்மே லமைந்த வன்புமறத் தற்குச்
சாலுங் கொல்லோ சார்ந்துயிர் வளர்க்கு
மின்பினை மறத்தற வியலுங் கொல்லோ
வினைமறந் தக்கா விருமையு மறத்த
லமையா தேகொ லாஅவென் செய்கேன்
வம்ம வவர்தமை மறப்பறி கில்லே
னெல்லா வினையுந் துயர்செய மறந்தில
ஆதலின்,
இவ்வெலா மவரொடு துயரஞ் செய்க
யானே,
மீன்பொதி யுவர்க்குளன் மேய
புண்ணுடைப் பூஞ்சிறார் போலா குவெனே.

---

யாறுங் கடலும் பனியும் புனறாவ
மாறு படப்பிரிந்தார் வாள்விழியுஞ்—சீறுபுன
றாவிச் சிவந்த தொழில்கண்டு கார்விண்ணுந்
தாவிச் சிவந்தன்று முன்.

நாடெல்லாங் காரிரு ணண்ணித் தணந்தவர்
வீடெல்லாம் புக்கு விழுங்கியவர்—கூடெல்லாந்
தீத்து மனசு திகைப்ப விருட்டிற்றே
தீத்தொழில் கன்றினர் போல்.

வங்கங் கரைசேர்ந்து வந்த சுமையிறக்கிப்
பொங்கு மகிழ்பூத் திளைப்பாறத்—தங்க
ளினியர்த் தணர்ந்தா ரிடர்க்கற் சுமைமேய்த்
துனிவுக் கடன்மூழ் கினர்.

காதல ரோடு களிப்பதாய்க் காமுறுவர்
மீதலர் வாட்ட விழிதுடைத்—தாதரவ
ரில்லாக் குறையுணர்ந் தேங்கி யிரங்குவர்
நில்லாத சிற்றிடை யார்.

முத்த மெறிந்து முழுச்செம் பவழத்தின்
கொத்தெறிந் தார்க்கும் வளையெறிந்து—கத்துங்
கடறணந்தார் தம்மேற் கனன்றேறுந் தாமு
முடனெறிந்து கொள்வார் சினம்.

---

இப்பாட்டிடைக்கிடந்த துறை விளக்கம் வருமாறு:—

(இது காமமிக்க கழிபடர்கிளவியாற் பொழுதுகண்டு சொல்லியது. பொருள்வயிற்பிரிதலாகிய பகுதிக்குரிய இருபானியலுட் சிலவற்றைவிரிப்பது.)

தலைமகன் "நாளு நாளு மாள்வினை யழுங்க-வில்லிருந்து மகிழ்வோற் கில்லையாற் புகழ்" என்பதையும், "பொருளில்லாற் கின்பமில்லை" என்பதையும், "குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ்செய்தால் அதனால்வரும் பயன் அவர்க்கேயாம் அத்துணையல்லது தனக்கமையாது" என்பதையும் அன்னபிற பலவற்றையும் பலகாற்சிந்தித்து, ஒண்பொருள் ஈட்டிவருதற்குத் துணிந்து இன்னநாளில் மீண்டுவருவல் என்று தலைமகட்குக்கூறி அவளைப் பிரிந்து வேற்றூர்ச்சென்றான்.

சென்றவன் குறித்த வமயம் அறக்கழிந்துபோயும் வாராது தாழ்த்தல்கண்டு பொறாத தலைமகள் "மாலைவந்தன்று, கலங்கரை விளக்கங் கலங்களை யழைத்தன்று, புள்ளெலாம் பார்ப்புக் கிரைகொடு கூண்டுட் புக்கன" என்றாங்குக் காமமிக்க கழிபடர்கிளவியால் இரங்கிக் கூறாநிற்றல.

(இ—ள்.) செப்பு என பாவை என திகழ் பல் அணி என கழல் என பளிங்கு கிண்ணம் என கலம் என பாம்பு என பறவை என பல்லி என மான் என மா என = செப்பெனவும், பாவையெனவும், விளங்குகின்ற பலவாகிய ஆபரணங்கள் எனவும், கழற்சிக்காய் எனவும், பளிங்கினாற் செய்யப்பெற்ற கிண்ணமெனவும், கலமெனவும், பாம்பெனவும், பறவையெனவும், பல்லியெனவும், மான் எனவும் விலங்கெனவும்;

கழற்சிமரத்தைக் குறிக்குங் கழல் இங்ஙனம் அம்மரத்தின் காயையுங்குறிக்கின்றது. கலம்—உண்கலம், மட்கலம்.

இன்ன வகை என = இவைபோன்றனவும், இவற்றின் வகைகளென்வும்;

ஒரு வகை தோற்றம் காட்டி சுவை விழிக்கு உதவும் நீர் உடல் பொருளையும் = (கண்டோர் கருதும்வண்ணம்) ஒருவகையாகத்தோன்ற தோற்றப்பொலிவினைக் காட்டி (அக்காட்சியதால் உளதாகும்) இன்பத்தை அக்கண்ட கண்ணுக்கு உபகரித்துவருகின்ற நீர்வாழ் உயிர்களுக்கு உடல்களாகியிருந்த பொருள்களையும்;

சிதைவற்றிருக்கும் வடிவங்களின் பெருமைதோன்ற "ஒருவகைத் தோற்றங் காட்டி" என்றார். வேறுவேறு வடிவாகிய இவை இன்னவாகவுந் தோற்றம்பெற்றன என்க.

யாறு பல் நிலத்து அகம் துரீஇ கொ(ண்)டு வந்து மறைத்த துளை படு மரன் சிதை கலன் முதல் ஆகிய பொருளையும் = யாறானது (மலையிலிருந்து கடலுக்குச்செல்லும் வழியிலே யுள்ள) பலவாகிய நிலங்களின் அகனிடமெல்லாந் தேடிக் கைக்கொண்டுவந்து (கடலையடைந்து அதனுண்) மறைத்துவைத்த துளைபட்ட மரங்கள், (சிதைந்த மரன்முதலியவற்றாற் செய்யப் பட்டுச்) சிதைவுற்ற கலங்கள் என்னும் இவற்றை முதலாகக்கொண்ட பொருள்களையும்;

மேடுபள்ளங்களாக நிலனைச்செய்யும் இயல்புதோன்ற "அகந்துரீஇ" என்றார். உவரானும், நீர்வாழ் உயிர்களானும், அலையானும், அன்னபிறவற்றானும் துளையுண்ணப்பட்டமை தோன்றத் "துளைப்படு மரன்" என்றார். கலங்களுக்குத் துளையீட்டின் குறைவும், வேறானும நிறைவும் தோன்றற்பொருட்டுச் "சிதை கலன்" என வேறடை கொடுக்கப்பட்டது. எந்நிறங் கொண்டனவோ அந்நிறத்த வட்டக்கற்களாகத் தோற்றம் பெறுமென்க.

பசும் புறம் இப்பியும் = பச்சென்ற புறத்தோற்றத்தையுடைய சிப்பியும்;

பை தாமரையின் முகை என புறத்து தோற்றம் காட்டி வலம் இடம் ஆக வளைஇ வரை உற்று திரிந்து அகம் குழிந்து திகழ் பல நிறன் எ(ல்)லாம் விழுங்கிய பளிங்கு என விளங்கு தோற்றத்து = பசிய தாமரையின் அரும்பென்று கூறுமாறு (வெளிப்பக்கத்திலே தோன்றப் பெறும்) தோற்றப்பொலிவினைக் காண்பித்து வலப்பக்கமாகவேனும், இடப்பக்கமாகவேனும் வளைந்து கோடுகொண்ட வரம்புடையதாகி அந்நிலையிலே வேறுபட்டு உட்குழிந்து விளங்குகின்ற பலவாகிய நிறங்களெல்லாவற்றையும் உட்கொண்டு விளங்கும் பளிங்கென்று கூறுமாறு விளக்கம் பெறுகின்ற தோற்றப்பொலிவினையுடைய;

இல் முதுகு இயைந்து நான்று இயங்கும் வளையும் = வீடானது முதுகின்மேலே பொருந்தி ஒலித்துக்கொண்டு நடமாடுகின்ற சங்கும்;

ஒத்த பிறவும் = இவற்றையொத்த மற்றவைகளும்;

உயிர்த்த பல் முத்தும் = ஈன்ற பலவாகிய முத்துக்களும்;

கொத்து பவழமும் கோலம் குரூஉ மணியும் = கொத்துக் கொத்தாகப் பொருந்திய பவழங்களும், அழகிய நிறத்தைத்தவிர்கின்ற அரதனங்களும்;

இன்ன தம்மையும் = ஆகிய இத்தகைய பொருள்களையும்;

[சிறுக வசைஇக்-குறுக வுயிர்த்துப் படுபுதுயில பயிலு-நீலத்திரை விரித்துக்கோலக்கண் கவருங்-கடலினைக் கொண்டல கடுகி யெற்றற்கு] கோலம் கண் கவரும் நீலம் திரை விரித்து சிறுக அசைஇ குறுக உயிர்த்து படுபு துயில் பயிலும் கடலினை கொண்டல் கடுகி எற்றற்கு = அழகிய கண்ணைக்கவரும் நீலநிறம்வாய்ந்த படுக்கையை விரித்துச் சிறிதாக அசைவுற்றுக் குறுமையாக மூச்சுவிட்டுப் படுத்து நித்திரைபுரிந்துவரும் கடலினைக் கீழ்காற்றானது விரைந்து வந்து துயிலெடுத்தற்கு;

அகம் பொறாது உவர்ப்பு உறீஇ ஓ என்று அரற்றி = மனஞ்சகிக்காமல் வெறுப்புக் கொண்டு ஓவென்று ஒலியுண்டாகும்வண்ணம் ஆரவாரமிட்டு;

மலை என எழீஇ மழை என கருகி = மலையெழுந்தாற்போல மிக்குயர்ந்தெழுந்து மேகம் கறுத்ததுபோலக் கரிய தன்மையை யடைந்து;

கருகுதல்—சினத்தையுங் குறிக்கும்.

கருகு மை இடை பெய் வெண் பொடி குழம்பின் முரிந்து கீழ் வீழ்ந்து நுரைத்து அழி ஓலை = கரிய நிறத்தையுடைய மையினது ஊற்றின் இடையிடையே ஊற்றிய வெண்ணிறப் பொடியைப் போன்று முரிந்து கீழேவிழுந்து அவவீழ்ந்தமையால் நுரைப்புற்று அழியுந்தன்மை வாய்ந்த ஓலையானது;

கல் அடித்தாங்கு கரை கொ(ண்)டு சேர்க்கும் முன் = கல்லால் எறிந்தாலொப்பக் கரையிற் கொண்டுசேர்ப்பதற்கு முன்னரே;

குலன் என ஈர் அலை குதித்து தாஅய் பாஅய்ந்து எற்றி கரை கரையாது எக்கர் செய்து இலங்கும் = அதனின் மரபென்னுமாறு இரண்டலைகள் துள்ளித் தாண்டிப் பாய்ந்துசென்று அடித்துத் தீரம் கரையாதிருக்கும்வண்ணம் (அதிலிருந்துவரும் மணல்களை) மேடுசெய்து விளங்காநிற்கும்;

எக்கர்—மேலுக்கு ஏறப்பண்ணல். நிலப்பகுதியை மீக்குயர்த்திவிடுமோ என்றுகருதிய இரண்டலைகள் கரைகரையாது அமையும்வண்ணம் எக்கர் கோலியவென்க.

கொண்டற்காற்றானது துயில்பயிலுங்கடலைத் துயிலெழுப்பியது. எழுப்பியதற்கு மனம் பொறாதகடல் உவாப்புற்றுக் குமைத்து நீர்ப்பொருளையும், முத்து முதலியவற்றையும் கரையிடத்து எறிவதுபோன்று ஓலைகொண்டுசெல்லும் முன்னரே இரண்டலைகள் தோன்றிக் கரை கரையாது எக்கர்செய்து விளங்கும் என்க.

நாப்பண் வகிர்ந்த இருப்பை நல் வித்தின் மூக்கு உடை காக்கை = நடுவிலே (பங்குசெய்தாற்போலப்) பிளவுபட்ட இருப்பையின் நல்ல விதையையொத்த மூக்குடைய காக்கையானது;

கரை அருகு நின்று மீன் கொத்து வேட்டு மெல் என நோக்குழீஇ = கடலினது கரைப் பாங்கரில் நின்றுகொண்டு மீனைக்கொத்துதலிலே ஆசைகொண்டு மெல்லென்று நோக்கும் போது;

"கொத்து" என்று உணவும் கூறப்படுமாதலின், மீன் கொத்து வேட்டு என்பதற்கு மீனாகிய உணவை விரும்பி என்றும் பொருள்செய்யலாம்.

அலை மேல் கதுவி அலைதொறும் வருந்தி பின்னர் போந்து முன்னர் புகூஉம் = அலையானது மேலே நெருங்கிப்பற்றி வருத்துமபொழுது வருந்திப் பின்னே தொடர்ந்துசென்று முன்னே புகாநிற்கும்;

பால் போன்றும் படா நிலா போன்றும் விரித்த வெள் துகில் பரப்பு போன்றும் வெள் சுதை ஊற்றிய விளக்கம் போன்றும் மண் நனி பரந்து மலிந்த பரப்பு இடை = பாலைப்போன்றும், படாத நிலவைப்போன்றும், வெள்ளிய புடவை விரிக்கப்பெற்ற பரப்பினைப்போன்றும், வெள்ளிய சுண்ணச்சாந்தை ஊற்றிய தோற்றம்போன்றும் மணலானது மிகப்பரந்து நிறைந்த எக்கரிலே;

செல்லா இடத்து சேர்ந்து இடர்ப்படல் இன் = சேறற்கமையாத இடத்திலே சென்று துன்பப்படுவது போன்று;

கலன் சென்று புதைந்து கலிப்பு அற்று அமையும் = மரக்கலங்கள் (நீர்நிறைந்த) காலத்திலே) புகுந்து (நீர்வற்றிய காலத்திலே மண்ணுட்) புதைந்து ஒலியற்று அமைதியாயிருக்கும்;

மூன்று முதல் இணைத்த உவர் உறு கூர் முனை பரா அடி மரத்து மிசை ஊர்ந்து = மூன்றுமுதற் பலவாகத் தொடுக்கப்பெற்ற உவருண்டழிக்காத வன்மையும், கூரிய நுனியும், பருத்த அடியுமுடைய கட்டுமரங்களின்மேலே ஊர்தலுற்று;

தாம்பினாற் கட்டப்படுதலிற் கட்டுமரம் என்றும், நீரிலே மிதந்துசெல்லும் இயல்பினான் மிதவை என்றும் தெப்பத்தை வழங்குவர். இதன் முனையைக் கூரியதாக அமைத்தல் நீர்கிழித்துச் சேறற்கு இலகுவாகும்பொருட்டு.

நுனி ஆழி கொள் கண்டல் கழி இரேஉ கடல் நீர் தள்ளி = நுனியிலே வட்டமாகச்செய்த மரப்பலகைவாய்ந்த கண்டற்கோலை இட்டுக் கடனீரை(த்) (ப்பள்ளமாகும்வண்ணந்) தள்ளி;

நுனியில் ஆழிகொண்ட கண்டல் என்றமையால் அக்கழியின் அடிப்பாகத்தைக் கையாற் பற்றிக்கொண்டு ஆழிகொள் நுனியைக் கடலிலிட்டு நீரைத்தள்ளி என்பது கொள்ளப் படும். இக்கழிக்கோலைச் சவள் என்று வழங்குவர்.

கண்டல் ஒருவகைமரம். கழிநுனி ஆழியின் அகற்சிக்குத் தக்காங்கு நீர் செய்யுந்தடையும், அத்தடையின் வன்மைக்குத் தக்காங்கு மிதவையின் ஓட்டமும் நிகழப்பெறுமென்க.

பள்ளம் செய்து பின் வெள்ளம் பாய நினைத்தாங்கு ஏகும் நெஞ்சம் கல்லினர் = (கோலையிட்டுத் தள்ளுவதினாலும், கூர்முனையின் கிழிப்பினாலும்) பள்ளமுண்டாகச் செய்து பின்னர் (அப்பள்ளம் உண்டாகிய இடங்களிலே மேடுற்ற மருங்கிலுள்ள) வெள்ளம்வந்து பாயும்வண்ணம் நினைத்தவிடத்திற்குச் செல்லும் ஆற்றல்வாய்ந்த நெஞ்சமாகிய கல்லினையுடையவரும;

கடலிலே இரவிலுஞ்செல்லுந் திண்மையும், உயிர்க்கொலைக்கஞ்சி நடுங்காத வன்மையும் படைத்தது அவர்நெஞ்சம் என்பதுதோன்ற "நெஞ்சக்கல்" என்றார்.

உருண்ட நோக்கினர் = (கூர்த்துக் கூர்ந்துப் பார்த்துவரும் இயற்கையின் மிகுதிப் பாட்டினாலே) திரட்சியுற்ற கண்களையுடையவரும்;

வளைந்த கடற்பாங்கைப் பார்த்துவருதலின் அங்ஙனமாயிற்று என்றுமாம்.

இருண்ட மேனியர் = இருள்போலும் கறுத்த தேகத்தையுடையவரும்;

அவர் எண்ணத்திலே இரவும், கடலும் அகலாதனவாய் இருந்துவருதலின் அத்திணையார்க்கு அவ்வியல்பு எய்திற்று என்றுமாம்.

உப்பு பொரிந்து இடை இலக்குறூஉம் முதுகினர் = (கடலலையின் நீர்த்தூவல், காற்றடித்தல் முதலியவற்றானே பொருந்திய) உப்பானது பொரிதலுற்று இடையிடையே விளக்கம்பெறும் முதுகினையுடையவரும்;

கறுப்பின இடையிடையே வெளுப்புற்றது ஆதலின் அஃது இலகிற்றென்க.

காழ்த்து வரி மழுங்கி தோல் பொரி உரிவை கையினர = (பலவகைப் பணிகளுஞ் செய்து வருதலினாலே) வயிரங்கொண்டு இரேகைகளின் தோற்றப்பொலிவு குன்றித் தோலுரிந்த உரிவு வாய்ந்த கையினையுடையவரும்;

கயிறு முடி வலையினர் = கயிற்றைக்கொண்டு முடிக்கும் வலையினையுடையவரும்;

நீர் இடை எல்லை கண்டு ஆங்கு ஆங்கு இடு பெயர் மரபினர் = நீரப்பரப்புக்குள்ளே எல்லைகண்டு கண்ட அவ்வவ்விடங்களுக்கு ஒவ்வொருபெயராக இட்டுக்கொள்ளும் மரபினையுடையவரும்;

"படைத்துக்கோட் பெயரிடுவாள்" என்றார் அடிகளும்.

பல் மீன் வேட்டம் பயன் சால் வளத்தினர் = பலவகையாகிய மீன்களையும் வேட்டையாடும் பயனிறைந்த வளப்பம்பொருந்தியவரும்;

[பேய்வாய்க் கொள்ளியிற் றிமில்பிறங்கு விளக்கினர்] திமில் கொள்ளிவாய்ப்பேய் இல் பிறங்கு விளக்கினர் = படகின்கண்ணே கொள்ளிவாய்ப்பேயைப் போலும் (விட்டுவிட்டிலங்கி) உலவுகின்ற பிரகாசத்தைப் பொருந்திய விளக்கினையுடையவரும்;

கொள்ளிவாய்ப்பேயின் வெளிச்சம் விட்டுவிட்டுத் தோன்றுவது. இவர்களின் கட்டுமரம் அலைக்கலை எழுந்துந் தாழ்ந்துஞ் செல்வதால் அதன்கண்ணுள்ள விளக்கின் பிரகாசமும் முறையே தோன்றியும், மறைந்தும் வருமென்க,

நெருப்புக்காலும் ஆவியைக் கொள்ளிவாய்ப்பேய் (பிசாசும்) என்று வழங்குப. இஃது இரவிலே கடலைகளிலும், கடற்கரை, உப்புநீராற்றங்கரை முதலியவிடங்களிலும் தோற்றப்படும். "கொள்ளிவாய்ப் பேய்காக்குங் கோபுரமு நெடுமதிலும்-வெள்ளியாற் சமைத்ததுபோல் வெண்

னெலும்பி னுற்சமைத்தே", "கொல்வா யோரி முழவாகக் கொள்ளி வாய்ப்பேய் குழலிக்கு– நல்வாய்ச் செய்ய தசைதேடி நரிவாய்த் தசையைப் பறிக்குமால்" என்பன கலிங்கத்துப்பரணி. கொள்ளிவாய்ப்பேய் என்பதொரு பிசாசம் மெய்யாகவே இல்லையென்றும், காணப்படுவது நெடுங்காலமாக மண்ணிற்கிடந்து உக்கிய எலும்பினது துகட்டொகுதி காற்றுமுதலியவற்றாலே தாக்கப்படும்பொழுது பிறந்தெழும் ஒருவகை வெளிச்சம் (Phosphorus) என்றும் இக்காலத்தினர் பலர் கூறுவர். இவர் கூற்றிலே சிறிதுண்மைப்பகுதி இருப்பினும் கொள்ளிவாய்ப் பேயின் உண்மைக்கும் பல ஆதாரங்கள் உண்டெனப் பிறபலர் கூறுவர். விரிக்கிற் பெருகும்.

இரவு கடல் வாழ்க்கையர் = இரவு முழுவதையும் கடலிலே செலவிடும் வாழ்க்கையை யுடையவரும்;

அலையுடன் எழுந்து விழு புணையினர் = மேலெழும்பும் அலையுடனே தானும் மேலெழும் பிப் பின்னர்க் கீழேவிழும் அவ்வலையுடனே தானுங்கீழேவிழுந் திமிலினையுடையவரும்;

[பெண்ணை சுற்றிய வடியிடைத்–தாழை படுத்துத் தலைவிரித்து மலர] சுற்றிய பெண்ணை அடி இடை தாழை படுத்து தலை விரித்து மலர = புறமருங்கெல்லாம் பனைமரங்கள் சூழ்ந்துவளர்ந்த அடியிடங்களிலெல்லாம் தாழையானது படுத்திருப்பதுபோன்று பரவிப்பதிந்து தலையை விரித்துக் கொண்டுமலரவும்;

"பெண்ணை சுற்றிய" என்பது "சுற்றிய பெண்ணை" என மாற்றப்பட்டது. சூழ்ந்த பனைகளின் அடிப்பாகம் வெளிகாட்டாதபடி தாழை படுத்துத் தலைவிரித்து மலர்ந்ததென்க.

உள் அகம் புறன் எ(ல்)லாம் முடம் கால் புன்னை கவிந்து குடை நிழற்ற களி வண்டு ஈட்டமும் மா மலர் நாற்றமும் பல் மீன் முடையும் நாறி கவின் பரப்பும் நலம் சால் இருக்கையர் = அவ்வேலிக்கு உள்ளும், வீட்டின் புறத்துமாகிய அவ்விடையெல்லாம் வளைந்த அடியையுடைய புன்னையானது கவிந்து குடைபோல நிழலைச்செய்ய (அச்செய்தலினுனே கள்ளுண்டு) களிப்புக் கொள்ளும் வண்டுகளின் கூட்டமும், அழகிய பூக்களின் வாசனையும், பலவகையான மீன்களின் புலானாற்றமும் பரிமளித்து அழகினைப்பரப்பும் நன்மைமிக்க இருக்கைகளையுடையவரும்;

கடல் காப்பு கடவுள் அடி காப்பு அகத்தினர் = கடலைக் காத்துவருந் தெய்வதமாகிய வருண பகவானின் சரணமாகிய பாதுகாப்பையுடைய நெஞ்சத்தினரும்;

கடலின்கண்ணே அபாயங்கள் நேரிடாதிருக்கவும், வலைவளஞ்சிறக்கவும் வேண்டி அத்தெய்வத்தை எப்பொழுதும் யாண்டும் பரவிப் போற்றிவருபவர் என்க.

"நுளையர் வலைவளந்தப்பின் அவர்மகளிர் கிளையுடன்குழுமிச் சுறவுக்கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படும் என்றார்" என ஆசிரியர் நச்சினார்க்கினியரும், "சினைச்சுறவின் கோடுநட்டு–மனைச்சேர்த்திய வல்லணங்கினான்" என உருத்திரங்கண்ணனாரும் கூறியன ஈண்டு ஆராயற்பாலன.

உப்பு ஒடு மீன் கொண்டு ஊர் தொறும் திரீஇ நொடித்து பிற பொருள் நுகரும் இயற்கையர் = உப்புடனே மீனையும் எடுத்துக்கொண்டு ஊர்மனைதோறும் சென்றுவிற்று (அவ்விற்ற பணங்கொண்டு வாங்கிய) பிறபொருள்களை அனுபவித்துவரும் இயல்பினையுடையவராகிய பரத மக்களின்;

"மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர்–பாசவர் வாசவர் பன்னிண விலைஞரோ– டோசுநர் செறிந்த வூன்மலி யிருக்கையும்" என்பது சிலப்பதிகாரம்.

குடி இருப்பு உடைய மிடி இருப்பு அறியா நெய்தல் சான்ற நெய்தல் தண் புலம் அது = வசித்தலையுடைய வறுமையிருத்தல் அறியாத நெய்தலாகிய இரங்கற்பொருள் நிறைந்த நெய்தலென்னுந் திணையாகிய தண்ணிய புலமாகிய அவ்விடம்;

"கருங்காற் குறிஞ்சி" என்னும் ஒன்றனையும், அன்னபிறவற்றையும் தூக்கிச் சுமந்து கொண்டு இங்ஙனம் வருபவையெல்லாம் பூக்களே என்றும் பிறவாறும் கூறப்புகின் ஆண்டுக் கிடைத்தற்குரியவெல்லாம் வெறும்பாழாகி விடுமென்க.

புன்னை குடை தரூஉம் புள்ளி நிழல் அசைஇ = புன்னையாகிய குடைதருகின்ற புள்ளியையுடைய நிழலிலே தங்கி;

அசைதல்—இருத்தல்.

சினை கயிறு தொடுத்த நடு உடை நீள் கோல் = அப்புன்னையின் கொம்பரிலே தொடுத்த கயிறுபொருந்திய நடுவினையுடைய நீண்ட கோலாலே;

புலவு நாறி உணங்கும் விழி மீன் கொள்வான் கரந்து வரு புள் எ(ல்)லாம் விரைந்து அலைத்து ஓட்டியும் = புலவுநாற்றம் வீசிக்கொண்டு காய்ந்துவரும் விழித்திருக்கின்ற மீன்களை எடுக்கும்பொருட்டு மறைவாக வருகின்ற பறவைகளெல்லாவற்றையும் விரைவாக வருத்தி ஓட்டியும்;

இறந்தபின்னரும் விழித்திருக்கும் இயல்புதோன்ற "விழிமீன்" என்றும், நேரே வருதற்கு அஞ்சி வாராதனபோன்று திடீர் என்று மீனைக் கவர்ந்துகொண்டுசெல்லும் புள்ளின் இயல்பு தோன்றக "கரந்துவரு புள்" என்றும், ஆங்குவராது எஞ்சியிருப்பனவற்றையும், ஓட்டாவிடிற் பின்னும்பின்னும் வந்துகொண்டிருக்கும் ஆதலின் அவற்றையும் ஓட்டுதல்வேண்டும் என்பது தோன்ற "எல்லாம்" என்றும், ஓட்டுதற்குட் கவர்ந்துசெல்லக்கூடும் ஆதலின் விரைதல்வேண்டும் என்பதுதோன்ற "விரைந்து" என்றும், பின்னும் வாராதபடி அச்சுறுத்தல் வேண்டுமாதலின் "அலைந்து" என்றும் கூறினர்.

பாவை வனைந்து பல் ஆட்டு அயர்ந்தும் = பாவைகளைப் புனைந்து அவைகளைக்கொண்டு பலவகையாகிய ஆடல்களைப் புரிந்தும்;

வளை முதல் ஆகிய வகை இனம் கொண்டு பெயரும் வடிவும் பிறங்குற மணல் மேல் இணைத்து மகிழ்ந்தும் = சங்குமுதலாகிய வகைப்பட்ட இனங்களைக்கொண்டு பெயரும், உருவங்களும் விளங்குமாறு மண்ணின்மேற்பொருத்தி மகிழ்வடைந்தும்;

மணல்மேற் சங்குமுதலியவற்றைப் பலவுருவங்கள் அமையும்படி பதித்து அவ்வவற்றின் கீழ்ப் பெயரையும் இணைத்தனர் என்க.

வண்டல் இழைத்தும் = (மகளிர்விளையாட்டில் ஒன்றாகிய) வண்டல் ஆடியும்;

கைதையும் புன்னையும் செருந்தியும் நீலமும் கவின சூடியும் களித்தும் நீர் ஆடியும் = தாழை, புன்னை, செருந்தி, நீலம் என்பவற்றின் மலர்களைப்பறித்து அவையழகுறச் சூடிக்கொண்டும், கள்ளுண்டு களிப்படைந்தும், நீராடியும்;

பாடியும் ஊடியும் பசந்தும் கூடியும் = (வரிப்பாட்டு முதலியவற்றைப்) பாடியும், (அப்பாட்டின் குறிப்புணராமை காரணமாக) ஊடியும், (அவ்வூடல் காரணமாகப்) பசலையாகியும், (அப்பசலை தீருமாறு) கூடியும்;

இன்னணம் ஆய இன்பு எ(ல்)லாம் துய்க்கும் நன்னர் ஆர்ந்த நலம் சால் இயல்பிற்று = இவ்வகையாகிய இன்பங்கள் எல்லாவற்றையும் (காதலரைப் பிரியாதார்) நுகர்ந்துவரும் நன்மை நிறைந்த வளப்பஞ்சான்ற இயல்பினையுடைத்து;

அவயின் = (இவ் வியல்பினையுடைய) அந்த நெய்தற்புலத்திலே;

மாலை வந்தன்று மாலை வந்தன்று = (காதலர்ப்பிரிந்தாரை வாட்டும்) மாலைக்காலம் வந்தது;

இதுமுதலாக வருவனவெல்லாம் தலைமகனைப்பிரிந்து மனம்பொறாது அலமரும் தலைமகளின் காமமிக்க கழிபடர்கிளவிகளென்க.

மருவுநர் இனிப்பு உற மருவலர் துனிப்பு உற மயக்கி வாட்டும் மாலை வந்தன்று = காதலரைக் கூடிவாழ்பவர் மகிழ்ச்சியடையவும், கூடாமற்றனித்தவர் வெறுப்புடையவும் மயக்கத்தைக் கொடுத்துவருத்துகின்றதுமாகிய மாலைப்பொழுது வந்துவிட்டது;

கலம் கரை விளக்கம் ஒளி கை நீட்டி நிமிர்ந்து மேல் நின்று நெஞ்சம் குன்ழீஇ=கப்பல்களை அழைக்கும் கடற்கரைவிளக்கு, தனது ஒளியாகிய கரத்தைநீட்டி நேராகி மேலேநின்று கொண்டு உள்ளங்குளழ்ந்து;

கலம் கரை விளக்கம்—கப்பல்களை (க்கரைக்கு) அழைக்கும் விளக்கு. கரைதல்—அழைத்தல். தற்காலம் "Light house" என்று வழங்கப்படுவதும் இதுவே. கப்பல்கள் நடுக்கடலிற் சென்று திரியுங்காலத்தே, திசைதடுமாறாது கரைசேர்தற்கு அநுகூலமாகக் காவிரிப்பூம் பட்டினத்திற் கலங்கரை விளக்கம் அமைக்கப்பட்டிருந்தது என்பது சிலப்பதிகாரத்துக் கடலாடு காதையிற் காணலாம். இஃதன்றிப் பண்டைத் தமிழ்மக்கள் கப்பல்செய் தொழிலினும் வல்லுநரா யிருந்தனா என்பது "கலஞ்செய் கம்மியர்", "கலம்புணர் மாக்கள்" எனவரும் மணிமேகலைத் தொடர்களாலும், தொகைநூல்களாலும் உணரப்படும்.

கடல் இடை பட்டு கரை காண்கிலவாய் உடன்று வருந்தி ஓடு பல கலங்களை=கடன் மத்தியில் அகப்பட்டுக் கரையிருக்குந் திசைதெரியாமல் (அத்தெரியாமை காரணமாக வருதலுற்ற) சினங்கொண்டு (அக்கொள்கையாற் பயன்காணாது) வருந்துதலுற்று ஓடுகின்ற பலவாகிய மரக்கலங்களை;

கலங்களில் இருந்தவர் படும்பாடுகள் கலங்கள்மேலேற்றிக் கூறப்பட்டன.

ஈங்கு வருக என்ன இருந்து எழுந்து அழைத்தன்று=(துறையிருக்கும் இடமாகிய) இங்கே வருகவென்று இருக்கையிலமைந்தும், எழுந்தும் அழைத்தது;

[ஏடு மடல்வழிப் பாளைவழிப் பிழியும்] மடல் வழி ஏடும் பாளை வழி பிழியும்=ஓலைமடல் வழியாக ஏட்டினையும், பாளை வழியாகக் கள்ளினையும்;

கற்றவர் ஓடு கற்பிலர் தமக்கும்=படித்தவரோடு படிப்பில்லாதவர் தங்களுக்கும்;

[எல்லாா தமக்கு நுங்கின் சேறும்—பழத்தின் கனியுஞ் சுடுசுவைக் கிழங்கு—முரைப்பரும் பொருள்கொள வுடல முழுவதூஉங்—கைம்மாறு வேண்டாது களிப்புறீஇ நல்கும்—பெண்ணை] நுங்கின் சேறும் பழத்தின் கனியும் சுடு சுவை கிழங்கும் உரைப்ப அரும் பொருள் கொ(ள்)ள உடலம் முழுவதூஉம் கைம்மாறு வேண்டாது எல்லார் தமக்கும் களிப்பு உறீஇ நல்கும் பெண்ணை = நுங்கினது (இளங்காயின்) கண்ணுகிய தித்திப்பையும், பழத்தினது தித்திப்பையும், சுடுதலாற் சுவைதருகின்ற கிழங்கையும், சொலலுதற்கருமையாகிய பொருள்கள் பலவற்றையும் பெறுமாறு தனது உடன்முழுவதையும் பிரதிபலன் கருதாமல் எல்லார்தமக்கும் மகிழ்ச்சி கொண்டு கொடுத்தவரும் பனையினது;

சேறு-தித்திப்பு.

மடல் துனியொடு பெரிது ஒன்று படூஉ உள்ளீடு இலாது தோல் உரிந்து போந்த பீரத்து நெற்றின் நார் தொடை குடம்பையுள்=மடலினது நுனியுடன் மிகவும் ஒற்றுமை யடைந்து நடுவில் ஒன்றுமிலாது புறத்தமைந்த தோலுரிந்துபோன பீரகினுடைய நெற்றின் நாரதொடையைப் போன்ற கூண்டகததிலே;

[குரீஇ யூசல் கொண்டலொ டாடுந] குரீஇ கொண்டலொடு ஊசல் ஆடுந=சிறுபறவைகள கீழ்காற்றோடு ஊசல் ஆடுகின்றன;

புள் எ(ல்)லாம் பார்ப்புக்கு இரை கொ(ண்)டு கூண்டு உள் புக்கன=பறவைகளெல்லாம் தங்கள் குஞ்சுகளுக்கு உணவுகொண்டு தந்தம் கூட்டினகத்துட் புகுந்தன;

பல் மலர் உகுத்து மணம கமழ்ந்தன=பலவாகிய பூக்களும் உதிர்ந்து வாசனையைப் பரப்பின;

நடு வழி இடை ஒரீஇ கரந்து மறைவோரின் = (துணைச்செல்லும் பாதையின்) நடுவிடத்திலே கைவிட்டு நீங்கி வஞ்சகமாக மறைந்து போவாரைப்போன்று;

'நடுவழி' என்பது வழிநடு என் மாற்றப்பட்டது.

ஞாயிறும் பல் கதிர் மெல் என சுருக்கி குட கடல் இடை போய் குதித்து ஒளித்தன்று = கதிரவனும் தனது பலவாகிய கிரணங்களை மெல்லெனச் சுருக்கிக்கொண்டு மேற்குச் சமுத்திர நடுவிற் பாய்ந்து ஒளித்துக்கொண்டனன்;

சூரியன் அஸ்தமித்தனன் என்க.

வெள்ளிய மழையும் விளங்கு வானமும் மாலை இடை மயங்கி சிவந்த = வெண்மைநிறம் வாய்ந்த மேகமும், விளக்கமுற்ற வானமும் மாலைப்பொழுதோடு கூடிச் செந்நிறமடைந்தன;

மூனிந்த வென்றுமாம்.

வள் உடு பல் நெருப்பு நகை காட்டி உருக்கி அழிக்குந = வளப்பம்வாய்ந்த விண்மீன்களாகிய பற்களின்வழியாக நெருப்பொத்த சிரிப்பைக்காட்டி உருக்கி அழிக்கின்றன;

நெருப்பையும், நகைப்பையும் என்றுமாம்.

தெற்றி சுவர் புரையில் புன்னை நெய் விடேஉ ஏற்றிய விளக்கு எ(ல்)லாம் மாலை ஒடு இலகிய = திண்ணைச்சுவரில் அமைந்த புழையின்கண்ணே புன்னைநெய் பெய்து ஒளியேற்றிய விளக்குகளெல்லாம் மாலையுடனே விளங்குகின்றன;

இருள் திரண்டு ஒரு வடிவு எடுத்து ஆர்த்து இம் என அச்சுறுத்தியாங்கு அமை ஆழி அலை எற்றி நெஞ்சம் திடுக்கிட நெருங்கி சீறின்று = இருளானது திரட்சியுற்று ஒருவடிவத்தையெடுத்து ஆரவாரஞ்செய்து "இம்" என்று பயமுறுத்தினாற்போன்று அமைந்தடங்கிய சமுத்திரமானது அலையையெறிந்து நெஞ்சம் நடுக்கமுற நெருங்கிவந்து சீறுதலைச்செய்தது;

சான்றோர் இடை சார்பு உறீஇய போழ்து ஆண்டு ஆன்ற பொருளின் அமைதி தெளிந்தாங்கு ஞாயிறொடு கலந்த ஞாலம் = (குணஞ்செய்கைகளிலே நிறைவுபெற்ற) பெரியோரிடத்திற் சார்தலைப்பொருந்திய காலத்தில் (அப்பொருந்துவார்தமக்கு) அங்கே அமைந்துள்ள பொருள்களின் இலக்கணம் தெரியவந்தாற்போன்று கதிரவனோடு பொருந்தி (இடம் பொருள்களின் அமைதியையறிந்து) நலன்பெற்ற இந்த நிலமானது;

பிரிந்து பொருளின் நிலைமையும் பொருந்திய பண்பும் மருண்டு காணு ஆகி = (அஞ்ஞாயிற்றைப்) பிரிந்து (அப்பிரிவினாலே) பொருள்களின் நிலைமையையும், அவற்றிற்பொருந்திய குணத்தையும் (விழிக்குப் புலப்படாமையான்) மருட்சியுற்று அறியமாட்டாததாகி;

நல்லன களைஇ புல்லிய கதுவி மயங்கின்று = நல்லனவற்றையெல்லாம் புறம்பே தள்ளிவிட்டு அற்பமானவற்றையெல்லாம் கைக்கொண்டு மயக்கமுற்றது;

"சிறிய ராயினார் சார்பினை விழையன்மின் திறல்கெழு பெரியோரா—மறிஞ ராயினார் சார்பினை விழைமினோ * * " என்பது காஞ்சிப்புராணம், "ஒண்கதிர் வாண்மதியஞ் சேர்தலா லோங்கிய—வங்கண் விசும்பின் முயலுந் தொழுப்படூஉங்—குன்றிய சீர்மைய ராயினுஞ் சீர்பெறுவர்—குன்றன்னார் கேண்மை கொளின்" என்பது நாலடியார்,

கற்பு உடை குயிற்கு வழி இடை கண்டான் நல் துணை காட்டி வேறு வழி ஏற்றாங்கு = கற்பமைந்த குயில்போலும் இனிய சொல்லையுடைய ஒருத்தியை (அவள் தனித்துச்சேறும்) வழியிடையிற் கண்ட ஒருவன் (அவளுக்குத்தன்னை) நற்றுணைபோலக் காட்டிச் செல்லும் பொழுது பிறிதொருவழியை மேற்கொண்டாற் போல;

அவ் வழிதான் அவண்மேற் காதல்கொண்ட தன்னெறி என்க.

ஞாயிறு கரந்து திங்கள் வடிவு எடுத்து = (தனது மறையுமியலை உள்ளே மறைத்துவைத்து நலன்செய்து வருதல்போலப் புறத்தே இதுகாறுங் காட்டிவந்த) ஞாயிறானது (இயற்கை மேற்கொண்டாங்குத் திங்களின் வடிவத்தை எடுத்துக்கொண்டு;

திங்களே பகலில் ஞாயிறாகத்தோன்றிப் பின்னா இரவிலே திங்களாயிற்றென்க.

கலத்து அடி கொண்ட கனல் மெல் என்ன அகத்து நீர் உள் புகூஉ அழற்றல் செய்தாங்கு வஞ்சம் புரிவான் வெளிப்பட்டு வந்தன்று = கலத்தின் அடிப்பாகத்திலே பொருந்திய

ஒருப்பானது மெல்லென்று உள்ளேயமைந்திருந்த தண்ணியநீரையும் கனலைவைத்தாற்போன்று வஞ்சகச்செயலை விரும்பிச் செய்தற்பொருட்டு நேரே வெளித்தோன்றி வந்துவிட்டது;

எளியேன் ஆதலின் எனக்கு இவை வந்தன என=யான் எளிமையுடையேன் ஆதலின் எனக்கு (த்துன்பஞ்செய்யுமாறு கூடி) இவையெல்லாம் வந்தன என்று;

புன்னையும் குருகு பூக்கும் கைதையும் நெய்தலும் அடம்பும் செருந்தியும் மகிழ் கொள் கைதவம் மாக்கள் காட்சியின் மலர்ந்த=புன்னையும், குருகுபோன்று பூக்குந்தாழையும், நெய்தலும், அடம்பும், செருந்தியும் ஆகிய இவையெல்லாம் மகிழ்ச்சியைக்கொண்டு வஞ்சகமாக்களின் தோற்றத்தைப்போன்று மலர்ந்தன;

மகிழ்–கள்ளுமாம்; எனவே தாப்பிசைப் பொருள்கோளாக அதனைப் புன்னைமுதலிய வற்றுக்கும் மாக்களுக்குங் கொள்க. ஆங்குக் "கொள்" என்றதனை மகிழ்கொள் புன்னை முதலியவும் என்றும், மகிழ்கொள் கைதவமாக்கள் என்றும் இயைத்துப் பொருள்கொள்க.

கைதவம்–சூது, வஞ்சனை.

பகை தெறப்பட்ட வேந்தற்கு முன்னர் இனிய ஆகிய இன்னா ஆகி முரண்ட போன்றும் மழையொடு கூடிய காலை பின்னர் கோடையொடு கூடி எற்று நலிந்தாங்கும் இவையும் நலிகுந=பகைவரால் நெருக்கப்பட்ட மன்னனுக்கு முன்னர் இனியவாக இருந்தவையெல்லாம் இப்போது ஆகாதன (தீயன) வாகி எதிர்த்தனபோன்றும், மழையுடனேகூடி அதற்கு இனிமைசெய்து வந்த காற்றானது பின்னர் (அதற்குப் பகையாகிய) கோடையொடு கூடி அதனையெதிர்த்துத் துன்புறுத்தல்போன்றும் (முன்னர் எனக்கினியனவாகியிருந்த இக்கூறிய) இவைதாமும் இது போது துன்பஞ்செய்து வருகின்றன;

கலன் மிசை சென்றோர் கடல் இடை விழுந்தாங்கு எல்லொடு இருந்தனென் இருள் புகுந்து என்னும் தெருள் காண்கிலாது திகைத்து மயங்கினென்=மாக்கலத்தின்மேலே சென்றவர் கடலகத்தே விழுந்தாற்போன்று கதிரவனொடு இருந்துவந்த யான் இதுபோது இருளிற் புகுந்து சிறிதும் தெளிவுகாணாது திகைப்புற்று மயங்கினேன்;

வருதும் என்ற நாளும் பொய்த்த=(பொருள்வயிற்பிரிந்த காதலர் இன்னவேளை) வருவேமென்று குறிப்பிட்ட நாளும் பொய்த்துவிட்டன;

குறித்தநாள் தோழிமுதலாயினர்தங்களான் இஃதன்று, இஃதன்று, இஃதன்று எனப் பலநாட்களையும் மருட்டிக் கழித்தமை தோன்றப் "பொய்த்த" எனப்பட்டது.

வரு வழி நோக்கிய விழியும் பூத்த=அவர் வருகின்ற வழியைப்பார்த்துக்கொண்டேயிருக்கும் கண்களும் மயங்கிவிட்டன;

வான் தொடு மலை குடைந்தாங்கு அமை இல்லும் எனக்கு சிறிது ஆகி மனம் கலக்கின்று=வானைத்தொடுகின்ற (மிக்குயர்ந்த) மலையைக் குடைந்தாலொத்து அமைந்த வீடும் எனது இருக்கைக்குச் சிறிதாகி என்மனசைக் கலக்கிவிட்டது;

இன்பில் சுருங்கினென் துன்பில் விரிந்தனென்=இன்பத்தை நுகர்தலிற் சுருங்கிவிட்டேன், துன்பத்தை நுகர்தலில் விரிந்துவிட்டேன்;

[பேய்புக் கிருந்த மேனி போன்று–பசலைபுக் குண்டன்று மாமைக் கவினெலாம்] பேய் புக்கு இருந்த மேனி போன்று பசலை புக்கு மாமை கவின் எ(ல்)லாம் உண்டன்று=பேய் குடிகொண்டிருந்த உடம்பானது எங்ஙனங் கெட்டழியுமோ அங்ஙனமே எனது மேனியிலே பசலைநோய் புக்குக் கரியநிறமமைந்த அழகையெல்லாம் உண்டுவிட்டது;

பேயானது பிடித்தவரின் உணவெல்லாவற்றையுந் தானேயுண்டு அவர்மேனியை நலிய வைக்கும்; அங்ஙனமே பசலைநோயும் இவளது மேனியிற்புக்கு அழகினை உண்டழித்ததென்க.

அவரோ கொடியரும் அல்லர்=(குறித்த காலத்தில் வாராமல் எனக்கு இத்துணைத் துன்பத்தைத் தருகின்ற) அத்தலைவர்தாமும் கொடியவரல்லர்;

அவரினும் மிக்க கொடியாரிருத்தலின் அவரின்கொடுமை அவட்குப் புலப்பட்டிலது என்க.

தணவு அறீஇ வாட்டும் திங்களும் கானலும் கொடிய அல = அவர் என்னைப் பிரிந்திருத்தலை அறிந்துகொண்டு என்னை வாடவைக்கும் சந்திரனும், கழிக்கரைக் கானலும் ஆகிய இவை தாமுங் கொடியனவல்ல;

இவற்றினுந் துன்பப்படுத்துவன உளவாதலின் இவற்றின்கொடுமையும் அவட்குப் புலப்பட்டிலதென்க. கானல்- கடற்கரைச் சோலை.

நாட்டு மடவோர் = இந்நாட்டிலே பொருந்தி இருந்தவரும் மடப்பம்வாய்ந்தவரும்;

நம் நோய் அறியார் = கணவரது பிரிவால் நமக்குண்டாகிய நோயினியல்பை அறியமாட்டாதவரும்;

தன்னைப்போலப் பிரிந்திருந்திரங்கும் பிறரையும் அடக்குதற்காக "நம்" என்று பன்மையிற் கூறினள்.

தமக்கு ஒன்று சாற்றி பிறர்க்கு ஒன்று சாற்றுநர் = தங்களுக்கு (ப்பொருந்தியவற்றிற்கு ஏற்றவாறு நல்லது) ஒன்றினை எடுத்துக் கூறிக்கொண்டு (தம்மவரல்லாத) பிறர்தங்களுக்கு (ப்பொருந்துவதொன்று இருப்பினும் அதனைமறைத்துப் பொருந்தாத பிறிது) ஒன்றைக் கூறி (அலர்செய்து) வருகின்றனர்;

மகவு பெறு துயரம் பெற்றவட்கு அன்றி மலடிக்கு உணர்த்துதல் வாய்க்காது = பிள்ளையைப்பெறுகின்ற வேதனை பெற்றவளுக்கேயன்றிப் பெறாத மலடிக்கு (இன்னதன்மைத்தாய் இருக்குமென்று) தெரிவித்தல் சாலாது;

அங்ஙனம் = அதுபோலவே;

பிரி துயர் அறியா பிதற்று பேதையர்க்கு என் உறு துயரம் யாங்கனம் உணர்த்துவல் = காதலரைப் பிரிதலின் உளதாகுந் துயரம் இத்தன்மைத்தென்று அனுபவத்தில் விளங்கிக்கொள்ளாமற் பலப்பலவும் பிதற்றுகின்ற பேதையராகிய அவர்தமக்கு எனக்குப்பொருந்திய துயரத்தை எவ்வண்ணம் உணரச்செய்வேன்;

தாமும் உணர்கிலர் உணர்த்தவும் உணர்கிலர் = (என்னுறு துயரத்தைப்பார்த்துத்) தாமாகவும் அறிந்துகொள்ளமாட்டார், (அன்னராயிருந்தும் யான்) உணர்த்தினும் உணர்ந்துகொள்ளவுமாட்டார்;

காட்சியானும், உரையானும் அறிந்துகோடற்கேற்ற ஆற்றலில்லாதவர் என்க.

அவர்தாம் = (அவ்வறிவாற்றலில்லாத) அம் மகளிர்தாம்;

முல்லை பூண்டிலள் நெய்தல் பூண்டனள் என அலர் தொடுத்து எனை அந்தோ வருத்துநர் = முல்லையொழுக்கமாகிய இருத்தலை விரதமாக மேற்கொண்டாளில்லை நெய்தலொழுக்கமாகிய இரங்கலைத் தனக்கு விரதமாகப் பூண்டுகொண்டனள் என்று அலராகிய அம்புகளையெய்து (எளியளாகிய) என்னை ஐயகோ வருத்துகின்றனர்;

[ஆதலி னவரே யாருயி ருண்ணுங்-கூற்றிற் கொடியரக் கொடியோர் மன்ற] ஆதலின் அ கொடியோர் அவரே ஆர் உயிர் உண்ணும் கூற்றில் கொடியர் = அதுகாரணத்தானே அக்கொடியவர்தாமே அருமையாகிய உயிரை உண்ணுகின்ற கூற்றினும் கொடியராவர்;

கூற்றில் ஆருயிருண்ணுங் கொடியோர் என்றுமாம். மன்ற என்னும் அசை நிச்சயப் பொருட்டு.

அட்டில் உள் புகுமுன் ஆங்கு வந்து எய்தி குறுநகையோய் இன்று அடேஉம் உண்டி திறன் கூறுக என்று வினவும் = அடுக்களைக்குள்ளே யான்புகுந்தும் புகாமுன் அவ்விடத்திற்கு வந்தடைந்து சிறிய புன்சிரிப்புடையவளே இன்றைக்கு நீ சமைக்கப்போகும் உணவின் வகைகளைக் கூறுக என்று வினவிவிட்டு;

பல் மலர் பள்ளியில் பொய் துயில் பயில்குவர் = பலவகை மலர்களால் அமைக்கப்பட்ட படுக்கையில் அமர்ந்து பொய்யுறக்கம் செய்வார்;

படுக்கையிற் செய்வது முற்றுப்பெறாத துயிலாதலிற் "பயில்குவர்" என்றார்.

பல் முறை எழுப்பியும் உணராது இருப்பர் = பலதடவைகள் துயிலெழுப்பியும் (நித்திரையின் மிகுதிகாரணமாக அவ்வெழுப்புதலை) உணராதவர்போன்று வாளாவிருப்பர்;

பொய்த்துயில் பயின்றவராதலின் இங்ஙனம் பொருள்கூறினும்.

இருந்தாங்கு உணர்ந்தனர் போன்று எழீஇ விழி துடைத்து உண்பான் விழைந்து வருகுவர் = உணராதிருந்தாற்போலவே பின்னர் உணர்ந்தாற்போன்று பள்ளிவிட்டெழுந்து கண்ணைத் துடைத்துக்கொண்டு உண்ணும்பொருட்டு விரும்பிவருவர்;

நீண்டு துயின்றுவிட்டேன், அறப் பசித்துவிட்டேன் என்று உணவின்மேல் விழைந்து வந்தார் என்க.

இன்சுவைத்து என உணீஇ = (இன்றையதினம் நீ அமைத்த உணவு) இனிய சுவையுடைத்தாய் இருக்கின்றது என்று சொல்லிக்கொண்டே உண்ணுதலைச்செய்து;

கல கல நகைத்து = கலகலவென்று சிரித்து;

காதல் கழறி உள்ளம் கொள்ளை கொள்குவர் = காதற்பொருள் அமைந்த இனியசொற்களைக் கூறி (என்னை வசப்படுத்தி) நெஞ்சத்தைக் கொள்ளைகொண்டிடுவர்;

சிறாரின் ஆட்டு பல ஆடி அன்பு வளர்த்து இன்பு எ(ல்)லாம் ஊட்டுவர் = (விளையாட்டின்கண்ணே மிகுதியும் விருப்பமுடைய) இளஞ்சிறுவரைப் போல ஆடல் பலவற்றையும் ஆடி (அவ்வாடல் காரணமாக) அன்பினைவளர்த்து (அவ்வளர்த்துவருகாரணமாக) இன்பப்பகுதிகள் எல்லாவற்றையும் என்னை நுகரச் செய்துவருவர்;

நிழலில் ஒருங்கு அமைந்து இருப்பர் = (சென்றவிடமெல்லாங் கூடித் தொடர்ந்துவரும்) நிழலைப்போல் (யான் செல்லுமிடந்தோறும் என்னுடன்) ஒருங்குசேர்ந்து தொடர்வர்;

மரநிழலில் என்னுடன் கூடியிருப்பர் என்றுமாம்.

பூணும் தூசம் தாரும் விரையும் இன் சுவை பண்ணியம் வகையும் = அணியும், ஆடையும், மாலையும், வாசனைத்திரவியங்களும், இனிய சுவைவாய்ந்த பலகாரவகைகளும் ஆகிய இவைதங்களுக்குள்ளே;

[இவையென—வெனது நெஞ்சக் குட்புகுந் தறிந்தாங்குத்—தாமே யுணர்ந்து தருகுவர் வேட்டன] எனது நெஞ்சத்துள் புகுந்து வேட்டன இவை என அறிந்தாங்கு தாமே உணர்ந்து தருகுவர் = எனது மனசினுள்ளே புகுந்து அது விரும்பிவருகின்றவை இவைதாம் என்று அறிந்துகொண்டாற்போன்று உணர்ந்து அவற்றையெல்லாம் தாமாகவே எனக்குத் தந்திடுவர்;

இன்னவர் பிரிந்த ஏழை எனக்கு அந்தோ = இத்தகைய அருமை பெருமை வாய்க்கப்பெற்ற இவர்தமைப் பிரிந்த ஏழையாகிய எனக்கு ஐயகோ;

பிரிதற்கு இடங்கொடுத்தமையானே தன்னை "ஏழை" என்றாள்.

வீடு கொடும் புலி காடு ஆகின்று = (முன்னர் இனிதாகியிருந்த) இல்லமும் இதுபோது கொடிய செயலுள்ள புலிவாழுமிடமாகிய காட்டினை ஒத்ததாதோன்றுகின்றது;

அணி செய் பணி பிணி ஆகின்று = முன்னர் அலங்காரம் செய்துவந்த ஆபரணங்களும் இதுபோது வருத்தஞ்செய்து வருதலாலே துன்பத்தையொத்தது;

பாரமின்றி அழகுசெய்துவந்த நகைகள் இதுபோது பாரித்த கட்டுகள் ஆகிவிட்டன என்றுமாம்.

உணவு உயிர் உ(ண்)ணும் கூற்று ஆகின்று = (முன்னர் உயிரை ஓம்புதற்குக் காரணமாகிய) உணவானது இதுபோது உயிரை உண்ணுகின்ற கூற்றுவனை ஒத்துவிட்டது;

தங்கம் நூல் நுழைஇய தக தக பட்டு உடை காண் தொறும் பொருஅ கண்கள் சிவக்கும் = தங்கத்தால் இழைக்கப்பட்ட மெல்லிய நூலானது நுழைந்தகாரணத்தாலே தகதகவென்று ஒளி வீசும் பட்டாலாகிய உடையை இதுபோது பார்ப்பதற்குத்தரனும் பொருதனவாகிய விழிகள் (கோபங்கொண்டாற்போன்று) சிவக்கின்றன;

உள்ளம் உடைஇ வெள் இடை ஆகின்று = மனசானது உடைபட்டு வெற்றிடமாகப் போய்விட்டது;

மகிழ்ச்சியில் மலர்ந்து விம்மு உறுப்பு எல்லாம் அஞ்சவ போன்று உள் அடைஇ பதுங்கும் = முன்னர் மனக்களிப்புக் காரணமாகச் செழித்துப் பெருத்த அவையவங்களெல்லாம் இதுபோது துன்பங்காரணமாக அஞ்சுவனபோன்று உடம்பினுள் அடைதலுற்று ஒளிந்துக கொள்கின்றன;

ஏஎ யான் என்னும் அறிகிலென் = ஏஎ (முன்னர் எனக்கு நல்லனவாயிருந்த இவை யெல்லாம் இதுபோது அல்லனவாகிய காரணத்தையும், இவ்வேற்றுமையைப் போக்கிக்கொள் ளும் வாயிலையும்) யான் சிறிதும் அறிகிலேன்;

ஏஎ—இரக்கக் குறிப்பு.

பிரிபு ஒன்று உண்டு எனுஅ பிரிபு துயர் இது எனு முன் அறிந்துளனேல் = பிரிவு என்பது ஒன்று உண்டெனவும், அப்பிரிவால் உளதாகும் துயரம் இத்தன்மைத்தெனவும் முன்னரே அறிந்திருப்பேன் எனில்;

பேதையேன் அவர் தாம் ஓர் அடி வைத்தற்கு ஒருப்படுவேன் கொல் = பேதைமையை யுடைய யான் அப்பிரிந்தவர்தாம் (அப் பிரிவு கருதி) ஓர் அடியைத்தானும் தூக்கிவைத்தற்குச சம்மதப்படுவேனோ;

இ துணை இயற்றிய இன் உயிர் கள்வரை கண்முன் கண்டு இவை கழறி கண் நீரில் திரு அடி கழீஇ என் சிறு உயிர் செகுப்பல் = இவ்வளவினவாகிய துயரங்களை (தம்பிரிவு காரணமாக எனக்குப்) புரிந்த இனிய உயிரையொத்த (வருதுமென்ற நாளிலே வாராது பொய்த்துக் கள்ளஞ் செய்த) கள்வராகிய அவர்தம்மைக் கண்முன்கண்டு யானடைந்த இத் துயரங்களையெல்லாம எடுத்துக்கூறி எனது கண்ணீரால் அவரின் செல்வும்பொருந்திய பாதங்களைக் கழுவி எனது சிறிய உயிரைக் களைந்துகொள்வேன்;

பொருளைத் தேடப்போனது கருதித் "திருவடி" என்றும், பலவகைத் துன்பங்கொண்டு குற்றுயிராகியது என்பது தோன்றச் "சிற்றுயிர்" என்றுங் கூறப்பட்டன.

பிரிபு துயர் உணர்த்தாது பெரிது கரந்து உறைந்த தோழியோ என் இன் உயிர் துணைவி = பிரிதலாலே உண்டாகுந்துயரத்தை (இத் தன்மைத்தென்று அறிந்துவைத்தும் எனக்கு) தெரிவிக்காமற் பெரிதும் வஞ்சகமாகமறைத்து வைத்திருந்த இப் பாங்கிதானோ எனது இனிய உயிருக்குத் துணைவியாயிருப்பவள்;

துணைவியாகாள் என்றபடி,

[வாழி யூழியவ் வன்மைசெய் தோளே] அ வன்மை செய்தோள் ஊழி வாழி = (மறைத் தற் றொழிலாகிய) அவ்வலியவைச் செய்தவள் ஊழிகாலம் வரையினும் வாழ்க;

பசிக்கு உதவு இல்லா உணவின் அவர் நலன் பின்னும் முன்னும் பெறுதலின் என் ஆம் = பசியுற்ற வேளையில் உதவிசெய்யாத உணவைப்போல அவருடைய இன்பத்தை (க்காதன்மிக்கு வருந்தும் இத்தருணத்திற் பெறாமல் இதற்குப்) பின்னும், முன்னுமாகப் பெறுவதாற் போந்த பயன்றான் யாதாகும்;

பயன் ஒன்றுமில்லை என்றபடி.

ஈது அறிவில்லா பேதையேன் புல் உயிர் = இவ்வுண்மையை அறிந்துகொள்ளாத எளியவு ளாகிய எனது அற்பப் பிராணனானது;

அவர் தோள் அணைதல் வேட்டு அகல்தலும் செய்யாது = அப்பிரிந்தவர்தம் புயங்களை அணைதற்கு விரும்பி உடலைவிட்டு அகலுதலுஞ் செய்யமாட்டாது;

நெஞ்சும் பின் தொடர்ந்து ஆங்கு நிலை பெறாது வெள்கி என்னையும் மேவாது ஒழிந்தன்று = மனசும் அவரைப் பின்றொடர்ந்துசென்றும் (அவரின் ஆதரிப்புப் பெறாமையானே) அவரிடத்துத் தங்காமலும், (யானுந் தடுத்ததுகேளாமற் சென்றமையால்) வெட்கமுற்று என்பாற்றிரும்பிச் சேராமலும் ஒழிந்துவிட்டது;

அறன் வளர் கொள்கை சுமந்து ஆங்கு அடைந்தோர் திறன் நன்று = அறத்தை வளர்த்து வருங் கொள்கையை வாளா பொறுத்துக்கொண்டு பொருளீட்டுவதற்காக வேற்றுநாடாகிய அவ்விடத்திற்குச் சென்ற எனதுகாதலர்தஞ்செய்கை நல்லதொன்றாக இருந்துவருகின்றது;

அறஞ்செய்தற்குத் தன்மேலன்பு செய்தல்வேண்டும் ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது. "அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை—பண்பும் பயனு மது" என்பது ஆராயற்பாலது.

சேர்பு தெரிகில்லேன் = யான் இங்ஙனம் வருந்திவருகின்ற இச்செயலின் முடிவினை இதுவென அறிந்துகொண்டிலேன்;

எனக்கு துயர் செய்தல் தமக்கு இனிது ஆக்குநர் தம்மை இனி உள்ளேன் ஆதலின் = எனக்குத் துன்பஞ்செய்துவருதலையே தமக்கு இனியதுவாக ஆக்கிக்கொள்ளுகின்றவராகிய எனது காதலர்தம்மை இதுபொழுது முதலாக நினைக்கமாட்டேன் ஆதலின்;

இனியே = இதுபொழுது முதலாகவே;

[கறுப்புறு கடலும் வெளுப்புறீஇக் கண்ணி—றிங்களு மாலையுந் தெளிநீர்க் கொண்டலு—மலையா தொழிக மங்கையெனக் கொண்டில] மங்கை என கொண்டில கறுப்பு உறு கடலும் வெளுப்பு உறீஇ கண் இல் திங்களும் மாலையும் தெளி நீர் கொண்டலும் மலையாது ஒழிக = (எளியேனைப்) பெண் என்று உட்கொண்டிலவாகி (க்கருணையற்று முன்னர்வந்து என்னொடு போர்செய்துவந்த) கரியநிறனுற்ற கடலும், வெளியநிறத்தையுற்ற கண்ணில்லாத சந்திரனும், மாலைக்காலமும், தெளிந்தநீரைத் தூவுகின்ற கொண்டற்காற்றும் என்னைப்பொராது ஒழிந்து போவனவாக;

நிலையா உயிரொடு பொறா நெஞ்சேனை = (உடலகத்து) நிலைபெறுதல் இல்லாத உயிருடனே பொறுக்காத நெஞ்சையுடைய என்னை;

எனக்குத் துன்புசெய்தலைத் தமக்கினிதாக்குநரை இனியுள்ளேன் ஆதலின் மங்கையெனக் கொண்டிலவாகிய கடலை முதலாகவுடையன நெஞ்சேனை வருத்தாதொழிக என முடிக்க.

அவர் மேல் அமைந்த அன்பு மறத்தற்கு சாலுங்கொல்லோ = அத்தலைவர்மேலே எழுமையும் இயல்பாகவே அமைந்துவந்த அன்பினை இதுபோது மறந்துவிடுதற்கும் இயலுமோ;

சார்ந்து உயிர் வளர்க்கும் இன்பினை மறத்தற்கு இயலுங்கொல்லோ = கூடப்பொருந்தி உயிர்வளர்த்தலைப் பெறுவித்துவரும் இன்பத்தினை மறத்தற்குங் கூடுங்கொல்லோ;

இவை மறந்தக்கால் இருமையும் மறத்தல் அமையாதேகொல் = அன்பும், இன்பும் ஆகிய இவைதம்மை மறந்துவிட்டால் இம்மை மறுமையாகிய இவ்விரண்டினையும் மறந்துவிடுதல் அமையாதேகொல்;

அவரை மறப்பின் அன்பை மறத்தல்வேண்டும்; அன்பைமறந்தால் இன்பை மறத்தல் வேண்டும்; இன்பைமறந்தால் இருமையும் மறத்தல்வேண்டும் என்க, எனவே அவரை மறத்தலும் எல்லாநலனையும் இழத்தலும் தம்முள் ஒக்கும் என்க.

ஆ என் செய்கோ = ஆ என்செய்வேன்;

இருவழியினும் ஆறுதலின்மையின் இங்ஙனம் கூறினள் என்க.

அம்ம அவர்தம்மை மறப்பு அறிகில்லேன் = அம்மகோ அத்தலைவர்தம்மை மறத்தலை அறியமாட்டேன்;

எல்லாம் இவையும் துயர் செய மறந்தில=செய்தற்குரிய பொருண்முழுதும் ஆகிய இவைகளும் என்னைத் துன்புசெய்துவருதற்கு மறந்துவிட்டனவல்ல;

ஆதலின்=அது காரணத்தானே;

இவ் எல்லாம் அவரொடு துயரம் செய்க=இவைகள் எல்லாம் அத்தலைவர் தம்முடனே துன்பத்தை எனக்குச் செய்துவருக;

யான்=யானுமென்;

மீன் பொதி உவர் குளன் மேய புனை உடை பூ சிறார் போல் ஆகுவென்=மீன் நிறைந்த உவரையுடைய குளத்திற்பொருந்திய புணையுடைய அழகிய சிறுவர் தங்களைப்போல் ஆவேன்;

இவ்வுவமை முற்றுவமை; ஏற்ப விரித்துக்கொள்க.

---

70 ஊட லுவகையு முழுதொழி லாளர்
வாழு மருதத்து வளனு மியம்புதல்.

வேந்தற் பாடுதூஉம் வேந்தற பாடுதூஉம்
விண்ணவர்க் கறியா வேந்தற் பாடுதூஉம்
யாறு பாடுதூஉம் யாறு பாடுதூஉம்
வீறுபெற வூர்தொறும் மேஎய்விளை வயற்புகூஉச்
சேறுசெய் திருவமர் யாறு பாடுதூஉம்
விளைவயல் பாடுதூஉம் விளைவயல் பாடுதூஉம்
வளைகதிர் நெல்லின் விளைவயல் பாடுதூஉம்
உழுநர்ப் பாடுதூஉ முழுநர்ப் பாடுதூஉங்
கழனிக்குச் செந்நீர் காதலொடு பாய்ச்சி
யுலகம் போற்றுறூஉ முழுநர்ப் பாடுதூஉம்
வைகறை பாடுதூஉம் வைகறை பாடுதூஉம்
விழிநோய் மருத்துவன் வினைகொடு தெளிஇப
தலைநா ளொளியிற் கதிரவ னருள்பெறூஉ
முலகமெல் லென்னக் கண்விழித் தாங்கொளிர்ந்
தாட லுவகைசெய் வைகறை பாடுதூஉம்
பண்ணியம் வேட்டுந் தலைமை வேட்டு
மெடுப்பு வேட்டு மிம்மெனுஞ் சிறுசிற்
கணவரோ டூடிக் கசிந்துருக்கு காத
லூடல் பாடி யுவகை பாடுதூஉ
மருதம் பாடுதூஉ மருதம் பாடுதூஉ
முரிமை சான்ற பெரியோர் பாடிய
வருமை சான்ற மருதம் பாடுதூஉம்
பாரியற் பனுவலை நேர்மைபெற வைத்துச்
சீர்மைசெய் செல்வத்து மருதம் பாடுதூஉம்
யாமே,

பாடல் விழைஇப் பாடுது மிலமே
பலர்புகழ் நச்சிப் பாடுது மிலமே
யாக்கங் கருதியு மதன்போக் குன்னியும்
போக்க லில்லேங் காதன் முருகியோ
னூஉர் கருதா னொண்மை கருதான்
பேஎர் கருதான் பேறங் கருதா
னுடம்பு கருதா னுண்ணிலை கருதான்
காத லூறத் தியோள் கனிமொழி கேட்கவுஞ்
சாய்த்து வீசித் தாக்கியுயிர் வாங்கி
மயக்கி வாட்டு .மைந்துபடை வாய்த்த
நோக்கங் கொள்ளவு நுண்ணழகு காணவு
முயக்கங் கொள்ளவு நலம்பல நயக்கவு
முத்தங் கொள்ளவு முகமலர்ச்சி யெய்தவு
முற்பட்டு வருதல் போன்றுமன முருகி
முற்பட் டேமான் மருதக் காதல்
பிடர்பிடித் துந்தலிற் பிற்படாது பாடக்
கரைதொறும் விரிதலைப் புள்ளிச் சிறுசிழற்
சிறியிலைக் கருவேற் சூசிபுடைச் செறீஇ
யகனெலாம் படீஇக் காற்புகு மாயிடைக்
கதிர்தெறு பருவாய்க் கண்பல மலர்ந்து
பலவுத் தந்த பழப்புற முள்ளெனக்
காய்சேற்று மேனிப் பறங்கிச்சுடு மிபல
வகத்துமிடி மறைத்துப் புறத்துநலன் காட்டலின்
யாட்டொடு மாடு மறிந்தாங் கிரவெலா
மிடுசேறு பூசிய வயலிடைச் சுவலு
மலனுமோ ரளவின வாகக் கல்லிடை
வெட்டியாங்கு வெட்டி விளைகட்டி தம்மைத்
திரிகலிற் றிரித்தெனத் திருத்திய புழுதி
வேரொடு மயங்கிச் சாந்துபுலர்ந் தாங்கு
மேனியிடைப் பொரிந்த வினையினர் வண்டர்
படிபாசி காய்நதென வறந்த தலையினர்
தேங்கா யகப்பிசிர் வாய்க்கொள்சிற் றெறும்புச
செறிவென நரைநுனி மயிருடை முகத்தினர்
பசித்தனர் பணிபொரீஇப் பைங்குழவி துஞ்சும்
வயிற்றுவரைத் தூங்கி மடியாப் பறுவைக்
கூடைபுதை தாழிச் சோறுபொதி கூறைச்
சுருட்டுச் சுமட்டின் வளைக்கைத் தோகையர்
வட்டக் குழியிலை நூல்செறி யகத்துளைப்
புறமுளை யழிமுட் டிரங்கா ணீடலை
வெளிச்செல நீட்டிப் பொரிந்த கருவிய

பொறிவாழ் பூவு மாம்பலுங் கொட்டியும்
பிறவும் வெதும்பிச் சாம்பிச் சாறுபிழி
சேறுகொண் மஞ்ச டிகழ்சின் னீர்க்கரைக்
கொடுவந் தூட்டிய கூழுண்டு மடிந்தில
ருக்கிய முயற்றின ருவந்தாண்டுச் சேறும்
வேனின் முதுமையும் வீந்தன்று மன்னே
நிறைபொருள் படைத்த நீள்கொடை பொருநன்
வறிஞ னாகி மாழ்குழித் தன்னிலை
சுருங்கிச் சிறிது துய்த்திருந் தென்னச்
சின்னீர் மடுவு முருள்பெருந் மணன்மலி
மேடு மேஎய் விரிநதகெரு வகட்டையச்
சுருக்கியோன் வாழ்விற் பெருநல னுற்றே
ரீயெனக் குத்தலி னீஞெ ரூற்றுக்
குடைந்துறை வைத்துநீர் சுரக்கு மன்புகொ
டியாற்றகடு கிழிய நெடுநீர் வந்தன்று
கடலுவர்த் தெனக்கை கொட்டிக் கலீஇ
மருக நறுநீர் வாரியா கின்றே
யில்பொழு தகன்றுங் குள்பொழு தெய்தும்
புல்லி யோரிற் புள்ளொடு நீர்வா
ழுயிரெலாம் யாண்டு முவந்துசெறிந் தனவே
டாம்பூர்ந் தாங்குப் பள்ளந் தோறும்
வெள்ளத் தீம்புன றண்ணென விரைந்தது
புதையல் பெறீஇய வறியோர் மாட்சியி
னுழூந ரார்ப்புற் றுவகை யொளி சிறந்தனர்
நீர்நிலை கண்டாங் கொய்பென வொலிக்கு
மெருமையு நீரு ளமிழ்ந்திக் கலை நீட்டித்
திரிமருப் பானை திரைசெய்து மறந்த
பரணினும் மூலைப் பக்க றம்பினும்
பதுங்கிய நாஞ்சில் வயற்றலைப் பரந்த
வாளா வளர்நதோற் கிற்சுமை பொறுத்தெனப்
பகட்டுக் கழுத்தி னுகஞ்சென்று பொறுத்த
அவ்வயின்
வயனெடும் மகட்கு வளச்செந் நெற்கொடு
போற்றிச் சொரிந்தென வித்துநர் வித்தி
நாறுபத னறிந்து வீறுபெறப் பறிக்குநர்
கால்புதை சேற்றினர் சேறுபொதிந் தொலியவி
வளையமர் கையினர் வண்டமிழ்ப் பாட்டி
னொருமுறை தழீஇ யுரப்பிப் பாடுநர்
புதர்ப்புன் னீண்டெனச் செறிமுடித் தொடையல்
யாற்றுவழி விடேஉப் புணையின் மிதந்துவரு

நாற்றியாப் பவிழ்த்து நன்குறக் கடைசியர்
வேறுவே றுகக் குனிந்துநடந் தாயிடை
மெல்விலை சுவைத்துச் சேறளை கைக்கொடு
புலவுத்தலை வருடிப் பூங்குழவி யூட்டிக்
கரைமிசை நிழலிற் கண்வளர்த் தெழுந்தாங்
கிடம்பெயர் நாற்றி னிளைப்பற நட்டனர்
துயில்சிறு குழவி யெழுந்தெனக் கிடந்த
பயிருந் திண்ணெனச் செறிந்தெழுந் தனவே
யிளஞ்சிறு சேய்க்குப் பாலூட்டு சிறி
னீஇர் பாய்ச்சி வளர்த்தாங்கு வளர்த்து
வஞ்சங் கரந்து வாய்வழி யினித்து
நஞ்சுசெய் நட்பினர் போன்றுடன் வளருங்
களையறக் கட்டுக் கண்காக் கிமையிற்
கடப்பரு முள்ளுடை வேலி கோலிப்
பயிர்காத் தனரே பசுந்தமிழ் நாட்டி
னுயிர்காக குநரே யேர்க்கை யுழுநர்
பிணியுறு விளமையுஞ் செல்வமும் பெறீஇய
வணிசேர் மடவா ரென்னமதர்ப் படைஇப்
பிறநிற னகற்றிப் பச்சை பரப்பி
நிறைநீ ரடிகவிழ் நிறீஇக் கருவிருந்
தூண்டி சுருங்கித் தளர்ந்துதள் ளாடி
யிளைத்துக் களைத்து வெண்சூற் பசுநீஇப்
புறப்பாடு கொள்ள வீன்று பொருந்துவலி
போக்கிப் பழுத்து வெளுத்த பயிரெலாந்
தம்மை வளர்த்தமை யிளமைத் தருக்கி
லென்னு மறிகில. வின்னே யறிவுறீஇக்
தம்முறு கான்முளை தமைப்புரப் பரென
வோம்படை யுழுநரை யுரைத்துக் கைப்பிடித்
தங்நிலை வீழ்ந்துயி ரளித்தலி னிலத்திற்
குப்புறீஇக் கிடந்த கதிர்தொழில் கற்றலின்
மெழுகுச் செவ்வியிற் சேறுவிளை வயலிற்
சிஃறுளிப் பனிப்பெயன் முற்றிய கதிரை
நனைத்துதி ராது நலம்புரி போழ்து
பிறைவா யிரும்புகைப் பிடிஇக் குனிந்து
கதிர்த்தலை வையரீஇக் கூறுகூ றுக
மிகப்பொலி தோற்ற மறச்சிறி தாகச்
சேரக் கிடத்தி யவ்வய றன்னின்
வளர்பயிர் செல்கைக்கு வறிதுள் ளுடைஇக்
கூத்துக் கழீஇய வழிநா ளாங்கெனத்
துன்புற வுலக மின்புறத் தலைத்தலைச்

சுமந்து சேர்வுழிச் செல்வோர் கால்கள்
சேறு பூசியும் பொருக்கெழக் காய்ந்துஞ்
சில்லெனக் குளிர்ந்துசெல் சின்னீர் யாற்றிற்
றெளிநீர் கழுவியுங் குறுமணல் செறிந்து
பிலகுறப் பறவையின் ஒணைஇ மெல்லெனப்
புக்குச் சில்கதிர் கொடுபோ யொலிபடப்
பக்க விருந்து பராவடிக் கூர்ச்சினை
நீட்டிக் கதிர்கொடு நிலவுகனி நல்கவு
மோட்டுமர னெல்லாவ கொதுகினம் பாட
மேட்டி லூர்ந்தும் பள்ளத் திறங்கிபு
நேரென நடந்தும் வளைந்து திரும்பிச்
சுழன்றுங் குழுவிகொடு சேறலி னுழூநர்
கொடுசென் றனரே கொடுங்கதி ராசிசுமை
சேர்த்துநலன் பெற்றோர் முன்னர்ப பின்னர்ப
பிரித்துநலன் பெற்ற பெற்றித் தென்ன
வையொடு மரீஇய வளைகதிர் நெல்லை
யோங்கிப புலைதகி யறுவை யொலித்தலி
னடித்தடித் தகநதொறும பிரித்துத் தொகுபபரால்
ஆங்கு,
பாசி மூடிப் படர்ந்துநீர் கரந்த
பொய்கையுங் குளனும் புற்றலை கொளீஇய
நிலத்திற் காட்டி நீள்விழி மயக்கும
புறத்திற பசுமை போர்ததுந் தீமைபுரி
பல்படை யகத்திற் படைதத வஞ்சரிற
புன்முதல போர்ததுப புறத்தி லகத்திற்
கடுவுடை யுயிர்பபொருள் கரநதுவெளி மயக்கும்
வடுவுடைய புனன்மலி வஞ்சபபாழ்ங் கிணறு
தாயொடு தந்தை யுடன்றுங் கியாறு
கரையொ டுடற்றுங் காடசிக் காற்றுச
சேயர் தாய்புடைச சேர்நது நின்று
தநதைதெறற் றுங்நலி ஞாணல் வேழ
நன்பல மரங்கள் வேள ரூன்றிக
கரைக்குறுதி செய்து கலலின்முன் னிற்பத்
தந்தையது பொறுது வைமந்தரைத் தாக்கி
வீழ்ததி யமிழ்த்தி விரைநீர்த் தலைத்தலின்
யாறவை தம்மை யடிவே சறுத்து
முடிகைப் பிடித்து வீழ்த்தித் தூக்கி
யமிழ்த்திப் புரட்டி யலைத்தீர்த் தோட்டும்
அவ்வயின்,
கன்றுடைச் செவ்வரிக் கருப்பன் றாகெஞ்

சாறுபிழி யாலைத் தீஞ்சுவைப் பாகுஞ்
சளுக்கென வீழ்ந்து சாறுபொழி மாவின்
கனியும் வாழைக் கனியு மாங்குயில்
செவிவழித் தித்திக்குந் தீங்குரற் பாட்டுஞ்
சிலுசிலுத் தோடுஞ் சின்னீர் யாறும்
வழிவரு வோர்தம் வருத்தம் போக்குங்
கோழரை மருதின் குளுகுளு நிழலுங்
கண்ணோடு மூகைகைக் கவினைவைத் துருக்கு
மென்கேழ் மணங்கமழ் மெல்லிணர் மலருந்
திருமக ளுறைமகள் சேர்ந்துநின் றூர்த்துக்
களித்துக் குதித்துக காமர்தரு காட்சியும்
பஃறலைப் பாம்பின் பாளைவிரிந் திலகி
யோங்குதலைத் தெங்கி னுயர்சால் சோலையுந்
தூங்குருலைப் பச்சை மணிக்காய் வெள்வரை
தாங்கர வணர்ந்த கணவாய்ப் பாளை
பாங்கெலாம் பச்சை பரப்பித் தண்ணெனுங்
கமுகின் படப்பையும் பொன்னுதிர் காஞ்சியு
மூஉர் சுற்றி யொண்ணறு மலர்மலர்ந்
துவகைசெ யோடையு மொண்ணிழ லாடையும்
புளிசுவை வரித்திரட் சிறுகாய் முள்ளுடைப
பிரம்புசெறி புதரு மளாயில பொலிந்து
மருதஞ் சான்றது மருதத் தண்பணை
ஆங்கு,
மேவ லிருந்து வீழ்ந்து நுரைத்துத்
தாஅய்ப் பாய்ந்து தான்கா ணாது
நிலத்துட் புகரு நிமிர்ந்துவெளிப் போந்து
நேள ரோடி நிலைதடு மாறி
வளைந்து வளைந்து வழியறி யாது
சுற்றித் தடவிச் சுழன்றுசுழல் சூழ்ந்து
மூப்புடை முதிபரின் மேட்டி லேறி
யாப்புடை யிளைஞரிற் பள்ளம் வீழ்ந்து
தந்நாடு புரக்கும் வேந்தரிற் புரந்து
பிறர்நா டழிக்கும் வேந்தரி லழித்துப்
பலப்பல கொண்டு பலப்பல வளித்துக்
கள்ளு முண்டு கடவுட் பேணிய
நல்லுணவு முண்டு நல்லன வல்லன
வாகிய வெல்லா மமைந்தவப் பொருளிற்
பொலிந்தன் றம்மா பொருப்பின் யாறே
அவ்வயின்,
றைஇ சான்ற ஊதஇத் திங்கண்.

மெய்ம்மை சான்று மேயது நலந்தர
விழாவு வேட்டு மாடல் வேட்டு
மின்பம் விற்கு மிளையோர் தம்மாட்
டன்புறு புணர்ச்சி யடைதல் வேட்டு
மேந்திழை யவர்தமக் கின்னு வீந்து
வெறுப்புவழி மேள யூடல் விளைக்கு
மைந்தர் தமக்கெலா மகிழ்ச்சி வாய்ப்ப
விருந்துகொடு புக்காங் கினிப்பும் விருநது
பிரிந்தாங் கமையுங் கசப்புந் தந்தமை
நினைத்தாங் கிளஞ்சிறார் நெக்குநெக் கழுகையிற்
புணர்நதாங் கவர்தந் துயில்விற் புகைவு
முருள்பெறு மாழியி னுருண்டு வராவா
யருள்பெறு மின்பி னங்கிலே யொப்பப்
பல்வகைப் பாத்தையர் தம்முறு கணவரொ
டாடி மகிழ்ந்து தமக்குத்துன் பீத்தாங்
கில்லுறை கற்பின ரிவர்கருத்துன் பீத்துத்
தாமின் புறீஇத் தகைமைகொடு தழைக்க
வந்தமைந் தன்றே தையணி திங்க
ளூர்வறி தாக வுளர்பலர் யாற்றி
னீராட வந்து புகூஉ நிலைத்தனர்
தலையன்றி மற்றவை தாமறிதல் சாலாது
வரான்முத லாகிய வாழ்மீன் கரைசெறி
முதலையு மாமையும் மலிபுதர்ச் சரேலெனப்
பாய்ந்து பதுங்கிய பனிநீர் கரைமிசை
யேறிப் படர்ந்து தன்னமை யிருக்கையை
நாட்டவர் கொண்ட நவைக்கவ ரிருக்கையை
யாட்சிகொளக் கருதி யாங்குச்சென் றதுவே
பசுஞ்செம் மஞ்சள் பழுக்காய் தளிரிலை
முப்புடைத் தீங்காய் தேன்சொரி முதிர்கனி
துருக்கம் விரைப்பொரு டேய்துநறும் பனிமலர்
பன்னிற னுண்ட வோலை கருமணி
யின்ன கையெடுத் தினியரொடு மக்க
ளன்னர் கொண்டு நாள்பல பெறுகெனக்
கல்லுங் கரையக் கசிந்தாங் கேத்திக்
கைவளை கறங்கக் கடும்புனற் பெய்தனர்
செங்கேழ்ச் சேறும் விரையும் பூசித்
தேங்கமழ் மலர்த்தார் சின்மல ரணிந்து
நல்லுணா வருந்தி நறுங்கனி சிவப்ப
மெல்லிலை சுவைத்துப் புணர்ச்சியி னினிக்கச்
சிற்றுண்டி யோடு தேன்பெய் பாலும்

பழனு மலைக்கைப் பற்றி யெடீஇக்
கடலாங் கணவனைக் கலக்கச் செல்லுபிக்
காட்சிகண் டனையோ காப்புடை யில்லின்
மாட்சிகொண் டமைஇப மடநல் லோய்நீ
யாட்சி தருதவை கொல்லோ வதனி
னனக்கெறு கூற்றிரு செவிப்புகா வளவையி
னினித்தா னயக்க வின்னன மெண்ணினை
மணித்தா ரோபென் றுவர்க்கடல் யாற்றிற்
குதவின ளம்மா வாங்கொரு பூங்கொடி
யொருத்தி,
தன்னுறு கணவனு மயலவ ளொருத்திபுங்
கண்ணிற் கலாஅங் கரந்துசெயல் கண்டு
கணவனோ டூடிக் கண்ணோர் பிறரொடு
தண்ணீ ரெற்றியுந் தாழ்ந்துழூச் சடக்கி
வென்றி மேயுங் காவுசினம் வெளிப்பட்
டுண்ணீர் மாறிக் கண்ணீ ருகுத்தன
ளின்னபல வகையி னேந்திழை யவரெலா
மின்ன லுறீஇ யெய்தின ருட
லாங்கக் காளையர் பரத்தையர்ச் சாரி
னில்லுறை கடவுள ரெண்ணம் வெதுப்புந
ரின்னவர்ச் சாரி னன்னவ ரிகலி
வேற்கண் ணேச்சி வெருட்டி வருத்துந
ராயிடை யிருவழி யானு மலேஇச்
செய்வது தோரார் திகைத்தனர் தெளிஇக்
குலமணி விளக்காந் தலைவியர் பக்க
னிலையுற் றனரே நிலையுற் றவர்தாம்
யாறு தொட்டும் பசுமா னெட்டியும்
வீறுபெறு கடவுளர் மெய்ப்பெயர் குறித்துங்
குலத்தைச் சுட்டியும் புனைந்து பொய்ச்சூண்
மடவோர் மான மாயஞ் செப்பிச்
செயற்கைக் கண்ணீர் சோரப் பெருக்கி
யுருக்கி மயக்கி யொண்ணுத லவர்தமை
யுவகை யூட்டி யுவந்தனர்
தவலரு மின்பெலாந் தாம்பெறற் பொருட்டே

---

**களித்துக் கலம்பிக் கடலாழத் துள்ளே**
**குளித்துத் துயில்கொழுநர் தம்மை—விளித்தெடுப்பி**
**யூடுவர் தங்கனவி லூர்ப்பரத்தை யோடாடிக்**
**கூடினராக் கொண்டு விழித்து.**

ஊட மனமிலார் யூடுவர் தங்கணவர்க்
கூட மனமிருந்துங் கூடாராய்—வாடிடையா
ருள்ளொன்று கொண்டார் புறத்தொன்று காட்டிடுங்
கள்வரைக் கற்பினரொத் தார்.

களித்துப் பயில்வுழி யூடுவ ரூட
னடப்புழிச் சோர்ந்து களிப்பர்—களக்கூத்துப்
பாவையி னோர்கொழுநர் தம்மொடு பாவையர்
கள்ளுண் மிகுந்தாரி னாங்கு.

ஊடல் வெயிலா னுறுத்துக் குளுகுளுக்குங்
கூடன் மழையாற் குளிர்த்தனர்நெஞ்—சோடுவிழி
வாள்விடுத் தாடவரை வாட்டினர் கோங்கொத்தி
யாள்வர் கனிமருந் தால்.

ஊடற் கடற்புகுந் தொள்ளிழையார் சொல்லமுதுந்
தேடரு முத்தமுஞ் சேர்ந்தெடுத்து—நாடரிய
வன்புப் புணையூர்ந் தாடவரு நங்கையரு
மின்பக் கடல ரிசைந்து.

---

இப்பாட்டு நடுவணைந்திணையில் ஒன்றாகிய மருதநிலத்தின் வளப்பங்களையும், அந்நிலத்து உரிப்பொருள் (சிறப்பொழுக்கம்) ஆகிய ஊடல் முதலியவற்றையும் ஒருவாறு விரித்துக் கூறுவது.

தலைமகனை விதிப்படி வரைந்துகொண்டு இல்லறம் நடாத்தப்புக்க தலைமகள் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல் என்னும் நானிலவொழுக்கச் சிறப்பியற்றழுவித் தலைமகனை முறையே புணர்ந்தும், பிரிந்தும், பிரிவாற்றித் தனியிருந்தும், ஆற்றாதிரங்கியும், வருநாளில் அன்னவன் பரத்தையிற் பிரிந்தானென்று கண்டவருரைப்பக் கேட்டும், கனவு நனவுகளிற்றானாகக் கண்டோர்ந்தும் சினந்து பிணங்குதல் ஊடல் எனப்படும். ஊடலின் முதிர்வு புலவி என்றும், புலவிநீட்டம் துனி என்றும், ஊடல் தீர்தலை உணர்த்தல், ஒல்லல் என்றும் வழங்குப. ஊடலுவகை என்பது ஊடலினாலே கூடலின்பஞ் சிறந்ததெனக் கூறுவது. "புலவியே புலத்த லென்ப வூடலு மதனபொருட்டே—நலமிகு துனியெனுஞ்சொ லாட்டிய புலவி நீட்டம்" எனவும், "கூடியுங் கூட்ட மின்மை குலவிய புலவி யென்ப—வூடலே நுணுகா ராகி யுரைமறுத் திருத்த லாகும—வாடவர் நீங்க வுள்ளே யடைத்தற றனியே யென்பர்—வூடலைத் தீர்த்த லன்பே யுணர்த்தலை யொல்ல லாகும்" எனவும் வருவன சூடாமணிநிகண்டு.

பிரிவுக்குளவாகும் நிமித்தங்கள் பலதிறப்படும். "ஓதல் பகையே தூதிவை பிரிவே—பொருள்வயிற் பிரிதலு மவாவயி னுரித்தே" எனத் தொல்காப்பியமும், "ஓதல் காவல் பகைதணி வினையே—வேந்தற் குற்றுழி பொருட்பிணி பரத்தையின்—றாங்கவ் வாறே யவ்வயிற் பிரிவே" என இறையனார் அகப்பொருளும் கூறுதல் காண்க. தாழ்வு நோக்கிப் பரத்தையிற் பிரிவு ஈற்றில் வைக்கப்பட்டது போலும்.

பரத்தையிற் பிரிவு என்பது தலைமகளை வரைந்து எய்திய பின்னர்த் தலைமகனாவான், வைகலும் ஆவின்பாலே நுகர்வானொருவன் இடையே புளிங்காடியும் நுகர்ந்து அதனினிமையை

அறிந்தாற்போல, அவனுகர்ச்சி இனிமை அறிதற்குப் புறப்பெண்டிர்மாட்டுப் பிரியாநிற்றல்; அல்லதூஉம், பண்ணும், பாடலுமுதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால், தான் எல்லார்க்குந் தலைவனாதலின் அவர்க்கும் இன்பஞ்செய்யப் பிரியாநிற்றல் என்றுமாம்; அல்லதூஉம் ("துனியும் புலவியு மின்றெனிற் காமங்—கனியுங் கருக்காயு மற்று" என்ப வாகலின்) தலைமகளை ஊடலறிவித்தற்குப் பிரிதல் என்றுமாம். இவ்வாறொழிந்து தனக்கு இன்பம் வேண்டிப் பிரிவனாயின், அப்பிரிவு இவட்குரியதாய் அமைந்துள்ள தலைமகள் என்னும் பெயரொடு மாறுபட்டுத் தலைமகனாகிய தனக்குரிய பெருமையோடும் மாறுபடாநிற்கும் என்க.

பரத்தையிற்பிரிவு "கண்டவர் கூறலுங் காதற் றோழி—பொறையுவந் துரைத்தலும் பொதுப்படக் கூறி * * * * * ஊதிய மெடுத்துரைத் தூட நீத்தலும்—எண்ணா றொன் றிவை பரத்தையிற் பிரிவெனப்—பண்ணா மொழியாய் பகர்ந்திசி னோரே" என்றபடி நாற்பத் தொன்பான் பிரிவுகளையுடையது.

பரத்தையர் காமக்கிழத்தியர் என்றும், காதற்பரத்தையர் என்றும் இருதிறத்தவர் ஆவர். இவர்களுட் காமக்கிழத்தியர் ஆவார் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறநிகழ்த்தும் பரத்தையர். அவர், தலைவன் இளமைப்பருவத்திற் கூடி முதிர்ந் தோரும், அவன் தலைநின்றொழுகப்படும் இளமைப் பருவத்தோரும், இடைநிலைப் பருவத் தோரும், காமஞ்சாலா இளமைப் பருவத்தோரும் எனப் பலபகுதியினர் ஆவர். இவர் கண்ணிய காமக்கிழத்தியர் எனப்படுவர் ஆதலிற் கண்ணாக் காமக்கிழத்தியரும் உளர் என்பது பெறப்படும். அவர் கூத்தும், பாட்டும் உடையராகி வரும் சேரிப் பரத்தையரும், குலத்தின்கண் இழிந்தோரும் பிறருமாம். ஆசிரியர் நச்சினார்க்கினியர் "புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்" என்ற சூத் திரத்துக்கெழுதிய உரைவிரிவை நோக்குக.

காதற்பரத்தையர் யாவர்க்குமுரிய பொதுமகளிர் ஆவர். "காதற் பரத்தை யெல்லார்க்கு முரித்தே" என்பது இறையனார் அகப்பொருட்சூத்திரம்.

இங்ஙனம் வரையறையின்றித் தலைமகன் ஒழுகல் சாலுமோ எனிற் "புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதிற் * * * * சோதற் கண்ணும்" என்பதற்குச் "சேர்தல் கூறவே கருப்பம் முதிர்ந்தகாலத்துத் தலைவன் பிறரொடு கூட்டமுண்மையுங் கூறிற்றாம்" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறிப் போந்தமையானும், "பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவைத்—தொன்முறை மனைவி யெதிர்ப்பா டாயினும்" எனவருஞ் சூத்திரமுதலியவற்றுக்கு அவ ரெழுதிய உரைகளானும், இறையனார் அகப்பொருளிலே தலைமகள் ஊடியவழித் தோழி அவளூடல் தவிர்ப்பாள்; "அல்லதூஉம் வண்டோரனையர் ஆடவர், பூவோரனையர் மகளிர் என்பது என்னை? வண்டுகள் தாதூதுமிடத்து நன்மலரே ஊதுவேமென்னா, எல்லாமலரும் ஊதும்; இனிப் பூ அவாவினக்கால், எம்மையே ஊதா எல்லாப் பூவையும் ஊதினவென்று புலவாதன்றே; அதுபோல வழிபடுதலல்லது மலைத்தற்கண்ணேம் அல்லேம்" என உரையிற் காணப்படுவதானும் அன்னபிறவற்றானும் சாலுமெனச் சிலர்கூறுப. பரத்தையர் செல்வாக்குப் பண்டைக்காலத்தில் வெகுதூரஞ் சென்றிருந்தது என்பதற்குச் சான்றாகச் சீவகசிந்தாமணி முதலிய நூல்களிற் பரத்தையர் சேரி வருணிக்கப்பட்டிருக்கும் முறைகளையும் எடுத்துக் காட்டுவர். பண்டைய பழக்கவழக்க ஒழுக்கங்களெல்லாம் நல்லொழுக்கங்களென்று சாதிக்க முடியாது. அன்றுமின்றும் உள்ள ஆன்றோர் அனைவரானும், நீதிவாக்கியங்களானும், தரும சாத்திரங்களானும், திருக்குறள், நாலடியார், சாந்திபுராணம், வளையாபதி, சீகாளத்திப் புராணம், திருக்குற்றாலப்புராணம், பேரூர்ப்புராணம், விநாயகபுராணம், காஞ்சிப்புராணம், திருவிளை யாடற்புராணம், ஆதிய பலநூல்களானும் வரைவின்மகளிர் கேண்மை இகழ்ந்து ஓதுக்கப் பட்டிருத்தலின் அவ்வொழுக்கம் அறத்தின்பாற் படுவதன்றென்றும், ஏகபத்தினி விரதமே (தற்கால நாகரீகமுறைக்கும் பொருந்தி) யாண்டுந் தலைசிறந்ததென்றும் உணர்க.

அகப்பொருள் அமைக்கப்பட்ட நோக்கம் உலகியல்வழக்கை ஒட்டி வீட்டுநெறி காட்டும் ஆறாதலின் அந்நாட்டயின்ற பலவழக்கங்களும் எடுத்தாளப்பட்டன, ஆதலின் அவற்றின் [illegible]

பொருளை நுனித்தாய்ந்து கொள்ளாமல் வெளிப்பொருளில் நின்று மயங்குதல் பேதமை யாகும். இத் தலைமகன் இந்நிலத் தலைமகன் அல்லன் என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியதாகப் பிறண்டோரிடத்துக் காட்டியதும், இங்ஙனம் மேலே "தான் எல்லார்க்குந் தலைவனாதலின் அவர்க்கும் (பரத்தையர்க்கும்) இன்பஞ் செய்யப்பிரிவான்" என்று கூறியதும் எப்பொருட்டென்று ஆராய்க.

பரத்தையிற் பிரிவு கூறியமையாற் பெறக்கிடக்கும் நுண்பொருள் யாதோவென்னிற், கடவுளாகிய தலைமகனோடு கலக்கப் பயின்றுவரும் ஆன்மாவாகிய தலைமகள் சுயமருட்சியானும்; பொறாமை அழுக்காறாகிய அயலகத்தாரானும்; தலைமகன் தன்னையிகந்து பிறர்வயிற் பேரன்பு கூர்ந்தனன் என்ன மூட்டப்பெற்று மனங்கவன்று புலத்தலும், மெய்ஞ்ஞானப் பாங்கிமுதலியோராற் றேற்றப்பட்டு ஊடலொழிந்து உவகையுறலும் என்பதேயாம்.

ஊடிக் கூடுமின்பம் உசிதமாதல் போலப் பதிந்தமனம் பிரிந்து கவன்றுதெளிந்து மீட்டும் பதியுமாயின் அப் பதிவு பன்மடங்கு ஊன்றியழுந்திப் பொருந்திய பதிவாகும் என்க.

(இ-ள்.) வேந்தன் பாடுதூஉம் வேந்தன் பாடுதூஉம் = (யாம் மருதநிலக் கடவுளாகிய) இந்திரனைப் பாடுவேமாக, இந்திரனைப் பாடுவேமாக;

'பாடுதும்' என அளபெடாது கூறினும், "வேந்தற்பா-டுதூஉம்" எனச் சீர்பிரிப்பினும், கவியமைதிக்கு இழுக்கேயில்லை; ஆயின் பொருணலன் சிதைந்து விகாரமெய்திவிடும். அஃதெவ்வாறாகும் என்பதைப் படித்தும், உய்த்துநோக்கியுந் தெளிக. விரிக்கிற் பெருகும். இத்தகைய நுட்பங்களை நோக்காமல் இயற்றுங்கவிகள் சிறப்புடையனவாகா. கவியாயினும், வசனமாயினும் படிக்குமுறைக்குத் தக்காங்கு பயன்றருமாதலின் எழுத்துச்சொற் போக்கை மாத்திரம் குறித்துச்செல்லாது பொருளமைவையுங் கணித்தே படிக்கவேண்டும். இதனாலன்றே வேதங்களை எடுத்தல், படுத்தல் முதலிய இசைவேறுபாட்டால் உச்சரிக்குமாறு உணர்த்தற் பொருட்டுச் சிக்ஷை முதலியன எழுந்ததும், வேதமந்திரங்களைக் குருமுன்னிலையிற் பயில வேண்டுமென்ற விதியேற்பட்டதும் என்க.

விண்ணவர்க்கு அறியா வேந்தன் பாடுதூஉம் = தேவர்களுக்கு அறியாத (மருதநிலத்தார் அறிந்தேத்தும்வண்ணம் அமைந்த) இந்திரனைப் பாடுவேமாக;

யாறு பாடுதூஉம் யாறு பாடுதூஉம் = யாற்றினைப் பாடுவேமாக யாற்றினைப் பாடுவேமாக;

எந்நிலத்து வளனையும் நன்னிலைக்கு உய்ப்பது அந் நிலத்து நீர்வளனாதலின் யாற்றை முதற்கண் பாடற்கு முற்பட்டனர்.

வீறு பெற ஊர் தொறும் மேவிய விளை வயல் புகூஉ சேறு செய் திரு அமர் யாறு பாடுதூஉம் = வீற்றுத்தெய்வத்தின் மேம்பாடுபொருந்த ஊருள்ள இடனெல்லாஞ்சென்று அவ்வவ்விடங்களிலுள்ள பயிர்விளை வயல்களிற்புகுந்து சேற்றைச்செய்கின்ற செல்வம்வாய்ந்த யாற்றினைப் பாடுவேமாக;

திரு—அழகுமாம்.

விளை வயல் பாடுதூஉம் விளை வயல் பாடுதூஉம் = தானியம் முதலியன விளைகின்ற வயலைப் பாடுவேமாக, விளைகின்ற வயலைப் பாடுவேமாக;

நீர் வளத்தாற் பெறும் விசேடநலன் கூலவளனாதலின் வயலை அடுப்பக்கூறினர்.

வளை நெல் கதிரின் விளைவயல் பாடுதூஉம் = வளைந்த நெற்கதிர்களையுடைய கூலம் முதலியன விளையும் வயலைப் பாடுவேமாக;

"வளைகதிர் நெல்லின்" என்பது "வளை நெல் கதிரின்" என மாற்றப்பட்டது. சிறப்புக்கருதி நெல்லொன்றே விதந்து கூறப்பட்டது.

உழுநர் பாடுதூஉம் உழுநர் பாடுதூஉம் = உழுதொழிலாளரைப் பாடுவேமாக, உழுதொழிலாளரைப் பாடுவேமாக;

கழனிக்கு செந்நீர் காதலொடு பாய்ச்சி உலகம் போற்றுநூஉம் உழவர் பாடுநூஉம்= விளைவயலுக்குத் தங்கள் இரத்தத்தை அன்போடு பாய்ச்சி உலகத்தைப் புரந்துவருகின்ற உழுதொழிலுடையாரைப் பாடுவேமாக;

முயற்சியின் அருமைபெருமைகளைப் புலப்படுத்தச் "செந்நீர்" என்றும், அவர் முயற்சிக்கு மடியாராய் உற்சாகங்கொள்ளுதல் தோன்றக் "காதலொடு" என்றுங் கூறினார். செந்நீர் என்பது பயிர் விளைதற்குச் செம்மைதருகின்ற நீருமாம்; கலங்கிவருதலின் அந்நிறம் பெற்ற தென்றுங் கூறுப. முயற்சியின் பெருமைக்கு இரத்தமெனவும், பயிர்க்கமை நலத்திற்குச் செம்மை நீர் எனவும், நீர்வரும் இயற்கைக்குச் சிவந்த நீர் என்றும் பிறவாறுந்தோன்றப் பொதுப் படச் "செந்நீர்" எனப்பட்டது.

வைகறை பாடுநூஉம் வைகறை பாடுநூஉம்=(மருதநிலத்திற்கு உரிய சிறுபொழுது இரண்டனுள் ஒன்றாகிய). விடியற்காலத்தைப் பாடுவேமாக, விடியற்காலத்தைப் பாடுவேமாக;

விழிநோய் மருத்துவன் வினைகொடு தெளீஇய தலைநாள் ஒளியில் கதிரவன் அருள் பெறாஉ உலகம் மெல் என்ன கண் விழித்தாங்கு ஒளிர்ந்து ஊடல் உவகை செய் வைகறை பாடுநூஉம்=விழிவருநோயைப் பரிகரித்தலில் வல்லவனாகிய வைத்தியனின் செய்கையைக் கொண்டு தெளிவுற்ற முதனாளில் (அத் தெளிந்தவனுக்குத் தோற்றப்பெறுங் கண்) வெளிச்சம் போன்று சூரியனுடைய கருணையைப்பெற்று இவ்வுலகமானது மெல்லென்று கண்விழித்தாற் போன்று ஒளியையடைந்து மகளிர்க்குக் கணவரொடு ஊடிவரும் ஊடலையும், அவ் வூடலின் பயனாகிய மகிழ்ச்சியையும் செய்துவருகின்ற விடியற்காலத்தைப் பாடுவேமாக;

பண்ணியம் வேட்டும் தலைமை வேட்டும் எடுப்பு வேட்டும் இம் எ(ன்)னும் சிறாரில்= பலகாரவகைகளை விரும்பியும், குழந்தைகட்குள்ளே முதன்மையை விரும்பியும், எடுத்துக் கோடலை விரும்பியும் 'இம்' என்று ஒருவகை ஒலிபிறக்க அழுது அன்னை முதலியவர்களுடன் சினங்கொள்ளுஞ் சிறுவர்களைப் போல;'

பண்ணியம்—விற்பதற்குரிய பலபண்டமுமாம்;

எடுப்பு—இறுமாப்பு, மேட்டிமை, பெரியவெண்ணம்.

கணவரொடு ஊடி கசிந்து உருக்கு காதல் ஊடல் பாடி உவகை பாடுநூஉம்=தங்கள் நாயகருடனே சிறுபிணக்குச்செய்து அச் செய்கையினாலே அவர்தம் உள்ளத்தைக் கனிவித்து உருக்கிவருகின்ற அன்புவாய்ந்த ஊடலைப் பாடி அப் பாடிய பின்னர் அன்னவர்கொள்ளும் மகிழ்ச்சியையும் பாடுவேமாக;

மருதம் பாடுநூஉம் மருதம் பாடுநூஉம்=மருதத்திணையைப் பாடுவேமாக, மருதத் திணையைப் பாடுவேமாக;

உரிமை சான்ற பெரியோர் பாடிய அருமை சான்ற மருதம் பாடுநூஉம்=அத் திணையைப் பாடுதற்கேற்ற உரிமைநிறைந்த பெருமைவாய்ந்த சங்கச்சான்றோர் பாடிய அருமை நிறைந்த மருதத்திணையைப் பாடுவேமாக;

பெரியோராவர் ஓரம்போகியார் போன்றவர் என்க. அப் பாடுகை பிறர்க்கரிதாகலின் "அருமை சான்ற" எனப்பட்டது. மேற்கூறியனவன்றி மருதமென்பதொன்று இன்றாகலிற் றிணையென அடை கொடுக்கப்பட்டது.

பார் இயல் பனுவலை நேர்மை பெற வைத்து சீர்மை செய் செல்வத்து மருதம் பாடுநூஉம்=உலகத்தின் இயல்புகளை விளக்கும் நூலாகிய உலகியல் விளக்கத்தை ஒழுங்கு பெறும் வண்ணம் நிலைநிறுத்தி அந் நிறுத்திய காரணத்தானே சிறப்புறச்செய்த செல்வத்தினை யுடைய மருதத்திணையைப் பாடுவேமாக;

யாமே=இங்ஙனம் பலவற்றையும் பாடுவேமாக என்றுபுகுந்த யாந்தாம்;

பாடல் விழைஇ பாடுநம் இலம்=பாட்டியற்றலை விரும்பியும் பாடுகின்றிலம்;

பலர் புகழ் நச்சி பாடுதும் இலம்=அப் பாடுதல் காரணமாகப் பலரும் புகழ்ந்துகூறும் புகழ்ச்சியை விரும்பியும் பாடுகின்றிலம்;

ஆக்கம் கருதியும் அதன் போக்கு உன்னியும் போக்ககில்லேம்=பாடுதலான் வருவது செல்வமாயிருந்தால் அதனை விரும்பியும், செல்வத்தின் அழிவாயிருந்தால் அதனை நினைத்தகற்றியும் பாடிவருதொழிலை விட்டுவிடவும் மாட்டேம்;

காதல் முருகியோன் ஊர் கருதான் ஒண்மை கருதான் பேர் கருதான் பேர் அறம் கருதான் உடம்பு கருதான் உள் நிலை கருதான்=ஒருத்திமேலே கொள்ளப்பட்ட ஆசையானது எழுச்சியுறப்பெற்ற ஒருவன் (அவளையே யாண்டும் நயப்பதானே) தனது ஊர்க்குவரும் பயனைச் சிந்தியாதானும், ஒளிசிறந்திருத்தற்கு அவ் விருப்பு இடையூறாய் இருந்துவருதலை நினையாதானும், இழிந்த பேர்வருதலை நோக்காதானும், பெரியதொரு நல்லொழுக்கம் பழுதுறுதலைப் பாராதானும், அவளைப் பெறுதலிலே தனது உடம்பு கெட்டழிவதைக் கவனியாதானும், சிந்தை கெட்டயருந் தன்மையைச் சிந்தியாதானுமாகி;

காதல் உறுத்தியோள் கனி மொழி கேட்கவும் சாய்த்து வீசி தாக்கி உயிர் வாங்கி மயக்கி ஊட்டும் மைந்து படை வாய்ந்த நோக்கம் கொள்ளவும்=தனக்கு ஆசையுறும்படி செய்தவளாகிய அவ் வொருத்தியின் தீங்கனிச் சுவைபோன்று சொல்லுஞ் சொல்லினைக் கேட்கவும், ஒருபுடையாகச் சாய்த்து ஒளிவீசி மோதி உயிரை வாங்கிக்கொண்டு (அக் கொண்டமையானே) மயக்கி வாடுதலைச்செய்யும் வலியமைந்த படைத்தன்மைபொருந்திய பார்வையைப் பெறவும்;

நுண் அழகு காணவும்=அவளின் நுண்மையாகிய சிறப்பைக் காணவும்;

முயக்கம் கொள்ளவும்=கலவியைப் பெறவும்;

[நலம்பல நயக்கவும்] பல நலம் நயக்கவும்=பலவகையாகிய இன்பங்களை அனுபவிக்கவும்;

முத்தம் கொள்ளவும் முகம் மலர்ச்சி எய்தவும்=முத்தம் பெறுவதற்கும், முகம் மலர்வுற்றுச் சிறப்பக் காணவும்;

முற்பட்டு வருதல் போன்று=(அக் காதல்கூர்ந்தோன் எவ்வண்ணம்) முற்பட்டு வருவானோ அவ்வண்ணமே;

[மனமுருகி—முற்பட் டேமான் மருதக் காதல்—பிடர்பிடித் துந்தலிற் பிற்படாது பாட] மருதம் காதல் பிடர் பிடித்து உந்தலிற் பிற்படாது மனம் உருகி பாட முற்பட்டேம்=மருதத்திணையானது எமது பிடரியைப் பிடித்துக்கொண்டு தள்ளிவருதலினாலே பிறகிடாது உள்ளமுருகிப் பாடுதற்கு முன்னே றிவந்தேம்;

ஆல்—அசைநிலை.

(இனி மருதத்தின் முதுவேனில் வருணிக்கப்படும்.)

கரை தொறும் விரிதலை புள்ளி சிறு நிழல் சிறு இலை கருவேல் ஞெமி புடை செறீஇ அகன் எ(ல்)லாம் படீஇ கால் புகும் அவ் இடை=வயலின கரைகளிலெல்லாம் விரிந்த தலையையும், புள்ளியோடு கூடிய சிறுநிழலைத் தருகின்ற சிறிய இலைகளையுமுடைய கருவேலினது ஊசி போன்ற முட்கள் பக்கங்களிலெல்லாம் சொரிவுற்று நிறைதலினாலே (அம்முட்கள் வயலகப் பரப்புகளிலெல்லாம்) படிந்து (அங்கு நடப்பவாதல்) காலுட் புகும் இயல்புவாய்ந்த அவ்விடத்திலே;

கதிர் தெறு பகு வாய் கண் பல மலர்ந்து பலவு தந்த பழம் புறம் முள் என காய் சேறு மேனி பதுங்கி சுடும் இயல=சூரியவெப்பத்தாற் பிளவுபட்ட பல வாயையும், பல கண்களையும் மலர்ந்து பலாவானது கொடுத்த பழத்தின் புறத்திலேயுள்ள முள்ளைப்போன்று காய்ந்த சேற்றினையுடைய உடம்பினையும், (நடக்கும்போது தண்மை காட்டிப் பின்னர் வெதுப்புதற்குச் சூட்டைப்) பதுங்கி மறைத்துவைத்துச் சுடுகின்ற இயல்பினையும் உடையனவாய்;

அகத்து [illegible] மறைத்து புறத்து நலன் காட்டலின்=(இழிஞர்) உள்ளத்திலே வறுமையை வைத்துக்கொண்டு வெளியிற் செல்வநலனைக் காட்டிவருதலைப் போன்று;

[யாட்டொடு மாடு மறிந்தாங் கிரவெலா-மிடுசேறு பூசிய வயலிடை] இரவு எ(ல்)லாம் யாடு ஒடு மாடு மறிந்து ஆங்கு இடு சேறு பூசிய வயல் இடை=இரவுமுழுதும் யாடுகளுடனே மாடுகளுந் தங்கி அவ் விடத்திலே அவையெல்லாம் இட்ட சாணமுதலாகிய சேற்றைப்பூசிய (வெளியிலே தண்மை காட்டி உள்ளில் வெப்பம் வைத்திருக்கின்ற) வயலிடத்திலேயுள்ள;

சுவலும் அவலும் ஓர் அளவின ஆக கல் இடை வெட்டியாங்கு வெட்டி விளை கட்டி தம்மை திரி க(ல்)லில் திரித்து என திருத்திய புழுதி=மேடும், பள்ளமும் ஓரளவினவாகப் பொருந்துமாறு கல்லிடையில் வெட்டினாற்போன்று அவ்வயலிடையில் வெட்டி அவ் வெட்டுதலால் உண்டாகுங் கட்டிகளை எந்திரத்திலிட்டுத் திரித்தாற்போல உடைத்துப் பண்படுத்திய புழுதியானது;

வேரொடு மயங்கி சாந்து புலர்ந்தாங்கு மேனி இடை பொரிந்த வினையினர்=வேர்வையோடுகலந்து பூசியசந்தனம் புலர்ந்தாற்போன்று மேனியிலே பொரிதலுற்றுத் தோன்றுமாறு தோற்றம்பெறும அத்துணைத் தொழிற்பாடுடையவரும்;

வண்டல் படி பாசி காய்ந்தென வறந்த தலையினர்=சேறுகிய மாசுபடிந்த பாசியானது காய்ந்திருந்தாலொத்த பசையற்ற மயிர்வாய்ந்த தலையுடையவரும்;

தேங்காய் அகம் பிசிர் வாய் கொள் சிறு எறும்பு செறிவு என நரை நுனி மயிர் உடை முகத்தினர்=தேஙகாயினது அகத்ததுவாகிய பருப்பினது தும்பை வாயிலேகொண்ட சிற்றெறும்புகளின் அடர்ச்சியையொப்ப நரைத்த நுனியையுடைய மயிர்வாய்ந்த முகத்தினையுடையவரும் ஆகிய அவ்வுழவோர்;

பசித்தனர் பணி ஒரீஇ=பசித்தவராகி வேலையைவிட்டு நீங்கி;

[பைங்குழவி துஞ்சும்-வயிற்றுவரைத் தூங்கி மடியாப் பறுவைக்-கூடைபுதை தாழிச் சோறுபொதி கூறைச்-சுருட்டுச் சுமட்டின் வளைக்கைத் தோகையர்] பைங் குழவி துஞ்சு வயிறு வரை தூங்கி மடி யாப்பு அறுவை சுருட்டு கூறை சுமட்டின் சோறு பொதி தாழி புதை கூடை வளை கை தோகையர்=பசியகுழந்தை உறங்குகின்ற வயிற்றளவுதொங்கி மடிப்புற்ற கட்டுப்பொருந்திய சேலையையும், சுருட்டியபுடவையைச் சும்மாடாகவைத்து அதின்மேற் சோறு நிறைந்த தாழி புதையவைத்த கூடையினையுமுடைய வளையல்பொருந்திய கையுடைய மயில் போன்ற சாயல்வாய்ந்த அவ வுழுதொழிலாளர்தம் பெண்டிர்கள்;

வட்டம் குழி இலை நூல் செறி அகம் துளை புறம் முளை அழி முள் திரள் கால் நீள் தலை வெளிசெல நீட்டி பொரிந்து கருகிய பொறி வாழ் பூவும்=வட்டமாகி உட்குழிந்த இலையினையும், நூனிறைந்து உள்ளே துளைபட்டு வெளியிலே முளையழிந்த முள்ளினையும், திரண்ட காலினையும் உடைய தாமரையானது தனது நீண்ட தலையை வெளியிற் செல்லும்வண்ணம் நீர்நிலைக்கு மேலேநீட்டி அந் நீட்டியதாற் பொரிந்துகருகிய இலக்குமிவாழ்கின்ற (செந்தாமரைப்) பூவும்;

ஆம்பலும் கொட்டியும் பிறவும் வெதும்பி சாம்பி சாறு பிழி சேறு கொள் மஞ்சள் திகழ் சில் நீர் கரை கொடு வந்து ஊட்டிய கூழ் உண்டு=ஆம்பன்மலரும், கொட்டிமலரும், இவை போன்ற பிறமலரும் (கதிர் தெறுகையானே) வெதும்பி வாடிச் சாறுபிழிந்து குழம்பாகிய சேற்றைக்கொண்டு மஞ்சளினிறம் விளங்கப்பெற்ற சிலவாகிய நீரையுடைய பொய்கையின் கரையிலே கொண்டுவந்து அருத்திய உணவை உட்கொண்டு;

வினைவிட்டுவந்த அவ் வுழவர் தமது தோகையர் குளக்கரையிற் கொடுவந்தூட்டிய கூழை யுண்டு என்க.

மடிந்திலர் ஊக்கிய முயற்றினர் உவந்து ஆண்டு சேரும் வேனில் முதுமையும் வீந்தன்று மன்னே=சோம்பாதவராய் உற்சாகப்படுத்திய முயற்சியுடையராய்ப் பணிசெய்ய மகிழ்ந்து அவ் வினைத்தலைக்குச் செல்லுகின்ற வேனிற்காலத்து முதுமையுங் கழிந்துவிட்டது;

மன் என்பது கழிவுப்பொருளில் வந்தது. வேனின் முதுமையும்-முதுவேனிற் காலமும்.

நிறை பொருள் படைத்த நீள் கொடை ஒருவன் வறிஞன் ஆகி வாழ்ந்து உழி = நிறைந்த செல்வத்தைப்படைத்த நீண்ட கொடையாளியாகிய ஒருவன் வறியவனாகி வருந்துகின்றபோது;

தன் நிலை சுருக்கி சிறிது துய்த்திருந்தென்ன = முன்னர்ப் பொருந்தியிருந்த தன்து நிலைமைகளையெல்லாஞ் சுருக்கித், தன்வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகியவற்றுள்ளுஞ் சிற்றளவினவற்றையே நுகர்ந்திருந்தாலொப்ப;

சில் நீர் மடுவும் உருள் பெரும் மணல் மலி மேடும் மேய் விரிந்த தெரு அகட்டை = சிலவாகிய நீரையுடைய மடுவும், உருட்சிவாய்ந்த பெரிய மணனிறைந்த மேடும் பொருந்தி விரிவுற்ற தெருவினைப்போன்ற யாற்றின் பரப்பினை;

தெருப்போல் இருத்தலின் அதனை அப்பெயரானே அழைத்தார. "யாறுகிடந் தன்ன வகன்றெரு மருங்கில்" என்பது பாட்டு.

அ சுருக்கியோன் வாழ்வில் பெரு நலன் உற்றோர் ஈ என குத்தலின் ஈஞோர் ஊற்று குடைந்து உறை வைத்தும் = அ (ப்பழைய நிலைமையை) ச்சுருக்கிகொண்டவன் செல்வம் பொருந்தி வாழ்ந்துவந்த காலத்திலே பெரிய நன்மைகளை அவன்பாற் பெற்றடைந்தோர் (சுருங்கிய காலத்திலும் அவனை இரக்கமற்று) ஈயென்று வருத்துதலைப் போன்று இவ்வுலகத்தார் ஊற்றுத்தோண்டி உறைவைத்தார் எனினும்;

[நீர் சுரக்கு மன்புகொடு] அன்பு கொ(ண்)டு நீர் சுரக்கும் = (அக் குத்துவோர்க்கு அச் சுருக்கியோன் எவ்வண்ணம் அளித்துவருவானோ அவ்வண்ணமே ஊற்றுகக்குடைந்து உறை வைத்தார்க்கும்) அன்புகொண்டு நீரைச் சுரந்தளிக்கின்ற;

யாறு அகடு கிழிய நெடு நீர் வந்தன்று = அவ் யாற்றினது வயிறுகிழியும்படி நெடிய நீர் வந்துவிட்டது;

[கடலுவர்த் தெனக்கை கொட்டிக் கலிஇ—மருத நறுநீர் வாரியா கின்றே] மருதம் கடல் உவர்த்து என கை கொட்டி கலிஇ நறு நீர் வாரி ஆகின்று = மருத நிலனானது கடல் உவர் நீரை உடைத்து என்று இகழ்ந்து கைகொட்டி ஆர்த்து நறிய நீரையுடைய கடலாயிற்று;

மருதம் நறுநீர் வாரியாகின்று, அதனால் கடல் உவர்த்தெனக் கைகொட்டிக் கலித்தது என்பதுவே கருத்தாகக்கொள்க.

இல் பொழுது அகன்று ஆங்கு உள் பொழுது எய்தும் புல்லியோரில் புள்ளொடு நீர் வாழ் உயிர் எ(ல்)லாம் யாண்டும் செறிந்து உவந்தன = பொருளில்லாதபோது அவ் வில்லாரை விட்டகன்று சென்று பொருள் உள்ளபோது வந்தடையும் அற்பமாகிய குணஞ்செய்கைகளை உடையவர்ப்போன்று (மருதத்திலே நீர் வற்றியிருந்தபோது அகன்றிருந்த) பறவைகளோடு நீரில்வாழ்ந்துவரும் உயிர்ப்பிராணிகள் எல்லாம் (நீர் மிகுந்தகாலத்திலே) யாண்டும் வந்து பொருந்தி நிறைந்து உவந்தன;

"உவந்து செறிந்தன" என்பது செறிந்து உவந்தன என்று மாற்றப்பட்டது.

[பாம்பூர்ந் தாங்குப் பள்ளந் தோறும்—வெள்ளத் தீம்புன றண்ணென விரைந்தது] வெள்ளம் தீம் புனல் பள்ளம் தோறும் பாம்பு ஊர்ந்தாங்கு தண் என விரைந்தது = வெள்ளமாகிய தித்திக்கும் நீரானது பள்ளமிருக்கும் இடந்தோறும் பாம்பு ஊர்ந்துசென்றாற்போன்று தண்ணென்று ஒழுக்கம்பெற்று விரைந்துசென்றது;

புதையல் பெறீஇய வறியோர் மாட்சியின் உழுநர் ஆர்ப்பு உற்று உவகை ஒளி சிறந்தனர் = புதையல்பெற்ற வறிஞர் அடைந்த மாட்சியைப்போல (யாற்றுநீர்பெற்று) உழுதொழிலோர் ஆரவாரிப்படைந்து மகிழ்ச்சிபூத்து ஒளிசிறந்தனர்;

உவகை ஒளி = மகிழ்வும் விளக்கமும்; அல்லதூஉம், மகிழ்வாகிய பொலிவு என்றுமாம்.

நீர் நிலை எல்லாம் ஆங்கு ஒய் என ஒலிக்கும் = நீருள்ளவிடத்தெல்லாம் அவ்வண்ணம் ஒய்யென்று சத்தமிடும்;

# இன்பநெறியியல்

எருமையும் நீருள் அமிழ்ந்தி தலை நீட்டி திரி மருப்பானே நிரை செய்து மறந்த = எருமைகளும் நீரினுள்ளே தாழ்ந்து தலையை வெளியேநீட்டித் திரிந்தகொம்பாலே அலைகளை யுண்டாக்கித் தங்களையும் மறந்திருக்கும்;

பாணினும் மூலை பக்கல் தம்மினும் பதுங்கிய காஞ்சில் வயல் தலை பரந்த = பரணகளிலும், மூலையின் பக்கங்களிலும் மறைந்துகிடந்த கலப்பைகளெல்லாம் வயலிடத்திற் சென்று பரந்தன;

உபயோகிப்பின்றிக் கிடந்தகலப்பைகள் உழவுதொழில் ஆரம்பித்தலின் வயற்குக் கொடுவரப்பட்டன என்க.

வாளா வளர்ந்தோற்கு இல் சுமை பொறுத்தென பகடு கழுத்தில் நுகம் சென்று பொறுத்த = கவலையின்றி (உண்டுடுத்துக் காலங்கழிய) வீணே வளர்ந்துவந்த ஒருவனுக்குக் குடும்பபாரம் வந்து பொறுத்தாற்போன்று எருமைக்கடாக்களின் கழுத்திலே ஏரினுகங்கள் சென்று பொறுத்தன;

அ வயின் = அச் செயல்கள் நிறைந்த மருதவைப்பிலே;

நெடும் வயல் மகட்கு வளம் செம் நெல் கொ(ண்)டு போற்றி சொரிந்தென = நெடிய வயலாகிய தெய்வமங்கைக்கு வளம்பொருந்திய செம்மையாகிய நெல்லைக்கொண்டு போற்றி அருச்சனைசெய்து சொரிந்தாற்போன்று;

வயனெடும்–நெடும்வயல் என மாற்றப்பட்டது.

வித்துநர் வித்தி = உழுநர் விதைத்து;

உழுநர் சொரிந்தென விதைத்தார் என்க.

நாறு பதன் அறிந்து வீறு பெற பறிக்குநர் = நாற்றின் பக்குவங்கண்டு செழிப்புறப் பறிக்கின்றவரும்;

கால் புதை சேற்றினர் = காலிலே மூடிய சேற்றையுடையவரும்;

சேறு பொதிந்து ஒலி அவி வளை அமர் கையினர் = சேறு நிறைந்திருத்தலின் ஒலியடங்கிய வளையல்கள்பொருந்திய கையினையுடையவரும்;

வண் தமிழ் பாட்டின் ஒரு முறை தழீஇ உரப்பி பாடுநர் = வண்மைநிறைந்த தமிழ்ப்பாட்டினைப் பாடுதலிலே ஒருமுறையை அனுசரித்து அதட்டிப் பாடுகின்றவரும் ஆகிய;

அவர்களுள் முதற்கண் ஒருவர் ஒருபாட்டைத் தொடங்கிப்பாட அப்பாடலையே எல்லாரும் அனுவதித்துப் பாடுவர் என்க.

புதா புல் நீண்டென செறி முடி தொடையல் யாற்று வழி விடேஉ புணையின் மிதந்து வரு நாறு யாப்பு = புதரின்கண் வளர்ந்த புல்லானது எங்ஙனம் நீளுமோ அங்ஙனமே நீண்டு செறிவுற்ற முடிப்பினையுடைய தொடுக்கப்பட்ட யாற்றின் வழிவிட்டுத் தெப்பத்தைப்போன்று மிதந்துவருகின்ற நாற்றினது கட்டை;

[அவிழ்த்து நன்குறக் கடைசியர்] கடைசியர் நன்கு உற அவிழ்த்து = உழத்தியர் நன்றாகுமாறு அவிழ்த்து;

வேறு வேறு ஆக குனிந்து நடந்து = தனித்தனியாகக் கூனி நடந்துகொண்டு;

நாற்றுத்தொடையலை வேறுவேறாகும்வண்ணம் அவிழ்த்து என்றுமாம்.

அவ் இடை = நடுகைநிகழ்ந்துவரும் அந்த இடத்திலே;

மெல் இலை அளைவத்து சேறு அளை கை கொ(ண்)டு புல்லு தலை வருடி பூ குழவி ஊட்டி அவர் மிசை நிழலில் கண்வளர்த்து எழுந்து = வெற்றிலையைக் களைவுண்டாக அருந்திச் சேறளாவியகையைக்கொண்டு புலான்மணம் வீசின்ற தலையைத்தடவி அழகிய குழந்தைக்குப் பாலூட்டிக் கரையின்மேலே மாநிழலில் நித்திரைசெய்வித்து எழுந்துபோய்;

மெல்லிலை—வெற்றிலை; இதனை வினைத்தொகை என்றும், பண்புத்தொகை என்றுங் கூறுப.

ஆங்கு இடம் பெயர் நாற்றின் இளைப்பு அற நட்டனர் = அவ்வயற்றலையிலே வேற்றிடமிருந்து பெயர்ந்துவந்த நாற்றினது (பெயர்ச்சியினிமித்தம் உளதாகும்) களைப்பு அற்றுப் போகும்படி நடுதலைச் செய்தனா;

ஆயிடைக்கடைசியர் நட்டனர் எனமுடித்து ஆங்கு என்பதை அசையாகவுங் கொள்ளலாம்.

துயில் சிறு குழவி எழுந்தென கிடந்த பயிரும் திண் என செறிந்து எழுந்தன = நித்திரை போகிய சிறிய குழந்தையானது துயினீத்து எழுந்தாற்போன்று (நட்டும்) படுத்துக்கிடந்தனவாகிய பயிர்களும் திண் என்று வன்மைசெறிந்தனவாய் (வளர்ச்சியுற்று) எழுந்தன;

இளம் சிறு சேய்க்கு பால் ஊட்டு சீரில் நீர் பாய்ச்சி = இளமைவாய்ந்த சிறிய குழந்தைக்கு(ப்) (த்தாயுர் பசியும், காலநேரமும் அறிந்து) பாலூட்டிவருகின்ற ஒழுங்கைப்போன்று (உழுநரும் நட்ட அப் பயிகளுக்கு வேண்டிய அளவின்படியே நீரைப் பாய்ச்சி;

வளர்த்தாங்கு வளர்த்து = (அக்குழந்தையைத் தாய்மார்) வளர்த்துவருதல் போலவே (உழுநரும் அப் பயிர்களை) வளரச்செய்து;

வஞ்சம் கரந்து வாய் வழி இனித்து நஞ்சு செய் நட்பினர் போன்று உடன் வளரும் களை அற கட்டு = தாஞ்செய்யும் வஞ்சகத்தைத் தம்மாற் செய்யப்படுவோா அறிந்துகொள்ளாவண்ணம் உள்ளத்திலே மறைத்துவைத்துக்கொண்டு வாயின்வழியாக நலன்செய்வாரைப்போன்று இனிய உரையாகிய தேனைத் துளித்து நஞ்சைப்போல் நயந்துகொல்லும் பொய்ந்நட்பினரைப் போன்று தம்மொடு வளர்ந்துவரும் களைகளைப் பறித்து;

கண் காக்கு இமையில் கடப்ப அரும் முள் உடை வேலி கோலி = கண்ணைக் காத்துவருகின்ற இமையைப்போலக் கடத்தற்கரிய முள்ளுடைய வேலி சூழ்வித்து;

[பயிர்காத் தனரே பசுந்தமிழ் நாட்டி—னுயிர்காக் குநரே யேர்க்கை யுழுநர்] பசும் தமிழ் நாட்டின் உயிர் காக்குநர் ஏர் கை உழுநர் பயிர் காத்தனர் = பசிய தமிழநாட்டின்கண்ணுள்ள சீவராசிகளைக் காத்துவருபவராகிய ஏரையுடைய கைபொருந்திய உழுதொழிலைச் செய்துவரும், உழவோர்கள் பயிரைக் காத்துவந்தனர்;

முழுநர் வேலி கோலிக் கண்காக்கிமையிற் பயிரைக் காத்தனர் என்க.

பிணி உறு இளமையும் செல்வமும் பெறீஇய அணி சேர் மடவோர் என்ன மதர்ப்பு அடைஇ = நோய்சாராத இளமையையும், செல்வத்தையும் பெற்றுள்ள இயற்கையழகுவாய்ந்த மடப்பம்பொருந்திய பெண்கள் என்று சொல்லத்தக்க அத்துணை செழிப்படைந்து;

பிற நிறன் அகற்றி பச்சை பரப்பி = சிவப்பு முதலிய ஏனைய நிறங்களைப் பொருந்துமாறு ஒட்டாமல் நீக்கித் தனக்குரிய பச்சைநிறத்தையே பரம்பும்படி செய்து;

நிறை நீர் அடி கீழ் நிறீஇ = நிறைவுபெற்ற நீரைத் தாளின்கீழ் நிலைபெறுமாறு செய்து;

என்றது பயிரின் வளர்ச்சியை.

கரு இருந்து உண்டி சுருங்கி தளர்ந்து தள்ளாடி இளைத்து களைத்து வெள் சூல் பச்(சை) உறீஇ புறப்பாடு கொள்ள ஈன்று = கருக்கொண்டு நீர், எருமுதலாகிய உணவுகளைக் கொள்வதிற் சுருக்கங்கொண்டு கட்டவிழ்ந்து அசைந்து மெலிந்து களைப்புற்று வெண்மையாகிய சூலானது பசுமையுற்று வெளிப்படுதலைக் கொள்ள அதனையீன்று;

பொருந்து வலி போக்கி பழுத்து வெளுத்த பயிர் எ(ல்)லாம் = (கருக்கொள்ளுமுன்னர்த் தமக்குப்) பொருந்தியிருந்த வலிமையை (க்கருவீன்றபின்னர்) ப்போக்கிப் பழுப்பாகிய நிறத்தினையடைந்து (அதனையடைந்த பின்னர்) வெளுப்பாகிய நிறத்தினையுற்ற பயிர்களெல்லாம்;

தம்மை வளர்த்தமை இளமை தருக்கில் என்னும் அறிகில இன்னே அறிவுறீஇ = தங்களை உழவர் வளர்த்துவந்த தன்மையை இளமைக்கியல்பாகிய செருக்காற் சிறிதேனும் அறிந்துகொள்ளமாட்டாமல் வெளுப்புற்ற இதுபொழுதே அறிதலையுற்று;

[தம்முறு கான்முளை தமைப்புரப் பீரென—வோம்படை யுழுநரை யுரைத்து] தம் உறு கான்முளை த(ம்)மை புரப்பீர் என உழுநரை ஓம்படை உரைத்து = தமக்குற்ற பிள்ளைகளாகிய கதிர்களைக் காப்பாற்றுவீராக என்று உழவர்களுக்கு அடைக்கலங்கூறி;

கான்முளை—செறிந்த முளையுமாம். இவ் விருபொருளுங் கொள்க.

கை பிடித்து அ நிலை வீழ்ந்து உயிர் அளித்தலின் நிலத்தில் குப்புறீஇ கிடந்த = அக் கான்முளைகளைக் கையிற் பிடித்துக்கொண்டு அக் கொண்ட நிலையோடு கீழேவீழ்ந்து உயிரைத் தியாகஞ்செய்தனபோன்று வயலாகிய நிலப்பரப்பிலே குப்புறவுற்றுக் கிடந்தன;

கதிர் தொழில் கற்றலின் மெழுகு செவ்வியின் சேறு விளை வயலில் = கதிரவன் தொழிலைப் பயின்றுவருதலினாலே குழம்பாயிருந்த சேறு மெழுகுபதத்தைப் போன்று விளைந்த வயலிடத்தே;

"மெழுகுச செவ்வியிற் சேறு" என்றது "சேறு மெழுகுச் செவ்வியின்" எனமாற்றப் பட்டது.

[சிஃறுளிப் பனிப்பெயன் முற்றிய கதிரை—நனைத்துதிராது நலம்புரி போழ்து] முற்றிய கதிரை பனி பெயல் சில துளி நனைத்து உதிராது நலம் புரி போழ்து = முற்றிய நெற்கதிரைப் பனியின் பெயலாகிய சிறிய துளிகள் நனைத்து நெல்லை உதிர்ந்துபோகாது பதப்படுத்திவரும் நன்மையைச் செய்கின்ற வைகறைக் காலத்திலே;

பிறை வாய் இரும்பு கை பிடீஇ குனிந்து கதிர் தலை வை அரீஇ = பிறைபோலும் வளைவுற்ற அரிவாளைக் கையிற்பிடித்துக் குனிந்து நின்றுகொண்டு கதிரைத் தலையினிடமாகக் கொண்ட வைககோலின் அடிப்பாகத்தை அரிந்து;

[கூறுகூ றாக—மிகப்பொலி தோற்ற மறச்சிறி தாகச்—சேரக் கிடத்தி] மிக பொலி தோற்றம் அற சிறிது ஆக கூறு கூறு ஆக சேர கிடத்தி = அரிதற்குமுன்னர் மிகப்பெருகிய பயிரினதுதோற்றம் அறவே சிறிதாகும்வண்ணம் பகுதி பகுதியாக ஒருசேர அவற்றைக் கிடக்கும்படி செய்து;

[அவ்வய றன்னின்—வளர்பயிர் செல்கைக்கு வறிதுள் ளுடைஇக்—கூத்துக் கழீஇய வழிநா ளாங்கெனத்—துன்புற] அ வயல் கூத்து கழீஇய வழி நாள் ஆங்கு என தன் இல் வளர பயிர் செல்கைக்கு உள் உடைஇ துன்பு உற = அந்த வயலானது கூத்து நடந்தபோது பொலிவுற்றிருந்த இடம் கூத்துக்கழிந்த பிற்றைநாளில் எங்ஙனம் பொலிவழிந்து தோன்றுமோ அங்ஙனமே தன்னிடத்தில் வளர்ந்துவந்த பயிரின் செல்லுதலுக்கு (ப் பொலிவிழந்து) வறியதுவாகி மனஞ்சுடைந்து துன்பத்தைப் பொருந்தவும்;

உலகம் இன்பு உற = இவ் வுலகத்து மக்களெல்லாரும் மகிழ்ச்சியடையவும்;

தலை தலை சுமந்து சேர்வு உழி செல்வோர் கால்கள் சேறு பூசியும் பொருக்கு எழ காய்ந்தும் சில் என குளிர்ந்து செல் சில் நீர் யாற்றில் தெளி நீர் கழுவியும் குறு மணல் செறிந்தும் இலகுற = ஒவ்வொருவராகத் தலைமீது சுமந்துகொண்டு செல்லும்போது அச் செல்வோர்தம் கால்கள் சேற்றைப்பூசியும், பொருக்கெழும்புமாறு காய்ந்தும், சில்லென்று குளிர்ந்துசெல்லுஞ் சின்னீர் யாற்றினது தெளிந்த நீரிலே கழுவப்பட்டும், நுண்மணல்கள் பொருந்தப்பெற்றும் விளக்கங்கொள்ளவும்;

சேர்வுழி—செல்லும்போது என்றும்; ஆயினும் சேர்வு என்பது மருதநிலத்து ஊரையுங் குறிக்கும், வீட்டையுங்குறிக்கும் ஆதலிற் "சேர்வுழிச் செல்வோர்" தங்கள் ஊர் (அல்லது வீடு) இருக்குமிடத்தை நோக்கிச் செல்வோர் என்றும் பொருள் கூறலாம்.

பறவை விண் எழீஇ மெல் என புக்கு சில் கதிர் கொ(ண்)டு போய் ஒலிப்ப = பறவைகள் விண்ணிடைப் பறந்தெழுந்து மெல்லெனப் புகுந்து சிலவாகிய கதிர்களைக்கவர்ந்து கொண்டு சென்று ஆரவாரம் புரியவும்;

சிறுவினை அடிப்பின், அரவங்காட்டின் உழுநர் தங்களைக் கலைத்தோட்டிவிடுவர் ஆதலின் மெதுவாகச் சென்றனவென்க.

புறத்தில் புல் முதல போர்த்து [illegible] உடைத்துயாப் பொருள் [illegible] = [illegible] நிறைந்த [illegible] பாழ்[illegible] [illegible] வெளியிலே புல்லை முதலாகவுடையவற்றைப் போர்த்துக்கொண்டு உள்ளே [illegible] உயிர்ப்பொருள்களை மறைத்து வைத்துக்கொண்டு புற்றைபோலக் [illegible] வெளிக்காட்டு மய்க் [illegible];-

[illegible] தந்தை உடன்று யாறு கரையொடு உடற்றும் காட்சித்து ஆம் = தாயுடனே தந்தை பகைத்துப் பொருதல்போன்று யாறுனது கரையுடனே பொரும் காட்சிக்கும் [illegible];

சேயர் தாய் புடை சேர்ந்து நின்று தந்தை தெறல் தாங்கலின் நாணல் வேழம் கல் பல மரங்கள் வேர் ஊன்றி கரைக்கு உறுதி செய்து கல்லின் முன் நிற்ப = குழந்தைகள் தாயின் பக்கலிற்சார்ந்து நிலைபெற்றுத் தந்தையினது தெறுகையைத் (தாய்க்கு அடையவிடாது தம்மேல் உறும்படி) தாங்கிநின்றாற்போல நாணலும், கொறுக்கச்சியும், நல்ல பலவாகிய மரங்களும் தங்கள்வேர்களை நிலைக்குமாறு ஊன்றிக் கரைக்கு உறுதியைச்செய்து கல்லினது திண்மையைப்போல முன்னர் நிலைபெறவும்;

தந்தை அது பொறாது மைந்தரை தாக்கி வீழ்த்தி அமிழ்த்தி விரைந்து ஈர்த்து அலைத்தலின் = தந்தை அச் சேயர் தகைமைக்குப் பொறுக்கமாட்டாது தனது புதல்வரைப் பொருது கீழே விழும்படிசெய்து வெளியெழாதவண்ணம் அமிழ்த்தி வேகமாக இழுத்து வருத்துதலின்;

யாறு அவை தம்மை அடி வேர் அறுத்து முடி கை பிடித்து வீழ்த்தி தூக்கி அமிழ்த்தி புரட்டி அலைத்து ஈர்த்து ஓட்டும் = யாறுனது (நாணல்முதலிய தனது மக்கள் தாயுடன் சேர்தற்குப் பொறாது) அவைதங்களை ஆணிவேரறுத்து உச்சியை அலையாற்பற்றிக் கீழேதள்ளிப் பின்னர் மேலே தூக்கிப் பின்னரும் கீழேயமிழ்த்திப் புரளும்படி உருட்டி வருந்தவைத்து இழுத்து ஓட்டாநிற்கும்;

அ வயின் = (பொய்கை, குளன், பாழ்ங்கிணறு, யாறுமுதலியன விளங்குகின்ற) அம் மருதநிலத்திலே;

கண் உடை செம் வரி கரும்பு காடும் = கணுக்களையுடைய சிவந்த வரிபொருந்திய கரும்பு படர்ந்த காடுகளும்;

மிகுதிபற்றிக் காடென்றார்; அதுபற்றி "அடர்ந்த" என்னும் அடைகொடுத்தாம்.

[சாறுபிழி யாலைத் தீஞ்சுவைப் பாகும்] தீம் சுவை பாகு சாறு பிழி ஆலை உம் = தித்திக்கும் சுவைபொருந்திய சருக்கரைப்பாகைத் தருகின்ற கருப்பஞ்சாற்றைப் பிழிகின்ற ஆலைகளும்;

[சளுக்கென வீழ்ந்து சாறுபொழி மாவின்–கனியும்] சளுக்கு என வீழ்ந்து சாறு பொழி கனியின் மாவும் = சளுக்கென்னும் ஒலியுண்டாகக் கீழேவீழ்ந்து அவ் வீழ்கையால் இரசத்தைப் பொழிகின்ற கனிகளையுடைய மாமரங்களும்;

[வாழைக கனியும்] கனி வாழையும் = பழமுடைய வாழைகளும்;

[மாங்குயில்–செவிவழித் தித்திக்குந் தீங்குரற் பாட்டும்] செவி வழி தித்திக்கும் தீம் குரல் பாட்டு மா குயிலும் = செவியினிடமாக வந்துபுகுந்து தித்தித்தலைச்செய்யும் இனிய குரலாற் பாடும் மாமரத்துக் குயில்களும்;

சிலு சிலுத்து ஓடும் சில் நீர் யாறும் = சிலுசிலு என்னும் ஓசையுண்டாக ஓடுகின்ற சிறியவாகிய நீரையுடைய யாறுகளும்;

[வழிவரு வோர்தம் வருத்தம் போக்கும்–சோலை மருதின் குளுகுளு நிழலும்] வழி வருவோர் தம் வருத்தம் போக்கும் குளு குளு நிழல் சோலை மருதும் = வழிநடந்து வருவோர் தங்களுக்கு நடையால் நேர்ந்த [illegible] போக்குகின்ற (கண்முதலியவற்றிற்குக்) குளுகுளு [illegible] தன்மையைச் செய்கின்ற நிழலைத்தருகின்ற மருதமரப்பார் [illegible] [illegible] மருதமரங்களும்;

# உரையின் விளக்கம்.

*கண்ணெண்டு மூக்கை கவின வைத்து உருக்கும் மெல் கேழ் மணம் கமழ் மெல் இணர் மலரும் = காணுங் கண்ணுடனே மூசுரும் மூக்கினையும் அழகு பொருந்தவைத்து உருக்குதலைச் செய்துவரும் மெல்லிய நிறனமைந்து மணத்தைவீசும் மிருதுவாகிய கொத்துக்களையுடைய பூக்களும்;*

*திருமகள் உரைமகள் சேர்ந்து நின்று ஆர்த்து களித்து குதித்து காமர் தரு காட்சியும் = இலக்குமியும், கலைமகளும் ஒருங்குசேர்ந்து நிலைபெற்று ஆரவாரித்துக் களிப்பையடைந்து குதித்து விளையாடி விருப்பத்தைத்தருகின்ற காட்சியும்;*

*பல தலை பாம்பின் பாளை விரிந்து இலகி ஓங்கு குலை தெங்கின் உயர் சால் சோலையும் = பலவாகிய தலைகளையுடைய பாம்பினைப்போன்று பாளைவிரிந்து (இளமையாகிய குரும்பைகளுடன்) விளக்கமுற்று ஓங்கிய குலைகளையுடைய தெங்குகளின் உயர்ச்சிநிறைந்த சோலைகளும்;*

*தூங்கு குலை பச்சை மணி காய் வெள் வரை தாங்கு அரவ அணர்ந்த கணவாய் பாளை பாங்கு எ(ல்)லாம் பச்சை பரப்பி தண் எ(ன்)னும் கமுகின் படப்பையும் = தொங்குகின்ற குலைகளிலே மரகதமணிபோன்ற காய்களையும், வெள்ளிய வரைகளையும் கொண்டு படத்தினை உள்ளே வைத்துக்கொண்டிருக்கின்ற பாம்பு படத்தை விரித்தாற்போன்றதும், கணவாய் மீளேற்றப் போன்றதுமாகிய பாளையைவிரித்துப் பக்கங்களெல்லாம் பச்சென்ற நிறத்தைப்பரப்பித் தண்ணென்றிருக்கும் கமுகின் சோலைகளும்;*

*பொன் உதிர் காஞ்சியும் = பொன்னிறமொத்த மகரந்தப்பொடிகளை உதிர்த்துவருகின்ற காஞ்சிமரங்களும்;*

*ஊர் சுற்றி ஒள் நறு மலர் மலர்ந்து உவகை செய் ஓடையும் = ஊர்முழுவதையுஞ் சுற்றி வளைந்து ஒள்ளிய நறியமலரை மலர்ந்து மகிழ்ச்சிசெய்துவருகின்ற நீரோடைகளும்;*

*ஒள் நிழல் ஆடையும் = ஒளிபொருந்திய நிழலாகிய ஆடையும்;*

*புளி சுவை வரி திரள் சிறு காய் முள் உடை பிரம்பு செறி புதரும் = புளிப்பாகிய சுவையும், வரிகளும், திரட்சியும் உடைய சிறிய காய்கள்பொருந்திய முட்களையுடைய பிரம்புகள் நிறைந்த புதர்களும்;*

*[அளப்பில பொலிந்து—மருதஞ் சான்றது மருதத் தண்பணை] மருதம் தண் பணை அளப்பு இல பொலிந்து மருதம் சான்றது = மருதமாகிய தண்ணிய பண்ணைகளையுடைய நிலனானது கணக்கற்ற பலவகை வளப்பங்களும் விளங்குதலுற்று ஊடலுமுவகையுமாகிய ஒழுக்கம் நிரம்பப் பெற்றது;*

*ஆங்கு = அந் நிறைவுபெற்ற மருதநிலத்திலே;*

*மேல் இருந்து வீழ்ந்து நுரைத்து தாவிய பாய்ந்து தான் காணாத் நிலத்து உள் புக்கு நிமிர்ந்து வெளி போந்து = மேலேயிருந்து கீழேவிழுந்து நுரைத்துத் தாவிப்பாய்ந்து தன்னைப் பிறர் காணவொண்ணாத நிலத்துட்புகுந்து மேலெழும்பி வெளிச்சென்று;*

*நேர் ஓடி நிலை தடுமாறி = நேராக ஓடி அவ் வோடுகின்ற நிலையினின்று தடுமாற்றமடைந்து;*

*வளைந்து வளைந்து வழி அறியாது = வளைவாகி வளைவாகிச் சென்று மேற்செல்லும் வழியை இதுவென அறிந்துகொள்ளாது;*

*சுற்றி தடவி சுழன்று சுழல் சூழ்ந்து = தன்னைச் சுற்றித் தடவிக்கொண்டு சுழன்று சுழலொடு சூழ்ந்துகொண்டு;*

*மூப்பு உடை முதியரின் மேட்டில் உறி = மூப்புற்ற முதியரைப்போன்று மேட்டுப் பகுதியில் உறிச்சென்று;*

*யாப்பு உடை இளைஞரின் பள்ளம் வீழ்ந்து = கட்டமைந்த இளையோர்போலப் பின்னப்பகுதியில் விழுந்து;*

தம் நாடு புரக்கும் வேந்தரின் புரந்து = தமக்குரிய நாட்டை (இனிதாமாறு தாமே) ஆண்டு வரும் அரசரைப்போற் பாதுகாத்து;

பிறர் நாடு அழிக்கும் வேந்தரின் அழித்து = மாற்றாருடைய தேசத்தை (ப்படை திரட்டிச் சென்று) அழித்திடும் அரசரைப்போன்று அழித்து;

பல பல கொண்டு பல பல அளித்து = பலப்பலவாகிய பொருள்களை எடுத்துக்கொண்டு அக் கொண்டமைபோலப் பலப்பலவாகிய பொருள்களையுங் கொடுத்து;

கள்ளும் உண்டு கடவுள் பேணிய நல் உணவும் உண்டு = கள்ளையும் அருந்திக் கடவுளுக்கு நிவேதித்த நன்மையமைந்த உணவுகளையும் உட்கொண்டு;

நல்லன அல்லன ஆகிய எல்லாம் அமைந்த அ பொருளின் = நன்மையமைந்தனவும், தீமையமைந்தனவும் ஆகிய எல்லாப்பொருள்களிடத்தும் பொருந்திவருகிற அக் கடவுளைப் போல;

[பொலிந்தன் றம்மா பொருப்பின் யாறே] பொருப்பு ஈன் யாறு பொலிந்தன்று = மலை பயந்த யாறானது பொலிவாகிய விளக்கத்தைப்பெற்றது;

யாறு, வீழ்ந்து, பாய்ந்து, காணுது, வெளிபோந்து, ஓடித், தமோறி, வழியறியாது, சூழ்ந்து, ஏறி, வீழ்ந்து, புரந்து, அழித்து, கொண்டு, அளித்து, உண்டு, பொலிந்தன்று என முடிக்க.

அ வயின் = அவ் வமையத்திலே;

அவவிடம் என்றல் சாலாது, தையின்வருகை எவவிடத்திற்கும் உரியதாகலின்.

தைஇ சான்ற தைஇ திங்கள் = தையினது தன்மை நிறைந்த தையாகியமாசம்;

திஙகளைப் பூசஞ்சார்ந்த மாசம் என்றும் கூறுப; மதி பௌர்ணமிதோறும் எவ்வெந் நக்ஷத்திரஙகளைச் சார்ந்துவருமோ, அவவந் நக்ஷத்திரஙகளுககுரிய பெயர்களானே அவவம்மாசஙகள வழஙகப்பெறுதலின் என்க.

[மெய்மமை சான்று மேயது நலந்தர] மெய்ம்மை சான்று நலம் தர மேயது = உண்மை நிறைநது நலததைத் தருவான்வேண்டி வந்துபொருந்தியது;

அப்பருவத்தினது தன்மை பொய்ததுப் போகாதவாறு மேயது என்க.

விழா வேட்டும ஆடல் வேட்டும் இன்பம் விற்கும் இளையோர் தம் மாடு அன்பு உறு புணர்ச்சி அடைதல் வேட்டும் எநதிழையவா தமக்கு இனனு ஈநது வெறுப்பு வழி மேஎய் ஊடல் விளைககும் மைந்தா தமககு எ(ல்)லாம = விழாக்காணலை விரும்பியும், புனல்விளையாடுதன் முதலியவற்றைச் செய்தற்கு விரும்பியும், இன்பத்தை விலையளவுசெய்து விற்றுவரும் இளையோர்தம்மிடததிலே அன்புற்ற கலவியை அடைதல் விருமபியும், இல்லகததிருக்கும் எந்தப் பட்ட ஆபரணஙகளையுடைய தத்தம் பெண்டிர்க்குத் துன்பத்தைககொடுத்து அக் கொடுத்த வெறுப்பின்வழியாக வந்துபொருந்தும் ஊடலை உண்டாக்கிவரும் வாலிபர் தமக்கெல்லாம்;

"மகிழ்ச்சி வாய்ப்ப" என்னுமிதனை 238-ம் அடிக்குப் பின்னர்க் கூட்டுக.

விருநது கொ(ண்)டு புக்காங்கு இனிப்பும் விருந்து பிரிந்தாங்கு அமையும் கசப்பும் = உட்செல்ல வகையின்மையால் அச் செல்கைககு உபகாரமாகும் விருந்தினரைத் தம்மொடு கொண்டு இல்லுட் புக்கவழி இனிமையும், அவ விருந்து பிரிந்தபொழுது உண்டாகும் வெறுப்பும்;

தந்தையை நினைந்தாங்கு இளம் சிறார் செக்கு செக்கு அழுகையில் புணர்ந்து ஆங்கு அவர் தம் துயில்வில் புகைவும் = தந்தையை நினைத்து இளமைபொருநதிய சிறுவர் செக்குசெக்குரு அழும்பொழுது கூடி அச் சிறுவர் உறங்குதலிற் கொள்ளும் கொதிப்பும்;

உருள் பெறும் ஆழியின் உருண்டு வராவாய் அருள் பெறும் இன்பின் அ நிலை ஒப்ப = உருண்டுசெல்லும் சக்கரத்தைப்போல இன்பதுன்பஙகள் மாறிமாறி வருவிலவாய் அருளைப் பெற்ற காரணத்தானே உண்டாகும் அப் பெரிய நிலையிலே நிலைபெற்ற இன்பத்தைப் போல;

மகிழ்ச்சி வாய்ப்ப = உவகை பொருந்தவும்;

(232-ம் அடியிலுள்ள "மகிழ்ச்சி வாய்ப்ப" என்றது இங்கே கூட்டப்பட்டது.)

பல் வகை பரத்தையர் தம் உறு கணவரொடு ஆடி மகிழ்ந்து தமக்கு இன்பு ஈத்தாங்கு=பலவகையாகிய பரத்தையர்கள் தமக்குற்ற கணவரை மயக்கி அவர்தம்மோடு புனல்விளையாடல் முதலியவற்றைச்செய்து மகிழ்ச்சியடைந்து தங்களுக்குத் துன்பத்தைக் கொடுத்து வந்தமை போன்று;

இல் உறை கற்பினர் இவர்க்கு துன்பு ஈத்து தாம் இன்பு உறீஇ தகைமை கொ(ண்)டு தழைக்க=இல்லறநெறியிலே அமைந்தவரும் கற்புடையார் இந்தப் பரத்தையர்தங்களுக்குத் துன்பத்தைக்கொடுத்துத் தாம் இன்பமுற்றுத் தகுதியொடு தழைக்கவும்;

[வந்தமைந் தன்றே தையணி திங்கள்] தை அணி திங்கள் வந்து அமைந்தன்று=தையாகிய நன்மைபொருந்திய மாசம் வந்துபொருந்தியது;

[ஊர்வறி தாக வுளர்பலர் யாற்றி—னீராட வந்து புகுஉ நிலத்தனர்—தலையன்றி மற்றவை யாமறிதல் சாலாது] உளர் பலர் ஊர் வறிது ஆக யாற்றில் நீர் ஆட வந்து புகுஉ தலை அன்றி மற்றவை தாம் அறிதல் சாலாது நிலத்தனர்=ஊரிலுள்ளார் தம்முட்பல்லோர் தாமிருந்த ஊர் வறிதாகும்வண்ணம் யாற்றிலே நீராடுதற்கு வந்துபுகுந்து தங்கள் தலையன்றி ஏனைய உறுப்புக்களையெல்லாம் அறிந்துகோடற்கு இயலாது அவ்வெஞ்சியன நீருள் மறையும்படி நிலைபெற்றனர்;

வரால் முதல் ஆகிய வாழ் மீன் கரை செறி முதலையும் ஆமையும் மலி புதர் சரேல் என பாய்ந்து பதுங்கிய=வராலை முதலாகவுடைய நீரிலே வாழ்ந்துவருகின்ற மீனினங்கள், கரையிலே நெருங்கிய முதலைகளும், ஆமைகளும் நிறைந்த புதர்களின்கண்ணே சரேல் என்னும் ஒலியுண்டாகத் துள்ளிப் பாய்ந்து பதுங்கிக்கொண்டன;

விரைவும், ஒலிப்பிறப்புந் தோன்றச் "சரேல்" என்றமையானே "துள்ளி" என்னும் அடைகொடுக்கப்பட்டது.

பனி நீர் கரை மிசை ஏறி படர்ந்து தன் அமை இருக்கையை நாட்டவர் கொண்ட நவைக்கு அவர் இருக்கையை ஆட்சி கொள கருதி ஆங்கு சென்றது=குளிர்ச்சிபொருந்திய யாற்றுநீரானது (தன்னகத்தே சனத்திரள் நிறைதலிற்) கரைமீதேறி விரிந்து தனக்குப் பொருந்திய இருப்பிடத்தை நாட்டவர் கைப்பற்றிய குற்றத்திற்காக அவர்க்குரிய இருப்பிடத்தை ஆட்சிசெய்யக் கருதியதுபோல் அவ் ஊர்க்கட் சென்றது;

பசும் செம் மஞ்சள் பழுக்காய் தளிர் இலை மூன்று புடை தீம் காய் தேன் சொரி முதிர் கனி துருக்கம் விரை பொருள் தூய்து நறும் பனி மலர் பல் நிறன் உண்ட ஓலை கரு மணி இன்ன கை எடுத்து=ஈரம்புலராத சிவந்த மஞ்சள், முற்றிய பாக்கு, தளிர்த்த வெற்றிலை, மூன்று புடை கொண்ட தித்திக்குந் தேங்காய், தேனைச் சொரிகின்ற முற்றிய பழம், குங்குமம, வாசனைத் திரவியங்கள், தூய்தாகிய நறிய குளிர்ந்த மலர், பலவகையான நிறங்களைக்கொண்ட பனையோலை, கருமணி, என்னும் இவைபோன்றவற்றைக் கையில் எடுத்துக்கொண்டு;

இனியரொடு மக்கள் நன்னர் கொண்டு பல நாள் பெறுகென=தந்தம் கணவரோடு மக்களும் நன்மையடைந்து பலவாகிய (நீடிய) வாழ்நாளைப் பெறுகவென்று;

"நாள் பல" என்பது "பல நாள்" என்று மாற்றப்பட்டது.

கல்லும் கரைய கசிந்து ஏத்தி=(திண்ணிய) கல்லும் இளகிக் கரைந்துபோகுமாறு உள்ளங் கசிதலுற்றுத் துதித்து;

கை வளை கறங்க கடும் புனல் பெய்தனர்=கையிலணிந்துள்ள வளையல்கள் ஒலிக்கும் வண்ணம் விரைந்து ஓடிவருகின்ற யாற்றுப்புனலிற் பெய்தனர்;

கணவர், மக்கள் என்றவிலேசானே இல்லார் என்பது பெற்றாம்.

செம் கேழ் சேறும் விரையும் பூசி தேம் கமழ் மலர் தார் சில் மலர் அணிந்து நல் உண்வு அருந்தி நறும் கனி சிவப்ப மெல் இலை சவைத்து=செம்மைநிறம் வாய்ந்த சந்தனக்குழம்பையும், வாசனைக்கலவையையும் பூசி, வாசனை பரிமளிக்கின்ற மலர் மாலையையும், சிலவாகிய பூக்

வளையும் அணிந்து மென்மைவாய்ந்த உணவினையுட்கொண்டு நகும் கொவ்வைக்கனிபோன்ற வாயிதழ் சிவப்பேற வெற்றிலையைச் சுவைபெறுமாறு மென்று;

புணர்ச்சியின் இனிக்க சிற்றண்டியோடு தேன் பெய் பாலும் பழனும் அலை கை பற்றி எடுஇ கடல் ஆம் கணவனை கலக்க செல்லும் இ காட்சி=புணர்ச்சிகாரணமாக இனிமையைப் பொருந்தச் சிற்றுண்டியுடனே தேன்பெய்த பாலையும், பழங்களையும், அலையாகிய கையாற் பற்றி எடுத்துக்கொண்டு கடலாகிய காதலனைக் கலத்தற்குச் செல்லும் இந்தக் காட்சியை;

[கண் டனையோ காப்புடை யில்லின்–மாட்சிகொண் டமைஇய மடநல் லோய்] காப்பு உடை இல்லின் மாட்சி கொண்டு அமைஇய மடம் நல்லோய் கண்டனையோ=காவலையுடைய இல்லறத்தினது குணஞ்செய்கைகளாகிய பெருமையைக் கொண்டமைந்த மடப்பம்வாய்ந்த நன்மையமைந்தவளே கண்டனையோ;

[நீ–யாட்சி தருகுவை கொல்லோ வதனி–னென] அதனின் ஆட்சி தருகுவை கொல்லோ என=நீ அவ் யாறு சேறலையொத்த ஆட்சியை எனக்குத் தருகுவையோ என்ற;

தெறு கூற்று இரு செவி புகா அளவையின்=வருத்துகின்ற சொல்லானது இருசெவிகளிற் புக்க அவ் வமயத்திலே;

[இனித்தா னயக்க விங்ஙன மெண்ணினை–மணித்தா ரோயென்று] மணி தாரோய் இனி தான் இங்ஙனம் நயக்க எண்ணினை என்று=அரதனமாலையை அணிந்த காதலனே இப்பொழுதுதான் இத்தன்மையாக நின்னை யான்விரும்புதற்கு எண்ணினைபோலும் என்றுகூறி;

இதுகாறும் யான் நின்னை நயந்துவருதலை மதித்திலைபோலும் என்பது குறிப்பு.

[உவர்க்கடல் யாற்றிற்–குதவின ளம்மா வாங்கொரு பூங்கொடி] ஆங்கு ஒரு பூ கொடி உவர் கடல் யாற்றிற்கு உதவினள்=அவ் யாற்றகத்திலே பூங்கொடி போன்றவளாகிய ஒருத்தி உவர்க்கடலை யாற்றிற்கு இனிதாகுமாறு உபகரித்தாள்;

உவர்க்கடலை வேட்டுச்செல்லும் யாறானது அலைவின்றி அதனைப் பெற்றுக்கொள்ளும்படி உதவினள் என்பது ஒருவகைப் புனைவணி. அழுதாள் என்பது குறிப்பு.

ஒரு பூங்கொடி தாரோய் இனித்தான் எண்ணுதியோ என்று யாற்றிற்கு உதவினள் என முடிக்க.

ஒருத்தி=அவ் யாற்றில் நீர்விளையாடும் மற்றொருத்தி;

தன் உறு கணவனும் அயலவள் ஒருத்தியும் கண்ணில் கலாம் காந்து செயல் கண்டு=தனக்குற்ற காதலனும், பரத்தையொருத்தியும் (ஆகிய அவ் விருவரும் தமக்குள்ளே) கண்வழியாகக் கலகத்தை மறைத்துச் செய்துவருதலைப் பார்த்து;

கணவனொடு ஊடி=மனசிலே கணவனோடு ஊடுதலைச் செய்து;

கண் நேர் பிறள் ஒடு தண் நீர் எற்றியும் தாழ்ந்து மூச்சு அடக்கி வென்றி மேயும்=கண்ணையொத்த நேசம்பூண்ட மற்றொருத்தியோடு தண்ணீர் வீசியும், நீருள் அமிழ்ந்தி மூச்சைவிடாதடக்குவதில் வெற்றிபொருந்தியும்;

கரவு சினம் வெளிப்பட்டு உள் நீர் மாறி கண்ணீர் உகுத்தனள்=மறைத்துவைத்திருந்த கோபம் வெளிப்பட்டு (அப் பட்டமையானே) மனசின்றன்மை மாற்றமடைந்து கண்ணீரைச் சொரிந்தாள்;

இன்ன பல வகையின் எந்திழையவர் எ(ல்)லாம் இன்னல் உறீஇ ஊடல் எய்தினர்=இவைபோன்றனவாகிய பலவகைகளாலும், தாங்கிய ஆபரணத்தையுடைய பெண்டிரெல்லாரும் துன்பத்தை அடைந்து ஊடுதலுற்றார்;

"எய்தின ரூடல்" என்பது "ஊடலெய்தினர்" என மாற்றப்பட்டது.

ஆங்கு அ காளையர்=அவ் வமயத்திலே அந்தக் காளைபோன்ற தலைவர்;

பரத்தையர் சாரில் இல் உறை கடவுளர் எண்ணம் வெதுப்புநர் = பரத்தையர்தம் பக்கலைச் சார்ந்திடினே இல்லறநெறியில் உறைந்துவருகின்ற தெய்வங்களாகிய பெண்டிர்கள் தங்கண் மனதை வெதும்பச்செய்கின்றனர்;

இன்னவர் சாரில் அன்னவர் இகலி வேல் கண் ஓச்சி வெருட்டி வருத்துநர் = இப் பெண்டிர்தம் பக்கலைச் சார்ந்திடினே அப் பரத்தையர் கோபங்கொண்டு வேலாகிய கண்ணைவீசி அச்சுறுத்தி வாட்டுகின்றனர்;

அவ் இடை இரு வழியானும் அலைஇ செய்வது தேரார் நினைத்தனர் தெளீஇ குலம் மணி விளக்கு ஆம் தலைவியர் பக்கல் நிலை உற்றனர் = அவ்விடத்திலே (குலமகளைச் சார்தலும், பொதுமகளைச் சார்தலுமாகிய அவ்) இரண்டு வழிகளானும் அலைப்புண்டு செய்துகொள்ளத் தக்கது இதுவென்று தெளியாமற் நினைப்புற்று(த்) (ப்பின்னர் ஒருவாறு) தெளிந்து குலத்தின் மாசிருளை அகற்றிப் புகழொளி பரப்பும் விளக்காகின்ற தலைவியர்தம் பக்கத்திலே (நின்றொழுகல் நன்றெனக்கொண்டு) நிலைமைபெற்றனர்;

நிலை உற்றவர்தாம் = அங்ஙனம் நிலைமையிற் பொருந்திய அவர்தாம்;

தவல் அரும் இன்பு எ(ல்)லாம் தாம் பெறல் பொருட்டு = கெடுதற்கரிய இன்பங்கள் எல்லாவற்றையுந் தாங்கள் பெற்றுக்கோடற்பொருட்டு;

("தவலரும்" என்ற 299-ம் அடி இங்கே கூட்டப்பட்டது.)

யாறு தொட்டும் பசும் மரன் எட்டியும் வீறு பெறு கடவுளர் மெய் பெயர் குறித்தும் குலத்தை சுட்டியும் புனைந்து பொய் சூள் = யாற்றினைத் தொட்டும், பசிய மரத்தை எட்டிப் பிடித்தும், வீறுடைக் கடவுளர்தம் உண்மைப்பெயர்களைக் குறித்துக் கூறியும், தங்கள் குலத்தைச் சுட்டிக்கூறியும் பொய்ம்மையாகிய சத்தியங்களை மெய்போல் விளங்கச் சோடித்தும்;

"புனைந்து பொய்ச்சூள்" என்பது "பொய்ச்சூள் புனைந்து" என மாற்றப்பட்டது.

மடவோர் மான மாயம் செப்பி = மடப்பம்வாய்ந்த மகளிரையொப்ப மாயவார்த்தைகளைச் சொல்லியும்;

செயற்கை கண்ணீர் சோர பெருக்கி = செயற்கையாலாகிய கண்ணீரை ஒருசேர வைத்திருந்து பின்னர் வெளியிலே பெருகும்படி செய்தும்;

[உருக்கி மயக்கி யொண்ணுத லவாதமை] ஒள் நுதலவர் த(ம்)மை உருக்கி மயக்கி = ஒள்ளிய நெற்றியையுடைய அப் பெண்டிர்களை மனமுருக்கி மயங்கவைத்து;

உவகை ஊட்டி உவந்தனர் = மகிழ்ச்சியைக் கொடுத்து (அக் கொடுத்த காரணத்தானே தாமும்)மகிழ்ச்சியை அடைந்தனர்.

---

இந்நூலாசிரியர் கூறிய

# ஓம்படைச் செய்யுள் முதலியன.

பூமாலைக் குண்டழிவு பொன்மாலைக் கேதுமணம்
பாமாலைக் குண்டே பயன்.

மாபுவரு தற்கும் மன்னுமற முதல
திருவரு தற்குந் தேர்ந்துபடைத் திட்ட
வாடேஉ விழைபு மகடேஉ வடிவு
மகடேஉ விழைபு மாடேஉ வடிவு

வேந்தன் மகன்வேந்தா மேவுதற்கு மப்பொரு
ளார்ந்து வடிவக்கல் லாடற்கும்—போந்திவ
னானிலக் காப்பு நடத்தற்கு நாட்டினா
னானிறக் காப்பா னலம். (2)

வினையும் வினைதுய்க்கு மெய்யின் பிறப்பு
மனைவித் தவைபடைந் தில்லை—யெனுங்கோ
ளழித்தேற்றத் தாழ்விற் பொருதலையா திம்பர்
வழிச்சார வைத்தான் றுணை. (3)

வினையின் வழியாம் பயனை யுயிர்க
டிளைத்த லுடல்வழித் தென்னி—னிழைத்தவுயிர்க்
கெய்தும் பிறப்பு நிறன்கொள னேரிதென்
றைய மறுத்தா னவன். (4)

புறத்துப் பறைமை பொருந்தி யகத்தின்
மறைமை யிவைநேர் பிறசேர்—திறனோப்பச்
சார்வினையு முண்டென்று சாற்றியெனை யாண்டாய்க்கி
யாரொப்பர் யாண்டு மிலர். (5)

ஏந்தும் பொருட்கேற்பப் பாலும் பயன்றரு
மார்ந்த விறையோ னருட்பாலும்—வாய்ந்த
வுடல்வினைக்குத் தக்காங் குதவுமென் றுநங்
கொடையோனை நெஞ்சே குறி. (6)

பிறரறியா வண்ண முளத்தை மறைஇ
முறைவினை நன்கு நடாத்து—மிறைவ
னறிவுச் சுடரென் றறிவித் தெளியேன்
குறையொரீஇத் தந்தா னிறை. (7)

நல்லன காணலுங் கேட்டலு நல்லவா
மல்லன பெற்றா லபர்ச்சியா—முள்ளன
காணற் குணர்விலவை காணா திருக்கவெனை
மாணப் புரிந்தா னருள். (8)

அகத்தி னலனை யறிகிலெ னந்தோ
புறத்தி லதைப்பெறுவான் போனேன்—றிறத்துக்
குருகி யெனையா ளொருவ னிருதா
ணிழன்முவ் வுலகி னிலை. (9)

எல்லாம் பிணவூ ணிருவோர் விழையுறுப்
பெல்லாம் புலைமண மின்னவாற்—புல்லு
மி[illegible] வெறுத்தவ ணெய்தருத்தி யூட்டு
ம[illegible] யாம்பெறும் பேறு. (10)

புலவிற் குறைஇக் கொலையொரீஇப் பார்ப்பார்
நிலைப்பதி னேனையோர் நண்ணு வழக்கிறு
றுவிறக் காப்புப் பிறப்பிற் கதுவுமென்
றூனமுறை தேற்றிற் றது. (11)

புலத்தை மறைப்பிற் புகுத்திய நெஞ்ச
நினைக்குமா னெஞ்சழியி னெண்ண—நினைந்துமின்
றூயி னரிவையான் மறுபிறப்பின் முன்னவை
தோயுங்கொ லென்றூன் றனை. (12)

வறியோன் றமினீத்த வேலையிற் றன்னை
யிறையோனைக் கண்ட வியல்பிற்—பிறக்குநோய்
கொண்ட மருத்துவனைக் கூப்பிட்டுக் காக்கெனல்
கண்டெனை யாண்ட தகை. (13)

---

(இ-ள்.) மரபு வருதற்கும்=வமிச பாரம்பரை வளர்ச்சியுற்று வருதற்கும்;

மன்னும் அறம் முதல திரு வருதற்கும்=நிலைமைபெற்ற தருமத்தை முதலாகக்கொண்ட புருடார்த்தங்களாகிய செல்வங்கள் வளர்ச்சியுற்று வருதற்கும்;

பக்குவம்பெறாத எல்லாச்சீவராசிகளும் பிறத்தல்வேண்டும் என்பார் "மரபுவரு தற்கும்" என்றும்; அவ்வாறு பிறந்தமக்கட்குச் சிறந்தசாதனங்கள் அறம்முதலிய நான்குமாம் என்பார் "மன்னுமற முதல" என்றும்; அவையே ஆன்மாக்களுக்குச் செல்வமாகும் என்பார் "திருவரு தற்கும்" என்றும்; இனி அப் பொருளை ஈட்டுங்காலும், விதிப்படி அதனைப் போற்றி அளிக்குங் காலும், அதனானே இன்பம் பெறுங்காலும் அறநெறியே வேண்டும் என்பார் "மன்னுமற முதல" என்றும்; அவ் வறமே அவ்வலகாட்சிக்குச் செல்வம் என்பார் "திருவரு தற்கும்" என்றும் கூறினார். "திரு என்பதை வீட்டிற்கும், புருடார்த்தங்கள் நான்கிற்கும் இயைப்பாரு முளர்.

தேர்ந்து படைத்திட்ட=ஆராய்ந்து சிருட்டித்த;

விலங்கு முதலியவற்றிற்குப் பகுத்தறிவின்மையின் அவற்றானே அறமுதலாயவற்றை இயற்றிக்கோடல் அமையாது. அறமுதலாயவற்றைச் செய்துகோடற்குப் பகுத்தறிவு வேண்டும். அதனை மக்கட்பிறப்பினர்க்குக் கொடுத்தருளினார் என்பது போதரத் "தேர்ந்துபடைத் திட்ட" என்றார். மானுடயாக்கையை முதற்கண் ஆன்மாக்களுக்கு இறைவன் கொடுத்தருளினார் எனவும், அவ் வான்மாக்கள் தங்கள் தங்கள் புண்ணியபாவ கருமங்களுக்கேற்பத் தேவபதவி முதலாயவற்றையும், விலங்குபதவி முதலாயவற்றையும் பெற்றன எனவும் கூறிய மறைபொருள் உண்மையை ஈண்டுப் புலப்படுத்தினார். இறைவனது கருணையாகிய பாலானது மக்களது புண்ணியபாவ கருமங்களாகிய பாத்திரங்களிலே ஏந்தப்பட்டு நலனையும், தீமையையும் பயக்கின்றதென்க. களிம்புடைச் செம்புமுதலாய பாத்திரங்களில் ஏந்தப்பட்ட பால் பழுதுபடுவது போல் இறைவன் கருணையும் பாவ கருமத்தார்க்குத் தீதாய் முடியும் என்க.

ஆடூஉ விழையும் மகடூஉ வடிவும்=ஆண்மக்கள் (பெரும்பாலும்) காதலித்துவருகின்ற பெண்மக்களது சரீரமும்;

மகடூஉ விழையும் ஆடூஉ வடிவும்=பெண்மக்கள் (பெரும்பாலும்) காதலித்துவருகின்ற ஆண்மக்களது சரீரமும்;

வீடுபேற்றிற்கும், ஆற்றற்கும் உரியவன் ஆண்மகனாதலின் அவனை முற்கூறினார். ஒருவரை ஒருவர் வடிவத்தாலே நேசித்துவருவர் என்பதுபோதர "ஆடூஉ விழையும் மகடூஉ வடிவும்—மகடூஉ விழையு மாடூஉ வடிவும்" எனக் கூறினார்.

நரை திரை மூப்பே நலிவு உறு பிணியே என்றல் தொடக்கத்து இவை கூடி = நரை, திரை, மூப்பு, துன்பஞ்செய்கின்ற பிணி என்பனவற்றை முதலாகவுடைய இவைகளெல்லாம் பொருந்தி;

நரை—மயிர் வெளுத்தல்; திரை—தசை சுருங்கல்.

நரைதிரைகள் வரப்பெறுமன் மூப்பு வருதலுமுண்டு என்பதுதோன்ற அது பின்னர்க் கூறப்பட்டது. "யாண்டுபல" என்னும் புறப்பாட்டும் பிறவும் இதனை வலியுறுத்தும். இனி மூப்பினைப் புணர்த்தற்கு நரையும், திரையுங் காரணங்களாக இருத்தலின் அவை முன்னர் வைக்கப்பட்டன என்றலும் ஒன்று.

பிணியானது மூப்பினிடத்தன்றி இளமையிடத்தும் புகுந்துவருத்தும் என்பதுபோதர "நலிவுறு பிணியே" என அடைகொடுத்துப் பிரித்துக் கூறினார். "முற்றி யிருந்த கனியொழியத் தீவளியால் நற்காய் உதிர்தலு முண்டு" என நாலடியினும், "மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை" என மணிமேகலையினும் வருவன காண்க. தத்தஞ் செய்கை காரணமாகவே இவையெல்லாந் தோன்றுமென்பார் "இவைகூடி" என்றும்; பேய், விலங்கு, அரவம், பகைவர், கள்வர், தீ, நீர், முதலிய எல்லாம் அடங்குதற்கு "என்றற் றொடக்கத் திவை" என்றும் கூறினார்.

ஒருவர் ஒருவரை வெறுக்கிடும் ஆறு அனைய உறுத்தியும் = அவருள் ஒருவரை மற்றொருவர் வெறுக்கும்வண்ணம் இப் பிறப்பிலே செய்தும்;

ஆடவரை மடவோரும், மடவோரை ஆடவரும் வெறுத்தற்கும் மேற்கூறியன காரணமாதல் காண்க. "நரைமூதாட்டி யொருத்தியைக் காட்டி" என்றற்றொடக்கத்து மணிமேகலைச் செய்யுளும் பிறவற்றையுங்கொண்டு இவ்வுண்மை தெளிக. பாரம்பரிய வளாசசிகளும், அற முதலாய செல்வப்பேற்றினைப் பெறுதற்கும் உரிமையாளராகிய அவ் விருவோர் வடிவங்களும் ஒருவரை ஒருவர் காதலித்தற்கேற்ற பெற்றியவாய் எப்பொழுதும் அமைந்திருத்தல் வேண்டும். அங்ஙனமன்றி "நரைதிரை மூப்பே நலிவுறு பிணியே—யென்றற் றொடக்கத் திவை" கூடுதற்குள்ள முறைமை யாதெனை எண்ணுக குறிப்பிக்கலாயிற்று. தேவபதவி முதலாயவற்றில் இவ்வாறு நரை, திரை, மூப்பு முதலியன இல்லையென்பார் "மண்ணுலகு அறியும்" என்று கூறினார். மானிடப் பிறவியினருக்கும் மூப்புமுடிக்கு என்பதுபோதரச் சொல்லெச்சத்தான் அதனைப் புலப்படுத்தினராயிற்று.

இனி அப்பால்;

அ இருவோரும் இனிது விழை உறுப்பினை—(ஆடவரும், மடவோரும் என்ற) அவ்விருபாலாரும் தாம்தாம் இனிதென்று காதலித்துவருகின்ற உறுப்பினை;

துனி தரு நாற்றம் தழைவு உற புரிந்தும் = துன்பத்தைத்தருகின்ற கெட்ட வாசனையானது பொருந்தும்படி செய்தும்;

நறியதுவாகப் படைக்கவேண்டியதுவே முறைமையாகவும், அவ் வுறுப்பைத் தூர்க்கந்தம் வீசும்படியமைத்த காரணந்தான் யாதென்று வியமுறுகின்றார்.

அனைய எனினும் = (அவர் வடிவங்கள் நரை திரை மூப்புக்களையும், பிணிகளையும், அவர் உறுப்பு கெட்ட நாற்றத்தினையும் பொருந்திய) அத் தன்மையன என்றாலும்;

நரை, திரை, மூப்பும், நலிவுறு பிணியும் பொருந்தினராயினும் அவ் விருவோரும் ஒருவர் மற்றொருவரைக் காதல் செய்துவருதற்கமைந்தது "உறுப்பு" என்றதற்கேற்ப அனையது என்னாராய் "அனைய" என்று அவற்றையுந் தழீஇக்கூறினார். இந் நுட்பம் கவனிக்கற்பாலது.

**அவற்றை வெறுக்கிலராய் கனிவு கொடு வேட்ப காதல் உறுத்தியும் = (நரை முதலியவும், விழை உறுப்பும் ஆகிய) அவற்றை வெறுக்காமல் உருக்கங்கொண்டு விருப்புற அன்புசெலுத்தும்படி செய்வித்தும்;**

வரு திறன் = (அவ் விருவோரும் மேற்கூறியபடி நடந்து) வருகின்ற வகையின் காரணம்;

அ இரு வகையோருள் = ஆடவர், மடவோர் என்னும் அவ்விரண்டு பகுதியினருள்;

ஒருவர் மற்று ஒருவரை மதித்து ஆங்கு உவந்து ஏத்தி = ஒருவர் ஏனையொருவரை (அழகு, நறுமணமுதலியவற்றின் அமைதியானே) நன்கு மதித்து அம் மதித்தவண்ணமே (அவரைப் பிரிகிலராய) விரும்பித் துதித்து;

மண் வரவு அறியார = (அறமுதலாயவற்றை முற்றுவித்தற்காக) இந் நிலவுலகின்கண் மக்கட்பிறப்பு எடுத்துவந்த தன்மையை அறியாதவராகி;

அறம்பொருளின்பம் முற்றி வீடடைதற்குக் காரணமாந்தன்மை மறந்து ஒருவரை மற்றொருவர் காதலிப்பர் என்க. "தன்னூர் தணந்து தண்கடலோடிப்—பொன்னோ டொருபுது நகர்ப் புக்கா—னொண்டமைத் துள்ள பல்வள னெல்லாம்—பாகுறக் கண்டு மகிழ்வுக் கெய்தித்—தனதுவர வெனக் தனைமறந் துழலலின்—மண்மிசை வந்த செயலினை மறந்து—மாதரைப் பொன்னை மணியினை நச்சிக்—காதல் கொண்டு மக்கள் கவல்குநர்" என்று இந்நூலாசிரியர் கூறிய பிறிதொரு செய்யுளும் இதனை வலியுறுத்தும்.

வாழ்நாள் கழிப்பி = (எவர்க்கும் பின்னர்ப் பெறுதற்கரிய) வாழ்நாளைச் செலவழித்து;

இருமைக்கும் நலந்தரற்கேதுவாகிய செயல்களைச் செய்துநடக்கும் நாட்களே நல்ல நாட்களாகும். அவ்வாறு செய்யப்படாத நாட்கள் துன்பந்தரு வீழ்நாட்களாகலின் அவை வாழாத நாட்களெனவும் படும்; ஆதலின "வாழ்நாள் கழிப்பி" என்றது நல்வாழ்வைப் பெறுதற்குக் காரணமாகின்ற நாளை வாழாது கெடுதற்குரிய நாளாக்கினமைக் குறிப்பிக்கின்றது. "நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்—வாளது உணர்வார்ப் பெறின்" என்பவாகலின் அவ் வுண்மை அறிகிலராய் அறஞ்செய்யாது பிறவற்றைச் செய்துவருதற்கமைந்த நாளை இன்பஞ்செய்துவரு நாளென்று எண்ணிக் கெடுவர் என்பதுதோன்ற "வாழ்நாள் கழிப்பி" என்றார்.

புண் வரு துயரை பொருந்தாது = புண்ணுற்றாற்போன்று வருகின்ற துன்பத்தை அவர் பொருந்தாமல்;

இளமை முதலியன கழியப்பெற்றுப் பிணிமுதலியவற்றுக்குள்ளாகி இடர்ப்படுங்காலத்து நல்லன செய்தோமில்லையே என்செய்தோம் என்செய்வோம் என்று மனத்தைப் புண்ணுறுக்கிக் கொள்வர் என்பதாம். "புண்வரு துயர்" எனப் பொதுப்படக் கூறியதுகொண்டு திரிகரணங் களுக்குங் கொள்க. இதனை "மன்றே விளைமை மகிழ்ந்தாரே கோலூன்றி—யின்னுங் கெழுந்திருப்பார்" என்ற நாலடிச் செய்யுளானும், "மைதிரண்ட வார்குழன்மேல் வண்டார்ப்ப மல்லிகைமென் மாலை சூடிக—கைதிரண்ட வேல்நெடுங்க காமன்போர் காரிகையார் மருளச் சென்று—மைதிரண்டு கண்டவ தரைப்பவோர் தண்டூன்றி யறிவிற் றள்ளி—மெய்திரண்டாற் போலும்புந்து நிற்கு மிளமையோ நிலையாதேகாண்" என்ற சிந்தாமணிச் செய்யுளானும், பிறபல நூல்களிடத்துக் கூறப்பட்டவற்றானும், காட்சியளவையானும் அறிந்துகொள்க.

நடு நிலை பொருந்தி = (பகை, நண்பு, நொதுமல் என்னும் பகுதிபற்றி ஒருபாற்கோடாது நன்னெறிப் படுத்தும்) நீதிநிலைகளுள் அமைந்து;

"கெடுவல்யா னென்ப தறிக தன்னெஞ்சம்—நடுவொரீஇ யல்ல செயின்" என்பவாகலின் அறமுதலாயினவற்றை இயற்றுவதற்கு நடுவுநிலைமையும் இன்றியமையாததாகும் என்க.

பிரி துயர் போக்கி = (ஊழ்வயத்தானும் பிறவயத்தானும் ஒருவரை மற்றொருவர்) நீங்குங்கால் உண்டாகுந் துன்பத்தினை அகற்றியும்;

யாக்கை இழிவுடைத்து, அழியுந்தன்மைத்து, உயிர்க்கு அழிவில்லை என்றன்ன பலவற்றையும் ஆராய்தற்கிடமாக அமைந்திருத்தலே பிரிதுயர் நீக்கும் சாதனமென்க.

இருமை நலம் திருந்தி செம்மை சேர்தற்கு எனா = (மேற்கூறியவாறு எல்லாம் அமைதலின் அவைகாரணமாக) இம்மை மறுமைக்குரிய நற்செய்கைகளைச் செய்துவருதலின் மனந் திருந்தி நன்மையடைதற்பொருட்டே எனவும்;

இவ் வெல்லாச் செயலும் மனச்செம்மை பெறுதற்பொருட்டே என்பதுதோன்ற இவ் வாறு கூறினர். மனோசாந்தி இவற்றாலும் அடையாவிடின் ஒருபயனும் இல்லையென்பார் 'இருமைநலந்—திருந்திச் செம்மை சேர்தற் கெனாஅ" என்றும், செம்மை சேர்தற்காகவே

இத்துணைக் காரணங்கள் வேண்டப்பட்டன என்பதுபோதர "எனூஉ" என்றளபெடுத்துக் கூறினார்.

ஒருத்தன் பிறனுக்கு ஊறு செய் வழியும் = ஒருவன் மற்றொருவனுக்கு இடையூறு செய்யும்பொழுதும்;

இதனாற் செய்கைகூறினார்.

திருத்தகு நல்லோன் தீமை அடை வழியும் = (கண்டோரால் விரும்பப்படும் தன்மையன் என்று அவரெல்லாரும் எடுத்துக்கூறிப் புகழ்தற்கு ஏதுவாகிய) நற்குண நற்செய்கைகளை உடையோன் (அடையவேண்டிய நற்பயனை ஒழித்து அடையத்தகாத வினைய) தீப்பயனை அடைந்து வருந்தும்பொழுதும்;

இந் நல்லோர்க்குப் பொருந்தும்பயனைக் கீழ்மக்கள் தடுத்து இடையூறு செய்வர். இதனைக் "கணணில் கயவர் கருத்துணர்ந்து கைமிக-நண்ணி யவர்க்கு நலனுடைய செய்பவே-வெண்ணெறி யிடர்வரு மென்றோ புலிமுகத்-துண்ணி பறித்து விடல்" என்னும் பழமொழிச் செய்யுளான் அறிந்துகொள்க. இதுகருதியே "திருத்தகு நல்லோன் றீமையடை வழியும்" என்பதற்கு முன்னர் "ஒருத்தன் பிறனுக் கூறுசெய் வழியும்" எனவும், பின்னர் "வருத்திடும் புலையோன் நன்மையடை வழியும்" எனவும் கூறப்பட்டன. இனி, நல்லோர்க்குரிய குணஞ்செய்கைகளை "அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ-டைந்துசால் பூன்றிய தூண்" என்னுந் திருக்குறளானும் "பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்-தேதிலா ரிற்கட் குருடனாய்த் தீய-புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாது-மறங்கூற வேண்டா வவற்கு" என்னும் நாலடிச்செய்யுளானும், "பொன்னுங் கரும்பும் புகழ் பாலுஞ் சந்தனமுஞ்-சின்னம் படவருத்தஞ் செய்தாலு-முன்னிருந்த-நற்குணமே தோன்று நலிந்தாலு முத்தமர்பா-னற்குணமே தோன்று நயந்து" என்னும் நீதிவெண்பாச் செய்யுளானும், "தீயவினை நோக்குமியல் சிந்தனையு மில்லாத்-தூயவனே நோக்கியுளர் தப்புரவு மெல்லாம்" என்னும் வினாயகபதிச் செய்யுளானும் பிறவாற்றானும் அறிந்துகொள்க. இன்னும் இவ் வுண்மை "இம்மைச் செய்தன யானறி நல்வினை-யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்திவ-டிருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது" என்னுங் கோவலன்கூற்று முதலியவற்றானுந் தெளியப்படும்.

வருத்திடும் புலையோன் நன்மை அடை வழியும் = (தமக்கு நன்மைசெய்தாரையும், பிற பெரியோரையும்) வருந்துமாறு செய்கின்ற கீழ்மகன் (அடைதற்குரிய தீப்பயனை ஒழிந்து அடையவொண்ணாத) நற்பயனைத் தலைக்கூடி மகிழும் பொழுதும்;

நலஞ்செய்துவந்த சச்சந்தனைக் கொன்று அரசுகட்டிலேறிய மந்திரியையும், அவர் போன்றாரையும் "வருத்திடும் புலையோன் நன்மையடை வழியும்" என்றதற்கு இலக்கியமாகத் தக. இவற்றாற் பேறுதல் கூறப்பட்டது. "அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்-கேடு நினைக்கப் படும்" என்னுந் திருக்குறளும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

ஒன்றை மற்று ஒன்று பொறாஅ ஆகி = ஒருசீவராசியின் வாழ்க்கையை மற்றைச்சீவராசிகள் பொறாதனவாகி;

ஓரினத்துள்ளும் பொறாமை சேரிடும் என்பதுபோதர "ஒன்றைமற் றொன்று" எனப் பொதுப்படத் தொகைப்பெயராலும், யாண்டும் மேலிட்டுக் காணப்படுதலிற் "பொறாஅ" என்றளபெடுத்துங் கூறினார்.

கொன்றும் = (பிறசீவராசிகளின் வாழ்க்கை தமக்கு மாறுபயக்குமெனின் அவற்றை) அழித்தும்;

தின்றும் = (உணவின்பொருட்டுப் பிறசீவராசிகள் வேண்டப்படுமாயின் அவற்றை யெல்லாங் கொன்று) அருந்தியும்;

உயிரோடு வைத்துண்ணும் விலங்குபோலாது கொன்று தின்றுவரும் வழக்கந்தோன்றத் "தின்றும்" என்றதனைக் "கொன்றும்" என்றதன் பின் வைத்தனர். சிலர் தாமாகக் கோறல்புரியாமற் பிறர் கொன்றவற்றைத் தின்னும் இயல்புடையார் என்னக் குறிப்பித்தற்பொருட்டுக் "கொன்றுந் தின்றும்" என உம்மைகளாற் பிரித்தனர் என்று கூறுவாருமுளர்.

கொடுமை புரி வழியும் = கொடுஞ்செயல்களைச் செய்துவருகின்ற பொழுதும்;

மன்பதை உள்ளான் மாற்றான் ஆகில் = மக்கட்டொகுதியிலே சிறப்புப்பெற்றுள்ள ஒருவன் (கோறலையும், கொன்றருந்துதலையும் பிறவற்றையும் கண்டுவைத்தும் அவற்றை யெல்லாம்) களையாமல் இருப்பானாகில்;

அன்னவன் தன்னை அவனி எவண் மதிக்கும் = (அக் கொடுஞ்செயல்களை இயன்றவளவில் நீக்குமியலுந் தன்மையில்லாத) அவன் றன்னை இவ் வுலகத்துப் பெரியார் எவ்வாறு கருதுவர்;

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி-யெல்லா வுயிருந் தொழும்" என்பவாகலிற் கொடுந்தொழில் இயற்றலைக் கண்டவிடத்தே நீக்கிவருதல் அறிஞர்தம் மரபும், கடனுமாகும். கொலையை நீக்குவோர் எல்லாவுயிரானுந் துதிக்கப்படலிற் கொலையைச் செய்வோர் எல்லாவுயிரானும் இகழ்ந்தொதுக்கப்படுவா என்பது எதிர்மறைப் பொருளாய்த் தானே போதரும்.

அஃதே மான = (கொடுமைகண்டும் நீக்க முயலாதானது) அச்செய்கையை ஒப்ப;

கடவுள் அமைதுநர் - இறைபணிநிற்கும் ஒழுக்கமுடையோர்;

எகாரம் தொக்குநின்றது.

எனும் புல்லைம் உளக்கில் = என்று கருதுகின்ற புல்லியதுணர்வுடைய எளியேம் மனசின்கண்ணே (மலிந்து கிடக்கின்ற);

போகு அறாஉம் வண்ணம் = குற்றங்கள் அற்றுப் போகும்படி;

பலவாறு சூழ்ந்தாலும், பிறரை உசாவினாலும் நீக்குதற்கடங்காத அக்குற்றங்களைக் கொடுமை வாய்ந்த குற்றம் அற்றுப்போதற்கும் ஒருவழி உண்டாயிற்று என்பது போதர "அறாஉம்" என்றனர் பெயர்த்தது.

நல் உயிர் அழியா = (முத்தியாகிய நன்மையைப் பெறுதல்வேண்டி இன்றியமையாதனவற்றைப் புரிவான் உடலோடுறவு பூண்ட) நல்ல உயிர்கள் அழிதலைப்பொருந்தா;

உடல் அழியுமேயன்றி உயிர் அழியாதென்பது கருத்தென்க.

உயிரானது சான்றாய் இருக்குமேயன்றிப் பிறவற்றிற்கு உட்படாதென்பார் "நல்லுயிர்" என்றும், மனமுதலியன அழிவடையுமென்பார் "நல்லுயிர் அழியா" என்றுங் கூறினார்.

நண்ணும் மெய் முதல = (உயிரானது அறம்பொருளின்பங்களை ஆற்றி வீடுபெறுதற்குக் காரணமாக) கொடுக்கப்பட்ட உடம்பினை முதலாகக் கொண்டு;

ஏனையவற்றையெல்லாம் உடலைக்கொண்டே அறியவேண்டியிருத்தலின் "மெய் முதல" என்றும், பிறவற்றோடு மெய்யினிடைப்புகுதல் உயிர்க்கு வழக்கம் என்பார் "நண்ணும்" என்றும் கூறினார். இனி "நண்ணும் மெய்" என்பதற்கு அறமுதலாயவற்றை ஆற்றுதற்பொருட்டுப் பொருந்திய மெய் என்றலும் மிகப்பொருந்தும்; உடல இல்வழிப் புண்ணியபாவகருமங்களை இயற்றுதல் ஒல்லாதாதலின் என்க.

ஒல்லுவ எல்லாம் உடுக்கைக்கு ஒப்ப = பொருந்துவனவாகிய எல்லாவற்றையும் உடுக்கப்படும் உடுக்கைக்கு ஒக்குமாறு;

நல்கியும் களைந்தும் நயந்து வருதும் என = (முதற்கட்) கொடுத்தும், (கொடுக்கப்பட்டவை அழியுமாயின் அவற்றை) நீக்கி (ப்பிறிதொன்றைக் கொடுத்தும்) விரும்பிவருகின்றோம் எனவும்;

உஷ்ணசீதங்களை எற்றபெற்றி நீக்கி இன்பமாக வாழ்தற்கு உடுக்கையை அளிப்பது போல அறமுதலாயவற்றை ஆற்றி மலநீக்கமும், சமத்துவபுத்தியும் இவைபோன்ற பிறவும் பெறுதற்பொருட்டுத் தனுகரணபுவனபோகங்களாகிய உடுக்கையை உயிர்ப்பன்மைகட்கு உதவியும்; உதவிய உடுக்கை நெறிமுறைக்குப் புறம்பாகி இழிவடைதலாகிய அழுக்கினைப் பெறுமாயின் மலத்தான் மலத்தைக் கழுவுமாறு வறுமை, பிணிமுதலியனவற்றைக் கொடுத்துச் செல்வம், மருந்துமுதலியவற்றால் ஒழுங்குபடுத்தியும்; அவ வுடுக்கை அறவே மாணமாகிய பழுதடையிற் புதிய உடுக்கையாகிய வேற்றுத் தனுகரணபுவனபோகங்களைக் கொடுத்தும் உதவிவருகின்றான் இறைவன் என்ற பெரும்பொருள் வைப்பினைச் சிலசொற்களில் அடக்கிக் கூறினர். இச்சாமாத்திரத்தில் எத்துணையோ உலகங்களைச் சிருட்டிக்கும் ஆற்றன்மிக்க இறைவனுக்கு நமதியாக்கை ஒருபெரும் பாரமாகாது. ஆதலினன்றே நமதுடலழிவிற்கும், பிறவழிவிற்கும் அவன் இரங்கானுமினன் என்க. முத்திக்குச் செல்லுங்கால் யாக்கைமுதலாயின வேண்டப்பெறா ஆதலிற் "களைந்தும்" எனப் பிற்கூறியும், ஆன்மாக்கள் அறமுதலியவற்றைச் செய்துகோடற்பொருட்டே அவ் வியாக்கை முதலியவற்றை இறைவன் அளிக்கின்றான் என்பது தோன்ற "நல்கியும்" என முற்கூறியும், இவ்வாறு செய்தல் இச்சாமாத்திரையே என்பது போதர "நயந்து" எனக் கடையிற் கூறியுஞ் சென்றனர் என்க.

